7

ஏலான ஆசாரியின் அகால மரணம் கேள்வியுற்றோரை உறைய வைத்தது. வியப்பிலாழ்த்தியது. பலர் நம்ப சிரமப்பட்டார்கள். யாரையும் குற்றம் சொல்ல முடியாமல் தவித்தார்கள். சத்தமாகப் பேசவும் தயங்கி னார்கள். இப்படியும் நடக்குமா என்று கேள்வி கேட்டார்கள். நூற்றுக் கணக்கில் மனிதர்கள் பலியான விபத்தைக் கேட்டதுபோல் பரபரப்படைந் தார்கள். ஒரு உயிரின் பிரிவுக்குப் பின்னே இருந்த விநோத மர்மம் மரணத்தை அபகீர்த்திமிக்கதாக மாற்றிவிட்டிருந்தது. மாலையில் கருக்கலில் இரவில் அவரைக் கடைசியாகக் கண்டவர்கள் எதிர்ப்பட்டவர்களிடம் அதிர்ச்சியை எதிரொலித்தார்கள்.

''அப்பவே முகம் அருள் விட்டு போயிதான் இருந்துச்சு. என்னய்யானு கேட்டதுக்கு ஒண்ணுமில்ல சடவுதான்னு சொல்லி சமாளிச்சாரு. எனக் கென்னமோ உள்ளுக்குள்ள உறுத்திக்கிட்டே இருந்துச்சு. ஆனாலும் இப்படி இடிவிழும்னு கனவுல கூட நெனைச்சுப் பாக்கல.''

''கிழங்கு மாதிரி இருந்தானே! உழைக்க அஞ்சமாட்டானே! மனுஷன் பழகிட்டா உசுரையும் கொடுப்பானே... சூதுவாது இல்லாத ஆளு! கண்ணாடி பதிச்ச மனசுல்லா மகராசனுக்கு...''

''பாண்டிப் பயலப் பிடிச்ச சத்ராதிதான் ஆசாரிய காவு வாங்கிருச்சு.''

பாண்டியின் பழிப்புகழ் சுற்றுவட்டாரங்களெங்கும் வேகமாகப் பரவியது. ஊரிலுள்ள கர்ப்பிணிப் பெண்கள் கருவைக் காத்துக்கொள்ள உறவுக்காரர்களின் ஊர்களுக்குப் புறப்பட்டுப் போனார்கள். சிறுவர்களின் நடமாட்டம் அந்தப் பகுதியில் இல்லாமல் ஆனது. உடைமரத்து வளவு மிருகக்காட்சிசாலையாக மாறிவிட்டது. வயது வந்தவர்களில் துணிவுள்ள வர்கள் கூட தூரத்தில் நின்று பார்த்துவிட்டுப் போனார்கள். கலைந்த தலையும் இலக்கற்ற பார்வையும் ஒட்டுத்துணியும் கைகால்களில் இரும்புச் சங்கிலியுமாக குறுமுனியாகக் காட்சியளித்தான் பாண்டி.

4

ஆதிமொழியில் ஆவேசமாகப் பேசி வாதித்து சண்டையிடுவது போல் நாய் புது மனிதர்களைக் கண்டு குரைத்துச் சுற்றி வந்தது. காதைக் கிழிக்கும் சத்தம். பகல் வேளையில் நாய் இப்படி வெறித்தனமாகக் குரைப்பதை யாரும் கேட்டிருக்க, பார்த்திருக்க வாய்ப்பில்லை. ஏலான ஆசாரியும்

அவருக்கு ஒத்தாசை செய்ய வந்திருந்த திடகாத்ரமான நான்கு பேரும் செய்வதறியாது திகைத்து நின்றிருந்தனர். வேடிக்கை பார்க்க வந்தவர்களின் முகங்களில் முதல் கட்ட சுவராஸ்யம் படமாக நெளிந்தது. அவர்களின் அடிமனம் விழி நுனிக்கு வந்து எதிர்பார்ப்பில் விரிந்திருந்தது.

கண்ணியில் கோர்த்த கரிக்கட்டை மாலை போலிருந்த விலங்கை ஆசாரி கையில் சுமந்துகொண்டிருந்தார். குரைப்புச் சத்தம் அவரைப் பதற்றப் படுத்தி விட்டதை விரல் நுனிகள் நடுக்கத்தோடு வெளிப்படுத்தின. அடிப் படைத் துணிவுக்காக கொஞ்சம் சாராயம் சாற்றியிருந்தார். அந்தப் போதையை நாய்த் தொந்தரவு சுத்தமாக இறக்கிவிட்டது. உள்ளங் கையிலும் முகத்திலும் முத்துமுத்தாக வியர்த்தது.

''இந்த நாயை பிடிச்சு கெட்டிப் போடுங்கய்யா. எழவு கள்ளனை கண்ட மாதிரி குலைக்குது'' பக்கத்தில் நின்றிருந்த சுந்தர்ராஜிடம் முகம் சுளித்துக் கூறினார்.

நாயை விரட்டினார்கள். வெளியே போகாமல் உள்ளேயே மறிந்து மறிந்து சுற்றியது.

''அது இங்க உள்ளதுதான்யா. ஒண்ணும் செய்யாது.''

''வாயைப் பொளக்குறத பாரும். கடிச்சா இறைச்சி ஒரு கிலோவுக்கு கொறயாது போலிருக்கே!''

''அது கெடக்கட்டும் சனியன். அதையேன் பாக்கியரு. வந்த வேலையை சட்டுனு முடிச்சுட்டு போவோம். கேன் ஆயிப்போச்சுனா தேவரு கௌம்பிருவாரு.''

என்ன சமாதானம் சொல்லியும் ஆசாரியால் ஒருமுகப்பட ஏலவில்லை. ஒரு குச்சியை எடுத்துக்கொண்டு வெளியே விரட்டவும் நாய் திரும்பித் திரும்பி முறைத்துக்கொண்டு ஓடியது. என்றாலும் கர்ணகொடூரமான குரைப்பொலி குறைவதாக இல்லை. அது படலியைச் சுற்றிச் சுற்றி வந்தது. முன்னங்கால்களை மங்கட்டை சுவர்மேல் தூக்கி வைத்து எழுந்து நின்று உள்ளே உற்றுப் பார்த்தது. ஈரமான அதன் கருப்பு நாசியும் சினம் தெறிக்கும் கண்களும் ஓலை இடுக்குகளில் தெரிந்து மேலும் கலவரப் படுத்தியது. மேல் தாடையில் நீண்டிருந்த கூரிய பற்கள் அவரது மூளையில் அறைந்த ஆணிகளாகப் பதிந்து இதயத்துடிப்பில் குளறுபடிகளை உண்டுபண்ணியது.

ஐஸ் கட்டிகளுக்குள் புதைத்து வைத்திருந்து வெளியில் எடுக்கப் பட்டவன்போல் பாண்டி விறைத்துப் போயிருந்தான். குழிக்குள் கிடந்த கண்கள் அடிக்கடி வழக்கத்துக்கு மாறாக இமைத்துக் கொள்வதைத் தவிர வேறு சலனங்கள் இல்லை. கால்களும் கைகளும் நைலான் கயிறுகளால் பிணைத்துக் கட்டப்பட்டிருந்தன. முதலில் கால்கட்டை அவிழ்க்கச் சொன்னார் ஆசாரி. கனத்துக்கொண்டிருந்த விலங்கை ஓரமாகப் போட்டார். ஜல்லென்று விழுந்து இரும்புக் கண்ணிகள் முறுமுறுத்தடங்கின.

அவர்கள் பாண்டியை நெருங்கியதும் நாய் பெருங்குரலோடு படலிக்குள் பாய்ந்தது. வேடிக்கை பார்த்து நின்றவர்கள் அலறி விலகினார்கள். ஆசாரி இரண்டடி உயரம் துள்ளி 'எம்மோ' என்றார். அது பாண்டியின் முதுகுக்குப் பின்னே நின்று பயங்கர சப்தத்துடன் குரைத்தது. ''நாயை விரட்டுங்க... நாயை விரட்டுங்க...'' பதறியபடியே ஆசாரி வளவுக்கு வெளியே ஓடினார். கீழே கிடந்த சுத்தியலை குனிந்து எடுத்த சுந்தர்ராஜ் கோபத்தில் அதை நாய் மீது வீசினான். சுத்தியல் விலாவில் பட்டுத் தெறித்து விழுந்தது. நாயின் குரைப்பொலி உடைந்து ஊளையாக மாறியது. வலியில் சிறிது நேரம் கண்களைத் திறக்க முடியாமல் குறுகி நின்றது. ஆளுயரத் தடியோடு ஒருவர் ஓடி அதன் முதுகுக்கு மேலே ஓங்கினார். அது சுதாரித்து தன் உடலை இழுத்துக்கொண்டு வெளியேற வழி தேடி ஓடியது. அடி தரையில் தாக்க பிரம்பு இரண்டாக முறிந்து விழுந்தது.

''ஜிம்மிய... அடிக்காதீங்க... ஜிம்மிய... அடிக்காதீங்க...'' பாண்டி இரண்டு முறை கூறினான். அது உறக்கத்தில் பேசுவது போலிருந்தது.

கூராப்பு சரிந்தது. காற்று சுழன்று வீசியது. உடைமரம் தலை விரித்தாடியது. நீர்த்துளிகள் சொட்டுவதுபோல் நெற்றுகள் உதிர்ந்தன. பனை ஓலையிலக்குகள் கரகரப்பான ஓசையில் நெரிந்தன.

நாயின் குரைப்பொலி நம்பிக்கையிழந்து தூரத்தில் ஒலித்தது. அது கேட்பவர்கள் உள்ளத்தில் இடைவெளிவிட்டு விட்டு சோகத்தைப் பிழிந்தது.

கால்கட்டை அவிழ்த்தபோது பாண்டியைச் சுற்றி ஐந்து பேர் அரணமைத்து குதிகாலில் அமர்ந்திருந்தனர். அவன் வெற்றுடம்பில் மயிர்க்கால்கள் குத்திட்டு நின்றன. பாண்டி அவர்கள் முகங்களை ஒவ்வொன்றாக மாறி மாறிப் பார்த்தான். அவன் கண்களைச் சந்திக்க அவர்கள் அஞ்சினார்கள். ஏலான ஆசாரி மட்டும் இரண்டு மூன்று முறை எச்சரிக்கை உணர்வோடு ஏறிட்டார்.

பரிதாபமான சிறிய விழிகள் தூக்கமிழந்து குழப்பத்தில் கலங்கி ஒளியிழந்து கிடந்தன.

கயிற்று இறுக்கத்தால் சுட்டு விரலளவு வட்டவட்டமாகப் பதிவாகி ரத்த ஓட்டம் தடைப்பட்டு குழிந்த வரைகள் வெளிறிப் போயிருந்தன. பாண்டியின் முகத்தில் விடுதலையுணர்ச்சி விடுபட்ட நீரானது. நீட்டியிருந்த கால்களை மெல்ல அசைத்துப் பார்த்தான். தனித்தனியாகப் பிரித்துப் பரப்பினான். மூட்டுகள் மோதிக்கொள்ள வேகமாக ஆட்டினான். ஒன்றின் மேல் ஒன்றைத் தூக்கி வைத்தான். உடலை முன்னுக்கு மடித்து, கட்டிட்டிருந்த கைகளை நீட்டி மரத்துப்போன பாகங்களைத் தொட்டுப் பார்த்தான். எழுந்து நிற்க ஆசைப்பட்டு உடலை வளைத்துத் தூக்கினான். உறுதியான இரண்டு கைகள் தோள்களை அழுத்தி மீண்டும் முன்னைப் போலவே இருக்கச் செய்தன.

கருந்தேளின் வாய்க் கொடுக்கு போன்று பிளந்திருந்த விலங்கு வளையத்தை ஆசாரி காலுக்கொன்றாகப் பொருத்த முனைந்தபோது கால்களைப் பின்னுக்கிழுத்து சம்மணமிட்டுக் கொண்டான். ஆசாரி பாண்டியைத் தேற்றி தன் வழிக்கு இழுக்க இணக்கமாகப் பேசினார். ''பயப்படாதேப்பு! ஒன்ன ஒண்ணுஞ் செய்யல. எல்லாம் ஒன் நல்லதுக்குத்தான். கயறு அறுத்து கால்கையெல்லாம் புண்ணும் ரணமுமாப் போவும். இந்த சங்கிலிய மாட்டிக்கிட்டா ஒனக்குத்தான் தோதா இருக்கும். வலிக்காது. பயப்படாத. சுத்தமா வலியே கெடையாது. பதமா போட்டு விடுவேன். இந்த பாரு, இத கால்ல மாட்டி வாயை ஒடுக்கிவிடணும். அவ்வளவுதான். காலை நீட்டுப்பா. வளையல் மாட்டுனா கூட மொலியில பிடிக்கும். அதவிட இது சுளுவு. கொண்டாப்பா. காலை நீட்டு. கெட்டிக் காரம்லா. நான் சொன்னா கேக்கணும். அதுவுமில்லாம சத்ராதிகளுக்கு இரும்ப கண்டா பயம் பாத்துக்க.''

ஆசாரி பேசியதை மிகக் கவனமாக கேட்டு விளங்கிக்கொண்டவன் போல் தலையாட்டியவன் வலது காலை உருவி நொடிப் பொழுதில் பலம் கொண்ட மட்டும் ஆசாரியின் மார்பில் உதைத்தான். ஆசாரி அப்படியே பின்னுக்குச் சாய்ந்தார். அதிர்ச்சியில் வாயிலிருந்து 'ங்ஙே' என்று விநோதமான ஒலியெழுந்தது.

சுற்றியிருந்த நால்வரும் கெட்ட வார்த்தைகளோடு பாண்டி மேல் பாய்ந்தனர். அவர்கள் முகம் கடும் கோபத்தில் இறுகியது. ஆசாரி கையூன்றி எழுந்தார். வெள்ளைச் சட்டையில் கால்தடம் மண்ணோடு பதிந்திருந்தது. ''சீ சனியனே... உன் வேலையை யார்கிட்ட காட்டுதா'' என்று சொன்ன படி மண்துகள்களைத் தட்டிவிட்டார். ''சனியனே... சனியனே...'' என்று சீறினார். கழுத்து முகமெல்லாம் குபுக்கென்று வியர்த்தது. காதோரம் நீர்க்கோடு வழிந்தது. கண்கள் மருண்டன. யாரோ சொம்பில் தண்ணீர் கொண்டுவந்து நீட்டினார்கள். பதற்றம் தணிய வெகு நேரம் பிடிக்கும் போலிருந்தது. நால்வரில் ஒருவர் சொன்னார், ''ஆசாரிய்யா, இதை இப்படியே விட்டா சரிப்பட்டு வராது. ஆடுற மாட்ட ஆடிக் கறக்கலாம். அடங்காப்பிடாரிய அடிச்சுதான் முளையில கட்டணும். வாரும், சட்டுபுட்டுனு வேலைய முடிப்போம்.''

அவர்கள் நால்வரும் பாண்டியை மல்லாக்க விரித்து நிலத்தோடு நிலமாக அழுத்தி அசையவிடாமல் பிடித்திருந்தனர். பாடிப்போன கபடி அணியின் மூச்சு விடாத கடைசி வீரனாய் பாண்டி வாய்க்கு வந்ததைப் பிதற்றித் திமிறிக் கொண்டிருந்தான். தலையைத் தவிர வேறெந்த உறுப்பையும் அவனால் அசைக்க முடியவில்லை. நெஞ்சு துருத்திப்பையாக விம்மித் தணிந்தது. இழைத்து எடுத்ததுபோல் அடிவயிறு குழிந்தொடுங்கியது. காலில் சுத்தியலின் அதிர்வு திரும்பத் திரும்பத் தாக்கியது. சுத்தியல் குறி பிசகி மட்டையெலும்பில் மூர்க்கமான அடிகள் விழுந்தன. கெண்டை நரம்புகள் வெடித்துத் துடித்தன. இடுப்பு தரையோடு உராய்ந்தது.

எத்திசையிலிருந்து பாய்ந்தது என்பதை அனுமானிக்கும் முன்னே ஜிம்மி ஆசாரியின் மேல் விழுந்தது.

இந்த முறை மூங்கில் அடி அதன் கழுத்தோடு சேர்த்துப் பட்டது. மீண்டும் கதறிக்கொண்டு அந்த இடத்திலிருந்து ஓடியது.

எறும்புக்கூட்டம்போல் கண்ணீர்த் தாரை ஊர்ந்து காதுக்குள் நுழைந்து பாண்டியின் தலையை 'திம் திம்'மென அதிர வைத்தது. நஞ்சின் வீரியத்தால் குடல் கொடிகள் அறுபடுவதுபோல் இருந்தது. கண்கள் பீதியில் வெளிப்பிதுங்கின. கன்னங்களும் காதுகளும் மண்ணில் சிராய்ந்து புண்ணாகி எரிந்தது.

அந்தக் காட்சியைக் கண்டவர்களின் கண்களில் மிரட்சி துடித்தது. சிலர் அங்கிருந்து விலகிப் போய்விட முன்னமே நினைத்தார்கள். அவர்கள் எண்ணத்தை மீறி கால்கள் நிலத்தில் தைத்துநின்றன.

பாண்டியின் உடலைத் தீக்காய எரிச்சலோடு அழுத்திப் பிடித்திருந்த கைகள் தளர்ந்தன. அவர்கள் எழுந்த பின்னும் மண்ணில் கிடத்திய உத்தரமாக பாண்டி அப்படியே படுத்திருந்தான். திமிறல்கள் மொத்தமும் தீர்ந்து மரக்கட்டையாக மாறி சிறு அணக்கமுமின்றிக் கிடந்தான். கண்ணீர் தாரைகள் வழிவது நிற்கவில்லை.

பலர் சேர்ந்து தன்னைப் பலவந்தமாகத் தாக்கிக் கொன்றுவிட்டதாக முடிந்த மட்டும் நம்பினான். அப்படி நம்புவது மட்டுமே மனசுக்கு அப்போது ஒரே ஆறுதலாக இருந்தது. பிரிந்து போகும் உயிரை வழியனுப்புவதற்காக வெகுநேரம் காத்துக் கிடந்தான்.

தலைக்கு மேலே நீட்டியிருந்த கைகளில் ஈரத்துணியால் வருடி ஒத்தடம் தருவது உணர்வுக்கெட்டியது. அதை வன்மையாகப் புறக்கணித்தான்.

கடைவாயில் விலங்கடிபட்டு வலியோடு ஜிம்மி முனகிக்கொண்டு போனது.

## 1

''கழிப்பு எதுப்பா, காத்துக் கருப்பா, தகடு மிதிப்பா, செய்வினை எளவா என்ன கோளாறுனு தெரியலய்யா. அப்பாவிப்புள்ள! இருக்க இடம் தெரியாம இருக்குறவன். கிறுக்கு பிடிச்ச மாதிரி புத்தி பேதலிச்சிப் போயிட்டான். வீடு காடுனு இல்லாம ஒரே ஓட்டம்தான் சாட்டம்தான். ராத்திரியானா காட்டுக் கூச்சல் போடுதான். ஊரே குலை நடுங்கிப் போவுது. கையில கெடச்சதலாம் ஒடைச்சி எறியுதான். வீட்டு மேல ஏறி ஓட்டையெல்லாம் பிரிச்சு வீசிட்டான். பெத்த தாய் தகப்பனையே லேவ தெரியமாட்டேங்குது. யார் சொல்லுக்கும் அடங்க மாட்டேங்குதான். என்ன செய்யுறதுனே தெரியலை. நேரத்தைப் பாருமே...''

குஞ்சுக்கண்ணர் சொல்லிக்கொண்டிருக்க இரும்பைத் தீயில் புரட்டிக்

கனலும் கங்குகளுக்குள் புதைத்தபடி ஏலான ஆசாரி கேட்டுக் கொண்டிருந் தார்.

"ஆளு புத்தி பிசங்கிட்டான்னு தெரிஞ்சதுமே அந்தோனியார் கோயிலு உவரிக்கிக் கொண்டுபோனோம். அஞ்சு ஆறு பேரா சேந்து ஆவுச் சேத்துக் கட்டிப்பிடிச்சு பிளசர் கார்ல வச்சு கொண்டுபோய் சேக்குறதுக்குள்ள பெரும் பாடாயிப் போச்சி. கடல்ல குளிப்பாட்டி புதுமைக் கிணத்துல பதிமுனு பட்டை தலைக்கி ஊத்தி கோயிலை பதிமூணு சுத்து சுத்தி வந்த பிறகுதான் விலங்கு பூட்ட முடியும்னு சொல்லிட்டாங்க. கடலைக் கண்டு புள்ளிக்காரனுக்கு பயமின்னு ஒண்ணே வல்லுசா இல்ல. வத்துன குளத்துல மீன் புடிக்க இறங்குனா மாதிரி கடலுக்குள்ள விறுவிறுனு போயிட்டான். கூடப் போனவங்க பிடியயெல்லாம் உதறிட்டு ஆழம் எய்க்காத இடத் துக்கு போய்கிட்டே இருக்கான். அவனைப் பிடிச்ச சத்ராதி நடுக்கடல்ல நின்னு கையை கையை ஆட்டி ஆட்டி கூப்பிட்டுச்சோ என்னமோ, திரும்பிக் கூட பாக்கல! நாங்க போட்ட கூச்சல் கூப்பாடக் கேட்டு கரையில வலை வெலங்கிக்கிட்டிருந்த பட்டம் கட்டிக ரெண்டு பேரு வேகமாக ஓடி வந்து கடல்ல இறங்கி தாவிப் பாய்ஞ்சு போயி காப்பாத்தி உச்சிமுடியைப் பிடிச்சு கரைக்கு இழுத்துட்டு வந்தாங்க. தண்ணி குடிச்சி ஆளு நல்லா தெவங்கிட்டான். கண்ணுலாம் பழமாயிட்டு. அந்த தெவக்கத்திலேயே மேற்படி காரியங்களை செஞ்சு முடிச்சு மரத்தடி நிழல்ல கயிறு கட்டி வச்சோம். அங்க நடக்காத அற்புதமில்ல. இனி ஆண்டவன் காட்டுன வழின்னு மனச ஆறுதல் படுத்திக்கிட்டோம். கடலப் பாத்து எந்நேரமும் மளமளனு எதையோ பேசிக்கிட்டு நாலு நாள் இருந்தான். சத்ராதி மந்திரம்தான் ஓதுனானோ என்னவோ, கடலுக்கு புயல் பிடிச்சிக்கிருச்சி. அறிகுறியக் கண்டு கட்டுமரமெல்லாம் ஒரு நா மீன் பிடிக்க போகாம இருந்துச்சு. மறு நாள் பட்டப்பகல்லேயே நல்லா இருட்டிட்டு வந்தது. கிழக்கேயிருந்து பயங்கரமான புயல் எத்தனையோ மைல் வேகத்துல வந்துகிட்டிருக்கு; கடலோரத்துல இருக்குறவங்க உடனே இடத்த காலி பண்ணிட்டு, பத்து மைல் தள்ளிப் போயிருங்கனு ஜீப்புல வந்து அனோன்ஸ் பண்ணிட்டாங்க. கடல் போட்ட இரைச்சலையும் மண்ணள்ளி எறிஞ்ச காத்தையும் இருட்டையும் பாத்து கோயில்ல இருந்த நிறைய ஜனங்க அவுங்கவுங்க ஊருக்கு கிளம்பிட்டாங்க.

"முத்திப் போன பைத்தியங்களை வச்சு பாடு பாத்துக்கிட்டிருந்த கொஞ்ச பேருக்குத்தான் என்ன பண்ணுறதுனு தெரியலை. கடவுளுக்கு இதுதான் சித்தம்னா கிறுக்காகி அவதிப்படுற இந்த சீவன் அவர் காலடியிலே போவட்டும்னு கொஞ்ச ஆளுங்க வைராக்கியமா இருந்தாங்க. ஆனாலும் இருக்க விடல. போலிஸ்காரங்க ஜீப் ஜீப்பா வந்து இறங்கி எல்லாத்தையும் பத்தி விட்டுட்டாங்க. கையையும் காலையும் கயிறு வச்சு கெட்டி காருக் குள்ள தூக்கிப் போட்டு ஊருக்கு கொண்டு வந்துட்டோம். ஊர்லயே வச்சு நல்ல வைத்தியனக் கொண்டு பாக்கலாம்னு இருக்கோம்."

காதுகளைத் திறந்து வைத்து கவனமாகக் கேட்ட ஏலான ஆசாரி அடிக்கடி தன் அனுதாபங்களை ''ச்சச்சோ...ச்சச்சோ...'' என ஒலியாக எழுப்பினார்.

இறுக்கிக் கட்டியிருக்கும் நைலான் கயிறு கைகால்களில் சதையை அறுத்துப் புண்ணாக்கிவிடும் என்பதால் விலங்கு ஒன்று அவர் செய்து தர வேண்டும் எனக் கேட்டுக்கொண்டதும் உடனடியாக ஒப்புக்கொண்டார். சிறுவயதில் அப்பா பட்டறையில் துருத்தி ஊதி சம்மட்டி போட்டு தொழில் கற்று முழுமையான கொல்லாசாரியாகி அவர் வாழ்நாளில் இதுவரை கைகால்விலங்கு ஒன்று கூட செய்ததில்லை என்றபோதிலும் இந்த இக்கட்டான சூழ்நிலையில் ஒன்றைச் செய்து தருவதாகக் கூலியேதும் பேசாமல் ஒப்புக்கொண்டார். அதுவும் மிக அவசரமாக. ஆளை ஒருமுறை நேரில் பார்த்து குத்துமதிப்பாக அளவெடுத்து பின் வேலையை ஆரம்பிப்பது விலங்கு கச்சிதமாக உருவாக உதவும் என்று கருதினார். புறப்பட்டார்.

## 2

ஓரடியாழம் குழி தோண்டி அதில் நீர் நிரப்பி தலையைக் குழியுள் திணித்து உயிர் போகும் வரை செவிகளை மிதித்துப் பிடித்துக் கொல்ல, கால்களைப் பிணைத்துக் கட்டிப்போட்டிருக்கும் பன்றியைப்போல் உடைமரத்தடியில் சுருண்டு ஒருக்களித்துப் படுத்திருந்தான் பாண்டி. கண்டதும் ஆசாரியின் கண்கள் கசிந்து ஈரமாகிவிட்டன. சிறு பிராயத்தில் பார்த்தது. கிட்டக்கூடி கண்ணில் பட்டதில்லை. பெரிய படிப்பு படித்து முடித்துவிட்டதாகக் கேள்விப்பட்டதுண்டு. ஆசாரியின் உலகில் மூன்றே கிரகங்கள். வீடு, பட்டறை, சாராயக்கடை. நெஞ்சுக் கூட்டுக்குள் ஏற்பட்ட படபடப்பு அடங்காமல் தவித்துப் போனார்.

தரையில் உராய்ந்து கன்னமேட்டிலும் புஜத்திலும் சிராய்த்த காயத்தில் நீர் கசிந்துகொண்டிருந்தது. ஈக்களின் முற்றுகையையும் மொய்த்தலையும் பொருட்படுத்தாமல் அவன் கண்கள் மூடியிருந்தன. உடல் அசைவற்றிருந்தது. முகத்தில் நிரந்தர வலியைச் சகிக்கும் கோணல்.

கொளுத்தும் வெயிலில் தாகப்பட்ட காகம்போல வெகுநேரம் வாய் பிளந்திருந்தவர் இரண்டு கைகளையும் காற்றில் விரித்துவிட்டு தலையை உயர்த்தித் திரும்பினார். பாண்டியின் அம்மா பரிமளம் பின்னால் நின்றிருந்தாள்.

''இந்த கயித்துக் கட்ட அவுத்துட்டு விலங்குமாதிரி எதாவது மாட்டுனா தான் சரிப்படும் பாத்துக்குடும். சோறு கஞ்சி குடிக்க முடியமாட்டேங்குது. வாயில ஊட்டி விட்டாலும் ஒரு வாய் தின்னுதான். ஒரு வாய் திமிருதான். ஒரு வாய் முகத்துல துப்பி வச்சுப்புடுதான். பெரிய நிந்தனையாயிருக்கு.''

பாண்டியின் அம்மா கூறியதை வெறுமனே தலையாட்டிக்கொண்டு கேட்டவர் இன்னும் தடுமாற்றம் குறையாதவராக இருந்தார். பாண்டியின் உடல் அசைந்தது. சிரமத்தோடு தலையைத் தூக்கி சுற்றும்முற்றும் பார்த்தான். அவன் தன்னை அடையாளம் காண உதவுவதுபோல் ஆசாரி முகத்தில் பழைய நினைவுகளைப் புதுப்பித்தார். அவன் குரல் எடுத்து அவரை அழைத்தான்.

''ஏய்... இங்க வா.''

இதை சற்றும் எதிர்பாராத ஆசாரி ஓரடி பின்னே திடுக்கிட்டு நகர்ந்தார்.

எழுந்து அமர்ந்தவன் கைகளை நீட்டிக் கத்தினான். ''இத அவுத்து விடு. நீயாவது அவுத்து விடு. அந்த தேவடியாகிட்ட சொன்னா அவுத்து விட மாட்டேங்கா.''

ஆசாரி இரண்டு கைகளாலும் காதுகளைப் பொத்திக்கொண்டார். முகம் நரகலைக் கண்டதுபோல் அஷ்டகோணலில் நெளிந்தது. அங்கிருந்து சீக்கிரம் கழன்றுவிட முடிவெடுத்துவிட்டார். சிறு நேர இடைவெளிக்குப் பின் ''நீங்க பெத்த பிள்ளையாம்மா உங்கள பாத்து இப்படி நா கூசாம பேசுது!'' என்று வியப்பு மேலிடக் கேட்டார்.

''இல்லய்யா. அவனை மாதிரி இருக்குற யாரையோ பிடிச்சுட்டு வந்து கெட்டிப் போட்டிருக்காங்க.'' அதற்கு மேலும் பேச முடியாத அம்மாவின் முந்தானை நுனி அவள் முகத்துக்குப் போயிற்று.

## 3

பகலில் பற்றிக்கொண்ட நெஞ்சுப் படபடப்பு இரவிலும் ஆசாரிக்கு அடங்கவில்லை. சாப்பாட்டுக்கு இடையில் தண்ணீர் அருந்தாதவர் இன்று இரண்டு முறை மடக்குமடக்குனு சொம்பை வாயில் கவிழ்த்துக் கொண்டதைப் பார்த்த ஈஸ்வரி கணவரிடம் விசாரிக்கலாம் என்று வாயெடுத்து பிறகு வேண்டாமென்று விட்டுவிட்டாள்.

பேரப்பிள்ளைகள் மூச்சிழுத்துவிட்டு நன்றாகத் தூங்கிப் போயிருந்தார்கள். ஈஸ்வரிக்கும் கண்கள் செம்மிப்போயிருந்தன. ஆனாலும் கட்டிலில் உறக்கமின்றி ஏதோ மனத்தொல்லையோடு கணவர் புரண்டு புரண்டு நெளியும் அசைவு தெளிவாகக் கேட்டுக்கொண்டிருந்தது. அந்தியில் மேலுக்கு வெந்நீர் போட்டுக் கொடுத்ததை ஞாபகப்படுத்தி மனத்துக்குள் உறுதிப்படுத்தினாள். சமாதானமடைந்தாள்.

விலங்கின் முழு அளவு, வடிவுகளை கற்பனையில் வரைந்து பார்த்தார் ஏலான ஆசாரி. வரைய வரைய அது அழிந்துகொண்டே போனது. விரல் திண்ணம் கம்பியில் கால்களுக்கு இரண்டு வளையம், கைகளுக்கு இரண்டு. ஓட விடாமல் நடக்க மட்டுமே அனுமதிக்கும் இசைவோடு கால் வளையங்களை இணைக்கும் கம்பிகள். ஒரு கையில் தட்டை ஏந்தியபடி

இன்னொன்றால் சோற்றையள்ளி வாயில் ஊட்டும் இசைவோடு கை வளையங்கள். அதுவும் விரல் திண்ணமிருந்தால்தான் உறுதியாயிருக்கும். காலிலிருந்து கையை இணைக்க ஒரு சங்கிலி. கால் விலங்கு நடுவிலிருந்து போதுமான நீளத்துக்கு வால் முளைத்தது மாதிரி மரத்தில் கட்டுவதற்கு ஒரு சங்கிலி.

அனிச்சையாக ஏலான ஆசாரி தனது கைகால்களை நீட்டியும் விரித்தும் சுயபரிசோதனை செய்துகொண்டார். கற்பனையில் செய்த விலங்கு உண்மையிலேயே தனக்குப் பூட்டப்பட்டிருப்பதாக உணர்ந்து மாறாட்ட மடைந்த போது அப்படிச் செய்தார். பக்கத்தில் கிடந்த தோள்துண்டை எடுத்து முகத்தை அழுத்தமாகத் துடைத்துவிட்டு 'நாளைய கதை நாளைக்கு. தூங்க வழியப் பாப்போம்' என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டு புரண்டு மறுபக்கம் ஒருக்களித்து உறங்க முயன்றார். உறக்கம் ஏற்கனவே போய்விட்டதைப்போல ஏதேதோ யோசனைகள் வந்து குவிந்தன.

பாண்டியை சமீப காலத்தில் அவர் பார்த்ததில்லை. பல வருடங்களுக்கு முன் பள்ளிக்கூடம் படிக்கிற காலத்தில் பார்த்திருக்கிறார். முதல் பார்வை யிலேயே மனத்தில் பதிந்து கொள்ளும் சாயலுடைய முகம். பம்பரத்திற்கு ஆணி வைப்பதற்காகப் பல முறை வந்திருக்கிறான். சுற்று வட்டத்தில் நாலு ஐந்து ஊர்களுக்குப் கொல்லாசாரியாக இருந்து வந்ததால் சிறுவர்கள் அவரிடம்தான் பம்பரத்து ஆணி வைக்க வருவார்கள். புதுப்பம்பரங் களில் கடையில் ஒப்புக்கு ஒரு ஆணி வைத்திருப்பார்கள். அது விளை யாட்டுக்கு உதவாது. முளைவிட்டு தளிர்த்ததுபோல் சின்னதாக இருக்கும். அதைப் பிடுங்கி எறிந்துவிட்டு ஆட்ட வீரர்கள் விருப்பத்திற்கேற்ப கோட்டமில்லாமல் ஆணியை பதித்துத் தந்து, கொடுக்கும் காசை வாங்கிக் கொள்வதுண்டு. பையன்களின் தகப்பன்கள் அவருக்குத் தெரிந்தவராக, கொஞ்சம் பழக்கமுடையவர்களாக இருக்கும் பட்சத்தில் செய்கூலி இல்லை. சில தருணங்களில் சேதாரங்களும் உண்டாகிவிடும்.

''எப்பவுவே ஒரு ரெவுலாத்தானே கேப்பே, இதுக்கு மட்டும் என்னடே பெருசு?'' என்ற கேள்வி நினைவில் ஓடியது.

சின்னப்பயல் பாண்டி பதிலேதும் கூறாமல் இறுக்கமான முகத்துடன் 'ஆமா பெருசுதான். ரொம்ப பெருசு' என்பதுபோல் தலையை ஆட்டி னான். அவன் விரும்பிய சைசில் அவர் ஆணியை அடிக்கும் போது எதிர் பாராமல் இரண்டாகப் பிளந்துவிட்டது. பாண்டி ஆசாரியின் முகத்தையும், பிளந்த புதுப் பம்பரத்தின் துண்டுகளையும் மாறி மாறிப் பார்த்தான். அவன் முகத்திலிருந்த கோபம், ஒருவித வைராக்கியம் இப்போது வெறும் வாட்டமாக மாறிவிட்டிருந்தது.

''நான் சொன்னேன்னு அப்பாகிட்டே சொல்லி வேற ஒண்ணு வாங்கிட்டு வாடே'' என்று சிரித்து சமாளித்தார். பதிலொன்றும் கூறாமல் எழுந்து நடந்தான். தூரத்தில் செல்லும்போது அவன் தோள்கள்

குலுங்குவதை ஆசாரி பார்த்தார். அத்தோடு அவன் பம்பர விளையாட்டை நிறுத்தியிருப்பான் போல. அதற்குப் பின் அவனை அவர் பட்டறையில் பார்த்ததில்லை.

## 5

துரு தின்று கொஞ்சம் மிச்சம் வைத்திருந்த சைக்கிள் மீதேறி மணற்பாதையில் செலுத்தியபோது, கால் கட்டைவிரலிடுக்கில் கிளிக் குஞ்சின் தலை நெரிபட்டு கீச் கிறீச் சென்று ஒலி எழுவதைப் பற்றி சிறிதும் கவலைப்படாமல் திரேகத்தில் ஆங்காங்கே நரம்பு முடிச்சுகள் விடைக்க ஏலான ஆசாரி மிதமான வேகத்தில் வலு கூட்டி எவ்வி எவ்வி மிதித்தார். சைக்கிள் சவாரி எப்போதுமே அவருக்கு சவாலான ஒன்றாகவே இருந்து வருகிறது. அவர் சைக்கிள் ஓட்டும்போது பார்ப்பவர்களுக்கு கேரியரைப் பிடித்துக்கொண்டு ரெண்டு பேர் அவருக்குப் பின்னால் ஓடிக் கொண்டிருந்தால் நல்லது என்று படும்.

சக்கரங்கள் புதைந்து திணறும் மணல் மிகுந்த பாதைகளில் படு ஜாக்கிரதையாகச் செயல்படுவார். அப்படியும் சில வேளைகளில் அவர் கட்டுப்பாட்டை மீறி சைக்கிள் அவரைக் கவிழ்த்திருக்கிறது. அதற்கான காரணத்தையும் அலசி ஆராய்ந்து பலத்த சிந்தனைக்குப் பிறகு அறிந்துகொண்டார். சைக்கிளைக் கண்டுபிடித்தவன் நொட்டாங் கைப் பழக்கமுள்ளவனாக இருந்திருக்க வேண்டும். பின் சக்கரத்துக்கான பிரேக்கை அவன் நொட்டாங் கைப் பக்கமாக வைத்துத் தொலைத்ததால் தான் நாலைந்து முறை விழுந்து எழ வேண்டியதாகி விட்டது. ஆத்திர அவசரத்திற்கு சோத்தாங் கை பிரேக்கையே பிடித்து விடுவதால் முகம் குப்புறப் பாய வேண்டியிருக்கிறது. அதுவும் வருகிற ஐப்பசியில் ஆகப்போகும் ஐம்பத்திரெண்டாவது வயசில் பெருத்த அவமானமாகத் தான் இருக்கிறது. பட்டறையில் சம்மட்டி போடும் மாடசாமியை ஓட்ட விட்டு பின்னால் அமர்ந்து கொள்ளலாம் என்று நினைத்தால் மொறுமொறு வென்று அரிசி முறுக்கு மாதிரி முறுகிப் போயிருக்கும் சைக்கிளின் திடம் அவ்வளவு உத்திரவாதமாக இல்லை.

இடுப்பில் வேஷ்டியும் தோளில் துண்டும் நெற்றியில் நீறும் அணிந்திருந்த ஏலான ஆசாரி இன்று மகிழ்ச்சியாய் இல்லையென்பதை வழியில் எதிர்கொண்டவர்கள் எளிதாக உணர்ந்தார்கள். அவர் முகம் இறுகிப் போயிருந்தது. பெரிய கண்களும் நீளமான நாசியும் தடித்து மடிந்த உதடுகளும் சிறுத்துப் போயிருப்பதாகப் பட்டது.

குசல விசாரிப்புகளுக்கெல்லாம் குறைந்த வார்த்தைகளிலே பதிலை முடித்துக்கொண்டார், சுரத்தில்லாத குரலில். அநியாயத்துக்கு மூச்சு இரைத்தது. வயிற்றுத் தொந்தரவு ஏற்படும் போலிருந்தது. எங்கே போகிறோம் என்ற தெளிவுமில்லை. யோசனைகள் எல்லாம் வழிந்தோடி

மனசெங்கும் வெறுமை அப்பிக் கனத்தது. பாண்டியின் முகமே மீண்டும் மீண்டும் கண்ணில் நின்றது. தனக்கும் சித்தப்பிரமை ஏற்பட்டுவிட்டதோ என்று சந்தேகப்பட்டார். பட்டறையில் வாங்கிப் போட்டிருக்கும் வேலைகளை நினைவுபடுத்திப் பார்த்தார். பழுக்க வைத்து நறுக்கித் துவைக்க வேண்டிய இரும்புத் துண்டுகளை மனத்துக்குள் கொண்டுவந்து அடுக்கினார். ஆனாலும் அவரது இரக்க குணமிக்க மனம் சுட்ட மெழுகாய் உருகிக்கொண்டேயிருந்தது. கொஞ்சம் சாராயம் குடித்தால் தேவலாம் என்று ஒரு எண்ணம் உடலில் புதுத் தெம்பைக் கலந்தது. மடித்துக் கட்டியிருந்த வேட்டியை உயர்த்தி கால் சராய் பைக்குள் கையை விட்டார். நைந்து போன ரூபாய் நோட்டுகள் தட்டுப்பட்டன. சைக்கிள் சத்தம் ஒரு விசை அதிகரித்தது.

அதுவரை தகித்துக்கொண்டிருந்த சூரியன் மேற்கு மலைத்தொடருக்குப் பின்னே சரிந்தான். அடிவானத்தில் நிறைந்திருந்த மேகத் தக்கைகள் நீலப்பட்டில் பரப்பி வைத்த செம்பவளங்களாக ஜொலித்தன. பழுக்கக் காய்ச்சிய இரும்புக் குண்டாக சூரியன் அடிவானத்தில் கிடந்தான். மாலைக்குள் நுழைந்து தணிந்து வீசிய காற்று புற்பூண்டுகளைத் தொட்டு படிய வருடிக் கொடுத்து நிலத்தின் வெக்கையை ஆற்றியது. கல்லடிகள் பட்டு உடல் கிழிந்து செத்துப்போன ராட்சச கருநாகமென நெளிந்து கிடந்த தார்சாலை மேல் ஏலான ஆசாரி ஏறியதும் டும் டும் மென்று சப்தத்தோடு பூமி அதிர்ந்தது. தலைக்குக் குளித்து ஈரத்துணியுடன் சாமி சேவித்து நெற்றியில் மூன்றுவிரல் பட்டை சாத்தியிருந்த போதிலும் சற்றும் எதிர் பாராத சப்தத்தால் நிலைகுலைந்தார். திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார். தூர தூரத்துக்கும் யாருமில்லை. மார்பின் இடது பக்கம் லேசாக வலி துடித்தடங்கியது.

எங்கோ கிணறு தோண்டுபவர்கள் கரையேறுமுன் பாறையைப் பிளக்க சில ரவைப் புட்டுக் குண்டுகளை வெடித்திருக்கிறார்கள் என்பதை கிரகித்துக் கொண்டதும் மனமும் உடலும் மீண்டும் சமநிலைக்குத் திரும்பியது. யோசித்தபடி வந்த விஷயம் மறந்துபோய்விட்டது.

ஒற்றைப் பாலத்தையொட்டி சைக்கிளை ஸ்டாண்ட் போட்டு நிறுத்தி விட்டு ஒற்றையடிப் பாதையில் இறங்கி நடந்து சாராய வியாபாரம் நடக்கும் ஓடையை அடைந்தார். ஏற்கனவே சிலர் அங்கே குழுமியிருந் தனர். கசப்பு நெடி காற்றில் அலைந்தது. தாளித வாசனையும் கும்மென் றிருந்தது. "மாமா வாருங்கோ!" சாராய வியாபாரி கொம்பையாத் தேவர் வரவேற்றார். ஓடைமணல் ஓரமாய் வெள்ளை நிறத்தில் கேன் ஒற்றை பூடம் போல் பயங்கரமும் வசீகரமும் கலந்த கம்பீரத்தோடு வீற்றிருந்தது. அதனெதிரே நான்கைந்து பேர் நில ஆராய்ச்சியில் தீவிரமாய் ஈடுபட்டுக் கொண்டிருந்தனர். வரிசையில் வேலியாக அடர்ந்திருந்த உடைமர முட்டுக்குள் பன்றிக்குட்டியாக ட்யூப் வயிறு புடைத்துக் கிடந்தது.

''என்ன மாமா, ஆளு டிப்டாப்பா புதுமாப்புள மாதிரி வந்திருக்கியோ! தோரணை கள கட்டுது...''

கொம்பையா கண்ணாடி தம்ளர் ஒன்றை எடுத்து நீட்டினார். இடுப்பில் கையூன்றி நின்ற ஆசாரி தம்ளரை வாங்கி தோள்துண்டால் வாய் விளிம்பைத் துடைத்துக் கொடுத்தார். வாழையிலைத் துணுக்கில் அவித்த சுண்டல் வாங்கிக்கொண்டார். ரூபாய் நோட்டுக்கள் கை மாறியதும் கிளாஸில் திரவம் நிறைந்தது.

இருந்த இருப்புக்கு ஒரே மூச்சில் இரண்டு கிளாஸ்கள் குடித்துவிட்டு எழுந்து காறித் துப்பினார். கொம்பையாத் தேவரைப் பார்த்து தலையை இங்குமங்கும் அமர்த்தலாக ஆட்டி திருப்தியை வெளிப்படுத்திவிட்டு பாதையைப் பிடித்து நடந்தார். ''மாமா எப்போ வந்தாலும் பதிவான அளவு தான். ஒரு மில்லி கூடாது குறையாது.'' முதுகுக்குப் பின்னே சத்தமான குரலில் பாராட்டு. எரிச்சலோடு ராஜ ஏப்பம் பரிந்தது.

ஒற்றைப் பாலம் காரை உதிர்ந்து கற்கள் பெயர்ந்து குறுகிப் போய் நின்றது. பொடிந்து போன திண்டில் தோள் துண்டை பட்டும் படாமலும் விசிறிவிட்டு அமர்ந்தார். கொடுத்த விலைக்கு போதை வேலையைத் தொடங்கியது. காற்று மோத மோத முகமும் உடலும் கடினப்படுவதாக உணர்வு பரவியது.

## 6

குரைப்பொலி சன்னமாக காதில் விழுந்தது. ரெண்டு பர்லாங்கு தொலைவில் ஊர் இருந்தது. பனை மரங்களும் சீனம் உடைகளும் அடைத்துக் கொண்டு நிற்கும் காட்டுக்குள் குரைப்பதற்கு நாய் எங்கிருந்து வந்தது என்று சுற்றும்முற்றும் பார்த்தார். கால் இடறி நாய் பாழும் கிணற்றுக்குள் விழுந்து விட்டதோ? ஆக்ரோசமான குரைப்புச் சத்தம் கேட்டுக்கொண்டேயிருந்தது. செவிகளை விட்டுவிட்டு வேறு ஏதோ புலன் வழியாக உடலுக்குள் நுழைவது போலிருந்தது. முதுகுத் தண்டுவடத்தில் சில கணுக்கள் ஜில்லிட்டன. தலையை உலுக்கிவிட்டு இருந்தபடியே இடுப்பு வேட்டியைக் கூட ஒரு முறுக்கு இறுக்கினார். 'நாயிமில்ல பேயிமில்ல, மில்லிக் கோளாறு' என்று நினைத்தார். போதைக் கிறுகிறுப்பை அனுபவிக்கும் விதமாக யோசனைகள் புறப்பட்ட ஈசல் புற்றை அடைத்து மூடிவிட்டு பார்வையைத் திருப்பி அப்பால் ஊன்றினார்.

பகல் வெளிச்சத்தின் கடைசிச் சொட்டுத் துளியும் உருகி மருவியது. கரும்பனிபோல் மெல்ல இருள் பொழிந்து தொலை தூரப் பரப்புகளில் திரை இறங்கியது. வானத்தில் நீலம் மறைந்தது. வெள்ளிகள் பூக்கவில்லை. மரங்கள் மேகாற்றில் தள்ளாடின.

சரக்கு மீது சந்தேகம் எழுந்தது. கலவையில் தண்ணீர் அதிகமாகிவிட்டது. குடிக்கும்போது போதுமான கசப்பு இருந்தது. போதையில் வழக்கமான

கெச்சிதம் இல்லை. இன்னும் ஒரு கிளாஸ் சாப்பிட்டால் சரியாக இருக்கும். காத தூரம் வெயிலில் நடந்தாலே கண்ணையிருட்டிக் கொண்டு வரும். அதனால் பயனொன்றுமில்லை. போதையின் மகிமையே விறுவிறுப்பில் தான் இருக்கிறது. மூளைக்குள் ஆயிரம் திகிரிகள் சுழன்று கழன்று ஓடவேண்டும். அதுவரை திருப்தி எட்டாது. பாலத்திலிருந்தபடியே ஓடை வளைவை நோட்டமிட்டார். அங்கே டார்ச் விளக்கு. மில்லிக்கும் சில்லறைக்கும் எரிவதும் அணைவதுமாக வெளிச்சம் விட்டு விட்டு மின் னியது. மேலும் ஒரு கிளாஸ் தாகத்துடன் ஆசாரி இரண்டு கைகளையும் ஊன்றி எழவும் நெஞ்சில் பலமாக ஒரு மிதி விழுந்தது. 'ஆ' வென்று தட்டையாக அலறினார். நல்லவேளையாக தடுமாறி பின்பக்கம் சாய வில்லை. சாய்ந்திருந்தால் குட்டிக்கரணமடித்து பாலத்துக்கடியில் சுண்ணாம்புப் பாறையில் விழுந்திருப்பார். எதிரே யாருமில்லை. உடல் கூசிச் சிலிர்த்தது. பயந்து திடுக்கிட்டதில் கரண்டைக் காலுக்கு இறங்கி விட்டது போதை. பிரமை என்று நம்ப முடியவில்லை. கண் தெரியாத பறவை ஏதோ வந்து மோதியது போலுமில்லை. மொத்த பலத்தையும் திரட்டி ஒரு கால்தான் மிதித்தது போலிருந்தது. அதன் உப்புக்குத்தி மேடு உலக்கைபோல் வந்து இடித்தது. ஆனால் கால் எங்கே போயிற்று? ஆள் இல்லாமல் கால் மட்டும் எப்படி வந்தது? அண்ணாந்து பார்த்தார். வானமே தெரியவில்லை. உடல் தன்னிச்சையாய் நடுங்கியது. அவர் திரும்பிப் பார்க்கவிருந்த திசையில் நாய் மோசமாகக் குரைத்தது. அங்கிருந்து வேகமாகப் புறப்பட முயன்றார். எங்கே போவதென்று குழப்பம் வந்தது. பாதையைப் பற்றி கவலைப்படாமல் ஓடையை நோக்கி நடந்தார். கொரண்டு மூடுகள் பந்துமேல் ஏறியதுபோல் தடுமாறச் செய்தன.

ஓடை வளைவை நெருங்கியதும் ஆள் அரவமும் பேச்சுக் குரல்களும் சிறு ஆசுவாசத்தை தந்தன. தேவர் டார்ச் அடித்து ஒளிக்கம்பளம் விரித்து வரவேற்றார். ''மாமா வாருங்கோ.''

''சாப்டது சுள்ளுனு இல்ல. ஒண்ணு போதும். ஊத்துங்க.''

''மாமாவுக்கு இன்னைக்கி மடி பெருத்துப் போச்சுன்னு சொல்லுங்க. சரக்கு ஏ கிளாஸ் சரக்கு. சாப்ட சாப்ட மதுரமா இருக்கும்.''

இருட்டுக்குள் நிழல்கள் பேசிக்கொண்டன. சில நிழல்கள் எழுந்து இருளுக்குள் நுழைந்து கரைந்தன. வெள்ளை வேட்டி வெளிச்சம் அவற்றுக்குப் போதுமானதாக இருந்தது. மழை வருவதற்கான அறிகுறி யுடன் ஈரக்காற்று மோதியது.

''கடிக்க என்னமும் இருக்கா?''

''எல்லாம் ஆயிப்போச்சே! இது என்ன குடிக்கப் பழகுத பிள்ள மாதிரி கேக்குதிய? உள்ளங்கையை மோந்து பாத்துட்டு சரட்டுனு ஒரே இழுப்பா இழுங்க.'' தேவர் இப்படிக் கூறியதும் கவனம் கைமேல் திரும்பியது. இரண்டு கைகளும் சில அங்குலங்கள் தடாலடியாக வளர்ந்து நீண்டிருந்தன.

யாரும் பார்த்துவிடாமலிருக்க வெடுக்கென பின்னுக்கிழுத்தார். பின்னும் கைகள் வளர்வதை நிறுத்துவதாயில்லை. தரையில் ஊன்றினார். மணல் நெறுநெறுவென்றிருந்தது.

ஆசாரியின் தடுமாற்றத்தை தேவர் ரசித்தார். சரக்கைக் குறை கூறியதில் மனசோரமாய் படிந்திருந்த வருத்தம் இப்போது கணக்கில் சரியாகி விட்டிருந்தது.

''குடிங்கோ. வீட்டுல காத்துக் கிடப்பாவளா...'' தேவர் துரிதப்படுத்தினார். அவர்கள் இருவர் மட்டுமே ஓடையில் இருந்தனர். தேவர் புறப்படுவதற்கான ஏற்பாடுகளை ஒவ்வொன்றாய் ஆரம்பித்திருந்தார். நிலம் வெளி ஓடை பாலம் வழி என எல்லாவற்றையும் இருள் விழுங்கிவிட்டது.

நீளமாகிவிட்ட மிக நீளமாகிவிட்ட தன் கைகளைப் பணித்து சாராயத் தம்ளரை எடுத்து எப்படி வாய்க்கு கொண்டுவருவது என்ற குழப்பத்தில் ஆசாரி தத்தளித்தார். ''வேணாம்யா'' என்று சொன்னார். குரல் மூலம் அதைக் கூற இயலவில்லை. உளறலாய் வழிந்தது. குரைப்பொலி வந்த திசையை ஏறிட்டார். வெள்ளைக் கேன் தான் அங்கே குத்துக்காலிட்டு உக்கார்ந்திருந்தது.

நிலைமையை உணர்ந்த தேவர், ஆசாரி விலாவில் கை போட்டு தூக்கி நிறுத்தினார். ஆசாரியின் கைகள் உணர்வற்று துணிக்கயிறாகத் தொங்கியாடின. நிற்கும் பலமிழந்து மொத்த உடலும் துவண்டு தழைந்தது. நெஞ்சின் இடது ஓரத்தில் வலி கூடியது. சீமை உடைகளின் பச்சை முகடுகள் பளீரென ஒளிவிட்டு அணைய இடிமுழக்கத்துடன் இருள் மீண்டும் கவ்வியது.

ஓடை மேட்டில் நின்ற சைக்கிளின் ஸ்டாண்டைத் தள்ள முயன்ற போது காலைக் காணவில்லை.

சைக்கிள் கீழே கிடக்க ஆசாரி அதன் மேல் குப்புற விழுந்து கிடந்தார். தூறல் வலுத்தது.

குரைப்பொலி கேட்டது. பக்கத்திலா தூரத்திலா?

பயத்தில் கொஞ்சம் போதையிறங்க நிதானமடைந்து தடுமாறி எழுந்து சைக்கிளைத் துழாவித் தூக்க முயன்றபோதுதான் காது கிழிபடும் உறுமலோடு அது பாய்ந்தது.

''யம்மா...''

---

காதல் என்பது ஒரு சந்திப்பு
காதல் என்பது ஒரு கண்டுகொள்ளல்
காதல் என்பது இறையனுபவம்
காதல் என்பது ஒரு குதூகலம்
காதலுக்குக் காலம் கிடையாது
எந்தச் சொற்களாலும்
உணர்த்திவிட முடியாதது அது
காதல் மட்டுமே காதலை அறியும்
காதல் கொண்ட இதயத்தில்
காதல் மட்டுமே இருக்கிறது
காதலின் தனிச் சிறப்பு
அது மரணமறியாதது
அது அதீதப் பேதமையின்
பொங்கும் இன்பம்
பவுர்ணமிப் புன்னகை
வாழ்வு தன்னைத் தானே
கண்டுகொண்டுவிட்ட
திகைப்புக் கொண்டாட்டம்
ஆனந்தக் கிறக்கம் தணிந்த
ஆழ்ந்த நிதானம்
பேரமைதி
மவ்னம்
மீப்பெருஞ்
செயல்பாட்டுக் களஞ்சியம்
அளப்பரிய செல்வம்

விழித்துக்கொண்ட மனிதன் காண்பது
விழித்துக்கொண்ட மனிதனையே தானே?
அபயக் குரலோ
இரும்புச் சங்கிலி அழுந்த
கருங்கற் பிரகாரமெல்லாம் பீதி கொண்டதிர
கட்டுண்ட இடிமேகமாய்க் குமுறும்
யானைப் பிளிறல்!
அடி எடுத்துவைக்க முடியாதபடி
கால்கள் சிறகாகத் துடிக்க
நாக்கு குழறி பேச்சு மறுக்க
மலையுச்சியில் வந்தமர் விண்பருந்தின் வாய்க்
கோழிக் குஞ்சாய்
வந்தமர்ந்தானோ அவன்
எப்பொருளும் மர்மமற்றுப்
பேரொளியில் துலங்குமொரு
பெருங்களத்தில்?
அனுபவங்கள்
எண்ணங்கள்
நினைவுகள்
செயல்கள்
என்று தொடர்வதிலில்லை,
நிறுத்துவதில்தான்
என்பதுபோலவோ
அன்று ஒரு நாள்
அவன் பேச்சு அறும்படி
வந்து நின்றது அது?

இந்நூலில் இதே எழுத்து வடிவில் இருக்கும் கவிதை வரிகள் அனைத்தும் தேவதேவன் உடையவை.

மழை படையெடுத்து வந்தது. கட்டிடங்களைப் புரட்டியெறியும் குறியோடு காற்று ஆவேசமாகத் தடைகளில் மோதிச் சுழன்றடித்தது. ஊர் உறங்கியபின் பின்னிரவில் கொட்டத் தொடங்கிய மழை கூரைகளைத் துவைத்தது. வானம் தேக்கி வைத்திருந்த உக்கிரத்தை இடிகளாக அண்ட மதிரக் கக்கியது.

பரிமளத்துக்கு விழிப்புத் தட்டியது. பசையிட்டுப் பூசியதுபோல் இமைகளைப் பிரிக்க சிரமமாகயிருந்தது. மழையின் கரகரப்பான கூப்பாட்டில் தூக்கம் அதிர்ந்து அறுந்தது. ஓலைப்படலியில் நீர்மணிகள் பொரிந்து சடசடத்தன. ஜன்னல்களுக்கு மேலேயிருந்த இடைவெளிகள், உத்தரங்களின் இண்டுஇடுக்குகள் வாயிலாக நுழைந்து வீட்டுக்குள் உலவிய காற்றில் சருமத்தைக் கிள்ளும் தட்பம். உறக்கம் உடலை இற்றுப் போகச் செய்திருந்தது. அசதி உப்பு மூட்டையேறியிருந்ததை எழுந்து கட்டிலில் அமர்ந்ததும் உணர்ந்தாள். எண்ணெய் குறைந்து குறைந்து சுடர் மறையும் அகல்போல மீண்டும் உறக்கம் கண்ணைக் கட்டியது. வானம் பெயர்ந்து விழ இடியின் ஈசான மூலை மொடுமொடுப்பு கண்கட்டைக் கத்தரித்துவிட்டது.

பரிமளம் எழுந்து விளக்கை எரியவிட்டாள்.

கடும் மழைக்காற்றில் மடிந்து போவோமோ என்று பயந்து வீட்டுக் குள் நுழைந்து ஒடுங்கியிருந்த இருளை குழல்விளக்கு தயங்கித் தயங்கி அள்ளி வெளியே வீசியது. 'நல்ல மழை' என்று மனசுக்குள் சொல்லிக் கொண்டாள். ஆனாலும் இது முகமூடிக் கொள்ளைக்காரனைப் போல் நிசியில் வந்திருக்க வேண்டாம் என்றும் நினைத்தாள்.

அவள் கால்கள் சோர்வுடன் நகர்ந்து சமையலறைப் பக்கம் வந்தன.

சாம்பலின் கதகதப்பில் உடலைச் சுருட்டிப் படுத்திருந்த வரிப் பூனை திடுக்கிட்டு தலையை உயர்த்திப் பார்த்தது. அது போலியாகத் திடுக்கிட்டது என்று மேலதிக அசைவுகள் நிரூபித்தன. எழுந்துகொள்ள விருப்பமில்லாமல் அங்கிருந்தே உறுத்துப் பார்த்தது. கண்கள் இரண்டும் திருட்டு மரகதமாக மினுங்கின. கையை வீசி ச்சூ... வென ஒலியெழுப் பினாள். பூனை மோட்டுவளை இடுக்குக்கு தாவி சுவரில் நடந்தது. நின்று தலையைத் திருப்பி இதுதான் முதலும் கடைசியுமான பார்வை என்பது போல் பார்த்தது. பிறகு சோகையோடு கால்களை மடித்து பதுங்கிய சூழி மர்ந்து தூக்கத்தைத் தொடர முயற்சித்தது. மெல்ல மெல்ல அதன்

மேலிமை இறங்கியபோது மழையின் குரல் எண்ணற்ற இசைத் தந்திகளின் அதிர்வில் கலந்தது.

புறவாசல் விளக்கு எரிந்தது. கதவு திறந்ததும் ஜிலுஜிலுவென தூவானமடித்தது. தலையை வாசலுக்கு வெளியே நீட்டி வளவைப் பார்த்தாள். உடைமரம் தலையைச் சுழற்றிப் பேயாட்டம் ஆடியது. உறைந்த பனிக்கட்டிக்குள் வரைந்த சித்திரமாக காட்சி தெளிவின்றித் தெரிந்தது. குண்டு பல்பு வெளிச்சத்தில் நீர்த்தாரைகள் நெருக்கமாகத் தொய்வின்றி இறங்கின. வழிந்தோடப் போக்கிடமின்றி கணுக்காலளவு நீர் தேங்கி நின்றது.

பாண்டி உடைமரத்தோடு மரமாக ஒன்றியொடுங்கி நின்றிருந்தான். இடுப்பிலிருந்து மூட்டுக்கால் வரை கிழிந்த சாரத்தை கட்டியிருந்தான். உச்சந்தலையிலும் முகத்திலும் தோள்களிலும் மழையின் உக்ரமான துளிகள் விழுந்து உடைந்து தெறித்தன. குளிர் அவன் உடலை நேர்பாதியாகக் குறுக்கியிருந்தது. கூர்ந்து பார்த்தபோது அவன் புருவங்களுக் கடியில் கண்கள் மெலிதாக அவளை நோக்கித் திறந்திருந்தன. வெடிப்புத் திறப்பு. பரிமளத்தின் அடிவயிற்றில் கூச்சம் கசிந்தது. கண்கள் பனித்தன. முகத்தில் வெப்பம் பரவியது. தாடை எலும்புகள் இறுக்கமடைந்தன. சேலை முகப்பால் கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள். அவன் உதடுகள் எதையோ பேசுவதுபோல் ஒட்டி ஒட்டிப் பிரிந்தன. கூர்ந்து கவனித்த போது கண்களை இன்னும் அகல விரித்து ஏக்கத்தோடு ''அம்மா...'' என்றான். அதைத் தன் செவிகளால் கேட்டதும் அவள் உடல் முழுக்கத் தீப்பற்றியது போலிருந்தது.

என்னை எல்லோரும் இப்படி கை விட்டு விட்டீர்களே, அம்மிக் கல்லாய் ஆட்டு உரலாய்க் கூட ஆகாமல் போனேனே என்ற பார்வையோடு ''அம்மா...'' என்று மீண்டும் அழைத்தான். மழை ஒரு கணம் ஊமையானது. இறந்துகொண்டிருக்கும் மனிதனின் கடைசி வார்த்தையாக அது காதில் ஒலித்தது. அவளால் நம்ப முடியவில்லை. அவனுக்குள் புகுந்திருக்கும் சத்ருவின் மோசடிப் பாசமோ என்று சந்தேகப்பட்டாள். பதில் கூறாமல் அவன் முகத்தையே வெறித்தாள்.

'நான் யாரப்பா! உன்னைப் பெத்துப் போட்ட பெரும் பாவி. நா ஒனக்கு என்ன சகாயம் செய்ய முடியும்? கடவுள் பாதத்துல ஒன்னை வைச்சிட்டோம். அவர்தான் ஒனக்கு நல்ல சுகத்தைத் தரணும். அவரால மட்டும்தான் அது முடியும்.'

அடுப்பைப் பற்ற வைத்தாள். மழை ஒய்ந்த பின் பாண்டிக்கு தருவதற்கு காப்பி தயாரித்தாள். பூனை கண்ணைத் திறந்தது. தீயெரியும் அடுப்பையும் அவளது செயல்களையும் நுட்பமாக மாறி மாறி கவனித்துக் கொண்டிருந்தது. விறகுக்கட்டைகளை வெளியே இழுத்து தீயை அணைத்தாள். கங்குத் துண்டுகளின் கதகதப்பில் காப்பி தயாராக

இருந்தது. மழை விடுவதாக இல்லை. பிடிவாதமாகப் பெய்தது. இரவு அதை பூதாகரமாக்கியது. காற்று களைப்பின்றி ஆர்ப்பரித்தது. இடி விழும்போதெல்லாம் அவள் அடிவயிறு அச்சத்தில் சுழித்தது.

காப்பியும் அம்மாவும் பாண்டிக்காகக் காத்திருந்தார்கள். பூனை அவர்களுக்காகக் காவலிருந்தது. சிவப்புத் தகடு போன்ற தன் நாவை வெளி நீட்டி வாயை நக்கி அது தன் பணியைத் தொடங்கவிருந்த நேரத்தில் மின்சாரம் அறுந்து இருள் திரை விழுந்தது. வெளியே உடை மரத்திலிருந்து உற்சாகம் பீரிட கைதட்டும் ஓசை கேட்டது. கைவிலங்குக் கண்ணிகள் ஒன்றோடு ஒன்று மோதி சாம பூஜை மணிச்சத்தமாக எழுந்தது. சிறு விளக்கைப் பொருத்தி வைக்கக்கூட திராணியிழந்து போன அம்மா இருளுக்குள் சோர்ந்து புதைந்தாள். வேதனையில் கனன்ற அடுப்பு ரத்தம் வழியும் பச்சைக் காயமாகப் பெருகி விரிந்தது.

★

தலையை உலுக்கிக்கொண்டு எழுந்தான். முதுகுப் பக்கம் தலை திருப்பிப் பார்த்தான். கூப்பிடு தூரத்தில் ஒரு குடில் தென்பட்டது. நாயின் குரைப்பொலி அந்த குடிலிலிருந்துதான் வருகிறது என்று ஊகித்தான். குடிலின் முற்றத்தில் பெரிய கடல் கிடந்தது. வானத்தை உருக்கி நீராக்கி பூமியில் ஊற்றியதுபோல பிரமாண்டமாக அது விரிந்திருந்தது. வெயிலில் வெள்ளியாக, கூராப்பில் நீலமாக வண்ணம் மாற்றி மினுமினுத்தது.

குடில், குடிசை, குச்சில் மூன்று பெயர்களுமே பொருந்தும் வகையில் ஓலைகளே கூரைகளாகவும் சுவர்களாகவும் வேயப்பட்ட அந்தக் குடிலை நோக்கி பாண்டி நடந்தான். நெருங்கியதும் முற்றத்தில் நின்று கடலைப் பார்த்துக் குரைத்துக்கொண்டு நின்ற நாயைக் கண்டான். வயிறு ஒட்டிப் போய் உலர்ந்த ஆரஞ்சுப் பழத்தோல் நிறத்துடன் நீட்டுப் போக்கான உடலில் ஆவேசமாக தலையை வெட்டிவெட்டி உயர்த்தித் தாழ்த்திக்கொண்டு நின்றது. புது மனித வாசனையை உணர்ந்ததும் குரைப்பதை நிறுத்திய நாய் பாண்டியை திராட்சைக் கண்களால் பார்த்தது. வாலைக் குழைத்தது. முன்னங்கால்களால் மாறி மாறிப் பிறாண்டி மண்ணையள்ளி பின்னால் இறைத்தது. பாண்டி மேலும் சற்று முன்னேறி குடிலின் வாசல் அருகில் சென்றான். உதட்டைக் குவித்து காற்றை உள்ளிழுத்து நச்செலி கத்துவதுபோல் ஒலியெழுப்பினான். நாய் கடலைப் பார்த்து ஒரு உறுமல் உறுமி, சில்லறையாக இரண்டு முறை அடித் தொண்டையில் குரைத்துவிட்டு, பாண்டியிடம் ஓடிவந்தது. அவனை வட்டமிட்டது. அவன் உள்ளங்கையை நாவால் ஈரப்படுத்தியது. நெடுநாள் பழகிய நெருக்கத்துடன் அதன் உடல் நெளிந்து குழைந்தது. பாண்டி கைவிரல்களால் நாயின் நெற்றியை வருடியவாறே கடலைப் பார்த்தான். கடலைத் தவிர கடலில் எதையும் காணவில்லை.

''ஏய் மாற்கி, என்ன ஆச்சு உனக்கு?'' குடிலுக்குள்ளிருந்து கரடு தட்டிய குரல் விசாரித்தது. கீச்சுக்குரலில் நாய் ஏதோ உளறியது. அடுத்த கணமே குடிலின் வாசலில் மெலிந்த மனித உருவம் ஒன்று வெளிப் பட்டது. நாய் விலகிச்சென்று மீண்டும் கடல் பார்த்து காதைக் கிழிக்கும் குரலில் குரைக்கத் தொடங்கியது. 'மாற்கி' என்று அதட்டினார் வெளியே வந்துவிட்ட பழுத்த கிழவர். அது அமைதியாகிவிட்டது. கிழவர் ஏற இறங்க பாண்டியை நோட்டமிட்டுவிட்டு ''இதுதான் முதல் முறையா'' என்று கேட்டார். அவன் குழப்பத்துடன் அவரையே கூர்ந்து பார்த்தான். தலையிலிருந்து கொட்டும் குட்டி அருவிபோல நரைத்த தலைமுடியும் தாடியும் மீசையும். ஒடுங்கிய முகம். நீண்ட கூர்மூக்கு. பொடிப் பொடி யாகச் சிறிய கண்கள். பச்சை விழிமணிகள். உடலுக்கு வயதேறி நூறைத் தாண்டியிருக்கும். கண்களுக்கு மட்டும் வாலிபத்துக்குப் பிறகு வயதே ஏறவில்லை. மெலிந்து நீண்ட கைகள். விரல்களில் வயோதிக சுருக்கங்கள். கழுத்து முதுமையிலும் உயர்ந்திருந்தது. கணுக்கால்கள்வரை வெல்வெட் அங்கி. மழை நாட்களில் பாதையில் ஊர்ந்து செல்லும் பட்டுப்பூச்சிகளை அது நினைவூட்டியது. இடுப்பிலிருந்து தோள்வரை குறுக்காகச் சுற்றிப் போர்த்தியிருந்த சால்வையின் வெண்மை கண்ணைப் பறித்தது.

அடர்ந்த மேகத்தீவு ஒன்று மிதந்து சென்று சூரியனை மறைத்தது. அதன் விளிம்புகள் ஒளிர்ந்தன. ''அண்ணாந்து அங்கே என்ன பார்க் கிறாய்? இங்கே பார். இனி உன் முறை'' கட்டளைக் குரலில் கிழவர் கடல் நோக்கி வலது கையை நீட்டினார். திமில் திமிலாக அலைகள். தூய்மை யான நுரைகள். தொடுவானம் வரை படர்ந்த முடிவற்ற உயிர்ப்பு. கடல் மிக அழகாக இருந்தது. புரண்டு வரும் கடற்காற்றில் கிழவரின் சிகை கலைந்தாடியது. அவருடைய இடுங்கிய கண்கள் தீர்க்கமாக கடலையே வெறித்துக்கொண்டிருந்தன. கீழுதடு நிராசையில் பிதுங்கியிருந்தது.

மணலில் இரண்டு கடல் நண்டுகள் அவர்களை நோக்கி ஊர்ந்து வந்தன. மாற்கி ஓடிப்போய் நண்டை முகர்ந்தது. நண்டு கொடுக்குவாய் பிளந்து மாற்கியின் மூக்கைக் கிள்ளியது. மாற்கி அலறிப் பதைத்து பின்னுக்குத் துள்ளியது. நண்டுகள் கிழவரின் காலருகே வந்தன. கிழவர் அவற்றை கால்பந்துபோல உதைப்பார் என்று எதிர்பார்த்தான். அப்படி நடக்கவில்லை. நண்டுகள் ஊர்ந்து குடிலுக்குள் சென்றன.

கிழவர் இறுக்கம் தளராமல் ''ஏதாவது சாப்பிடுகிறாயா'' என்று பாண்டியைப் பார்த்துக் கேட்டார். ''நான் திரும்பிப் போக வேண்டும்'' என்றான் பாண்டி. ''சாப்பிட்டுவிட்டு போ.'' கிழவர் தலையைச் சாய்த்து அழுத்தமாகப் பார்த்தார். சம்மதிக்காமலிருக்க முடியவில்லை. 'இங் கேயே நில். களைப்பாக இருந்தால், இப்படி அமர்ந்து கொள். கடலையே கவனித்துக் கொண்டிரு. இந்த நீல நீர்வெளியில் செந்நிறக் குறியை எங்கு கண்டாலும் உடனே எனக்கு குரல் கொடு.'' கிழவர் குடிலுக்குள் நுழைந்தார்.

பாண்டி மெல்ல நடந்து கடலை நோக்கிப் போனான். சுருள் பிரியும் உப்புக்காற்று அவன் மார்பில் கைவைத்துத் தள்ளித் தள்ளி 'வா வா' என்றது. மிதிக்க மிதிக்க மெத்தென்றிருந்த ஈரமணலில் மாற்கியும் அவனோடு வந்து இணைந்துகொண்டது. அதன் தலையும் வாலும் முடிந்த அளவு உயர்ந்திருந்தன. அச்சமும் சலிப்பும் அதன் கண்களில் உறைந்து தேங்கியிருந்தது.

எண்ணெய் ஊற்றி கடுகு தூவி கறிவேப்பிலை உருவிப்போட்டு யாரோ தாளித்து விட்டதுபோல் கடல் திடீரென்று மணத்தது. அந்த வாசம் ஒருவிதக் கிறுகிறுப்பில் தள்ளியது. வாநீரின் தன்மையில் ஏதோ ரசவாதம் ஏற்பட்டது. மாற்கி தன் பட்டை போன்ற நீளமான நாக்கை வெளியே நீட்டி ஒரு சுழற்று சுழற்றியது. ஒரு ரகசியத்தின் ருசி ரத்தத்தில் பரவிக் கலந்து புது அதிசயத்தை நிகழ்த்துவதாக அவன் உடல் பரபரப்படைந்தது. பளபளக்கும் பார்வையால் கடலை நாலா பக்கமும் விளாசினான். சல்லடை போட்டு அரித்து எடுத்ததுபோல் அப்பழுக்கற்று கடல் நீலத் தைல ஓவியமாக ஒவ்வொரு நொடியும் நெகிழ்ந்து காற்றின் சிறகுகளை விரல்களால் கோதிக்கொண்டிருந்தது.

அலைகள் முளைக்கும் எல்லைக்கு சற்று உள்ளே ரத்தினச் சில்லாக மீனொன்று நீருக்கு மேல் துள்ளியது. இடப்பக்கத்திலிருந்து வலப்பக்கத்திற்கும் வலமிருந்து இடத்திற்கும் அது அரைவட்டத்தில் பாய்ந்தது. வாழைமொட்டு வடிவிலிருந்த மீன் கண்ணாடியாக ஒளிர்ந்தது. 'தண்ணீரில் விழுந்தால் கண்ணாடி உடையாது. கண்ணாடி விழுந்தால் தண்ணீர் உடையாது' என்றே அவன் மீன் குதித்த ஒவ்வொரு முறையும் எண்ணிக்கொண்டான். மீன் துள்ளுவதை நிறுத்திக்கொண்டதும் பாண்டிக்கு கிழவனின் ஞாபகம் வந்தது. திரும்பிப் பார்த்தான். குகை வாசலில் கிழவன் கடலைப் பார்த்தபடி நின்றிருந்தான். மாற்கி ஏற்கனவே கிழவனிடம் ஓடிப்போயிருந்தது.

பாண்டி எந்த அழைப்புமில்லாமல் திரும்பி நடந்தான். மீன் சிவப்பு நிறத்தில்தானிருந்ததா என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டான். குடிலின் மிக அருகே அவன் சென்ற பிறகும் கிழவன் கடலையே சிலை போல் வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தான். நரைத்த அவன் புருவங்கள் மிகப் பெரியதாகவும் கண்கள் மிகச் சிறியதாகவும் இருப்பதாகப் பட்டது.

''அந்த சில்லாட்டை மீன் ஒரு கிறுக்கு'' சொல்லிவிட்டு கிழவன் சிரித்தான். அவன் நமட்டுச் சிரிப்பு வெளுத்த மீசை தாடியை மீறி வெளியே வர முடியவில்லை. அவன் பார்வையின் தீட்சண்யம் ஆச்சரியப்படுத்தியது. குடிசைக்குள் நுழைந்து திரும்பிய கிழவன் கையில் ஓலையில் முடைந்த தட்டுடன் திரும்பினான். விளிம்பு நெளிந்த விசிறி போலிருந்தது அது. பாண்டியிடம் நீட்டி, அமர்ந்து சாப்பிடுமாறு கேட்டுக்கொண்டான். தட்டில் தீயில் வாட்டி பக்குவப்படுத்தப்பட்ட

இரண்டு மாமிசப்பந்துகள் இருந்தன. ''பால் நண்டு'' என்றான். வாய் ஒடுங்கிய மண்குடுவையை அவனருகே வைத்தான். ''கள்ளு நல்லா விளைஞ்சது'' என்று தலையை லேசான பெருமிதத்துடன் ஆட்டினான். கை நீட்டி வாங்கிக்கொண்ட பாண்டி ''நீங்கள் சாப்பிடவில்லையா'' என்று கேட்டான். கிழவன் மிகுந்த சலிப்புடன் பதில் சொன்னான் ''எல்லாம் அலுத்துப் போச்சு. அலுத்துப் போகாத விஷயமே இந்த உலகத்தில இல்லை என்றாகிவிட்டது. உணவு தண்ணீர் உறக்கம் கனவு காற்று இந்தக் கடல்... எல்லாமே அலுப்பாயிருக்கு. எவ்வளவு சூரியோதயம் சந்திரோதயம் பாத்திருக்கேன் தெரியுமா? இந்த வெளிச்சம், இருட்டு, மழை, வெயில், குளிர் இதெல்லாம் கண்டா எரிச்சலா இருக்கு. நாளாதி நாளா இந்த உடம்புக்குள்ள மாட்டிக்கிட்டு உயிரோடு நிணறிக்கிட்டிருக்கேன். நீ சாப்பிடு.''

பாண்டிக்கு ஒன்றும் விளங்கவில்லை. கிழவனின் முகத்தையே வெறுமனே பார்த்துக்கொண்டிருந்தான். மிதமான சூட்டுடன் நண்டு சுவையாக இருந்தது. பிட்டு இரண்டு வாய் சாப்பிட்டான். மிளகுக் காரம் தூக்கலாக இருந்தது. கார மிகுதியில் உடல் உறுப்புகளெங்கும் ஒருவித வெப்பம் ஊடுருவியது. மண்குடுவையை எடுத்து வாயில் கவிழ்த்தான், நல்ல புளிப்பு. பழக்கமில்லாத சுவை. மாற்கியைப் பார்த்தான். முன்னங் கால்களை நீட்டிப் படுத்திருந்தது. அவன் கண்களைச் சந்தித்ததும் வாலைக் குழைத்தது. வேண்டுமென்று கேட்கிறதா வேண்டாமென்று மறுக்கிறதா என்று யோசித்தான். மாற்கியும் அவசரமில்லாமல் கண்களை மூடிக்கொண்டு யோசனையில் ஆழ்ந்தது. கிழவன் குகை வாசலில் சாய்ந்து அமர்ந்திருந்தான். நீண்ட தாடி அவன் மார்பில் புரண்ட வண்ணமிருந்தது. அவன் ஏதோ பேசிக்கொண்டிருந்தான். நாவின் சுவை மொட்டுகள் ஒவ்வொன்றையும் கிள்ளிய நண்டுக்கறியும் இரண்டு வாய் கள்ளும் மேலும் வயிற்றுக்குள் சென்றபிறகு கிழவனின் பேச்சில் குரலும் பொருளும் துலக்கமடைந்து வந்தது.

அவன் பிறக்கும்போதே ஆயுள் நீளம், அந்திம காலம் எல்லாம் தெரிஞ்சிக்கிட்டுதான் வந்தான். ஆடு மேய்த்துக்கொண்டு அலையும் பருவங்களிலேயே தாடிக்காரன் கில்லாடிதான். அந்தத் தாடியில் நரை பாவத் தொடங்கிய தன் மத்திய வயதிலேயே தன்னை தேவனின் மகனென்றும் கடவுளென்றும் அறிவித்துக் கொண்டான். மலைகள் மேலும் குன்றுகள் மேலும் அமர்ந்தபடி உரத்த குரலில் சொற்களைப் பொழிந்தான். சிலர் நம்பிக்கையோடு வசன மழையில் நனைந்தார்கள். அவன் போதனைகள்தான் அந்தக் காலத்தின் சிறந்த பொழுதுபோக்கென்று பலர் கருதினார்கள். குட்டிக்குட்டிக் கதைகள், உவமைகள் நிறையச் சொல்லிவந்தான். ஜனங்கள் அவன் போக்குகளை கூர்ந்து அவதானித்து ஏற்றுக்கொண்டார்களோ என்னவோ! ஆனால் அவன் வல்லமை மிகுந்த வித்தைக்காரனாகத் திகழ்ந்தான். சிறிய ஊர்கள் பெரிய

பெரிய நகரங்கள் எங்கும் அவன் புகழ் பரவியது. அவனோடே ஒட்டிக் கொண்டலைந்த கூட்டாளிகளில் கஷ்டப்பட்ட ஒருவனுக்கு கொஞ்சம் பணத்துக்காக அடிக்கடி மூக்கு வியர்த்துக் கொண்டேயிருக்கும். அந்த கூட்டாளி எப்போதும் தாடிக்காரன் முன் வெங்காயம் உரித்தவன் மாதிரி போலி விசுவாசத்தில் கண்கள் தளுதளுத்து நிற்பான். அவனைக் காணும் போதெல்லாம் தாடிக்காரனுக்கு அடிவயிறு பலமாகக் கலங்கும். அவன் புனைந்து மக்களிடம் பரப்பிய நீதிக்கதைகளில் அதிகம் அந்த கூட்டாளியை மையப்படுத்தி சொன்னவைதான்.

வேசிகளின், பாவிகளின் சமையலை திராட்சை ரசம் சேர்த்து விரும்பி ருசிக்கும் தாடிக்காரன் பல அற்புதங்களை நிகழ்த்தத் தொடங்கி யிருந்தான். பிசாசுகளைப் பிடித்து பன்றிக் கூட்டத்துக்குள் தள்ளினான். குருடனை விழி திறந்து விட்டான். முடவர்கள் எழுந்து நடந்தார்கள். வானத்திலிருந்து கூடை கூடையாக அப்பங்களையும் பொறித்த மீனையும் வரவழைத்து பெரிய விருந்து படைத்து ஆயிரக்கணக்கான மக்களின் பசியாற்றினான். ஒவ்வொரு நாளும் அஸ்தமன சூரியனைப் பார்த்து தூஷண வார்த்தைகளால் மனத்துக்குள்ளேயே கடிந்துகொள்ளும் கெட்ட பழக்கத்தை கடைசிவரை அவனால் கைவிட முடியவில்லை.

ஒருமுறை ஒரு மரத்தோணியில் தன் கூட்டாளிகளுடன் கடல் மார்க்கமாக வேறொரு நகரத்துக்கு பயணம் புறப்பட்டிருந்தான் தாடிக் காரன். களைப்பு மிகுதியால் தோணியிலேயே விரிப்பு ஒழுங்கு செய்து படுத்து உறங்கினான். இதுதான் தக்க தருணம் என்று கடல் நினைத் தது. நிஜத்தில் நீராலான கடல் கனவில் கண்ணாடி உடலுடைய ஒரு கன்னிப்பெண்ணாகி அவன் கனவுக்குள் நுழைந்தது. இடுப்புக்கு மேலே மனுஷி உடலும் இடுப்பு கீழே மீனின் உடலுமாக ரூபம் தரித்திருந்தது. வாய் பேசவும் வரம் கேட்கவும் அது போதுமென்று நினைத்தது. உறக்கத்திலிருந்து அவன் எழுந்து விடாமலிருக்க கனவுக்குள் கடல் ஆர்ப்பாட்டமில்லாமல் பவ்யமாக நடந்துகொண்டது. கன்னிப் பெண்ணுருவிலிருந்த கடலைக் கண்டதும் தாடிக்காரன் திடுக்கிட்டான். அந்த முகம் தன் தாயின் இளவயது முகத்தின் எழிலை ஒத்திருந்தது.

என்ன வேடிக்கை நாடகம் இது என்பதுபோல் தாடிக்காரன் எரிச்சலில் புருவத்தைச் சுளித்தான். கடல்கன்னி மிகுந்த நம்பிக்கையோடு கனியைப் பிழிந்து சாறை ஊற்றுவதுபோல் உரையாடினாள். அவள் குரலின் இனிமையைத் தாங்கிக்கொள்ள முடியாத இன்பத்தில் தவளை யாக மாறிவிடலாமா என்று யோசித்தான். சாத்தான்களின் தொல்லை பொறுக்காமல் அப்பால் போ என்று அதிர்ந்து பேசும் அதிகாரம் இப்போது அவனிடம் தட்டுப்பாடாய் இருந்தது.

''சுவாமி! நீங்கள்தானே தண்ணீரை ரசமாக்கினீர்கள். கடைசிப் பந்தியில் அந்த திராட்சை ரசம் புகழப்பட்டதைக் கேட்டபோது எனக்கு எச்சில் ஊறியது. அப்போதிருந்தே நான் காத்திருக்கிறேன் தேவரீர்

எப்போது என்னிடம் வருவீர்கள் என்ற எதிர்பார்ப்போடு. தேவரீர்! என்னை ஏறெடுத்துப் பாருங்கள். அடிமுதல் நுனிவரை எங்கும் உப்பாக உவர்த்துக் கிடக்கிறேன். எனக்கே என் மேல் உப்பு உறைவதுபோல் வெறுப்பு படிந்து வருகிறது. உப்பைத் தவிர வேறெதையும் ருசிக்காமல் என் வாழ்வு யுகயுகமாய் காலத்தில் நீந்திக்கொண்டிருக்கிறது. தேவரீர், தங்களுக்கு சித்தமானால் என் மீது மனமிரங்கி குனிந்து என் உதடுகளை முத்தமிட்டு இரண்டே இரண்டு அலைகளை மட்டும் இனிப்புச் சுவையும் இன்ப போதையும் ததும்பும் திராட்சை ரசத்தால் நிரப்பும். கடவுளாகிய நீங்கள் இம்மண்ணுலகிற்கு வந்த வருகையின் பதிவாக இக்கிரியை நானுள்ள மட்டும் என் இதழ்களில் நிலைத்திருக்கட்டும்.''

''நான் தண்ணீரை ரசமாக்கியதாக உன்னிடம் யார் சொன்னது?''

''தண்ணீர் ரசமானால் முதலில் தெரிந்து கொள்வது தண்ணீராகத் தான் இருக்க முடியும் சுவாமி.''

''ஓகோ... அது குடிக்க உகந்த நல்ல நீர்.''

''உண்மைதான், நான் ஊத்தைதான், உவர்ப்புதான். சுவாமி! நீங்கள் மண்ணில் தோன்றியது, இழிந்தவற்றை ஏற்றப்படுத்தவும், பாவிகளை இரட்சிக்கவும்தான் என்பதை மறந்துவிடக்கூடாது'' என்றாள்.

தாடிக்காரனுக்கு தாங்கமுடியாத கோபமுண்டானது. கன்னிப்பெண் வடிவில் வந்து தன்னிடம் என்ன கேட்டுக்கொண்டிருக்கிறது இந்தக் கடல் என்று விசனப்பட்டான். ''எனக்கந்த அதிகாரம் வழங்கப்படவில்லை. என்னால் முடியாது. கலைந்து போ'' என்று கூவினான்.

கன்னி மனவருத்தடைந்தாள். புறக்கணிப்பின் கருக்கு அவள் தன்மானத்தை அறுத்தது. அவள் தன் வாலை லேசாக விசனத்துடன் அசைத்தாள். நீர் கொந்தளித்தது. இளம் புயலில் தோணி தள்ளாடியது. எல்லோரும் மரணச் சுழலின் விளிம்பில் இருந்தார்கள். தாடிக்காரன் முரட்டுத் தூக்கம் தூங்கிக்கொண்டிருந்தான். கூட்டாளிகள் அவனைத் தட்டி எழுப்பினார்கள். அலறினார்கள். தாடிக்காரன் கண் விழித்துப் பார்த்தான். பேய்க்காற்று இரைச்சலிட்டு வீசியது. குறுக்கும்மறுக்குமாக அலைகள் தலைக்கு மேல் பாய்ந்தன. கனவும் நிஜமும் ஒரே திசையில் எதிரும்புதிருமாக வந்துகொண்டிருந்தன. கடலும் கன்னியும் ஒரே உயிரில் இரண்டு உருவில் தெரிந்தனர். காப்பாற்றும்படி கூட்டாளிகள் விசுவாசக் கண்ணீர் விட்டுக் கெஞ்சினார்கள். அகமும் புறமும் நெருக்கடி களின் முற்றுகை வலுத்தது. தாடிக்காரன் தப்பிக்க வழியே இல்லை. அவன் தனது கூட்டாளிகளை கடுமையான வார்த்தைகளால் சாடினான். அற்ப விசுவாசிகளே... என்று தூஷித்தான். புயலைப் போலியாக அதட்டினான்.

உடல் நரம்புகள் முறுக காத்திருந்த கன்னியின் உதடுகளில் குனிந்து ரகஸியமாக முத்தமிட்டான்.

புயல் தணிந்து அமைதி ஏற்பட்டது. கடலின் அலைகள் கூச்சத்தில் நெளிந்தன. முதலும் கடைசியுமாக தாடிக்காரன் வெட்கப்பட்டு முகம் சிவந்தான். கூட்டாளிகள் அதைக் கோபத்தின் வெளிப்பாடாகப் பார்த்தார்கள். கடலின் இரண்டு அலைகள் திராட்சை ரசமாக மாறின.

தாடிக்காரன் தட்டுத்தடுமாறிக் கடவுளான தருணங்களில் மிக முக்கியமானது உப்புக்கடலை திராட்சை ரசமாக்கியது. அவனது பல அற்புதங்கள் புகழப்படுகின்றன. பேச்சிலும் பாட்டிலும் நூலிலும் உலகெங்கும் பிரஸ்தாபிக்கப்பட்டு வருகின்றன. பார்வை பெற்ற குருடன் இறந்தழிந்தான். எழுந்து நடந்த முடவன் மாண்டு போனான். கானாவூர் கல்யாணத்தில் கடைசிப் பந்தியில் சாப்பிட்ட எல்லோருமே காலி. புதைகுழியிலிருந்து உயிரோடு எழுந்தவன் மீண்டும் புதைகுழிக்கே போய்ச் சேர்ந்து விட்டான். ஆனால் இந்த அற்புதம் மட்டும் கடலின் புன்னகையில் மீண்டும் மீண்டும் கரையில் மலர்ந்துகொண்டிருக்கிறது. கடல்கன்னி மனம் கனிந்து புன்னகைக்கும்போது தித்திக்கும் அவள் ரச இதழ்கள் இக்கரைக்கு ஒன்றும் அக்கரைக்கு ஒன்றுமாக விரிந்து சென்று மீண்டும் கடலுக்குள் திரும்பி விடுகின்றன.

''என் நெடிய ஆயுள் காலத்தில் கடல் இன்னும் ஒருமுறைகூட புன்னகைக்கவில்லை. எந்நேரத்திலும் அது நிகழலாம். ரச அலையில் பாய்ந்து முத்தத்தின் தித்திப்பில் அந்த மகத்தான போதையைப் பருகிக் களிகூர்வதே என் வாழ்வின் கடைசி நாளாக இருக்கும்.''

விளைந்த கள்ளின் வெறி மயக்கம் பாண்டியைக் கிறங்க வைத்தது. அவன் தாடை நெஞ்சில் குத்திக்கொண்டிருக்க தலை துவண்டு தொங்கியது. ''ஒருவேளை அந்த அலைகள், இல்லையில்லை அந்த முத்தம் இரவில் கரைக்கு வந்தால் எப்படிக் கண்டுகொள்வது? எங்கும் இருளாக இருக்குமே!'' பாண்டி தலையை உயர்த்தாமலே கேட்டான்.

நடுங்கிய மலர்களாக இதழ்களை இதழ்களால் பற்றியபடி உடலையே மென்று தின்று விடத் துடித்த வெதுவெதுப்பான அதி நீளமான முத்தங்கள், மூளைக்குள் பொறியெழுப்பி பாண்டியின் உடலை உலுக்கியது. எலும்புச் சுள்ளிகள் நொறுங்க நெஞ்சுக் கூட்டிலிருந்து எம்பிய பறவை தின்று கிறங்கியது தாவித் தாவி.

'ரச அலை வரும்போது முழுக் கடலுமே கதி கலங்கிப் போகும். பல திசைகளிலிருந்தும் கோடானுகோடிப் பறவைகள் வந்து நீர் மேல் வட்டமிடும். வண்டுகளும் பூச்சிகளும் கூட்டம் கூட்டமாக வந்து குவிந்து விடும். தேன்கூடுகள் எல்லாம் வெறுமையில் நிலவைப்போல மினுமினுத்துக் கொண்டிருக்கும். கடல் தேனீக்களும் புறப்பட்டு கரைக்கு வந்துவிடும். ஒவ்வொன்றும் காட்டெருமையைவிட தோற்றத்தில் பெரியதாக இருக்கும். சிறகுகளின் புடைப்பில் மரங்கள் கலையும். நண்டுகள் நடுக்கத்தில் உயிர் விடும்.'

வெகுநேரத்திற்குப் பிறகு சற்றே ஓர்மை தெளிவுபட்டதும் பாண்டி தலையை உயர்த்தி கண்களைத் திறந்து பார்த்தான். குரல் மட்டும் பேசிக் கொண்டிருந்தது. கிழவனைக் காணவில்லை. குடிசையுமில்லை. குடுவையுமில்லை. மாற்கியுமில்லை. தேரிக்காட்டில் நின்றிருந்த பனை மரங்கள் ஒன்றையுமே காணவில்லை. பனங்கொட்டைகள் மரங்களை பூமிக்குள் இழுத்துக்கொண்டன போலும். பாலைவெளியாக எங்கும் வெறுமை விரிந்து கிடந்தது. இந்தப் பக்கம் கடலையும் காணவில்லை. கிழவன் கடலைத் திருடிக்கொண்டு எங்கோ மறைந்து விட்டான். கிழவனை சும்மா விடக்கூடாது. துரத்திப் பிடித்து கடலைப் பிடுங்க வேண்டும்.

★

பாண்டிக்கு மூத்திரம் பிரிந்தது. அது பற்றி அவனுக்கு பிரக்ஞையில்லை. மூட்டுக்கால் வரை சுற்றியிருந்த இடுப்புத் துணியை ஈரப் படுத்தியபடி தரையில் வழிந்தோடியது. அப்போது கண்களில் குறு குறுப்பு கூச்சத்தோடு தோன்றி மறைந்தது. பல்வேறு யோசனைகளில் இருந்த பாட்டி அங்கே நின்றிருப்பதையே மறந்து போயிருந்தாள்.

குஞ்சுக்கண்ணர் சைக்கிளை சப்தமில்லாமல் வீட்டுமுன் மழைநீர்த் தேங்கலை விட்டு ஒதுக்கி ஸ்டாண்ட் போட்டு நிறுத்திவிட்டு சரிந்து விழுந்து விடுவதற்கான அபாயங்களை இங்குமங்கும் சாய்த்து சரி பார்த்து பின் வேட்டியை அவிழ்த்து இறுக்கிக் கட்டிக்கொண்டு ஒண்ணு இரண்டு பத்து எண்ணாத குறையாக சில நொடிகள் அங்கேயே நின்றிருந்தார். பொடிச் சரளைக் கல் கொட்டி இறுக்கிய மண்சாலை மழைஈரம் மினுங்க செந்நிறத்தில் வெறுமையாய் நீண்டு கிடந்தது. அக்கம்பக்கத்து வீடுகளில் ஆள் நடமாட்டமில்லை. வெயில் உக்கிரமேறாமல் பணிந்து காய்ந்தது. குஞ்சுக்கண்ணர் அடித்தொண்டையை வலிந்து செருமியபடி நடந்தார். இடது பக்கம் வந்து வளவு வாசலைக் கடந்த பின் நடையில் வேகம் குறைந்தது. பாண்டியைப் பார்த்ததும் தீய ஒளிக்கற்றைகள் அவர் மார்பைப் பிளந்து முதுகைக் கீறிச் செல்வதுபோல் ஏற்பட்ட ஒரு நடுக் கத்தை அப்படியே சிரிப்பாக மாற்றினார். சிரிப்பை என்னவாக மாற்றுவது என்று தெரியாமல் தடுமாறினார். கால்கள் வீங்கித் தடித்துவிட்டதாக பிரமை ஏற்பட்டது. தீப்பற்ற வைத்துவிட்டு விலகியோடி வந்தபின் வெகு நேரமாய் வெடிக்காமல் மௌனம் சாதிக்கும் பட்டாசை மீண்டும் அணுகுவதுபோல் நெருங்கினார்.

''எத்தையோ... இப்போம் எப்பிடியிருக்கு, பரவாயில்லியா அப்பப்பவாவது ஓர்மை தட்டுதா'' பாட்டி முதுகுப்பக்கமாகத் திரும்பினாள். கனைப்பைக் கேட்டதுபோல் முகத்தை சலிப்பில் சுளித்தாள். குஞ்சுக்கண்ணர் உரத்த குரலில் கத்தினார். ''மருமகனுக்கு இப்போதாவலியானு கேட்டேன்.'' கைக்குழைவும் பாவனையுமாக பாட்டியின்

வயது மதிப்பைக் கூட்டினார். பாட்டி வெறுமனே ''ம்...'' என்று இழுத்து பெருமூச்சு விட்டாள்.

''காஞ்சனங் கட்டைக்கும் பூதகாழிக்கும் சொல்லியிருந்தேன். அதுக வரட்டும். வந்ததும் ஒரு கட்டையை மஞ்சத்துண்டு அளவு வீட்டுல கட்டித் தொங்க விட்டாலே போதும், மறு நிமிஷம் ஒரு சத்ராதி ஊருக்குள்ள நிக்காது. மலையிலதான் கெடைக்கும். வேணும்னு சொல்லி வச்சுருக் கேன். இன்னைக்கி நாளைக்கி வந்துரும். வந்த பிறகுதானே இருக்கு வேடிக்கை.'' கடைசி வார்த்தையை பாண்டியைப் பார்த்து மிரட்டுவது போல அழுத்தத்தோடு முடித்தார். நுனி நாக்கு பல்லிடுக்கில் கடிபட்டது.

அவர் பேச்சு பாட்டியிடம் எந்தவித மன எழுச்சியுமூட்டாதது அவருக்கு சிறு ஏமாற்றமளித்தது. சில உண்மைச் சம்பவங்களை உதாரண மாகச் சொல்ல வேண்டிய கட்டாயத்துக்கு ஆளானார். ''பூதகாழி மரத்தை சாமானியமா நெனைக்காத அத்தே. ஒரு குச்சு சீவி பல்லு குத்திக்கிட்டு நின்னா கொடையில வெள்ளைக்கோயில் சாமிக்கே ஆட்டம் வராது பாத்துக்க. அடைப்பான்குளத்துல ராத்திரி பீடி சுத்திக்கிட்டிருந்த பிள்ள ஒண்ணுக்கிருக்கப் போன இடத்துல பயந்துட்டு படுத்த படுக்கையா விழுந்துட்டு. என்ன கேடுகெட்ட கிழமயோ நேரமோ தெரியலை. ஏழெட்டு சத்ராதிக ஒரு உடம்புக்குள்ள புகுந்துட்டுவ. சமைஞ்சு குதுலு மாதிரி இருந்த பிள்ளைய உருக்கி நீக்குச்சியாக்கிப்புட்டு. கூட கொஞ்ச நாள் போயிருந்தா பிள்ளைய உசுரோட பாத்துருக்க முடியாது.''

குஞ்சுக்கண்ணர் பேசிக்கொண்டிருக்கும்போதே பாட்டி நடந்து பின் வாசல் வழியே வீட்டுக்குள் போய்விட்டாள்.

அடுத்த கணமே குஞ்சுக்கண்ணர் வெளிப்பக்கமாக வேகமாகச் சுற்றிவந்து வீட்டு முன்திண்ணையில் அமர்ந்தபடி வீட்டுக்குள் குரல் கொடுத்தார். ''எத்தையோ, குடிக்க கொஞ்சம் நல்லதண்ணி கொண்டா.''

பாட்டி சொம்பில் தண்ணீர் தந்துவிட்டு கேட்டாள் ''நீ இன்னைக்கி யாவாரத்துக்கு போவலியாக்கும்?''

செம்பைக் கையில் வாங்கிக் கொஞ்சம் நீரை முற்றத்தில் வடித்து விட்டு குடித்து முடித்தார். வாயைப் புறங்கையால் துடைத்தவாறே குஞ்சுக்கண்ணர் சொன்னார் ''இப்போ எந்த யாவாரம்தான் உருப்படியா நடக்குங்க? அலைச்சல்தான் மிச்சம். பத்து பைசா தேறமாட்டேங்குது. சந்தையெல்லாம் இன்னும் கொஞ்ச நாள்ல சத்திரமாகப் போவுது. மச்சான் எங்கே? அணக்கமில்ல...''

''ஏலான ஆசாரி செத்துப் போனாராம். உனக்குத் தெரியுமா?'' பாட்டியின் குரலில் குற்ற உணர்ச்சி அனுதாபத்தை விஞ்சியிருந்தது.

''அதான் ஊருக்கே தெரியுமேத்த! எனக்கு தெரியாமலா? அவரு விதி இப்படி முடியணும்னு எழுதி வச்சுருக்கு. நல்ல மனுஷன். நிமுரா மூணு பிள்ளைங்க நாலு பேரப் பிள்ளைங்க இருக்குதுவ. என்ன செய்றது! கணக்கு

தீரும்போது ஏதாவது ஒருவழியில போயித்தான் ஆவணும்.'' வைசூரித் தழும்புகள் அடர்ந்த முகத்தை ஒருமுறை கைகளால் அழுந்தத் துடைத்துக் கொண்டார். ''இன்னைக்கு இருக்கோம், நாளைக்கு இருப்போம்னு நிச்சயம் உண்டா? எல்லாம் நம்ம கையிலயா இருக்கு!'' மடிவேட்டியில் கட்டிவைத்திருப்பது பத்திரமாக இருக்கிறதா என்று அவர் கைகள் சரிபார்த்துக் கொண்டன.

''ஊருக்குள்ள என்ன பேசிக்கிடுதாவ?''

''ஊரு வாயில மண்ணள்ளிப் போடு. பொல்லாத ஊரு! ராத்திரி சாராயம் அடிச்சிட்டு ஓடையில விழுந்த மனுஷன் பின்ன விழிப்பைக் காணல. சாவு நல்ல சாவுதான். கழுத, வயசுதான் கொஞ்சம் சொற்பம்.''

''விலங்கு அடிச்சதுதான் குத்தம். பாண்டிய பிடிச்ச சத்ராதிதான் அவரை தூக்கத்துல அடிச்சுப்புட்டுனு எல்லாரும் பேசிக்கிடுதாவ லாமே?''

குஞ்சுக்கண்ணர் ஆவேசமடைந்து விட்டார். ''நீ கண்டியா, அதுதான் அடிச்சுதுனு. காணாமப் பேசப்படாது. வாய்க்கு வந்ததெல்லாம் பேச்சுனு பேசுறவியளுக்குச் சாணியக் கரைச்சுத்தான் ஊத்தணும். குருவி உக்காரவும் பனம்பழம் விழவும் சரியா இருந்துருக்கு, அவ்வளவுதான்.'' தேங்காப்பூ தோள்துண்டு விசிறியாகச் சுழன்றது, வியர்க்காமலே. பாட்டி அவர் பேச்சை ஆமோதிக்க ஆசைப்பட்டாள்.

''சரித்தே, நான் கிளம்புதேன். மச்சான் வந்தான்னா மைனர் வந்துட்டுப் போனேன்னு ஞாவகமாச் சொல்லு'' குஞ்சுக்கண்ணர் திண்ணையை விட்டு எழுந்தார்.

''அவன் ஆசாரி வீட்டு காரியத்துக்குத்தான் போயிருப்பான். வரட்டும் சொல்லுதேன்'' பாட்டி பொறுப்பாகப் பதில் சொல்லிவிட்டு உள்ளே போனாள்.

குஞ்சுக்கண்ணர் திண்ணையை விட்டு வெளியேறி பூனைபோல் நடந்து வளவுக்கு வந்தார். பாண்டி இப்போது கால்களை நீட்டி மரத்தில் முதுகு சாய்த்து கண் மூடி மோனத்தில் அமர்ந்திருந்தான். எங்கிருந்தோ வானொலியில் தெளிவில்லாமல் சினிமாப் பாடல் கசிந்தது. உட்புற மாய்த் தாழிட்ட நெடுங்கனவுக்குள் மூழ்கிக் களிப்பதுபோல் அவன் முகம் குழைந்து ஒருமித்திருந்தது.

கால் விலங்கிலிருந்து நீண்டு சென்று மரத்தில் கட்டப்பட்டிருக்கும் சங்கிலியை கண்களால் அளவெடுத்து பாதுகாப்பான இடைவெளி விட்டு நின்ற குஞ்சுக்கண்ணர் அவன் பெயர் சொல்லி விளித்து தாழ்ந்த குரலில் ஆரம்பித்தார். ''பாண்டி... லேய் மாப்புள... ஏ... பாண்டி... லேய் மக்கா... ஏ கிறுக்குத் தாயோளி...''

பாண்டியின் கண்கள் பொம்மைத்தன்மையுடன் திறந்து அவரைப் பார்த்தன. அடிவயிற்றில் பலமாகத் தாக்கியதுபோல் நிலைகுலைந்தார்.

பின் சுதாரித்து முகமெல்லாம் பல்லாகக் கேட்டார், ''லேய் மாப்பிள, என்னத் தெரியுதா, நல்லா பாரு...''அவன் கண்கள் இமைக்கவில்லை.

''நான்தான்டே மைனர் மாமா. ஞாபவம் வருதா?''

ஒட்டியிருந்த உதடுகள் பிரிந்த இடைவெளியில் பாண்டியின் பல் வரிசை வெள்ளையாகத் தெரிந்தது.

''சிரிப்பாணி வருதோ... வரட்டும் வரட்டும்! பூதகாழிக்கும் காஞ்சனத்துக்கும் சொல்லியிருக்கேன். அது வரட்டும். சிரிப்பாணி இன்னும் எடுப்பா வரும்'' தனக்குத்தானே சொல்லிக்கொண்டு மடியை அவிழ்த்து இரண்டு காகிதச் சுருள்களைக் கையில் எடுத்தார். ஓரடி முன் னகர்ந்து அவன் முன் அவற்றை நிலத்தில் போட்டார். மழை ஈரத்தையும் மீறி மூத்திரம் தரையை நனைத்திருந்த வட்டத்தருகே இரண்டும் விழுந்தன.

''ரெண்டு சீட்டுலேயும் ரெண்டு பேரு எழுதியிருக்கேன். எந்த வியாபாரம் நல்லாயிருக்குமோ அந்தப் பேரை எடுத்துக் கொடு.'' குதிகாலில் அமர்ந்தார். காகிதச் சுருள்களையும் குஞ்சுக்கண்ணரையும் மாறி மாறிப் பார்த்தான் பாண்டி. தனக்கும் அதற்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது என்பதுபோல் சும்மா இருந்தான்.

''ஏய் மாப்பிள, உன்னத்தான! ரெண்டுல ஒரு சீட்ட எடுத்து தாப்போ.'' திரும்பத் திரும்ப அதையே சொல்லிக்கொண்டிருந்தார். செய் முறையையும் செய்து காட்டினார். யாரும் பார்த்துவிடக்கூடாது என்றும் நினைத்தார்.

குஞ்சுக்கண்ணரின் அம்மா குணசீலி ஒருமுறை மிக்கேல் தேவ தூதரின் சொரூபத்தைத் தொட்டு வணங்கியதைப் பார்த்து ஊர் சிரித்து விட்டது. மிக்கேலின் பாதங்களைத் தொட்டு முத்தம் செய்துகொள்பவள், அவர் காலடியில் கருப்பு நிறத்தில் முட்சிறகு விரித்துக் கிடந்த சாத்தானின் பாதத்தையும் தொட்டு வணங்கிக் கொள்வாளாம். காரணம் கேட்டால், 'மோட்சத்துக்கு போனால் மேல இருக்குறவரு பாத்துக்குவாரு. நரகத் துக்கு போனா கீழ கிடக்குறவரு பாத்துக்குவாரு. யாரு எங்கே போவோம்னு என்ன நிச்சயமிருக்கு' என்று விளக்கமளிப்பாளாம். குஞ்சுக்கண்ணருக்கும் அதே ரத்தம்! சர்வவல்லமையில் சத்ராதிகளுக்கும் சமபங்கு உண்டு என்ற நம்பிக்கையில்தான் சீட்டுகள் எழுதி எடுத்து வந்தார். பாண்டி அவர் பொறுமையை வெகுநேரம் சோதித்தபின் இரண்டு சீட்டுகளில் ஒன்றை எடுத்தான். ''கொடு கொடு'' என்று குஞ்சுக் கண்ணர் ஆர்வமாக கையை நீட்டினார். ஏமாற்றம். இன்னொன்றையும் எடுத்து நிதானமாக இரண்டையும் பிரித்துப் படிக்க ஆரம்பித்தான். அங்குமிங்கும் திருப்பி புரட்டி உன்னிப்பாக வாசித்துக்கொண்டிருந்தான்.

எதிர்காலமே கேள்விக்குறியாகிவிட்ட ஆத்திரத்தில் குஞ்சுக்கண்ணர் பற்களைக் கடித்து அரற்றினார். ''ஏ கிறுக்குப் பயலே, கிறுக்குப் பயலே...

சுத்த கூறு கெட்ட சாம்பிராணி... உங்கிட்ட தந்தேம் பாரு, நான் ஒரு கொச முட்டி. உனக்கு இந்த சென்மத்துல தெளியாது. உங் கதை அவ்வளவுதான். விலங்கடிச்ச அப்புராணி ஆசாரிய விழுங்கிப்புட்ட. இனி ஒன்ன குழிக் குள்ள வைக்கிற அன்னைக்கித்தான் விலங்கவுப்பு, ஞாபவம் வச்சுக்க.'' வசவுகள் ஒன்றையும் பொருட்படுத்தும் நிலையில் இல்லாத பாண்டி ஒரு துண்டு சீட்டை சப்தமாக வாசித்தான். ''கோ...ழி...''

''உங்கம்ம தாலி'' குஞ்சுக்கண்ணர் கூறிவிட்டு கோபமாக எழுந்து போனார்.

★

அத்தையின் வீடு இருந்த வீதி ஒரு ஓடை விரிந்தோடப் போதுமான விசாலத்துடன் அமைந்திருந்தது. இருமருங்கிலும் வரிசையாக அமைந் திருந்த மற்ற வீடுகளும் அத்தையின் வீடு போலவே வடிவம் கொண்டிருந் தன. ஐயப்பசாமி கோவிலை அடுத்தடுத்துக் கட்டி வரிசைப்படுத்தியது மாதிரி. வெளிச்சமும் நிழலும் அங்கே மிகப் பாங்கோடு நடந்து கொண் டன. காற்றோ பொறுப்புள்ள காவல்காரன் போல அங்குமிங்கும் அலைந்து பவ்வியமாகப் பணியாற்றிக் கொண்டிருந்தது. காற்றுக்கு நிறமும் உருவமும் உண்டானது போன்ற சுக பிரமை ஏற்பட்டது. வீட்டின் கூரைஓடுகள் கண்களை விரியச் செய்தன. அகலக் கிண்ணங்களை நேர் பாதியாக அறுத்து ஒன்றின் மேல் ஒன்றாக அடுக்கியதுபோல நெறுநெறு வென்றிருந்தன. பனி மழை வெயில் பருவங்கள் ருசித்து சற்றே கருத்துப் போயிருந்தன, சிலேப்பி மீனின் செதில்கள் இருக்குமே அப்படி.

வீட்டு வாசல் ஓரத்தில் குத்துவிளக்கு ஏற்றி வைத்ததுபோல அத்தை நின்றுகொண்டிருந்தாள். 'வாடா' என்று வரவேற்று செல்லமாகச் சிரித்தாள். அவனுக்கு நடக்கக் கால் விளங்கவில்லை. அத்தையையும் வீட்டு முகப்பில் விரிந்து கிடந்த திண்ணைகளையும் திண்ணையில் வரையப்பட்ட ரெட்டைப் பூக்கோலங்களையும் வீட்டுக்கு உள்ளே நட்டு வைத்ததுபோல நின்றிருந்த வெயில் வெளிச்சத்தையும் அவன் இன்னும் பார்த்து முடிக்கவில்லை. 'அத்தை எப்படி அப்படியே இருக்கிறாள்!' அவனையே அவன் அர்த்தமில்லாமல் கேட்டுக்கொண்டான். அவன் ஓவியனாக இருந்திருந்தால் அத்தையை அங்கேயே மண்டியிட்டு மணலில் வரைந்து போட்டிருப்பான். ''உள்ள வாடா தம்பி, தெசை தெரியாதவன் மாதிரி தெருவுல நின்னுக்கிட்டிருக்கே'' அத்தைக்கும் அவனுக்கும் இடையிலிருந்த வெளியை அந்த இதமான குரல் குறைத்தது. அதற்கு முன் அவன் கண்களைத் தாழ்த்தி அத்தையின் பாதங்களை சீலைமுடிவில் பார்த்தான். விரல்களெல்லாம் உறங்கிக்கொண்டிருந்தன. அவற்றின் கனவுகள் கலைந்து விடக்கூடாத கவனத்துடன் எச்சரிக்கையாக நடந்து வீட்டுக்குள் சென்றான். கசங்கிய துளசி இலை வாசம் கமழ்ந்தது.

அது எங்கிருந்து வருகிறது என்று ஆராய முற்பட்டான். திரும்பிப் பார்த்த அத்தை ''வா வா'' என்றாள். அப்போது யாவும் புரிந்த ஒரு புன்னகை அவனைத் ததும்பவிட்டது. நாலு கட்டு வீடு. சுற்றிலும் அறைகள். நடுவிலே சதுரமான முற்றம். முற்றத்தின் மேலே வானை நோக்கித் திறந்திருக்கும் ஜன்னலாக பசும்கொடிகள் படர்ந்த மூங்கில் பந்தல். வீடு நிறைய வெயிலின் ரகசிய வெளிச்சம்.

அத்தையின் வீடு இருப்பதுபோலும், அவ்வப்போது இல்லாதது போலும் தோன்றியது. உறுதியாக அது இருந்தது. களைப்பும் சோர்வும் தன்னை இப்படி மயக்குகிறது என எண்ணிக்கொண்டான்.

''குளிச்சிரு பாண்டி'' வேண்டிக்கொண்டாள். அக்கணமே அவன் குளித்துவிட்டான். ''துணி மாத்திக்க.'' அக்கணமே அவன் துணி மாறி விட்டது. அத்தையின் எல்லாச் சொற்களுக்கும் அத்தனை வல்லமை யிருந்தது. அவள் பேசும்போது அவள் உதடுகளையே அவன் பார்த்து நின்றான். அதன் அசைவுகளில் நெளிந்தது அழகு! மேலுதட்டை விட கீழுதடுதான் அவனை மிகவும் கவர்ந்தது. மேலுதட்டில் லேசான அதிகாரமும் சற்றே அந்நியமும் கலந்திருந்தது. கீழுதடு அப்படியில்லை. கருணை கனிந்த ஒரு தனி மலரைப் போலிருந்தது. கண்களால் அவன் அதை இரண்டு மூன்று முறை கவ்விக் கடித்தும் விட்டான். இது ஒரு கள்ளக் கணக்குத்தான். ஆனாலும் அது அவளுக்கு வலியை உண்டாக் குமோ என்றெண்ணி அச்செயலைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்து விட்டான். சந்தன நிறத்தில் சேலை கட்டியிருந்தாள். ஓரத்தில் தங்க நிறத்தில் அடர்த்தியான பட்டை. ஜாக்கெட்டும் ஏறக்குறைய அதே நிறம்தான். அதற்கும் முழங்கை பக்கத்தில் தங்கப்பட்டையிருந்தது. அத்தை மாராப்பை சீர் செய்துகொண்டாள். அது அவனுக்கு அவள் செய்யும் பெரிய மரியாதையாகப் பட்டது. அவளது இடது முலை இதயத் துடிப்பின் மெல்லிய அதிர்வில் மிக லேசாக விம்முவதை கவனித்தான். குழைந்து கனிந்த முலைகள் என்று அவனால் நினைக்க முடியவில்லை. கேசம் சுருள்சுருளாக கரிய நிறத்தில் தொட்டுப் பார்க்கத் தூண்டும் விதத்தில் அவள் முதுகுக்குப் பின்னே ஒளிந்திருந்தது. ஆனாலும் அதற்கு அவ்வளவு சாமர்த்தியமாக ஒளியத் தெரியவில்லை. அவள் உடல் அசையும்போது பின்னாத கூந்தல் கற்றை இந்தப்பக்கம் அந்தப்பக்க மென்று தோளுக்குப் பின்னாலிருந்து எட்டி எட்டிப் பார்த்தது. புருவங்கள் ரோமக்கதிர்களாக அடர்ந்திருந்தன. நீரில் முங்கிக் குளிக்கும்போது அவை மீன்களாக மாறி நீந்தி மறைந்து விடுமோ என்று அவன் அச்சப் பட்டான். அது எப்படிப் போகும், இவ்வளவு அழகான அரசியை விட்டு விட்டுப் போக எப்படி அந்த மீன்களுக்கு மனசு வரும்?

அவனுக்கே அவனை அப்போது மிகவும் பிடித்துப் போனது. அவனுடைய எண்ணங்கள் செயல்கள் சின்னச் சின்ன அசைவுகள் எல்லாமுமே திருப்தியளிப்பதாக அமைந்தது. அத்தையின் அன்புக்கும்

பிரியத்துக்கும் தான் பாத்திரமாகியிருப்பதில் அவனுக்கு மிகுந்த மகிழ்ச்சியும் பெருமிதமும் உண்டானது. தன்னை உருவகித்துக் கொள்ள அச்சமயம் அவன் முன்னே பல வழிகளிருந்தன. இளவரசர்கள் இப்படித் தானிருப்பார்கள் என்று அவன் தன்னைப்பற்றி விரிந்த தோள்களுடன் எண்ணிக்கொண்டான்.

நடு முற்றத்து மூங்கில் பந்தலில், நிறைய குருவி வகைப் பறவைகள் அமர்ந்து சிலம்பின. குருவிகளின் பள்ளிக்கூடம்போல மூங்கில் பந்தல் காட்சியளித்தது. வெள்ளைச் சிறகுகளில் நீல மசியை உதறித் தெளித்தது மாதிரி பொட்டுப் பொட்டாகப் புள்ளிகளுடன் சிறிய அலகுடைய ஒரு குருவி அவனை மிகவும் கவர்ந்தது. அது அளவில் மிகச் சிறியதுதான். குழந்தைகளுக்கு மருந்தூட்டும் சங்கு மாதிரி. ஆனால் முழுமையானது. அந்தக் குருவி மெல்லிய விழுதைத் தன் கால்களால் பற்றிக்கொண்டு கீழே விழப்போவதுபோல தலைகீழாகத் தொங்கியது. பின்பு தன்னை ஒரு தொட்டில்போல பாவித்து ஆடத் தொடங்கியது. அப்போது அதன் கண்களில் மெல்ல மெல்ல வெண்திரை இறங்கியது. ஆட்டம் ஓய்ந்து உறக்கத்தில் ஆழ்ந்த நேரத்தில் அதன் கால்களின் பிடிப்புத் தளர்ந்து தரையில் விழப்பார்த்து வழியிலேயே மீண்டும் பறந்தெழுந்து அதே விழுதையே பற்றிக்கொண்டு பழையபடியே தன்னைத் தொட்டிலாக்கித் தானே படுத்து தானே ஆடி தானே உறங்கி தானே விழுந்து தானே பறந்தெழுந்து... அவன் கவனத்தை கவர்ந்துக் கொண்டேயிருந்தது. அதன் தொட்டிலாட்டம் சலிப்பை ஏற்படுத்துமோ என்ற எண்ணம் ஏற்பட்ட கணத்தில் இனிமையான குரல் பாடலில் நெளிந்து காற்றில் கிளர்ந்தது. அவன் கவனமும் மனமும் பாடலின் திசையில் சட்டென்று திரும்பியது. எங்கிருந்து அது மிதந்து வருகிறது என்று ஊகிக்க நேரம் பிடித்தது. அத்தை சமையலறைக்குள் போயிருந்தாள். அங்கிருந்து இல்லை. புறவாசல் திறந்திருந்தது. கட்டிலில் அமர்ந்திருந்த அவனை அது மிக நுணுக்கமாக வெறித்துக்கொண்டிருந்தது. அதற்கு வெளியே ஒரு குட்டித் தோட்டம் இருக்கலாம் என்று தோன்றியது. பாடலை மிதக்கவிட்ட குரல் உயிரின் அடிக்கணுவிலிருந்து உருகிக் கசிந்தது. நிஜத்தில் அவ்வளவு மென்மையாக சொற்களை நீர்க்குமிழிகளாக்கிப் பாட முடியுமா என்று தெரியவில்லை. கனவிலிருந்துதான் யாரோ நிகழ்த்துகிறார்கள் இந்த சாதனையை.

பாடல் அவனுக்குள் ஏதோ மயக்கத்தை ஊட்டியது. மிதப்பு மேலிட்டது. செவியோரத்து பிடரி நரம்புகளில் திரவம் பரவும் உணர்வு.

தலையைத் திருப்பி முற்றத்து மூங்கில் பந்தலைப் பார்த்தான். பறவைகள் மொத்தமாகக் காணாமல் போயிருந்தன. குருவியும் தொட்டிலை அவிழ்த்துக்கொண்டு போய்விட்டது.

சமையலறையிலிருந்து அம்மி தட்டும் சத்தம் தாளமாக ஒலித்தது. குழவி இழுபடும் ஓசை கல் வாத்தியத்திலிருந்து புறப்படும் புது

இசையாக மாறியிருந்தது.

பின்வாசலில் முன்னைவிட வசீகரம் அதிகமாகி நிழலிட்டது. அவன் எழுந்து அதை நோக்கி நடந்தான். படுக்கையறையைக் கடந்தபோது அதன் வாசலில் தோரணமாகக் கட்டப்பட்டிருந்த சின்னச் சின்ன மணிகளின் நாவுகள் காற்றில் குமுறின. வாசலை அடைந்ததும் கண்ட காட்சி ஒரே பார்வையில் அவனைத் திகைக்கவும் நெகிழவும் வைத்தது. ஊகித்திருந்தபடியே பச்சைப்பசேலென்று அங்கே தோட்டமிருந்தது. ஆனால் செடிகொடிகள் மட்டுமல்ல, மரங்களும் நின்றன. வயதான மரங்களும் கூட. அது... தோட்டமா! இல்லை. வீட்டின் புறவாசல் ஒரு வனத்தின் தலைவாசல்.

பாடல் ஓய்ந்துவிட்டது. பரவசமோ இன்னும் அலைகளாகக் காற்றில் சுருள் சுருளாக மிதந்து திரும்பிக்கொண்டிருந்தது. படிக்கட்டுகளில் இறங்கினான். உள்ளங்காலில் கற்படிகள் குளிர்ந்தன. நெடிபோலொரு மணம் அங்கே நிரம்பியிருந்தது. பழக்கமற்ற ஏதோ புதிய ஆவல் அவனுக்குள் ஏற்பட்டுவிட்டதை உணர்ந்தான். மயக்கத்திலிருந்து மீண்டுகொண்டிருந்த அவன் விழிகள் ஆர்வத்தில் சுழன்றன. மலைப் பாம்பைக் கண்டிருந்தால்கூட அவ்வளவு மலைப்பு ஏற்பட்டிருக்காது; இருபது முப்பதடி தொலைவில் ஒரு ஊஞ்சலையும் அதில் தலை கவிழ்ந்து அமர்ந்திருந்த இளம்பெண்ணையும் கண்டபோது அவன் உடலில் இதுவரையில் திரளாத நரம்புகளில் எல்லாம் ரத்தம் புகுந்தது. தன்னால் எவ்வளவு வேகமாகத் துடிக்க முடியும் என்பதை இதயம் நிரூபித்தது.

ஊஞ்சலை, படுத்து உறங்கக்கூட போதுமான அதன் விசாலமான பலகையை, விழுதாகத் தாங்கிக்கொண்டிருந்த சங்கிலிகளை, அவற்றில் படர்ந்து சுற்றியிருந்த சின்னஞ்சிறு இலைக் கொடிகளை, அதில் மின்மினிப் பூச்சிகள்போலப் பூத்திருந்த மலர்களை அவன் கவனிக்கவே இல்லை.

அவன் பார்வையெல்லாம் ஊஞ்சல் பலகையில் முட்டுக் குவித்து அமர்ந்து தலை கவிழ்ந்திருந்த இளநங்கை மீதே நிலைத்து நின்றது. புதிய பாடல் நூற்பதுக்கான மோனமோ? பாடிய பாடலில் அதிர்ந்து பரவிய மனத்தைத் தேடி குவிக்கும் முனைப்போ? கூந்தல் பின்னப்படவில்லை. பிடரிக்கடியில் கேசத்தை ஒன்றாகப் பிடித்து பச்சைக்கொடியால் முடிச்சிட்டிருந்தாள். அதில் ஒரு தளிர் இலை தனித்திருந்தது. கன்னம்வரை முகம் முழங்கால்களில் புதைந்திருந்தது. கால்களை கைகள் அணைத்துப் பிடித்திருந்தன. முதுகின் மேற்பகுதி கொஞ்சமாகப் பளிச்சிட்டது. பாவாடைக்கு வெளியே பாதங்கள் முயங்கியிருந்தன.

மெல்லிய கைவிரல்கள் மிருதுவாகக் கூடியிருந்தன. அந்த விரல்களால் பூப்பறித்தால் செடிகளுக்கு வலிக்கவே வலிக்காது என்று நினைத்தான். எளிமையாக உடுத்தியிருந்தாள். பாவாடை, தாவணி,

ரவிக்கை எல்லாமே சற்றுப் பழையவை போலிருந்தன. தோளுக்கடியில் ஸ்தன எழுச்சி அழகை ஆரம்பித்து வைத்தது. ஊஞ்சலுக்கு சற்று தள்ளி சுட்ட மண்பானை ஒன்றிருந்தது. அதன் மூடியும் மண்ணாலானதுதான். அதற்குள் என்ன இருக்கும்? நச்சுப் பாம்பை பிடித்து உள்ளே போட்டு மூடி வைத்திருப்பாளோ, அந்த பாம்பு கோழிக் குஞ்சுபோல உள்ளிருந்து பானையைக் கொத்தி உடைத்து துளை போட்டுக்கொண்டு வெளியே வந்து அவன் மீது சீறிப் பாய்ந்துவிடுமோ என்று அஞ்சினான். உண்மை யில் அவள் அமர்ந்திருந்தது இறுக்கமான நிலை. அவள் இளமையையும் வென்று வியாபித்திருந்த, விளக்க முடியாத ஏதோ சோகம் அவனை அவ்வாறு நினைக்க வைத்தது.

அவள் அத்தை மகள்தான் என்பதை ரொம்ப நேரத்துக்கு முன்பே தன்னையுமறியாமல் ஊகித்து விட்டிருந்தான். அவளுடைய பிரச்சனை யும் புரிந்து கொள்ளக்கூடியதாகவே இருந்தது. அந்த மூன்று நாட்களைப் பற்றி ஏற்கனவே கேள்விப்பட்டிருக்கிறான். 'கடவுளே! இது மூன்றாவது நாளாக இருக்கட்டும்' என்று எண்ணியவன் அங்கிருந்து வீட்டுக்குள் திரும்ப முடிவெடுத்த கணத்தில் வந்தது அந்த வண்ணத்துப்பூச்சி. வலியது. அகன்ற சிறகுகள். உலகில் உள்ள அத்தனை வண்ணங்களையும் அது தன் சிறகுகளில் வைத்திருந்தது. வண்ணங்களில் பற்றாக்குறையால் வெற்றிடமுமிருந்தது. அவன் ஆவல் தானாக அதன் மீது தாவியது. அது மந்தமாகப் பறந்தபடி ஊஞ்சலை வட்டமடித்தது. சில வட்டங்களுக்குப் பிறகு அது அவளை நெருங்கியது. நின்று நிதானித்து, யோசனை முடிந்ததும் அவள் கழுத்தையொட்டி தோளில் அமர்ந்தது. சிறகுகளால் மெதுவாக சாமரம் வீசத் தொடங்கியது. அந்தக் காட்சி அவனை என்னவோ செய்தது. அந்தச் செயல் அவனுக்கு சுத்தமாகப் பிடிக்க வில்லை. எரிச்சலூட்டியது. கோபமூட்டியது. அவளிடம் அது குறித்து எந்த சலனமுமில்லை. அவனுக்கு கை பரபரத்தது. அதை விரட்டித் துரத்தியடிக்க வேண்டும் என்ற துறுதுறுப்பு ஏற்பட்டது. மண்பானை நச்சுப் பாம்பு எல்லாம் கவனத்திலிருந்து உடைந்தோடிப் போயிற்று. அவன் சாடி நடந்து அவள் அருகே வந்து வலது கையை நீட்டி பூச்சியை விரட்டினான். அது பறந்தெழுந்து பதறியோடித் தப்பித்தது. அவள் திடுக்கிட்டு முகத்தை உயர்த்தி அவனைப் பார்த்தாள். அவன் ஆவியாகத் தொடங்கினான். உடல் முற்றிலும் எடையிழந்து பஞ்சாக பலமற்று நிலம் விட்டு எழுந்தது.

தென்னம்பாளைக் குருத்துப்போலத் தெளிவான முகம். உயிர் கொதிக்கும் கண்கள். சின்னச் சின்னக் கருமணிகள். பறக்கும் புருவங்கள். பவுனில் பண்ணிய நாசி. பாடிய சுவடே இல்லாத பழம் போன்ற தூய உதடுகள். ஒளி சறுக்கும் கன்னங்கள். நெற்றிப் பொட்டில் முழுமையான ஒரு நீர்த்துளி.

அவள் அவனை அதிர்ச்சியோடு பார்த்துக்கொண்டிருந்தாள்.

பேசவில்லை. வேறு அசைவுகளும் காட்டவில்லை. பார்த்தவிழி பார்த்த படியிருந்தாள். ஓர் ஆகமச் சிற்பியின் அதிஉன்னதக் கனவு எப்படி யிருக்குமோ அப்படியொரு முகம். தனிமையும் அழுகையும் ஏறிய சோர்வுப்படலம். இருப்பதிலேயே மிகச்சிறிய சோகமொன்றும் கண் களில் மெல்லிய திரையிட்டிருந்தது.

அந்த நீர்த்துளி பொட்டு வைத்த மாதிரி அவள் நெற்றியில் நின்று கொண்டிருப்பது வியப்பளித்தது. எப்படித் தெறித்திருக்கும்? தெறித் தாலும் வழிந்து ஓடாமல் ஏன் அங்கேயே நிற்கிறது? இந்த நீர்த்துளி இறந்துவிட்டதா? இல்லையே, உயிர்ப்புடன் ஒளிர்கிறதே! அது பற்றி அவளுக்கொன்றும் தெரியாதா? அவன் பார்வையை விலக்கிக் கொண்டான். பக்கத்தில் உயரம் குறைந்த செடியில் வண்ணத்துப்பூச்சி அமர்ந்திருந்தது.

'மழை வந்திருக்குமோ, மழை வருகிறதே என்று அவள் வானத்தை முகம் நிமிர்த்தி பார்த்திருப்பாளோ, அப்போது மழையின் முதற் துளி நெற்றிப் பொட்டில் விழுந்திருக்குமோ, 'ஐயோ இவள் நனைந்து போவாளே, துளிகளின் தொடர் தெறிப்பில் உடல் கன்றிப் போவாளே' என்று இந்த முதற் துளி அலறிக் குரல் கொடுத்திருக்குமோ, அதைக் கேட்டு வானம் இரக்கப்பட்டு ஒரு துளியோடு மழை பொழிவதை நிறுத்தியிருக்குமோ, ஒரு முழு மழையின் ஏக்கத்தை இந்தத் தனித்துளி தாங்கி நிற்கிறதா...'

சற்றுத் தள்ளி அமர்ந்திருந்த வண்ணத்துப்பூச்சியின் செயல்தான் மீண்டும் கோபமூட்டியது. அது தன் வண்ணச் சிறகுகளைக் குவித்து வானத்தைப் பார்த்து கடவுளை நோக்கி கள்ளத்தனமாக பிராத்தனையில் ஈடுபட்டது, 'என் தேவனே, சர்வ வல்லமை படைத்தவரே! எந்த மனிதன் என்னை எங்கிருந்து துரத்தியடித்தானோ, அவனை நீர் அங்கிருந்து துரத்தி யடிக்க வேண்டுகிறேன். அந்த வலிய மிருகத்திடமிருந்து இந்த எளிய ஜீவனை காப்பீராக' என்று அது மனசுக்குள் ரகசியமாக மீண்டும் மீண்டும் ஜெபித்துக்கொண்டிருந்தது. அதன் சிறகுகள் பயபக்தியோடு குவிவது வெளிப்படையாகத் தெரிந்து, அவனுக்குள் வெறி பற்றிக்கொண்டது. கோபத்தில் எரித்துவிடுவதுபோல பூச்சியை உக்கிரமாகப் பார்த்தான். அது பிராத்தனையை நிறுத்தவே இல்லை. கடைசியில் அவன் கொலை வெறியோடு பூச்சியை நோக்கிப் பாய்ந்தான். அது தப்பித்தெழுந்து அங்குமிங்கும் பறந்தது. விடுவதாக இல்லை அவன். பூச்சியைத் துரத்திக்கொண்டு ஓடினான்.

★

''தூங்குறான் போலிருக்கு'' வைத்தியர் தணிவான குரலில் நிதானமாகப் பேசினார். ஆறடி உயரம், கருங்கல்லில் செய்தது போன்ற

திடகாத்திரமான சரீரம். சராசரிக்கும் சற்று மிகையாக வளர்ந்து உச்சி கிறாமல் படியச் சீவிய தலைமுடி. புடைத்த முகம். நெற்றியில் திலகம். செவ்வரிகளோடும் கண்கள். வெளுத்த வேட்டியும் சட்டையும் அணிந்திருந்தவர் புறங்கை கட்டிக்கொண்டார். வலது கைச் சுட்டு விரலும் கட்டைவிரலும் ஓய்வின்றி வட்டமடித்து உராய்ந்து கொண்டிருந்தன.

பாண்டி குளிருக்கு ஒடுங்குவதுபோல் உடலைக் குறுக்கி வெயிலில் படுத்திருந்தான். விலாவுக்கடியில் வயிறு சீராக ஏறி இறங்கிக் கொண்டிருந்தது. உடைமரத்தின் நிழல் கரிய தழும்புகளாக அவன் மேல் படிந்து கிடந்தது. அவனைச் சுற்றிலும் சண்டும் சருகும் கிழிந்த செய்தித்தாள்களும் காற்றில் பறந்து வந்த பாலித்தீன் அழுக்குப் பைகளும் பழுத்து உதிர்ந்த உடங்காய் நெற்றுகளுமாக குப்பை மலிந்து கிடந்தது. வைத்தியரின் கண்குறிப்பைப் புரிந்துகொண்டு அவருடன் வந்திருந்த உதவியாளர்கள், பெருக்குமாறுகள் கேட்டு வாங்கி அவ்விடத்தைச் சுத்தம் செய்ய ஆரம்பித்தார்கள். புழுதியெழுந்தது. சுற்றி நின்று வேடிக்கை பார்த்தவர்களில் ஒருவர் தூசி தாளாது தும்மினார்.

வளைக்குள் எலியிருப்பதை முகர்ந்து உறுதி செய்த வேட்டை நாய் வளை முகப்பு மண்குவியலைக் கால்நகங்களால் பிராய்ந்து பறித்து பின்னுக்கு வேகமாகத் தள்ளியபோது பாண்டி கண்களைத் திறந்தான். நாய் வளை எலி எல்லாம் மறைந்து போய், ஈக்கு பெருக்குமாறுடன் அந்நியன் ஒருவன் அவனைப் பார்த்து அன்னியோன்மாய் புன்னகைத்தான். வெளிச்சம் கண்களைக் கூசச் செய்தது. புழுதிப் புகையில் தொண்டை கமறியது. கையைத் தரையிலூன்றி எழுந்து அமர்ந்தான்.

வளவின் குறுகிய வாசலில் கொத்தாகக் கொஞ்சம் மனிதர்கள் நின்றிருந்தார்கள். கானலில் நெளிந்துகொண்டிருந்தவர்களில் யாரையும் முகப் பரிச்சயம் கொள்ள முடியவில்லை. அவர்களுக்குப் பின்னே சற்று தூரத்தில் வெள்ளை யானைக்குட்டியொன்று படுத்திருந்தது. மீன் வலையில் சிக்கி கரையொதுங்கிய கடல் மனிதன்போல வேதனையோடு முகத்தைத் தாழ்த்தி வைத்துக்கொண்டான். இன்னும் மோசமான நிலையில் தள்ள, வேறொரு இடத்துக்கு பலவந்தமாக தூக்கிச் செல்ல சதி நடக்கிறது எனத் தோன்றியது. விலங்கிட்டிருந்த கைகளையும் கால்களையும் வெறுமனே பார்த்தான். நிமிர விடாது தலையில் கனமேறி அழுத்தியது. மன்னிப்பற்ற குற்றங்கள் புரிந்தவனைப்போல் தலை கவிழ்ந்திருந்தான்.

கண்களை எவ்வளவு அகலமாகத் திறக்க சாத்தியமோ அவ்வளவு விரித்து வாழையடி வாழையாய் பட்டை தீட்டி வைத்திருக்கும் தீட்சண்யத்தோடு நரை ஊடாடிப் பளபளக்கும் தாடியை வழித்து வருடியபடி வைத்தியர் வெகுநேரம் பாண்டியை வசியம் செய்வதுபோல் பார்த்து விட்டு, வளவின் நாலு மூலைகளுக்கும் நடக்கலானார். ஒவ்வொரு மூலையிலும் சில விநாடிகள் நின்று ஆழ மூச்சிழுத்து அடிமனத்தில்

கணக்கு எழுதிக் கூட்டிக் கழித்து, தொண்டையைச் செருமி அதட்டிக் கொண்டு அடுத்த மூலைக்கு நகர்ந்தார். வைத்தியரின் மந்திரப் போரைக் காண எத்தனை கண்கள் வேண்டும்; கண்களுக்கு எப்படிப்பட்ட பாவனை வேண்டும் என்பதை குருபக்தியுடன் நின்ற உதவியாளர்கள் மற்றவர் களுக்குக் காட்டும் முன்னுதாரணமானார்கள். அப்படியே மற்றவர்களும் உணர்ச்சிகரமான ஊமைப்படத்தின் பாத்திரங்களாக மாறிவிட்டனர்.

தென்மேற்கு மூலை வைத்தியரை ஈர்த்து ரகசியத்தின் முத்திரையை திறந்தது. உன்னிப்பாகக் கவனித்தபோது உதடுகள் அசைவதை புஜத்துக்கு மேல் பாயும் கழுத்து நரம்புகளில் காண முடிந்தது. பச்சிலை கசக்கிச் சாறு பிழிவதுபோல உள்ளங்கைகள் ஒன்றோடு ஒன்று அழுத்தமாக உராய்ந்தன. சில நிமிடங்கள் கடந்தபின் மூச்சை இழுத்து வாயில் குவித்து காற்றில் ஊதி 'ஹோ' என்று ஒலியெழுப்பிவிட்டுத் திரும்பினார். வெற்றிலைமீது சுண்ணாம்புத் தீற்றலாய், கூடி நின்றவர்கள் முகங்களைப் பார்வையால் வருடியவர் உதவியாளனை சமிக்ஞையால் அருகில் அழைத்து காதருகில் ஏவினார். உதவியாளன் துரிதகதியில் கூட்டத்தை விலக்கிக்கொண்டு பின்னால் நின்றிருந்த காருக்கு ஓடினான்.

வைத்தியர் பாண்டியை நெருங்கி குதிகாலில் அமர்ந்து பேச்சுக் கொடுத்தார். நெய்யில் தோய்த்த நூல்திரியாக குரல் நெகிழ்வோடு இருந்தது. ''தம்பி, கவலைப்படாதே, உனக்கு எல்லாம் சரியாப் போயிரும். பயப்படாதே. எண்ணி இருபத்தொரு நாள்ல உன்னை பிடிச்ச எல்லாப் பீடையும் ஒழியுது. சக்கரவர்த்தியா வாழ்ந்த மனுஷங்க சத்திரத்து விளக்குமாறான கதையெல்லாம் நான் பாத்துருக்கேன். வாதையை மடக்கி முளையறைஞ்சி நல்ல வழி காட்டியிருக்கேன்.''

பாண்டியின் தலை நிமிர்ந்தது. தூக்கமிழந்த கண்கள் குழிக்குள் ஒடுங்கியிருப்பதை வைத்தியர் கவனித்தார். அவை அச்சத்தின் புகை மூட்டத்திற்குப் பின்னே மெலிதாக நடுங்குவதை அவதானித்தார். தொடர்ந்து பேசியபடியிருந்தார். வார்த்தைகள் தொடர்ச்சியான ஒழுங்கோடு வெளிப்பட்டன, மந்திரம்போல்.

பிதா சுதன் இஸ்பிரித்து சாந்து. கிழக்கு மேற்கு வடக்கு தெற்கு இதிலிருந்து வருகிற சத்திரவாதிகளை ஆங்காங்கே கட்டினேன். பூமியும் வானமும் இதிலிருந்து வருகிற சத்திரவாதிகளை ஆங்காங்கே கட்டி னேன். சந்திரனும், சூரியனும் போகவராமல் கட்டினேன், என் கட்டு இயேசு கிறிஸ்துநாதர் சுவாமி திருவாய் இருக்க சேசு மரி சூசை துணை.

உள்ளம் உள்ள பதிவை பதிவராகிய அர்ச்சிஸ்ட அந்தோனியாரே அண்டத்தில் வாழும் ஒரு கையில் செய சக்கரமும் ஒரு கையில் ஈரேழுல கமும் ஏந்தி இருக்க இடத்தில் வாழும் கண்டம் பிளந்து வட்டி பிளந்து சூலம் பிளந்து சுடுகாடு பிளந்து என்கிட்டே வாரும். பரமசிவனையும் பார்வதியையும் பூணூலையும் அறுத்து மாற்றும். வேலும் தட்டும் தடியும்

உடைத்து ஓம்கணபதி என்ற சக்கரமும் பிறந்து எறிந்து பச்சைமயில் ஏறி விளையாடி வாரும். ஆறுமுகப் பெருமாளும் தொந்தி மூத்தோன் பால சுப்பிரமணியனையும் பச்சை கல்யாணி காளி நீலி வட பத்திரகாளி மாரி மகாதேவி மலையாள பகவதி மண்டைக்காட்டு தேவி கன்னியாகுமரி பகவதி சுசீந்திரம் தாணுமூர்த்தி திருச்செந்தூர் வால வாதை கனவில் மூர்த்தி குளத்தில் இறந்தவன் நாணி தூங்கிச் செத்தவன் ஈசன் இருளன் இடுகாட்டு முண்டன் சுடுகாட்டு முண்டன் வாந்தி பேதி வைசூரி மண்ண நிறை கொள்ளை நோயும் தீயும் விசமானப் பூச்சியும் விரோதிகளும் எதிராளிகளும் பகையாளிகளும் முப்பத்தி முக்கோடி தேவர்களையும் கட்டினேன். இது என் கட்டல்ல. அந்தோனியாருடைய ஆறு கோண அச்சரத்தால் அடக்கி ஒடுக்கி கட்டினேன். நாலு திசையும் 16 கோணமும் கட்டினேன். இது என் கட்டல்ல அந்தோனியாருடைய கெட்டு. கெட்டு குத்து குத்து கடலைச் சரித்திரு சங்காரம் செய்திடு சந்தந்தோனி மாமுனியே முப்பது லட்சம் முடிவு பெற்றவர். உச்சரித்த இச் செபத்தை அடியேன் நான் உச்சரிக்க பிதா சுதன் இஸ்பிரித்து மூவரும் எழுந்தருளி மூன்று விலாசம் சம்மனசுகளும் தீவட்டி புடிக்க நான் உச்சரித்த இடத்தில் அர்ச்சிஸ்ட அந்தோனியார் வந்து உதவவும் ஆமென் இயேசு.

இயேசுவின் திரு நாமத்தால் ஆசீர்வாதம். போ பிசாசே எழுவதினா யிரம் காதவழிக்கப்பாலே. ஆடாதே அலையாதே அலகோடு அலவு திற வாதே. வாய் பூட்டு தாள் பூட்டு உச்சிலையும் உள்ளங்கால் நடுவிரலையும் காஞ்ஞாம் மூட்டு கவுத்தி ஆணி அறைந்து ஏற்றினேன்.

இந்த ஆணை மறந்து இங்கே வந்தாயானால் என்னையும் உன்னை யும் படைத்த யேசுநாதர் சுவாமி எழுந்தருளி வந்து உன்னையும் என்னை யும் ஏகமெல்லாம் மாறி சினந்து கட்டி அடித்திடும். அனேகம் பூமிகள் கிடுகிடுங்க அனேகம் மலைகள் நடுநடுங்க பிதா சுதன் இஸ்பிரீத்து சாந்து ஆணையிட்டு நாலாயிரம் ரட்சைகளையும் கட்டினேன்.

நடு முக்கு நடு மண்ணையும் கட்டினேன் உச்சிவரை உள்ளங்கால் வரையும் கட்டினேன் பனிமோக கன்னியும் கட்டினேன் ஆதிமனிதன் செய்த பாவத்தால் ஆண்டவன் பாடுபட்ட ஐந்து திருக்காயத்தால் அடக்கிக் கட்டினேன்.

பிசாசுகள் விக்ரகங்கள் அறுபது சிலந்தி அறுபது அக்கினி அறுபது எழும்பி வஞ்சனை சூனியம் கன்னி விட்டு அறிய அக்கினி கெட்டு அகக் கெட்டு பூமி மந்திர பூமி என் இயேசுவே இரங்கும். ஆமென்.

வைத்தியரின் படர்ந்த முகத்தின் விளிம்புகளில் அவன் கண்கள் அலைந்தன. அவரது அசையும் உதடுகளிலிருந்து ரீங்காரம் வழிந்து காற்றில் மிதந்து போவதைப்போல வண்டுகளும் பூச்சிகளும் ஈசல்களும் வாயிலிருந்து வெளியேறிப் பறந்து செல்லுமென எதிர்பார்த்துக் காத்திருந் தான். ஒலியடையாளமொன்றும் பிடிபடவில்லை.

★

உள்ளங்காலில் ஐஸ் கட்டியால் தேய்த்ததுபோல் குளிர்ச்சி பரவியது. ஜிம்மிதான் நாக்கைத் தீட்டுகிறது என்று நினைத்தான். அறிவுகெட்ட பிராணி இந்த நேரத்தில் ஏன் இந்த தொந்தரவுக்கு வந்து நிற்கிறது என்று எரிச்சலுற்றான். கண்களைத் திறக்காமல் காலைப் பின்னுக்கு இழுத்து முழுவேகத்துடன் அதன் முகத்தில் ஒரு உதை விட்டான். நாய் தலையை விலக்கிக் கொண்டது. பழையபடியே காலை நீட்டியதும் நாய் மீண்டும் நக்கத் தொடங்கியது. முன்னைவிட சுரத்தாக இப்போது உதைத்தான். பட்டிருந்தால் நாய் பத்தடி தொலைவில் போய்விழுந்திருக்கும். காலோ காற்றில் பாய்ந்துவிட்டு ஏமாற்றத்துடன் திரும்பியது. நாய் வினோதமாக உறுமியது. அடித்தொண்டையில் ஏளனமாகச் சிரித்தது. அது நீர்க் குமிழிகள் கூட்டம் கூட்டமாக நொறுங்குவது போலிருந்தது. உடலை உயர்த்தி எழுந்து காலடியில் பார்த்தான். கடல். விக்கித்துப் போய்விட்டான். நாய் எப்படி கடலாக மாறியது என்று ஒரு கணம் திகைத்தான். எழுந்து நின்று பார்த்தபோதும் எதிரே கடல்தான் விரிந்து பரந்து கிடந்தது. தருவித்துக் கொண்ட தைரியத்துடன் உள்ளூர கடுமையான அச்சத்துடன் கடலை நோக்கி உரத்த குரலில் அழைத்தான். 'ஜிம்மி...' என்றதும் நாலு கால்களும் ஒரு வாலுமாக கடல் நாயாக மாறி அவனை நோக்கி ஓடிவரும் என்று எதிர்பார்த்தான். ஏமாற்றமடைந்தான். அந்த ஏமாற்றம் அவனுக்குள் பெரும் நிம்மதியையும் மகிழ்ச்சியையும் விளைவித்தது. மாயைக்கு வேலையில்லாமல் போனதில் மனசு குதூகலமடைந்தது.

உலகம் சிறகு விரித்ததுபோல் கடல் பரந்திருந்தது. நீல நிறத்தில் நட்சத்திர ஒளியலைகள் மிளிர கடல் இளமையாகக் காட்சியளித்தது. காற்று குளிர்ச்சியுடன் தீராத பாடலாக ஒலித்தது. அழகிய இதழ்கள் விரிந்து காம்பைத் தவிர உடலெல்லாம் மலர்ந்த ஒரு வாசமுள்ள பூவிருந்தால் அதை இப்போது கடலுக்குச் சூட்டலாம்போல் நினைப்பு தோன்றியது. நீருக்குள் இறங்கி அலைகளை மறித்தும், பிடித்து இழுத்தும் அள்ளியும் அணைத்தும் விளையாடினான். களைத்தபின் வெளியேறி கடலைப் பார்த்தவாறு கரையில் அமர்ந்து நட்சத்திர ஒளியில் உடலை உலர்த்திக் கொண்டிருந்தான். அவனையும் கடலையும் தவிர அங்கே வேறொருவருமில்லை என்பதை உறுதிப்படுத்தியிருந்த சிறிது நேரத்தில் மேற்கிலிருந்து கையில் விளக்குகளுடன் பெண்கள் கூட்டம் ஒன்று சங்குவளைகள் முழங்க தண்டையணக்கத்துடன் வந்துகொண்டிருந்தது. அவர்கள் கைகளில் வெள்ளியில் வார்த்த நெய்விளக்கில் மின்னிக்கொண்டிருந்த சுடர்கள் அவர்கள் முகத்தை ஒளியில் வரைந்து துல்லியமாகக் காட்டின. ஈரக்கால்களால் அலைகளை மிதித்து பவ்யமாக நடந்தார்கள். நூற்றுக்கும் மேற்பட்டவர்கள் இருக்கலாம். கைவிளக்குகளோ நட்சத்திரங்களைவிட பிரகாசமாக ஒளி வீசின. ஒரே மாதிரியாக உடுத்தியிருந்தார்கள். பெண்களின் ரத்தினச் சிவப்பு உடைகளும் தேவதை லட்சண முகங்களும் கடலின் கருநீலமும் ஒளி விளக்கின் மஞ்சள் சுடர்களுமாகக் கலந்து

காலத்தை திருப்பி தெய்வீகத்துக்குள் செலுத்தியது போன்றதொரு சிலிர்ப்பை ஊட்டியது. 'ஓ... இவர்கள் விடியலுக்கு விளக்கேற்ற தொடுவானுக்கு போகிறார்களோ?' இறக்கைகளை வயிற்றிலடித்து மனம் வைகறைச் சேவலாகக் கூவியது. அவன் உடல் அங்கேயே கரையி லிருக்க கழுத்து மட்டும் தண்டுபோல் வளர்ந்து நீளத் தொடங்கியது. அவன் தலை அவனை விட்டு தள்ளிச் சென்று விளக்கேந்தி வரும் பெண் களை நெருங்கி ஒவ்வொரு முகமாக உற்றுப்பார்த்தது. பட்டத்தின் நூலைப் பிடித்திழுத்து தரையிறக்குவதுபோல் தன் கழுத்தைப் பின்னுக்கு இழுத்தான். அது அவன் சக்திக்கு அப்பாற்பட்டிருந்தது. கூட்டத்தில் மையமாக வந்துகொண்டிருந்த ஒரு பெண்ணின் கைவிளக்கு திடீரென்று அணைந்து போனது. அது யாருடையதென அறிய அவன் முயன்றபோது அவள் முகம் இருளுக்குள் புதைந்து போனது. அவள்தான். அது அவன் தவிப்பை அதிகப்படுத்தியது. அச்சமயம் கூட்டத்திலிருந்து மென்மை யான குரலில் பாட்டொலி எழுந்தது. அப்பெண்களின் உதடுகளோ அசைவற்றிருந்தது.

அவர்கள் அந்தப் பாடலை நாபிக்குழி வழியாக மென்மையான குரலெடுத்துப் பாடுகிறார்களோ என சந்தேகிக்கும்படி அமானுஷ்யமாக ஒலித்தது. கடைசிவரையில் கைவிளக்கை அணையவிட்ட பெண்ணின் முகத்தைக் கண்டுபிடிக்கவே முடியவில்லை. அவளன்றி வேறு யாராக வும் இருக்கமுடியாது. பெண்கள் கூட்டம் அவனுக்கு முதுகு காட்டிய போது நடமாடும் இருள் பிம்பங்களாகி விட்டார்கள். பின்தொடர்ந்து செல்ல முற்பட்டபோது வைகறை குறுக்கிட்டு பொழுது விடிந்து விட்டது.

★

குறிவாரிலிருந்து சீறி வந்த சீனிக்கல்லின் வேட்டைக்கு இலக்காகி அந்தரத்தில் தடுமாறும் சிட்டுக்குருவியைப்போல் சுழன்று வந்த மரக்குச்சி பாண்டியின் அருகே சொத்தென்று விழுந்து சில அங்குலங்கள் உருண்டு நின்றது. குச்சுக்கம்பு விளையாட்டுக்காக பச்சை மரத்தில் செதுக்கப்பட்டிருந்த, பாம்புவிரலை விட சிறிது நீளமான குச்சியின் மீது அவன் கவனம் திரும்பியது. பாண்டி சலனமின்றி அதை வெறித்தபடி யிருந்தான்.

சிறுவன் ஒருவன் மெதுவாக உள்ளே உற்றுப் பார்த்தான். அவனுக்குப் பின்னே நாப்பத்தி மூணு நாப்பத்தி நாலு நாப்பத்தி அஞ்சு... என ஒரு சிறுவனின் குரல் ஓங்கி வந்தது. பாண்டியின் பார்வை குச்சியின் மீதே இருந்தது. கண்களும் குச்சியும் அசைவற்று ஜடமாகக் கிடந்தன.

படலைத் திறந்த சிறுவனின் விளையாட்டு குறுகுறுப்பை சட்டென்று தட்டிப் பறித்தது பாண்டியின் தோற்றம். சிறுவனின் சகாக்கள்

அவனைப் பின்தொடர்ந்து வந்து தோளில் மூச்சு விட்டுக்கொண்டு நிற்பதையும் ஒரு கணம் மறந்துவிட்டான். ஒன்றரையடி நீளமுள்ள கம்பைத் தரையில் பதித்து அளந்தபடி எண்ணிக்கொண்டு வந்த சிறுவன் அளந்த மட்டில் தரையில் சிறு அடையாளக் குறி கிழித்துவிட்டு நாப்பத்தி ஒம்பதை மறக்காதிருக்க திரும்பத் திரும்ப மனதிற்குள் சொல்லிக் கொண்டிருந்தான்.

கருகருவென நீளமான தலைமுடி கோரை கோரையாக பாண்டியின் புஜத்தில் படிந்து கிடந்தது. முகத்திலும் நெஞ்சிலும் ரோமங்கள் அடர்ந்து சுருண்டிருந்தன. உலர்ந்த உதடுகள் உணர்ச்சியற்று சற்றே பிளந்திருந்தன. லேசாகத் தென்பட்ட பற்களில் சிரிப்பின் சிறு துணுக்கு இறந்து கிடந்தது. கையிலும் காலிலும் இரும்பைப் பழுக்க வைத்து நெளித்துச் செய்த விலங்குகள் பூட்டப்பட்டிருந்தன. பூட்டு சாவியின்றி விலங்கு அடித்து இறுக்கப் பட்டிருந்தது. கால்விலங்கின் நடுப்பகுதியிலிருந்து வால் போல் நீண்ட உறுதியான சங்கிலி அடிமரத்தை வளைத்துச் சூழ்ந்தபடி திருகிக் கிடந்தது. உடற்கட்டில் எண்ணய் தேய்த்துக் குளித்த மினுமினுப்பு. இடுப்பில் காப்பித்தூள் நிறத்தில் லுங்கி கட்டியிருந்தான் மூட்டளவு.

மடித்து வைத்திருந்த முழங்கால்கள் விலங்கிட்ட கைகளுக்குள் மேடாய் உயர்ந்திருந்தன முகத்தைத் தாங்கிக் கொள்வதற்கு ஏதுவாக. சிறுவர்கள் பக்கம் அவன் திரும்புவதற்கான எந்த அறிகுறியும் தென்பட வில்லை. சிறுவர்கள் ஒருவர் முகத்தை ஒருவர் குறிப்போடு பார்த்தனர். கண்களில் பயம் அலையடித்தது. ஒரு வார்த்தை, சிறு முணுமுணுப்புக் கூட இல்லை.

'பாக்கியம் பாட்டி வீட்டுப் பக்கமெல்லாம் போவாதீங்கலே!' வீட்டில் பெரியவர்கள் எச்சரித்திருந்தது சிலருக்கு ஞாபகத்தில் உறைத்தது. தரையில் தட்டி எழுப்பிய குச்சி அந்தரத்தில் சுழன்றபோது அடி தப்பி விடக்கூடாது என்ற உறுத்தில் பரசியடித்தான் அந்தோனி. குச்சி பறந்து வந்து பாக்கியம் பாட்டி வீட்டு வளவுக்குள் விழுந்துவிட்டது.

குச்சியையும் பாண்டியையும் மாறி மாறிப் பார்த்தனர். இரண்டு ஜடங்கள் ஒன்றையொன்று கவ்விப் பிடித்திருந்தன. நன்றாகப் பெருக்கி சுத்தப்படுத்தப்பட்டிருந்த வெறுந்தரையில் கிடந்த குச்சி, 'ஐயோ எனக்கு பயமாக இருக்கு. என்னை சீக்கிரமே எடுத்துட்டுப் போங்க, நாம விளையாடலாம்' என்றது சிறுவர்களிடம்.

நாப்பத்தி ஒம்பதை ஒப்பித்து நின்றவன் 'ஆ...' வென அலறினான். மற்றவர்களும் நடுங்கிப் பின்வாங்கினர். ஜிம்மி அவர்களை விலக்கி வளவுக்குள் நுழைந்தது. அருகில் வந்து பாண்டியின் பிணைந்திருந்த கைவிரல்களை நக்கி ஈரப்படுத்தியது. வாலை பலமாகக் குழைத்தது. அங்குமிங்குமாக இரண்டு சுற்று அவனை வட்டமிட்டது. மெல்ல விலகி வந்து குச்சியை முகர்ந்தது. முனகுவது போல் குரைத்தது. சிறுவர்கள்

ஒதுங்கி வழிவிட்டனர். குதித்தோடி வெளியேறியது.

அவர்கள் எல்லோருமாகச் சேர்ந்து வீட்டின் முன்வாசலுக்கு வந்தார்கள். ''பாட்டியோ...''

''வீட்டுல யாரு இருக்கா?''

பாட்டி வாசலுக்கு வந்தாள்.

''பாட்டி, குச்சிய வாங்கித் தாயேன்.''

''எந்தக் குச்சி?''

''நாங்க குச்சிக்கம்பு விளையாடுனோம் பாட்டி. அடிச்சதுலே குச்சி அந்த அண்ணன்கிட்ட போய் விழுந்துட்டு.''

பாட்டிக்கு பிடிபடவில்லை.

''எந்த அண்ணன்?''

''வீட்டுக்கு பின்னால கிறுக்கா இருக்காவலா அந்த அண்ணன்.''

பாட்டி மூச்சை சற்று நீளமாக உள்ளிழுத்தாள். படியிறங்கினாள். சீலை நுனியை இடுப்பில் செருகிக்கொண்டாள்.

''ஏ... பேவுளியா! உங்களுக்கு விளையாட காடுகரை இல்லியா? குச்சி அடிக்க அவன்தான் கிடைச்சானா?''

சிறுவன் பதிலுக்கு மழுப்புவதுபோல் தனக்குத்தானே முகத்தில் புருவத்தை ஏற்றிக்கொண்டான்.

பாட்டியின் நிழல் குச்சியின் மேல் படரவும், குச்சியை கையில் எடுத்துக்கொண்டான் பாண்டி. பாட்டி கையை முகத்துக்கு நேரே நீட்டினாள். ''சின்னப் பேவுளிய விளையாடிட்டு போட்டும். அத குடுய்யா.''

குரலைச் செவி மடுக்காதவனாய் குச்சியைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''இனி இந்தப் பக்கம் அடிக்க மட்டானுவய்யா.'' கெஞ்சலோடு உத்திரவாதம் தந்தாள். சிறுவர்களும் தங்களை அறியாமலே ஆமோதிப்பதுபோல் தலையாட்டினர்.

பாண்டி குச்சியை வாய்க்குள் விட்டு கடித்தான். 'கெடுக்'கென்று பலமான ஓசை எழுந்தது. நீட்டவசத்தில் இரண்டு துண்டாக முறிந்தது.

இரண்டு துண்டுகளையும் அவர்கள் முன் விட்டெறிந்தான். பறவைக் கூட்டத்துக்குள் கல் விழுந்தது போல் பதறிக் கலைந்தனர் சிறுவர்கள்.

★

இருள் வெடித்து அடிவானில் வெளிச்சம் பட்டை பட்டையாக உரிய ஆரம்பித்தபோது கடலின் குணம் முற்றிலும் மாறியேவிட்டது.

அது விரோதியைக் கண்டதுபோல் முகத்தைத் திருப்பிக்கொண்டது. நீர்ப்பரப்பு மீது பொன்பட்டு தகதகத்தது. இரவெல்லாம் கூடிக் குடித்து விட்டு விடிந்ததும் யார் நீ என்று விசாரிக்கிற தடுமாற்றமான குடிகாரனின் நடவடிக்கைக்கும் அதற்கும் பேதமொன்றும் பெரிதாக இல்லை. கண்ணுக்கெட்டும் தொலைவில் கட்டிடங்களோ மனிதர்களோ தென்படவில்லை. கடலைத் தவிர மற்றதெல்லாம் பொட்டல்வெளி யாக்கப் பட்டிருந்தது. கடலின் திடீர் செருக்குக்கு இதுவும் ஒரு காரண மாக அமைகிறதோ என்னவோ!

கால்கள் புதைய கரையோரமாய் உலர்ந்த மணலில் நடக்க ஆரம்பித் தான். நடக்க நடக்க மணல் கொஞ்சம் கொஞ்சமாக சூடேறிவந்தது. பொறுத்துக் கொள்ளக்கூடிய சூடுதான். விரைவில் அது பொறுமையை மீறிச் செல்லுமானாலும் வேறு வழியில்லை. கடல் அவனை யாரோ ஒருவனைப் போல நடத்துவதை அவனால் சகித்துக்கொள்ள முடிய வில்லை. இவ்வளவு இறுமாந்து கிடக்கும் அளவு இந்தக் கடலிடம் அப்படி என்ன இருக்கிறது நீரைத் தவிர! நாலு அலைகளை விட்டால் நாதியற்றுப் போய்விடும். வானத்துக்கு வேறு சாயம் பூசி விட்டால் இந்த நிறம் கூட நிச்சயமற்று வேஷம் கலைந்து போகும்.

இது கோழைக்கடல். இதோடு எனக்கு எந்த ஒட்டும் உறவும் வேண்டாம். பாறைகளை கற்குன்றுகளை அறுத்துப் பாயும் அலைகள் நிறைந்த வீரமான கடலைத் தேடி நான் செல்ல வேண்டும். நான் நடக்க நடக்கக் கூடவே வரும் இந்தக் கடலின் மானம் கெட்ட செயலுக்கு எதிராக சிந்தித்து காலத்தை வீண் விரயம் பண்ணக்கூடாது. நான் வேகமாக என் வழியில் செல்ல வேண்டும்.

வெயில் சுட்டது. வியர்வை பொங்கி வழிந்தது. உப்புக்காற்று அவனைச் சுற்றி ஆற்றுப்படுத்தியது. உடல் சிறுகச் சிறுக உப்புத்துகள் படிந்து வெள்ளை நிறமாக மாறி வந்தது.

தொலைவிலிருந்து பார்க்கையில் யானைக்கூட்டம் ஒன்று கடலில் இறங்கி நீராடிக்கொண்டிருந்தது. துதிக்கைகளில் நீரை உறிஞ்சி ஒன்றின் மீது ஒன்று பீய்ச்சியடித்து ஆனந்தமாக விளையாடின. விரைந்தோடி வந்து சமீபித்தபோது யானைகள் கரும்பாறைகளுக்குள் ஒளிந்து கொண்டன. ஏனென்று விளங்கவில்லை. கரும்பாறைகளிலிருந்து யானைக்கூட்டம் வெளியேறும்வரை காத்திருக்க விரும்பாமல் அவற்றைக் கடந்து போனான். திரும்பிப் பார்க்கத் தோன்றும் தூரம் வந்திருக்க உடை வாளென கரையில் ஒரு மீன் கிடந்து துள்ளித் துடித்துக்கொண்டிருந்தது. அது தட்டையாகவும் திண்ணம் குறைந்தும் தாராளமான நீளத்துடனும் இருந்தது. நீரில்லையேல் மீன் ஏது? அதைப் பார்த்த கணமே பரிதாபம் தோன்றி உதவிக்குச் சென்று மீனைக் காப்பாற்றிவிட முடிவெடுத்தான். அதன் தலையையோ வாலையோ பற்றியிழுத்து நீருக்குள் சேர்த்துவிட் டால் போதும். பின்பு அது நீந்தி தன் வீட்டுக்குப் போய்விடும்.

பிழைத்துக்கொள்ளும். செதிள்களின்றி வழுவழுப்பாக வெள்ளை நிறத்திலிருந்த மீனின் வயிற்றுப் பகுதி தரையிலிருந்து அரையடி உயரம் எம்பி எம்பித் தாழ்ந்தது. எவ்வளவு நேரமாக இந்த அவஸ்தையோ! எப்படி கரைக்கு வந்ததோ! தெரியவில்லை. உயிர்த்துடிப்பு இருக்கும் பட்சத்தில் சற்று முன்புதான் விபத்துபோல ஏதாவது சம்பவித்திருக்க வேண்டும்.

அவன் மீனை நெருங்கி மண்டியிட்டபோது காலநிலையில் கவனிக்கத்தக்க மாறுதல்கள் ஏற்பட்டன. சூரியன் மேகத்திரளுக்குள் நுழைந்தது. மேகங்கள் கருத்து அடர்ந்தன. கூராப்பு போல் தொடங்கி கொஞ்சம் இருட்டிவிட்டது. எல்லாம் மழைக்கான ஏற்பாடுதான், வேறென்ன என்று நினைத்தவன் மீனைத் தொட்டு கையில் தூக்கினான். அவனது பரிவான பிடியிலிருந்து திமிறி மீன் மீண்டும் தரையில் விழுந் தது. சுதாரித்துக்கொண்டு இன்னும் கவனமாகக் கையாள முயன்றான்.

''என்னை விடு, தொடாதே. யார் நீ? உன் வேலையைக் கவனி. தள்ளிப் போ.'' மீன்தான் பேசியது.

ஆச்சரியத்தில் அவன் கண்கள் விரிந்தபோது இடி இடித்து மின்னல் வெட்டி நடுங்க வைத்தது.

குரலற்ற மீனா பேசுவது? இவ்வளவு அலட்சியமான அவன் சிந்தனை ஓட்டத்தை மரணத் தறுவாயில் துடித்தபடி உணர்ந்த மீன், ''மீன் பேசவில்லை; நான் பேசுகிறேன்'' என்று விளக்கமளித்தது. திகைப்பை விழுங்கிக்கொண்டாலும் அத்தனை சுலபமாகச் செரிக்க முடியவில்லை. வேண்டுதலின்றி சுயமாக உதவி செய்ய முன்வந்ததற்காக உள்ளூர வெட்கமும் உண்டானது.

கழுத்தை நெரித்துக் கொன்று போடவும் ஒரு குயுக்தி.

''யாரைக் கொல்ல நினைக்கிறாய்? இறந்து போன மீனையா? தாராளமாய் செய்'' என்றது மீன். எச்சரிக்கையாக சற்றுப் பின்நகர்ந்து மீனின் கண்ணைப் பார்த்தான். அது உயிரிழந்து உலர்ந்திருந்தது. யாரோ தொட்டதுபோல தோளில் மழைச்சொட்டு தெறித்தது.

''யார் நீ'' கலவரக் குரலில் கேட்டான்.

''நீ யாரென்று முதலில் தெரிவி'' மீன் அதிகாரமாகப் பேசியது.

''நானொரு நாடோடி. கால்பந்தைப்போல காலத்தை உதைத்துக் கொண்டே அலைபவன்.''

''ஓஹோ...''

''என்ன ஓஹோ... நான் யாரென்று சொல்லிவிட்டேன். அடுத்தது உன் முறை.''

''அப்படியா... நல்லது. நானோ உன் பொய் இன்னும் பூர்த்தியாக வில்லை என்று நினைத்தேன்.''

''அப்படியானால் நீ முட்டாள். நம்பிக்கையில்லாத முட்டாள்.''

''நன்றாகப் புரிந்துகொண்டாய். இது போதுமே உனக்கு.''

''உன் குணாதிசயத்தை பற்றி கவலை இல்லை எனக்கு. நீ மீன் தானா இல்லை வேறேதுமா?''

''எரிச்சலடையாதே. இதோ உண்மையைச் சொல்கிறேன், நானொரு கிளிஞ்சல்.''

''கிளிஞ்சலா ? கிண்டலா?''

''நீ நம்பத் தயங்குவதில் தப்பில்லை. நான் இப்போது இந்த மீனின் வயிற்றுக்குள்ளிருந்து பேசிக்கொண்டிருக்கிறேன். எனவே நீ என்னைப் பார்க்க முடியாது.''

''மீன் வயிற்றுக்குள் உனக்கென்ன வேலை?''

''நான் எங்கே போனேன்; சின்ன மீனென்று நினைத்து என்னை இந்த முட்டாள் விழுங்கிவிட்டது. விழுங்கிய சொற்பப் பொழுதிலே அது பரிதாபமாக இறந்தும் போனது.''

''இறந்த மீன் எப்படி இப்படித் துடிக்க முடியும்?''

''இறந்த மீன் துடிக்கவில்லை; நான்தான் மீனின் வயிற்றை முட்டிக் கிழித்துக் கொண்டிருக்கிறேன்.''

''எனக்கு தலைதான் சுற்றுகிறது.''

''சுற்றவில்லை என்றால்தான் நீ பயப்படவேண்டும். சரி, நீ எனக்கு ஒரு சத்தியத்தைப் போன்ற உத்திரவாதமளித்தால் எனக்கு நேரிட்டதை உனக்கு விளக்கிச் சொல்ல முயல்வேன்.''

''என்ன உத்திரவாதம் அது?''

''அதற்கு நீ உண்மையாக இருப்பாய் என்று எப்படி நம்புவது?''

''நான் என்ன செய்ய வேண்டும் என்பதை முதலில் நீ கூற வேண்டும். ஒருவேளை அது என்னால் இயலாத ஒன்றாகவும் இருக்க வாய்ப்புள்ளது.''

''பெரிதாக ஒன்றுமில்லை. இந்த செத்தமீனைப் புரட்டிப் போட வேண்டும்.''

''அவ்வளவுதானா?''

''அவ்வளவுதான்.''

''இதோ இப்போதே அதை...''

''பொறு. அவசரப்படாதே. இடது கண் வானத்தை வெறிக்கக் கிடக்கும் இந்த மீனின் வலது கண் வானத்தை வெறிக்க நீ புரட்டிப் போட்ட மறுகணமே என் பாதை திறந்துவிடும். நொடிக்கு ஒரு கஜம் நான் மண்ணுக்குள் புதைய ஆரம்பித்து விடுவேன். என் வாக்கை நான்

மீறுவதை என்னாலேயே தடுக்க முடியாத நிலைக்கு ஆளாகிவிடுவேன். பின்பு உன் தலைச்சுற்றல் அதிகமாகி கழுத்தெல்லாம் முறுக்குக் கயிறு போலத் திருகிக் கொள்ளும்.''

''நம்ப முடியவில்லையே...''

''நடக்கும்போது நம்புவாய்.''

''சரி. இந்த மீனை நான் புரட்டிப் போடுவதாக வாக்குறுதி தருகிறேன். என் சொல்லை நானே மீறமாட்டேன்.''

''நல்லது. இயன்ற அளவு எளிமையாகச் சொல்கிறேன். கவனமாகக் கேள். என் பெயர் - நினைந்து நினைந்து புதையும் கிளிஞ்சல்.''

இறந்த மீனின் வயிற்றுக்குள்ளிருந்து கிளிஞ்சல் பேசியது. மீனின் துடிப்பு மிதமாக இருந்தது. பஞ்சபூதங்களும் மனம் ஒருமித்து கதையை ஆர்வமாகக் கேட்பது போன்ற பேரமைதி நிலவியது.

''மனித சஞ்சாரமுள்ள கடற்கரையை நான் அடைந்தபோது எனக்கு சில ஆயிரம் வயதுகளாகியிருந்தன. அலைகளில் அலைக்கழிந்து கொண்டு கிடந்தேன். குளிக்க வரும் குழந்தைகள் என்னை வீட்டுக்கு பிடித்துச் செல்ல முயற்சிப்பார்கள். நான் சாமர்த்தியமாக அவர்களிட மிருந்து தப்பிவிடுவேன். குழந்தைகள்தான் எனக்கு மொழியை அறிமுகப் படுத்தியவர்கள். அவர்கள் வாயிலிருந்து சிதறும் வார்த்தைகளை நான் பத்திரமாகப் பொறுக்கி வைத்துக் கொள்வேன். பெரியவர்கள் பேசுவது கூட எனக்குப் புரியத் தொடங்கியதும் நான் மிக்க மகிழ்ச்சியடைந்தேன். நானும் அவர்களில் ஒருவனாக உணர்ந்தேன். குழந்தைகளிடம் பேசுவ துண்டு. குழந்தைகளோ கடல் பேசுவதாக நினைத்து உற்சாகமடை வார்கள். பெரியவர்களிடம் மௌனம் சாதித்துவிடுவேன். பேசினால் அதன் விளைவால் அவர்கள் புத்தி பேதலித்துப் போகும் அபாயமிருப் பதையும் உணர்ந்திருந்தேன். இப்படியாக என் நாளும் பொழுதும் போய்க்கொண்டிருந்தது. என் வாழ்வில் திருப்புமுனையை ஏற்படுத்திய, நான் நினைந்து நினைந்து புதையும் கிளிஞ்சலான அந்த நாள் வந்தது.

''மாலை மயங்கிக்கொண்டிருந்தது. இருள் கவிந்து வந்தது. சந்தனம் கரைத்துத் தெளித்ததுபோல் வெளிச்சமிருந்தது. பொழுதுபோக்கிகள் வீடு திரும்பியபடியிருந்தார்கள். நான் ஒரு ராட்சஸ அலையால் கரையில் ஒதுக்கப்பட்டிருந்தேன். இன்னொரு பேரலை வந்துதான் என்னை கடலுக்குள் அழைத்துச்செல்ல முடியும் என்ற நிலையில் நான் தொலை வில் கடவுள் நடந்து வருவதைக் கண்டேன். பெண் தெய்வம். தேவி. மலர்ந்த முகம். சுடரும் விழிகள். நிமிர்ந்த நடை. இடையசைவில் துவிபங்க லயம். அவரைக் கண்டதும்தான் அறிந்து கொண்டேன், அதற்கு முன் இத்தனை அழகான உருவை நான் கண்டதே இல்லை என்று. சொரூபம் நடந்து வருவதுபோல் அலையோரமாக கடலைப் பார்த்த வாறு வந்துகொண்டிருந்தார். அவருடன் ஒரு யவனக்கன்னியும்

பேச்சுத்துணைக்கு வந்தாள். அவர்கள் உரையாடலை ஒட்டுக் கேட்கக் கூட உணர்வற்று நான் மெய்மறந்து போனேன். அவர்கள் என்னை நோக்கி தங்களுக்கே தெரியாமல் வந்தார்கள். உலகத்தில் எத்தனை கடவுள் கள் உண்டுமோ அனைவரையும் வேண்டிக்கொண்டேன். தெய்வங்களே! இந்த தேவியின் பாதம் என் தலையைத் தீண்ட கொஞ்சம் மண்ணில் நான் புதைய மாட்டேனா என்று ஏங்கி மன்றாடினேன். அப்போது கடலி லிருந்து பார்வையைக் கரைக்குத் திருப்பிய அந்த தேவியின் கண்கள் எதையோ தேடின. மலர்ந்த முகத்தில் மேலும் ஒரு மலர் பூத்ததுபோல் இதழோரம் புன்சிரிப்போடு என்னைப் பார்த்தார். நானோ கூசிக் குறுகி நெளிந்தேன். என்னருகே வந்து நின்ற தேவி வலதுகால் கட்டைவிரலை உயர்த்தி பின்பு என் தலையை லேசாக அழுத்தினார். என் உடலெங்கும் மின்சாரம் பாய்ந்தது. நான் மண்ணுக்குள் அரையங்குலம் புதைந்தேன். அந்தப் பாதத்தின் வாசனை என் உடலெங்கும் மணம் வீசியது. மறக்கவே முடியாத மணம்.

''தேவி கடந்து போய்விட்டார். என்னால் அவரைப் பின்தொடர்ந்து செல்ல முடியவில்லை. அந்த வரம் எனக்கில்லை. என் வாழ்க்கையைப் புரட்டிபோட்டுவிட்ட அந்த இன்ப கணங்களை என்னால் மறக்கவே முடியவில்லை. உலகின் எப்பொருளும் ஈடற்ற சுகந்தம்! கால்விரலின் மெத்தென்ற ஸ்பரிசம்! என் நினைவில் இப்போதும் சுழன்று சுழன்று வருகின்றன. அதை நினைக்கும் போதெல்லாம் அங்குலம் அங்குலமாக மண்ணுக்குள் புதைந்துகொண்டிருக்கிறேன். அதில் நான் விவரிக்க முடியாத சுகம் காண்கிறேன்.

''இப்படியாக மண்ணைத் துளைத்துத் துளைத்து பூமியின் மறு பக்கத்துக்கு வந்து விட்டேன். நான் மீண்டும் அந்தக் கடற்கரைக்கு செல்ல வேண்டும். அதற்காகத்தான் இந்த இறந்த மீனின் வயிற்றிலிருந்து துடித்துக் கொண்டிருக்கிறேன். நினைந்து நினைந்து புதையும் எனக்கு விதியிருந்தால் இந்த ஜென்மத்தில் இன்னொரு முறை அந்த தேவியின் பாதத்தில் மிதிபடும் பாக்கியத்தை அடைவேன். இன்னும் பல்லாயிரம் ஆண்டுகள் இங்கும் அங்குமாகப் புதைவேன். என்னைப் பற்றிக் கூறிவிட்டேன். இப்போது உன் வேளை. கொடுத்த வாக்கை நீ காப்பாற்ற வேண்டும்.''

அவன் சிறுபொழுது யோசனையில் ஆழ்ந்திருந்தான். கிளிஞ்சல் அவன் கடமையை நினைவூட்டியது. மீனை இரண்டு கைகளாலும் பலமாகப் பற்றிப் பிடித்துப் புரட்டினான். கிளிஞ்சல் இரண்டே குதிப்பில் நிலத்தைக் குத்திப் பிளந்து தன் வழியைத் திறந்தது. கனமான கடப் பாரையை விட லகுவாக மண்ணைத் துளைத்தது. அவன் கைகள் மீனை முழு பலத்துடன் பற்றியிருந்தன. மீன் புதைந்தபோது அவன் முழங்கை களும் மண்ணுக்குள் புதைந்துவிட்டன. கிளிஞ்சல் நொடிக்கொரு துடிப் புடன் இறங்கியது. புஜங்கள் வரை கொஞ்சம் கொஞ்சமாக மூழ்கி அவன் தலையும் மண்ணுக்குள் நுழைந்தது. தலைகீழாக பூமிக்குள் உடல்

இழுக்கப்பட்டது. முதலில் சுவாசிக்க காற்றில்லாமல் திணறல் ஏற்பட்டது. பிறகு சிறுகச் சிறுக மண்ணை சுவாசிக்கப் பழகிக்கொண்டான். மண்துகள்கள் நுரையீரலில் நிரம்பி நாசி வழியே வெளியேறியன. மேகங்களை விலக்கிக்கொண்டு சூரியன் நம்ப முடியாத இக்காட்சியை எட்டிப்பார்த்தது. முற்றிலும் புதைய ஒரே ஒரு கணம் மீதமிருந்தபோது அவன் உள்ளங்கால்களில் மஞ்சள் வெயில் கடைசி முத்தத்தைப் பதித்தது.

அவனையே வியப்போடு பார்த்துக்கொண்டு போனது சூரியன். அஸ்தமன விளிம்புக் கோட்டில் அவசரத்தில் முட்டி தலை பிளந்து தொடுவானில் சூரியனின் ரத்தம் பரவிப் பெருகிவந்தது.



கல்லறைத் தோட்டத்தின் வடக்கோரம் நின்றிருந்த மஞ்சணத்தி மரத்தடியில் பஞ்சு குவித்துப் போட்டாற்போல் அமர்ந்திருந்தாள் பாட்டி. முதுகு மரத்தடியில் சாய்ந்திருக்க கால்களை நீட்டிப் பின்னியிருந்தாள். கைகள் மடியிலிருந்தன. கண்கள் மூடியிருந்தன. நிஷ்டைக் கோலம். அவளுக்கெதிரே சில அடி தூரத்தில் தாத்தாவின் கல்லறையிருந்தது. அதையடுத்து அத்தையின் கல்லறை. இரண்டுக்கும் நடுவில் தனக்கென்று இடம் விட்டு வைத்திருந்தாள். சமீபமாய் சுண்ணாம்பு சாற்றி பராமரிக்காததின் விளைவாய் பல வருடப் பழமை படிந்திருந்தது. தோட்டத்தின் நடுவே குருசடி. அதன் உச்சியில் கருங்கல்லில் சீவிய சிலுவை.

வெளியோடு அதிக பரிச்சயமில்லாத இளநிலை அச்சத்தோடு விருட்டென பாய்ந்து வந்து மஞ்சணத்தி மரச்சிரசில் விழுந்தது குஞ்சுப் பறவை. நிதானித்து கிளையை பற்றிக்கொண்டு சகல திசைகளையும் உற்று நோக்கி அவை தொலையாமலிருப்பதை உறுதிப்படுத்திவிட்டு தீச்சிவப்பு வாயை இயன்றவரை விரித்து குரல் எழுப்பியது. குயில் குஞ்சின் அலறல் கடூரமாக இருந்தது. நம்ப முடியாத நாராசம். விட்டு விட்டுக் கதறியது. நிறுத்தும் உத்தேசமில்லை. நிஷ்டை கலைந்து கண் திறந்த பாட்டி கொட்டாவி விட்டுக்கொண்டாள். மர நிழல் சரிந்து அவளை விட்டு எங்கோ நீண்டுபோய்க் கிடந்தது. தலை உயர்த்தி அண்ணாந்து கண்களை இடுக்கி மேலே பார்த்தாள். மர இலைகளின் இடைவெளிகள் கதறின. பொழுது சாய்ந்து விட்டிருந்தது.

அடிவயிற்றில் பசியுணர முடிந்தது. உணர்ந்த மறுகணமே அது மறைந்தும் போனது. காலையில் அரைவயிற்றுக் கஞ்சி குடித்துவிட்டு கடிதக்காரன் கட்டெடுக்க வரும் நேரத்தில் இங்கே வருகிறாள். பொழுது சாய்ந்து வழித்தடங்கள் இருள் புகையில் மறையும் வேளைதான் வீடு திரும்புகிறாள். கடந்த ஒன்றரை மாதமாக இதுதான் நடக்கிறது. ஏனோ மரணத்தின் மிக அருகாமையில் இருக்க மனம் விரும்புகிறது. எழுபதுக்கு மேலாகிவிட்டது. இனியும் எனக்கென்ன வாழ்வு வேண்டிக்

கிடக்கு, என்று தனக்குத்தானே உரக்கக் கேட்டுக்கொள்கிறாள்.

'ஆலமரமா அரசமரமா வாழவேண்டிய என் பேரப்பிள்ளைய முடக்கிப் போட்டு, என்னை விட்டு வச்சிருக்கியே எதுக்கு?' யார் யாரையெல்லாமோ மனத்துக்குள் விளித்து முறையிட்டுக் குமுறுகிறாள்.

தூரத்தே துன்பம் புள்ளியாகத் தோன்றி எதிர்கொண்டு வந்தடையும் போது துன்பத்தே நாமொரு புள்ளியாகிப் போவதுபோல் மனம் மிகக்குன்றிப் போய்விட்டாள் பாட்டி.

ஆட்டுவிக்க ஆளின்றிப் பெருந்தனிமையில் வெறுமையில் ஆடும் ராட்டினத் தொட்டில்போல லேசாக இருந்த வயோதிக மனத்தில் பாரமேறிக் கனத்தது. கண்ணுக்கெட்டாத கண்ணீர் அவளுக்குள் தெப்பம் கட்டிக் கிடந்தது. அதற்குள் இறங்கி நின்றிருந்தாள். அவளையும் அறியாது அவ்வப்போது அங்கே சில பசித்த மீன்களும் சலனமின்றி நீந்தித் திரிந்தன. தொப்புள்குழியைப் புண்ணென்று கடிப்பதும் ஏமாறுவதுமாய் தொடர்ந்து துன்புறுத்திக் கொண்டிருந்தன சில.

பிறப்பு இறப்பு துக்கம் சந்தோஷம் சோறு மலம் சடங்கு சாத்திரம் பொழுது விழுவது எழுவது எல்லாம் பழசாகிப் போயிருந்தன இதுகாறும் பூமியில் அவள் வாழ்ந்த பெருவாழ்வில்.

கோபம் தாபம் வருத்தம் வன்மம் எல்லாம் மக்கி மழுங்கிவிட்டன. பாசம் மட்டும் கிள்ளக் கிள்ளத் தளிரடித்து வளர்கிறது. அதுவும் வாடிக் கருகிவிட்டால் உயிர் தரித்த மோட்சம்தான். விடியும்போதெல்லாம் விவரிக்க ஏலாத ஏதோ உற்சாகம் ஊறிப் பெருகுகிறது. 'நல்லது, நான் மரிப்பதற்கு ஒரு நாள் கிடைத்துவிட்டது' என படைத்தவனுக்கு நன்றி செலுத்துகிறாள். நாட்கள்தான் தவறாது இறந்து சொர்க்கத்துக்கோ நரகத்துக்கோ போய்ச் சேருகின்றன.

பேரன் சந்தனப்பாண்டி புத்தி பிசகி வீடு வந்து சேர்ந்த நாள் நிச்சயம் தீயெரியும் கொப்பரையில் எண்ணெய் கொதிக்கும் நரகத்திற்குத்தான் போயிருக்கும். அதற்கடுத்தடுத்த நாட்களும் அதிலும் பயங்கரமான நரகங்களுக்குத்தான் போய்க்கொண்டிருக்கின்றன.

நீட்டிப் பின்னியிருந்த கால்களைப் பிரித்து ஒரு தரம் கரண்டை வரை நீவிவிட்டுக் கொண்டாள். குயில்குஞ்சு கத்திக் கதறுவதை நிறுத்துவதாயில்லை. சிறிய கல்லெடுத்து மேலே விட்டால் விலகியோடிவிடும். விலகியோடோடித்தான் அது எங்கே போய்விடும், இன்னொரு மரத்தை விடுத்து? கத்திக் கத்தி தன் சமாதானத்தை அழைக்கிறதோ என்னவோ! கைக்கெட்டாமல் எங்கோ இருக்கும் அதன் வாயைப் பொத்தி சாந்தப்படுத்த முடியாது. உடலெங்கும் அலகுகள் கொத்திக் கிழித்த காயங்கள் எரிச்சலைத் தருகிறதோ என்னவோ! அதன் வலியை யார் வாங்கிக் கொள்ள முடியும்?

பாட்டி எழுந்து புடவையை உதறினாள். தரையில் உவர்மண் பரப்பில் கைவிரல்கள் விளாவிய கோடுகள் குழம்பிக் கிடந்தன. சில தப்படிகள் தள்ளாடி நடந்து குருசடியை அடைந்து முழந்தாழிட்டு, சேலையைத் தலையில் போர்த்திக்கொண்டு கைகளைக் குவித்து குறும் ஜெபம் புரிந்தாள். பட்ட மரத்தில் நின்றவாகில் கயிறுகளால் கட்டப் பட்டு, சரீரமெங்கும் சரமாரியாக அம்புகள் தைத்திருக்க வியாகுலத் தோடு நின்றிருந்த புனிதரின் இரண்டடி உயர விக்ரகத்தை ஆழ்ந்து பார்த்தாள். எழுகையில் காலடியிலிருந்து கொஞ்சம் மண்ணள்ளித் தெள்ளி சிட்டிகையளவு வாயிலிட்டுக் கொண்டாள். புதுமை மண். கணவர், மகள் கல்லறைகளைத் தாண்டி நடந்தாள். உப்பில்லாத குருத்து மண் தொண்டை யில் கரைந்து இறங்கியது. கல்லறைத் தோட்டத்தை கடந்தபோது இடதுபுறத்தில் ஆளுயரத்தில் நின்றிருந்த உருவம் கலவரப்படுத்தியது. கோடானுகோடி வருஷங்கள் வளர்ந்த தாடி மீசையுடன் ஆதி மனிதனின் சாயலில் இருந்தது கங்குல்மங்கல் வெளிச்சத்தில் பனை விடலி.

பெருமூச்செறிந்தாள். நடக்கலானாள். சற்று தூரம் தொலைந்தபின் திரும்பிப் பார்க்க நினைத்தாள். தயக்கமாயிருந்தது. சூசைமணியைப் போல் ''சீத்தா பாத்தா கூத்துரு கூத்துரு'' என தோளில் தலை குலுங்க பெருங்குரலெடுத்து அந்த விடலி துரத்தி வருமோவென்று சந்தேகித்தாள். எத்தனை ஆண்டுகள்! எத்தனை தலைமுறைகள்! ஜவ்வாது வாசனை வந்து மேவியது. ஏதோ ஆழத்திலிருந்து பட்டணம் பொடியின் கந்தம் நாசியைத் தாக்கியது. வில்லு வண்டி ஓடும் சப்தம் 'ஜல் ஜல் ஜல்' என மேலோங் கியது. இரும்புப்பட்டை வளைத்த சக்கரங்கள் பாதை மணலை அரைத்து மாவாக்கும் ஒலி. இரண்டு செவிப்பறைகளும் ஒருசேரக் கிழிந்ததுபோல சப்தங்கள் மறைந்தன.

சூசைமணி சிறுவனாக இருந்தபோது அவனது அம்மா உயிரோடு இல்லை. சித்திதான் இருந்தாள். கொடுமைக்கார சித்தி. கஞ்சியில் உப்புப் போடமாட்டாள். கடிக்க ஈராங்காயம் தரமாட்டாள். அந்தக் காலத்தில் பள்ளிப் படிப்புக்கெல்லாம் மரியாதை கிடையாது. போக்கத்தவனுக்கு போலீஸ் வேலை, வாக்கத்தவனுக்கு வாத்தியார் வேலை என முக்கிய மான உத்தியோகங்களே மிகப் பரிகசிக்கப்பட்ட காலமது. திண்ணைப் பள்ளிக்கூடங்கள் ஆங்காங்கே இருந்தன. பண்ணைப்புதூரிலும் காரை வீட்டுக்காரர் மாட்டுத் தொழுவம் பக்கத்தில் ஒட்டுத்திண்ணையில் ஒன்று இருந்தது. சூசைமணி கொஞ்ச நாள் அங்கு போய் பார்த்தான். உபாத்தி யாரின் தொல்லை தாங்க முடியவில்லை. பக்கத்தில் தட்டான்குளத்தில் மாசிலாமணி ஆசான் சிலம்பம் குஸ்தி பஸ்தியெல்லாம் சொல்லிக் கொடுத்தார். அங்கு போய்ச் சேரத்தான் உடலுக்கும் மனசுக்கும் ரொம்ப இணக்கம். சித்தி விடவில்லை. வேலைக்குப் போ போ என்று நச்சரித் தாள். யாரும் சேர்த்துக் கொள்வதாயில்லை. அப்படியே பாடுபட்டு வந்து வீட்டில் குவித்தாலும், சுவையாக வயிறார ஒருவேளை சுடுசோறு

கிடைத்துவிடும் என்பதற்கு உத்திரவாதமுமில்லை. சூசைமணிக்கு பொசமுட்டிக் கொண்டு வந்தது. ஊரை விட்டு ஓடிப் போகத் திட்டம் தீட்டிக் காத்திருந்தான். ரங்கூன், பம்பாய், கொழும்பு அல்லது பினாங்கு இங்கு எங்காவது போய் நிம்மதியாய் இருக்கத்தான் எண்ணம். பயணச் செலவுக்கு யாரிடம் பணம் கேட்பது? கேட்டாலும் பதினைந்து வயதுச் சிறுவனுக்கு யார்தான் கடன் தருவார்? ஒருநாள் விடிவு பிறந்தது. ஊர் கோவில் உண்டியல் உடைபட்டுக் கிடந்தது. ஊரைவிட்டு இரவோடு இரவாக ஓடிப்போய்விட்டான் சூசைமணி.

விஷயம் வெளித்தெரிந்ததும் மக்களில் ஊமைகளைத் தவிர மற்றெல்லோரும் வாய் நோக சபித்தார்கள். 'நின்று கேட்டால்தான் தெய்வம், அல்லது அது மண் கல்' என சூளுரைத்தாள் சித்தி.

பத்து வருடங்கள் உருண்டோடிய நிலையில் பண்ணைப்புதூர் ஊருக்குள் நுழைந்து புழுதி கிளப்பியது ஒரு மோரீஸ் மைனர் கார். பச்சை மண் சுவரெழுப்பி பனை ஓலையைக் கூரையாய் வேய்ந்த வீட்டின் முன் வந்து நிற்கிறது. வாசலில் அமர்ந்து ஈர்வலியை தலைமுடியில் நுழைத்து இழுத்து 'நெரிச் நெரிச்' சென்று பேன் குத்திக்கொண்டிருந்த சித்தி எழுந்து வீட்டுக்குள் ஓடிப் பம்முகிறாள். காடுகரைகளுக்கு வேலைசோலிகளுக்கு போனதுகள் போக ஊரின் மொத்த உருப்படிகளும் ஆர்வமாக வந்து காரைச் சூழ்ந்து நிற்கின்றன. காரின் கதவைத் தள்ளித் திறந்தபடி இறங்கு கிறார் ஒருவர் மென்னகையோடு. 'விண்ணுலகிலிருந்து தேவமைந்தன் இறங்கி வருகிறார்' என அந்தக் காட்சி சத்தமின்றிப் பாடுகிறது. எல்லோ ராலும் பொருள் புரிந்து கொள்ளப்படுகிறது; அடையாளம்தான் தெரிய வில்லை.

அவருக்கு அடையாளம் தெரிகிறது எல்லோரையும். சிறுவர்கள் வளர்ந்திருக்கிறார்கள். கன்னியர்களைக் காணவில்லை. பெரியவர்கள் சுருங்கியிருக்கிறார்கள்.

வெள்ளை வெளேரென குர்தா ஜிப்பா, கழுத்தில் ஜரிகை பட்டைகள் மின்னும் நேரியல், காலில் கல்தான் ஜீத்தா, சட்டை பட்டனிலிருந்து பைக்கு வளைந்தோடும் தங்கச் சங்கிலி. மீசையில்லை தாடியில்லை. சந்தனக்கட்டியை சிராய்த்து செய்த முகம். ராஜகளை தாண்டவமாடுகிறது ஒவ்வொரு அசைவிலும்.

யாருக்கும் லேவை தெரியவில்லை. பாதியாக மடிந்துபோன சடையங்குளத்தா பாட்டி ஒரு கையால் கைத்தடியை ஊன்றியபடி மறுகையை புருவமேட்டில் வைத்துப் பார்க்கிறாள். ஊரை விட்டு சூசை ஓடிப் போயிருந்தாலும் அவரது கூரான நாசியின் வலதோரத்தில் பிறப் போடு வந்த மரு ஓடிப்போகவில்லை. அவரைப் போலவே அதுவும் செழிப்பாய் வளர்ந்திருந்தது.

ஊருக்கும் தமக்கும் இடையில் வளர்ந்து நிற்கும் அந்நியத்தின் மதில்

திண்மையை உணர்ந்துகொண்ட சூசை நடக்கலானார் கம்பீரமாக. இருதயராசா கோவிலின் வாசலையடைந்து பூட்டியிருந்த தலைவாசல் கதவைத் திறக்கச் சொன்னார். அதற்கும் முன்னே ஜிப்பா பைக்குள் கையைத் திணித்து பத்து ரூபாய் நோட்டுக்களை கையில் அள்ளி வைத்துக் கொண்டார். ''காணிக்கை செலுத்த வேண்டும், கதவைத் திறந்துவிட முடியுமா?'' அவர் கேட்டு முடிப்பதற்குள்ளே கதவு திறக்கப்பட்டு விட்டது. கத்தை கத்தையாக பணத்தை, குறுகலான காணிக்கைப் பெட்டி யின் துவாரத்துக்குள் திணித்து முடித்தார். இப்போது ஊர் மக்களுக்கு, குறிப்பாக பெரியவர்களுக்கு பாதி அடையாளம் பிடிபட்டுவிட்டது.

மோரீஸ் மைனரின் பூலாம்பெட்டி திறந்துகொண்டது. அதற்குள் ளிருந்து இரண்டு ட்ரங்கு பெட்டிகளை இறக்கினார். கொண்டையை முடித்து குல தெய்வமாய் வெளிப்பட்ட சித்தி 'வாய்யா.. எங்களையெல் லாம் அனாதையா விட்டுட்டு எங்கேய்யா போன' என்று மூக்குறிஞ்சி அழுதாள். நார்க்கட்டிலுக்குக்கூட வக்கற்று கயிற்றுக் கட்டிலில் கிடையில் கிடந்த அய்யா கண் கனிய எழுந்து வரவேற்றார். மோரீஸ் மைனர் காரோட்டியிடம் சூசை காதோரம் குனிந்து ஏதோ சொல்ல அது இரைச்ச லோடு திரும்பிப் போனது. குபுக் குபுக்கென்று அது புகையைக் கக்கிச் செல்ல கண் கொட்டாதவர்களெல்லாம் ஆழ்ந்து சுவாசித்தார்கள்.

அந்நாளின் அந்தியிலேயே காலிமனையைப் பார்த்து பேரம் பேசி பட்டா முடித்துவிட்டார் சூசை. பெரிய பங்களா எழுப்பத் திட்டம். சித் தாள் வேலையும் கூலியும் உள்ளூர் ஆட்களுக்கு. மத்தியானம் ஒருவேளை சாப்பாடும் உண்டு. கொத்தனார்களும் மேஸ்திரிகளும் வடக்கிலிருந்து வர ஏற்பாடு. ஊருக்கே பெரும் கொண்டாட்டம். கல்லும் சுண்ணாம்பும் சுட்ட செங்கலும் வண்டி வண்டியாக வந்து இறங்கின. ஆனாலும் கலவையில் வலு பத்தாது எனக் கருதி, எக்கச்சக்கமான கோழி முட்டை களும் குடுவை குடுவையாக பதநீரும் கலக்க உத்தேசித்தார் சூசை.

''தனிநபர்கள் பிராத்தனைகளுக்காக தேவாலயத்தின் கதவு திறந்து வைக்கப்பட்ட பட்டப்பகலில் யாரோ நுழைந்து உண்டியலை உடைத் திருக்க அந்நாளில் ஊரைவிட்டு துரதிஷ்டவசமான காலப் பொருத்தத் துடன் வெளியேறிய சூசைமணியை எப்படி நாம் திருடனென்று முத்திரை குத்த முடியும்? தீர விசாரிக்காமல் துப்புத் துலக்க முயற்சிகள் எடுக்காமல் ஆட்டு மந்தைத்தனமாக கற்பனைக்கெட்டிய முடிவை எடுத்தது ஒரு வகையில் நம்முடைய தப்புதான்.'' அம்பலக்காரர் சுருட்டுநுனி கனிய இழுத்து வாங்கிய வக்காலத்தில் புகை வட்டங்களைப் போல் கலைந்து காணாமல் போய்விட்டது பழி. சூசை மீது உறைந்திருந்த களங்கம் அப்பாவையும் சித்தியையும் ஊர்க்கட்டில் இருந்து பத்து வருஷமாக விலக்கி வைத்திருந்தது. இப்போது அது நீங்கிவிட்டது. அம்பலக்காரர் இராயப்பரின் ஒண்ணுவிட்ட மாமனார் உறவு புதுப்பிக்கப்பட்டது. ரொக்கமாக ஒரு பெரிய தொகையை அவர் கையில் திணித்து மாளிகையை

அவரது மேற்பார்வையில் கட்டியெழுப்புமாறு கூறிவிட்டார்.

'சூசை பறட்டைத் தலையும் பசித்த வயிறும் பேச மொழியும் தெரியாமல், வடதேசத்தில் தெருத்தெருவாக கையேந்தித் திரிந்தபோது கிணறு வெட்டும் இடத்தில் கூடையில் கல் சுமக்கும் வேலை கிடைத்தது. கூலி கிடையாது, ஒருவேளை சோறுதான். போதுமென்று சகித்துக் கொண்டு உச்சந்தலை வீங்க அவர் சுமந்தபோது கிணற்றின் பதிநாலாவது நாள் ஆழத்தில் தட்டுப்பட்டது ஒரு தங்கப்பாறை. வெடி வைத்து உடைத்து கட்டி கட்டியாகத்தான் அள்ளினார்கள். சூசைக்கும் அதில் பங்கு கிடைத்தது. போதாதா?'

'தங்கமில்லியாம் வைரமாம். ரங்கூன்ல எங்க தோண்டுனா லும் மண்ணுக்குள் வைரக்கல்லு கெடைக்குமாம். சூசை மணிக்கு ரங்கூன்ல சவத்துக்கு குழி வெட்டுற வேலையாம். கேக்கவா செய்யணும்?'

'கந்தல் நூலாகிப் போன சூசையின் கோலத்தை வீதியில் பார்த்துவிட்டு விக்டோரியா மகாராணிக்கு சொந்தக்காரியான ஒரு வெள்ளைக்காரி இரக்கப்பட்டு குதிரை வண்டியை நிறுத்தி இறங்கி 'வா... என் வீட்டில எதாவது வேலை செய். எனக்கு கொஞ்சம் உதவியாய் இரு. உனக்குச் சம்பளமும் சாப்பாடும் தருகிறேன்' என்றாள். சூசையும் மறுக்காமல் அவளோடு சென்றார். பத்து வருடம் அவளுக்கு சேவகம் செய்தார். வெள்ளைக்காரிக்கு சொந்தபந்தங்கள் யாரும் பக்கத்தில் இல்லை. வயசும் எக்கச்சக்கம். ஒருநாள் அதிகாலையில் படுக்கையில் கண்விழித்தவள் மூச்சுத் திணறினாள். சூசையை அழைத்து பேனா பேப்பர் வேண்டி கையெழுத்து போட்டுக் கொடுத்துவிட்டு கண்ணை மூடிவிட்டாள். சொத்தெல்லாம் சூசை பேருக்கு மாறிவிட்டது. வேறென்ன வேண்டும்?'

ஆளுக்கொரு கதை பேசிக்கொண்டார்கள். புதுப் புதுத் திருப்பங் களோடும் தர்க்கநியதிகளை மீறாமலும் கதைகள் உலவித்திரிந்தன.

சூசை புறப்பட்டுவிட்டார், மூன்று நான்கு மாதத்தில் திரும்பி வருவதாய். போகிற போக்கில் ''பொண்ணு ஒண்ணு பாருங்களேன் கல்யாணத்துக்கு'' என்று அழுத்தமில்லாமல் சொன்னார். ''பொண்ணா இல்ல, பாத்துட்டா போச்சி!'' இராயப்பர் பொறுப்பை எடுத்துத் தோளில் போட்டுக்கொண்டார்.

கடந்தைக்கு சக்கரங்கள் பூட்டியது மாதிரி கார் சூசையை ஏற்றிக் கொண்டு 'புர்புர்புர்'ரென்று கிளம்பியது.

சூசை கிளம்பும்முன் கார் கதவைத் தொடாமல் பவ்யமாக குனிந்து அம்பலக்காரர் கிசுகிசுப்பான குரலில் கேட்டார். ''மாப்பிள்ளை எந்த ஊரு வாசம், என்ன வருமானம், எவ்வளவு சொத்திருப்புன்னு பொண்ணு வீட்டுக்காரனுவ கேட்டா நான் என்ன பதில் சொல்லணும்?''

''பக்கத்து தேசம்தான். பரம்பரைக்கும் இருந்து சாப்பிட வக்கிருக்கு

துன்னு சொல்லுங்க'' சூசை கூறி சிரித்து முடிக்கும் முன்னே சக்கரங்கள் உருளத் தொடங்கிவிட்டன.

அம்பலக்காரர் இராயப்பரின் கண்ணியம் உரசிப்பார்க்கத் தேவையில்லாத பொன். சூசை வீட்டை தன் வீட்டைப்போல் வளர்த்தார். சலிக்காமல் மேற்பார்வை செய்தார். கோட்டை போன்று வடிவமும் கம்பீரமுமாய் ஏழு தலைமுறை பல்கிப் பெருகி வாழ வசதியோடும் வீடு பூர்த்தியடைந்தது.

சூசை மறுமுறை வந்தபோது வீடு பால் காய்ச்சி கிரகப்பிரவேசம் ஜோராக நடந்தது. கீரைக் கோனார் பண்ணையிலிருந்து கொப்பரை கொப்பரையாக பால் வந்தது. மூட்டை மூட்டையாய் தேங்காய்ப் பூ துருவிப் போட்டார்கள். அண்டை ஊர்களிலிருந்து ஏழை எளியதுகள் பந்தியமர்ந்து விட்டு, பழங்களும் செம்பு நிறையப் பாலும் வாங்கிச் சென்றனர்.

அப்பாவும் சித்தியும் புது வீட்டுக்கு வர பயந்தனர். ''எங்க காலத்துக்கு இந்த சின்ன குடிசையே போதும்ப்பா. பளிங்கு தரையை மிதிக்கவே மனக்கிலேசமா இருக்கு'' என கையெடுத்து கும்பிடு சாற்றிவிட்டனர். வருத்தமென்று எதுவுமில்லை. அதையும் தாண்டி பாசம் அன்பு நன்றி என ஏதொன்றும் மேலிட்டு சூசை அவர்களை வற்புறுத்தவுமில்லை.

சூசைமணிக்காக உள்ளூரிலேயே பெண்களுக்கிடையே நான் நீ என்று ஏகப்பட்ட போட்டி. கொஞ்சம் விளையாட்டும் உண்டு. ஆனால் மாட்டிக் கொள்ளவில்லை.

★

**மூ**ச்சு ஒலி கேட்டது. சுற்றிலும் நிச்சலனம். விநோதமான மௌனம். தரையிலிருந்து முளைத்து வளர்ந்து பருவமடைந்த ஒரு தாவரமாகத் தன்னை உணர்ந்தான். சூரியனை வடிகட்டிய வெளிச்சம் செங்குத்தாக இறங்கியிருந்தது. யாவற்றையும் கண்களால் காண முடிந்தது. எனினும் எல்லாம் ஸ்தம்பித்திருந்தது. நிலத்தடியில் ஊடுருவி நுழைந்திருக்கும் வேர்களின் நுனியில் மேலும் ஆழத்துக்குச் செல்லும் குறுகுறுப்பு நெளிய, புதைந்து போய்விடுவாய் என உயிர் எச்சரித்தது. வேர்களை மண்ணுக்குள்ளிருந்து பிடுங்கிக்கொள்ள இழுத்தான். வர மறுத்தது. பயத்தில் சிறு தாவரம் இலைகளோடும் தண்டுகளோடும் வாடித் துவண்டது. புவி ஜடமாகி காலமூர்ச்சை.

மயக்கமும் தளர்ச்சியும் புலன்களைக் குருடாக்கி இருளுக்குள் புதைத்தது. இருப்பிலிருந்து இருத்தல் பிரக்ஞை இன்மையின் எல்லைக் கோடுகளுக்குள் அடித்துச் செல்லப்பட்டது.

கண்ணாடி வளையல்களின் 'க்ளீங் க்ளீங்' சிணுங்கல் ஒலி மட்டும்

சன்னமாக எங்கிருந்தோ அழைப்பது விட்டு விட்டு கேட்டது. புலன்கள் வியப்படைந்தன. மயக்கமுற்ற கோழிக்குஞ்சை வெண்கலக் கும்பா ஒலி மெல்ல மெல்லத் தெளிவடையச் செய்வதுபோல கண்ணாடி வளையல்களின் சிணுங்கல் உணர்தளங்களுக்கு கவனங்களைத் திருப்பி இழுத்து வந்தது.

இறுக்கம் தளர்ந்து மூச்சிழுத்து சுவாசிப்பதுபோல் நெடிதுயர்ந்த மரங்களின் பசுஞ்சிகை நெகிழ்ந்தாடியது. அடர்ந்து மடிந்து அலையலையாக் கிடந்த புற்புதர்களுக்குள் சலனங்கள் ஊர்ந்து செல்லத் தொடங்கின. தேங்கிய நீருக்குள் தவளைபோல் 'தப்'பென்று ஏதோ குதித்தது. வனமோ காடோ... மரங்கள் அடர்ந்த நிழற்செறிவுடன் உறக்கம் கலைந்து விழிக்கும் தோரணையில் சுற்றுச் சூழல் வேகமாக மாறியது. முதலையின் முதுகுச் சொரசொரப்புடனிருந்த மரவேரில் கையூன்றி எழுந்து நின்றான்.

பருத்துத் திரண்ட கரும்பட்டைகள் அடர்ந்த மரத்தின் தொப்புள் துவாரத்தின் விளிம்பில் ஒரு குருவி. அவனைப் பார்த்தது. தலையை இங்குமங்கும் திருப்பி வாயைப் பிளந்தது. கண்ணாடி வளையல் சத்தம் இனிமையாக ஒலித்தது. மனசுக்கு இதமாக, கேட்கச் சுகமாக அவ்வொலியின் மீது மாளாக் காதலைத் தூண்டியது. குழந்தைகள் செய்யும் காகிதக் கப்பல் அளவில் வெள்ளை நிறத்தில் உடலும் நெருப்பு நீலச் சிறகுகளும் சிறிய வாலும் பூவரச மொட்டுத் தலையும் முள் கூர்மையில் பளபளக்கும் கருஅலகுமாக கவிதைப் பொறியாக ஈர்த்துப் பரவசமூட்டியது.

'வளையலோசைக் குருவி' என்று அதற்கொரு பெயர் சூட்டினான். இரண்டடி முன்னே சென்று குருவியை புதுப்பெயர் கூறிக் கூவி அழைத்தான். மர இலைகளை உலுக்கி கரவொலி போல் ஆர்ப்பரித்து காற்று வரவேற்றது. வனத்தின் நாற்புறங்களிலும் தலையைத் திருப்பிப் பார்த்தான். உற்சாகமும் சந்தோஷமும் பொங்கியது. எல்லாம் தன் கட்டுப்பாட்டுக்குள்ளிருப்பதாக நம்பிக்கையும் பெருமிதமும் உண்டானது. எல்லாம் இந்த வளையலோசைக் குருவி தந்தது. சிறகு முளைத்த சின்னக் கடவுளாகவே அதைத் தொழுது, பனித்த தன் கண்கள் மூடி கைகளைக் குவித்து முகத்துக்குயர்த்தி வணங்கினான். குருவி அலகைத் திறந்து மூடியது. மடங்கியிருந்த நரம்புகளெல்லாம் நிமிர்ந்து சிலிர்த்தன. வளையலோசைக் குருவி அவனுக்கு மிக சிநேகமான உயிரும் உறவுமாக மாறிவிட்டது. அதைப் பிரிவது வலி நிறைந்ததாக இருக்கும். அது குறித்து கற்பனை செய்யும்போது குருவியின் சிறிய சிறகுகள்தான் இரக்கமற்ற கொடூரமான ஆயுதமாக மிரட்டியது. ஆயினும் அதன் அழகும் குரலும் துடிக்கும் ஒவ்வொரு கணத்தையும் ஆனந்தக் கிறக்கத்தில் திளைக்க வைத்தது. பசி தாகத்தை பாதை குழம்பித் தொலைந்துபோக விட்டது.

ஒளியின் இழைகள் பலவீனமடைந்து புதர்களுக்கிடையில் பொழியும் பனிபோல் இருள் விழுந்து மண்டுவதை கவனித்ததும் கவலை பிடித்துக் கொண்டது. வளையலோசைக் குருவியை இரவு

அழைத்துச் சென்று விடுமோ என்று பயந்தான். இரவிடமிருந்து குருவியைக் கவர்வதற்கான வழிகளை யோசித்தான். இந்த ராப்பொழுதைக் குருவியோடு கழிப்பதென்று முடிவெடுத்தான்.

குருவியை நோக்கி பதி வைத்து பதி வைத்து நடந்தான். இன்னும் சில முழம் தூரத்தில் குருவி மரப்பொந்திலேயே அமர்ந்திருந்தது. அஞ்சிப் பழக்கமில்லைபோலும். இரண்டடி இடைவெளிதான் இருந்தது. லாகவமாக ஒரு தாவு தாவினால் குருவியைப் பிடித்துக் கொள்ளலாம். ஆனாலும் ஏனோ மனம் ஒப்பவில்லை. வன்முறையாகப் பட்டது. வலது கையை முன்னோக்கி நீட்டினான். துள்ளி வந்து மணிக்கட்டில் அமருமாறு கண்களால் அழைத்தான். குருவி அலகைத் திறந்து கூவியது. நீட்டியிருந்த கையில் கண்ணாடி வளையல்கள் குலுங்கி ஒலியெழுப்ப உடல் சிலிர்த்தது. இன்னும் சற்று அருகே நகர்ந்து ''வா... வா'' என்று மெல்லிய குரலில் கெஞ்சினான். அசுரவேகத்தில் வளர்ந்தெழுந்த மரக்கன்று இலைகளற்ற தன் சூளிக்கிளையை தன்னை நோக்கி நீட்டுவதுவரை வேடிக்கை பார்த்திருந்த அச்சிறு குருவி, அதன் அபஸ்வர முனகலைக் கேட்டதும் திடுக்கிட்டு எழுந்து பறந்தது. அவன் அகவெளியில் பல வண்ணங்களில் சுடர்ந்து எழுந்தோங்கி வளைந்து நின்ற வானவில் உடைந்தது. உதடுகள் குளிரில் நடுங்கினாற்போல் குருவி குருவி குருவியென்று நிறுத்த முடியாமல் உளறத் தொடங்கின. விளையாட்டு முடிந்து விடவில்லை; புறப்படு; ஓடி வா; விளையாடிக்கொண்டே போகலாம் என்பதாக பறவை இன்னொரு மரத்தின் அடிக்கிளையில் அமர்ந்தது.

அலாதிப் பிரியத்தோடு வளையலோசைக் குருவியை பின்தொடரலானான். அது மரம் விட்டு மரம் தாவிக்கொண்டே போனது. அவனைச் சுண்டியிழுக்கும் கண்ணாடிக் கொடிகளில் மறக்காமல் ஓசையை வழிக்குறிப்புப்போல் சிந்தியது. மண்ணின் கனவுபோல் வளர்ந்து அடர்ந்து நின்ற மரங்களுக்கிடையில் நெளிந்தும் நுழைந்தும் குனிந்தும் குறுஞ்செடிகள் மேல் குதித்துத் தாவியும் நடந்தும் ஓடியும் தொடர்ந்தான்.

சூரியன் உறைக்குள் செருகப்பட்டுவிட்டது. அங்கே சிதறிக் கிடந்த கொஞ்ச வெளிச்சத்தையும் விறகுச் சுள்ளிகளாக அந்தி குனிந்து அவசரமாகப் பொறுக்கியது. கைரேகை மங்கும் தறுவாயில் குருவி பறந்தெழுந்து இன்னொரு மரத்தில் அமர்ந்து, தலையைச் சுழற்றிக் கால் வட்டமடித்தது. பொறுமையிழந்தவன் ஒரு கணம் கடுமையான எரிச்சலடைந்தான். காலில் மிதிபட்ட ஏதோ ஒன்றைக் குனிந்து கையிலெடுத்தான். கண்ணருகே கொண்டுவந்து பார்த்தான். மஞ்சள் ஸ்படிகம் போல் மாவுருண்டை அளவில் சீனிக்கல். குருவியைப் பார்த்தான். கல்லை விடச் சிறிய நிழலுருவில் 'க்ளீங் க்ளீங்' என்றது.

ஏமாற்றமும் தோல்வியும் களைப்பும் சேர்ந்து ஓநாயின் உறுமலாக அவனுக்குள் திரண்டெழுந்தது. வெறி முற்றிய மிருகத்தின் ஒளி கண்களில் மின்னியது. கீழுதட்டைக் கடித்துக்கொண்டு குருவியை நோக்கிக் குறி

பார்த்து ஆத்திரத்தோடு கல்லை எறிந்தான். கையை விட்டுப் பிரிந்ததுமே சீலிக்கல் மடிந்திருந்த தன் சிறகுகளை அந்தரத்தில் விரித்தது. பச்சை நிறத்துக்கு மாறியது. இன்னும் உயரே எழுந்தது. அவன் ஊகிக்காத திசையில் 'க்கீ க்கீ' என்று ஒலி எழுப்பியபடி பறந்து போனது.

புதர்களுக்குள் நுழைந்து ஆத்திரத்தில் விரல்கள் இன்னும் கற்களுக்காக தத்தளித்தலைந்தன. சோர்வு குப்புறப் பிடித்துத் தள்ளியது. அந்தரத்தில் பறவையாக மாறிய சீலிக்கல்லோடு தன் பலமெல்லாம் பறந்து போய்விட்டதாக உணர்ந்தான். பலவீனமான முனுமுனுப்போடு தரையில் சாய்ந்தான்.

இந்த ஓடுகாலிக் குருவியை சும்மா விட மாட்டேன். வாயைக் கிழித்து வளையல்களையெல்லாம் தோண்டி எடுத்து விடுவேன். அடிச்சி ஒரு மழை பெஞ்சா நனைஞ்சி கொழுந்து மங்கட்டை மண்ணாய் கரைஞ்சு போற சைஸில இருந்துகிட்டு, எத்தனை தினுசு தினுசா ஏளனம் பண்ணுது? தூங்கக் கூடாது. தூங்கிறவே கூடாது. தூக்கிட்டுப் போயிருவாங்க.'

கண்களை லேசாக சிரமத்தோடு திறந்து இமைகளின் கோடு பிரிந்த இடைவெளியின் ஊடாகப் பார்த்தான். இருள் மண்டி அழுத்திக் கொண்டிருந்தது. விளக்கு பூஜைக்கு வரிசையாக மின்மினிகள் சென்று கொண்டிருந்தன. அருகில் எங்கோ கோவில் இருப்பதாக உணர்வுக்குப் பட்டது.

★

மதிய வெயில் முழு உக்ரத்தோடு மண்ணைக் கரித்துச் சூடாக்கியது. தெருவில் ஆளரவமில்லை. வெள்ளாடுகள் உடைமர நிழல்களில் படுத்து அசை போட்டுக்கொண்டிருந்தன. பெலிக்ஸ் பெரியம்மாவின் மூத்த மகள் செல்வமும் கணவரும் மகள் சில்வியாவோடு வந்துகொண்டிருந்தனர். வெயில் பொறுக்க மாட்டாமல் கைக்குட்டையை தலையில் விரித்திருந்தனர். செல்வத்தின் முகத்தில் அருள் இல்லை. திறந்திருந்த வீட்டு வாசல்களில் தெரிந்த முகங்களைத் தேடியபடி நடந்து கொண்டிருந்தாள். யாராவது தென்பட்டிருந்தால் 'என்ன சொகமா இருக்கியா... வீட்டுல எல்லாரும் சுகம்தானே... பிள்ளையெல்லாம் எப்படியிருக்கு... சின்னம்மா வீட்டுக்கு வந்தேன்... தம்பிய பாக்க வந்தியோ...' என சிறு சிறு உரையாடல்கள் நடந்திருக்கும். அதற்கேதும் வாய்ப்பில்லாமலே சின்னய்யா வீடு வந்துவிட்டது. மனம் சுமறும் இறுக்கம் கூடியது.

புறவாசல் பக்கத்தைப் போலவே முன்புறமும் வளவு கட்டப்பட்டிருந்தது. பழைய காரை வீடு. தெற்குப் பார்த்த வாசல். வளவு வாசல் கிழக்குப் பார்த்திருந்தது. வளவுக்குள் நுழையும்வரை வீட்டுக்குள் நடப்பது ஒன்றும் வெளியே தெரியாது. நிழலுக்கு நான்கு வேம்புகள் முற்றத்தில் வரிசையாக நின்றன.

மண்சட்டியில் கோழிகளுக்கு தவிடு கலந்துகொண்டிருந்தாள் பரிமளம். நோயில் படுத்து எழுந்தவள்போல் மெலிந்து போயிருந்தாள். மனக்கவலை அரித்துத் தின்றதற்கு சான்றுகள் தோன்றியிருந்தன தோற்றத்தில்.

''தம்பிக்கி எப்படி இருக்கு சித்தி?''

குரல் கேட்டுத் திரும்பினாள். வரவேற்றாள். தவிடு ஒட்டியிருந்த கைகளை அலம்பி புடவை நுனியில் துடைத்துக்கொண்டு அருகே வந்தாள். செல்வத்தின் கணவரை 'வாங்க' என்று மரியாதை நிமித்தம் தனியாக வரவேற்றாள். சில்வியா புது இடத்தையும் பரிமளத்தையும் மாறி மாறிப் பார்த்தாள். செல்வத்தின் கண்களில் நீர் கோர்த்தது. பேச்சு எழவில்லை. ஆனாலும் பேசியாக வேண்டியிருந்தது. ''தம்பிய இப்ப எங்க வச்சுருக்கீங்க?'' குரல் உடைந்தது. கண்ணைத் துடைத்துக்கொண்டு திண்ணையில் அமர்ந்தாள். ''கோயில்ல வச்சுப் பாத்தும் சரியாவலியோ'' செல்வத்தின் கணவர் அவர் பங்குக்கு கேட்டு வைத்தார். செம்பு நிறையத் தந்த தண்ணீரை வாங்கி கணவனிடம் நீட்டினாள். முகத்தில் தண்ணீரடித்து வழித்துவிட்டு இரண்டு மடக்கு குடித்துவிட்டு செம்பை திருப்பித் தந்தார்.

சிரிக்கும் கன்னங்கள், சிவக்கும் அதரங்கள், பறக்கும் பார்வைகள், மிதக்கும் கண்களுமாக பட்டாம்பூச்சிபோல் சில்வியா பரிமளத்தின் உள்ளத்தில் திரிந்தாள். குழந்தையை அருகே அழைத்து தலையை வாஞ்சையோடு வருடித் தந்து லேசாக சிரித்தாள் பரிமளம்.

விஷயம் கேள்விப்பட்டு நாளாகிவிட்டது. கணவருக்கு மணப்பாட்டில் கடலில் வேலை. பதினைந்து நாட்களுக்கு ஒருமுறைதான் லீவு கிடைக்கும்.

''வீட்டுக்குள்ள வாங்க...''

சித்தியின் செயல்களிலும் பேச்சிலும் அடியோட்டமாயிருந்த நிதானம் செல்வத்துக்கு ஆறுதலாய் இருந்தது. மதியஉணவு சமைக்க தனக்கு உதவும்படி செல்வத்தை வேண்டிக் கொண்டாள். மேல்சட்டையைக் கழற்றி கொடியில் தொங்கவிட்டுவிட்டு வேஷ்டியும் முண்டா பனியனுமாக செல்வத்தின் கணவர் சோகத்துடன் படுக்க திண்ணையைத் தேர்ந்துகொண்டார்.

சில்வியா வீட்டு அறைகளை தயக்கத்தோடு சுற்றிப் பார்த்துவிட்டு கோழிகளோடு விளையாட முற்றத்துக்குப் போய்விட்டாள்.

சமையல் வேலைகளுக்கிடையில் செல்வம் எழுப்பிய எல்லாக் கேள்விகளிலும் பாசத் தீவிரம் தெரிந்தது. பரிமளம் தனது ஒவ்வொரு பதிலிலும் அதை மட்டுப்படுத்தினாள். மண்சட்டிகள், அலுமினியப் பானைகள், அரிசி, பருப்பு, முருங்கைக்காய், எண்ணெய், கடுகு, அப்பளமென பொருட்களைப் பரிமாறியபடி அடுக்களைக்குள் அவர்கள்

பேச்சு ஒரு ராக கதியோடு நடந்தது.

செல்வம் ஊருக்குப் புறப்படும் ஏற்பாட்டிற்கு மனத்தளவில் ஆயத்தமாகிவிட்டிருந்தாள். 'இன்னைக்கி தங்கிவிட்டு காலையில் போகலாமே' என்று பரிமளம் ஒரு பேச்சுக்கு சொன்னாலும் நிஜமாகவே வற்புறுத்தினாலும் தங்க ஏலாத நிலை. மூத்தவன் பள்ளிவிட்டு திரும்பு வதற்குள் போய் சேர வேண்டும் என்றாள். தம்பி பற்றிய விசாரிப்புக் களுக்கு அரைகுறை மனசோடு சித்தி சொன்ன மழுப்பல் பதில்களி லிருந்து எங்காவது கோவிலில், மருத்துவமனையில் வைத்திருக்கலாம், அப்பா அல்லது பாட்டி அவனோடு கவனிப்பிற்கு இருக்கலாம் எனத் தனக்குள்ளே தீர்மானித்துக் கொண்டாள். செல்வத்தின் கணவர் கடலுக்குப் போய்வந்த களைப்பு தீராத குறையை மதிய உணவுக்குப் பின் தூங்கி தீர்த்துக் கொண்டார். ஒரு கடமைக்குத்தான் அவர் வந்திருக்கிறார் என்பதை அவருடைய செய்கைகளும் வெளிப்படுத்தின.

பாண்டி படிப்பை முடிக்கும்முன்னே சொந்தபந்தங்கள் அவரவர் துப்பில் பாண்டிக்கு பெண் பார்க்க முயன்றனர். செல்வம் மணப்பாட்டி லிருந்து டீச்சர் ட்ரெய்னிங் படிக்கும் பெண் துப்பு ஒன்றைக் கொண்டு வந்தாள். பெண்ணிடம் படிப்பும் இருந்தது. அழகும் இருந்தது. வீட்டில் எல்லோருக்கும் பிடித்திருந்தது. பாண்டி ஊருக்கு வரும்போது பேசி முடிவெடுப்பதாகக் கூறி வைத்தனர். பெண் வீட்டிலும் நம்பிக்கையோடு இருந்தனர். ஏனோ பாண்டி ஊருக்கு வருவது தள்ளிப் போனது. அடுத் தடுத்து பரீட்சையாம். அலையமுடியாது என்று சொல்லிவிட்டான். பெண் ணின் புகைப்படத்தை அவனுக்கு அனுப்பித்தந்து அவன் அபிப் பிராயத்தை அறிந்தால் மேற்படி பேச்சுவார்த்தைக்கு போகலாமே என பெண் வீட்டார் கருதினர். செல்வமும் அதே எண்ணத்தை தெரிவித்தாள். புகைப்படத்தை விளக்கத்தோடு அனுப்பி வைத்தனர். அடுத்த வாரமே பெண்ணின் படம் திரும்பி வந்தது. 'பெண்ணைப் பற்றி நான் கருத்து ஒன்றும் சொல்ல விரும்பவில்லை. எனக்காக பெண் தேடும் படலத்தை உடனே நிறுத்துங்கள். இப்போது மணம் முடிக்கும் மனநிலையில் நானில்லை.'

'பிடிச்சிருக்கா பிடிக்கலையானு மட்டும் கேளுங்க. கல்யாணத்தை எப்போ வேணுனாலும் வச்சுக்கலாம். அதுக்குள்ள அந்த பொண்ணுக்கு டீச்சர் வேலை கிடைச்சாலும் கிடைச்சுடும்' என பெண் வீட்டு சார்பாக செல்வமும் அவள் வீட்டுக்காரரும் பேசினார்கள்.

'அவன் விருப்பப்படி விட்டுருவோம். அவனா கேட்கும்போது பாத்துக்கலாம்' எனக் கூறிவிட்டார் சின்னய்யா. இதனால் கூட பாண்டிக்கு மனக்குழப்பம் ஏற்பட்டிருக்கும் என்பது பரிமளத்தின் அனுமானம். பெண் வீட்டார்கள்தான் ஏதோ வஞ்சனை புத்தியோடு தகிடுதித்தம் செய்துவிட்டார்கள் என்ற குற்றச்சாட்டு அவள் அடிமனத்தில் இருக்கிறது. வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. பாண்டி மும்பை போகும்முன்

மணப்பாட்டுக்கு போனான். ஏதோ மனத்தடையோடு பரிமளம் தடுத்தாள். பாண்டி கேட்கவில்லை.

பாட்டியையும் சின்னய்யாவையும்பற்றி விசாரித்தாள் செல்வம்.

காலையில் புறப்பட்டுப்போய் கல்லறைத் தோட்டத்தில் அமரும் பாட்டி மாலைக் கருக்கலில்தான் வீடு திரும்புவதாகவும், வீட்டில் இருக்கவே பிடிக்காமல் விடிந்ததும் வெளியேறிவிடும் அவன் அப்பா பகலெல்லாம் எங்கோ பொழுதைப் போக்கிவிட்டு இரவில் சாராய வாடையோடு வீடு திரும்புவதாகவும் சித்தி சொன்னாள்.

''அப்படினா தம்பிய யார் பாத்துக்கிறாங்க? அவன எங்கே வச்சுருக்கு? அவன் கூட யார் இருக்கா?''

''நான்தான் இருக்கேன்'' என்றாள் அமைதியாக சித்தி. செல்வம் அதிர்ச்சியடைந்தாள். அனிச்சையாக அவள் கண்கள் வீடெங்கும் அலைந்தன.

கோழிக்குஞ்சை விரட்டியபடி பின்வளவுக்குப் போன சில்வியா அலறிக்கொண்டு ஓடி வந்தாள். ''அம்மா... பூச்சாண்டி.... பூச்சாண்டி...''

ஊரும் இனத்தைச் சார்ந்த ஏதோ விலங்கைப்போல் மனித ஒழுங்கெல்லாம் கலைந்த நிலையில் விளிப்பையுணரும் திறனற்ற கதியில் அவனைப் பார்த்ததும் செல்வத்தின் உயிரின் சுருள்வில் திமிறிக் கிளர்ந்து இதயத்தை உடைப்பதுபோல் சத்தமாக அதிர்ந்தது. கண்கள் கலங்கிப் பெருகின. ஒரு படி இறங்கியவள் தோளைப்பற்றி சித்தி எச்சரித்தாள். அவன் அருகிலிருக்கும் பாத்திரங்கள் ஆயுதமாக மாறும் நேரம் எதுவென்று கணிக்க முடியாதென்றாள்.

மதியம் உணவருந்தும்போது பின்வாசலைத் திறந்து கையில் நீர்ச் செம்போடு சித்தி வெளியேறியது ஞாபகத்திற்கு வந்தது. கணவரோடு ஏதோ பேசியபடியிருந்ததால் கவனப்படுத்தவில்லை. இருந்தாலும் அவள் அருமைத் தம்பி புழக்கடையில் கிடப்பான் என்பது அவள் கற்பனைக்கும் எட்டாத ஒன்று.

உடை மரத்தடியில் சாய்ந்து கால்களை நீட்டி கைகளை மடியில் வைத்த வண்ணம் மோன நிலையில் கண்கள் மூடி அமர்ந்திருந்தான் பாண்டி. மதியம் உணவருந்திய எவர்சில்வர் தட்டும் செம்பும் அருகிலிருந்தது. கை கழுவிய தண்ணீர் கொட்டப்படாமல் பாத்திரத்திலே இருந்தது. விளிம்பு பருக்கைகளைக் கவர வந்த கட்டெறும்புகள் சில அதில் செத்து மிதந்து காற்றிலசைந்தன. சோறு தின்பதற்கு மட்டும் ஒரு அறிவும் சரியாய் இருக்கவேண்டுமென்ற அவசியமில்லைபோலும். பின் கதவு நாதாங்கி நெகிழ்ந்த சத்தம் அவனுக்குள் எந்த சலனத்தையும் ஏற்படுத்தவில்லை.

ஒரு மனிதன் பாழ்பட்டுக் கிடக்கும் காட்சியிலிருந்து வெளியேறும்

மரண வசீகரத்தில் சில நிமிடங்கள் கட்டுண்டு நின்ற செல்வத்தின் கணவர் உதடுகளிலிருந்து அனுதாப ஒலிக்குறிகள் தெறித்தன.

சில்வியாவின் குழந்தை முகம் குழப்பத்தில் கசங்கியது. அகலக் கண் விரித்து அச்சத்தோடு பார்த்தாள். அவளால் 'பண்டி மாமா'வை அடையாளங் கண்டுகொள்ள இயலவில்லை.

செல்வத்தின் கண்கள் சூழலை நோட்டமிட்டன. உடை மரம் பெரும் குற்ற உணர்ச்சியோடு நின்றது. எந்நேரத்திலும் தான் வெட்டி எறியப்படலாம் என்ற அவநம்பிக்கையோடு அதன் கிளைகள் துவண்டிருந்தன. அவன் அமர சவுகர்யமாக தரையில் பாயோ போர்வையோ விரிக்கப்படவில்லை. ஒரு சாக்காவது விரித்துத் தரலாமே எனக் கேட்டாள். சாக்கைக் கடித்து நார்நாராகக் கிழிக்கும் சப்தம் நாராசமாய் இருக்குமென்றாள் சித்தி. கால்விலங்கோடு சங்கிலி மரத்தடியில் பிணைத்திருக்க கொல்லைக்கி போகக்கொள்ள என்ன செய்வான் என எழுந்த சந்தேகத்தைக் கேட்கவில்லை; அடக்கிக் கொண்டாள்.

''தம்பீ... தம்பீ...'' என இரண்டு முறை அழைத்தாள். குரல்கள் நுழைய முடியாத ஆழத்துக்குள் அவனிருந்தான். என்ன நினைத்தாளோ சின்னக் குழந்தையாக விம்மி அழத் தொடங்கிவிட்டாள். அம்மா அழுவதைக் கண்ட சில்வியாவின் சிறிய கண்களும் காரணமின்றிச் சேர்ந்து கொண்டன.

செல்வத்தை சமாதானம் செய்ய சித்தி ரொம்ப மெனக்கெட வேண்டியதாயிற்று. இறுதியாக ''நம்மாள ஏன்ட மட்டும் பாடு பாப்போம். குணமடைஞ்சா கடவுள் சித்தம். அவருக்கும் சம்மதமில்லனா சோத்துல எதையாவது கலந்து கொடுத்துர வேண்டியதுதான்'' குரலில் எந்தப் பதற்றமுமின்றிக் கூறினாள் சித்தி. அவள் வார்த்தைகள் குட்டிகளைத் தின்னத் துரத்தும் சர்ப்பங்களாக நெளிந்தோடின. பதிலேதும் கூறாமல் செல்வம் சித்தியின் முகத்தை ஏறிட்டாள். இறந்து பல நாளான ஒரு மனுசியின் கண்களை அங்கே கண்டாள்.

★

**வ**னம் பறவைகளின் இசையில் விழித்தெழுந்து வெகு நேரமாகிவிட்டது. மரங்கள் புத்துணர்ச்சியுடன் ஆடுகின்றன. எண்ணெய்க்குக் குவிந்த உள்ளங்கைபோல் சுருங்கியிருந்த இலைகள் நன்றாகப் படர்ந்திருக்கின்றன. பச்சைத் தீயில் தளிர்கள் மின்னுகின்றன. விழுதுகள் தூண்களாக மண்ணில் இறங்கியிருக்கின்றன. தாயின் முந்தானைச் சீலையெடுத்து தலையில் போர்த்தி விளையாட்டில் ஒளிந்திருக்கும் குழந்தைக்குத் தேவையான வெளிச்சம் வனத்துக்குப் போதுமானதாக இருக்கிறது. வண்டுகளின் ரீங்காரங்கள் கூடி முதிர்வதும் இளகி இளமையடைவதுமாக காற்றலைகள் மிதந்து செல்கின்றன. பகலில் பறப்பதை

பாவமெனக் கருதியோ என்னவோ அமைதியாக உறங்கிக் கொண்டிருக்கின்றன மின்மினிக்கூட்டங்கள்.

உறையிலிருந்து பட்டயம்போல் தன்னை எங்கிருந்தோ உருவினான் பாண்டி. இதயம் சப்திக்கும் குரல் செவிகளின் வழியே வெளியே துள்ளித் துள்ளிக் குதித்தது. சில கணங்கள் சூன்யம் வியாபித்திருந்தது. ஒரு காடு தன்னைச் சுற்றி வளைத்திருப்பதை உணர்ந்ததும் உடல் நடுங்கி உயிர் திடுக்கிட்டது. காட்டின் அனைத்து வாசல்களும் திறந்திருப்பது தெரியவந்ததும் நடுக்கம் சிறுகச் சிறுகத் தணிந்தது. இருளும் வெளிச்சங்களும் சேர்ந்து அழுத்தியிருக்கும் அந்த அடர்ந்த காட்டின் வாசல்கள் திறந்திருந்தாலும் வழித்தடமோ ஒன்றுகூட கண்ணில் தட்டுப்படாதது படபடப்பைக் கூட்டுவதாக இருந்தது. அவை எந்நேரத்திலும் கூண்டுத் தடுப்புகளின் இடைவெளிகளாக மாறிவிடக்கூடும்.

அவன் உதடுகள் இறுகிப் போயிருந்தன. அதைத் திறந்து ஒரு வார்த்தை உச்சரிக்க எத்தனித்தால் அது பாறையைப் பிளப்பதைவிடக் கடினமான காரியமாகியிருந்தது. பெண்டுல கால்வட்டமாகத் தலையை அசைத்து தன்னைத் தானே பார்வையிட்டான். அவயவங்களில் பெரிய மாற்றங்கள் எதுவுமில்லை. நகங்கள் விரல்களை மீறியிருந்தன. உடைகளில் அழுக்கு பட்டை பட்டையாகப் படிந்திருந்தது. குளிக்க வேண்டும் எனத் தோன்றியது. சக்தியைத் திரட்டி உடலைத் தூக்கி நிறுத்த பிரயாசைப் பட்டதில் ஆயாசம் மேலும் பெருகிற்று. இன்னும் நெகிழ்வாக உடலைத் தளர்த்தி சாய்ந்துகொண்டான்.

நினைவின் கடைசி காட்சியில் அவன் சாய்ந்தமர்ந்த தெருக்கம்பம் இப்போது ஒரு பனை மரமாக வளர்ந்து நின்றது. உச்சியிலிருந்து காய்ந்த ஓலை காற்றிலாடி கரகரத்த வண்ணமிருந்தது. அண்ணாந்து அதை நோட்டமிட்டான். பனை மரம் ஓலைக் கத்திகளால் தன் கழுத்தை மெல்ல மெல்ல அறுத்துக்கொண்டிருந்தது. அது மிகவும் பலவீனமான முயற்சியாகப் பட்டதால் அதிர்ச்சியோ அச்சமோ அனுதாபமோ ஏற்படவில்லை.

பறவைகள் அவனுக்குப் பரிச்சயமான குரலில் கூவியும் பேசியும் கிரீச்சிட்டும் அலைந்தன. முதன்முறை கேட்கும்போதே நினைவின் பதிவு எல்லைக்குள் புகுந்து புறப்படும் மந்திரசக்தி அவற்றுக்கிருக்கலாம்.

பேருந்தை கிளம்பச் செய்வதுபோல் அவனை புறப்படச் சொல்லி ஒரு பறவை தூரத்து மரத்திலிருந்து விடாது விசிலடித்துக் கொண்டிருந்த போதுதான் பெரும் சப்தத்துடன் அவன் தலையில் ஏதோ விழுந்தது. சிறிதும் வலியில்லை, அலறிய ஓசையின் அளவுக்கு நேர் மாறாக சின்னக் காயம் கூட தலையிலோ உடலிலோ ஏற்படவில்லை. நிதானம் கலைந்து தெளிந்தபோது பனைமரக் கொண்டையில் ஆடிக்கொண்டிருந்த காவோலை மட்டையோடு பிய்ந்து அவன் மேல் விழுந்ததை அறிந்து கொண்டான். காய்ந்த ஓலையின் நெற்று மடல்கள் துண்டு துண்டாக

உடைந்து சிதறிக் கிடந்தன. மட்டை மூளியாகி கருக்கோடு சற்று தள்ளிக் கிடந்தது. இலக்குப் பட்டைகள் ஒரே நேரத்தில் ஒரே அளவில் ஆயிரக் கணக்கில் முறிந்து சிதறிக் கிடப்பது ஆச்சரியமூட்டியது. அப்போது தரை வழியாக அவ்விடம் வந்த மெல்லிய காற்று முறிந்த இலக்குப் பட்டைகளை ஒவ்வொன்றாய் எடுத்து அடுக்கத் தொடங்கியது. அது ஒரு துறுதுறு குழந்தையின் செயல் போலிருந்ததால் திகைப்பாக மட்டுமே யிருந்தது. வேறொன்றும் நினைக்கத் தோன்றவில்லை. காற்றின் வேலை முடிவடைந்தபோது அவன் முன்னே கட்டுக்கட்டாக ஓலைச் சுவடிகள் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. சிறுபொழுது அதை பிரமிப்புடன் அபூர்வமாகப் பார்த்து பரவசப்பட்டான். அவன் முன்னே நம்பமுடியாத அதிசயம் ஒன்று நிகழ்ந்து முடிந்திருக்கிறது. இதைக் காண வேறு யாரும் வரமாட்டார்களா என ஏங்கி ஏக்கத்தை கண்களால் ஊன்றி ஊன்றிக் காத்திருந்தான். ஒரே ஏமாற்றம்தான் மாறி மாறி எல்லா வாசல்களிலும் வந்து நுழைந்தது.

இலக்குகளை ஆராய்ந்து பார்த்தபோது அதில் ஏதோ எழுதப் பட்டிருப்பது போலிருந்தது. தயக்கத்தோடு ஒரு ஓலை இலக்கை எடுத்து கண்ணருகே கொண்டுவந்து பார்த்தான். அங்கே எழுத்தாணி முனையால் சில வரிகள் உழுது போடப்பட்டிருந்தன. ஒன்றில் மட்டுமல்ல, ஒவ்வொரு இலக்கிலும் எழுதப்பட்டிருந்தது. அது என்ன மொழியென்று சட்டென்று பிடிபடவில்லை. வாசித்துப் பழகிய தாய்மொழியின் சாயலோடுதான் இருந்தது. 'வாழ்க்கை ஒரு முடிவற்ற முத்தம் என்று உணர்ந்த கணம்...' என்பதுவரை வாசிக்க முடிந்தது. எனினும் பொருள் கொள்ள ஏலவில்லை. அரிசியை உமி போர்த்தியிருப்பதுபோல அந்த எழுத்துக்கள் விளைந்திருந்தன. பார்த்துக் கொண்டேயிருந்தான். மஞ்சள் உமித்துகள்களாட பறந்து பறந்து அவை ஒளி கொண்டு மின்மினிகளாகி அவனைச் சுற்றிச் சுற்றி இருளில் ஏதோ கிறுக்கின.

★

**எ**ல்லாத் திக்கிலும் ஒரு வரன் பார்த்து துப்பு வைத்திருந்தார் இராயப்பர். கீழைத் தினையூரணியில் மிக செல்வாக்கோடு வாழ்ந்திருந்த மானா கானா குடும்பத்து பெண்ணை சூசைக்கு ரொம்ப பிடித்துப் போனது. பார்த்த மாத்திரத்திலே கல்யாணத்துக்கு தேதி குறிக்கச் சொல்லி விட்டார். அம்பலக்காரர்தான் சற்று தயங்கினார். ''பவுனு ரொக்கம் பேசிட்டு நாள் குறிக்கலாமே'' என சூசை காதுக்குள் நாக்குழறினார். ''அவுங்க பொண்ணுக்கு செய்ய அவுங்களுக்கு தெரியாதா! நாம ஒண்ணும் கேட்கப்படாது''னுட்டார் சூசை சபையிலேயே சத்தமாக. சம்பந்தம் பேசி முடிந்த சபை களிப்போடு எழுந்துகொண்டது. கல்யாணத்திற்கு சொந்தபந்தங்கள் மட்டுமின்றி ஊர் முழுக்க பாக்கு வைக்கப்பட்டது.

பந்தி விருந்துக்கு அறுத்துச் சமைக்க வள்ளியூர் சந்தையிலிருந்து ஒரு மந்தை வெள்ளாடுகள் வந்தன. தெருவை அடைத்து போட்டிருந்த மணப் பந்தல் நீளம் ஊர் எல்லையைத் தொட்டு நின்றது. இளையமுத்தூர் தங்க ராசு பேண்டு வாத்தியங்கள் போதாதென்று வாகைக்குளம், சிறுவளஞ்சி யிலிருந்தும் மேளவாத்தியங்கள் வரவழைக்கப்பட்டிருந்தன. சமையல் பொருட்களும் மளிகைகளும் வாடகைப் பாத்திரங்களும் வண்டி வண்டி யாக வந்து அம்பாரமாகக் குவிந்திருந்தன. சிறியவர்களும் பெரியவர் களும் வியப்பில் திக்குமுக்காடிப் போயினர். அவர்கள் வாழ்நாளில் அப்படியொரு விஷேசத்தை கண்டதேயில்லை.

மகாராஜா மாதிரி காட்சியளித்தார் புதுமாப்பிள்ளை சூசைமணி. வேட்டியும் சொக்காயும் பளபளத்தது.நீட்டிய வாள்போலக் கண்ணைப் பறித்தது. கழுத்தில் முத்துமணிமாலைகள், ஒரே பெயர் பொறித்த தங்க மோதிரங்கள் பல அணிந்திருந்தார். மேனியில் பூசியிருந்த வாசனைத் திரவியம், பட்டணம் பொடியின் கடுமையையும் தாண்டி பலரது நாசியை நிமிண்டிக் கிறங்கடித்தது.

வேதக்காரர்கள் முறைப்படி பெண்வீட்டில் தாலிகட்டு நடந்தது. மணப்பெண்ணோ மார்த்தாண்டம் மகாராணியாகக் காட்சியளித்தாள். மகளுக்கு நாளியில் நகையளந்து போட்டு உச்சியிருந்து உள்ளங்கால்வரை தகப்பன் சூட்டியிருந்தான். ஏழெட்டு வண்டிகள் சீர் சுமந்து வந்தன. மணமக்கள் பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ வேண்டி பதினாறு பந்திகள் பரிமாறப்பட்டன. மத்தியான விருந்தில் சகுனம் பார்த்து, எதுப்பு பார்த்து தும்மல் விக்கல்கள் எழாமலிருக்க மேளம் முழக்கி வாண வேடிக்கை கொளுத்தி கல்யாண கோஷ்டி பண்ணைப்புதூர் நோக்கிப் புறப்பட்டது. திணையூரணி, வெங்கடாரம், காரியாண்டி, முனைஞ்சி பட்டி, மூலைக்கருப்புகட்டி, தெய்வநாயகபேரி தாண்டி சாரைசாரையாய் மாட்டு வண்டிகள் வந்துகொண்டிருந்தன.

வண்டித் தடத்தையொட்டி புதர்களும் முட்செடிகளும் மண்டிக் கிடந்தது காடு. மொட்டைப் பனை உச்சியிலிருந்து கிளிகள் எட்டிப் பார்த்தன. எங்கோ கனிந்த இலந்தைப் பழ வாசனையோடு காற்று வண்டிக்குள் ஊடுருவிப் பாய்ந்தது. நடுவில் ஒத்தைக்காளை பூட்டிய வில் வண்டியில் புதுப் பெண்ணும் புது மாப்பிள்ளையும் எதிரும்புதிருமாக அமர்ந்திருந்தனர். ஆணின் அண்மை தந்திருந்த நாணத்தில் மணப்பெண் கவிழ்ந்தே மலர்ந்த பூப்போல் தலையைத் தாழ்த்தியே வைத்திருந்தாள். வரிசையில் முதலாவதாக வந்துகொண்டிருந்த வண்டி நொண்டி இசக்கி கோவிலை நெருங்கியது.

மாவிசக்கியைவிட துடிப்பானவள் நொண்டி இசக்கி. இருவரும் அம்மன்கள்தான். சேட்டைக்கார அம்மன்கள். வண்டித்தடம் ஓரமாக கள்ளிச்செடிகள் அடர்ந்த அட்டில் சிகப்புச் சீலை சுற்றிய கூம்புக் கல்லில் குடியிருக்கும் நொண்டியிசக்கி மிக சமீபத்தில்தான் ஒரு காலை இழந்தாள்.

பெரியகுளம் பெருகி மறுகால் விழுந்து கால்வாயில் மலையன்குளத்துக்கு தண்ணீர் வந்தபோது கால்வாயை மறித்து துள்ளுக் கட்டை பதித்திருந்தார்கள். இரவில்தான் மீன்பாடு கணிசமாக இருக்கும். பரும்பட்ட மீன்கள் கலயத்துள் குதிக்கும். அன்று பௌர்ணமி. நடு ராத்திரியில் வெளிச்சம் காட்டுவெள்ளமாகப் பெருகியிருந்தது. துள்ளுக்கட்டை காவலுக்கு மூன்று நான்கு பேர் இருப்பார்கள். விடிய விடிய மீன்கள் குதிக்கும். ஆள் மாறி மாறி கண்விழிப்பார்கள். கலயம் நிறைய நிறைய அள்ளி கடாப்பெட்டிகளில் நிறைப்பார்கள். அன்று தைனேஸ் மரியான் மீன் அள்ளிப்போடும் முறை. பாதி விழிப்பும் உறக்கமுமாக இரண்டாம் ஜாம வேளையில் அமர்ந்திருந்தார். துள்ளுக்கட்டையின் இரண்டு வரிசைகளையும் சேர்த்து ஏறத்தாழ இருபத்தி நாலு கண்களிலுமிருந்து தண்ணீர் பீறிட்டடித்தது. பெரும்பாலும் அயிரை மீன்கள்தான் போட்டி போட்டுக்கொண்டு வந்து சாடும். அபூர்வமாக கட்டைவிரல் திண்ணம் கெண்டைகள் அகப்படும். அப்போது தைனேஸ் மரியான் தன் கண்களையே நம்ப முடியாத அளவுக்கு கையகலக் கெண்டைகள் தாறுமாறாகக் கலயத்துக்குள் குதித்தன. சடசடவென பலமான சத்தமும் எழுந்தது. ஒரு நிமிஷத்துக்குள் கலயம் நிரம்பிவிட்டது. சற்றுத் தொலைவில் குத்தவைத்து உட்கார்ந்திருந்த தைனேஸ் மரியான் எழுந்து வந்து பார்த்தபோது கலயம் முழு வெறுமையாக இருந்தது. சரி ஏதோ கண்ணசந்த கனவுதான் என்ற சமாதனத்துடன் தன் இடத்திற்கு திரும்பினார். பக்கத்தில் ஆள் நின்றிருந்தால் மீன்கள் கலைந்துவிடும். மீண்டும் அதே சடசடப்பு சத்தம். தொலைவிலிருந்து பார்க்கையில் கையகலக் கெண்டைகள் துள்ளிக் குதிக்கின்றன. கலயம் நிறைந்து விட்ட பிரமையில் அருகே செல்ல அங்கே அதே பழைய வெறுமை. குழம்பிப் போனார் தைனேஸ் மரியான். அடுத்தடுத்து இரண்டு முறை அப்படியே நடந்தது. ஒருவாறு வேடிக்கையை கிரகித்துக் கொண்டார். பக்கத்தில் உறக்கத்திலிருப்பவர்களை எழுப்பவில்லை. அந்த அளவுக்கு நெஞ்சில் துணிவு இருந்தது. மீண்டும் அதே சடசடப்பு சத்தம். வெள்ளியில் விளைந்த வெற்றிலைகள் போலக் கெண்டைகள் துள்ளிக் குதித்தன. தயாராக எடுத்து வைத்திருந்த பாளை அரிவாளை குறி பார்த்து வீசியெறிந்தார். வெட்டுண்டது கெண்டை. ''ஐயோ என் கால் போச்சே... ஐயோ என் கால் போச்சே...'' என்று காடு அதிர அலறிக் கொண்டோடி மறைந்தது ஒரு பெண் குரல். அன்றிலிருந்து அந்த அம்மன் நொண்டி இசக்கி ஆகிவிட்டாள்.

மணமக்கள் வில்வண்டி நொண்டி இசக்கி கோவிலை நெருங்கிய போது குத்துக்கல்லில் சக்கரம் ஏறியதுபோல் பலமாகக் குலுங்கியது. மணப்பெண் நிமிர்ந்தாள். ரத்தக் கண்களுடன் வீரப்பற்கள் நீள வெறிக் கோலத்தில் இசக்கி. மஞ்சணை மணம் குப்பெனத் தாக்கியது. நடுக்கத்தில், உறைபோட்டு இடதுகையில் சூசை பிடித்திருந்த உருக்குக் கத்தி கை நழுவி வண்டிக்குப் பின்னே தரையில் விழுந்தது. புது மாப்பிள்ளைகள்

காட்டுவழியே வரும்போது கண்டிப்பாக ஒரு கத்தி வைத்திருக்க வேண்டும். எக்காரணத்தைக் கொண்டும் வழியில் அதைத் தவறிக்கூட கீழே விடக்கூடாது. தவற விட்டாலும் வண்டியை விட்டு புது மாப்பிள்ளை இறங்கி எடுக்கக்கூடாது. வேறு யாராவதுதான் எடுத்துத் தர வேண்டும். செத்தைசெருவுகள் அண்டாமலிருக்க ஆதி காலத்திலிருந்தே கடைப்பிடிக்கப்பட்டு வரும் வழக்கம் இது. சம்பிரதாயப்படி கத்தியை வாங்கி இடுப்பில் சொருகி வைத்திருந்த சூசை அடிவயிற்றை அது உறுத்தியபடி இருந்ததால் எடுத்து கையில் பிடித்திருந்தார். அவரது அலறலில் வண்டி நின்றது. வண்டியோட்டி தலையைத் திருப்பி என்ன வென்று விசாரிக்கும் முன்னே கத்தியை எடுத்துக்கொள்ள குதித்து இறங்கி விட்டிருந்தார் சூசை. அவ்வளவுதான், உலகமே இருண்டுவிட்டது ஒரு நொடிப் பொழுதில். அகோரச் சிரிப்பொலிகள் காதை அறைந்து செவிடாக்கிவிட்டது. பின்னால் வந்த வண்டியோட்டி அலறியடித்து பதறியோடி அவரை நோக்கி வந்தான். குத்திருட்டிலும் கத்திமட்டும் துல்லியமாக மிதந்தது. குனிந்து அதை எடுத்தார். கண் பார்வையற்ற வரைப்போல் சூசை காற்றைத் துழாவினார். தெளிவில்லாமல் ஏதேதோ உளறினார். மற்றவர்கள் உதவியோடு மீண்டும் வில்வண்டியில் ஏறி அமர்ந்தார். எல்லாருக்கும் பெசன் அத்துப்போனது. 'என்ன நிலையோ என்ன கதியோ' ஜனங்கள் புலம்ப வண்டி புறப்பட்டது. அதன் தாள கதியை மீறி சூசையின் தலை மட்டும் தனியாக நடுங்கியது. கையிலிருந்த கத்தியை புதுப்பெண்ணிடம் நீட்டி மெல்லிய குரலில் 'சீதா பாத்தா கொடுத்திரு கொடுத்திரு' என முணுமுணுத்தார். அதற்குப் பின் அவர் அந்த வில்வண்டியை விட்டு இறங்கவேயில்லை; காலங்களைக் கடந்து அது காளையின் கழுத்துமணிச் சலங்கையோடு போய்க்கொண்டே இருக்கிறது முடிவற்று; அவரைத் தவிர எல்லோரையும் இறக்கிவிட்டு விட்டு. அன்றிலிருந்து பிடித்த கிறுக்குதான்.

தன்னந்தனியாக ஊர் ஊராகக் கிடைத்ததைத் தின்றுவிட்டு அலை கிறார். வயதும் இப்போது ஒருபாடு ஆகிவிட்டது.

சில மாதங்களாக சூசைமணியை ஊர்ப்பக்கம் காண முடியவில்லை. 'செத்துப் போயிருப்பாரோ' என மனசுக்குள் கேட்டுக்கொண்டாள் பாட்டி. அவர் ஆவிதான் பாண்டிக்குள் ஏறிவிட்டதோ என்றும் ஊரில் பேச்சு அடிபட்டது.

★

**அ**டையவிட்ட இடத்தில் பொழுது மெதுமெதுவாய் விடிய காலைக்கதிர்களையணிந்து நிர்வாணமடைந்து நிலம் பேரெழிலில் பூத்து விரிந்து கிடந்தது. தாழ்வாரம் சரிந்து கற்துண்டங்கள் ஒன்றின் மேலொன் றாகக் குழம்பிச் சாய்ந்து கிடந்த குவியலுக்கருகில் பிணத்தைப்போல்

அசைவற்றுக் கிடந்தவனின் நிஷ்டையை முதிர்ந்த பெண் குரல் வருடித் துடைத்தொதுக்கியது. ''குழந்தாய்! எழுந்திரு'' என்றது. பனி மணியாரமொன்றைக் கோர்த்து கழுத்தில் அணிவித்தது போன்று ஈரத்தாரைகள் வெற்று மார்பில் வழிந்திறங்கி அடிவயிற்றை ஜில்லிட வைத்தன. முடிவற்ற இருட்குகையிலிருந்து விடுபட்ட முதலுணர்வு உயிரின் வெதுவெதுப்பான சரடைப் பற்றி முன்னேறியது. ''எழுந்திரு செல்லம்!'' படிப்படியாய் சுய உணர்வையெட்டியபோது அந்தக் குரல் மிக அருகில் கேட்டது.

ஒரு கனவு கலங்கி இன்னொரு கனவு தெளிந்தது; எழுந்து அமர்ந்தான். காற்று சீரற்று வீசியது. கண்ணாடியில் வழியும் தண்ணீராய் காட்சி நெளிந்தது. எதிரே மண்டியிட்டிருந்த வயோதிகப் பெண்ணின் கூந்தல் தோளுக்குப் பின்னே பறந்தது, கற்றாழை நாரின் வெண்மையோடு. ''இங்கே என்ன செய்கிறாய் குழந்தாய்?'' அவன் பதிலுக்காக நரைத்த புருவங்கள் உயர்ந்திருந்தன. தலையை எல்லாத் திசைகளிலும் திருப்பி தானிருக்கும் இடத்தை விளங்கிக்கொள்ள முயற்சித்தான். உயர்ந்த மலைத்தொடர் அடுக்குகளால் அந்த பிரதேசமே சூழப்பட்டிருந்தது. தூரத்தில் மேகப்பொதிகள் ராட்சசப் பறவைகள்போல முகடுகளில் இறங்குவதும் எழுவதுமாகக் கலைந்துகொண்டிருந்தன. கண்ணுக்கெட்டும் பரப்பெங்கும் லட்சக்கணக்கான பச்சைக் குடைகளை விரித்துப் பிடித்திருப்பதைப்போல மரங்கள் நெருக்கமாக மண்ணைப் போர்த்தியிருந்தன. சுற்றிலும் அருகிலும் தூர்த்துவரும் சரிந்த கல் மரங்கள். என்னவென கிரகித்துக்கொள்ள அவன் ஏற்கனவே பார்த்திருந்த சிறு துரும்பு கூட அங்கே இல்லை.

''முறங்கள்போன்ற சிறகுகள் கொண்ட பறவைகளே பறந்து தீர்க்க முடியாத இந்த வனாந்தரத்துக்குள் நீ எப்படி வந்தாய் குழந்தாய்? உன்னோடு யார் வந்தார்கள்? எங்கிருந்து வந்தீர்கள்?'' உதடுகள் கனியக் கேட்டாள். பதிலுக்கு அவன் பதற்றமடைந்தான். நினைவின் ஏணியில் ஏறினான். அது வட்டமாக இருந்தது. அமைதியடைந்தான். இதைவிடச் சிறந்த பதிலொன்றுமில்லை என்பதுபோல் மென்மையாக சிரித்தான். பின் 'தாதீ' என்று குரல் எழுப்பினான்.

''தாதீயா... என்ன அது?'' வசியக் கதிர்கள் அவள் கண்களில் மேலும் கூர்மையடைந்தன.

''நீ'' ஒரு கையை அவளுக்கு நேர் நீட்டி சிரித்தான். ''நீ, தாதீ...''

''எனக்கு நீ சூட்டும் பெயரா இது, அதை நான் வைத்துக்கொள்ள வேண்டுமா...''

எடுத்துக்கொள் என்பதுபோல் தோளைக் குலுக்கினான்.

''நல்லது. உன் பெயர் என்ன குழந்தை?''

''தெரியாது.''

''உனக்கு பெயரே இல்லையா?''

''இருக்கு.''

''சொல்லமாட்டாயா...''

''சொல்வேன். அழகான பெயர் அது. ஒரு தடவை சொன்னா உலகெல்லாம் மணம் வீசும். இரண்டு தடவை சொன்னா விடியாத இரவும் விடிந்துவிடும். அவ்வளவு பிரமாதமானது என் பெயர். ஆனா...''

''ஆனால்...''

''அது என்கிட்டே இல்ல இப்போ. யாரோ திருடி வச்சிக்கிட்டாங்க. அப்பவே.''

குதூகலம் மடை திறக்க, விசித்திர விலங்குபோல் ஊளையிட்டான். எழுந்து நின்று கைகளை அகல விரித்து தனியே தட்டாமாலை சுற்றினான். சுழற்சியின் உச்சம் நிலைப்பு. நிற்கிறோமோ சுற்றுகிறோமோ என சந்தேகம் குறுக்கிட்டபோது ஓய்ந்தான். நிலமும் மலைகளும் வானமும் மேகங்களும் அவனை எதிர்க்கோணத்தில் சுற்றி வந்தன. வேடிக்கையாக இருந்தது. மீண்டும் சுழன்றான். ஓய்ந்தான். கேளிக்கை முற்றிப்போனது. நாளங்களில் ரத்தம் சீறி முகத்தில் ஊர்ந்து கனத்தது. துள்ளிக் குதித்தான். நிலத்தாளமிட்டான். குதித்தாடினான். மூச்சு முட்ட வாய் விட்டுச் சிரித்தான். அவனைச் சுற்றிலும் சிரிப்பொலிகள் கூட்டமாக எழுந்தன. திடுக்கிட்டு ஸ்தம்பித்தான். அதிகாரக் குரலில் வேலைக்காரப் பெண்ணை அழைக்கும் தோரணையில் ''தாதி...'' என்றான்.

மலைமுகடுகளும் 'தாதி'யை அழைத்து எதிரொலிகளை மடித்து வைத்தன. அவன் குரலில் யாரோ கூப்பிடுவதைக் கேட்க ஆனந்தமாக இருந்தது. இன்னும் சப்தமாக விளித்தான் ''தாதி...'' மலைகளும் இரட்டிப்பாக எதிரொலித்தன. 'தாதி தாதி தாதி...' பறவைகள் அஞ்சிக் கலைந்து பதுங்கின. உலகையே கைப்பற்றிவிட்ட கர்வத்தோடு தொண்டை வறளுமளவுக்கு கத்திக் கொண்டேயிருந்தான். உடல் வெறும் கூடுபோல் அதிர்வு கண்டபோது அமைதியானான். கல் முகட்டில் சோர்ந்து அமர்ந்தான். கெண்டை நரம்பு குறுகுறுத்தது. அனிச்சையாய் திரும்பிப் பார்த்தான். பிரம்புக் கூடையில் பழங்களுடன் தாதி நின்றிருந்தாள் மிக அருகே.

''தாதி... உன்னை எங்கெல்லாம் தேடுவது? எங்கே போயிருந்தாய், இந்த உலகம் என்னைச் சுற்றி வந்ததை இங்கிருந்து பார்க்காமல்'' உரிமையோடு சங்கடப்பட்டான்.

தாதி அவனுக்கு முன்பக்கமாக வந்து பழக்கூடையை நீட்டினாள். ''உனக்கு பசிக்கிறது. இதைச் சாப்பிடு.''

''அது கிடக்கட்டும். உன்னை எப்படித் தேடினேன் என்று அந்த மலைகள் இப்போது சொல்லும் பார்.'' எழுந்து குரலைத் திரட்டி 'தாதி...'

என்று சத்தமாகக் கத்தி விளித்தான். எதிர்பார்த்த திக்குகளிலிருந்து எதிரொலிகள் எழவில்லை. மலைமுகடுகள் அமைதி காத்தன. நடுக்கடல் வரை நடந்தே சென்று விட்டவனைப்போல் வியப்படைந்தான். மீண்டும் கத்தி விளித்தான். எதிரொலி எழவில்லை. மலைமுகடுகளில் திட்டமிட்ட நிசப்தம். தாதியின் முகத்தை குழப்பத்தோடு பார்த்தான். தாதி இதில் ஆச்சரியப்பட ஒரு மண்ணுமில்லை என்பதுபோல் பார்வையால் அவனைத் தேற்றியவாறு கூறினாள், ''மலைகள் இப்போது உறங்குகின்றன. அவை உறங்கட்டும். நீ இந்தப் பழங்களைச் சாப்பிடு.''

சிவந்து கனிந்திருந்த பழம் ஒன்றை எடுத்து கையில் வைத்தாள்.

''தாதீ, இந்த மலைகள் எப்போது விழிக்கும்?'' முகம் திரும்பியிருந்த திசைக்கு எதிர்த்திசையில் கை நீட்டிக் கேட்டான்.

''அதன்மீது அக்கறை காட்டி நீ ஏன் வீணாகக் குழம்புகிறாய். அவை விழிக்கும்போது விழித்துக் கொள்ளட்டும். அது நம் விருப்பமாக முடியாது.''

''மாட்டேன், முடியாது. மலைகள் எப்போது விழிக்கும் என்று சொல். இல்லையேல் இந்தப் பழத்தை நான் உண்ணமாட்டேன். எனக்குப் பசிப்பது உனக்கே தெரியும்.'' அடமும் பிடிவாதமும் பொய்க்கோபமும் செல்லமாய் வெளிப்பட்டது.

''இன்னும் இரண்டு மூன்று நிழல் நாழிகையில்.''

''நிழல் நாழிகைகளா? அது எவ்வளவு தாதீ?''

''காலத்தை இதனினும் சிறியதாகக் கூறு போடக்கூடாது.'' தாதியின் தொனி இறுகியது.

''நேரமாகக் கூறாமல் என்னால் காலத்தை அறிய முடியாது.''

தாதியின் கண்கள் கோபத்தில் சுடர்ந்தன. அவள் தீர்க்கப் பார்வை அவன் கையை எடுத்து வாயில் ஊட்டியது. கன்னங்கள் புடைக்க கடைவாயில் சாறு வழிய பழங்களைத் தின்று முடித்தான். யானைத் தீ அணைந்தது.

மூங்கில் குடுவை சாய்த்து ஊற்றிய தண்ணீரை இரண்டு கைகளையும் பொருத்தியேந்திப் பருகினான். குளிர்ச்சியும் தித்திப்புமாக இருந்தது. வாயை வழித்துத் துடைத்துக் கொண்டபோது கால்கள் தள்ளாடின. உடல் துவண்டது. கண்களில் போதையின் சாம்பல் திரையிறங்கியது. வனவெளிகள் மரங்கள் மலைமுகடுகள் தங்கள் பச்சைப் பசும் வண்ணமிருண்டு தனித்ததொரு மயிலாக காட்சி திரிந்தது. யாரோ மடியில் கிடத்தி இதமாக அணைத்துப் பொதிவது போலிருந்தது.

வேப்பிலை மசியல் வீச்சம் குமட்டிக் குடலைப் புரட்டியது. நெற்றிப் பொட்டில் குளிர்ச்சியிறங்கியது. வெறும் முதுகில் ஏதோ உறுத்த எரிச்சல் பரவியது. சாணம் கரைத்து மண்திண்ணை மெழுகும்

பாவனைக்கு எந்தக் குந்தகமுமில்லாமல் கைக்கிண்ணத்திலிருந்த அரைத்த வேப்பிலைச் சாந்தை, நெற்றி, குரல்வளை, நெஞ்சில் பூசி ஒரு உருண்டை உச்சந்தலையில் வைத்து அரக்கினாள் பாட்டி. தலையும் உடலும் தனித் தனியாக ஆடின. மயக்கத்திலிருந்து மீள்வது போல் புற உலகுக்குள் கண் விழித்த பாண்டி பாட்டியை அடையாளம் கண்டவனாக வாய்க்குள் ளேயே ஏதோ பேசினான். சுத்த உளறலாக இருந்தது.

இளம்வெயில் வெதுவெதுப்பாய்க் காய்ந்தது. பொழுதின் நாடி பிடித்து பகலென்பதைத் தவிர காலையா மாலையா என்று பிரித்துணரக் கூடவில்லை. வேப்பிலைச் சாந்தில் சிறு நெல்லியளவு உருட்டி கையில் எடுத்த பாட்டி 'ஆ...' காட்டச் சொன்னாள். அவள் வாயிலும் 'ஆ' இருந்தது. வாயை அகலத் திறந்தான். குட்டி நாக்கு தவிப்பது தெரிந்தது. உருண்டையை வாயுள் வைத்தாள். விழுங்கிரு என்றாள். அதைப் புரிந்து கொள்ளச் சிரமப்படாமல் குதப்பிக் கூழாக்கிவிட்டுச் சிரித்தான். பல் லெல்லாம் பச்சை. குடிக்க நீர் கொடுத்தாள். குழந்தைபோல் குடித்தான். பாதி கீழே வழிந்தது. தன் புடவையால் ஈரத்தைத் துடைத்தாள். போது மென்று பாட்டியின் கையைத் தடுத்தபோது அவன் தன் கையைக் கவனித் தான். பாம்பின் அடிவயிற்றை நினைவூட்டும் நைலான் கயிறு கருத்த இரும்புச் சங்கிலியாக உருமாற்றமடைந்திருந்தது. காலிலும் அப்படியே. முதுகுப் பக்கம் திரும்பினான். மரத்தின் அடிப்பகுதியும் இரும்பாகி துரு ஏறியிருந்தது. உலகமே மாயமந்திரத்தில் இரும்பு மயமாக மாற்றப்பட்டு விட்டதோ என சந்தேகித்தான். தலையை வெட்டி வெட்டித் திருப்பினான். நிலம் சுற்றுச் சுவர்கள் வானம் அண்டை வீடுகள் அனைத்தையும் உறுத்துப் பார்த்தான். எல்லாமே இரும்பிலானது போலவும் ஏற்கனவே இருந்ததுபோலவும் தெரிந்தன.

'' என்னத்தய்யா அப்படிப் பாக்கிற?''

தன் குழப்படியைக் கண்டுபிடித்து அவள் எதையோ சொல்லி அதட்டுகிறாள் என்பதை அவனால் ஓரளவு கிரகித்துக்கொள்ள முடிந்தது. சங்கை அறுத்துவிட்டதுபோல தலையைத் தொங்கப் போட்டுக் கொண் டான். கையை நீட்டி நாடியைத் தொட்டாள். தாடி ரோமங்கள் நெருநெரு வென்றிருந்தன. முகத்தை ஏந்தி நிமிர்த்தினாள். கண்கள் மூடியிருந்தன. நெற்றியில் வேப்பிலைச் சிலுவை கூட்டல்குறியாக உலர்ந்திருந்தது.

நெஞ்சின் அடியாழக் குரலில் அவன் பெயரை இரண்டு முறை வாஞ்சையோடு அழைத்தாள். 'ம்...' என்றான். ''கண்ணைத் திற, என்னப் பாரு, பாட்டியைப் பாரு.'' கெஞ்சினாள்.

மிக மெதுவாக கண்களைத் திறந்தான். இமைகள் சோர்வாகப் பிரிந்தன. மரத்துப்போன கருவிழிமணிகள் பளபளப்பை இழந்திருந்தன.

''உனக்கு என்னய்யா செய்யுது?''

வாஞ்சையோடு அவன் இடது தோளில் கையை வைத்து பற்றியழுத்

தினாள். ஒரு வரிப் பதிலில் சிக்கலின் முடிச்சை அவிழ்த்து விடுவான் என்று நம்பினாள், அப்பாவித்தனமாக. பாண்டி பதிலேதும் கூறாமல் வெறுமனே பார்த்துக்கொண்டிருந்தான். பார்வை நிலையற்று சிதறித் தாவியலைந்தது.

''உன் கண்ணுக்குள்ள படம் படமா கண்டதும் தெரியுதோய்யா? இங்கே வந்துரு வந்துருனு யாரும் வந்து கூப்புடுதாங்களோ? சொல் லுய்யா. மணிச்சத்தம் ஏதும் ஜல்ஜல்னு காதுக்குள்ள ஓயாம கேக்குதோ...'' தோளைப் பற்றி உறக்கத்தில் விழிப்பூட்டுவதுபோல் குலுக்கினாள். கன்னத்தை வருடிய கைகள் லேசாக உணர்ச்சி வசப்பட்டு நடுங்கின.

''என்னிய எல்லாரும் கட்டிப்போட்டு அடிக்காங்க. உடம்பெல் லாம் வலிக்குது. எலும்புலாம் உடைஞ்சு போச்சு. நான் உறங்கிட்டு இருக்கும் போது யாரோ வந்து என் மூஞ்சியில நங்குனு குத்திட்டு ஓடிட் டாங்க. இந்த பக்கத்தவிட மூஞ்சி இந்த பக்கம் பெருசாயிட்டு வலிக்குது.''

கையை உயர்த்தி வலது செவியருகே தொட்டுக் காட்டினான். வாய்பாடு சொல்வதுபோல் பேசினான். அழுகை கண்ணை முட்டிவிட்டு திரும்பியதோ என்னவோ, விழியோரத்தில் ஈரம் கசிந்து நின்றது. காயம் சற்று உலர்ந்து கருப்பாகப் பொருக்கு பிடித்திருந்தது. கள்ளமில்லாத சின்னப்பிள்ளையாகி விட்டிருந்தான். அப்போதைக்கு அதற்குமேல் என்ன பேசுவது கேட்பது என்று பாட்டி தடுமாற்றமடைந்தாள். மௌனம் ஊற்றாய்ப் பீறிட்டு சலனமில்லாமல் அவளை நிறைத்து கனமானதொரு ஜடப்பொருளாக்கிற்று.

சவேரியார் கோவில் பிள்ளையாக நேர்ந்து விட்டிருந்தவனை ஏலம் விட்டு மீட்டாமலே இருந்திருக்கலாமோ என்று இப்போது யோசித்தாள்.

பள்ளிக்கூடத்து மணிச்சத்தம் தூரத்திலிருந்து காற்றில் மிதந்து போனது. பாண்டியின் கண்களில் ஒளி கூடியது. ஒலியைக் கணித்து அத் திசையில் ஆழத்தை உற்றுப் பார்ப்பதுபோல ஆர்வத்தோடு திரும்பிச் சொன்னான். ''பள்ளியோடத்து மணியடிக்குது.'' கல்லூரி படிக்கும் நாட் களிலும் அதற்குப் பின்பும் பாண்டி மிக நாகரீகமாகப் பேசுவான். பாட்டி அவனை விநோதமாகப் பார்த்து ரசிப்பாள். இப்போது அது அவள் நினைவில் நிழலாடியது. மணியோசை ஓய்ந்த பின் பாட்டி அவனிடம் கேட்டாள், ''நீ பள்ளியோடம் போறியா?'' மனத்தைக் கிளறி அறுந்து கிடக்கும் ஞாபகங்களை ஒட்டிவிடும் உள் நோக்கத்தோடு கேட்டாள். அவன் மனம் பல்வேறு முழுமையற்ற எண்ணங்களில் கசங்கியது. காலி லிருந்து தோள்வரை தன்னைத்தானே மேலும் கீழும் பார்த்தான். விலங்கு களிலிருந்து கைகளையும் கால்களையும் விடுவித்துக் கொள்ள வழி ஆராய்ந்தான். எழுந்து தட்டாமாலை சுற்ற வகை தேடினான். விலங்குகள் பெருந்தடையாக இருந்தன. கடலும் அலைகளும் அதன் ஓலமும், பச்சை மீன் வாடையும் உப்புக்காற்றும் சூழ்வதுபோல் ஒரு பிரமையேற்

பட்டது. தடாலடியாக எழுந்து நின்று கடலைத் தேடினான். சுற்றும் முற்றும் கண்களை ஓட்டினான். ஆழ மூச்சிழுத்து விட்டான். நாசிக் குருத்தில் வெயில் நுழைந்து இளஞ்சூடு ஏறியது. கைவிரல்களில் உலர்ந்திருந்த வேப்பிலைச் சாந்தை தட்டி உதிர்த்தபடி பாட்டியும் எழுந்து நின்றாள். அவனுடன் சேர்ந்து தேடினாள். ''கடல் எங்கே போச்சி?'' மிகத் தெளிவாகக் கேட்டான்.

கடலா, இங்கே கடலுக்கு நான் எங்கே போவது என்பது போல பாட்டி விழித்தாள். ''அங்கே கிடந்ததே'' கையை தெருப்பக்கம் நீட்டினான். ''அது எங்க போச்சி?''

அந்தக் குரலும் விசாரிப்பு தோரணையும் அவன் இயல்பு நிலைக்குத் திரும்பிவிட்டது போன்றதொரு நம்பகம். அவள் மனம் சாஷ்டாங்கமாக விழுந்து அரக்கப்பரக்கப் பணிந்து கடவுளை பிரார்த்தித்தது. 'என் பிள்ளைக்கு இப்படியே கொஞ்சம் கொஞ்சமாக சுய புத்தி திரும்பி விடட்டும்' என்று மன்றாடியது. மிக்கேல் புனிதர் கெபியில் அம்மியில் அரைத்த வேப்பிலைச் சாந்து புதுமைக் கிரியை செய்ய ஆரம்பித்து அவன் மனநிலையில் நல்ல முன்னேற்றத்தை கொண்டுவந்திருப்பதாக நம்புவது அவளுக்கு மகிழ்ச்சியாக இருந்தது.

★

பாண்டிக்கு சில நேரங்களில் சுய உணர்வு திரும்பியது. அது மிகக் கொடுமையானதாக அவன் மனத்தைத் திருகிப் பிசைந்தது. உடல் கூச்சத்தால் குறுகியது. ஏன் நம்மை எல்லோரும் இப்படியொரு கேவலமான கோலத்தில் வேடிக்கை பார்க்கிறார்கள் என்று கேள்வி எழுந்தது. பதிலுக்கு அடக்க முடியாமல் கண்களிலிருந்து கண்ணீர் கொட்டியது. பிறர் கண்களைச் சந்திக்காமல் கண்களைத் திருப்பிக் கொள்வதொன்றே தப்பிக்கும் கடைசி வழியாக இருந்தது. பராமரிப்புக்காக பக்கத்தில் வருபவர்களிடம் எனக்கு என்ன நடந்து கொண்டிருக்கிறது என்று கேட்க நினைப்பான். அவர்கள் அளிக்கும் பதிலைத் தாங்கிக்கொள்ள முடியாதோ என்ற அச்சத்தில் தொண்டையடைத்துக் கொள்ளும். முகம் காட்டும் கண்ணாடியைக் கேட்டு வாங்கி ஒருமுறை பார்த்தான். அதற்குள் ஒளிந்திருந்து இளித்த மிருகத்தின் முகத்தை காலத்திற்கும் மறக்க முடியாததுபோல் பயங்கரமாக மனத்தில் பதிந்துகொண்டது. அவ்வளவு கோரமான தோற்றம். நரக ஓவியங்களில்கூட காணக் கிடைக்காதது. உடலெங்கும் திருமண் பூசி திரிதிரியாய் சடை வளர்த்த பண்டாரம் பரதேசிகளைவிட அதிகமான அந்நியத்தன்மையை ஏற்படுத்தியது. கண்ணாடியை வீசியெறிந்து உடைத்துப் போட நினைத்தான். சற்றுமுன் அதற்குள் கண்ட பிம்பத்துக்கு அஞ்சி திருப்பித் தந்துவிட்டான். பழைய பாண்டியாக சுய உணர்வில் சஞ்சரிக்கும் அரிதான தருணங்களுக்கு காலவரையறை

கிடையாது. ஒரு நிமிடமோ ஒரு மணித்துளியோ ஒரு பகலோ இரவோ, அப்போதெல்லாம் மீட்சியின்றிப் பொறிக்குள் சிக்கியிருக்கும் எளிய உயிரின் பதைப்பும் வேதனையும் மரணபயமுமே அவனை ஆட்கொண்டது. வானத்தில் ஒரு நட்சத்திரமோ தூரத்து ஒலியோ, காற்றில் குழைந்து வரும் பெயரற்ற வாசனையோ தங்கள் உலகிற்கு அவனை அழைத்துச் சென்று விடும்போது கவலையற்ற குழந்தையாக மாறிவிடுகிறான். காணும்வரை விரியும் முடிவற்ற உலகம் அது. அங்கிருந்து எதையும் அவனால் கடத்திக்கொண்டு வர இயன்றதில்லை. அப்படியொரு மாற்றுலகம் உள்ளதை சுய நினைவுகளின்மூலம் நம்பவும் முடிவதில்லை. அதற்கான வாசலும் வழியும் திறப்பது புதியதொரு பிறப்பைப் போல.

★

சதுப்பு நிலங்களும் முள்மரங்களும் வருங்காலத்தில் நிமிரப் போகும் நகர்களின் அடிக்கல்களும் ஜன்னல் காட்சியாக பின்னோக்கி ஓடிக் கொண்டிருந்தன. இருக்கையில் தன்னிலை மறந்து அமர்ந்திருந்தார் காணிக்கைராஜ். ஆழ்ந்த சிந்தனையில் கண்கள் நிலைத்திருந்தன. முகத்தில் சாந்தமும் தெளிவும் பிரச்சினையின் தீர்வை நோக்கி முன்னேறும்போது மேலிடும் நம்பிக்கையும் பதிந்திருந்தன. மனக்குரல்கள் குகை வெளவால்களாக முட்சிறகு விரித்தலைந்தாலும் அவற்றை உதாசினப் படுத்தியொதுக்கும் ஓர் ஆசுவாசம் தோன்றியிருந்தது. பேருந்து தாழையூத்தை நோக்கி சக்திக்கேற்ப உறுமியபடி விரைந்துகொண்டிருந்தது.

முனீர் சர்புதீன் மவுலவியை பிச்சைக்கண்ணுதான் காணிக்கைராஜிடம் சிபாரிசு செய்தார். பேய்க்கோளாறு, பில்லிசூனியம், செய்வினை, ஏவல்கள் எதுவானாலும் மவுலவி தீர்வு கண்டுவிடுவார். சுற்றுவட்டாரத்தில் அவரை அடித்துக்கொள்ள ஆள் இல்லை. எப்படிப்பட்ட கேஸானாலும் முடியாது என்று கை விரிப்பதேயில்லை. தலைப்பிள்ளை மண்டையோட்டு மை உண்டு. சுடுகாட்டுல இருந்து பிடிச்சி இழுத்துட்டு வந்து பத்துப் பன்னிரண்டு சடைமுனிகளைக் குடுவையில அடைச்சு வச்சுருக்காரு. மவுலவியோட வாப்பாவும் பேர் போன வைத்தியர்தான். மவுலவிகிட்ட கட்டுப்பட்டு நிக்கிறது வம்சாவளி வித்தைங்கறதால எந்த பிரச்னைனாலும் சனம் அவருகிட்டதான் ஓடுது. பணத்தாசையும் கிடையாது. ஏழை பணக்காரன் பாகுபாடும் கிடையாது. எல்லாருக்கும் ஒரே வரிசைதான். மவுலவி வாழ்க்கையில் நடந்த சம்பவங்கள் ஒவ்வொன்றும் அதிசயம்போல் தோன்றும்; நம்புவதற்கு சிரமமாக இருக்கும், நம்பாமலும் இருக்க முடியாது. காணிக்கைராஜின் மனத்தில் நம்பிக்கையை ஊன்றும் பொருட்டு பிச்சைக்கண்ணு பல விஷயங்களை சொன்னார். மவுலவி தனது மூணாவது பொண்டாட்டியோடு நாங்குநேரி

பஸ் ஸ்டாண்டில் கருக்கலில் பஸ்ஸுக்காக நின்றிருந்தபோது நடந்தது லோகப் பிரசித்தம்.

மவுலவிக்கு முறைப்படி அவர்கள் சாதியிலேயே ரெண்டு நிக்கா நடந்து பீவிகள் இருந்தனர். பிள்ளைகளுக்கும் பஞ்சமில்லை. ஒரு பேரழகியைப் பார்த்தபோது மனத்தைப் பறிகொடுத்துவிட்டார். அவள் காப்பிரி. இந்து. மூக்கும் முழியும் சுண்டியிழுக்கும் உடற்கட்டுமாக இருந்தாள். ஏழெட்டுக் குழந்தைகளுக்கு தகப்பனான ஆணை முதற் பார்வையிலேயே மனசைத் திருகி முருங்கைக் கீரைபோல் மடியில்போட்டுக் கொண்டு விட்டவளின் அழகைப் பற்றி சிலாகித்து தீராது. கழிப்பு செய்யப் போன இடத்தில் ஏற்பட்டது இப்படியொரு திருப்புமுனை. அந்த பெண்ணுக்கு மவுலவி மீது எந்த ஈர்ப்புமில்லை. மவுலவிதான் மாந்திரீகவாதியாச்சே! ஒரு நொடியில் மனசை மாற்றிப்போட்டுவிட மாட்டாரா என்ன! அப்பிடியே பெண் சம்மதித்து விட்டாலும் வீட்டார்கள் அனுப்பி வைத்துவிடுவார்களா? அது நடக்காது. முறைப்படி எந்த முயற்சியும் பலன் தராது என்பதை மெத்தப் புரிந்துகொண்ட மவுலவி அந்த அழகியின் தலைமுடி ஒன்றை ரகசியமாக பத்திரப்படுத்தியபடி வீடு வந்து சேர்ந்தார். எண்ணிப் பன்னிரண்டாம் நாள் அந்தப் பெண் மவுலவி வீட்டு வாசலில் வந்து நின்றாள். தனியாக அவளுக்கு ஒரு வீடு எடுத்துக் கொடுத்து சேர்த்துக்கொண்டார். விஷயமறிந்த பெண் வீட்டார்கள் தலையை எடுத்துருவேன் காலை எடுத்துருவேன்னு ஏதும் மிண்டவில்லை. தலைமுழுகி விட்டனர். வைத்தியனிடம் வம்புக்கு போய் வெள்ளிக்கிழமை ராத்திரியில் குடும்பத்தோடு ரத்தம் கக்கிச் சாக முடியுமா?

நாங்குநேரி பழைய பஸ்ஸ்டாண்டை மாற்றி ஊருக்கு கிழக்கே வயற்காட்டு ஓரமாகக் கொண்டுவந்து புதியது கட்டி திறந்து வைத்திருந்த நேரம். பல ஊர்களுக்குச் செல்லும் பேருந்துகள் அங்கு கட்டாயத்தின் பேரில் வந்துபோனாலும் புது இடத்தில் புழங்க மக்கள் தயங்கினார்கள். நேரம் இருட்டிய பிறகு பயங்கரங்கள் பதுங்கியிருக்கும் இருளடைந்த மைதானம் போலிருக்கும். மின்கம்பங்களிருந்தன. விளக்குகளும் ஒளி வீசின. இருப்பினும் கொலை, கொள்ளை, ஆள் கடத்தல், கதறக் கதற கற்பழிப்புகள் எல்லாம் மலிந்திருந்த காலமென்பதால், அந்தி சரிந்து மாலை மணி ஆறு கடந்துவிட்டால் தூரத்து ஊர் செல்லும் வண்டிகள் பஸ் ஸ்டாண்டுக்குள் வராமலே போய்விடும். மிட்டாய்க்கடை, சர்பத்கடை, வெற்றிலைபாக்குக்கடை, டீக்கடை என புதிதாக முளைத்திருந்தவையும் கண்ணை மூடட்டுமா திறக்கட்டுமா என்று ரெண்டும்கெட்டான் நிலைமையில் முழித்துக்கொண்டிருக்கும்.

ஏர்வாடிக்கு சொந்த வேலையாய் மூன்றாவது பொண்டாட்டியோடு வந்திருந்த மவுலவி ஊர் திரும்புவதற்கு பஸ் மாறிக் கொள்வதற்காக நாங்குநேரியில் இறங்கி நின்றிருந்தார். மையமாக இருக்கும் பிள்ளையார்

கோவில் மரத்தடியில் திருநெல்வேலி செல்லும் பஸ்சுக்காக காத்திருந்தார். மணி ஏழாகி கசமாய் இருட்டிவிட்டது.

மார்புக்கூடியில் கைகளை மடித்துக் கட்டிக்கொண்டு பவ்யமாக நின்ற பொண்டாட்டி மேல் காலிகளின் கண் விழுந்துவிட்டது. கைலியும் காக்கிச் சட்டையும், வாயில் கட்டபீடியும் கெட்டவார்த்தைகளும் கேலிச் சிரிப்புமாக மூன்று நான்கு பேர் கூடி வட்டமிடத் தொடங்கிவிட்டார்கள். பொண்டாட்டிக்கு அருகே பரம சாதுவாக நின்றிருந்த மவுலவியின் அப்பாவித் தோற்றம் அவர்களுக்கு எகிசாராயம் குடித்த பரபரப்பைத் தந்தது. பஸ்ஸ்டாண்ட் வெறிச்சோடிக் கிடந்தது. கடைக்காரர்களும் நடக்கப் போகும் விபரீதத்தைக் கண்டும் காணாமல் விட்டுவிட ஏற்கனவே முடிவெடுத்து விட்டனர். காலிகளின் வட்டம் சுருங்கியது. அடுத்த கட்ட நடவடிக்கைக்கான முஸ்தீபுகளில் தீவிரமாயினர். ஒருவன் மடியிலிருந்து வெளிப்பட்டு கத்தியொன்று அரையிருளில் மின்னியது.

அவளது நீளமான சுருள்முடியில் ஒன்றைப் பிடுங்கி, விரல் திண்ணம் ஆலம் விழுது நறுக்கி துண்டங்களாகாமல் அதை நேர்பாதியாக வகிர்ந்து அதற்குள் முடியை நேராக வைத்துக் கட்டி தாயத்தில் அடைத்து தலையணைக்கு அடியில் பதுக்கிவைத்துவிட்டால் பன்னிரண்டு நாட்கள் உறங்கி எழுந்தபின் வரும் அவளை அடையும் பொறுமை அவர்களிடமில்லை. குத்தினால் குடல் சரியும் இடத்தில் கத்தியை அழுத்தியபடி ஒருவன் கிழவனோடு நின்றுகொள்ள மற்றவர்கள் அவளை வயற்காட்டுக்குள் இழுத்துச் செல்வதாய் திட்டம். ஒருவாறாக இதை முன்பே ஊகித்துக் கொண்ட மவுலவி 'என் கெண்டைக்கால் மயித்துக்கு பதில் சொல்லுவிங்களாடா சுண்டைக்காப் பசங்களா' என்று மனசுக்குள் சிரித்தார். பஸ்சும் வந்து தொலைந்தபாடில்லை. 'மூலைக்கருப்பட்டி, முனைஞ்சிபட்டி, பரப்பாடி பரப்பாடி, களக்காடு களக்காடு' சற்று தொலைவில் முகம் தெரியாத இருட்டுக்குள் க்ளீனர்கள் குரல்கள் ஒலித்தன.

நெருங்கி வரும் பயங்கரத்தை உணர்ந்த பொண்டாட்டியின் கை கால்கள் மெல்ல நடுக்கம் எடுத்தன. ''என்னங்க! எனக்கு பயமா இருக்கு'' சன்னமான குரலில் சொன்னாள். மவுலவியிடம் பதிலில்லை. காலிகளில் ஒருவன் ''எந்த ஊருக்கு போணும்'' கரகரப்பான குரலில் அக்கறையின்றிக் கேட்டபடி அவர்களை நெருங்கினான். ''மயினிய மட்டும் கூட்டிட்டு வா. நம்ம வூட்டுல தங்கிட்டு காலையில போவட்டும்'' பின்னாலிருந்து நக்கலோடு எழுந்தது மற்றொரு குரல். மவுலவி தன் இடதுதோளில் கிடந்த துண்டுவேட்டியை சாவகாசமாக வலது கையிலெடுத்தார். உரக்க சப்தமெழ ஒருமுறை உதறினார். தூக்கி உயரே எறிந்தார். பொண்டாட்டியின் தலைக்கு மேலே இரண்டடி உயரத்தில் பறந்தவாக்கில் விரிந்து நின்றது துண்டுவேட்டி. காலிகளை ஒரு பார்வை பார்த்து எச்சரிக்கை தெறிக்க செருமினார். மெல்ல நடந்து வெற்றிலைபாக்குப் போட கடைப்பக்கம் வந்தார். வெற்றிலை வாங்கி காம்பு கிள்ளி சுண்ணாம்பு

ராவியபடியே மரத்தடியில் நின்றிருந்த பொண்டாட்டியை கர்வத்தோடு பார்த்தார். காலிகள் போன திசை தெரியவில்லை. மவுலவி அப்போது போட்ட வெற்றிலை சிவக்கும் வரை எவனாவது அங்கே நின்றிருந்தால், இவர் வெற்றிலை மெல்ல மெல்ல குபுக் குபுக்கென்று ரத்தம் கொப்பளித்திருப்பான். பஸ் வரும்வரை துண்டு வேட்டி அந்தரத்திலேயே நின்றிருந்தது. சிலர் பயந்து கடையடைத்து விட்டனர். சிலர் திறந்த வாயை மூட முடியாமல் சிலையாகியிருந்தனர். மறுநாள் நாங்குநேரி சுற்று வட்டாரங்கள் முழுக்க மவுலவியின் புகழ் ஒரே வீச்சில் பரவிவிட்டது.

அந்தரத்தில் நின்ற துண்டு வேட்டியின் கீழே நின்ற மூன்றாவது பொண்டாட்டி காணிக்கைராஜின் மனக்கண்ணில் சித்திரமாகத் தங்கி விட்டாள். தன் மகனை மீட்டுத் தரப்போகும் மந்திரவாதியின் தோற்றம் எப்படி இருக்குமென்று தனக்குள் வரைந்து பார்த்தவாறே வந்தார்.

பேருந்தை விட்டு இறங்கியதும் ஒரு மோர் குடித்துவிட்டுப் போகலாம் என உத்தேசித்தார். என்ன வேணாலும் வந்த வேலை முடிஞ்ச பிறகு சாப்பிட்டுக்கலாம் என மறுத்துவிட்டார் பிச்சைக்கண்ணு. வெயில் நாலாபக்கமும் அனலைத் துப்பிக் குவித்தது. சாலையை விட்டு இறங்கி காலடிகள்பட்டுக் கசங்கிப் புழுதியெழுப்பும் மணற்பரப்பில் கடைகளைத் தாண்டி நடந்தனர்.

காய்ச்சல் தலைவலிக்கு மருத்துவம் பார்க்கும் சிறிய வைத்திய சாலை போலிருந்தது மவுலவியின் தொழிற்கூடம். தேங்காய் மண்டியோ எண்ணெய்க் கடையோ முன்பு அங்கு இருந்திருக்கலாம். குறுக்கே ஒரு சுவர் மட்டும் புதிதாகக் கட்டப்பட்டிருந்தது. உள்ளறையில் மவுலவி இருந்தார். வெளியில் காத்திருப்பவர்களுக்காக மரப்பெஞ்சுகள் இரண்டும் தண்ணீர்ப் பானை ஒன்றும். ஏழெட்டுப் பேர் ஆண்களும் பெண்களுமாகக் காத்திருந்தனர்.

மெலிந்து உயர்ந்திருந்த உதவியாளன் அவர்கள் அமருவதற்கான இடத்தை கை காட்டினான். நிலவியது கவலைகளின் அமைதி. அறைக்குள்ளிருந்து பேச்சுக் குரலின் சன்னமான கசிவு. வியர்த்துக் கொட்டியது. காணிக்கைராஜ் மின்விசிறியை நோட்டமிட்டார். பச்சை வர்ணம் பூசப்பட்ட அதன் சிறகுகள் பலவீனமாகச் சுழன்று ஒலி எழுப்பின. கழுத்துப் பட்டை அழுக்குப் படியாமலிருக்க சுற்றி வைத்திருந்த குற்றாலத் துவாலையின் நுனியை வெளியே எடுத்து முகத்தை அழுந்தத் துடைத்துவிட்டார். அங்கு அமர்ந்திருந்தவர் முகங்கள் உலோகத்தில் செய்து தேய்ந்து போனவை போலிருந்தன. தன்னுடையதும் அப்படித்தானிருக்கும் என நினைத்துக்கொண்டார்.

பரிமளம் பாண்டியைக் கருவுற்றிருந்த நேரம் அவர் அலுவலகத்திற்கு நற்செய்தி வந்தது. பணி நிரந்தரப் படப்போகும் ஊழியர்கள் பட்டியலில் அவர் பெயரும் இணைக்கப்பட்டிருந்தது. இரட்டிப்பு

மகிழ்ச்சி உள்ளுக்குள் பந்தாகிக் குதித்தது. சதையும் ரத்தமுமாகக் கருவில் பெருகிக் கொண்டிருப்பது ஆண் பிள்ளையோ பெண் பிள்ளையோ தெரிய வில்லை. ஆனால் அதிர்ஷ்டமான பிள்ளை. எட்டு வருடங்கள் பட்டு வந்த பாடுகளுக்கு பலன் கனிந்த காலமது. எத்தனைதான் பிள்ளைகள் பெற்றிருந்தாலும் கருவில் முதிரும் பிள்ளையோடு சேர்ந்து வளரும் ஆர்வமும் எதிர்பார்ப்பும் பெற்றோர்களுக்கு அதிகம்தான். அதைப் பேச்சிலும் மௌனத்திலும் விழிப்பிலும் உறக்கத்திலும் நாளைய திட்டங்களிலும் காணிக்கை மனப்பூர்வமாக அனுபவித்தார். காதலுற்ற இளைஞனைப் போல் அந்நாட்களில் மனத்தில் பரபரப்பு மிகுந்திருந்தது. கொஞ்சம் உண்டாலும் முழுத் திருப்தி ஏற்பட்டது. ஒரு சுற்று பருத்தும் விட்டார். அப்போது தோன்றிய இளம் தொப்பைதான் அடிவயிற்றில் இன்றும் கரையாமலிருக்கிறது. வேலை நிரந்தரமானது. அழகான ஆண் குழந்தை பிறந்தது. அள்ளி எடுத்து நெஞ்சோடு அணைத்து முத்தம் தந்தார். இதற்கு முன் வெளிப்படையாக எந்தக் குழந்தையையும் முத்தம் கொஞ்சியதில்லை. அதைரியங்கள் மஞ்சுபோல் கலைந்தோடின. வருமானம் குறித்த மனத் தடுமாற்றங்கள் அடங்கிப் போயின. நிமிர்ந்த ஆளுமையோடு அந்நாட்களில்தான் வாழத் தொடங்கினார். வண்டியில் குவித்திருக்கும் வாழையண்டிகளை இறக்குவதுபோல் ஒவ்வொரு நாளையும் தன் வாழ்க்கைக்குள் இறக்கி வைக்கும் லாகவம் வாய்த்தது.

பாண்டியின் தலை தொட்டு ஞானத்தாய் ஞானத்தகப்பன் அந்தஸ்து வகிக்க ஊருக்குள் பலரும் மனசாக இருந்தனர். குவைத் போவதற்கு பணம் கட்டிவிட்டு விசாவுக்காகக் காத்திருந்த ஜார்ஜ் மாத்யு அவரை சந்தித்துப் பேசினார். 'நிலபுலன்களை வித்தும் அடமானம் வச்சும் பணம் திரட்டி கட்டிட்டு காத்திருக்கேன். ஒம் மகன் பிறந்த நேரத்துக்கு எனக்கும் எதாவது நல்லது நடக்குதாணு பார்ப்போம்' என உருக்கமாகக் கேட்டுக் கொள்ள ஞானஸ்நான சடங்கில் பிரான்ஸிஸ் சந்தனப்பாண்டி எனப் பெயர் சூட்டி , ஜார்ஜும் சகாயராணியும் தலைதொட்டனர். வெகு விரை விலேயே வெற்றிகரமாக வெளிநாடு பயணமானார். புறப்படும் முன் கைக்குழந்தையின் நெற்றியில் சிலுவை வரைந்து முத்தமிட்டார். துவர்ப்புச் சுவையுடன் கடைவாயில் இறங்கிய கண்ணீர்த்துளியை ருசித்து முகம் சுழித்தான் பாண்டி. அந்தக் காட்சி விரியாமல் சுருங்காமல் இன்னு மிருக்கிறது. கைகால் முளைத்த சின்னஞ்சிறு கனவாகத் தவழ்ந்து அலைந் தான். தலைவாசல் கதவு உத்திரக்கட்டையைப் பற்றித் தவழ்ந்து படி யிறங்குகையில் பாண்டி இடித்தபோதும் துடித்துப் போவதில் வேகம் குன்றாமலிருந்தார். கனத்த பூமாலைபோல் கழுத்தைக் கட்டிக் கொண்ட பிஞ்சு மகன்! பள்ளிப் படிப்பில் மதிப்பெண்களை அள்ளி வந்து குவித்த மகன்! தீய பழக்கவழக்கங்களை மருந்துக்கும் தீண்டிப் பார்க்காத மகன்! வாழ்வின் பிற்பகுதியில் நடந்த நல்ல காரியங்களுக்கெல்லாம் காரண கர்த்தாவாக வரித்து வைத்திருந்த மகன்...

அம்மிக்கல் ஆட்டுஉரல் கழுவுவதுபோல் யாரோ அவனைக் குளிப்பாட்ட சிதறும் நீர்போலக் குலுங்கிக் குலுங்கிச் சிரிப்பதை... சோற்றுத் தட்டைப் பிடுங்கி கன்னங்கள் புடைக்க அவன் உணவை வாயில் திணிப்பதைப் பார்க்கும்போது... நின்ற இடத்தில் நிலம் இப்போதே இரண்டாகப் பிளந்துகொள்ளக்கூடாதா என்றிருக்கிறது.

வெள்ளிப்பிறையை தலையில் கவிழ்த்ததுபோல் வெள்ளை நிறக் குல்லா, புடைத்த நாசி, அடர்ந்த புருவம், விசாலமான நெற்றியில் தொழுகைத் தழும்பு. பிசிறின்றி நறுக்கப்பட்ட மீசை தாடி. மூக்கு நுனி மேல் பூதக் கண்ணாடி. கண்களில் மிருக வசீகரம். காலரில்லாத வெள்ளை ஜிப்பா, மெலிந்த கோடுகளில் கட்டமிட்ட வேஷ்டி சகிதமாக ஓய்வின்றிக் காலாடுவதால் தோளில் சிறுகுலுக்கத்தோடு வரவேற்றார் மவுலவி. இரண்டுக்கு நாலு சதுர அடி மேஜைக்கு முன் இடப்பட்டிருந்த முக்காலி களில் அமர்ந்தனர். அவசியமில்லாமல் அச்சிறிய அறையை நோட்ட மெடுத்தன காணிக்கையின் கண்கள். காரை பெயர்ந்து சாயம் வெளிறிய சுவர்களில் மெக்கா படமிருந்தது. அதனடியில் அலை அலையாய் உருது எழுத்துக்கள் ஓடின. நிச்சயம் இறந்திருக்கும் உத்திரவாதத்துடன், வரையப்பட்ட முதியவர் படமொன்றிருந்தது. பக்கவாட்டில் கதவற்ற மர அலமாரியின் எல்லா அறைகளும் பயன்பாட்டிலிருப்பதின் அடையாளமாக பொருட்கள் திணித்து நிரப்பப்பட்டிருந்தன. ஒரு வாழை இலைகூட சுருண்ட நிலையில் வெம்பியிருந்தது.

தேங்காய்ப் பூ கைக்குட்டையால் முகத்தை அழுத்தித் துடைத்து புத்துணர்வு பெற்றவராக ''சொல்லுங்க'' என்றார் மவுலவி. துயருறுவது பெரும் அவஸ்தை. அதை அடுத்தவரிடம் எடுத்துக் கூறுவது அதிலும் மகா அவஸ்தை. வார்த்தைகள் வழுக்கி விழாமல் வாக்கியங்கள் சுருண்டு கொள்ளாமல் பேச முடியும் என்ற நம்பிக்கையை காணிக்கை இழந்து விட்டிருந்தார். இருந்தும் அவர் எத்தனித்தபோது பிரச்சினையின் எல்லா நுனிகளும் பிடிபடாமல் நழுவின. இடதுதோளில் கிடந்த துண்டைப் புரட்டி நேர் செய்ததிலிருந்து அவர் குரலை எடுத்துப் பேசினார் பிச்சைக்கண்ணு.

''நம்ம பையன் ஒருத்தனுக்கு திடீர்னு கொஞ்சம் புத்தி பிசகிப் போச்சு. அது ஏன், எதனால இந்த கோளாறுனு பாத்து சரி பண்ணணும்.''

''என்ன வயசாச்சி?''

''பிராயத்துப் பையன்...'' வயதைத் துல்லியமாகக் கூற நினைத்து காணிக்கை பக்கம் திரும்பினார் பிச்சைக்கண்ணு.

''இருபத்திமூணு நடக்குது.''

''கல்யாணம் ஆயாச்சா?''

''இனிமேதான்.''

''மனக் குழப்பமுண்டாகி எத்தனை நாளிருக்கும்?''

''புள்ளிக்காரன் பாட்டிக்காரியோட திருழாவுக்குப் போனான். அங்கேயே ஆரம்பிச்சிருக்கும்னு நெனைக்கிறோம். மாறாட்டத்தோட தான் ஊரு வந்து சேந்தது. ரெண்டு மாசம் ஆவப் போவுது.''

''இவ்வளவு நாள் என்ன பண்ணுனீங்க?''

''சின்ன கோளாறா இருக்கும்னு நெனச்சது. ஆஸ்பத்ரியில காட்டுனம். ஒண்ணும் புண்ணியமில்ல. கரண்டெல்லாம் வச்சுப் பாத்தாக. பெத்த பிள்ளைக்கு கரண்டு வைக்க இவரு மனசு ஒப்பல. கோவில்ல கொஞ்சநாள் வச்சிருந்தா சரியாயிடும்னு பாத்தம். கொஞ்ச மும் மட்டுப் படல, கூடித்தான் போச்சு. இனி உங்களை வந்து பாத்தாத் தான் தீரும்னு நெனைச்சி வந்தோம்.''

''ம்... பேரு என்ன சொன்னீங்க?''

''சந்தனப்பாண்டி.''

''ம்...ம்''

காகிதம்போல் மேஜை பறந்து எழுந்து விடாதிருக்க வெயிட்டாக வைத்திருந்த கனமான புத்தகத்தை மவுலவி தன் பக்கம் இழுத்து கண்களை மூடிக்கொண்டு இரண்டாகப் பிளந்தார். பழுப்பேறிய பக்கங்களில் மங்கலான வரிகள் புரியாத மொழியில் கொடிகளாகப் படர்ந்திருந்தன. கண்ணாடியை சற்றே கண்களுக்கருகே தள்ளி, தாடியை நீவி ஆராய்ந்தவர், பக்கங்கள் புரளாமலிருக்க நைந்த பச்சை நிற நாடாவை எடுத்து குறிப்பு ஏற்படுத்திவிட்டு புத்தகத்தை நகர்த்தி வைத்தார். வெள்ளைக் காகித மெடுத்து எழுதத் தொடங்கினார்.

''அப்பா அம்மா பேரு சொல்லுங்க.''

சொன்னார்கள்.

அதற்கு மேல் ஒன்றும் கேட்கவில்லை. வெள்ளைக் காகிதத்தில் நீள நீளமாக எழுதித் தள்ளினார். வரிகள் வலது பக்கமிருந்து தொடங்கி இடது முனையில் வந்து முடிந்தன.

அடிக்கடி கண்களை மூடுவதும் உதடுகள் கிசுகிசுப்பில் நடுங்கு வதும் காகிதத்தை வாஞ்சையோடு தடவித் தருவதும் நெற்றி நெரித்து அறை மூலைகளை நாசிக்காற்றால் அவர் பக்கம் இழுப்பதுமாக சில நிமிடங்கள் மவுலவி தன் உலகில் சஞ்சரித்தார். காணிக்கையும் நண்பரும் சிறு சலனமுமின்றி அமர்ந்திருந்தனர். அந்த அறையில் மூவர் மட்டுமே இருப்பதாக காணிக்கைராஜ் கருதவில்லை. கண்ணுக்குப் புலப்படாத உருவில் குறளிகள் சிலவும் அங்கே நின்றுகொண்டிருக்கலாம் என நம்பி னார். அவர் தலைமேல் ஒரு குட்டிக் குறளி அமர்ந்திருக்கவும் வாய்ப்பிருந் தது. அப்படித்தான் தலை பாரமேறி கனத்தது. வெள்ளைக் காகிதத்தை கையிலெடுத்து பீடி சுற்றுவதுபோல் சுருட்டி மூன்று முறை அதன் மீது ஊதிவிட்டு மேஜை டிராயரிலிட்டார். அங்கிருந்தே செப்புத் தகடு

ஒன்றையும் எழுத்தாணியையும் எடுத்து முன்னே வைத்தார். இருவர் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தார். பேச்சைத் தொடங்கும் முன்னே அவர்களது கவனத்தை தன் நா நுனியில் குவித்துக் கட்டியபின் கூறினார்.

''மோகினி எதுப்பு. உசுரப் பிடுங்கதான் உத்தேசம். பையனுக்கு கடவுள் அனுக்கிரகம் வலுவா இருக்கு. அந்தப் பார்வையால உயிருக்கு ஏதும் பங்கமில்ல இது வரைக்கும். வீடு திரும்புற வழியில மூணு லெக்குல வண்டிக்கடியில பிடிச்சி தள்ளியிருக்கு. பிழைச்சு வந்ததே புண்ணியம். சேட்டைய ஆரம்பிச்சு நாப்பத்தெட்டு நாளாகியிருக்கு. பெண் தொடர்பு வகையில ஒரு சிக்கல் உண்டாகியிருக்கு. எதிர்ப்பட்டு அண்டியிருக்கா. ஏவலானு கிரகிக்க கூடுல. எதுக்கும் கவலைப் படாதீங்க. இப்போம் சக்கரம் எழுதித் தாரேன். கொண்டுபோய் கட்டி விடுங்க. எண்ணி இருபத்தோரு நாளுக்குள்ள வாதையை வெளியே பிடுங்கி எறிஞ்சுருவேன். கடைசி வெள்ளி கழிப்பு ஒண்ணும் செஞ்சுட்டா தெளிவாயிடும். அதிகமா ஒண்ணும் செலவாகாது. கைக்கடக்கமா பண்ணிக்கலாம்.''

இவர்கள் பணிவாகத் தலையாட்டினர்.

செப்புத்தகட்டில் எழுத்தாணி விரைந்தது. ஒற்றைக்கண் முறுக்கு பிழிவதுபோல் எழுத்துக்கள் சீராகப் பதித்தன. தகட்டை சுருட்டி தயாராக இருந்த தாயத்து குழாய்க்குள் திணித்து மெழுகு உருக்கியூற்றி அடைத்து, நகை பொதியும் காகிதத்தில் மடித்து நீட்டினார். கை நீட்டி அதைப் பெற்றுக்கொள்கையில் மனசும் உடலும் லேசாகி மிதந்தது.

பவ்யமாக நீட்டிய தட்சணையை அலட்சியமாக வாங்கி கல்லாவுக்குள் போட்டுவிட்டு மவுலவி நிமிர்ந்தார். ''பதினோரு நாள் விட்டு என்ன வந்து பாருங்க. எப்படியிருக்குனு சொல்லுங்க.''

விடைபெற்று எழுந்து கொள்வதற்கு முன் பிச்சைக்கண்ணு தனது பழைய பரிச்சயத்தை புதுப்பிக்க முயன்றார். ''ஏற்கனவே ஒரு ஜோலியா நான் உங்களை வந்து பார்த்திருக்கேன் ஞாபகமிருக்கா?''

ஞாபக அடுக்குகளில் அலைந்து ஏமாந்த மவுலவியின் கண்கள் பொய்யாகக் கனிந்தன.

வெளியில் கூராப்பு இறங்கி நிழல் விரித்திருந்தது. மாடப்புறாக் களின் அடிவயிற்று ரோமங்களாலான மேகத்தீவுக்குள் சூரியன் ஒய்ந்திருந் தான். கரும்புச்சாறு பிழியும் எந்திரத்தின் சுழலும் சக்கரங்களிலிருந்து துள்ளி எழுந்து வந்த கொத்து மணியோசை குதித்தலைந்தது. சஞ்சலம் குறைந்த மனித முகங்கள் அதிகமாக எதிர்ப்பட்டன. பஸ்ஸ்டாண்ட் பக்கத்து கட்டிடங்களெல்லாம் புதுப்பிக்கப்பட்டு மிளிர்ந்தன. ஏறக் குறைய எல்லாச் சுவர்களிலும் சாயம் பூசி விளம்பரக்காரர்கள் ஏதேதோ பெயரெழுதிப் போட்டிருந்தனர். ஒரு நாளுக்கு மூன்று முறை மாத்திரை மருந்துகள்போல் சிற்றூர்களுக்கு செல்லும் டவுண் பஸ்ஸுக்காக,

கைப்பைகள் மூட்டை முடிச்சுகளுடன் கிராமக்களையுடன் ஜனங்கள் பொறுமையிழந்து நின்றார்கள். அரக்கப்பரக்க ஜனங்களை இழுத்து இரண்டு கடைவாயிலும் வழிய வழியக் கவ்விக்கொண்டு நகரும் பஸ்களில் சாவகாசம் தெரிந்தது.

நாகர்கோவில் திருநெல்வேலி செல்லும் நேசமணி, கட்டபொம்மன்கள் நின்று செல்லும் இடம் வந்ததும் ''இனி நாம வீடு போய் சேர சுணங்கிரும். இங்கேயே ஓட்டல் கடையில சாப்பிட்டுட்டு போலாம்டே'' என்றார் காணிக்கை. ''ஓட்டல் கடையில என்ன உண்டு? பாக்கு சுண்ணாம்பு போட்டு அவிச்சி வச்சிருப்பான். அதைப் போயி திங்கணும்ங்குறியே! எதாவது காபி, டீ குடிச்சிட்டு வீடு போயி சேருவோம்.'' பிச்சைக்கண்ணு முகம் அஷ்டகோணலாய் நெளிந்தது. குரலில் பசி பரிந்தது. பிச்சைக்கண்ணுவின் கையைப் பற்றி இழுத்தவாறு காணிக்கை முன்னே நடந்தார். முதலில் ஒரு பிராந்தி கடைக்குள் நுழைந்து, நுழைந்த வேகத்திலேயே வாயைத் துடைத்தபடி வெளியே வந்தனர். சாப்பாட்டையும் தாழையூத்துலேயே முடித்துவிட்டு பஸ் பிடித்தார்கள்.

'பெண் தொடர்பு வகையில் பெரிய சிக்கல் உண்டாகியிருக்கும்' என்ற மவுலவியின் சொற்கள் அவருக்குள் சாட்டையாகச் சுழன்றன. ஊகிக்கும் முனைப்பில் தோற்றுத் தோற்று மறுபடியும் மறுபடியும் மூளை களைத்துப்போய் பிச்சைக்கண்ணுவின் அனுமானத்தை அறிந்து கொள்ளத் திரும்பியபோது அவர் தலை தூக்கத்தில் தொங்கி பஸ்ஸின் போக்கிற்கேற்ப ஆடியபடியிருந்தது.

★

''ஜிம்மிக்கி சோறு போட்டியா?'' அதிகாரமாக கனைத்தான் பாண்டி. அவனுக்கான உணவுத் தட்டோடு நின்றிருந்த அம்மா திகைத்தாள். தலையை இடது தோளுக்கு நெருக்கமாகக் கொண்டுவர கொண்டு வர அகந்தையின் திடம் மேலும் வலுப்படும்போல தலையைச் சாய்த்து கருவிழிகளை ஓரம் கட்டி மீண்டும் கத்தினான் ''ஜிம்மிக்கி சோறு போட்டியா?''

அவனைப் பிடித்திருக்கும் பேய்களில் ஒன்றின் பெயர் ஜிம்மியாக இருக்குமோ என்று முதலில் குழம்பினாள் அம்மா. அவள் முகத்தைப் பார்க்கப் பிடிக்காமல் பார்வையை வேறு பக்கமாகத் திருப்பிக் கொண்டவன் இரண்டு கைகளையும் வேகமாக மோதி கைவிலங்கிலிருந்து 'கிலீங்' என்ற ஒலியை எழுப்பினான். அந்தச் சத்தம் அம்மாவை கலவரப்படுத்தியது. கட்டுப்படுத்த முடியாத ஒரு காற்று அவளுக்குள் மோசமாக வீசியது. அது ஆத்திரமாகவோ அன்பாகவோ வெறுப்பாகவோ மாற இயலாமல் மறுபடி மறுபடி வெறுமே அவளை அலைக்கழித்தது. அவள் தலையை நிமிர்த்தி வளவுக்கு வெளியே பார்த்தாள். பட்டும் பச்சையாக,

பொட்டலும் புல்வெளியுமாகத் தெரிந்த இடத்தில் சில குஞ்சுகள் சூழ கோழி மண்ணைக் கொத்திக் கிளறிக்கொண்டிருந்தது. வேண்டிக்கொள்ள அவள் கைவசம் கடவுள்கள் தீர்ந்துபோனார்கள். மிக்கேல் புனித தூதரான பாதுகாவலரை மீண்டும் நினைத்து மெழுகுவர்த்திக் கணக்கில் மேலும் பதிமூன்றைக் கூட்டிக்கொண்டாள். சூடான சோறும் குழம்பும் அவித்த கோழிமுட்டை ஒன்றுமாக உணவுத்தட்டை பாதுகாப்பான தூரத்தில் வைத்தாள். பசியற்ற நேரங்களில் பாண்டி சோற்றுத்தட்டை தலைக்கு மேலே புடைப்பதுபோல வீசி 'மழை பெய்யுது மழை பெய்யுது' என்று சிரிப்பான். பசித்தால் சாப்பிடட்டும் என்று நினைத்து தள்ளி வைத்து விட்டு வீட்டுக்குள் வந்தாள். கதவைச் சாத்த சங்கடமாக இருந்தது. சாத்தா மலிருப்பது அதை விட சங்கடமானதாக இருந்தது. கதவைச் சாத்தும் போது காற்றின் செயல் போல் நடித்தாள். கட்டைவிரலால் ஈரக்கண் களைத் துடைத்துக்கொண்டாள்.

குழம்பில் சூடு இருந்ததால் ஈக்கள் உணவுத்தட்டில் அமர முடி யாமல் தத்தளித்தன. ஜிம்மி திடீரென்று முதுகுப் பக்கத்திலிருந்து நடந்து வந்து அவனுக்கு முன்னே நின்றது. அதன் கண்கள் ஈரத்தினூடே காவி நிறத்துக்கு மாறிக்கொண்டிருந்தன.

''சாப்பிட்டியா?'' என்று அதட்டினான். ஜிம்மி கழுத்தில் சுளுக் கெடுப்பது போல் தலையைத் திருகி முறித்தது. உணவுத்தட்டையும் அவனையும் ஒவ்வொரு கண்ணால் மாறி மாறிப் பார்த்தது. ''சாப்பிட் டியா?'' மீண்டும் அதட்டினான். அது உடலைக் குழைத்து வாலால் வட்ட மடிக்கத் தொடங்கியது. வால் உயரும்போது வாலின் நுனியிலிருந்த ரோமங்கள் வெள்ளைத் தாமரை மொட்டு போலிருந்தது. ''சாப்பிடு'' என்றான். ஜிம்மி பார்வையை விலக்கி பராக்கு பார்த்தது. ''என் சாப்பாடு தான். எனக்கு பசியில்ல. நீ சாப்பிடு.'' ஜிம்மி பதிலொன்றும் சொல்ல வில்லை. உடலைத் தூக்கி புட்டத்தைத் தேய்த்தபடி நகர்ந்து உணவுத் தட்டை எடுத்தான். ஜிம்மி அதை கவனித்தது. அசௌகர்யமாக கால் களைப் பின்னியது. மூச்சின் இழுப்பால் அதன் வயிறு மட்டும் தனியே குலுங்கிக்கொண்டிருந்தது.

பாண்டி ஒரு கையில் தட்டைப் பிடித்துக்கொண்டு இன்னொரு கையில் சோற்றைப் பிசைந்தான். விலங்குகள் தடையாக இருந்தன. இரும்பின் உறுதி எரிச்சலை ஏற்படுத்தியது. கோபப்படவில்லை; பெருமூச்சின் போக்கில் விட்டுவிட்டான்.

பிசைந்த சோற்றை தட்டோடு ஜிம்மிக்கு முன்னே வைத்தான். அது முடிவெடுக்க முடியாமல் நின்றது. முகர்ந்து பார்க்கக்கூட அதற்கு மனம் தகையவில்லை. ''சாப்பிடு ஜிம்மி சாப்பிடு'' அவன் பரிவோடு கெஞ்சி னான். அது அவனை ஒருமுறை அழுந்தப் பார்த்துவிட்டு காதுகளை உடுக்குபோல் அடித்தது. ஜிம்மி ஓடத் தயாராகி விட்டதை குறிப்பால் உணர்ந்த பாண்டி ''ஓடாத நில்லு, ஏய்...'' என்று அதன் மேல் கை

போட்டான். ஜிம்மி அவனை நெருங்கி அவன் இடது தோளை முகர்ந்து நுனி நாவால் லேசாக நக்கி ஈரப்படுத்தி அடித்தொண்டையில் குழறியது. ''இந்தா பாரு! நான் திங்கேமுலா, இப்படித்தான் நீயும் தின்னு.'' அவன் ஒரு கவளத்தை எடுத்து தன் வாயில் போட்டுக்கொண்டு சொன்னான். ஜிம்மிக்கி இந்தச் செயலில் எந்த ஆர்வமும் இல்லை. ''சொன்னா கேளு நாயே, தின்னு'' பாண்டி மீண்டும் வற்புறுத்தினான். ஜிம்மி தனக்குத் தெரியாமலே அவன் ஆத்திரத்தை தூண்டிக்கொண்டிருந்தது. ''நான் சொன்னா நீ கேக்க மாட்டே, நீங்க சொன்னா மட்டும் நாங்க கேக்கணுமோ, ம்...? அன்னைக்கி நான் ஊரை விட்டு போவணும்னு ஓடையைத் தாண்டி நடக்கும்போது குறுக்க விழுந்து எந்துச்சி நின்னு ரெண்டு முன்னங்காலையும் தூக்கி என் நெஞ்சுல வச்சு மறிச்சியே... சரி போனாப் போவுதுனு உன் மனச மதிச்சித்தானே நான் திரும்பி வந்தேன். விட்டுருந்தா அப்படியே போயிருப்பேன்லா. இப்படி உன்கிட்ட கொறம் பாடிக்கிட்டு இருக்க மாட்டேம்லா. இங்க பாத்தியா... கைல கால்ல விலங்கு போட்டு என்னிய கிறுக்கன் மாதிரி கெட்டிக் போட்டுருக்காவ. அது உனக்கு தேவையில்லாத விசயம். நீ சாப்பிடு.'' நீட்டுவாக்கில் தீவிரம் அதன் கண்களின் சுருக்கத்தில் பளிச்சிட்டது. அது நடக்கத் தொடங்கியது. வளவின் சிறிய வாசல் நோக்கிப் போனது. ''ஏய் ஜிம்மி... ஏய்... ஏய் ஜிம்மி இந்தா ஏய் ஏய்...'' பாண்டி பல்வேறு தொனியில் அரற்றினான். ஜிம்மி சட்டை பண்ணவில்லை. ''நன்றி கெட்ட நாயே... நாசமா போ'' என்று கத்தியபடி உணவுத் தட்டிலிருந்த முட்டையை எடுத்து அதன் மீது எறிந்தான். மிக வேகமாக அதைச் செய்தான். விலங்குகள் தடுத்து குறி பிசகி முட்டையும் ஜிம்மியும் வேறு வேறு பாதையில் சென்றன. கெட்ட வார்த்தையைக்கூட முழுசாக உச்சரிக்க முடியாத ஆத்திரத்தில் உணவுத்தட்டை தூர எறிந்தான். அது சுவரில் மோதி பாதி சிந்தியும் சிந்தாமலும் மீண்டும் அவன் பக்கமே திரும்பி வந்தது. பல்லைக் கடித்துக்கொண்டு என்ன செய்யலாம் என்று யோசித்தவாறே அழுதான். கண்ணீர்த் துளிகளும் அவனை விட்டு விலகி ஓடுவதில் அவசரம் காட்டியதும் அழுவதை சட்டென்று நிறுத்தி விட்டான். கண்ணில் நிறுத்தப்பட்ட நீர் நெஞ்சில் நெருப்பாக எரியத் தொடங்கியது.

'இந்த விலங்குகளை உடைக்க வேண்டும் அல்லது கை கால்களை உடைத்து எடுக்க வேண்டும்' என்ற தீர்மானத்தோடு தன்னோடு தானே மோத ஆரம்பித்தான். வலியை சகிக்க வசதியாக கீழுதட்டை தாடைவரை வாய்க்குள் இழுத்து பற்களுக்கு நடுவில் வைத்துக் கடித்துக்கொண்டான். சில நிமிடங்கள் புயல்போலக் கொந்தளித்தான். இரும்புக்கண்ணிகள் அரக்கனின் சிரிப்பாகச் சிணுங்கின. மிக நீண்ட போராட்டத்துக்குப் பிறகு அமைதி வந்தது. நீரில் ஊறிய ரத்தத்தின் நாற்றம் வந்தது. ரணத்தின் குரல் பித்தையும் அதட்டி கட்டுக்குள் கொண்டுவரும் வல்லமை படைத்ததாக இருந்தது. சோர்ந்து போய் மரத்தில் சாய்ந்து அமர்ந்தான். இமைகள்

தாமாக மூடிக்கொண்டன. நெஞ்சு விம்மி விம்மித் தணிந்தது. உடலே புண்ணாகி விட்டதுபோல் திரேகமெங்கும் தீ எரிச்சல் ஏற்பட்டது. மனம் லேசாகி மிக லேசாகி காணாமலே போய்விட்டது.

உடை மரத்தின் கிளைகளுக்கு பூனல் பறவைகள் வந்தன. பூனல் கூட்டம் திக்கிமுக்கி இசையமைக்கத் தொடங்கியது. அவற்றை அவனால் பார்க்க முடியவில்லை. பூனல் பறவைகளின் அப்பழுக்கற்ற குரல்கள் ஒரு விதமான கள்ள இதத்தை அவனுக்குத் தந்தது. க்கிக் என்றொலிக்கும் இந்தப் பறவையின் குரலைத் திருப்பிப் போட்டால் எப்படி ஒலிக்குமோ அப்படி ஒரு ஒலியை அவன் ஒருமுறை கேட்டிருக்கிறான். ஒரு முறை. வாழ்வில் ஒரே ஒரு முறை. அது நன்றாக அவனுக்கு நினைவிலிருக்கிறது. முத்தத்தில் தைத்திருந்த உதடுகளையும் மீறி முதல் உந்தலில் ஒலித்தது.

உடலைத் தளர்த்தி தோளில் தலையைச் சாய்த்து வைத்தான். தூக்கம் போல் ஒரு மயக்கம் அவனைத் தழுவியது. விரல் சொடுக்கை விட சிறிய கூர்மையான அந்தப் பறவையொலி உருவிச் செல்லும் ஒரு எரி நட்சத்திரத் தைப் போல அவனது சாவின் அடிவாரம் வரை வந்துகொண்டே யிருக்கும் என்று தோன்றியது. ஒரு மின்னலை நினைவில் மீட்டெடுத்த தின் விளைவாக கோடைமழையாக அவனுக்குள் எண்ணற்ற சொற்கள் தெறித்தன. யாரோ ஆள் வருவது போல அணக்கம் ஏற்பட்டது. சிரமத் தோடு இமைகளை விரித்துப் பார்த்தான்.

பிய்ந்துபோன அவித்த முட்டையை பற்தடம் பதியாமல் வாயில் கவ்வித் தூக்கிக் கொண்டுவந்து அவன் உணவுத் தட்டில் வைத்துவிட்டு வந்த வழியே திரும்பிப் போனது ஜிம்மி.



தேவதைகளின் கண்களில் மின்னுகின்றன
உடலெனப் படுவதின் கன்னிமையும்
உளமெனப் படுவதின் குழந்தைமையும்
உயிரெனப் படுவதின் ஆனந்தமும்...

# 1

# எக்ஸ்-மஸ் ஸ்டார்

## ஒன்று

நீலம், மஞ்சள், சிவப்பு, ஆரஞ்சு என வீடுகளின் முன்னே விதவிதமாய் ஒளிவீசிக்கொண்டிருந்த கிறிஸ்மஸ் ஸ்டார்களை அண்ணாந்து பார்த்தபடியே தெற்குத் தெருவிற்குள் ஓடிக்கொண்டிருந்தான் பாண்டி. பெரியப்பா வீட்டு முற்றத்திற்கு வந்ததும் ஏறிட்டுப் பார்த்தான். பொன் நிறத்தில் நட்சத்திரம் மின்னிக்கொண்டிருந்தது. அமலா அக்காவின் முகம் ஸ்டாருக்கு மேலே தெரிந்தது. தங்கபொம்மை போல. கையில் பொரி வாணத்தை வைத்துச் சுற்றிக்கொண்டிருந்தாள். அவளை ஜோஸ்பின் அக்கா தூக்கி வைத்திருந்தாள்.

பாண்டி தனது வெடிகள் தீர்ந்தவுடன்தான் இங்கே ஓடி வந்தான். பாய்ந்துபோய் மாடியேறினான். ஜெசிந்தா, ஜாய்ஸ் அக்காக்கள் தரைச் சக்கரம் விட்டுக்கொண்டிருந்தார்கள். பாண்டியைக் கண்டவுடன் ஜோஸ்பின் அக்கா கூப்பிட்டு ஒரு பாக்கெட் பெரிய பொரிவாணத்தைக் கொடுத்தாள். பாண்டி மெழுகுவர்த்தியில் கொளுத்தி அமலா அக்காவுக்குப் போட்டியாக ஆட்டினான். ஆனால் அவள் உயரே இருந்தாள்.

''அம்முக்குட்டியில்ல... அக்காவுக்கு கை வலிக்கி. இறங்குடா. எங் கண்ணுல்ல...'' ''ஊஹூம்...'' ''ஜெசி, இவள எடுட்டி, கீழ போயிட்டு வாரேன்.'' நட்சத்திரங்கள் சீறிச் சிதறுவதைக் கண்டு உற்சாகத்தில் இருந்த அமலா ஆள் மாற்றத்தைப் பொருட்படுத்தவில்லை. இப்போது ஜாய்ஸுக்கு பூவாளியைப் பற்ற வைக்க பாண்டியின் மத்தாப்பூ தேவைப் பட்டது.

அடுத்த அரைமணி நேரத்திற்குள் பொரிச்சீற்றங்கள் அடங்கி புகையும் கலைந்து போய்விட்டது. அமலாவின் கையில் மட்டும் பொரி வாணங்கள் முடிவின்றி முளைத்துக்கொண்டிருந்தன.

கேக்குகளோடு வந்த ஜோஸ்பின் அக்கா எல்லோருக்கும் கொடுத்து விட்டு அமலாவை மீண்டும் வாங்கிக்கொண்டாள். கைப்பிடிச் சுவரிலிருந்த தட்டிலிருந்து கேக்கைப் பிய்த்து கொஞ்சங் கொஞ்சமாக அமலாவுக்கு ஊட்டினாள். தனக்கு யாரும் ஊட்டி விட்டதாக பாண்டிக்கு ஞாபகமில்லை. அதுவும் போக, விரித்துக் கொடுத்தால் பாண்டியைப் போல் அவளுக்குத் தானாகத் தூங்கத் தெரியாது. அக்காக்களோ

அம்மாவோ தோளில் போட்டு தூங்கு தூங்குனு தட்டினால்தான் தூங்கத் தெரியும்.

ஊரில் பிள்ளைகள் எல்லோருக்கும் அக்கா இருந்தார்கள். பாண்டிக்கு மட்டும்தான் இல்லை என்பதை பாண்டி பள்ளியில் சேர்ந்த பின்தான் உணர்ந்தான். 'ஐயோ... அக்கா என்று கூப்பிட நமக்கு யாருமே இல்லையே' என்று அவன் யோசித்துக் குழம்பி கவலைப்பட்டபோது சிங்கராயர் பெரியப்பா வீட்டிலிருக்கும் நாலு பேருமே நமக்கு அக்கா தான் என்ற விபரம் உறைத்தது. மகிழ்ச்சியடைந்தான். அவர்களில் அமலா அக்காதான் சின்ன அக்காவாகவும் அவனுக்கு பிடித்த அக்காவு மாக இருந்தாள். மற்ற அக்காக்கள் பெரிய பெரிய அக்காக்களாக இருந் தார்கள். அவர்களிடம் பேசிப்பழகிய போதெல்லாம் சின்ன பயமும் போலி அமைதியும் ஏற்பட்டது. அமலா அக்காவிடம் அப்படி சங்கடங் கள் எதுவும் ஏற்படுவதில்லை. பேசிச் சிரித்து தொட்டு விளையாடி சகஜ மாகப் பழக முடிந்தது. அவனைவிட கொஞ்சம்தான் உயரம். ஒரு வயசு தான் மூப்பு. பாண்டி ஒண்ணாம் வகுப்பு படிக்கிறான். அமலா அக்கா மூன்றாம் வகுப்பு.

இங்கிலீஷில் இருபத்தியாறு எழுத்துக்களை அவனுக்கு வீட்டு மொட்டைமாடியில் வைத்து இரண்டு மாசமாக அந்திநேரங்களில் அக்காள் சொல்லிக் கொடுத்தாள். அப்போது அவனுக்கு ஏழு எழுத்துக் கள்தான் நினைவில் நின்றது. ஆறாம் வகுப்பு ஜாய்ஸ் அக்கா அவன் மறந்தபோதெல்லாம் மிரட்டினாள். ''இருபத்தியாறும் என் எழுத்து. படிச்சிட்டு என்கிட்ட தந்துறணும்.''

ஒருநாள் மாலையில் வழக்கம்போல் மொட்டை மாடியில் தாய விளையாட்டுக்கு நடுவே அமலா அக்காவிடம் பாண்டி கேட்டான் ''எக்கா, நான் உன் தம்பிதானே? நீ என் அக்காதானே?'' 'ஆமா' என்பதுபோல் தலையாட்டினாள். ''என் தலையில சத்தியம் பண்ணு.'' அவன் உச்சந்தலையில் கை வைத்து ''உன் மேல சத்தியமா நீ என் தம்பி தான்'' என்றாள். பாண்டி உச்சி குளிர்ந்து போனான். அவனைப் பிடித் திருந்த சின்னத் தனிமை அன்றோடு விலகிப் போய்விட்டது. அதற்கு பிறகு ஒருபோதும் அமலா அக்காவின் அன்பிலிருந்து பாண்டி விலகவே யில்லை, புள்ளிமானைத் திருடும்வரை.

## இரண்டு

இருள் நகர்ந்தது வெண்கல மணி குலுங்கும் ஒலியுடன். பாண்டி விழித்துக்கொண்டான். கண்களைத் திறக்கவே முடியவில்லை. இருள் நடந்தது. கருகருவென்று திமிர்த்தது. இருளின் கண்களில் உயிரின் ஈரம் பளபளத்தது. முத்துப்போல அது சுழன்றது. தடித்த தூண்கள் தெரிந்தன. கருப்பு மண்டபம் குலுங்கியபோது யானை தும்பிக்கையை நெளித்து

சத்தமில்லாமல் பிளிறியது. யானையின் பிளந்த வாய் அகன்ற குகையாக அவனை விழுங்கக் காத்திருந்தது. பயத்தின் மடியில் துடித்துத் துரும்பாகி பல மடிப்புகளாக ஒடிந்தான். மானைத் தேடிக்கொண்டு யானை வந்து விட்டது. அலறினான். குரலின் நிழல் மட்டுமே வெளியே விழுந்தது. அவன் உடலுக்குள் சொட்டுக்கும் சொடுக்குக்கும் கூட ஓசையில்லை. அவனை அவன் தொட்டுக்கொள்ள எத்தனித்தான். கைகள் மட்டும் இறந்து போயிருந்தன. மூக்கு நுனியில் மூச்சு அமர்ந்துகொண்டு வேடிக்கை பார்த்தது. நெஞ்சு திணறி உடலைப் புரட்டிப் பிழிந்தது. ஆகா... இது சாவுதான் என்று உணர்ந்தபோது மரண அமைதி திரும்பியது. புதுப்புது பயங்கரங்களைக் களைந்து மனசு மீண்டும் மனசானதும், அடிவானி லிருந்து பாய்ந்து புறப்படும் பறவைபோல 'அம்மா' என்ற சொல் உதட்டுக்கு வெளியே ஒலியோடு தெறித்தது.

அவன் குரல் கேட்டதும் அருகில் படுத்திருந்த ஜெசி அக்கா விழித்துக்கொண்டாள். கெட்ட கனவின் விளையாட்டிலிருந்து அவனை வெளியே இழுத்துப் போட்டாள். மடக்கிக் கோர்த்து நெஞ்சுக்கூட்டில் வைத்திருந்த கைகளைப் பிரித்து தரையில் விரித்துப் போட்டாள். உறக்கம் அந்த இரவில் முடிவற்ற ஒரு ரயிலாக உலகைச் சுற்றிக்கொண்டிருந்தது. பாண்டியை நள்ளிரவில் இறக்கிவிட்டுவிட்டுப் போய்விட்டது.

அருகில் படுத்திருந்த அமலா அக்காவின் முகத்தை கிறிஸ்மஸ் ஸ்டாரின் மெல்லிய விளக்கொளியில் கண்டான். அவள் நன்றாக உறங்கிக் கொண்டிருந்தாள். நித்திரை லயிப்பில் பிஞ்சு உதடுகள் லேசாக திறந்திருந் தன. இரவு பாடம் படித்துவிட்டு பெரியம்மா வீட்டிலேயே தூங்கிப் போனது நினைவுக்கு வந்தது. வானத்திலிருந்து தொங்கும் நட்சத்திரமாக சிவப்பு கிறிஸ்மஸ் ஸ்டார் மாடிக்கு மேலே ஒளிர்ந்து கொண்டிருந்தது.

சிறுவன் பாண்டியை அந்தச் சின்ன மான் திருடன் பாண்டியாக்கி விட்டது. மஞ்சணத்தி மரத்தால் செய்யப்பட்டது போன்ற மஞ்சள் நிறத் தில் எலியை விட சிறிய மானை சுப்பையா கொண்டுவந்து இரண்டாம் வகுப்பு வாத்தியார் யாக்கோபு சார்வாளுக்கு கொடுத்தான். எல்லாக் குழந்தைகளைப் போல்தான் பாண்டியும் அந்த மானை ஆர்வமாகப் பார்த்தான். எல்லாக் குழந்தைகளையும் போலவே கவனத்தை மானிலி ருந்து கரும்பலகைக்குத் திருப்பிக்கொண்டான்.

வாத்தியாரின் மேஜைமீது மான் வடக்குத் திசை பார்த்து நின்று கொண்டிருந்தது. வேடனின் வலைக்குள் சிக்கிக்கொண்ட புறாக்கள் கூடிப்பேசி ஒன்றுபட்டால் உண்டு வாழ்வென்று சேர்ந்தெழுந்து பாடப் புத்தகத்தில் பறந்துபோனபோது... 'நான் என்ன செய்யட்டும்' என்று பாண்டியிடம் கேட்டது மான். அப்போது அது முன்னங்கால் ஒன்றை மேஜையில் சலிப்போடு உதைத்துக்கொண்டது போலிருந்தது.

யாக்கோபு வாத்தியார் கண்டிப்பானவர் என்று பெயர் பெற்றவர்.

பிள்ளைகள் எல்லோரிடமும் 'பொல்லாதவன்' சித்திரமே ஆழப் பதிந்திருந்தது. சுப்பையா மானைக் கொடுத்து சார்வாளை நைஸ் பண்ணியது பிரம்பின் பேயாட்டத்திலிருந்து கொஞ்சம் தப்பிக்கத்தான். மான் மீதான அலாதி பிரியத்தால் அன்றைய தினமே மாணவர்களிடம் மான் கறி தின்றவர்களை கை தூக்க உத்தரவிட்டார். காட்டுப் பன்றி தின்றிருந்த இன்னாசி ஆர்வத்தில் கை தூக்கி வசையால் அவமானப்பட்டான். 'எங்க வீட்டுல கறிச் சட்டி ரொம்ப சின்னது' என்று பயத்தோடு விளக்கம் கொடுத்தான் நாளிவாயன்.

யாக்கோபு வாத்தியார் ராத்திரியில் வேட்டைக்குப் போவார். இரவு முழுக்க கூட்டாளிகளோடு டார்ச் விளக்கும் துப்பாக்கியுமாக காடு முழுக்க அலைவார். பனையில் சுழன்றேறும் அணிலைக்கூட குறி தப்பாமல் சுட்டுவிடுவார். உறங்கும் முயல்களை காதைப் பிடித்துத் தூக்கி கழுத்தைத் திருகிவிடுவார். பகலில் பள்ளிக்கூடத்துக்கு வருவார். யாக்கோபு சார்வாள் தும்மினால்கூட டுமீல் டுமீல் என்றுதான் சத்தம் வரும். எனவே, கொம்பு வளராத அந்தச் சின்ன மான் வேட்டைக்கார சார்வாளைக் கண்டு அஞ்சியதில் தப்பில்லை.

காட்டில் அலைந்து திரிந்ததில் வசமில்லாமல் டயர் செருப்பையும் மீறி காலில் சிலநாள் முள் ஏறிக்கொள்ளும். புது முட்கள் பிடுங்கி எடுத்தால் சுலபமாக வந்துவிடும். இற்றுப் போனவை நுனி முறிந்து காலிலேயே தங்கி விடும். மத்தியான இடைவேளையின் போது 'ரெண்டாப்பு' பையன்கள் யாரையாவது கூப்பிட்டு காலிலிருக்கும் முள்ளை எடுத்து அகற்றச் சொல்வார். உண்ட மயக்கத்தில் பெஞ்சில் படுத்து நன்றாகத் தூங்குவார். தூக்கம் கலையாதபடி நாசுக்காக முள்ளை உள்ளங்காலிருந்து அகற்ற வேண்டும். கொஞ்சம் வலியெடுத்தாலும் இன்னொரு காலை வீசி உதைத்துக் கண்டிப்பார்.

யாக்கோபு வாத்தியாரை மானுக்கு சுத்தமாகப் பிடிக்கவில்லை. மேஜையில் வடக்கு பார்த்து நின்றபடி அது பாண்டியோடு மௌனமாகப் பேசிக்கொண்டிருந்தது. பாடத்தில் அவன் கவனம் சிதறும் அளவுக்கு அது கெஞ்சி மன்றாடத் தொடங்கியது. 'இந்தக் கொடுமைக்காரனிடமிருந்து என்னை எப்படியாவது காப்பாற்றி விடு' என்று பாண்டியிடம் கெஞ்சியது. பாண்டிக்கு மானைப் பார்க்க பாவமாகவும் பரிதாபமாகவுமிருந்தது. மானுக்கு எப்படியாவது உதவ வேண்டும் என்று நினைத்தான்.

யாக்கோபு சார்வாள் ஏதோ அவசரமாய் மூணரை மணிக்கே கிளம்பிய ஒருநாள் மிக ரகசியமாக மானை மீட்டு புத்தகப்பைக்குள் போட்டு களவாளிப் பயலாகிவிட்டான். தெருவில் தனியே நடந்துவரும் போது களவின் சுமை சிலுவை போல கனத்தது. யார் யாரையோ பார்த்து தாறுமாறாகச் சிரிக்க வேண்டியிருந்தது.

மானைப் பராமரிக்க வீட்டில் சரியான இடம் தோதாக அமைய

வில்லை. அடுப்பங்கரையை அம்மா மட்டுமே புழங்கினாள். அங்கே ஒரு மூலையில் வைக்கலாம் என்று யோசித்தான். பசியில் மான் பாத்திரங்களை உருட்ட ஆரம்பித்துவிட்டால் சிக்கலாகிவிடும் என்று அந்த முடிவைத் தவிர்த்தான். அவனைத் தவிர மான் யார் கண்ணிலும் தட்டுப்பட்டுவிடக் கூடாது என்ற கொடுமையான விதி அவனை வீணான நெருக்கடிக்குள் பிடித்துத் தள்ளிவிட்டது.

அன்றைக்கு புத்தகப் பையிலேயே மானைத் தங்க வைத்தான். மான் சோறு திங்குமா என்று யாரைக் கேட்பது! குறிப்பாக வெந்தயக் குழம்பு விட்டு பிசைந்து உருட்டிக் கொடுத்தால் ஏற்றுக்கொள்ளுமா? யார் கண்டது! முருங்கை மரத்தின் தாழ்வான கிளையிலிருந்து கொஞ்சம் இலைகளை உருவிப் புத்தகப் பைக்குள் போட்டு அன்றைய இரவை சமாளித்தான்.

பள்ளிக்கூடத்தில் மறுநாள் எல்லோரும் மானைத் தேடினார்கள். யாக்கோபு சார்வாள் கண்கள் செம்மண் உருண்டைகள்போலச் சிவந்துவிட்டன. 'நாளைக்கி அந்த மான் என் மேஜைக்கு வரலைனா பிச்சிப் புடுவேன் பிச்சி' என்று மிரட்டி எச்சரித்தார். பாண்டிக்கி குலை நடுங்கிப் போனது. மானை என்ன செய்வதென்று தலையைப் பிய்த்துக்கொண்டான். இரவெல்லாம் யோசனை. தூக்கமே இல்லை. விடிந்ததும் முதல் வேலையாக அமலா அக்காவை சந்தித்து அவளிடம் ஆலோசனை கேட்க வேண்டுமென்று நினைத்தான். அமலா அக்காவிடம் பாண்டி எதையும் ஒளித்து மறைப்பதில்லை. அவள் அவனுக்கு அக்காவாக மட்டுமல்லாமல், ஃப்ரண்டாகவும் இருந்தாள். கனவு கண்டால் கூட, அது நல்லதோ கெட்டதோ அதை மறைக்காமல் கண்டதைக் கண்டபடியே அக்காவிடம் சொல்லிவிடுவான். ஆனால் இந்த மான் விசயத்தில் அவனால் அப்படி நடந்துகொள்ள முடியவில்லை. தன்னைத் திருட்டுப் பயல் என்று கருதி வெறுத்தொதுக்கி விடுவாளோ என்று உள்ளூர பயமாக இருந்தது. மான் பெருசா, அமலா அக்காவின் சினேகம் பெருசா என்றொரு கேள்வி எழுந்தால், சற்றும் தாமதிக்காமல் அமலா அக்காவின் சினேகம்தான் பெருசு என்பான். எனவே மறைத்தது மறைத்ததாகவே இருக்கட்டும் என்று முடிவை மாற்றிக்கொண்டான்.

நல்லவேளையாக ஒரு வாரம் கிறிஸ்மஸ் லீவாக இருந்தது. அதற்குள் இந்த மான் நமக்கு வேண்டாம் என்ற முடிவுக்கு வந்துவிட்டான். நியூ இயர் மாஸ் முடிந்து வரும்போது அக்காவிடம் பயந்து பயந்து சொன்னான். ''நீ திருடினா எங்கூடப் பேசாத'' என்று கோபித்துக் கொண்டு போய்விட்டாள். மறுநாள் காலை ஸ்கூலுக்குப் போகுமுன் சர்ச்சுக்கு கூட்டிக்கொண்டு போனாள். நுழைந்தவுடன் மானைப் பிடுங்கி எதுப்பில் இருந்த கப்ரியேல் தூதரின் பீடத்தில் வைத்துவிட்டாள். 'இனிமேல் திருடமாட்டேன்' என்று முழங்காலிட்டு கர்த்தரிடம் ஜெபிக்க வேண்டியதாயிற்று.

## மூன்று

அமலா அக்கா கன்னியாஸ்திரியானதன் காரணம் அமலா அக்கா அல்ல. சேசுமரியாயி பாட்டியும் கர்த்தராகிய ஏசுவும்தான். கடவுள் சேசுமரியாயி பாட்டி வழியாக உலக நிர்ணயங்களுக்காகச் செயல்பட்ட போது அது நடந்தது.

சிங்கராயர் பெரியப்பா பாண்டியின் தாத்தாவுக்கு ஒன்று விட்ட சித்தி மகன். கல்யாணமாகி பல வருடங்களாக பிள்ளை பாக்கியமில்லை. வேளாங்கண்ணி மாதா கோவிலுக்கு வெள்ளித்தொட்டில் நேர்ச்சை நேர்ந்து பார்த்தும் பலனில்லை. நாட்கள் மாதங்களாக வருஷங்களாக ஓடிக்கொண்டிருந்தன. குலவிளக்கில்லாத வீட்டில் சேசுமரியாயி பாட்டி கொஞ்ச காலம் இருட்டுக்குள் பல்லைக் கடித்தபடி உலவிக்கொண்டிருந் தாள். காற்று அசைவதிலிருந்து கடுகு முளைப்பதுவரை எல்லாம் அந்தக் கடவுளின் அருள் என்று அவளுக்குத் தெரிந்திருந்தது. இருந்தாலும் மருமகள் மலடியாக இருக்கும்போது கடவுள் என்ன கருணை காட்டிவிட முடியும் என்று அவளுக்கு யோசனை ஓடிற்று. நல்லநிலத்தில் வித்து போட்டால் முளைக்கும்; பாறையில் தூவினால், குருவிகள்தான் கொத்திக்கிட்டுப் போகும் என்ற கோணத்தில் மருமகளிடம் கறுவி விழ ஆரம்பித்தாள். மருமகள் வாயில்லாப்பூச்சியாக ஒடுங்கி ஒதுங்கிப் போனாள். மகனுக்கு இரண்டாம் கல்யாணத்துக்கு துப்பு தேடத் தொடங்கினாள். பொண்ணு கிடைத்ததும் மூத்தவளைத் தள்ளி வைத்து விட முடிவு செய்தாள். மகன் இதற்குச் சம்மதிக்கவில்லை. இன்னும் இரண்டு மாசம்தான் பாப்பேன், மூன்று மாசம்தான் பாப்பேன் எனக் கெடு விதித்தாள்.

மகன் கடைசியாகப் பொறுமை இழந்து சேசுமரியாயி பாட்டியின் தலையைத் துண்டாக அறுத்து தலைக்கொண்ணு, முண்டத்துக் கொண்ணுனு ரெண்டு கல்லறை கட்டிப் போடுவேன் என்றார். பாட்டி மனமுடைந்து பல நாட்கள் படுத்த படுக்கையாகக் கிடந்து மருமகளை வசை வார்த்தைகளால் அறுத்துக் கிழித்துக்கொண்டிருந்தாள். அவள் கண்ணீர்த்துளிகளும் அனத்தலும் வீட்டின் மூலைமுடுக்கெல்லாம் தெறித்த வண்ணமிருந்தது.

கனவை சேசுமரியாயி பாட்டி 'கினா' என்றே சொல்வாள். கனவு களுக்கான விளக்கங்களும் காட்சிகளுக்கான ரகசியக் குறியீடுகளும் அவளுக்கு அத்துப்படி. பாட்டியின் பரிதாப நிலையைக் கண்டு மனமுரு கிய கடவுள் கனவில் தோன்றினார்.

புஞ்சைக் காடு வயல் வரப்பெல்லாம் பச்சைப் பசேலென்று கண்ணுக்கெட்டும் தூரம் வரை விரிந்து கிடக்கிறது. வானம் இருட்டியும் இருட்டாமலும் கமுக்கமாக இருக்கிறது. துல்லியமாக கைரேகை காண முடியாத வெளிச்சம்தான். கடலைக்காட்டை ஒட்டி பூவரசு மரத்தடி மேட்

டில் பாட்டி அமர்ந்திருக்கிறாள். ம்மே... ம்மே... என்ற குரல் வருகிறது. நாலாபக்கமும் தலையைத் திருப்பிப் பார்க்கிறாள். பார்வையில் எதுவுமே தென்படவில்லை, குரல் மட்டும் வருகிறது. திடீரென்று ஒரு காட்சி. பத்து இருபதடி தூரத்தில் ஆடு மேய்க்கும் கோனார் ஒருவர் தாடியும் மீசையுமாக நின்றுகொண்டிருக்கிறார். அவரிடம் நான்கு செம்மறி ஆடுகள் இருக்கின்றன. ஆடுகள் பாட்டியைப் பார்த்து ம்மே...ம்மே... என்று பசியில் குரல் எழுப்புகின்றன. மூன்று ஆடுகள் கீழே நிற்கின்றன. ஒன்று கோனார் கையில். அதை அவர் மார்போடு அணைத்துப் பிடித்திருக்கிறார். அது ஆடு அல்ல; குட்டி. அதுவும் பாட்டி முகம் பார்த்து ம்மே.. ம்மே.. என்று குரல் கொடுக்கிறது. பாட்டி எழுந்து கடலைக்காட்டில் இறங்கி கடலைமூடுகளை கை நிறையப் பிடுங்கு கிறாள். ஆடுகள் அவளிடம் தாவியோடி வருகின்றன. கடலைமூடுகளை நீட்டுகிறாள். ஆடுகள் கடித்து இழுத்து வாயில் வைத்து நொறுக்கு கின்றன. கோனார் கையிலிருந்த குட்டி ஆடும் குதித்து இறங்கி பாட்டி யிடம் ஓடி வருகிறது. அதற்கும் தருகிறாள். முன்னங்கால்களைத் தூக்கி குட்டியாடு பாட்டி மேல் பாசமாக ஊன்றிக் கொள்கிறது. ஆசையோடு தலையை ஆட்டித் தின்னுகிறது. வயிறு முட்டத் தின்ற பிறகு மூன்று ஆடுகளும் பூவரசு மரத்து மேட்டில் போய் ஒருக்களித்துப் படுத்து கண்களை மூடி அசை போட்டுக்கொண்டு கிடக்கின்றன. குட்டியாடு மட்டும் திரும்பிப் போய்விடுகிறது. கோனார் அதை எடுத்துத் தன் மார்போடு அணைத்துக் கொள்கிறார். அக்கணமே அவர் மறைந்துவிடு கிறார். கனவு முடிந்து போகிறது. கனவின் மறைபொருள் கருத்தில் உறைத்ததும் பாட்டி துள்ளி எழுந்துவிட்டாள்.

ஊரில் பலரிடமும் பற்பல சந்தர்ப்பங்களில் தான் கண்ட 'கினா'வை காட்சி சுத்தமாக விவரித்தாள். தாடி மீசை வைத்திருந்த நடுத்தர வயது கோனார் யாரென்று அவர்களுக்குப் புரியவில்லை. 'அது வேறு யாருமல்ல; கர்த்தராகிய ஏசு கிறிஸ்துதான்' என்றாள். 'எப்படி சொல்கிறீக' என்று திருப்பிக் கேட்டார்கள். 'கினா கண்டது கர்த்தர் பிறப்புக்கு அடுத்த நாள் ராத்திரி' என்று அறிகுறி சொன்னாள். பலருக்கு கர்த்தரை கோனாராக ஏற்றுக்கொள்வதில் தயக்கமிருந்தது. ஆடுகளில் கிடாக்கள் உண்டா என்று சிலர் கேட்டனர். பாட்டிக்கு அதில் மட்டும் சின்னக் குழப்பம் ஏற்பட்டது. குழப்பங்களெல்லாம் வெயில் பட்ட பனிமூட்டமாக அதிவிரைவிலேயே பொலுபொலுவென்று கலைந்து போயின.

மருமகள் வயிற்றில் ஜோஸ்பின் பிறந்தாள். பாட்டி தன் கினாவை ஒரு சுற்று ஓடவிட்டாள்.

இரண்டு வருஷ வித்தியாசத்திலே ஜெசிந்தா பிறந்தாள். பாட்டியின் கினாவுக்கு அங்கீகாரம் கிடைத்தது ஊர் மக்கள் மத்தியில். அது மெதுமெதுவாக சொப்பனமானது.

பிறகு ஜாய்ஸ் பிறக்க நாலு வருஷமாயிற்று. மருமகளுக்கே

மாமியார் மேல் பெரிய மரியாதை உண்டாகிவிட்டது. 'அத்தே அத்தே' என்று சுற்றி வந்தாள்.

கோனார் கைக்குத் திரும்பிப் போன ஆட்டுக்குட்டி ஆணா பெண்ணா என்பதை அறிந்துகொள்ள எல்லோரும் ஆசைப்பட்டார்கள். பாட்டி கறாராகச் சொல்லிவிட்டாள் 'அது ஆண்பிள்ளையோ பெண் பிள்ளையோ அது முக்கியமில்லை; அது ஆண்டவரின் பிள்ளை. அதை அவருக்கே நேந்து விட்டாச்சி.' பின்னும் மூன்றாண்டுகள் கழித்துப் பிறந்ததும் பெண்.

அமலா ஆணாகப் பிறந்திருந்தால் அமலதாஸாகி குருக்களாகி யிருப்பாள்.

பாண்டி அமலாவை விட ஒரு வருஷமும் நாற்பத்தியெட்டு நாளும் இளையவன். பெரியப்பா வீட்டில் ஆண் குழந்தைகள் இல்லாததால் பெரியம்மாவுக்கும் அக்காக்களுக்கும் அவன் செல்லம். அங்கேயே அவன் பாடு கிடந்ததில் சேசுமரியாயி பாட்டிக்குகூட பெரிய ஆட்சே பணை இல்லை.

☆☆

புதுநன்மை பெறும் சடங்கில் அமலா அக்காவோடு சேர்த்து பத்துப் பேர் பங்கெடுத்தார்கள். சிறுவர்கள் ஆறு பேர், மீதி சிறுமிகள். அத்தனை பேரும் ஐந்தாம் வகுப்பு செட்டுகள். பத்தாம் திருவிழா காலைத் திருப்பலி ஏறெடுக்கப்பட்டதும் புதுநன்மை பிள்ளைகள் பத்துப் பேரையும் தனித்தனியாக போட்டா எடுத்தார்கள். நாங்குநேரி தங்கம் ஸ்டுடியோவிலிருந்து போட்டோ எடுப்பதற்கு ஒருவர் மிஷினோடு வந்திருந்தார். கன்னங்களில் வந்து படரும் மீசையும் ஏறுநெற்றியுமாக தோற்றமளித்த போட்டோக்காரர் சற்றே கோபக்காரர் போலக் காணப் பட்டார்.

தேவனின் திருவுடலை ரட்சிப்பின் விருந்தாக உட்கொள்ளத் தொடங்கும் அந்தச் சடங்கில் அவளுடைய உடை மிக அழகாக ஒரு கனவுத்தன்மையோடு மனத்தைக் கவர்ந்தது. கப்பு கைகள் வைத்த வெள்ளை நிற ஸ்கர்ட். முழங்கால் வரை வெள்ளை நிற சாக்ஸ். வெள்ளை நிற ஷூக்கள். கையில் வெள்ளை நிற உறைகள். தலையில் துணியில் மொட்டு மொட்டாகச் செய்து அணிந்த வெள்ளைக் கிரீடம். தலையி லிருந்து கீழ்முதுகு வரை வெள்ளைப் பூக்களால் எம்பிராயிடிங் செய்த வலை. முகத்தில் திடீரென்று வந்து ஒட்டிக்கொண்ட பெரியபிள்ளைத் தனம் எல்லாமுமாகச் சேர்ந்து அன்று அமலா அக்கா பஞ்சு போன்ற மேகத்திரளின் மீது ஏறி நின்ற சம்மனசு போல் ஜொலித்தாள். மெழுகு வர்த்திகள் என்றுமில்லாத குதூகலத்துடன் சுடர்ந்தன.

தேவாலயத்தின் உள்ளே பிரதான பீடத்தின் முன்னே புதுநன்மை பிள்ளைகள் ஒவ்வொருவராக நிற்க வைக்கப்பட்டனர். போட்டோ எடுக்கப்பட்டது. வெள்ளை வெளேரென்று தரித்த உடையில் அவர்கள் எல்லோருமே மிக அழகாகக் காட்சியளித்தனர். நெஞ்சுக்கருகே கரம் கூப்பி கண்களை பக்தியொளியில் சுடரவிட்டார்கள். போட்டோக்காரர் ஒரேவிதமாக வளைந்து நெளிந்து கோணம் பார்த்து படம் எடுத்தபடியிருந்தார். பிள்ளைகளின் பெற்றோர்கள் உறவினர்கள் அவருக்குப் பின்னே விலகி நின்று அந்த ஆபூர்வ நிகழ்ச்சியில் மெய்மறந்து போயிருந்தனர். போட்டோக்காரரின் சின்னச் சின்ன பேச் சொலி மட்டுமே அவ்வப்போது ஒலித்தது. மற்றபடி பெரும் அமைதி. கூடி நின்று வேடிக்கை பார்ப்பவர்கள் ஏதாவது வாயாடினால் போட்டோவில் ஏதாவது குறைபாடு ஏற்பட்டுவிடுமோ என்ற அச்சம் அவர்களை அப்படிச் செய்திருக்க வேண்டும். பாண்டிக்கும் அந்த பயமிருந்தது. பயத்தையும் மீறி அமலா அக்காவோடு அவனும் சேர்ந்து நின்று ஒரு போட்டோ எடுத்துக்கொள்ளும் ஆசை அவனை அலைக்கழித்தது.

அக்காவின் அருகில் சென்று அவள் முறை வருவதற்கு சற்று முன்பு காதோரம் நெருங்கி தாழ்ந்த குரலில் கேட்டான். ''எக்கா, உங் கூட போட்டோவுல நானும் நிக்கட்டா? ''

''ம்ஹூம். நான் மட்டும்தான் நிக்கணும்'' தணிந்த குரலில் கறாராக மறுத்துவிட்டாள்.

தேவாலயத்தின் கூரையிடிந்து பாண்டி தலையில் மட்டும் விழுந்தது. வலியில் துடித்தான். நெஞ்சு விம்மி கனத்தது. அங்கேயே முழந்தாளிட்டு 'கடவுளே இந்த போட்டோ மிஷின் இப்போதே பணாலாகிப் போக வேண்டுமென்று' பிராத்தனை செய்ய ஒரு வேகம் பொங்கி வந்தது. ஆனால் பாண்டியால் அப்படி நினைக்க முடியவில்லை. அக்காவைப் படமெடுக்க வேண்டுமே.

புதுநன்மை கொடுத்து முடித்த கையோடு திருப்பலி முடிந்ததும் சேசுமரியாயி பாட்டி குடும்பத்தோடு பாதிரியைச் சூழ்ந்து நின்று அமலாவைக் குறித்து அவள் கண்டிருந்த சொப்பனத்தை சொன்னாள். அக்கா பக்கத்தில் நின்றிருந்தான் பாண்டி. பாதிரி சிறிது நேரம் பேசாமல் யோசனையில் நின்றார்.

''கடவுளுக்குரியத மனுவின் கையில தூக்கிக் கொடுக்க முடியாதே'' பாட்டி பாதிரியின் மௌனத்தை தொந்தரவு செய்தாள்.

கூடியிருந்தவர்கள் பாதிரியின் வார்த்தைகளுக்காக கால் உப்புக் குதிகளை சற்றே தூக்கி நின்றார்கள்.

''குழந்தையை நல்லா படிக்க வைங்க. பத்தாம் வகுப்பு நிறையட்டும். அதுவரை நம்ம பங்குல நான் இருப்பனானு அவருக்குதான் தெரியும். ஒண்ணும் கவலைப்படாதீங்க. எல்லாம் அவர் சித்தப்படி

நடக்கும்'' என்றார். பேசும்போது இரண்டு முறை கைகளை வானத்தை நோக்கி நெஞ்சளவு தூக்கினார்.

பாட்டி மனம் குளிர்ந்து வணங்கி ஆசி பெற்றுக்கொண்டாள். கூட்டம் அக்காவை வினோதமாகப் பார்த்துவிட்டு விலகிப் போனது. யாரும் தொட்டுக் கும்பிடாத குறைதான். அன்றே அவள் அரை கன்னி யாஸ்திரி ஆகிவிட்டது அமலா அக்காவுக்கும் பாண்டிக்கும் மிகத் தாமத மாகத்தான் தெரியும்.

ஜிஞ்சர் டானிக்குக்குள் அஞ்சால் பொடியைக் கொட்டியதுபோல் அக்கா கன்னியாஸ்திரியாகும் விஷயம் சுருசுருவென்று ஊர் முழுக்கப் பொங்கிப் பரவியது. கோயிலுக்கு நேர்ந்து விட்ட ஆடு மாடு கோழி போல ஆகிவிட்டாள். மதிப்பில் தாழ்ந்து போகவில்லை, பல படிகள் உயர்ந்துவிட்டாள்.

பள்ளியில் ஆசிரியர்கள் அவளிடம் கனிவாக நடந்துகொண்டார்கள். அவச்சொற் பிரயோகம் இல்லை. அதட்டல் மிரட்டல் எதுவும் இல்லை. அமலா அக்கா படிப்பிலும் சுட்டியாகத் திகழ்ந்தாள். சக மாணவ மாணவி களும் அவளிடம் அதிகம் சேர்வதில்லை. அவளும் மனிதக் கால்களால் தான் நடந்தாள். ஆனாலும் அவள் போய்ச் சேரும் பாதை வேறு என்று நினைத்தார்கள்.

நம்மளும் பேசாம பாதிரியாராகிறலாமா என்று பாண்டி மனசுக்குள் ஆசைப்பட்டான். ஆசைப்பட்டாலும் கடவுள் பாக்கியம் பாட்டி கனவில் வந்து கூப்பிடவில்லையே என்று வருத்தமடைந்தான். ஆனாலும் அவள் பங்குக்கு சவேரியார் கோவிலில் பாண்டியை ஏலம் விட்டு எடுப்பதாக நேர்ச்சை செய்து வைத்திருந்தாள்.

☆☆

கிறிஸ்மஸ் தோறும் பாட்டி வருஷம் தவறாமல் பாண்டிக்கு புதுத் துணி எடுத்துத் தருவாள். அதுக்கு பண்டியல் சட்டை என்று பெயர். அப்பா எடுத்துத் தந்தது ஒண்ணு, பாட்டி எடுத்துத் தந்தது ஒண்ணு, ஞானத் தாய் வீட்டிலிருந்து ஒண்ணு என பாண்டிக்கு மூன்று ஜோடி சேர்ந்து விடும். அண்ணன்களுக்கு இதுவும் குமைச்சலை உண்டுபண்ணும். அவர் கள் அணிந்து கொள்ளலாம் என்று பார்த்தால் அளவும் பொருத்தமாக இருக்காது.

பாக்கியம் பாட்டிக்கும் வீட்டில் பேரன் பாண்டிதான் ரொம்ப நெருக்கம். பாண்டி பிறப்பதற்கு முன்பே தாத்தா போய்விட்டார். பாண்டிக்கு மூன்று வயதிருக்கும்போது அன்னத்தாய் அத்தையும் தவறி விட்டாள். அது அகால மரணம். அந்த மரணத் துயரம் வாழ்க்கையை வடிகட்டிவிட்டது. விரக்தியும் வேதனையும் நிறைந்தவளாக எதன் மீதும் ஈடுபாடு இல்லாது தனித்தீவாகி விட்டிருந்தாள் பாக்கியம் பாட்டி.

குட்டிப்பையன் பாண்டியின் பிஞ்சு முகத்தையும் குழந்தைமையை யும் விளையாட்டையும் பார்க்கும்போதெல்லாம் அவளுக்குள் சந்தோஷ மும் ஆறுதலும் ஏற்படும். அவனை இழுத்தணைத்து முத்தமிட்டு மணத்துவாள். பாண்டிக்கு ஓரளவு விபரம் தெரிய வந்த நாட்களில் பாக்கியம் பாட்டி பாண்டிக்கு மகளாகிவிட்டிருந்தாள். ''ஐயா... ஐயா...'' என்று விளித்தாள். மற்றவர்களிடம் பேசும்போதெல்லாம் ''எங்க ஐயாலா அது'' என்று அவனைக் குறிப்பிட்டாள். 'இவ்ளோ சின்னப் பையன் நமக்கு இவ்ளோ பெரிய மகளா' என்று ஆரம்பித்தில் பாண்டி குழம்பினான். பாட்டியின் பாசம்தான் அப்படிப் பேசுகிறது என்பதைப் புரிந்துகொண்ட பிறகு பாக்கியம் பாட்டியை அவனுக்கு ரொம்பவும் பிடித்துப் போனது. சின்னப் பிள்ளைதானே வீட்டில் செல்லப்பிள்ளை என்பதை அண்ணன்கள் புரிந்து கொண்டபாடில்லை. அமலா அக்கா வீட்டிலும் அவள்தானே செல்லம். அடிக்கடி அண்ணன்கள் சண்டைக்கு வந்தார்கள். அப்போதெல்லாம் பாண்டி ஓடிப்போய் பாட்டியிடம் அண்டிக்கொள்வான்.

தோட்டாக்குடி வயற்காட்டில் பாட்டிக்கு கொஞ்சம் நிலமிருந்தது. பாட்டி காலத்தில் பத்திரம் மாற்ற முடியாதது. 'முக்குருணி வெதப்பாடு.' அதை அந்த ஊர் கிட்டுக் கோனாரிடம் குத்தகைக்குக் கொடுத்து சாகுபடி செய்தாள். நெல் நாத்து பாவிய நாளிலிருந்து அறுவடையாகிக் களத்தில் பாட்டம் அளக்கும் நாள்வரை பாட்டி அடிக்கடி வயற்காட்டுக்கு போய் வருவாள். இரண்டு மைல் தொலைவு இருக்கும். வழியில்தான் பாண்டி யின் பள்ளிக்கூடம். பாட்டி அவ்வழியே வரும்போதெல்லாம் பள்ளிக் கூடத்துக்குள் வந்து பாண்டியைப் பார்த்துவிட்டு ஏதாவது கடைப் பண்டங்கள் தந்துவிட்டுப் போவாள். ஆரம்ப காலங்களில் அதற்காக பாண்டி ஆவலோடு காத்திருப்பான். வகுப்புகள் மாறி மாறி வரும்போது சக மாணவ மாணவிகள் ஒரு மாதிரியாகப் பார்த்தார்கள். ஆசிரியர்களும் எல்லோரும் ஒரே மாதிரியாக இல்லை. பாட்டி அதைப் பற்றியெல்லாம் யோசிக்கமாட்டாள். பாட்டியை பள்ளிக்கூடத்துக்கு வரவேண்டாம் என்று கேட்டுக் கொள்ள நினைத்தான். ஆனால் அவனால் சொல்ல முடிய வில்லை. பாட்டியின் மடிப்பண்டங்கள் முடிவின்றி வந்து கொண்டிருந் தன. ஒரு முறையாவது பள்ளியில் வைத்து பாட்டி ஆசிரியர்கள் யாரை யாவது கூப்பிட்டு பாண்டி நன்றாக படிக்கிறானா என்று கேட்டதே இல்லை. 'அது கெடக்குது ஏட்டுச் சொரைக்கா.'

☆☆

கிறிஸ்மஸ் பண்டியலுக்கு உனக்கு என்னென்ன வேணும் அப்பா பாண்டியிடம் கேட்டபோது 'வெடி, மத்தாப்பூ, பெரிய ஸ்டார். கூடவே என்னிய ஒரு போட்டோ... என்று இழுத்தான். அப்பா சிரித்தார்.

போட்டோ எடுக்க திருநெல்வேலிக்கு அழைத்துக்கொண்டு போனார். அது ஞாயிற்றுக்கிழமை. சனிக்கிழமை இரவில் தகவல் தெரிந்ததும் அவன் அடைந்த மகிழ்ச்சி வெகுநேரம் அவனை உறங்கவிடவில்லை. இரவு சாப்பாடும் சரியாக இறங்கவில்லை. குழந்தைகளிடம் மிக எளிதாகப் பற்றிக்கொள்ளும் குதூகலம் பாண்டியை அள்ளியெடுத்து தோளில் வைத்துக்கொண்டது. அதுதான் அவன் முதல் புகைப்படம். தன் உருவம் எப்படிப் பதியப்போகிறதோ என்ற யோசனையும் கவலையும் மகிழ்ச்சியும் புடைத்தெடுத்தது. அவன் உலகம் செவ்வக வடிவை அடைந்தது. படத்தை யாரிடமெல்லாம் காட்டவேண்டுமென்று இரவே முடிவெடுத்தான். அவனோடு படிக்கும் பலருக்கு போட்டோ கிடையாது. சிலருக்கு இருந்தது. அவை படத்திலிருப்பது ஆணா பெண்ணா என்பதைக்கூட கண்டுபிடிக்கமுடியாத லட்சணத்தில் ரொம்ப சின்னப் பிள்ளையில் படுக்கவைத்து எடுத்தது. திருஷ்டிப் பொட்டுக்கள்தான் கருகருவென்று துருத்திக் கொண்டிருக்கும். அமலா அக்காவின் புதுநன்மை போட்டோ தான் அழகான படம். சம்மனசு போலிருக்கிறாள். இரவில் எண்ணெய் தேய்த்து தலைவாரி ரொம்ப நேரம் கண்ணாடி பார்த்திருந்துவிட்டு படுக்கப் போனான். விடியும்வரை இரவெல்லாம் உறக்கத்தில் படம் வரைந்தான். முகத்தில் தேவையற்ற ஒரு இறுக்கம் வந்திருந்தது. போட்டோவுக்கு இப்பவே நான் ரெடி என்றது. அவன் கற்பனைகளுக்கு பெரிய பெரிய சவால்கள் உருவாகி மார்தட்டி எழுந்து நின்ற முதல் தருணம் அது.

காலையில் அப்பாவும் அவனும் திருநெல்வேலிக்குப் புறப்பட்ட போதுதான் பாக்கியம் பாட்டிக்கு விஷயம் விளங்கியது. ஒரு ஆளு ஒரு போட்டோ பிடிச்சா அந்த ஆளு ஆயுசுல ஒரு வருஷம் குறைஞ்சு போகுமென்று பாட்டி சொன்னாள். பாண்டிக்கு திக்கென்றது. ஆயுசு என்பதின் முழுப்பொருளும் அவனுக்குத் தெரியவில்லை. போட்டோ எடுத்ததும் தனக்கு டக்கென்று ஒரு வயசு குறைந்து போகும் என்பதை ஊகித்துக் கொண்டான். நினைக்க நடுக்கமாக இருந்தது. அவன் மனக்கண்ணில் லேசான நீர்க்கசிவு ஏற்பட்டது. அவனது மூன்றாம் வகுப்பு புத்தகங்கள் சட்டென்று இரண்டாம் வகுப்பு புத்தகங்களாக மாறியபோது அழுகையே வந்துவிட்டது. பாட்டி சொன்னதை அப்பா ஏற்றுக்கொள்ளவில்லை. மிடுக்காக வேட்டிசட்டை அணிந்துகொண்டார். வழியில் கலைந்து போகும் என்பதைப் பற்றியெல்லாம் கவலைப்படாமல் அம்மா போட்டாவுக்காக பாண்டிக்கு கச்சிதமாக தலைவாரி விட்டாள். பக்தர்கள் சாற்றுவதையெல்லாம் ஏற்றுக்கொள்ளும் சாமி போல பாண்டி பவுடர் பூசி வாசனையோடு புறப்பட்டான்.

பஸ்ஸில் டிக்கட் எடுத்தபோது இருக்கையில் அமர்ந்திருந்த அவன் தோள்களைத் தூக்கி நெஞ்சை நிமிர்த்தி கண்டக்டரை பார்த்தான். அரை டிக்கட்டில் பயணப்பட்டு புகைப்படம் எடுக்கப் போவது சற்று

சங்கடமாக இருந்தது. ஆனால் கண்டக்டர் அவனுக்கும் முழுக்கட்டணமே வசூலித்தான். காக்கி உடைகளும் கையில் அலுமினியச் சிட்டையும் காதில் செருகிய பென்சிலுமாக டிக்கட் கிழித்துத் தந்த ஸ்ரீகணபதி மோட்டார் சர்வீஸ் கண்டக்டரிடம் தான் போட்டோ பிடிக்கப் போவதை தெரிவிக்க வேண்டும்போல அவனுக்குள் துடிப்பு ஏற்பட்டது.

ஜங்சன் பஸ் ஸ்டாண்ட் ரொம்ப ரொம்ப பெரிதாக இருந்தது. பல வண்ணங்களில் விதவிதமான பஸ்கள் நின்றபடியும் புறப்பட்ட வண்ணமுமாக இருந்தன. பெட்டிப் பெட்டிக் கடைகளில் லாட்டரிச் சீட்டுகள் வரிசையில் பறந்தன. பழக் கடைகள் மிட்டாய்க் கடைகள் புத்தகக் கடைகள். ஆட்கள் கூட்டம் திருவிழாக் கோலம் பூண்டிருந்தது.

அப்பா அவனை அரசன் கபே ஓட்டலுக்கு கூட்டிப் போய் காலை டிபன் வாங்கித் தந்தார். அவரும் சாப்பிட்டார். பூரி கிழங்கும் வடையும் அலாதி ருசியாக இருந்தது. அப்பா ஆற்றித் தந்த காப்பியைக் குடித்து விட்டு ரயில்வே ஸ்டேசன் ரோட்டில் நடந்து போனார்கள். வயிறு விரிந்து உடலே வயிறாகி விட்டதுபோல் ஒரு கனம். மாடியில் எழுதி வைக்கப் பட்டிருந்த பெயர்ப் பலகையை அப்பா காட்டினார். பேன்ஸி ஸ்டுடியோ - ஸ்தாபிதம் ஆயிரத்தி தொள்ளாயிரத்துக்கு மேல் எண்கள் காரை பெயர்ந்து காணப்பட்டது.

கட்டிடத்தின் ஓரமாக ஒடுக்கமான படிக்கட்டு மேலேறிப் போனது. மரப்படிகளில் கவனமாக நடந்து ஏறினான். ஸ்டுடியோ வாசலில் நிறைய போட்டோக்கள் மாட்டப்பட்டிருந்தன. எம்.ஜி.ஆர், சிவாஜி, ரஜினி, கமல் எல்லாம் அந்த ஸ்டுடியோவில் வந்து போட்டோ எடுத்திருந் தார்கள். நிறைய அக்காக்களின் அழகழகான படங்களும் இருந்தன. இவர் களும் சினிமாவில் நடிப்பார்களாயிருக்கும். பெயர் தெரியவில்லை. எடுத்த போட்டாவை எதற்காக வந்து வாங்கிக்கொண்டு போகவில்லை என்று யோசித்தான். காசு தட்டுப்பாடோ என்னவோ.

காமிராவுக்கு மூன்று கால்களிருந்தன. மூன்று கால்களில் அது எப்படி நடந்து போகும் வரும் என்பதைப் பார்க்க ஆவலாக இருந்தது. அது அசையாமல் நின்றது. இரண்டு குடைகளுக்குள் லைட்டுகள் எரிந்தன. போட்டாகாரர் ஒரு கண்ணை மூடிக்கொண்டு காமிராவுக்கு பின்னே ஒளிந்து பதுங்கி நின்றார். பின்பு நிமிர்ந்து பார்வைகளின் தொடுமட் டத்தை சரிப்படுத்தினார். கொஞ்சமாக பல் தெரியாமல் சிரிக்கச் சொன் னார். மீண்டும் காமிராவுக்குப் பின்னே பதுங்கிக்கொண்டார். பாண்டி அமர்ந்திருந்த மரத்திண்டு மளமளவென்று வளரத் தொடங்கியது. உடலில் மெல்லிய நடுக்கம் பரவியது. உள்ளங்கைகள் இரண்டும் முழங் கால் மூட்டுகள் மேல் பசை போட்டு ஒட்டியதுபோல் மாட்டிக் கொண்டன. ''ரெடி... ரெடி'' என்று மூன்று தரம் கூறினார். 'க்ருக்'கென்ற ஓசை. கண்ணைப் பறிப்பதுபோல் ஒரு வெள்ளை மின்னல்.

அடுத்த முறை ஊருக்கு வரும்போது அப்பா போட்டோவை சட்டம் போட்டு வாங்கி வந்தார். போட்டோவை பார்த்ததும் பாண்டி அதிர்ந்து போனான். அப்பா மிடுக்காக இருந்தார். அவன் நல்லாவே இல்லை. முகத்தில் சோகம், கவலை, பயம். இருளடித்துப் போயிருந்தான். பாண்டிக்கு சுத்தமாகப் பிடிக்கவில்லை.

''ஏன்ப்போ இப்படி பாவம்போல இருக்க'' என்றே எல்லோரும் அவனிடம் அனுதாபமாக விசாரித்தார்கள். அவன் பதில் சொல்ல முடியாமல் விலகி விலகிப் போனான். அமலா அக்காவிடம் காட்டக் கூடாது என்று தீர்மானித்து விட்டிருந்தான். ஆனாலும் அம்மா அவளிடம் காட்டிவிட்டாள். பார்த்துவிட்டு சிரித்தாள். ''போட்டோவைப் பாத்து பயப்படக்கூடாது'' என்று பள்ளிக்கூடத்துக்கு போகும்போது சொன்னாள். 'இனி அப்படித்தான்' என்பதுபோல் தலையாட்டினான் பாண்டி. உண்மையில் அவனுக்கு போட்டோ எடுக்கப்பட்டபோது சில சந்தேகங்கள் எழுந்தன. அந்த சந்தேகங்களுக்கும் எனக்கும் சம்பந்தமில்லை என்பதுபோல் நடித்ததால்தான் போட்டோ இப்படி அழுதுவடிகிறது என்று சொன்னான். சாப்பிட்ட பிறகு போட்டோ எடுப்பது நல்லதா, போட்டோ எடுத்தபிறகு சாப்பிடுவது நல்லதா என்பதே முதல் சந்தேகம். சந்தேகம் எழும்முன்னே அவன் பூரி கிழங்குகளை சாப்பிட்டு முடித்திருந்தான். அடுத்தது இன்னும் வலுவானது. ஏசு சாமி போட்டா எடுத்தபோது அவர் நெஞ்சுக்குள் பந்தாக திரண்டு எரிந்துகொண்டிருந்த பரிசுத்த ஆவி நெருப்பாக போட்டோவில் வந்துவிட்டது. அதுபோல பாண்டி வயிற்றுக்குள் குழைந்திருந்த பூரி கிழங்கும் வடையும் போட்டாவில் வந்து விடுமோ என்று அஞ்சினான். அவன் அஞ்சியபடி நடக்கவில்லை. அது ஒருவகையில் ஆறுதலாக இருந்தது.

☆☆

அமலா அக்கா புதுநன்மை எடுத்ததும், பாண்டிக்கும் புதுநன்மை எடுக்கும் ஆசை வந்துவிட்டது. அது ஒரு பெருங்கனவாகவும், லட்சியமாகவும் மாறி அவனை அலைக்கழித்தது. திருமறைச் சட்டமோ பத்து வயதுக்குட்பட்டவர்களுக்கு புதுநன்மை அப்பம் வழங்கக்கூடாது என்றது. ஆக அவன் ஒரு வருஷம் காத்திருக்க வேண்டியிருந்தது. பொறுமையிழந்து பரபரத்தான். அப்பத்தின் ருசியை பலவாறு கற்பனை செய்தான். அமலா அக்காவோடு பேசிக்கொண்டிருக்கும், விளையாடிக் கொண்டிருக்கும், சாப்பிட்டுக் கொண்டிருக்கும் நேரங்களில் இடையிடையே அப்பத்தின் ருசியைப் பற்றி விசாரிப்பான். ஆர்வம் கண்ணில் கொப்பளிக்கும். வாயில் எச்சில் ஊறும். அக்காவால் அப்பத்தின் சுவையை விவரிக்க முடியவில்லை. அது கடவுளின் சரீரம்; அதை எப்படி சுவை அடிப்படையில் விவரிப்பதென்று குழப்பமடைந்தாள்.

பாண்டியோ கடவுளின் உடலைக் கொத்தித் தின்னத் துடிக்கும் கழுகாக மாறி, திரும்பத் திரும்ப பேச்சில் வட்டமிட்டான். நச்சரிப்புத் தாள வில்லை.

கிறிஸ்மஸ் லீவில் ஞாயிற்றுக் கிழமை காலைத் திருப்பலி முடிந் ததும் அவள் பாண்டியைக் கூப்பிட்டாள். வீட்டுக்கு பின்புறமிருந்த கிரேந்தி பூந்தோட்டத்துக்கு அவனை அழைத்துப் போனாள். திருப்பலிக் காக அணிந்திருந்த உடையைக் கூட அவள் மாற்றியிருக்கவில்லை. பூப்பறிக்கவோ என்னவோ என்றுதான் பாண்டி நினைத்தான். தோட்டத் தில் மறைவான இடத்தில் நின்றவள் சற்று பதற்றமாக இருந்தாள். மெலிந்த கைகள் லேசாக நடுங்கவும் செய்தன. பாண்டி அக்காவை வினோதமாகப் பார்த்தான். குப்பையைக் கொட்ட ஜெசிந்தா அக்கா கொல்லைப்பக்கம் வந்தாள். அவளைக் கண்டதும் பாண்டியை இழுத்துக் கொண்டு மொட்டை மாடிக்கு ஓடினாள். அங்கே சுற்றும்முற்றும் தலையைத் திருப்பி ஒரு நோட்டமிட்டுவிட்டு, தன் கையில் வைத்திருந்த சிறிய கைக்குட்டையைத் திறந்தாள். கைக்குட்டையில் வெள்ளை நிறத்தில் வட்டவடிவில் ஒரு அப்பம் இருந்தது. பாண்டி திடுக்கிட்டுப் போய்விட்டான். பேச்சே வரவில்லை. அப்பத்தையும் அவள் முகத்தை யும் மாறி மாறிப் பார்த்தான். ''இந்தா... யாரும் பாக்குறதுக்குள்ள தின்னு தொலை, பல்லுல படக்கூடாது'' படபடப்போடு சொன்னாள். அப்பத்தை எப்படி வாங்கிக் கொள்வது என்று தெரியவில்லை. கையை நீட்டியா நாக்கை நீட்டியா... தடுமாறினான். 'அப்பத்தைத் திருட முடியாது. அது கடைகளிலும் கிடைக்காது. அக்கா எப்படி அவனுக்காக ஒரு அப்பத்தைக் கொண்டு வந்தாள்? ஐயோ இது பாவமாச்சே.' ''சீக்கிரம் தம்பி.''

நிறைய அப்பாக்கள் பெட்டைப் பிள்ளைகளுக்கு பட்டாசு வாங்கித் தரமாட்டார்கள். பெரியப்பா அப்படியில்லை. நிறைய வெடி வாங்கி வந்து தருவார். அமலா அக்கா ஸ்டார் லைட் வெளிச்சத்தில் பாண்டி யோடு சேர்ந்து வெடிப்பாள். மத்தாப்பு, தரைச்சக்கரம், பொரிவாணம், பாம்பு மாத்திரையெல்லாம் அவளே கொளுத்திவிடுவாள். பொட்டு வெடியையும் கண்ணை மூடிக்கொண்டு தட்டி விடுவாள். சரவெடி, லட்சுமி, ஓலைபடக்கு, பாட்டல் ராக்கெட் எல்லாம் பாண்டிதான் திரியில் தீ வைத்து தரவேண்டும். ஒவ்வொரு வெடிக்கும் காதைப் பொத்தியபடி வீட்டுக்குள் ஓடிவிடுவாள். வெடித்த பிறகு அடுத்த வெடியை எடுத்துத்தர வெளியே வருவாள். பயமும் சந்தோஷமும் அவள் முகத்தில் குழைந்து கொண்டிருக்கும். 'நீ பெரிய பிள்ளதானே. இந்த வருஷம் வெடியெல்லாம் நீதான் உன் கையாலயே கொளுத்தணும்' என்று போன வாரமே விளை யாடும்போது ஒரு வெங்காய வெடியைக் கொளுத்திப்போட்டிருந்தான். அது வெடித்துவிட்டது.

பாதிரியிடம் எல்லோரும் நற்கருணை பெற்றுக்கொள்வதுபோல

அவனும் கைகளை நெஞ்சில் குவித்து ஒரு அடி முன்னே நகர்ந்து நாவை நீட்டினான். அவனுக்கு அப்பத்தை ஊட்டினாள். அப்போது அவள் பாதிரியைப் போல 'இது கிறிஸ்துவின் சரீரம்' என்று சொல்லவில்லை. சொன்னாலும் இது கிறிஸ்துவின் திருடிய சரீரம் என்றுதான் சொல்ல வேண்டும். அக்கா வேகமாக படியிறங்கிப் போய்விட்டாள். பாண்டி வெகுநேரம் பிரமை பிடித்தவன் போல் நின்றிருந்தான். இந்தத் திருட்டுத் தனத்திற்கு ஒரே சாட்சி அருகே தொங்கிய கிறிஸ்மஸ் நீல நட்சத்திரம் தான். எந்த ருசியும் இல்லாமல் அப்பம் சப்பென்றிருந்தது. உப்பே யில்லை.

## நான்கு

கிறிஸ்மஸ் நள்ளிரவு பாலன் பிறப்புக்கான திருப்பலி நடக்கும் போது பாண்டி தூங்கி வழிந்துகொண்டிருந்தான். கூட்டம் கலையத் தொடங்கியதும் பெண்கள் வரிசைக்கு ஓடிப்போய் ஜோஸ்பின் அக்கா கையைப் பிடித்துக்கொண்டான். அமலா அக்கா மட்டும் இளநீல கவுனில் இருந்தாள். மற்ற மூன்று அக்காக்களும் சுடிதார் அணிந்திருந்தனர். ஊரின் லூர்து அன்னை அப்போதுதான் முதன்முதலாக சுடிதார் அணிந்த பெண் களைப் பார்த்தாள். மூத்த அக்காக்கள் இருவரும் கல்லூரி மாணவிகள். தூத்துக்குடி மேரிஸில் மூன்றாமாண்டும் முதலாண்டும் படித்தார்கள். சினிமா, டி.வியில் வரும் அக்காக்களைப் போல அவர்களுக்கும் சுடிதார் அழகாக இருந்தது. ஆனால் ஜாய்ஸ் அக்கா ஒன்பதுதான் படிக்கிறாள். மருதகுளத்திற்கு சைக்கிளில்தான் போகிறாள். சின்னப் பொண்ணான அவளும் குட்டி சுடிதார் போட்டிருக்கிறாள். அது சுமாராகத்தான் இருந்தது. ஏன்னா, அவளுக்கு நக்கல் ஜாஸ்தி.

கூட்டம் கலைந்து வெளியேறும்போது எல்லார் கண்களும் அக்காக்கள் மேலேயே இருந்தது. பாண்டி இப்போது ஜெசிந்தா அக்கா வின் கையைப் பிடித்துக்கொண்டான். ஐந்து பேரும் தெருவில் ஒன்றாக நடந்து வந்தார்கள். பாண்டிக்கு ஏதோ வேறு உலகத்தில் மிதப்பது போல இருந்தது.

கிறிஸ்மஸ் காலையில் பாண்டி குளித்து தோசையைத் தின்றுவிட்டு அக்கா வீட்டுக்கு குடுகுடுவென்று ஓடினான். எல்லோரும் கொல்லைப் பக்கம் இருந்தார்கள். ஜெசிந்தா அக்கா மட்டும்தான் அதே சுடிதாரோடு பின்வாசல் நிலைப்படிக்கட்டில் உட்கார்ந்து விகடன் புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள். பெரியக்கா பெரியம்மாவோடு சேர்ந்து நடையடியில் காய்கறி நறுக்கினாள். கொல்லை வேப்பமர ஊஞ்சலில் ஜாய்ஸ், அமலா அக்காக்கள் ஆடியபடி கூச்சல் போட்டுக்கொண்டிருந்தார்கள். பாண்டிக்கு இப்போதைக்கு ஊஞ்சலில் இடம் கிடைக்காது. பாண்டி வேடிக்கை பார்த்துவிட்டு நடுவீட்டுக்கு வந்து ரிமோட்டை எடுத்துக்கொண்டு

டிவியை ஆன் பண்ணினான்.

கொஞ்சநேரம் கழித்து அமலா அக்கா பூனைபோல் மெதுவாக உள்ளே வந்தாள். ரிமோட் பறிபோகும் அபாயம் நெருங்குவதை பாண்டி உணர்ந்தான். ஆனால் அவள் அவனை மெதுவாக சைகை காட்டி நடு வீட்டு அறைக்குள் அழைத்தாள். உள்ளே போனதும் உரியைக் காட்டினாள். இரண்டு பேரும் சேர்ந்து மர நாற்காலியைத் தூக்கிக்கொண்டு போய் உரியின் கீழே வைத்தார்கள். அக்கா ஏறி மேலேயிருந்த பிளாஸ்டிக் கூடையில் கைவிட்டாள். பாலிதீன் கவரின் மொடுமொடுப்பு கேட்டது. சத்தம் கேட்காமலிருக்க வெளியே எடுத்தாள். சில்லுக் கருப்பட்டி போல வெள்ளையாக இருந்தது. பிரித்து நாலுகுத்து கை நிறைய அள்ளிக் கொடுத்தாள். பாண்டியின் டவுசர் பாக்கெட் இரண்டும் நிறைந்து விட்டது.

நாற்காலி பழைய இடத்துக்குப் போன மறுவிநாடி இருவரும் மொட்டை மாடியில் இருந்தார்கள். வாயில் போட்டதும் இனிப்பாய்க் கரைந்தது. ''இது என்னதுக்கா?'' ''மெக்ரோன்.'' முக்கால்வாசியை அக்காவே வாங்கிக்கொண்டாள். இப்படி ஸ்வீட் திருடுவதில் ஏராளமான முறை பாண்டி கூட்டு சேர்ந்திருக்கிறான். பிடிபட்டாலும் பெரியம்மா பெரிதாக ஒன்றும் திட்ட மாட்டாள். கடையில் போய் அக்கா சாக்லேட்களாக வாங்கித் தின்றுவிடுவாள் என்பதால் யாரும் அவளிடம் காசு கொடுப்பதில்லை. பாண்டிக்கு அவ்வப்போது கிடைக்கும் காசுகள் எல்லாம் சாக்லேட் ஆகி விடும். ஆனால் அதற்கான தண்டனைதான் கசப்பானதாக இருக்கும். வேப்பிலைச் சாறு. மாசம் இரண்டோ மூன்றோ முறை கட்டாயம் உண்டு. அமலா அக்காவை இழுத்துப் பிடித்து அமுக்கி போராடிப் புகட்டி விடுவார்கள். ''பாண்டி குடிச்சாதான் நான் குடிப்பேன்'' என்று வில்லங்கமாக அடம் பிடிப்பாள். ஸ்வீட்டில் கால்வாசியோ அதிலும் பாதியோ மட்டுமே கிடைக்கப் பெற்ற பாண்டி முக்கால் டம்ளர் இருக்கும் சாறை ஒரு எதிரியைப் போலப் பார்ப்பான். வேறு வழியில்லை. கண்ணை மூடிக்கொண்டு ஒரே மடக்கில் ஊற்றி விடுவான். ஆனால் உடனே வாய்க் கசப்பை மாற்ற சில்லுக் கருப்பட்டி கிடைத்துவிடும்.

கீழே வந்தபோது காலேஜ் அக்காக்கள் ஊஞ்சலில் ஆடிக் கொண்டிருந்தார்கள். இரண்டு பேருக்கு மட்டும்தான் அந்த உருளைக் கட்டையில் இடம் இருக்கும். அமலாவைக் கண்டவுடன் ஊசலை நிறுத்தி தூக்கி மடியில் வைத்துக்கொண்டாள் ஜோ அக்கா. ஜெசியை இறங்கச் சொல்லி ஜாய் அடம் பிடித்தாள். சண்டை வந்துவிட்டது. அதையும் மீறி ஜாய் இரண்டு கைகளாலும் கயிறைப் பற்றித் தாவ முயன்ற மறுநொடியில் நால்வரும் கீழே கிடந்தனர். பாண்டி உற்சாகத்தில் துள்ளிக் குதித்தான். சத்தம் போட்டுச் சிரித்தான். கயிறு தெறித்த சத்தமும் கூக் குரலும் கேட்டு பெரியம்மா உள்ளேயிருந்து ஓடி வந்தாள். குவியலாகக்

கிடந்த பெரிய அக்காக்கள் எல்லோரும் அம்மாவைக் கண்டவுடன் அவசர மாக எழுந்துவிட்டனர். அமலா அக்கா மட்டும் எழாமல் அழுது கொண்டிருந்தாள்.

யாருக்கும் பெரிய அடியில்லை. ஜெசிந்தா அக்காவுக்கு கையில் சிராய்ந்து விட்டது. டிஞ்சர் தடவியபின் பெரியம்மா ஏசுவாள் என பாண்டி எதிர்பார்த்தான். மாறாக நாலு பேரையும் வேப்ப மரத்துக்குக்கீழ் வரிசையாக நிற்க வைத்து உப்பு வத்தல் சுற்றி அடுப்பில் போட்டாள்.

வெயிலேறவும் நடுவீட்டில் கட்டிலில் படுத்தபடி பெரியக்கா டி.வி பார்த்துக்கொண்டிருந்தாள். மற்றவர்களுக்கு கேரம். ஜெசிந்தாவும் பாண்டியும் ஒரு செட். கோத்தில் ஜாய்ஸ்தான் வீக். ஜெசி ஸ்கொயர் கட் எல்லாம் துல்லியமாக அடிப்பாள். குறி தப்பவே தப்பாது. ஜெயிக்க வேண்டுமென்ற உற்சாகத்தில் அன்றைக்குத்தான் தன்னியல்பாக ரெட் காயினுக்கு 'அமலா' என்று பெயர் சூட்டினாள் ஜாய்ஸ். ''அம்முக்குட்டி... அமலாக்குட்டி! விழுந்துருடா... என் கண்ணுல்ல... செல்லமில்ல...'' அடுத்த ஆட்டத்திலும் ரெட் காயினை அப்படியே கொஞ்சினாள். அமலா அக்காவுக்கு வெட்கச் சிரிப்பு. ஆனால் ஜெசிந்தா அக்கா அமலாவைப் பாக்கெட் பண்ணிவிட்டு ஃபாலோ அப் ஆக ஒயிட்டை அடிக்கும்போது ''பிளீஸ் பாண்டி... விழுந்திருடா. நீ தான் அம்முவுக்குப் பின்னாலயே திரியிறவன்!'' என்றதும் ஜாய் அக்கா பொங்கிப் பொங்கிச் சிரித்தாள். டிவியில் இருந்த பெரியக்காவைக் கூப்பிட்டு ஜோக்கை ரசிக்கச் சொன்னாள். ''எப்பவும் நாந்தான ஜோக் அடிக்கணும். நீ காலேஜ் போயி ரொம்ப தேறிட்ட'' என்று ஆட்சேபித்தாள். வழக்கம் போல் ஜெசி டீமுக்கே வெற்றி!

இரவில் வெடி கொளுத்தும்போது தரைச் சக்கரத்துக்குப் பிரச்சனை வந்துவிட்டது. முன்பு போல் ஒரே நேரத்தில் இரண்டு மூன்று விட முடியவில்லை. பாதி மாடியில் புதிதாக இரண்டு அறைகள் முளைத்துக் கொண்டிருந்தன. பெரியக்காவுக்கு கல்யாணம் நடந்தால் தேவையாம். முக்கால்வாசி வேலை முடிந்துவிட்டது, இனி பூச வேண்டும்; அவ்வளவு தான்.

எல்லா வெடிகளும் தீர்ந்த பின் பெரியக்கா ஒரு டஜன் ராக்கெட்களை ஆளுக்கு இரண்டு என்று பகிர்ந்து கொடுத்தாள். மீதியுள்ள இரண்டும் கூடுதலாக அமலாவுக்கு. எல்லாரும் பாட்டிலில் வைத்து ஊதுபத்திக் குச்சியை மாறி மாறி வாங்கிப் பற்றவைத்த பிறகு தனது இரண்டு ராக்கட்களை ஜாய்ஸுக்கு ஒன்றும் பாண்டிக்கு ஒன்றுமாகக் கொடுத்தாள். ஜாய் அக்காவின் ராக்கெட் பதினொன்றாவதாக வானில் சீறி வெடித்து மஞ்சள் பூக்களாகச் சிதறியது. பூக்கள் மறையும் வரை பாண்டி காத்திருந்தான். அதற்குள் அமலா அக்கா அவசரப்பட்டு பாண்டியின் ராக்கட்டை கேட்டு வாங்கிக்கொண்டாள். ஏற்கனவே சிவப்பாய் வெடித்த தனது இரண்டு ராக்கட்களைப் போல இதுவும் சிவப்பாய் வெடிக்க வேண்டும்

என கர்த்தரை வேண்டிக்கொண்டான். ஆனால் அது நீலப் பூக்களாகிப் போனது.

நிலா வெளிச்சம் குறைவாய் இருந்தாலும் இன்று கோல்டன் ஸ்டாரின் கீழ் மாடியில் வைத்துதான் சாப்பிட வேண்டும் என்ற ஜெசிந்தா அக்காவின் யோசனை ஏற்றுக் கொள்ளப்பட்டது. ''கோல்டன் ஸ்டார் டின்னர்'' என்று இங்கிலீஷ் பெயர் வைத்தாள். 'இன்னைக்கு தட்டுல கிடையாது டின்னுலதான் சாப்பாடு'னு பாண்டி நினைத்தான். இரண்டு மூன்று நடையில் உணவுப் பாத்திரங்களும் நாலு தட்டுகளும் தண்ணீரும் மேலே வந்துவிட்டது. பாண்டி இதே இடத்தில் ஏராளமான தடவை நிலாச்சோறு சாப்பிட்டிருக்கிறான். ஆனால் ஒருபோதும் ஐந்து தட்டுகள் தேவைப்பட்டதில்லை. இவர்கள் சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போது மங்கலாகத் தெரிந்த கட்டங்களில் ஒட்டாஞ்சில்லைப் போட்டு நொண்டி ஆடிக்கொண்டிருந்தாள் அம்மு. யார் கூப்பிடுகிறார்களோ அவர்களிடம் ஓடிவந்து ஒரு வாய் வாங்கிக்கொண்டு மறுபடி ஓடிவிடுவாள். நாலைந்து முறைக்குப் பிறகு, கூப்பிட்டாலும் வரமாட்டாள். யாராவது எழுந்து போய் ஊட்டிவிட வேண்டும். இன்று அந்த பாக்கியம் ஜாய்ஸுக்கு. போதும் என்றால் ''தண்ணி'' என்று கத்துவாள். டம்ளர் எழுந்து நடந்து அவளிடம் போகும். இதையெல்லாம் பார்த்துப் பார்த்து பாண்டிக்குப் பழகிப்போய்விட்டது. ஆனால் டம்ளரிலிருக்கும் சூடான காப்பியை ஒவ்வொரு மடக்காக அளவாக எப்படி ஊட்டுகிறார்கள் என்று புரிய வில்லை. அதுவும் அமலாவை விட அரை அடி உயரமே அதிகம் இருக்கும் ஜாய் அக்கா ஊட்டும்போது பாண்டிக்கு பொறாமையாக இருக்கும். ஆறாங் கிளாஸ் படிக்கிறாள், இன்னும் காப்பி குடிக்கத் தெரியவில்லை.

☆☆

அமலா அக்காவைப் போலவே அப்பாவையும் ரொம்ப பிடிக்கும் பாண்டிக்கு. பரிட்சை லீவு வரும்போது அவர் தங்கி வேலை செய்யும் ஊர்களுக்கு அவனை அழைத்துச் செல்வார். அப்போதெல்லாம் சந்தோச மும் கொண்டாட்டமுமாக இருக்கும். பஸ்ஸில் நீண்ட நேரம் பிரயாணம் செய்யும்போது ஏற்படும் அலாதி சுகத்தை திருப்தியாக அனுபவிப்பான். குறைந்தது ரெண்டு வாரமாவது அப்பாவோடு தங்கி விட்டுத்தான் திரும்புவான்.

அப்பா பெரிய பெரிய ஊர்களில் வேலை பார்த்தார். எந்த ஊரா னாலும் அவர் தங்கியிருக்கும் அறை ஒரே அளவானதாகவே இருக்கும். வேலை நேரங்களில் அவரது உடை மாறிவிடும். காக்கித் துணியில் சட்டையும் டவுசரும் அணிந்திருப்பார். காலில் தோல் செருப்புக்குப் பதிலாக கருப்பு நிறத்தில் ஒரு ஜோடி முரட்டு ஷுக்கள் போட்டுக்

கொண்டால் போலீஸ் மாதிரியே இருப்பார். மூன்று வேளையும் ஓட்டல் கடையில்தான் சாப்பாடு. வகைவகையாக சுவையோடு இருக்கும். அப்பா டீ குடிக்கும் போதெல்லாம் அவனுக்கும் ஒண்ணு ஆர்டர் செய்து விடுவார். அவனுக்குத் தெரியாமல் சிசர் குடிப்பார். சில சமயங்களில் வேலை நடக்கும் இடங்களுக்கு அவனையும் அழைத்துப் போவதுண்டு. சமயங்களில் ஓட்டல் கடையிலேயே உட்கார்ந்திருப்பான். போகும் போது பையன் என்ன கேட்டாலும் கொடுங்க என்று மறக்காமல் சொல்லி விட்டுப் போவார். கடைக்காரர்கள் அன்பு மிகுதியால் உபசரித்து நச்சரிப் பார்கள். எப்போதாது ஒரு சுசியம் வாங்கிக் கொள்வான். வந்த இடத்தில் அப்பாவுக்கு அதிக செலவு இழுத்து வைக்கக்கூடாது என்ற எண்ணம் அவனுக்குள் இயல்பாகத் திரண்டிருந்தது. டாம்டீம்மென்று ஊதாரித் தனம் காட்டிவிட்டால் அடுத்த முறை அழைத்து வருவதைத் தவிர்த்து விடுவாரோ என்ற அடிமனக் குளிராகவும் இருக்கலாம். பெஞ்சில் இலை விரித்து பெரிய மனிதர்களோடு அமர்ந்து சாப்பிடுவது மிகப்பெருமை யாக இருக்கும். சாப்பிடும்போது ஒரு சிறுவனை மற்றவர்கள் கண்டு பிடிக்க முடியாத அளவுக்கு பெரிய மனிதன் மாதிரி நாசூக்காக சாப்பிடு வான். ஒருமுறை விசிறிக்காற்றின் இழுப்பில் இலையிலிருந்த முழு அப்பளம் எழுந்துருண்டு தரையில் விழுந்து நொறுங்கிவிட்டது. நன்றாகப் பொரிந்த பெரிய அப்பளம் நொறுங்கும் சத்தம் தூக்கலாக இருந்தது. எல்லோரும் தலை திருப்பிப் பார்த்தார்கள். பெருத்த அவ மானத்தில் நொந்து நெளிந்தான். அப்பா அதை ரசித்துச் சிரித்தார். மற்றவர் களும் சிரித்தார்கள். ஓட்டல் முதலாளி 'என்ன நீ எங்க கடை அப்பளத்தை இப்படி கீழே போட்டு உடைச்சுட்டியே'ன்னு அதட்டுவாரோ என்றும் பயமாக இருந்தது. அப்பளம் இலையில் வைக்கப்பட்டதும் அதை நொறுக்கிப் பல துண்டுகளாக ஓரமாக வைத்துக்கொள்ள வேண்டுமென அப்பா சொல்லித்தந்தார். என்னதான் இருந்தாலும் அதற்குப் பிந்திய சந்தர்ப்பங்களில் ஓட்டல் கடை அப்பளங்கள் அவன் இலையிருக்கும் பழைய எதிரியாகத்தான் காட்சியளித்தது.

அப்பா சினிமா நிறைய பார்ப்பார். கமலஹாசன் படமென்றால் விரும்பிப் பார்ப்பார். அவர் வேலை பார்த்த எல்லா ஊரிலுமே தியேட் டர்கள் இருந்தன. பெரும்பாலும் இரவில் மட்டுமே படம் ஓடும் டூரிங் தியேட்டர்கள். அங்கே அப்பாவுக்கு அனுமதி இலவசம். ஆக அவனுக் கும் இலவசம்தான். தியேட்டரில் மின் கோளாறுகள் ஏற்பட்டால் அப்பாதான் சரிபார்த்துத் தரவேண்டும். எனவே எந்நேரத்திலும் உள்ளே நுழையலாம், வெளியேறலாம். அவனுக்கு சினிமா அவ்வளவு இஷ்ட மில்லை. கொலையெல்லாம் கூட அங்கே நடக்கின்றன. எல்லாப் படத் திலும் ஒரு பொல்லாதவன் இருக்கிறான். அவன் பயங்கரமாகப் பேசி அகோரமாகச் சிரித்து அழிச்சாட்டியம் பண்ணுகிறான். ஹீரோ கடைசியில் அவன் கொட்டத்தை அடக்கினாலும் அது நடக்கும் முன்னே

தூக்கம் வந்து கண்ணைப் பொத்திவிடுகிறது. இரண்டு மூன்று தினங்களுக்கு ஒரு படம் மாறிவிடும். எல்லாப் படங்களையும் காண அப்பா அழைத்துச் செல்வார். பாதியிலேயே தூங்கிவிட்டாலும், படம் முடிந்த பின்தான் எழுப்புவார். யானை, குரங்கு, புலி, சிங்கம், குதிரைகள் தலைகாட்டும் படமென்றால் பார்ப்பான். அந்தக் கதைகளை ஊரில் வந்து அமலா அக்காவிடம் சொன்னால், அவளும் ஆர்வமாகக் கேட்டு ரசிப்பாள். பழைய எம்ஜியார் படங்களில் எழுத்துப் போடும்முன் ஒரு யானை அவனை நோக்கி ஓடி வந்து தும்பிக்கை உயர்த்திப் பிளிறும். அந்த யானை கதைக்குள் நுழையும் காட்சியை எதிர்நோக்கி ஆவலோடு காத்திருப்பான். கடைசிவரை வராது. ஏமாற்றமாகிவிடும். ஏன் அந்த யானை வரவில்லையெனக் கேட்பான். தேவர் பிலிம்ஸின் தோற்றம் வளர்ச்சி எழுச்சி வீழ்ச்சி வரை அப்பா அவனுக்கு விளக்கம் கொடுத்து விளங்கிக் கொள்வதற்குள் போதும் போதுமென்றாகிவிடும்.

ஊருக்குத் திரும்பும் நாட்கள் நெருங்க நெருங்க சின்ன சோகம் தொற்றிக் கொள்ளும். வெளியூரில் இருக்கும் நாட்களில் அப்பாவை அவனுக்கு மட்டுமே சொந்தமானவராக உணர்வான். அதில் ஒரு பட்டத்து இளவரசனின் மிதப்பை ருசிப்பான். ஊர் திரும்பியதும் அப்பா எல்லாருக்கும் சொந்தமானவராக மாறிவிடுகிறார்.

பள்ளியிலிருந்து சுற்றுலா அழைப்பு வரும்போதெல்லாம் முதல் ஆளாய் பணம் கட்டிவிடுவான். பஸ்ஸில் பெண் பிள்ளைகளோடு உட்கார முடியாது. பஸ்ஸை விட்டு இறங்கியதுமே அமலா அக்கா கையைப் பிடித்துக் கொள்வான். உலா முடிந்து திரும்பியதும் பார்த்த இடங்களை மனப்பாடம் செய்து பத்திரமாக வைத்திருப்பான். அப்பா வீட்டுக்கு வந்ததும் முதல் வேலையாய் குற்றாலம், பாபநாசம், கன்னியாகுமரி, திருவனந்தபுரம், கடல், அருவி, அரண்மனை, ஏர்போர்ட் என அவருக்கு சுற்றிக் காட்டுவான். அப்பாவும் களைப்பின்றித் தலையாட்டுவார். சுவராஸ்யம் குறையும்போது சில கேள்விகளை எழுப்பி விடுவார். அப்பாவுக்கு அடிப்படை படிப்பு வாசனை கிடையாது. அவர் செட்டில் யாருக்குமே கிடையாது. ஊரில் அந்நாளில் பள்ளிக்கூடம் வந்திருக்கவில்லை. வெட்கம் கெட்டுப்போய் பக்கத்து ஊருக்கு படிப்புக்காக அலையவும் விருப்பமில்லை. சொந்தமாக ஊரில் பள்ளிக்கூடம் கட்டப்பட்ட போது அதற்காக கல், மண் சுமந்தவர்களில் அப்பாவும் ஒருவர். அதற்காக யாருக்கும் சான்றிதழ் ஏதும் தரப்படவில்லை. முறுக்கு பிழிந்த எழுத்தில் அப்பா கையெழுத்து அழகாகப் போடுவார்.

## ஐந்து

**ஸ்**டார் தொங்கும் மூங்கில் கழியை சணல் கயிறால் மாடி வராண்டாவின் இரண்டாவது தூணில் ஜாய்ஸ் அக்கா பிணைத்து இறுக்கிக்

கட்டினாள். இந்த வருஷம் வயலட் ஸ்டார். நடுவிலெல்லாம் பூப்பூவாக விரிந்திருந்தது. ஜெஸிந்தா அக்கா பிளக்கை செருகி லைட்டை சரி பார்த்தாள். நட்சத்திரத்தின் சிறகுகளில் திறந்திருந்த கண்கள் வழியே வெளிச்சத்தின் நூற்றுக்கணக்கான ஒளி விளாறுகள் வீட்டையும் தெருவையும் வருடின. பார்த்து கண்கள் பூரித்தன. கீழே 'சீத்தா பாத்தா கூத்துரு கூத்துரு' என்று சத்தம் கேட்டது.

பாண்டியோடு அக்காக்கள் கீழே எட்டிப் பார்த்தனர். சூசைமணிப் பாட்டையா. ஓலைப் பட்டையை ஏந்தியபடி முற்றத்தில் நின்றிருந்தார். ஆறடிக்கும் குறைவில்லாத உயரம், நீளநீளமான கைகால்கள். மெலிந்த தோற்றம், சுண்டிச் சுருங்கிப் போன சருமம், பட்டினியில் ஒட்டிப்போன வயிறு, ஏறுநெற்றி, வற்றிய முகம், அடர்ந்த புருவங்களுக்கடியில் ஒளிந்திருக்கும் ஈரமான கண்கள், சதா திரண்டு உருண்டிருக்கும் பீளைச்சேறு. முன்னந்தலையில் வழுக்கை, காட்டுப்புல்லாக வளர்ந்து புழுதி படிந்த முகத்து முடி, இடுப்பில் சுற்றியிருக்கும் சாக்குத் துண்டத்தால் சமயங்களில் மறைக்க ஏலாதுபோகும் உலர்ந்த ஆண்குறி, சோறு வாங்க ஒரு பட்டை, குழம்பு வாங்க கருப்பட்டி நிறத்தில் ஒரு சிரட்டை, சதா நடுங்கும் தலை, 'சீத்தா பாத்தா கூத்துரு கூத்துரு.' உலகிலுள்ள சகல கேள்விகளுக்கும் ஒரே பதில். இவற்றோடு எப்போதாவது ஊருக்குள் தலை காட்டும் பரிதாப ஜென்மம்தான் சூசைமணி பாட்டையா. சீத்தா பாத்தா கூத்துரு கூத்துரு என்பதற்கு என்ன அர்த்தம் என்று பல நாள் பல சந்தர்ப்பங்களில் பாண்டி பலரிடமும் கேட்டுப்பார்த்தான். யாருக்குமே தெரியவில்லை. அமலா அக்காவுக்கும் தெரிந்திருக்கவில்லை. ''பாவம் அந்த தாத்தா'' என்றாள்.

இடி விழுந்தால் குலை நடுங்கும் தொலைவிலிருக்கும் பண்ணைப் புதூர்தான் பூர்வீகம் அவருக்கு. இந்த வட்டாரத்தைத் தாண்டிப் போனதில்லை கடந்த நாற்பது வருஷத்தில் ஒரு தடவைகூட. கொஞ்ச நாட்கள் கண்ணில் தட்டுப்படாமல் வெளியே விசாரித்தால் சுற்று வட்டாரத்தில் ஏதாவது ஊரோரம் சுற்றித் திரிவார். மரத்தடிகளில் சாய்ந்து கிடப்பார். உடலில் எப்போதும் ஒரு வண்டி உரமிருக்கும். மழை வரப்போவது தெரிந்தால் எங்கே ஒளிவார், எப்படிப் பதுங்குவார் என்பது எல்லோருக்குமுள்ள பொதுவான ஆச்சரியம்தான். ஊர் நாய்கள் பொல்லாதவை. ஈவிரக்கமற்றவை. அவரது வருகையறிந்ததும் பெருங்குரலெடுத்துக் குரைத்துத் துரத்த கணக்கின்றிச் சூழ்ந்துவிடும். காலம் காலமாய்ப் பார்த்தும் அவரை மனத்தில் பதித்துக்கொள்ள அவை விரும்பவில்லை. சமாளிப்பார். கல்லெடுத்து வைத்துக்கொண்டு கையை ஓங்குவார். எறியவே மாட்டார். வேறு ஆட்களின் அதட்டல்கள் வந்தால்தான் நாய்கள் விலகிப் போகும்.

மூளை உருகி மூக்கில் வழியும் சிறுவர்களுக்கும் அவர் மீது அளவற்ற பரிகாசங்கள் உண்டு. அவருடைய கோபமும் சீற்றமும் பெரும்

உற்சாகத்தை அவர்களுக்குத் தந்தன. ஆனை பாட்டையா ஊருக்குள் வந்திருப்பது பள்ளியில் வகுப்பிலிருக்கும் சிறுவர்களுக்கு அங்கேயே தெரிந்துவிடும். இரக்கப்பட்டு வழங்கும் சோற்றை சிரத்தையின்றி வாங்கிக்கொண்டு மறைவான இடத்தில் வைத்துத் தின்றுவிட்டு, சிரட்டையில் தண்ணீர் வாங்கி தாடி நனையக் குடித்துவிட்டு ஊரோரம் எதாவது மரத்தடி தேடிச் சென்றுவிடுவார். மீண்டும் பசித்தால் மட்டுமே ஊருக்குள் வருவார். சேட்டைகள் புளுத்த சிறுவர்கள் அணி திரண்டு அவரைத் தேடி தோளில் கை போட்டுச் செல்வார்கள். களைப்பே உருவாகக் கண்களை மூடிச் சுருண்டு படுத்திருப்பார். பட்டையும் சிரட்டையும் தலைக்கருகே இருக்கும். சமயங்களில் அவர் படுத்திருக்கும் போது கால்களுக்கடியில் வழிந்தோட முடியாமல் தோல் பையிலிட்டு வைத்த இரண்டு தண்ணீர் பந்துகள் போல் சரிந்து நிற்கும் விதைக் கொட்டைகளைப் பார்த்ததும், சிறுவர்களுக்கு வாயெல்லாம் பல்லாகிவிடும். புளிப்பை ருசித்தவர்கள்போல் தோள்களை குவியாக குலுக்குவார்கள். 'வாங்கலே பாட்டையா புடுக்க அறுத்து கடுவோம்' என்று பேசியபடி அவர் அருகே ஜாக்கிரதையாக நெருங்குவார்கள். சிறு சலனத்திலும் கண் விழித்துவிடும் பாட்டையா அவர் மொழியில் கோபமாக ஏசுவார். 'சீத்தா பாத்தா கூத்துரு கூத்துரு' எனச் சீறுவார். கற்களைத் தேடி எடுத்து வீசியடித்து விரட்டுவார். எந்தச் சிறுவனும் காயமடைந்ததில்லை. அவர் கையிலிருந்து புறப்படும் கற்கள் மண்ணாங்கட்டிகள் பெரும்பாலும் வானத்திலேயே பறக்கும். அவரது அழுக்கேறி நைந்த பனையோலைப் பட்டை மீது சிறுவர்களுக்கு காரணமில்லாத ஈர்ப்பிருந்தது. அதை அவரிடமிருந்து பறித்தெடுத்துக்கொண்டால் என்ன நடக்கும் என்பதைக் கண்டறிய ஆசை.

பாண்டி இந்த சேட்டையெல்லாம் பண்ணமாட்டான். தூரத்திலிருந்து மௌனமாகப் பார்த்துக் கொண்டிருப்பான். இதயம் கனத்துவிடும். அவன் தடுத்தாலும் யாரும் கேட்க மாட்டார்கள். சில நேரங்களில் மிக அபூர்வமாக கொஞ்சம் துணிச்சலான சுழியன்கள் யாராவது அரவமின்றி அருகில் சென்று பட்டையைத் தூக்கி வந்துவிடுவார்கள். துணுக்குற்று ஆவேசமாய் எழும் பாட்டையா தீயை மிதித்ததுபோலப் பதறுவார்; ஏசுவார். தலை கழண்டு விழுவதுபோல் நடுங்கும். கல்லெடுத்து எறிவார். பலனிருக்காது. ஆற்றாமையால் காற்றில் கை வீசுவார். மண்ணள்ளித் தன் தலையில் இறைப்பார். பட்டையிடம் கை நீட்டி அழுவார். சிறுவர்களின் குரூபம் உடைந்து ஓடும். தூர நின்றே ஓலை காய்ந்த பட்டையைத் தூக்கி எறிவார்கள். அது அவருக்கும் அவர்களுக்கும் இடையில் விழுந்து விரல் நீளம் பிய்ந்து போகும். பொத்தலான பட்டையைப் பாய்ந்து வந்து எடுத்து கையகப்படுத்தியபின் எறிய கல் தேடுவார். உறுமிக்கொண்டு சுற்றும்முற்றும் அலைவார். 'இழுத்து மூடுங்க கேட்டை; பாட்டையா பட்டையில ஓட்டை' கோரஸாக பாடிய

படி கலைந்து போவார்கள். பாண்டி அவர்களோடு பாட மாட்டான். ஓட மாட்டான்.

பொத்தலான பட்டையில் சோறு வைக்கத் தயங்குபவர்கள், வாழை இலை, சருகுத்தாள் எதையாவது உள்ளே பரப்பிக் கொடுப்பார்கள். அவருக்கு ஆகுமென்று அலுமினியக் குவளைகள், சட்டி, பாத்திர வகைகள் கொடுத்தால் ஏற்றுக்கொள்ள மாட்டார்.

இந்த கிறிஸ்துமஸ் சமயத்தையொட்டி ஒரு வாரமாக ஊருக்குள் தட்டுப்பட்டார். ஒன்பது வீடுகள் தள்ளி ரூபினா அக்கா வீட்டு முற்றத்தில் வைத்து பட்டைச் சோற்றை சாப்பிட்டுக் கொண்டிருந்தார். வீட்டு வாசல் படியில் உட்கார்ந்து ஸ்டாரிலிருந்து பல்பையும் வயரையும் உருவிக் கொண்டிருந்த பாண்டியை பாக்கியம் பாட்டி கூப்பிட்டு ஒரு துணிப் பொட்டலத்தைத் தந்தாள். அப்பாவின் பழைய கைலியும் சட்டையும் இருந்தது. கொண்டுபோய் பாண்டி அவரிடம் நீட்டினான். இடது கையால் வாங்கியவர் முனகினார் 'சீத்தா பாத்தா கூத்துரு கூத்துரு.'

## ஆறு

**ஆ**ரஞ்சு நிற ஸ்டாரை இந்த வருஷம் மாடியில் கட்டிவிட்டு வந்ததோடு சரி, யாரும் மேலே ஏறவில்லை. கிறிஸ்மஸுக்கு வந்த ஜோஸ்பின் அக்கா அவள் கணவனுடன் எந்நேரமும் மாடியின் புதுரூமிலேயே இருந்தாள். கல்யாணமாகியும் காலேஜுக்குப் போய் எம்.ஏயை முடித்து விட்டாள். அக்காக்களின் ஆட்டபாட்டமெல்லாம் கீழேயே நடக்க வேண்டிய கட்டாயம். மாடி வராண்டாவில் உள்ள புது ஊஞ்சலில் ஆடமுடியாத எரிச்சல். ஜாய்ஸிடம் அமலா ஏக்கத்தோடு கேட்டாள் ''அப்ப தரைச் சக்கரத்த எங்க சுத்தவிடுறது?''

வருடம் தோறும் கிறிஸ்மஸ் இரவு கர்த்தர் பிறப்புக்கு முன் கோயில் மண்டபத்தில் நாடகம் போடுவார்கள். பள்ளி மாணவர்கள் நடிப்பார்கள். ஊரே திரண்டிருக்கும். கதை வசனம் இயக்கம் செபஸ்டியான் சார். பாண்டிக்கு நாடகத்தில் நடிக்க முதல்முறையாக வாய்ப்பு வந்தது. பெண் வேடம். ''உனக்கு அந்த ஃபிமேல் கேரக்டர் கனஜோரா இருக்கும். அசத்திரு'' என்றார் செபஸ்டியான் சார். பிலாத்து ஒரு முடாக் குடிகாரன். அவன் மனைவி சலோமிதான் பாண்டி. கடவுளிடம் பிராத்தனை செய்து செய்து குடிகாரனைத் திருத்தவேண்டும். இதுதான் பாத்திரம். ''நீ முழந்தாள் போட்டு மேடையில நின்னாப் போதும். பின்னணியில திரேசா டீச்சர் வாய்ஸ் கொடுத்துருவாங்க.''

''சார், நான் எங்க வீட்டுல கேட்டுட்டுதான் நடிப்பேன்'' என்றவன் அம்மாவிடம் வந்து சொன்னான். அம்மா எப்படியும் அதற்கு சம்மதிக்க மாட்டாள்; அம்மா பெயரைச் சொல்லி தப்பித்துவிடலாம் என்று நம்பினான். ''நீ நாடகத்துல நடிக்க மாட்டேன்னு சொன்னா வாத்தியார்

உன்னை பரிட்சையில பெயிலாக்கிடுவாரு'' என்றாள். அம்மா சொல்லை மீற முடியாமல் நாடகத்தில் நடித்தான்.

பாண்டி பெண் குழந்தையாகப் பிறந்திருந்தால் அம்மா கூடுதலாக சந்தோஷம் அடைந்திருப்பாளோ என பல்வேறு தருணங்களில் விளை யாட்டாக சந்தேகமடைவது உண்டு. அதனாலேயோ என்னவோ பாண்டி அம்மா மீது கூடுதல் கரிசனத்துடன் வளர்ந்தான். ''உன்னை பெத்ததுக்கு பேசாம ஒரு கல்ல பெத்துருக்கலாம்'' என்று பல அம்மாக்கள் பிள்ளை களைத் திட்டுவதைக் கேட்டிருக்கிறான். அது போல அம்மாவும் ''உன்னை பெத்ததுக்கு ஒரு பொண்ணை பெத்துருக்கலாம்'' என்று சொல்லிவிடும் சந்தர்ப்பம் வந்துவிடக் கூடாது என்பதில் சிறுவயது களில் எச்சரிக்கையாக இருந்தான். ''நாமதான் பிறந்தாச்சே, இனி என்ன செய்யமுடியும்'' என்ற சமயங்களில் ஒரு தெனாவட்டு வந்தாலும் அம்மாவுக்கும் அவனுக்குமிடையில் ஏதோ ஒரு உணர்ச்சிப் பின்னல் பயமுறுத்திக் கொண்டேயிருந்தது. அண்ணன்களுக்கும் அம்மாவிடம் பயம் உண்டு.

அம்மாதான் வீட்டில் ராணியும் தேனீயும். பாண்டி விபரமறிய அப்பா வெளியூர்களிலேயே தங்கியிருந்தார். வீட்டு விவகாரங்கள் அனைத்தையும் அம்மாதான் மேலாண்மை செய்தாள். சொந்த பந்தங் களின் வீட்டு விசேஷங்கள், கோவில் திருவிழாக்கள், அசனங்கள் எல்லா வற்றுக்கும் பிள்ளைகளோடு சென்று தலைகாட்டிவிட்டு முறையைக் கழித்துவிட்டு வருவாள். பரபரவென்று இயங்குவாள். அம்மியில் சும்மா மசாலா அரைப்பதைப் பார்த்தாலே வீட்டுக்கு யாரும் விருந் தாட்கள் வந்திருக்கிறார்களோ என நினைக்கத் தோணும். துணியைத் துவைத்து கொடியில் போட்டால் உலர்வதுக்குள் மூன்று முறை தொட்டுப் பார்த்துவிட்டு வந்துவிடுவாள்.

அம்மா பேச்சை வீட்டில் யாரும் தட்டமாட்டார்கள். அதைப் பயன்படுத்திதான் இந்தச் சிக்கலிலிருந்து தப்பிக்க வழி தேடி அம்மாவை நாடினான். இன்னும் வசமாக மாட்டிக்கொண்டான்.

அமலா அக்காவின் உடைகள் அவனுக்குப் பொருந்தியது. புதுசாக கல்யாணம் முடித்திருந்த மூத்த அண்ணன் மதினியோடு திருவிழாவுக்கு வந்திருந்தான். மதினிக்கு சிரிப்பை அடக்க முடியவில்லை. அப்பா அம்மா பாட்டி அண்ணன்கள் ஜாய்ஸ் அக்கா எல்லோரும் அவன் நடித்த சோகக் காட்சிகளைப் பார்த்து விழுந்து விழுந்து சிரித்தார்கள். நடிக்கும் போது பாண்டி முகத்தில் வேதனையும் சோகமும் இயல்பாக வந்து கூடியது. இயக்குநர் செபஸ்தியான் சார் ''சூப்பர்ப் சூப்பர்ப்'' என்று பாராட்டினார். நாடகம் முடிந்து, திருவிழா முடிந்து எல்லோரும் அதை மறந்து விட்டார்கள், அம்மாவைத் தவிர. அவள் மணக்கண்ணில் அந்தக் காட்சி வெகுகாலம் கலையாமலிருந்தது. எப்போதாவது அம்மா ரொம்ப சந்தோஷமான மனநிலையிலிருந்தால் ''என்ன சலோமி எங்க கிளம்

பிட்டா? சலோமி கோயிலுக்குப் போவலியா?'' இது மாதிரி எதாவது சொல்லிச் சீண்டுவாள். கட்டுப்படுத்த முடியாமல் சிரிப்பாள். பாண்டி என்ன சொல்லிப்பார்த்தும் அம்மா அந்தப் பழக்கத்தை கைவிடவில்லை. அம்மா வேறு எதையோ நினைத்துச் சிரித்தாலும் பாண்டி பிலாத்து பொண்டாட்டியாகி வெட்கி வெருண்டோடுவான்.

☆☆

**பா**ண்டிக்கு பொறித்த மீன்கள் குழம்பிலிட்ட மீன்கள் சாப்பிடு வதில் ஆசையிருந்தது. அடுப்பில் பக்குவப்படும் மீன் வாசனை காற்றில் கலந்து வரும்போதே அவன் நாவில் எச்சில் ஊறிவிடும். ஆனால் அவன் தனது வீட்டில் மீன் குழம்போ, வறுவலோ சாப்பிடுவதில்லை. பல மாதங்களாக இந்த நாடகத்தில் மிகப் பரிதாபமான பாத்திரமாக நடித்து வருகிறான். விதிக்கு அவன் மீது என்ன கோபமோ தெரியவில்லை, பசியோடும் ருசியோடும் விளையாடியது.

வீட்டில் அன்று துப்பு வாளை மீன். அதைச் சாப்பிடுவதற்கு கொஞ்சம் சாமர்த்தியம் வேண்டும். அதன் உடலில் முள் இல்லாத பகுதி கண்கள் மட்டும்தான். அது தெரியாத பாண்டி மற்ற மீன்களைப்போல் பாவித்து வாயிலிட்டு மென்றபோது துப்புவாளையின் முட்கள் வாய்க் குள் மூன்று இடத்தில் குத்திக் கிழித்து பதம் பார்த்துவிட்டன. ரத்தக் கசிவும் ஏற்பட்டுவிட்டது. அந்த வலியை சகித்துக்கொண்டு அவனால் அதற்கு மேல் ஒரு கவளம் கூட சோறு தின்ன ஏலவில்லை. அதற்காக, தான் ஒரு மீன் தின்னத் தெரியாத முட்டாள் என்று வெளிக்காட்டிக் கொள்ளவும் அவன் தன்மானம் இடம் கொடுக்கவில்லை. முகத்தை அஷ்டகோணலாகச் சுழித்துக்கொண்டு பாதி சாப்பாட்டிலிருந்து பசியோடு எழுந்துகொண்டான். ''என்னடா பாதி சோத்துல எந்துச்சிட்ட'' என்று அம்மா கவலையோடு விசாரித்தபோது ''என்னம்மா இது, மீன் குழம்பையே வைக்கிற! எனக்கு மீன்னாலே பிடிக்கலம்மா'' என்று எரிச்சலோடு பதிலளித்தான். அம்மா அவனுக்கு வேறு குழம்பு செய்து தருவதாகவும் குறை வயிறும் சாப்பிடுமாறும் வற்புறுத்தினாள். ''வேண்டாம் வேண்டாம் போதும்'' என்று பாண்டி கோபமாகப் பதிலளித்துவிட்டான். சற்று யோசித்து நிதானமாக அந்த சம்பவத்தை அணுகியிருக்கலாம் என்று பின் நாட்களில் பலமுறை தன் சமர்த் தின்மையை சபித்துக்கொண்டான்.

அதற்கு பிந்திய சந்தர்ப்பங்களில் வீட்டில் மீன் சமைத்தால் பாண்டிக் கென்று தனியாக அம்மா ஒரு குழம்பு செய்து வைத்து விடுவாள். வீடெல் லாம் மீன் குழம்பு மணக்க விதியை நொந்துகொண்டு அவன் பருப்போ புளியோ ரசமோ சாப்பிட்டான்.

பாண்டி மீன் தின்னாததைப் பற்றி வீட்டில் உள்ளவர்கள், உறவினர்

கள் விசாரிக்கும்போது ''அவனுக்கு அது ஒக்கல, பிடிக்காதுனு சொல்லிட்டான்'' என்று அம்மா மற்றவர்களிடம் தெரிவித்தாள். அவன் எடுத்த ஒரு முடிவை அவன் மாற்றிக்கொள்ள முடியாத அளவுக்கு அம்மாவின் அன்பும், ஒருவித அரிச்சந்திரன் அந்தஸ்தும் அவனைக் கட்டிப் போட்டது. திருடவும் தயக்கமாயிருந்தது. மீனுக்காக ஏங்கி ஒரு வருஷம் நாக்கு காய்ந்து போன பிறகு ஒருநாள், குருட்டுப் பூனை விட்டத்தில் பாய்ந்தது போல் நேர்ந்த தன் கொள்கையைத் தளர்த்திக்கொண்டான். ஆனாலும் அம்மாவின் நம்பிக்கையை நகர்த்தி வைக்க அவன் சுயமரியாதை இடம் கொடுக்கவில்லை.

நீள நீளமான வெள்ளி வாள்கள் போல வாளை மீன்களைப் பெரியம்மா வீட்டில் கண்ட ஒரு நாள் பாண்டி அமலா அக்காவிடம் தன் ஆசையை வெளிப்படுத்தி சரணடைந்து விட்டான். 'ச்சச்சோ' என்று முதலில் தம்பிக்காக பரிதாபப்பட்ட அமலா அக்கா, ''இது எங்க வீட்டுக்கு தெரிய வேண்டாம்'' எனக் கேட்டுக்கொண்டதும் சிரித்து விட்டாள். அவள் சிரிப்பிலிருந்த மெல்லிய எள்ளல் பாண்டியை தர்மசங்கடப் படுத்தியது. தன் விரதத்தை பழையபடியே கடந்து வந்த முறையிலேயே தொடர்ந்து விடலாமா என்றும் யோசித்தான்.

அமலா அக்கா ஆதுரமாக பாண்டியின் தலைஉச்சியை வருடித் தந்தாள். பிறகு பரிவான குரலில் பேசினாள். ''உனக்கு மீன்தானே வேணும்? எங்க வீட்டுல வைக்கிறப்போ இங்க வந்துரு. நான் தாரேன், என்ன! யாருக்கும் தெரியாது, சரியா!'' அடுத்த அரை மணி நேரத்திற்குள் மற்ற அக்காக்களுக்கும் தெரிந்துவிட்டது.

☆☆

பாண்டிக்கு எல்லா விளையாட்டுகளுமே பிடிக்கும். பிடித்தாலும் பந்தயம் என்றால் கொஞ்சம் ஒதுங்கி விடுவான். ஆகவே எந்த விளை யாட்டு மேலும் அவனுக்கு கிறுக்கு கிடையாது. கபடி, கள்ளன் போலீஸ், ஐஸ் ஃபால் ரெடி, பிள்ளையார் பந்து, கிளியான் தட்டு, பாண்டி, தட்டாமாலை எல்லாம் கிரிக்கெட் வந்ததும் பெண்கள் விளையாட்டாகி விட்டது. கிரிக்கெட் காய்ச்சல் மாதிரி பரவிய வேகத்தில் அப்பாவிடம் கேட்டு பாண்டியும் ஒரு கிரிக்கெட் பேட் வாங்கிவிட்டிருந்தான். ஆனாலும் அவனால் சிக்ஸர் ஸ்ரீகாந்த் போல் அடித்து விளையாடி சோபிக்க முடியவில்லை. அவன் மட்டை பிடிக்க வந்ததுமே பருத்திக் காய் பன்னீரு பந்து வீச வந்துவிடுவான். இரண்டு மூன்று மூஞ்சியை உடைக்கும் பவுன்சர்கள் வீசுவான். கடுமையான வேகத்தில் பந்து, காதுக்குள் தீக்குச்சி கிழித்ததுபோல் இரைந்துகொண்டு போகும். பாண்டி வளைந்து நெளிந்து தப்பிப்பான். ஆளை விட்டால் போதும் என்ற பதற்றத்துக்கே வந்துவிடுவான். அடுத்த பந்து தாழ்ந்து தணிந்து

காலோரம் சிறிப்பாயும். க்ளீன் போல்டாகி விடுவான். பட்டம் விடப் போனால் பருத்திக்காய் அங்கேயும் வந்து விடுவான், வெட்டி விடுவதற்கு. பம்பரம் விளையாடப் போனால் அங்கேயும் இருப்பான். பருத்திக்காய் அவன் பம்பரத்தில் மாட்டுக் கொம்புபோல் ஆணி வைத்திருப்பான். கோட்டைக்குள் மாட்டிய பம்பரங்களைக் குத்தி வெளியிலெடுக்கும்போது 'கெண்டி' பெயர்த்துவிடுவான். அதிலும் குறிப்பாக பாண்டியின் பம்பரத்தை குறிவைத்து உடைப்பான். அவன் உடைத்த பம்பரங்களுக்கு கணக்கே இல்லை.

பாண்டி பம்பரத்தில் ஆணி அளவோடு இருக்கும். நுனியும் கூர்மையாக இருக்காது. அந்த பம்பரத்தில்தான் மொட்டைமாடியில் 'செர்க்கா' எடுத்து அமலா அக்காவுக்கு ஜாய்ஸ் அக்கா கொடுப்பாள். அவள் உள்ளங்கையை உறுத்தாமல் மிருதுவாகச் சுற்றும். ஜாய்ஸ் அக்கா சாட்டையைச் சுற்றிச் சுண்டித் தன்னை நோக்கி இழுக்கும்போதே பம்பரம் தரைக்குப் போகாமல் கிளிபோல் தாவி வந்து அவள் உள்ளங்கையில் சுற்றும். பாண்டிக்குக்கூட அந்த வித்தை கைவரவில்லை.

பருத்திக்காய் கொட்டத்தை அடக்குவதற்காக ஒருமுறை மாட்டுக் கொம்பு ஆணி வைக்க ஏலான ஆசாரி பட்டறைக்குப் போனான். அவர் வைக்கத் தெரியாமல் வைத்து புதுப்பம்பரத்தை உடைத்துவிட்டார். பருத்திக்காய் பன்னீருக்கு பாண்டி மேல் தீராத கோபம். பாண்டி எந்த வம்பும் பண்ணியதில்லை. பருத்திக்காய்க்கு சுத்தமா படிப்பு ஏறாது. பாண்டி படிப்பான். கையெழுத்தும் சுத்தமாக இருக்கும். ஒரு முறை கலையரசன் சார் கடுப்பாகி பன்னீர் பக்கத்தில் அமர்ந்திருந்த பாண்டியை பருத்திக்காய் பன்னீரிடம் சுட்டிக்காட்டி ''பேசாம நீ அவன் மோள பிடிச்சிக் குடில, அப்பவாவது உனக்கு எதாவது மண்டையில ஏறுதானு பாப்போம்'' என்று அறிவுரை சொன்னார். வகுப்பறையே அதிர்ந்து போய் விட்டது. பாண்டியும் சங்கடத்தில் நெளிந்தான். அன்று பிடித்தது சனியன். அதற்குப் பிறகு பள்ளிக்கு வெளியே பாண்டிக்கு பருத்திக்காய் பரம எதிரியாகிவிட்டான்.

☆☆

பாண்டி ஆறாம் வகுப்பு முழு ஆண்டு பரிட்சை எழுதிவிட்டு கோடை விடுமுறையில் இரண்டு வாரங்கள் அப்பாவோடு கழித்துவிட்டு ஊருக்குத் திரும்பியிருந்தான். அப்பா அப்போது வேம்பாறு ஊரில் வேலை பார்த்தார். அந்த வருடத்தில்தான் பணகுடியிலிருந்து அங்கு மாற்றலாகியிருந்தார். வேம்பாறு அவனுக்குப் புதியது. பழகியிராத மனிதர்கள். போய் இரண்டு நாளிலேயே எல்லாம் சகஜமாகிவிட்டது. கடைவீதி, சினிமா தியேட்டர் என பிற ஊர்களைப் போலவே வேம்பாறும் இருந்தது. அன்பான மனிதர்கள், பரிவான உபசரிப்புகள்.

வழக்கம்போல அப்பா காலை உணவு முடிந்ததும் வேலைக்குப் போய்விடுவார். பாண்டி 'கிருட்டிணன் உணவக'த்தில் அமர்ந்து வேண்டிய தின்பண்டங்களை வாங்கித் தின்றபடி வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பான். சாலையில் பஸ்கள் அடிக்கடி வந்து நிற்பதும் புறப்படுவதுமாக இருக்கும். அதிகமும் தூத்துக்குடி, கோவில்பட்டி போர்டு போட்ட பஸ்கள். வழி விளாத்திகுளம். பஸ் பார்த்து போரடித் ததும் ஊர் சுற்றப் புறப்பட்டு விடுவான். யார் மறித்துக் கேட்டாலும் 'லைன்மேன் காணிக்கைராஜ் சார் மகன் என்று சொல்லும் துணிவு சுற்றித் திரிய வைத்தது. அப்பா மதிய சாப்பாட்டுக்கு வருவதற்குள் ஒரு சுற்று சுற்றிவிட்டு ஓட்டலுக்கு வந்துவிடுவான். மாலையில் ஐந்து ஆறு மணிக் கெல்லாம் அப்பாவுக்கு வேலை முடிந்துவிடும். அந்த இடைப்பட்ட நேரத்தில் இன்னொரு சுற்று முடித்துவிட்டு வந்து விடுவான். பிறகு இரவு அப்பாவோடு இணைந்து கழியும். லட்சுமி தியேட்டரிலோ லியோ விலோ ஒரு சினிமா படம் கண்டிப்பாக உண்டு.

வேம்பாறு என்றதும் அவன் கற்பனையில் ஒரு ஆற்றை வரைந்து வைத்திருந்தான். புறப்படும்போது அமலா அக்காவிடம் வேம்பாற்றில் ஆற்று நீச்சல் பழகிவிட்டு வருவேன் என்று சொல்லியிருந்தான். எனவே அந்த ஆற்றைத் தேடிக்கொண்டிருந்தான். அதிகம் அலைந்தான். அப்பா விடம் வேம்பாறு எங்கே ஓடிக்கொண்டிருக்கிறது என்று கேட்டு அறிந்து கொள்ளத் தயங்கினான். 'அங்கெல்லாம் போகாதப்பா' என்று அப்பா கூறிவிட்டால் அவர் சொல்லை மீறி அவனால் அங்கே போகவே முடியாது. ஆகவே அந்த திட்டத்தையும் ஆசையையும் தனக்குள்ளேயே வைத்துப் பூட்டியிருந்தான். பல இடங்களில் தேடியும் அவனால் ஆற்றைக் கண்டுபிடிக்க முடியவில்லை. கடைசியாக, தனியாகப் போனால் தான் சிக்கல், அப்பாவோடு சென்று ஆற்றைப் பார்த்தால் என்ன என்ற யோசனை தோன்றியது. அப்பாவிடம் கேட்கும் முன்னமே மீண்டும் ஒருமுறை ஊர் பெயரை கவனமாக வாசித்துப் பார்த்தான். பேச்சில் அது வேம்பாறாகவும், எழுத்தில் 'வேம்பார்' என்றுமிருந்தது.

கடைவீதியிலேயே அமர்ந்துகொண்டிருப்பது அலுத்துவிட்டால் வீட்டில் போய் இரு என்று அப்பா வீட்டுச் சாவியை அன்று தந்துவிட்டுப் போயிருந்தார். அந்த சாவிக்காக கொஞ்ச நேரம் வீட்டிலிருந்தான். பிறகு வீட்டைப் பூட்டிவிட்டு புதிய மார்க்கத்தில் கிழக்கு நோக்கி நடந்தான். ஏழெட்டு வீடுகளைக் கடந்ததுமே காடு மாதிரி உடை மரக் கூட்டம் வந்துவிட்டது. உடைமரக் காட்டுக்குள் பன்றிகள் உறுமிக்கொண்டும் ஓடிக்கொண்டும் ஏராளமாக அலைந்தன. அவன் காலடிச் சத்தம் அவன் காதிலே எதிரொலிக்கும்படியாக கனத்திருந்த அமைதி சற்றே அசாதாரண மாகவிருந்தது. உடைமரங்களூடே நெளிந்து சென்ற ஒற்றையடிப் பாதை முடிவடைந்து வெளி விஸ்தீரணமடைந்தபோது திடீரென்று கடல் எதிரே விரிந்து கிடந்தது. மிக அமைதியாக, சிறு முணுமுணுப்பும் செய்யாமல்.

சில நிமிடங்கள் அந்த இடத்திலேயே பிரமித்து வியப்பில் சிலையாகி நின்றுவிட்டான். ஒடுக்கமான கரை இரு பக்கமும் நீண்டு சென்று வளைந்தது. வகுப்பறையில் கலகலப்பாக விளையாடிக் கொண்டிருக்கும் பிள்ளைகள் வாத்தியார் வந்ததும் அடங்கிப் போகுமே அப்படி கடல் அடங்கிப் போய் செயற்கை அமைதியைச் சேர்த்துக்கொண்டது போலிருந்தது. நீலமும் பச்சையும் கலந்த அதன் நிறம் மிக அழகாகக் கண்களைக் கவர்ந்தது. அதே நேரம் பெரும் அச்சத்தையும் அவசர சந்தேகங்களையும் உண்டாக்கியது. கரையில் ஆள் நடமாட்டமே இல்லை. கடலில் ஒரு அலை கூடத் தென்படவில்லை.

தேரித்துறை கடல் அலைகளால் ஆனது. சதா இரைச்சலிட்டுக் கொண்டே இருக்கும். திரள் திரளாய் நுரை புரளும் அதைப் பார்க்க பயம் தோன்றுவதில்லை. ஆனால் கல்லுளிமங்கனாகக் கிடக்கும் இந்தக் கடல் அவன் முகத்தை வியர்க்கக்கூட வைத்தது. சீக்கிரமே அங்கிருந்து வந்த வழியே திரும்பி விட்டான். சில எட்டுகள் நடந்தபிறகு நின்று தலையைத் திருப்பிக் கடலைப் பார்த்தான். அது முன்பு போலவே 'உம்' மென்றிருந்தது. தூரதொலைவில் கூட அலைகளுக்கான அறிகுறிகளைக் காணோம். பள்ளியில் பரிட்சைக்கு லீவு விட்டதுபோல கடலில் அலைகளுக்கும் லீவு விட்டிருப்பார்களோ என்று நினைத்துக்கொண்டான். அப்பாவிடம் விசாரித்தபோது 'அது பெண் கடல் ' என்றார்.

ஊருக்குப் புறப்படும்போது ஒட்டல் ஓனர் கிருட்டிணன் ஒரு புத்தம் புது மணிபர்ஸை பாண்டிக்கு அன்பளிப்பாகக் கொடுத்தார். அதற்குள் புது இரண்டு ரூபாய் நோட்டுக்கள் ஐந்து வைத்திருந்தார். நன்றாகப் படிக்கச் சொன்னார். அந்த மணிபர்ஸ் டிக் அழகாக இருந்தது. அதைக் கால்சட்டை பைக்குள் வைத்துக்கொண்டதும் உடல் எடை பத்து கிலோ கூடிவிட்டது போன்று ஒரு கனம் ஏற்பட்டது.

ஊருக்கு வந்ததும் மணிப்பர்ஸும் புது ரூபாய் நோட்டுகளுமாக ஆர்வமாக அக்கா வீட்டுக்குப் போனான். வேம்பார் போய் வந்த அனுபவங்களை அவளிடம் கதை கதையாகச் சொல்ல வேண்டும் என்றொரு தவிப்பு ஏற்பட்டிருந்தது. எங்கு போய்விட்டு வந்தாலும் அதுதான் வழக்கம். அதிலும் குறிப்பாகப் பெண் கடலைப் பற்றி நிறையச் சொல்ல விரும்பினான்.

பெரியம்மா வீட்டில் அவன் எதிர்பாராத திடீர் மாற்றங்கள் நடந்திருந்தன. முழுப்பாவாடை சட்டை அணிவதை வழக்கமாகக் கொண்டிருந்த அமலா அக்கா திடுதிப்பென்று பாவாடை தாவணிக்கு மாறியிருந்தாள். பாண்டியைக் கண்டதும் அமலா அக்காவுக்கு கொஞ்சம் வெட்கமாகி விட்டது. கண்ணோடு கண் பார்ப்பதற்கும் பேசுவதற்கும் சிறிது நேரம் சங்கடப்பட்டாள்.

பாண்டிக்கும்தான் என்ன செய்வதென்று தெரியவில்லை.

ஜோஸ்பின் அக்காவுக்கு ஆஸ்பத்ரியில் குழந்தை பிறந்திருந்தது. அவளை ஒரு நாளுக்கு முன்புதான் வீட்டுக்கு அழைத்து வந்திருந்தார்கள்.

பெரியம்மா மிக சந்தோஷமாக வலம் வந்தாள். பாண்டியைக் கண்டதும் அவள் முகம் இன்னும் பிரகாசமடைந்து விட்டது. ''பாண்டி எப்ப வந்தே? உன் மருமகப்பிள்ளை மாமாவை எங்கே எங்கேனு தேடிக் கிட்டிருக்காவளே'' என்று கபடமில்லாமல் பெரிதாகச் சிரித்தாள். பாண்டியும் சிரித்தான். அந்தச் சிரிப்பில் கலந்துகொண்டு அமலா அக்காவும் சகஜமடைய முயற்சித்தாள். பாண்டி மாமனாகிவிட்டது ஏதோ பதவி உயர்வு பெற்றது போன்ற உணர்வைத் தந்தது. அதை உடனேயே உறுதிப்படுத்துவதுபோல் பெரியம்மா நடுவீட்டிலிருந்து ஒரு புது வேட்டியை எடுத்து வந்தாள். அதை பாண்டியிடம் நீட்டினாள். எதற் கென்று தெரியாமல் பாண்டி திருதிருவென்று முழித்தான். ''மாமன்காரன் கட்டுன கோடி வேட்டியிலதானே மருமகனுக்கு தொட்டில் கட்டணும். இந்தா இதை கொஞ்ச நேரம் கட்டிட்டு அவுத்துக் குடு'' என்றாள். அப்போது பெரியம்மாவின் கண்களில் கண்டு பழக்கமில்லாத ஒரு பார்வை பளபளவென்று மின்னியது. பாண்டி மறுக்க முடியாமல் வாங்கிக்கொண்டான். வேட்டியை எப்படிக் கட்டிக்கொள்வதென்று அவனுக்குத் தெரியவில்லை. செய்வதறியாது நின்றுகொண்டிருந்தான். பெரியம்மா மீண்டும் நடுவீட்டுக்குள் போய்விட்டாள்.

கீழுதட்டைக் கடித்துக்கொண்டு கட்டிலில் அமர்ந்திருந்த அமலா அக்கா எழுந்து ''கொண்டா நான் கட்டி விடுதேன்'' என்று உதவ முன் வந்தாள். எட்டு முழ வேட்டியை வாகாக விரித்து நாலாக மடித்து அவன் முன்னே ஒரு முட்டங்காலைத் தரையில் ஊன்றி அமர்ந்து கட்டிவிட்டாள். பாண்டி சிலையாக நின்றிருந்தான். வேட்டி தரையில் தழையப் படிந்து கிடந்தது. எட்டெடுத்து வைத்து நடந்தால் முகம் குப்புற விழுந்து விடு வதைத் தவிர வேறு வழியில்லை. அவன் தர்மசங்கடத்தைப் புரிந்து கொண்ட அக்கா வேட்டியை மடித்துக் கட்டிவிட்டாள். அதற்குப் பிறகே சற்று ஆசுவாசமாக மூச்சு விட்ட பாண்டி பொம்மை போல் இடப்பக்கம் திரும்பி நடந்து கட்டிலில் அமர்ந்தான். எதுவும் பேசாமல் ஊமையாக அமர்ந்திருந்தான்.

''வேட்டி கட்டுனா பாண்டிக்கி சூப்பரா இருக்கு'' என்றாள் எதிரில் நின்றிருந்த ஜோஸ்பின் அக்காள். பாண்டி வெட்கத்தில் தலையைத் தாழ்த்தினான். சீரற்ற ஒரு சிரிப்பு அவன் உதடுகளைப் பிழிந்துவிட்டுப் போனது. ''ஐயே... வெக்கத்த பாரு'' மீண்டும் சீண்டினாள்.

''எனக்கு தாவணி எப்படியிருக்கு?'' நிதானமான குரலில் உரிமை கலந்த தொனியில் அமலா அக்காள் பாண்டியிடம் கேட்டாள். நல்லா யிருக்கு என்பதுபோல் அவன் தலையை மட்டும் ஆட்டி வைத்தான். வீட்டில் புதிதாக குழந்தைகள் பிறந்தால் சின்னப் பிள்ளைகளெல்லாம் பெரியவர்களைப் போல ஆடை உடுத்திக் கொள்ள வேண்டும்போல என

அவன் தனக்குள் எண்ணிக்கொண்டான். 'நான் தொட்டில் கட்டுவதற்காக வேட்டி கட்டியிருக்கிறேன். அக்கா எதற்காக தாவணி கட்டியிருக்கிறாள்' என்று தனக்குள்ளே கேட்டுக்கொண்டான்.

பெரியம்மா போதுமென்றதும் வேட்டி அவிழ்த்துக் கொடுக்கப் பட்டது. அவன் பழைய பாண்டியாகி விட்டான். அமலா அக்கா தாவணியை அவிழ்த்துக் கொடுக்கவேயில்லை.

மறுநாள் பாண்டி அக்கா வீட்டுக்குப் போனபோது மருமகனுக்காக அவன் ஆற்றவேண்டிய கடமை இன்னொன்று காத்திருந்தது. தொப்புள் கொடி அறுத்த ரணம் வாடாமல் இருந்தது மருமகனுக்கு. சுருட்டு புகைத்து அதன் நுனியில் உதிரும் சாம்பலை எடுத்து ரணத்தில் இட்டு வந்தால் வேகமாக ஆறிவிடுமாம்.

பாண்டி சுருட்டு பிடித்தான். கடையிலிருந்து வாங்கி வந்து அவனுக் குப் பற்ற வைத்தது ஜாய்ஸ் அக்கா. கருகிக் கருகிப் போனது. புகை வரவில்லை. அக்காதான் வாங்கி இழுத்து புகையை வரவழைத்தாள். கெட்ட நாற்றமடித்தது. பிறகு பாண்டி இழுத்தான். தொண்டை கமறியது. கண்களில் நீர் கட்டியது. மருமகனுக்காக நிறைய இருமினான். ஆடையில் ஏற்பட்ட மாற்றத்தால் அமலா அக்கா அவனை விட்டு மெல்ல மெல்ல விலகிப் போய் விடுவாளோ என்று பாண்டி உள்ளூர அதிகமாக பயந் திருந்தான். ஆனால் என் உடைதான் மாறியிருக்கிறது என் உள்ளத்தில் எந்த மாற்றமும் இல்லை என்பதை பாண்டிக்கு நிரூபிக்கும் விதமாக அவன் புகைத்துக் கொண்டிருந்த சுருட்டை ரகசியமாக வாங்கி திருட்டு தம் மடித்து அமலா அக்காள் அவனுக்கு உதவினாள். கூடச் சேர்ந்து இரு மினாள். அவன் மனம் நிம்மதியடைந்தது.

☆☆

# 2

# சைக்கிளில் ஜிம்மி

ஏழு

ஜிம்மி நியாயப்படிப் பார்த்தால் பெரியம்மா வீட்டுப் பிள்ளை. பிறந்து இரண்டு மாதங்களேயான குட்டியாக இருந்தபோது பெரியப்பாவுக்கு அன்பளிப்பாக அவர் நண்பரால் கொடுக்கப்பட்டது. நண்பருக்கு வல்லநாட்டருகே பெரியப்பா நல்ல விலையில் ஒரு சொத்து விவகாரத்தை முடித்துக் கொடுத்திருந்தார். ''ஒரிஜினல் ராஜபாளையம் வேய்! வீட்டுக் காவலுக்கு ஆவும். வேட்டையிலயும் புலி. விசுவிசுனு வளரும். வளந்து காலத் தூக்கி மேல போட்டா ஆள் உயரமிருக்கும். கொண்டு போரும். நம்ம ஞாவகமா இருக்கட்டும்.'' தரகு கமிஷன் போக ஜிம்மி எக்ஸ்ட்ரா போனஸ்.

பள்ளி விட்டு வந்த பாண்டியும் அமலா அக்காவும் ஜிம்மியைப் பார்த்ததும் விருந்தாளைக் கண்டது போல் முகம் மலர்ந்தார்கள். கழுத்தில் விரல் அகலம் தோல்பட்டை சுற்றி பொடிக்கண்ணி இரும்புச் சங்கிலியால் விட்டுத்தூணில் கட்டப்பட்டிருந்தது. பிஞ்சுக் கால்கள். கால்வட்டமாகக் குட்டியான வால். படிந்த மென்ரோமங்களில் ஒரு மினுக்கம். மடிந்த காதுகள். ரோஜா இதழ் போல் சிவந்த நாக்கு. கருகருவென்று பளபளக்கும் கூர்மையான கண்கள். குழந்தைப் பார்வை. பார்த்ததுமே ரொம்பவும் பிடித்துப் போய்விட்டது. அப்போது அதற்குப் பெயர் நாய்க்குட்டிதான்.

அமலா அக்காவும் பாண்டியும் இரண்டு மூன்று நாட்கள் கூடிப் பேசி முப்பது நாற்பது பெயர்களைச் சலித்து கடைசியாக ஜிம்மியைத் தேர்ந்தெடுத்தார்கள். குமுதம் படித்தபடியே ஜாய் அக்கா 'பாண்டி' என்று பரிந்துரைத்தாள். மூன்று வேளையும் பால்தான் குடித்தது. நிஷ்டையிலிருப்பது போல் கண்ணை மூடி நிறைய நேரம் தூங்கியது. விழித்துவிட்டால் ஒரே துறுதுறுப்புதான். சங்கிலியை அவிழ்த்து விட்டுவிட்டால் வீடு முழுக்க குடுகுடுவென்று சுற்றித் திரியும். கால்கள் மீது தணியாத மோகம். ஆட்கள் கால் மேல் தன் காலை துவைப்பது போல் தூக்கித் தூக்கிப் போடும். பிஞ்சுக் கால்கள்தான் ஆனாலும் கூர்மையான நகங்கள். வருடி விளையாடும்போது உடல் கூச்செறியும். செல்லமாக விரல்களைக் கள்ளக் கடி கடித்து வைக்கும். மாலை நேரங்களில் அமலா அக்காவும் பாண்டியும்

ஜிம்மியைத் தூக்கிக்கொண்டு மொட்டை மாடிக்குப் போய்விடுவார்கள். கொஞ்ச நாட்களுக்கு அவர்களுக்கு வேறு பொழுதுபோக்கே இல்லையென்றாகி விட்டது. அமலா அக்கா ஜிம்மியின் முகத்தோடு முகம் உராய்ந்து கொஞ்சுவாள். 'ஜிம்மிக்குட்டி... கண்ணுக்குட்டி...' பாண்டிக்கு அப்படிச் செய்யத் தோணாது. தூரத்திப் பிடிக்கத் தூண்டிவிட்டு சுற்றிச் சுற்றி ஓடுவான். காய்ந்த துணி காற்றில் படபடப்பது போல் மெல்லிய குரலில் 'வள் வள்' ளென்று குரைத்து கோபப்படும்போது பார்க்க அழகாக இருக்கும்.

ரேடியோ பாடினால் எஸ்.பி.பி, ஜானகி, ஏசுதாஸ் என்று யாரையும் விடாது. குரைத்து விரட்டிவிடும். அமலா அக்காவுக்கு அடக்க முடியாமல் சிரிப்பு வரும். ஜாய் அக்கா முறைப்பாள். சேசுமரியாயி பாட்டிக்கு தலை சுற்றும். மாடியில் பெரிய ஊஞ்சலில் வைத்து ஆட்டினால் பிடிப்பில்லாமல் மேலும் கீழும் சரியும். ஊஞ்சலைக் கண்டாலே நடுங்கிக் கூப்பாடு போடும்.

ஒருநாள் ஜிம்மியைக் கட்டிப் போட மறந்து போனதில் அது இரவு ஜெபத்துக்கு கோவிலுக்கு வந்துவிட்டது. நடுக் கோவிலில் நின்று அது தனக்கு தெரிந்த மந்திரங்களை அடிவயிற்றிலிருந்து குரலெடுத்துச் சொன்னது. எல்லாக் கடவுளையும் பார்த்துக் குரைப்பதாக பக்தர்கள் மோசமாக முகம் சுளித்துவிட்டார்கள். அங்கேயே வலிக்காமல் ரெண்டு போடு போட்டு அதை அக்காள் வீட்டுக்கு தூக்கிக்கொண்டு போனாள். அப்போதும் ஜிம்மி 'நான் ஜெபிக்காமல் விடமாட்டேன்' என்பது போல் அடம் காட்டி அவள் கையிலிருந்து குதிக்க முயன்றது. அன்று இரவு ஜெபம் முடியும் வரை பாண்டிக்கு சிரிப்பை அடக்குவது பெரும்பாடாக இருந்தது. அன்று இரவுதான் சேசுமரியாயி பாட்டி பால் வாங்கும் செலவைக் கணக்குப் பார்க்கத் தொடங்கியிருக்க வேண்டும்.

கொஞ்சம் கொஞ்சமாக அவள் தன் எதிர்ப்பைக் கூட்டிக்கொண்டே போனாள்.



அமலா அக்காவுக்கு பாண்டிதான் சைக்கிள் ஓட்டக் கற்றுக் கொடுத்தான். நல்ல வெயில் காலம் அது.

உள்ளூர் பள்ளிக்கூடம் எட்டாம் வகுப்போடு முடிந்துவிட ஒன்பதாம் வகுப்புக்கு பக்கத்தூர் மருதகுளத்துக்கு அவள் போக வேண்டியிருந்தது. மூன்று கிலோ மீட்டர் தூரம். ஊரே பெரிய ஊர். கிட்டத்தட்ட அதுவே ஒரு கிலோமீட்டர் இருக்கும்.

எப்படியும் சைக்கிள் இல்லாமல் போய் வர முடியாது. எனவே அக்கா சைக்கிள் ஓட்டக் கற்றுக்கொள்ள வேண்டியிருந்தது. எட்டாம்

வகுப்பு பரிட்சை விடுமுறையில் பெரியப்பா புது லேடிஸ் சைக்கிள் வாங்கிக் கொடுத்துவிட்டார். முன்னே கூடை பொருத்திய சைக்கிள். சிகப்பு நிறத்தில் பளபளவென்று பார்க்கவே மிக அழகாக இருந்தது.

சைக்கிள் வாங்கி ஒரு வாரம் வரை அக்கா அதைத் தொடக்கூட இல்லை. பார்த்துக்கொண்டு மட்டுமிருந்தாள்.

''ஏன் தாயி, வீட்டுல வச்சி பூசை பண்ணுததுக்கா இதை வாங்கி வச்சிருக்கு'' என்று பெரியம்மா அக்காவைப் பார்த்துக் கேட்டாள். அக்காவிடம் பதிலில்லை. பாண்டியைப் பரிதாபமாகப் பார்த்தாள்.

ப்ளஸ் டூ படித்துக்கொண்டிருந்த ஜாய்ஸ் அக்காதான் கேரியரில் தங்கச்சியை உட்கார வைத்து மருதகுளம் ஸ்கூலுக்கு கூட்டிப் போனாள். பிள்ளைகள் கிண்டல் பண்ணவே உடனே சைக்கிள் பழகியாக வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

ஜெசிந்தா அக்கா விட்டுப் போயிருந்த பழைய சைக்கிளில்தான் ஊர் மந்தையில் வைத்து முதல் மூன்று நாள் ஜாய்ஸ் அக்கா சொல்லிக் கொடுத்தாள். வேடிக்கை பார்க்கும் பையன்கள் கூட்டத்தில் வாலிபர்களும் தட்டுப்படவே ஜாய்ஸ் அக்கா பணியைப் பாண்டியிடம் ஒப்படைத்தாள்.

சைக்கிளை தெரு வழியே மந்தைக்கு உருட்டிக்கொண்டு போவதும் வருவதும் பாண்டிதான். அக்கா அவனோடு சும்மா நடந்து வருவாள். தெருவில் பலருக்கும் இதை வேடிக்கை பார்க்கப் பிடிக்கும். சைக்கிளை சரியாக நேர்த்தியுடன் கையாள்வதற்கு பாண்டி இன்னும் பல அங்குலங்கள் வளரவேண்டியிருந்தது. எனவே அவன் சைக்கிளை உருட்டிக் கொண்டு போவது பார்ப்பவர்களுக்கு சிரிப்பை தருவித்தது. பாண்டி அதை உணராமலில்லை. ஆனாலும் அக்கா சைக்கிள் ஓட்டக் கற்றாக வேண்டுமே என்ற பொறுப்புணர்ச்சியால் அதை சகித்துக்கொண்டாள்

கார் ஓட்டத் தெரிந்தவர்தான் கார் ஓட்டக் கற்றுத்தர முடியும்; கப்பல் ஓட்டத் தெரிந்தவர்தான் கப்பல் ஓட்டக் கற்றுத் தர முடியும். ஆனால் சைக்கிள் ஓட்டத் தெரியாதவர் கூட சைக்கிள் ஓட்டக் கற்றுத்தர முடியுமென்று பாண்டி அப்போதுதான் புரிந்துகொண்டான்.

சைக்கிளை உருட்ட மட்டுமே தெரிந்த பாண்டி அமலா அக்காவுக்கு சைக்கிள் ஓட்டக் கற்றுத்தந்தான்.

☆☆

**யா**ராவது பாசத்தோடு 'ஜிம்மி ஜிம்மி' என்றழைத்தால் 'ஆமா... அம்மியும்... ஆட்டு உரலும்தான்...'' என்று பாட்டி முணுமுணுக்கத் தவற மாட்டாள். சனியன் என்றொரு பெயரைத் தன் சார்பில் வைத்துக் கொண்டாள். ''தூரப் போயேன் சனியனே'' ''தூங்கேன் ச்னியனே'' ''சனியன் சனியன் பாலெல்லாம் மோளாக் கறக்குது.'' பாட்டியின் போக்கு பாண்டி

யையும் அமலா அக்காவையும் வருத்தப்பட வைத்தது. அது ஜிம்மியுடனான நெருக்கத்தைக் குறைக்கவில்லை; கூட்டியது. ஆளில்லாத நேரங்களில் பாட்டி ஜிம்மியோடு பேசத் தொடங்கினாள். 'சும்மா கெடைச்சுதுனு பெருச்சாளியையும் கருங்காலியையும் வீட்டுல கொண்டு விட்டிருக்கு பாரு, கருமம் கருமம்'' என முறுமுறுத்தாள். ஜிம்மி அதை சட்டை செய்வதில்லை. தலையணை எடுத்து ஒரு நாள் தலையில் போட்டதால் அவள் கிட்டத்திலும் போவதில்லை.

பாட்டி கடைசியாக போட்ட குண்டைப் பார்த்ததும் அமலா அக்காவுக்கு நெஞ்சே வெடித்துவிடும் போலிருந்தது. ஜிம்மியை வீட்டில் விட்டுவிட்டு பள்ளிக்கூடம் போகப் பயந்தாள். ''வால் வானம் பாக்குது. வால் வானம் பாக்குது. இது நல்ல வீட்டுக்கு ஆகாது'' என்று புலம்பினாள் பாட்டி. அதை மெய்ப்பிப்பதற்கு இன்னும் சில கிழங்களைத் துணைக்கு அழைத்தாள். ஜிம்மி சோறு, மீன், இறைச்சியெல்லாம் சாப்பிடத் தொடங்கியதைப் பார்த்து மிகவும் எரிச்சலோடு ''எய்யா சிங்கம், இந்த வால் வானம் பாக்குற நாய் வீட்டுக்கு நல்லதில்ல பாத்துக்க. அந்த காலத்திலேயே சொல்லுவாவ'' என்றாள். ''சொல்லுவாவ... அதெல் லாம் உண்மையா பொய்யானு யார் கண்டது'' என்றார் சிரத்தையில் லாமல் பெரியப்பா. ''மடியில கட்டுன பொன்னெல்லாம் மண்ணானப் பிறவு உண்மையைக் கண்டு என்னாவப் போவுது? பொம்மையைக் கண்டு என்னாவப் போவுது?'' ''வாலை ஒட்டத் தறிச்சிரலாமா?'' ''ஏலெய், இது உன் தொழில் பட்டுப் போவணும்னு எந்த பாவிப்பயலோ தந்திரமா தூக்கி நீட்டியிருக்கான்... தறிக்கப் போறானாம் தறிக்க...'' இதைக் கேட்டதும் பெரியம்மா சற்றே ஆடிப் போய்விட்டாள். நீண்ட யோசனைக்குப் பிறகு பெரியப்பா கேட்டார் ''என்னதான் செய்ய ணும்ங்க?'' ''சனியனைத் தூக்கி ஆத்துலயோ குளத்திலயோ போடு'' சொல்லிவிட்டு பாட்டி எப்போதும் போல் ஆணையிட்ட பின் வரும் அருவருப்பான அமைதிக்குள் விழுந்தாள்.

இதைக் கேட்டதும் அமலா அக்காவுக்கு உயிரே போய்விட்டது. பெரியப்பா ஒன்றும் பேசாமல் எழுந்து போனார். பாட்டியை எதிர்த்து நிற்க முடியாத அக்கா மொட்டைமாடியில் வைத்து கண்களில் நீர் முட்ட பாண்டியிடம் தயங்கி தயங்கிக் கேட்டாள். ''தம்பி, ஜிம்மியை நாம உங்க வீட்டுல வச்சு வளப்பமா?'' பாண்டி கண்களிலும் நீர் ததும்ப ''ஆமாக்கா'' என்று தலையாட்டினான். கண்ணீரைத் துடைத்துக்கொள்ளும் நேரத்துக் குள் ஜிம்மி பாண்டி வீட்டில் ஓடி விளையாடியது.

பொட்டல் வெளி வெறிச்சோடியே கிடந்தது. மருந்துக்கூட நிழல் கிடையாது. அடிக்கிற வெயிலை எல்லாம் 'அடி அடி'யென்று பிடிவாத மாக வாங்கிக்கொள்ளும் கட்டாந்தரை அது. பாண்டிக்கு சைக்கிள் வாத் தியார் பொறுப்பு கிடைத்ததில் ஏகப் பெருமை. எக்கச்சக்க சந்தோஷம்.

''தம்பி, நீ பின்னால நின்னு பிடிச்சுக்கிட்டே வரணும், அக்கா ஓட்டிக் கிட்டே போவேன்'' என்றாள். அக்காள் சைக்கிள் கற்றுக்கொள்வதை வேறு யாரும் அறிந்துவிடக் கூடாது என்பதில் அவள் மிக சிரத்தையாக இருந்ததை பாண்டி சரியாகப் புரிந்துகொண்டான். பையன்கள் சைக்கிள் ஓட்டக் கற்றுக் கொள்ளும்போது கால் பெடல் அரைப் பெடல் என படிப் படியாக முன்னேறி கடைசியாக முழுப்பெடல் போடுவார்கள். அவர்கள் கால் டவுசர்கள் போட்டிருப்பார்கள். அமலா அக்காவின் முழுப் பாவாடை, அரைத்தாவணி அந்த முறைக்குப் பொருந்தாது என்பதால் சைக்கிள் பழகும் போதெல்லாம் சுடிதாரிலேயே இருந்தாள். மைதானத் தொடக்கத்தில் இளவட்டக் கல் இருந்தது. ஒரு ஆடு படுத்துக்கிடக்கும் உயரம்தான். ஆனாலும் அதில் கால் வைத்து சைக்கிளில் அக்கா ஏறி அமர அது உதவி செய்தது.

பெரும்பாலும் சைக்கிள் வகுப்பு காலை வெயில் ஏறுவதற்கு முன்பே ஆரம்பித்துவிடும். முடியும்போது அக்காள் வியர்வையில் குளித்து விட்டிருப்பாள். பாண்டியாக பார்த்து பரிதாபப்பட்டு இன் றைக்கு இது போதும் என்று நிறுத்தி விடுவான். சாயங்காலம் ஆரம்பித் தால் இருட்டிவிடும்.

சைக்கிள் ஓட்டிப் படிக்கும்போது, என்னதான் பாண்டி பலம் திரட்டி போராடிப் பார்த்தும் அக்கா, ஏழு எட்டு முறை சரிந்து சைக்கிளோடு தரையில் ''ஏசுவே ஏசுவே'' என்று கூவியபடியே விழுந்தாள். அந்நேரங் களில் பாண்டி அடைந்த பதற்றங்களுக்கு அளவேயில்லை. நல்லவேளை யாக எல்லா நேரத்திலும் ஏசு காப்பாற்றினார். பெரிய காயங்கள் எதுவும் ஏற்படவில்லை. சின்னச் சின்ன சிராய்ப்புகள்தான். கீழே விழுந்தால் எழத் தெரியாது. அவளை பாண்டிதான் தூக்கி விடவேண்டும். சைக்கிளையும் அவன்தான் தூக்கி நிறுத்தவேண்டும். கடினமான பணிதான்; ஆனாலும் பாண்டி சளைத்துப் போகவில்லை.

சைக்கிள் ஓட்டக் கற்றுத் தருவது சாமானியமான வேலையில்லை. ஆரம்பத்தில் அக்கா தலையைக் குனிந்து 'பெடலை' மிதிக்கும் கால் களையே பார்த்துக்கொண்டு ஓட்டினாள். ''எக்கா... முன்னால பாரு... முன்னால பாரு'' என்று பாண்டி அவளை வற்புறுத்தி நிமிர வைத்தான். பிறகு இரண்டு நாட்கள் எதிரே பார்க்கப் பயந்துபோய் கண்களை இறுக்க மாக மூடிக்கொண்டு ஓட்டினாள். அவள் கண்களைத் திறப்பதற்குள் போதும் போதுமென்றாகிவிட்டது. சைக்கிள் ஓட்டக் கற்றுக் கொள்பவர் சற்றே தேர்ந்த பிறகு பின்னால் பிடித்துக்கொண்டு ஓடுபவர் அவ்வப் போது விட்டுப் பிடிக்க வேண்டும். ''தம்பி விட்டுறாத விட்டுறாத'' என்று அவள் வேண்டிக்கொண்டே இருப்பாள். ''பிடிச்சிருக்கேன், பிடிச்சிருக் கேன்'' என்று அவளுக்கு நம்பிக்கையூட்டிக் கொண்டே வருவான். அவன் விட்டுப் பிடிக்கும் சமயங்களிலும் அவள் அதையே வலியுறுத்துவாள். சைக்கிளை பிடிக்காமலே பின்னால் ஓடிக்கொண்டே ''பிடிச்சுருக்கேன்.

பிடிச்சிருக்கேன்'' என்று பொய் சொல்வான். சந்தேகம் ஏற்படும்போது தலையைப் பின்பக்கம் திருப்பிப் பார்ப்பாள். பார்த்த கணமே முன் சக்கரம் மடங்கி 'ஏசுவே' என்று கீழே விழுவாள். சமாதானப்படுத்தி மீண்டும் அவளை சைக்கிள் ஓட்ட வைப்பதற்குள் கண்ணில் தண்ணீர் வந்துவிடும்.

சரியாக எண்ணிப் பதினேழாவது நாள் அமலா அக்கா தனியாக சைக்கிள் ஓட்டக் கற்றுக்கொண்டாள். அவனது உதவி தேவையின்றி அவள் ஒரு முழுவட்டம் சுற்றி வந்தபோது பாண்டி அடைந்த மகிழ்ச்சி முற்றிலும் புதுமையானது. அது முழுக்க முழுக்க பெருமையாலும் திருப்தியாலும் ஆனது.

தேர்ந்து விட்டபிறகு அந்திக் கருக்கல் நேரங்களில் ஒரு கையால் சைக்கிள் ஓட்டினாள். பிறகு இரண்டு கைகளையும் விட்டுவிட்டு ஓட்டினாள். அப்போதுதான் சீட்டியடிக்கவும் பழகினாள்.

பாண்டியையும் சைக்கிள் ஓட்டிப் பழகுமாறு அக்கா வற்புறுத்தினாள். ''வேண்டாக்கா. இது பொம்பளை சைக்கிள். நான் ஆம்பிள்ளை சைக்கிள்ல பழகிக்கிடுதேன்'' என்று சின்ன வெட்கத்தோடு மறுத்து விட்டான்.

அமலா அக்கா முதல்முறையாக புது சைக்கிளை ஓட்டிக்கொண்டு பாண்டி வீட்டுக்குத்தான் வந்தாள். ஜிம்மி முன்னால் கூடையில் இருக்க தெருக்களை வலம் வந்தாள். வேகமாகத் தான் பறப்பதைக் கண்டு ஒன்றும் புரியாமல் செல்லக் குரலில் வள் வள் என்றது. பழகியபின் அதுக்கு உற்சாகம் தோன்றியிருக்க வேண்டும். ஆட்கள் எதிர்ப்படும் போதெல்லாம் குரைத்து தன் இருப்பைத் தெரிவித்தது. பிறகு பாண்டியும் பின்னால் ஏறிக்கொள்ள சைக்கிள் ஊருணி ஆலமரத்தில் போய்தான் நின்றது.

☆☆

**சைக்கிளில்** ஏறி மருதகுளத்திற்கு ஒன்பதாம் வகுப்பு படிக்கப் போனதும் அமலா அக்கா மாறிவிட்டாள். பெரிய மனுஷி தோரணை வந்துவிட்டது. தெருவில் நின்று பிள்ளைகளோடு நொண்டி அடித்து விளையாடுவதில்லை. உள்ளூர் கடைகளுக்கு திருட்டுத்தனமாய் சாக்லேட் வாங்க ஓடுவதில்லை. வீட்டுக்கு வரும் மங்கையர் மலர் போன்ற பத்திரிக்கைகளை எல்லாம் வரி விடாமல் படித்து விடுகிறாள். தானாகவே சாப்பிடப் பழகி விட்டாள். மற்றவர்கள் டி.வி ரிமோட்டைக் கேட்டால் கொடுக்கிறாள். பாண்டிக்கு ஒரு காட்சியைப் பார்த்து சிரிப்புத் தாங்க முடியவில்லை - காப்பி டம்ளரை இரண்டு கைகளிலும் பற்றிக் கொண்டு மிக மெதுவாகக் குடிக்கிறாள். கீழே விழுந்துவிடும் என்ற பயமாயிருக்கும். இப்படித் தனித்து இயங்கத் தொடங்கிவிட்ட அமலாவுக்கு புதிய சோதனை வந்துவிட்டது - டார்ஜான் வடிவில்.

டார்ஜான் வேறு யாருமல்ல, ஜாய்ஸ்தான். அரையாண்டுப் பரீட்சை மதியத்தோடு முடிந்துவிட்டதால் பிள்ளைகள் எல்லாம் ஊர் திரும்பும் வழியில் ஊருணி ஆலமரத்தில் வெயிலுக்கு நின்றிருக்கிறார்கள். +2 படிக்கும் ஜாய்ஸ் அக்காதான் எல்லாருக்கும் சட்டாம்பிள்ளை. பையன்கள் எல்லாம் மரக்குச்சி விளையாடியிருக்கிறார்கள். ஊருணியைப் பார்த்துப் போகும் வடக்குக் கொப்பில்தான் தொங்கும் விழுதுகள் உண்டு. பிள்ளைகள் கைக்கு எட்டாது. ஜாய்ஸ் ஆம்பிளை சைக்கிளை ஸ்டாண்ட் போட்டு அதில் ஏறி விழுதைப் பிடித்து வெற்றிகரமாகத் தூரியாடினாள். டார்ஜானாகிவிட்ட சந்தோஷத்தில் சாகசம் அடுத்த கட்டத்திற்குத் தாவியது. பிள்ளைகள் சைக்கிளைப் பிடித்துக்கொள்ள அமலா அக்கா கேரியரில் ஏறி நின்றுவிட்டாள். 'மி டார்ஜான்...யு ஜேன்...' என்று விழுதோடு வந்த வேகத்தில் டார்ஜான் ஒற்றைக்கையால் அமலாவைத் தூக்க முற்பட்டபோதுதான் அந்த விபத்து நடந்தது.

பண்டாரவிளைக்குப் போய் மாவுக் கட்டுப் போட்டு அன்றைக்கே அக்காவை ஊருக்குக் கூட்டி வந்தார் பெரியப்பா. சின்னப் பிசகுதான். பதினைந்து நாளும் 'ட' வடிவக் கையோடுதான் இருந்தாள். இப்போது முன்னைவிட செல்லம் கூடிப் போய்விட்டது. அது போல் முழுப் பரிட்சை லீவில் மணல்வாரி அம்மை போட்டிருந்த போதும் ஒரு வாரம் நடுவீட்டில் கட்டிலில் படுத்தே கிடந்தாள். பாண்டிதான் வீட்டுக்கு முன்னே வேப்பிலைக் கொத்து வாட வாட மாற்றினான்.

## எட்டு

**பா**ண்டி எட்டு படிக்கும்போது ஒருநாள் இரவு தெருவிளக்குகள் தெளிவின்றி மங்கலாக எரிந்துகொண்டிருந்தன. மெல்கி முன்னே ஓடிக்கொண்டிருந்தாள் தனியாக. பாண்டி அவளைத் துரத்திக்கொண்டு பின்னாடியே ஓடினான். 'இந்த ராத்திரியில இவ எங்கே ஓடுறா கிறுக்கி' என தனக்குத்தானே சொல்லியபடி வேகத்தை அதிகரித்தான். மெல்கி காற்றாக புயலாகப் பாய்ந்தாள். பாண்டியால் அவளை நெருங்க முடியவில்லை ''ஏ மெல்கி... நில்லு. ஏ மெல்கி... நில்லு'' எனத் திரும்பத் திரும்ப குரல் கொடுத்துப் பார்த்தான். மெல்கி அதற்குக் கட்டுப்படவில்லை. நீரில் தோணியை வட்டமடித்துத் திருப்பியதுபோல தெரு திடுமென திரும்பிக்கொண்டது. இப்போது அவர்களுக்கிடையில் இடைவெளி நூறு அடி போலிருந்தது.

மெல்கி நின்றபோது பாண்டியும் நின்றுவிட்டான். மெல்கியின் எதிரே அமலா அக்கா நின்றிருந்தாள். அக்காளைக் கண்டதும் அவனுக்கு திக்கென்றாகிவிட்டது. மெல்கி முட்டுக்கால்களில் கையை ஊன்றிக் கொண்டு குனிந்து நின்று மூச்சு வாங்கினாள். பாண்டி மூர்ச்சையாகிவிட வாய்ப்பிருந்தது.

ஆசுவாசப்படுத்திய பிறகு மெல்கி அமலா அக்காவிடம் தூரத்தில் நின்ற பாண்டியை நோக்கி கையை நீட்டிப் பேசத் தொடங்கினாள். அவள் உதட்டிலிருந்து கொத்தும் கழுகுகள் பறக்கத் தொடங்கின. பக்கத்தில் நின்றிருந்தால் கையெடுத்துக் கும்பிட்டு மெல்கியிடம் வேண்டாம் வேண்டாம் என்று கெஞ்சியிருப்பான். அதற்கு வழியில்லாமல் அவனோ சற்று தொலைவிலிருந்தான்.

மெல்கி தன் வலது கையை அடி வயிற்றுக்கு கீழே வைத்துக் காட்டிய போது பாண்டி கூசிப் போனான்.

'இவளை பேயடிச்சுக் கொல்லட்டுமனு காட்டிலே விட்டு விட்டு வந்திருக்கலாம்' என்று மனசுக்குள் பேசினான். உச்சிவேளையில் மிக்கேல் புனிதர், பார்பராம்மாள் காவல் எல்லை தாண்டி பனங்காட்டில் இருந்தார்கள். சத்ராதிகளிடமிருந்து அவளைக் காப்பாற்ற குச்சியால் வட்டம் போட்டு ஊடே அவளை நிற்க வைத்து பிறகு ஒண்ணுக்கிருக்கச் சொன்னான். தற்செயலாகக் குச்சியால் தொட்டுப் பார்த்ததைக் காட்டிக் கொடுத்துவிட்டது சனியன்.

'சீ அற்பமே' என்பது போல் அமலா அக்கா அவன் பக்கம் திரும்பி அழுத்தமாக ஒரு பார்வை பார்த்ததும் நிலைகுலைந்து போன பாண்டி அவமானத்தின் வலியோடு தலைகவிழ்ந்து கொண்டான். அவன் கண் களில் திரண்ட கண்ணீர்த் துளிகள் வழிந்தோட இடமின்றி நேராக மண் ணில் விழுந்தன. நிலத்தில் விழுந்த துளிகள் காட்டாறாகி அவனை மூழ் கடித்து தன்போக்கில் இழுத்துச் சென்றது. தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள பாண்டி சிறு முயற்சியும் மேற்கொள்ளவில்லை. பிழைத்துத் தொலைத்தால் அமலா அக்கா முகத்தில் மீண்டும் முழிக்கணுமே என்பது அவன் பயமாக இருந்தது.



ஒருநாள் நாசரேத் டீச்சர் குளிக்கும்போது ஒளிந்திருந்து பார்த்து சில சிறுவர்கள் விசிலடித்து விட விவகாரம் விஷமாகி விட்டது. உள்ளூரிலே தங்கி பள்ளியில் வேலை பார்த்து வந்த நாசரேத் டீச்சர் கண்டிப்பானவள். பையன்கள் வார்த்தையில் சொல்வதென்றால் 'கொடுமைக்கார முண்ட.' பள்ளிக்கூடம் விட்டாலும் அவள் விடமாட்டாள். வீடு வீடாக நுழைந்து வீட்டுப் பாடங்களை மேற்பார்வையிடுவாள். படிப்பில் அவ்வளவு விழிப்பில்லாதவர்களுக்கு அவளைக் கண்டாலே வயிற்றைக் கலக்கும். ரேஷன் கடை, தபால் ஆபிஸ், மருத்துவமனை போல ஊருக்குப் பெருமை சேர்க்கும் அம்சங்களில் அவளும் ஒருத்தியாக இருந்தாள். அவள் வாடகைக்கு குடியிருந்த வீட்டின் பின்புறத்தில் உப்புத்தண்ணி கிணறு ஒன்று இருந்தது. அதைச் சுற்றி சிறிய பரப்பில் நாட்டுக்காய்கறித் தோட்டமும் உண்டு. தக்காளி, கத்திரி, மிளகாய், முருங்கை இப்படிச் சில.

விடுமுறை நாளான அன்று கோவில் திருப்பலி இல்லை. எனவே சற்றே சாவகாசமாக கிணற்றடிக்கு வந்தாள். அவள் குளிப்பதை முழுமையாகப் பார்த்து ரசித்துவிட முடிவெடுத்திருந்த பையன்கள் கொஞ்சம் தூரத்தில் குவிந்திருந்த வைக்கோல்போரில் மறைந்திருந்தனர். சேலை, ஜாக்கெட், ப்ரா ('இந்த வயசுல இந்த முண்டைக்கி ப்ரா வேற கேட்குதோ') என உடைகளைக் களைந்துவிட்டு பாவாடையை நெஞ்சுக்கு ஏற்றிக் கட்டிக் கொண்டு குளிக்கத் தொடங்கினாள். வாசனை சோப்பைக் குழைத்து இரண்டு கைகளிலும் கழுத்திலும் பூசினாள். உடனேயே கழுவினாள். அடுத்ததாக முகத்துக்கு பூசிக் கழுவினாள். சுற்றும்முற்றும் ஒரு பார்வை பார்த்தபடி பாவாடையை உயர்த்தி முழங்காலுக்கு மேலே சோப்பு பூசிக் கழுவினாள். ஈரப்பாவாடைக் கசங்கலில் எழுந்த ஒருவிதமான சத்தம் பையன்களை என்னவோ செய்தது. மனசுக்குள் நுரைத்து விட்டார்கள். அடுத்ததாக ரகஸியமான இடங்களில் சோப்பு பூசினாள். அந்த கணத்தில் எவனுக்கோ கிளம்பிய உற்சாகத்தில் சண்டைக் காட்சியை ரசிப்பதுபோல் வாய்க்குள் விரலை விட்டு விசில் அடித்துவிட்டான். ஸ்தம்பித்து போன டீச்சர் வைக்கோல்போரை எரித்துவிடுவதுபோல் பார்த்தாள். பயத்தில் பையன்கள் சிதறி ஓடினார்கள். ஒரே பார்வையில் பலரது பெயர்களைக் குறிப்பெடுத்து விட்டாள். நாளிவாயன் சொல்லித்தான் பிறகு பாண்டிக்கு என்ன நடந்தது என்று தெரிந்தது. ஆனால் துரதிர்ஷ்டவசமாக அந்த சம்பவத்தில் சம்பந்தப்படாத பாண்டியின் பெயரும் இடம் பெற்றுவிட்டது.

ஈரத்தலை காயும் முன்னே நீதி கேட்டு தெருத்தெருவாக நடந்தாள். ஊர் மொத்தமும் பரபரப்படைந்து விட்டது. இந்த வெட்கக்கேடான செயலுக்கு நான் தண்டனை தரப்போவதில்லை, நீங்களே உங்கள் பிள்ளைகளுக்கு உரிய தண்டனையை வழங்க வேண்டும் எனக் கேட்டுக் கொண்டாள். சிறுவர்கள் காட்டிலிருந்தும் மறைவிடங்களிலிருந்தும் இழுத்து வரப்பட்டார்கள். கோஷ்டிக்குத் தலைவன் பருத்திக்காய் என்று தெரியவந்தது. அவன் அம்மா கம்பைத் தூக்குவதற்குள் அவன் பாய்ந்து ஓடிவிட்டான். பாண்டி எவ்வளவோ மறுத்து முறையிட்டுப் பார்த்தான். டீச்சர் சொன்னதே வேத வாக்காகிவிட்டது. பெற்றோர்கள் பிள்ளைகளை அடித்தார்கள், உதைத்தார்கள். டீச்சரைத் திருப்திபடுத்தும் பொருட்டு வெளிப்படையாக தெருவிலேயே தண்டித்தார்கள். அப்போது அப்பா வெளியூரிலிருந்தார். எனவே அந்தக் கடமையை சின்ன அண்ணன் கையிலெடுத்துக் கொண்டான்.

சாந்தகுமார் அண்ணன் கண்கள் கோபத்தில் சிவந்து போய்விட்டன. ''கெட்ட பையன்களோட இனிமே நீ சேருவியா'' என்பதையே திரும்ப திரும்ப கேட்டபடி பிரம்பால் முதுகிலும் காலிலும் கையிலும் மாறிமாறி அடித்தான். பாண்டி வலியில் துள்ளித் துடித்துக்கொண்டிருந்தான்.

''நிறுத்துண்ணே... அடிக்காத...'' என்று குரல் கொடுத்தபடியே அமலா அக்காள் தெருவில் பதற்றத்தோடு ஓடிவந்தாள். அண்ணன் ஒரு

கணம் திகைத்தான். அக்காவைக் கண்டதும் பாண்டிக்கு கண்ணீர் வந்துவிட்டது. ''ஒரு வம்பும் பண்ணாதவனை எதுக்குப்போட்டு இப்படி அடிக்கே?'' அருகில் வந்த அக்கா பொறுக்க முடியாத கோபத்தோடு கேட்டாள். அவள் குரலில் இருந்த அழுத்தத்தைக் கண்டதும் அண்ணன் கொஞ்சம் குழம்பினான். ''தம்பி ஒரு தப்பும் பண்ணல. விடு'' பாண்டி யின் இடது கையை பிடித்தாள். அவன் துடித்தான். பிரம்படி பட்டு வீங்கியிருந்தது.

அவள் அவன் கையை பிடித்திழுத்தபடி நேராக நாசரேத் டீச்சர் வீட்டுக்குப் போனாள். கோபம் கொஞ்சமும் தணியாமல் ''டீச்சர், நீங்க குளிக்கும்போது இவன் பாத்தானா? நல்லா பாத்துச் சொல்லுங்க.'' வாசலில் நின்றிருந்த டீச்சர் அமலாவின் ஆவேசத்தைக் கண்டு தடுமாறிப் போனாள். அமலா அதிர்ந்து பேசிப் பார்த்திராதவர்களுக்கு ஆச்சரியமாக இருந்தது. ''அந்த பயலுவ கூட சேந்துதானே இவனும் சுத்றான்'' அனுமானமாகப் பேசினாள் டீச்சர். ''யார்கூட சுத்துறான்னு நான் கேக்கல. நீங்க குளிக்கும்போது இவனை பாத்தீங்களா?'' டீச்சர் மழுப்பலாக ''டேய், நீயும் உண்டுலா?'' என்று பாண்டியிடம் கேட்டாள். பத்ரகாளி யாக மாறிவிட்டாள் அமலா அக்காள். கோபத்தில் அவள் உதடுகள் துடித்தன. ''காலையிலேயிருந்து என்கூட எங்க வீட்டுல இருந்தான். நீங்க நினைக்கிற மாதிரி பையன் இல்ல எங்க தம்பி. இல்லாத பொல்லாதத எல்லாம் சின்னப் பையன் தலையில தூக்கிப்போடாதீங்க. வாடா பாண்டி'' அவனை அழைத்துக்கொண்டு வீட்டுக்குப் போனாள். டீச்சர் விக்கித்துப் போய் நின்றாள். அமலா அக்காவின் புது அவதாரத்தை அன்றுதான் பாண்டியும் முதல்முதலாகப் பார்த்தான்.

☆☆

காலேஜிலிருந்து கோடை விடுமுறையில் வந்திருந்த ஜாய்ஸ் அக்கா மாடி அறையில் படித்துக்கொண்டிருந்தாள். மாலை நாலு மணி இருக் கும். மாடி வராண்டா ஊஞ்சலில் உட்கார்ந்து ஜெசிந்தாவும் அமலாவும் செஸ் விளையாடிக் கொண்டிருந்தார்கள். ஜெசிந்தா எம் எஸ்ஸி முடித்து விட்டு பி எட் கரஸ்ஸில் படித்துக்கொண்டிருந்தாள்.

பாண்டி ஊஞ்சலில் பக்கத்திலிருந்த சீடையைக் காலி பண்ணிக் கொண்டே காய்கள் நகர்த்தப் படுவதைப் பார்த்துக் கொண்டிருந்தான். அமலா அக்கா கோட்டை குதிரைகளை இழந்துவிட்டு தனிக்காட்டு ராணியாகத் திரிந்தாள். இனி எப்படியும் நாலாவது ஐந்தாவது நகர்த்தலில் செக் வந்துவிடும்.

கீழ் வீட்டிலிருந்து அம்மாவின் குரல்போல் கேட்டது. பாண்டிக்கு ஆச்சரியமாக இருந்தது. அபூர்வமாகத்தான் இங்கு வருவாள். ஓடிப்போய் மேல்படியிலிருந்தே எட்டிப் பார்த்து ''என்னம்மா'' என்றான். மறுகணம்

பாய்ந்து ஊஞ்சலுக்கு வந்தவன் ''அக்காக்கா... எங்க அப்பா புதுச்சைக்கிள் வாங்கிட்டு வந்திருக்காராம்'' என்றான்.

''நான் சைக்கிள் பாக்கப் போறேன்'' என்றபடி அமலா அக்கா ஊஞ்சலிலிருந்து துள்ளிக் குதித்தாள்.

''அம்மு மெதுவாடி. போர்ட கலைச்சிராத'' என்ற ஜெசிந்தா ''ஜாய்... இங்க வாடி'' என்று கத்தினாள்.

பாண்டிக்கு ஓட வேண்டும் போல் கால்கள் பரபரத்தன. ஆனால் அக்கா இப்போதெல்லாம் ஓடுவதில்லை. பெரிய பெண் அல்லவா! அவளுக்காக மெதுவாக நடக்க வேண்டியதாயிற்று.

பாண்டி எட்டாம் வகுப்பு பரீட்சை லீவிலேயே சாந்தகுமார் அண்ணனின் பழைய சைக்கிளில் பையன்கள் துணைவர குரங்கு பெடல் அடித்துப் பழகியிருந்தான். ஸீட் எட்டவில்லை. கம்பியில் படாமல் தாவித்தாவி மிதித்தால் சைக்கிள் உழட்டியது. பிறகு அமலா அக்கா சைக்கிளில்தான் ஸீட்டில் உட்கார்ந்து ஓட்டிப் பழகினான். அப்போது தான் திட்டமிட்டு நீச்சலும் பழகினான். அது ஐந்து நாள் வேலை. அவ்வளவுதான். இரண்டையும் பழகிவிட்டதும் பாண்டிக்கு பெரிய பையனாகிவிட்டோம் என்று தோன்றிவிட்டது.

மருதகுளம் ஸ்கூலில் ஒன்பதாம் வகுப்பு சேர இன்னும் ஒரு வாரம்தான் இருக்கிறது. அப்பா சொன்னதுபடியே வாங்கிக்கொண்டு வந்துவிட்டார். நாங்குநேரி ரெங்கா ஸ்டோரில் வாங்கியிருப்பார்.

அக்காவைக் கண்டதும் ஜிம்மி ஓடிவந்து அவள் மேல் கால்களைப் போட்டது. பாண்டி வாசலுக்கு அருகே நின்ற சைக்கிளைப் பார்த்தான். சிவப்பு. பளபளவென்றிருந்தது. போனவுடன் மணியை அடித்தான். பூட்டியிருந்தது. சீட்டும் சிவப்புக் கலரிலேயே இருந்தது. மணிச் சத்தம் கேட்டு எட்டிப் பார்த்த அப்பா சாவியைக் கொடுத்தார். சைடு ஸ்டாண்டாக இருந்தது. நேர் ஸ்டாண்டாக மாற்ற வேண்டும். உடனே ஓட்டிப் பார்க்க வேண்டும் என்ற பரபரப்பில் பாண்டி கிளம்பியபோது அம்மா அக்காவைப் பார்த்து ''காப்பி குடிக்குறியாம்மா?'' என்று கேட்டுவிட்டாள். அவள் குடித்து முடிக்கும் வரை பத்து நிமிடம் காத்திருக்க வேண்டியதாயிற்று.

பாண்டி வளவுக்கு வெளியேபோய் ஏறிக்கொள்ளலாம் என உருட்டி வந்தான். வலது காண்டில்பாரைப் பிடித்தவாறே அக்காவும் வந்தாள். வெளியே வந்ததும் இடப்பக்கமாக வந்து சைக்கிளை வாங்கிக் கொண்டாள். வாங்கிய மறுகணமே ஏறி ஓட்டத் தொடங்கிவிட்டாள். சைக்கிள் கூடவே ஜிம்மியும் ஓடியது. தனது புத்தம்புது சைக்கிளையே முதல் ஆளாய் ஓட்ட முடியவில்லையே என்ற ஏமாற்றம் பாண்டியைத் தாக்கியது. அக்காதானே என்று உடனே சமாதானமடைந்தான். ஒரு சுற்றுச் சுற்றிவிட்டு எதிரே வந்துகொண்டிருந்தாள்.

பிறகு பாண்டியும் ஏறி ஓட்டிப் பார்த்தபிறகு மறுபடி வாங்கிக் கொண்டாள். கடைசியாக அக்கா வீட்டின் முன் நின்றது. முற்றத்தில் நின்று கீழே இறங்காமலே ''அக்கா...'' என்று மாடியைப் பார்த்துக் கத்தினாள். மணியை அடித்தவாறே மீண்டும் கத்தினாள். ஜெசிந்தா அக்கா மொட்டைமாடிச் சுவரைப் பிடித்தபடி எட்டிப் பார்த்தாள். ''அக்கா... எனக்கும் புதுச்சைக்கிள்தான் வேணும்.'' ''சரி, அப்பா வரட்டும்.'' ''நீ இப்பவே போன் பண்ணிச் சொல்லு'' என்று சொல்லிக்கொண்டே சைக்கிளைப் பாண்டியிடம் விட்டுவிட்டு வீட்டுக்குள் ஓடினாள்.

## ஒன்பது

ஆண்டுகள் தவறாமல் நவம்பரில் வந்து பாண்டியை இம்சைப்படுத்தியது 'புண்ணியாத்மாக்கள் திருநாள்.' இறந்தோர்களின் ஆன்மா சாந்தியடைய வருடத்தில் ஒருநாள் வீட்டில் பிறத்தியாரை அழைத்து விருந்து கொடுப்பார்கள். புண்ணியமென்றும் அதற்குப் பெயர் உண்டு. புண்ணியாட்களை தெய்வமாக நடத்துவார்கள். சேவற்கோழி அடித்துச் சமைத்து கைக்குத்தலரிசி பொங்கி வாழை இலையில் பரிமாறுவார்கள். வயிறார உண்ட பிறகு புண்ணியாட்களுக்குப் புத்தாடை தருவார்கள். வெற்றிலை பாக்கு, சுருட்டு போன்ற பழக்கங்கள் இறந்தவர்களுக்கு இருந்திருக்குமானால், அது அது புண்ணியாட்களுக்கும் வழங்கப்படும்.

அத்தைக்காக சாப்பிடும் பெண்ணுக்கு மல்லிகைப் பூச்சரம் உண்டு. தாத்தாவுக்காக ஒருவருக்கும் மாமாவுக்காக ஒருவருக்கும் அத்தைக்காக ஒரு பெண்ணுக்கும் காலையிலேயே சொல்லி வைத்துவிடுவார்கள்.

பாண்டிக்கு அப்பா வழியில் உடன் பிறந்தது ஒரே ஒரு அத்தையும் அம்மா வழியில் உடன் பிறந்தது ஒரே ஒரு மாமாவும்தான். இருவருமே இறந்து விட்டார்கள். மாமா, வாலிப வயதில் வெட்டிக் கொல்லப்பட்டார். அவர் அம்மாவுக்கு அண்ணன். சொத்து தகறாரில் சொக்காரர்கள் மாமாவைத் தீர்த்துக் கட்டிவிட்டார்கள். அம்மா அவள் அண்ணனைப் பற்றி அதிகம் கதை பேசமாட்டாள். மாமா ஒரே ஆண் பிள்ளை என்பதால் தாத்தாவின் சொத்துக்கு அவர் மட்டுமே வாரிசு என்பதில் சொக்காரர்கள் விரோதம் வலுவடைந்தது. மாமா பலசாலியாகவுமிருந்தார். உயரம் திடகாத்திரமெல்லாம் போதும் போதுமென்றிருந்தது. கோபம் அதிகம், பேச்சு ரொம்பக் குறைவு. புளியும் பச்சை மிளகாயும் சேர்த்து அவித்த மீனை விரும்பிச் சாப்பிடுவார். இளவட்டக் கல்லை பதிமூன்று வயதிலேயே தூக்கியுருட்டி தோளுக்குப் பின் எறிந்தவர். தோப்பைக் கொஞ்சம் கொஞ்சமாகக் கரம்பிக்கொண்டு வந்த சின்னத் தாத்தா பிள்ளைகளை 'செப்பட்டைய இறக்கிப்புடுவேன்' என்று தனியாளாக எச்சரித்திருந்தார்.

மாமாவை ஐந்து பேர் சேர்ந்து வெட்டிச் சாய்த்தார்கள். கருக்கல் முற்றி நேரம் இருட்டி விட்டிருந்தது. வந்துபோய் பழக்கப்பட்ட பாதை

யென்பதால் வழி துலக்கமாகவே இருந்தது. மாலை கடற்கரையோரம் நடந்து வந்துகொண்டிருந்தார். அவர் எதிர்பாராத கணத்தில் வள்ளங்களுக்குப் பின்னே மறைந்திருந்தவர்கள் ஆக்ரோஷமாக 'துண்டம் போடுங்கல தேவிடிச்சி மவன' என்று கத்தியபடி மாமாவைச் சூழ்ந்தார்கள். அது நிழல் பாய்ச்சலாகத் தெரிந்தது. வழியில் எப்போதும் ஆபத்துக்களை எதிர்பார்த்தபடியே நடக்கும் மாமாவும் உடனே சுதாரித்துக்கொண்டார். பாளையருவா மின்னல் வேகத்தில் அவர் கையிலிருந்து வெள்ளி மீன் துள்ளியதுபோல உயர்ந்தது. எதிரே பாய்ந்தவன் அரிவாள் மாமாவைத் தொடுமுன் மாமாவின் அரிவாள் அவன் காரை எலும்புக்கு மேலாக கழுத்தைச் சாய்த்தது. வெட்டுண்டவன் 'அம்மா...' என்றலறியபடி விழுந்தான். மற்றவர்கள் ஒருகணம் திகைத்தார்கள். மாமா மிச்சமிருப்பவர்களையும் குறி பார்த்து அரிவாளை ஆவேசமாக வீசினார். அவர்கள் விலகிக்கொண்டார்கள். கொஞ்ச நேரத்திலேயே மாமா ஒரு குருடனைப் போல குத்துமதிப்பாகத்தான் போராடுகிறார் என்பதை அவர்கள் ஊகிக்க முடிந்தது. இடதுகையால் இடையிடையே கண்களை வேகவேகமாகக் கசக்கினார். கண்கள் கங்குத் துண்டுகளாகச் சிவந்திருந்தன. வெட்டுப்பட்டுக் கீழே விழுந்து துடித்துக் கொண்டிருந்தவன் மீது மிதித்து இரண்டு முறை தடுமாறி விழப்பார்த்தார். மாமா வெட்டியபோது வெட்டுப்பட்டவனின் ரத்தம் பீறிட்டடித்து மாமாவின் இரண்டு கண்ணிலும் தெறித்து குருடாக்கிவிட்டது. விதி மட்டும் அப்போது அப்படி விளையாடியிருக்காவிட்டால் தன் அண்ணனின் கையால் அந்த ஐந்து பேருமே தொலைந்திருப்பார்கள் என்பாள் அம்மா.

மாமா பாண்டிக்குள் சிதறிக் கிடந்தார். அவரைப் பற்றி நினைவு கூரும்போதெல்லாம் தலை தனியாகவும் உடல் தனியாகவும் கை கால்கள் தனித்தனியாகவும் காட்சிகள் தோன்றி உடனே மறைந்தன. காண்பவை எல்லாம் ரத்த நிறமடைந்தன. ஆனாலும் மாமாவின் நினைவு அவனை அடிக்கடி திகிலடையத் தூண்டவில்லை. விதி விட்ட வழியென்று மனம் சுலபமாக நழுவியோடியது. தேரித்துறையிலிருந்து இங்கு வாக்கப்பட்டு வந்த ஜெனோவா அத்தை வேறு கதை சொல்வாள். மாமா அப்போது தேரித்துறையில் மீன் கொள்முதல் வியாபாரத்தில் இருந்தாராம். சித்தப்பா பையனுக்கு நிச்சயம் பண்ணியிருந்த பெண்ணை கல்யாணத்துக்கு முதல் நாள் கடத்திவிட்டாராம். ஏற்கனவே அவர்களுக்குள் அரசல்புரசலாகப் பழக்கம் இருந்திருக்கிறது. இடிந்தகரையில் போய் சிலுவைக் கல்யாணம் பண்ணிக்கொண்டு நண்பர்கள் பாதுகாப்பில் ஒரு வாரம் இருந்துவிட்டு புதுப் பொண்டாட்டியோடு ஊர் திரும்பினாராம். ஐந்தாவது நாள் இது நடந்தது. அந்தப் பெண்ணை அப்புறம் தூத்துக்குடிக்கு சொந்தக்காரர்கள் வீட்டுக்கு அனுப்பி விட்டார்களாம்.

புண்ணியாட்கள் யாரையுமே பாண்டிக்கு சுத்தமாகப் பிடிக்காது. அவர்களின் ஏழ்மைத் தோற்றத்தை ஒப்புக்கொள்ள முடியாமல் அவன்

மனம் தன் எல்லாக் கதவுகளையும் உட்புறமாகச் சாற்றியது. நிஜ பிம்பங்கள் அவன் கனவு வார்ப்பை உடைத்து நொறுக்கி உண்டு இல்லை என்றாக்கின. தாத்தாவுக்காக வருபவர் உடல் அவரது பெரிய தலையை தாங்கச் சக்தியற்று மெலிந்து போயிருக்கும். மாமாவுக்காக வருபவர் மகா நோஞ்சானாக இருந்தார். அத்தைக்காக வருபவர்கள் உலர்ந்து நெற்றாகி உடைந்து விடுவாள் போலிருப்பார்கள். இவர்கள் சாப்பிட்டு அவர்கள் ஆத்மா சாந்தியடையப் போகிறதா என்று அவன் ரத்தத்தில் எள்ளல் கொதித்தது. புண்ணியாட்கள் பந்தியிலமர்ந்ததுமே பாண்டி வீட்டை விட்டு வெளியேறிப் போய்விடுவான்.

இந்த வருஷமும் பாண்டி அவர்கள் சாப்பிட வருமுன்னரே கிளம்பி அக்கா வீட்டுக்கு வந்துவிட்டான். அவனைக் கண்டதும் ஜாய்ஸ் அக்கா சீட்டுக்கட்டை தூக்கி விட்டாள். ரம்மி. இந்த விளையாட்டில் அவள் கில்லாடி. எத்தனை முறை கண்டுபிடித்து திட்டினாலும் தைரியமாக ராங் டிக் அடிப்பாள். 'ராங்க் டிக் ராணி.' ஜோக்கரைத் திருடி எங்கே எப்படி ஒளித்து வைப்பாள் என்றும் கண்டுபிடிக்க முடியாது. ஜோக்கர்களின் முதுகில் அவளுக்கு மட்டுமே தெரிந்த குறிகளும் உண்டு. மோசமான சீட்டுகள் என்றாலும் கவுத்திவைக்கும் பழக்கமுமில்லை. தோற்ற பாயிண்ட்களை அவள் சொல்லும்போது சீட்டுகளை வாங்கி செக் பண்ண வேண்டும். தொடர்ந்து அவள் ஜெயிப்பதில் ஆச்சரியம் எதுவுமில்லை. இன்று நல்ல மூடில் இருந்தாள். ஜோக்குகளாக வீசிக்கொண்டிருந்தாள். பாண்டியை வழக்கம்போல் கிண்டல் பண்ணி சீண்டினாள்.

அமலா அக்கா இறக்கிய சீட்டை எடுத்து பாண்டி டிக் அடித்துவிட்டான். அமலா அக்காவுக்கு இறங்கிய சீட்டுகளின் மேல் சுத்தமாக கவனமே கிடையாது.

ஜாய்ஸ் அக்கா கையில் எண்பது இருந்தது. ''அம்மு மடத்தனமா போட்டுக் கொடுத்துட்டா'' என்று சொன்னதோடு நிற்காமல் தொடர்ந்தாள் ''அம்மு ஆடு வளத்தா. கோழி வளத்தா. நாய் வளக்கலையே...'' என்று நிறுத்திவிட்டு பாண்டியைப் பார்த்துச் சிரித்தாள்.

''சும்மா போடி. எந்நேரமும் பிள்ளயக் கிண்டல் பண்ணிக்கிட்டு... நீ கலைச்சுப் போடுடா தம்பி'' என்று ஜெசி அக்கா பாண்டியின் உதவிக்கு வந்தாள்.

பாண்டி எனக்கென்ன வந்தது என்ற நடிப்போடு அடுக்கிக் கலைத்துக் கொண்டிருந்தான். வேண்டுமென்றே ஜாய்ஸ் அக்காவின் சீட்டை கொஞ்சம் தூக்கி விசிறி எறிந்தான்.

''நிலவுக்கு என்மேல் என்னடி கோபம்? நெருப்பாய் எரிகிறது. உன் நிழலுக்கு என் மேல் என்னடி கோபம்? முள்ளாய் மாறியது'' என்று அமலாவைப் பார்த்துப் பாடினாள்.

'அமலாவின் நிழல்தான் பாண்டி' என்ற கண்டுபிடிப்பை அறிவித்து

அதைப் புழக்கத்தில் விட்டு கிண்டலுக்கான பொருளாக ஏற்கனவே மாற்றியிருந்தாள். உதட்டுக்கு மேலே ரோமக் கோடுகள் விழுந்ததையும் கண்டுபிடித்து 'அய்யோ, தம்பிக்கு மீசை வந்தாச்சு மீசை வந்தாச்சு' என்று தம்பட்டமடித்தாள். எல்லோரும் முகத்தை உறுத்து உறுத்துப் பார்த்த போது வெட்கம் அவனைத் தின்றது.

ஜாய் அக்காவிடம் நல்ல பழக்கமும் உண்டு. பாண்டியோடு தனியாய் இருக்கும்போது கேலி பேச மாட்டாள். ரொம்ப பிரியமாக இருப்பாள். ரசிப்பதற்கு பக்கத்தில் ஆட்கள் இருந்தால் கேட்க வேண்டாம், பண்டல் பண்டலாகக் கிண்டல் வரும். 'ஜெசிந்தா அக்கா காதல் விஷயம் வீட்டுக்கு தெரிஞ்சு போச்சு. பெரியப்பாவும் சம்மதிச் சிட்டாரு. தைரியமாக முதலில் பெரியப்பாவிடம் பேசியதும் ஜாய் அக்காதான். அவரை வற்புறுத்தி சம்மதிக்க வைத்தது பெரியக்கா. ரெண்டு மாசத்துல கல்யாணமாகி அவ போயிருவா. அப்புறம் இவள் என்ன செய்வாள் என்று பார்க்க வேண்டும்.'

## பத்து

சேசுமரியாயி பாட்டி கையில் சாட்டையிருந்தது. அவளைத் தவிர சாட்டை யார் கண்ணுக்கும் புலப்படவில்லை. ஆனால், அதைச் சுண்டிச் சொடுக்கும் போதெல்லாம் ஹெட்மாஸ்டர் பொன்னுதுரையும், ராமலிங்கம் சாரும் சுளீர் சுளீரென்று துணுக்குற்றனர். ''இதுதான் நீங்க பள்ளியோடம் நடத்துத லட்சணமா? இந்த லட்சணத்தை நம்பித்தான் எங்க பிள்ளையள நாங்க அனுப்பணுமா?'' வான்கோழி கொக்கரிப்பது போல் பாட்டி கோபத்தில் குலுங்கினாள். சோகமாக இருந்த அமலா அக்கா அருகே நின்றிருந்த பாண்டி பம்பாய் மணியை வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தான். ராமலிங்கம் சார் 'பளார் பளார்' என்று மணி செவிட்டை பதம்பார்த்து விட்டிருந்தார். பணிந்து கைகட்டித் தலை குனிந்து நின்றிருந்தான். பதற்றமாகக் காணப்பட்ட ஹெட்மாஸ்டர் ''என் அறைக்கு வாங்க. உக்காந்து பேசலாம்'' என்று ஆரம்பத்திலேயே பாட்டியிடம் கெஞ்சினார். ''பொதுவுல வச்சிக் கேட்டாத்தான் பொசகெட்ட பயலுவலுக்கு புத்தி வரும்'' என்று மறுத்துவிட்டாள். அவரவர் வகுப்பு வாசலுக்கு ஆசிரியர்களும் டீச்சர்களும் வந்து விட்டிருந்தார்கள். தொலைவிலிருந்தே கவனித்தார்கள். மாணவர்கள் ஜன்னல்கள் வழியே முடிந்த அளவு எட்டிப்பார்த்தார்கள். பம்பாய் மணி வீட்டிலிருந்து ஆள் கூப்பிட்டு வர இரண்டு மாணவர்களை ராமலிங்கம் சார் ராசாக்குடிக்கு அனுப்பியிருந்தார். பம்பாய் மணி ஐந்தாம் வகுப்பு வரை பம்பாயில் படித்தவன். பிறகு இங்கு வந்து சேர்ந்தான். வகுப்பில் இன்னும் சில மணிகள் இருந்ததால் அவனை பம்பாய் மணி என்று எல்லோரும் கூப்பிட ஆரம்பித்தார்கள். ஆங்கிலப் பாடத்தில் அன்றிலிருந்து இன்றுவரை

அவன்தான் ஃபர்ஸ்ட் ராங். மற்றப் பாடங்களில் ரொம்ப சுமார். வயதுக்கு மீறிய உடல் வளர்ச்சி. மீசை தெரியும். எல்லா விளையாட்டிலும் முன்னால் நிற்பான். வேட்டி சட்டை கட்டினால் பெரிய ஆள் போல இருப்பான். அவனோடு எந்தப் பையனும் சேட்டை போடத் துணிய மாட்டான்கள்.

நேற்று பள்ளிக்கூடம் விட்டு பிள்ளைகள் எல்லோரும் வெளிவரும் போது அமலா அக்காவின் பாடப்புத்தகப் பைக்குள் கடிதம் போட்டு விட்டான் பம்பாய் மணி. அதுவும் காதல் கடிதம். ''அன்பே அமலா, அழகே அமலா, ஆருயிரே அமலா ஐ லவ் யூ அமலா'' என்றெல்லாம் எழுதியிருந்தான். பயந்து போன அக்காளுக்கு என்ன செய்வெதென்று தெரியவில்லை. பாண்டி, கூடப் படிக்கும் ஊர் பிள்ளைகள் எல்லோரும் சேர்ந்துதான் சைக்கிளில் வீட்டுக்கு வந்தார்கள். வழியில் யார் யாரோ எதெதுவோ பேசியபடி வந்தார்கள். அக்கா யாரிடமும் எதுவும் பேச வில்லை. பார்பராம்மா பூவரச மரத்தடியில் வழக்கம்போல் மாலையில் காத்திருந்து வாலாட்டி வரவேற்கும் ஜிம்மியையும் கண்டுகொள்ள வில்லை. முகத்தை உம்மென்று வைத்திருந்தாள். சைக்கிளை விட்டு இறங்கும்போதே விம்மியபடி வீட்டுக்குள் நுழைந்தாள். சைக்கிளை தெருவில் நிறுத்திவிட்டு பாண்டியும் கூடவே போனான். கடிதத்தை பிரித்துப் படித்துப் பார்த்துவிட்டு அதிர்ச்சியான பெரியம்மா ''யாருளா யாருளா?'' என்று ஆளைக் கேட்டாள். அக்கா அழுதபடியே பெரியம்மா விடம் சொல்லும் போதுதான் பாண்டிக்கு விஷயம் உறைத்தது. பாட்டி ''என்னளா என்னளா'' என்றபடியே அருகே வந்தாள். திருநெல்வேலியில் ரியல் எஸ்டேட் பிஸினஸ் பண்ணும் பெரியப்பா வேலைகள் நிமித்தம் இரண்டு நாளாக வீடு திரும்பியிருக்கவில்லை.

மாணவர்களோடு வேகவேகமாக வந்தாள் பம்பாய் மணியின் தாய். ஆசிரியர்களிடமும் பாட்டியிடமும் மகனுக்காக மன்னிப்புக் கோரினாள். ''ட்வல்த் படிக்கிறான். யோக்கியமா இருக்கச் சொல்லுங்க. இது லாஸ்ட் வார்னிங். இனிமே எதும் வம்புதும்புனா ஸ்கூல் வாசல்ல கால் வைக்க முடியாது. டி.சி.ய கிழிச்சிருவேன்.'' ஹெட்மாஸ்டர் எச்சரித்த தொனியே டி.சி. கிழித்தது போலிருந்தது.

''என் பேத்தி கடவுளுக்கு நேந்துவிட்ட பிள்ள. கன்னியாஸ்திரியாகப் போறவ, உன் மவன் குரங்கு சேட்டையை எங்கே காட்டியிருக்கான் பாரு'' பாட்டி கடிதத்தை மணியின் அம்மா கையிலேயே திணித்தாள்.

மதியம் அக்காவும் பாண்டியும் இன்னும் ஊர்ப்பிள்ளைகள் சிலரும் சேர்ந்து வேப்ப மரத்தடியில் வட்டமாக அமர்ந்து கலகலப்பாக பேசிச் சிரித்து சாப்பிட்டார்கள். காலையில் நடந்தது கெட்ட கனவாகக் கலைந்து போய்விட்டதாக நம்பிக்கொண்டு வகுப்புக்கு வந்த பாண்டிக்கு பாட இடைவேளையின்போது அதிர்ச்சி காத்திருந்தது. மதிய இடைவேளை யில் பம்பாய் மணி அவன் செட்டுகளோடு அரட்டையடித்ததையும்

அரட்டையில் அமலா அக்காவைப் பற்றி பச்சை பச்சையாகப் பேசியதையும் ஒரு வார்த்தை கூடாமல் குறையாமல் பக்கத்திலிருந்து கேட்டிருந்த சண்முகம் பாண்டி காதில் ஒப்பித்துவிட்டான். எரியும் கொள்ளிக்கட்டையால் அந்த வார்த்தைகள் அவன் மேல் கோடுகள் கீறத் தொடங்கிவிட்டன. எரிச்சல் தாங்க முடியாமல் நெளிந்தான். பாடத்தில் கவனமற்றுப் போனது. ஆத்திரம் பீறிட்டுப் பாய்ந்தது. வெடித்துவிடும் பலூன் போல் உடல் வீங்கிக்கொண்டே போனது.

லீலிங் பெல் அடித்தோய்ந்ததும் மாணவர்கள் சலசலப்புகளோடு கூட்டமாக வெளியேறியபடியிருந்தனர். கேரியரில் பையை க்ளிப் செய்து விட்டு சைக்கிளை உருட்டி வரிசையிலிருந்து பம்பாய் மணி உருவிக் கொண்டிருந்தபோது, வேட்டை நாய் தாவிச் செல்வதுபோல் அரவம் எழுந்தது. திரும்பிப் பார்த்தவன் வாயைப் பிளந்து விட்டான். ''என்னடா சொன்னே பன்னிப் பயலே'' அடி வயிற்றிலிருந்து கதறியபடி பாய்ந்து வந்த பாண்டி தாவி மணியின் நெஞ்சில் ஓங்கி மிதித்தான். நிலைகுலைந்த மணி 'யம்மா...' என்று அலறியபடி மல்லாக்க விழுந்தான். திரும்பிப் பார்த்த மாணவ மாணவிகள் ஸ்தம்பித்து நின்றார்கள்.

அவன் மீதே விழுந்து பின்சக்கரம் மட்டும் சுற்றிக்கொண்டிருந்த சைக்கிளைத் தூக்கித் தூரப்போட்டான் பாண்டி. கீழே கிடந்தவனின் நெஞ்சில் முழங்காலைக் குத்தியூன்றிக்கொண்டு இரண்டு கைகளாலும் முகத்தில் மாறிமாறி அறைந்தான். ''இந்த வாய்தானே சொல்லுச்சி, இந்த வாயிதானே சொல்லுச்சி...'' ''வேண்டாம் வேண்டாம்'' என்று கைகளால் தடுத்தும், குரல் கொடுத்தும் பார்த்தான் மணி. பாண்டி தணியவில்லை. ''இப்போ பாரு உன் வாயில ஒரு பல்லு இருக்காது... தட்டிருதன் பாரு'' அவன் நெஞ்சிலிருந்து எழுந்தவன் வாயை உடைக்கக் கல் தேடினான். ''ஏ... டென்த் ஸ்டூடண்ட் டுவல்த் ஸ்டூடண்ட அடிக்கிறான்'' என மாணவர்களிடமிருந்து சலசலப்பு வந்தது. பாண்டிக்கு காதும் கேட்க வில்லை கண்ணும் தெரியவில்லை. கல்லும் மணியும் மட்டுமே அவன் கண்டான். தேடிப் பிடித்து கல்லொன்றை எடுத்துவிட்டு திரும்பிப் பார்த்தபோது சைக்கிளைப் போட்டுவிட்டு மணி ஓடிக்கொண்டிருந்தான். பாண்டியும் வெறி கொண்டு துரத்தினான். மணி மெயின் கேட்டை கடந்தபோது கையிலிருந்த கல்லை பாண்டி எறிந்தான். இரும்புக் கதவில் பட்டு சப்தத்தோடு தெறித்தது. ''பாண்டி நில்லு... பாண்டி நில்லு...'' என்று பிடரிக்குப் பின்னே கூட்டமாகக் குரல்கள் கேட்டன. அவனுக்குக் கேட்கவில்லை. அவனால் தன்னை நிறுத்த முடியவில்லை. தோட்டாக் குடி குளத்துமேட்டில் ஏறியிறங்கி, பனங்காட்டுக்குள் புகுந்து, கருவேலங் கூட்டத்துக்குள் நுழைந்து மறைந்துவிட்டான் மணி. பாண்டிக்கு மூச்சு வாங்கியது. முழந்தாள்களில் கையூன்றி சிறிது நேரம் அங்கேயே நின்றான். பள்ளிக்குத் திரும்பினான். மூன்று நிமிடத்தில் ஓடிக் கடந்த தூரத்தை நடந்து திரும்ப கால்மணி நேரம் பிடித்தது. மாணவ மாணவி

களோடு ஆசிரியர்களும் கூட்டமாக பள்ளி வாசலில் நின்றிருந்தார்கள். அவனை அச்சத்தோடும் ஆச்சரியத்தோடும் பார்த்தபடி கலைந்து போனார்கள்.

☆☆

பாண்டி அதிகாலையிலே எழுந்து குளித்துவிட்டு அவசர அவசரமாக ஓடிவந்தான். பெரியப்பா வீட்டு வாசலில் வெள்ளைக் கார் நின்றிருந்தது. இன்னும் கிளம்பவில்லை என்ற ஆசுவாசத்தோடு வீட்டுக்குள் ஓடினான். அக்கா போனில் பேசிக்கொண்டிருந்தாள். புது சுடிதார் போட்டிருந்தாள். ஜாய் அக்கா அவளுக்குத் தலைவாரிக் கொண்டிருந்தாள். முந்தாநாளே காலேஜுக்கு லீவு போட்டுவிட்டு அவள் வந்து விட்டாள். போனில் பேசுவது பெரியக்காவாக இருக்கும். பேச்சு நீண்டு கொண்டே போனது.

பெரியம்மா கொடுத்த இட்டிலியை நடுவீட்டில் வைத்து பாண்டி சாப்பிட்டுக் கொண்டிருந்தான். ஜாய் அக்கா ஊட்டிவிட்டும் நாலு வாய்க்குமேல் வேண்டாமென பிடிவாதமாக அமலா மறுத்துவிட்டாள்.

பாண்டியைப் பார்த்து ''நீ ஸ்கூலுக்கு கிளம்பலயாடா'' என்று ஒப்புக்குக் கேட்டாள் அமலா அக்கா. ''இன்னும் நேரமிருக்கு'' என்றான். டி.வி யாரும் பார்க்காமல் ஊமைப் படமாக ஓடிக் கொண்டிருந்தது. ஜாய் அக்கா காபி டம்ளரைப் பிடித்து கொஞ்சங் கொஞ்சமாக அமலாவுக்குப் புகட்டிக் கொண்டிருந்தாள்.

பெரியம்மா கூப்பிட்டு கொல்லைப் புறத்தில் அமலா அக்காவை நிற்க வைத்து திருஷ்டி சுற்றிப் போட்டாள்.

மாடியிலிருந்து இறங்கிவந்த பெரியப்பா ''நேரமாச்சு. கிளம்பலாம்'' என்றார். பெட்டி படுக்கைகளைத் தூக்கிக்கொண்டு போனார்.

அக்கா போகப் போகிறாள். இனி அவளை தினமும் பார்க்க முடியாது. பாண்டியை முதன்முறையாகப் பெருந்துக்கம் வந்து அழுத்தியது. நாகர்கோவிலுக்கு கன்னியாஸ்திரிக்குப் படிக்கப் போகிறாள். இனி வரமாட்டாள். அவள் இல்லாமல் என்ன செய்வது என்றே புரியவில்லை. இந்த வீட்டில் அவனுக்கு எதுவுமில்லை. எந்த அக்காக்களும் இல்லை.

பெரியம்மா அக்காவை இழுத்து கன்னங்களில் முத்தமிட்டாள். முன் வீட்டில் கட்டிலில் அமர்ந்திருந்த பாட்டியிடம் ''போயிட்டு வாரேன் பாட்டி'' என்றாள். பாட்டி ஏதோ சொல்ல முயலவும் அதைத் தவிர்க்க விரும்பியவள் போல் வீட்டுக்குள் ஓடினாள். போனில் அக்காக்களைக் கூப்பிட்டாள். அழுகையும் கொஞ்சலுமாக இருந்தது.

வெயில் உறைக்கத் தொடங்கியது. பெரியப்பா கைக்கடிகாரத்தைப் பார்த்தார்.

போனை வைத்துவிட்டு விறுவிறுவென்று இறங்கி வந்து காரில் ஏறினாள். பாண்டி படிக்கட்டிலேயே நின்றிருந்தான். பெரியப்பா முன்னால் ஏறிக் கொண்டார். வீடுகளுக்கு முன்னால் ஆங்காங்கே ஆட்கள் தெரிந்தனர். உறவுப் பெண்கள் காரைச் சுற்றி நின்றனர்.

தலைவாசலில் நின்ற பெரியம்மாவின் கண்களிலிருந்து கண்ணீர் கொட்டியது. அதைக் கண்ட பாண்டியும் அழுதான்.

ஜாய் அக்கா அழுத்தமாகச் சொன்னாள் ''அம்மா, நீ உள்ள போ. நீ வாடா. காருல ஏறு'' என்று பாண்டியைப் பிடித்து பின்சீட்டில் ஏற்றிவிட்டு ஏறிக்கொண்டாள்.

கார் கிளம்பியது. ''நல்லா படிடா. சீக்கிரமா லீவுல வந்துடுவேன்'' என்றாள் அமலா அக்கா.

தெரு முக்குத் திரும்பும்போது ஜன்னலில் தெரிந்த அமலாவைப் பார்த்துவிட்டு ஜிம்மி காரின் வேகத்தைத் தொடர்ந்து பின்னால் ஓடி வந்தது.

ஜாய் அக்கா சொன்னாள், ''கார் திரும்பும்போது நேரா திருநெல் வேலி போயிரும் பாண்டி. இல்லாட்டி அக்கா உன்னையும் கூட்டிட்டுப் போவேன். அடுத்த லீவுல வரும்போது உனக்கு புக்ஸ் வாங்கிட்டு வாரேன்.''

''சரிக்கா.''

கார் ஊரைக் கடந்து ஒரு பர்லாங் வந்துவிட்டது.

''டிரைவர், நிறுத்துங்க'' என்றாள். தான் முதலில் இறங்கி பாண்டியைப் பிறகு இறங்கச் சொன்னாள்.

''உனக்கு வேற என்னடா வேணும்?''

''ஒண்ணும் வேணாங்க்கா.''

''நல்லாப் படி. பெரியம்மாவைப் போயி தினம் பாரு. இப்ப டாடா சொல்லு.''

கார் விலகிப் போய்க்கொண்டிருந்தது. இரண்டு ஜன்னல்கள் வழியாக அக்காக்கள் கையசைத்துக் கொண்டிருந்தனர். வெகுதூரத்தில் புளியமர வளைவில் திரும்பி மறைந்து போனது.

எல்லாமே இல்லாமல் போனதுபோல் தோன்றியது. அப்படியே நின்றிருந்தான்.

ஜிம்மி முன்னங்கால்களைத் தூக்கி அவன் மீது போட்டுக் குழைந்தது.

## பதினொன்று

ப்ளஸ் ஒன் அரையாண்டு பரிட்சை எழுதும்போதே பாண்டிக்கு மனம் சஞ்சலத்தால் குமைந்தது. வகுப்பில் நடத்தப்படாத பாடங்களிலிருந்து கேள்விகள் அதிகமாக கேட்கப்பட்டிருப்பதாக உணர்ந்தான். குழப்பமாக இருந்தது. ஆங்கிலப் பரிட்சையிலிருந்து அரையாண்டுத் தேர்வு தொடங்கியது. முதல் நாள் இயன்றதை எழுதிவிட்டு வீடு வந்ததும் பாடப் புத்தகத்தை எடுத்துப் பார்த்தான். நடத்திமுடித்த பாடங்களிலிருந்தே கேள்விகள் கேட்கப்பட்டிருந்தன. படித்ததில் ஏகப்பட்டது மறந்து போயிருந்தது தெளிவானது. அழுகையே வந்துவிட்டது. யாருக்கும் தெரியாமல் ரகசியமாய் அழவும் செய்தான். பயத்தில் உடல் வியர்க்க விறுவிறுக்க கண்களிலிருந்து கண்ணீரைத் தன் கைகளால் துடைத்துக் கொண்டபோது, வேதனை அவனைத் தூக்கிப் போட்டு மிதித்தது. ஆங்கிலப் பரிட்சையில் முப்பத்தி ஆறு மதிப்பெண்களுக்கு மேல் கற்பனையில் கூட எதிர்பார்க்கும் சக்தியை இழந்து சோர்ந்து சக்கையாகிக் கிடந்தான்.

அவன் சோகமடைந்ததும் ஜிம்மியும் சோகமாகிவிட்டது. அதன் கண்கள் 'என்ன என்ன'வென்றன. கட்டளையிட்டால் ஸ்கூலுக்கு போய் ஜிம்மியே பரிட்சை எழுதி அவனை பாஸாக்கி விடுவதுபோல் பாசத்துடன் சுற்றி வந்தது.

பாண்டிக்கு பாடம் நடத்திய ஆசிரியர்கள் எல்லோரும் கூடி விவாதித்துக் கொள்ளுமளவுக்கு அரையாண்டு பரிட்சை முடிவு மிக மோசமாக அமைந்துவிட்டது. வீட்டிலிருந்து பெரியவர்கள் யாரையாவது அழைத்து வந்தால்தான் பரிட்சை தாள்களைத் தருவதாக வகுப்பு ஆசிரியர் என்கிற முறையில் குருபாதம் சார் கண்டிப்புடன் கூறிவிட்டார். அதைச் சொல்லும்போது, கன்னத்தில் எப்போதும் புன்னகை லேசாக ஒட்டிக்கொண்டிருக்கும் அவர் களையான முகம் மலத்தை மிதித்துவிட்டதுபோல் சங்கடத்துடன் சுருங்கியது.

அடுத்த நாள் அறிவியல். இரவு முழுக்க விழித்திருந்து படித்தான். இரவில் இரண்டு முறை அம்மா எழுந்து வந்து அவனை தூங்கப் போகுமாறு சொன்னாள். ''பரிட்சைமா'' என்று கெஞ்சுவது போல் கூறி அம்மாவை சமாதானப்படுத்தினான்.

சித்தத்தை ஒரு புள்ளியில் குவித்து வைப்பது என்பது ஒரு சோற்று உருண்டையை உருட்டி வைப்பது போலிருந்தது. எண்ணங்கள் காகங்களாகிப் பறந்து வந்து அதைக் கொத்திச் சிதறடித்து கூச்சலிட்டன.

ரூபினா அக்காளின் கல்யாணம் முடிவின்றி அவனுக்குள் நிகழ்ந்து கொண்டே போனது. பந்தல்காரன் பந்தலைக் கலைத்து எடுத்துக் கொண்டு போகவில்லை, ரேடியோ செட்டுக்காரன் குழாயை அவிழ்க்கவில்லை, அலங்கார விளக்குகளை அணைக்கவில்லை, கல்யாண வீட்டு

கலகலப்பு சற்றும் பொலிவு இழக்கவில்லை, கதகதப்புடன் பாண்டியைக் கட்டியணைத்து முத்தமிட முயன்ற பிரேமா ராணி அக்கா தன் கைகளைப் பிரிக்கவில்லை. அரையாண்டுத் தேர்வு ஆரம்பிக்க இரண்டு நாட்கள் மட்டுமேயிருந்தபோது ரூபினா அக்காளுக்கு திருமணம் நடந்தது.

தேர்வு முடிவைப் பற்றி மிக ஆர்வமாக அப்பா அவனிடம் விசாரித் தார். பதிலளிக்க மிக சங்கடமாக இருந்தது. அவருக்கு மகன் மீது பெரிய நம்பிக்கை இருந்தது. எனவே கேள்விகளால் அதிகமாகத் துளைக்க வில்லை.

அப்பாவுக்கு அந்த வாரத்தில் ஒரு வேலை நாளில் கூட விடுமுறை எடுக்க முடியாது. பள்ளிக்கூடம் ஏறிவந்து ஆசிரியர்களிடம் பதில் கூறும் சாமர்த்தியம் அம்மாவுக்கு கிடையாது. அரையாண்டு பரிட்சை நடந்த தையே அம்மா மறந்து போயிருந்தாள். 'இரவெல்லாம் உறங்காமல் விழித்திருந்து என் பிள்ளை விடிய விடிய படித்தானே' என்று பரிவுடன் அவள் சமாதானம் அடைந்துவிட்டிருந்தாள். சாந்தகுமார் அண்ணனுக்கு பள்ளிக்கூட விவகாரமென்றாலே ஒரு பரம்பரை எரிச்சலிருந்தது.

அப்போது நாகர்கோவில் கான்வன்ட்டிலிருந்து வந்திருந்த அமலா அக்கா மட்டுமே ஒரு வாரம் கூடுதல் விடுமுறையுடன் வீட்டில் இருந் தாள்.

மாதத்தில் இரண்டு நாட்கள் ஊருக்கு வருவாள். திருவிழா, ஈஸ்டர், கிறிஸ்மஸ் வீட்டு விசேசங்களுக்கெல்லாம் தடையின்றி அனுமதித்தார் கள். தேவைக்கதிகமாக அமலா அக்காவை புனிதமாக்கி நாசுக்காக புறக் கணிக்கிறார்களோ என்றும் சற்சமயம் எண்ணத் தோன்றும். அக்கா என்ற உறவை விட்டு அவள் விலகிப் போய்க்கொண்டிருக்கிறாளோ! வேறு வழி யில்லை. ஊராரும் அவளை அப்போதே குருவானவர் போல மதிப்பாகத் தூக்கி வைத்திருந்தார்கள்.

அமலா அக்காவிடம் பாண்டி சற்றே தயங்கித் தயங்கி ''அக்கா, விக்டோரியா மெட்ரிக்குலேஷன் வரை நீ வர முடியுமா'' என்று கேட்ட போது அவள் முகம் சுருங்கிவிட்டது. சின்னதொரு முகச்சுளிப்பில் அக்கா வுக்கு வயதுகள் கூடி விட்டன. ''ஆஃப் இயர் எக்ஸாம்ல அவ்வளவு சரியா பண்ண முடியலக்கா. கோட்டர்ல எம்பத்தி நாலு பெர்சன்ட் எடுத்திருந் தேன். அதான் மார்க் ஷீட் தரமாட்டேங்குறாங்க'' என்றான்.

ப்ளஸ் டூவில் பள்ளியிலேயே முதல் மாணவியாகத் தேறினவள் அமலா. அவளிடம் பல ஆசிரியர்களுக்கு மதிப்புமிருந்தது. சரியென்று சம்மதித்தாள். 'ஏன்' என்று உயர்ந்த அவள் புருவங்கள் இறங்கும் முன்னே பாண்டி தலையைத் தாழ்த்திக்கொண்டான்.

மருதகுளம் செல்வதற்காக காலை எட்டு மணிக்கு பெரியம்மா வீட்டு வாசலில் பாண்டி சைக்கிளோடு வந்து நின்றபோது சேசுமரியாயி பாட்டி திண்ணையில் அமர்ந்திருந்தாள். ''ஏப்பு.. பிள்ளையை எங்கல

போட்டு அலைக்கிற?'' அதற்கு மேலும் இழைக்க முடியாத குரலில் கேட்டாள். பாட்டியிடம் ஏன் இதை அமலா அக்காள் சொன்னாள் என்று ஒருகணம் அவன் மனம் சுருங்கியது. வீட்டில் சொல்லி விட்டுத்தானே அவள் வெளியேற முடியும் என்ற நியதி அவனை சமாதானப்படுத்தியது.

''போன பரிட்சையில மார்க்கு எனக்கு ரொம்ப கம்மியா வந்துருக்கு பாட்டி. அது சரிதானானு அக்காதானே சரி பாக்க முடியும். அதுக்குத் தான்.'' பாட்டிக்குத் தேவையான பதத்துடன் பாண்டி பதில் சொன்னான்.

''இந்த வாத்திமாருக்கு வேற வேலை மயிரு கெடையாது'' பாட்டி எங்கேயோ பார்த்தபடி சிறு உவகையோடு சொன்னாள். ''அமலம்... அமலம்... ஒன் தம்பியாபிள்ள வந்திருக்கான்'' என்று வீட்டுக்குள் தன் உரத்த குரலையும் வீசினாள்.

கண்ணாடிப் பச்சை நிறத்தில் பாவாடையும் அதே நிறத்தில் ஜம்பரும் வெள்ளை நிற தாவணியும் அணிந்திருந்த அக்கா வாசலில் வந்து நின்று ''போவுமா'' என்றாள்.

முகத்தில் பவுடர் சற்று தூக்கலாக இருப்பதாக பார்த்த முதற்கணம் பாண்டி நினைத்தான். அது பற்றி அக்காவிடம் ஏதும் கேட்க முடியாது. ''உன் சைக்கிளை எடுத்துட்டு வாக்கா'' என்றான் பணிவான குரலில்.

அக்காவின் லேடி பேர்டு சைக்கிளை விற்க மனமில்லாமல் பெரியப் பாவும் பெரியம்மாவும் வீட்டில் கொலு போல வைத்துப் பாதுகாத்து வந்தார்கள்.

''அது ரெண்டு வீலும் ஏர் இறங்கிக் கிடக்கு. உன் சைக்கிள்லேயே போவலாம்'' என்றவள் படியிறங்கி வந்துவிட்டாள்.

''போகும்போதே ஏறிக்கிடுவியா?'' என்றான் பாண்டி.

''கீழ விழுந்து கெடக்குறதுக்கா? நான் ஏறுன பிறவு வண்டிய எடு.'' அக்கா தன்னை நினைத்து தனக்குள்ளே சிரிக்கிறாளோ!

உயரம் குறைந்த திண்ணையில் ஒரு காலை ஊன்றிக்கொண்டு கைக் கிளில் ஏறி நின்றான். அவன் புத்தகப் பையை அக்காவிடம் ஒப்படைத்து விட்டிருந்தான். அவள் கேரியரில் வசதியாக அமர்ந்த பிறகு, சைக்கிளைச் செலுத்தினான். ''பார்த்து போயிட்டு நேரத்தோடு வந்து சேருங்க புள்ளோ'' என்றாள் பாட்டி. அவள் வெற்றிலைத் துப்பலின் 'க்ரீச்' மட்டுமே பாண்டியின் காதில் விழுந்தது.

ஊர் ஒரு பட்டம் போலவும் அதைப் பிணைத்திருக்கும் ஒரு மணல் நூல் போலவும் அந்தப் பாதை மருதகுளத்தை நோக்கிச் சென்றது.

ஊர் எல்லையில் நிற்கும் பார்பராம்மாள் காவல் பூவரசு மரம் தாண்டியதும் ''தம்பி நீ இறங்கு. நான் ஓட்டுறேன்'' என்றாள்.

பாண்டி வேகத்தை குறைத்துக்கொண்டதும் அவள் குதித்து இறங்கி னாள். ஆண்களுக்கான ஹெர்க்குலஸ் சைக்கிளை எப்படி அவள்

மிதிப்பாள் என்ற சந்தேகம் பாண்டிக்கு உண்டானது. ''சைக்கிள் போறப்போ நீ ஏறிக்கிடுவேல்லே'' பாண்டியிடம் கேட்டாள். ''நான் ஏறிக்கிடுவேன். நீதான் கீழ போட்டு தூக்கிறக் கூடாது'' என்றான் கொஞ்சம் சிரிப்புடன். அக்கா எந்த தடுமாற்றமும் இல்லாமல் சைக்கிளைச் செலுத்தினாள். பின்னால் ஆளை உட்காரவைத்து ஓட்டுவது சிரமம் என்பதாலோ என்னவோ அவளால் வழியில் பேசவே முடியவில்லை. கீழுதட்டை வாய்க்குள் இழுத்து மடித்துக் கடித்துக் கொண்டிருப்பாள் என்று கணிக்கத் தோன்றியது.

வழியெங்கும் பனைமரங்கள் தனித்தனிக் கொடி மரங்களாக நிமிர்ந்தும் அடர்ந்தும் நின்றன. இரண்டரை வருடங்களாக அவ்வழியே அவன் வந்து போய்க்கொண்டிருக்கும் போதும் இன்றுதான் அம்மரங்கள் மிகத் துலக்கமாகத் தங்கள் தனிமையைத் தயக்கமின்றி அவனிடம் பகிர்ந்து கொண்டன. அமலா அக்காவின் மேல் முதுகில் கூந்தல் விழுதோரம் முத்து முத்தாக வியர்வை அரும்பியது. காலை வெயில் சிரமமின்றி சூடேறிக்கொண்டிருந்தது.

பள்ளிக்கூடத்தில் அவனைக் கவர்ந்த பெண் பிள்ளைகள் சிலருக்கு உடல் வாளிப்படைந்திருந்தது. விளையாட்டு நேரங்களில் ஆடைக்குள் நெளிந்த மார்பு அசைவுகளில் அவன் குருத்து சபலங்கள் அலைகளாகி நுரைத்து அடங்கின. பின்னங்கால்களின் மென்மயிர்கள், தோள்கள் குவியும் முதுகின் பளபளப்பு பலரை நேசிக்கத் தூண்டினாலும், மசிக் கறை படிந்த விரல்களுடைய அவர்களுக்கும் ஜலதோஷம் பிடித்தது; வகுப்பில் திட்டு விழுந்தது; மூக்கொழுகியது போன்ற யதார்த்தங்கள் அவ்வப்போது நேர்ந்த குட்டிக் குட்டி ஈர்ப்புகளை தடாலடியாக முடிவுக்கு கொண்டுவந்தன.

சித்ரா டீச்சர் குழந்தை பெற்றுக்கொள்ள இரண்டு மாதம் விடுறை பெற்றுக்கொண்டதும் அவருக்குப் பதிலாக லீவ் ப்ளேஸ் புது டீச்சர் அமுதா பாடம் நடத்த வந்தார்கள். கரும்பலகையில் ஏழு எட்டு எழுதும் போதும் வெட்கப்பட்டுக் கொண்டே வகுப்பெடுத்தார்கள். ஆண் பிள்ளைகளைக் கண்டிக்கவும் தண்டிக்கவும் கை நீட்டி அடிக்கவும் ரொம்பவும் சங்கடப்பட்டார்கள். கோபத்தில் மேசையை அடித்தும் தரையை ஒற்றைக்காலால் உதைத்தும் அதிருப்தியை வெளிப்படுத்தும் போது இடையிலும் நெஞ்சிலும் சதை அதிர்வதைக் கண்டான் பாண்டி. திடுக்கிட்டான். ஒருமுறைக்கு பிறகு லீவு வேலை முடிந்து போகும்வரை டீச்சர் கோபப்படும் போதெல்லாம் பார்வையை வேறுபக்கம் திருப்பிக் கொண்டான். ஆனாலும் ரூபினா அக்கா கல்யாணம் அவன் மன உறுதியைக் கடுமையாகக் குலைத்துப்போட்டது.

பனைமரக் காட்சிகள் அறுந்துவிட்ட பிறகு, பரிட்சை முடிவு அவன் தலையில் ஊமை பூதமாக ஏறி அமர்ந்துகொண்டது. அக்காவிடமாவது

வெளிப்படையாகப் பேசிப் பகிர்ந்துகொள் என்று அவன் உள்ளுள்ளம் உணர்த்தியது.

ரூபினா அக்காள் கல்யாணம் அவளைப் பெண் பார்க்க மாப்பிள்ளை வந்த நாளிலிருந்தே பரபரப்படைந்துவிட்டது. நாலு தெருக்களும் நானூற்றி இருபது வீடுகளும் விதவிதமான செய்திகளை குசுகுசுத்துக் கொண்டன. ரூபினா அக்காள் ஒத்தைக்கொரு பெண் என்பதால், நகை கிலோ கணக்கிலும் ரொக்கம் லட்சக்கணக்கிலும் வரதட்சணையாகக் கொடுக்கவிருப்பது பலரையும் மூக்கில் விரலை வைக்க வைத்தது. வழக்கமாக கல்யாணம் எவ்வளவுதான் சீரும் சிறப்புமாக நடைபெற்றாலும் 'பட்டுக்கட்டு' எளிமையாகத்தான் நடக்கும்.

ரூபினா அக்காள் 'பட்டுக்கட்டு' நிகழ்ச்சியோ அமர்க்களப்பட்டது. வாசலில் பந்தல் போட்டு வாழை மரங்கள் கட்டவில்லை, லவுட் ஸ்பீக்கர் பாடவில்லையே தவிர சராசரி கல்யாணங்களை விட விமரிசையாக நடந்தது. கோட்டை போல பரந்து விரிந்த வீடு கூட்டத்தை சமாளிக்க முடியாமல் திணறியது. மாப்பிள்ளை வீட்டு வழியில் ஐந்து மேக்ஸி கேப் வேன்கள் நிறைய ஆட்கள் வந்திருந்தார்கள். மாப்பிள்ளை சுமோ காரில் வந்திருந்தார். உள்ளூர் வரலாற்றிலேயே முதல்முறையாக 'பட்டுக்கட்டு' நிகழ்ச்சியில் கோழி பிரியாணி போட்டது எல்லோரையும் கவர்ந்திழுத்து விட்டது. மேலைப்பாளையத்திலிருந்து பிரியாணி சமைப்பதற்கு திறமையான தம் பிரியாணிக்காரர்கள் வரவழைக்கப்பட்டிருந்தனர். நூறு கிலோ இங்கிலீஷ் கோழி இறைச்சி வாங்கப்பட்டதாகப் பேச்சு.

அது ஒரு பள்ளி விடுமுறை நாள் என்பதால் பாண்டியும் ரூபினா அக்காள் வீட்டுக்குப் போயிருந்தான். நடுவில் நான்கு தூண்களைக் கொண்ட, மண்டபம் போன்ற விசாலமான வெளியறையில், நடுவீட்டு வாசலுக்கு வலது பக்கம் ஈசான மூலையோரம் மாப்பிள்ளையும் பொண்ணும் நாற்காலியில் அமர்ந்திருந்தனர்.

பாண்டி வைத்த கண் வாங்காமல் மாப்பிள்ளையையும் பொண்ணையும் வெகு நேரம் வெறித்துப் பார்த்தபடி நின்றிருந்தான். நேற்று வரை சாதாரணமாக இருந்த ரூபினா அக்காள் இப்போது அவன் கண்களுக்கு ரொம்ப ரொம்ப அழகாகத் தோன்றினாள். கட்டியிருந்த பளபளப்பான பட்டுச் சேலையில் அவள் தோற்றம் கண்ணாடியில் செய்த வாடாமல்லிப் பூவைப்போல் மின்னியது. கழுத்திலிருந்து வயிறு வரை நெளுநெளு வென்று சங்கிலிகளும் அட்டிகைகளும் தங்கத்தில் கண்ணைப் பறித்தன. ஊரிலேயே அழகான பெண் ரூபினா அக்காள்தான் என்று தோன்றிய மறுகணமே இல்லையில்லை அமலா அக்காதான் என்று தனக்குத் தானே ஊர்ஜிதப்படுத்திக் கொண்டான். 'ம்... இவ்வளவு சின்னப் பெண்ணுக்கு இவ்வளவு சீக்கிரமா கல்யாணமா' என்றொரு சிறிய எண்ணம் வேதனையா வருத்தமா என்று துல்லியமாக அடையாளப்படாமல் தோன்றி மறைந்தது.

விருந்து ஆரம்பிப்பதற்கு சற்று முன் பங்குத் தந்தை வந்தார். கண்கள் மூடி சில நிமிடங்கள் ஜெபித்து, சிலுவைக் குறியிட்டு, புனித நீர்த்தம் தெளித்து, திருமணமாகப் போகும் மணமக்களையும் தின்று தீர்க்க விருக்கும் கோழி பிரியாணியையும் ஆசி செய்து விருந்தைத் தொடங்கி வைத்தார்.

முதலில் மாப்பிள்ளை வீட்டார் பந்தி முடிந்து புறப்பட்டார்கள். பின்னர் உள்ளூர் பந்தி ஆரம்பித்தது. பிரியாணி வாசனையின் காரண மாகவோ என்னவோ பாண்டிக்கு விஷேசமாக பசித்தது. ஆனாலும் முண்டியடித்துக்கொண்டு பந்திக்கு முந்த விருப்பமில்லை. கூட்டம் குறையட்டுமென்று ஓரமாய் கிடந்த மடக்கு நாற்காலியில் அமர்ந் திருந்தான்.

பெண்களுக்கும் ஆண்களுக்கும் வரிசை தனித்தனியாக பரிமாறி இரண்டோ மூன்றோ பந்திகள் முடிந்திருந்தபோது மேற்குத் தூண் ஆண்களின் வரிசையில் பாதி இடம் காலியாக இருந்தது. சாப்பிடக் காத்திருந்த இளம் பெண்கள் ஆண்கள் பாதி உள்ள பந்தியில் தொடர்ச்சி யாக அமர வெட்கப்பட்டனர். வயதுக்கு வந்த ஆண்களையும் பெண் களையும் இணைக்க இடையே ஒரு சிறுவனோ சிறுமியோ தேவை.

நாற்காலியில் அமர்ந்து பராக்கு பார்த்துக்கொண்டிருந்த பாண்டி யின் முன் வந்து நின்ற பிரேமா ராணி அக்காள் ''பாண்டி சாப்பிட்டாச்சா'' என்று கேட்டாள். ''இல்லை'' என்ற தலையாட்டினான். ''வாடா தம்பியா பிள்ள சாப்பிடுவோம்'' என்றவள் பாண்டி நிதானிக்கும் முன் அவன் கையைப் பிடித்து தரதரவென்று இழுத்துச் சென்று, ஆண்கள் வரிசையில் அவனை அழுத்தி உட்கார வைத்து அவனருகே அவளும் அமர்ந்து கொண்டாள். அவளைத் தொடர்ந்து மற்ற பெண்களும் வெட்கமும் வேகமுமாக வந்து அமர்ந்தார்கள். பாண்டி சங்கோஜத்தில் நெளிந்தான். என்னதான் அவன் அரை டவுசர் அணிந்திருந்தாலும், அவர்கள் எடை போடும் அளவுக்கு தன்னை அவன் சின்னப் பையனாகக் கருதவில்லை. ஆண்கள் பெண்கள் வரிசையை இணைக்கும் இந்த ரெண்டும்கெட்டான் பதவியை, பந்தியில் அவனுக்கு நேர்ந்த பயங்கரமாகவே எண்ணி மனம் கூசினான். அங்கிருந்து எழுந்துவிடலாம் என்ற முடிவுக்கு அவன் வருவதற்குள் இலை போட்டு தண்ணீர் வைத்து விட்டார்கள். முகம் வாடியது. தலை தொங்கிவிட்டது. 'இவ்வளவு சின்னப் பயலுக்கெல்லாம் எதுக்கு சிக்கன் பிரியாணி' என்ற வெறுப்பில் பசியும் ஒதுங்கிச் சென்று விட்டது.

கண்ணாடி வளையல்கள் 'கிணிங்'கென சிணுங்க பிரேமா ராணி அக்காவின் இடது கை பாண்டியின் வலது தொடைமேல் விழுந்து விரல்களால் ஒரு கிள்ளுக் கிள்ளியது. வலியில் துடித்த பாண்டியின் உடல் அதிர்ந்து அடங்கியது. தேள் கொட்டியது போலொரு பிரமை. பாண்டி நிமிர்ந்து பிரேமா ராணி அக்காள் முகத்தைத் திகைப்போடு பார்த்தான்.

அவள் கண்களில் குறும்பு கொப்பளிக்க ''அக்காகூட உக்காரதுக்கு உனக்கு வெக்கமா இருக்கோ? பெரிய மனுஷனாயிட்டியோ'' செல்லமான அதட்டலாகக் கேட்டாள். அவள் வாய் பேசிக்கொண்டிருக்கும்போது வலி நிவர்த்தி செய்வதுபோல் அவளது கை அவன் டவுசர் விளிம்பு வரை மிருதுவாக வருடிவிட்டது. பின் 'கிணிங்' ஓசையுடன் திரும்பிப் போனது. பாண்டிக்கு உடல் முழுவதும் மயிர்க்கூச்செறிந்தது. தொடை ரோமங்கள் நட்டுக்குத்தி எழுந்து நின்றன. பாண்டிக்கு அடிவயிற்றில் புளிப்பு திரவம் சுரந்து வாந்திபோல குமட்டிக்கொண்டு வந்தது. தண்ணீர் குடித்து மட்டுப் படுத்தினான். இப்போது சாமர்த்தியமாக யாருமறியாமல் அடித்தொடை யில் மீண்டும் கிள்ளல். பாம்பு கொத்தியது. தொடர்ந்து வலி நிவாரணி. உடலில் வீணான வெப்பம் பரவியது. நரம்புகளில் பாயும் ரத்தத்தின் சீற்ற ஓசை செவிகளில் சன்னமாகக் கேட்டது. கூச்சம், பயம், தடுமாற்றம் எல்லாமுமாகச் சேர்ந்து பாண்டியை மூழ்கடித்தது. அவனது தொட்டாற் சிணுங்கித்தனத்தை ரசித்த பிரேமா ராணி தலை கவிழ்ந்திருந்த பாண்டியை எறஇறங்கப் பார்த்தாள். பாண்டியின் தொடைகள் அவனுக்கே விகாரமாகப் பட்டன. சம்மணமிட்டு அமர்ந்திருப்பதால் அரை டவுசர் கால் டவுசராக குறைந்து போயிருந்தது. கண்ணில் பட்ட காட்சியெல்லாம் வீங்கிப் பெருத்து வந்தது. தரையில் விரித்திருந்த வாழையிலை அரையடி உயரம் அந்தரத்தில் மிதந்தது. அதை பழைய நிலைமைக்கு இறக்கி வைக்க முயன்று இலையில் வீணாய் ஒருமுறை அடித்துக்கொண்டான். பெண்கள் வரிசையிலிருந்து அர்த்தமற்ற சிரிப் பொலிகள் திடீர் திடீரென்று வெடித்து அடங்கின.

பிரியாணி வந்தது. ''தம்பிக்கி அள்ளி வைங்க. வளருத பிள்ள'' என்றாள் பந்தி பரிமாறுபவரிடம் பாண்டி முகத்தைப் பார்த்தபடி. பாண்டி இலைக்கு குறுக்கே கையை நீட்டி ''கொஞ்சமா போதும்'' என்றான். குரல் தெளிவாக வெளிப்படவில்லை. ''கோபமா'' என்றபடி மீண்டும் ஒருமுறை பாம்பு தொடைக்கடியில் செல்லமாகக் கொத்தி விட்டுப் போனது.

பிரேமா ராணி அக்காள் இவ்வளவு அழிச்சாட்டியக்காரியாக இருப்பாள் என்று அவன் கற்பனைகூட செய்து பார்த்ததில்லை. ''வயசு கூடிக்கிட்டே போவுது, பாவம் இந்தப் புள்ளைக்கு கல்யாணம் காட்சினு ஒண்ணும் அமைய மாட்டேங்குதே''னு யாராவது அவளுக்காகப் பரிதாப் படும்போது அவர்களோடு சேர்ந்து பாண்டியும் பரிதாபப் பட்டிருக் கிறான் பல சந்தர்ப்பங்களில். எப்போதாவது இடுப்பில் நிறை குடத் துடன் அவள் தெருவில் எதிர்ப்படும் சமயங்களில் நடந்தபடியே குட்டிக் குட்டிப் பேச்சுக் கொடுப்பாள். பெரும்பாலும் பாண்டியிடம் அதற்குப் பதிலிருக்காது. குடத்து வாயிலிருந்து கொஞ்சம் நீரள்ளி அவன் மேல் தெளிக்காமல் விடமாட்டாள். பாண்டியும் கோபப்படுவதில்லை; 'பாவம்' என்ற பெருந்தன்மையோடு சிரித்தபடி கடந்து போய்விடுவான்.

''என்னடா பருக்கையை எண்ணிக்கிட்டிருக்கே…'' என்றவள் அவன் பக்கம் சாய்ந்து குரலைக் கொஞ்சம் தாழ்த்தி ''டவுசர் பட்டனை அவுத்து விட்டுக்க. அப்பத்தான் நிறைய சாப்பிடலாம்'' என்றாள். பாண்டி பீதியில் குறுகிப் போனான். 'டவுசரை கவனித்து விட்டாளோ.' அவனை அவள் செய்யச் சொன்னதை அத்துமீறி அவளே செய்து விடுவாளோ என்று அஞ்சினான். பிரேமா ராணி அக்காள் முகத்தை பரிதாபமாக ஒருமுறை பார்த்தான். கண்ணை இருட்டிக்கொண்டு வந்தது. சுற்றிச் சூழ என்ன நடக்கிறது என்ற பிரக்ஞையை அவன் இழந்து வெகு நேரமாகியிருந்தது. காய்ச்சல் கண்டது போல் உடல் சோர்வடைந்து வந்தது. சோற்றைப் பிசைந்து வேகவேகமாக சாப்பிட்டு முடிக்க எத்தனித்தான். எண்ணிய வேகத்தில் செயல்பட முடியவில்லை. தண்ணீரை எடுத்து மடக்கு மடக் கென்று குடித்ததான். ''கறியைத் தின்னு. அதுதான் சத்து. உடம்பு கிண்ணுனு வளரும்'' ஒரு துண்டு இறைச்சியை எடுத்து அவன் இலையில் வைத்தாள். பெண்கள் வரிசையில் சிரிப்பொலி வெடித்து அடங்கியது. ஒருத்திக்கு புரையேறியது. யாருக்கென்று அவன் திரும்பிப் பார்க்க வில்லை. ''தின்னுப்போ'' அவள் கெஞ்சலாக கூறியபடி அவன் வலது தொடையின் கீழே வருடிக் கொடுத்தாள். அந்த அவஸ்தையிலிருந்து விடுபடும் அவசரத்தில் அவன் இலையில் வைத்த கறித்துண்டை எடுத்து வாயில் போட்டு சவைத்தான். பெண்கள் வரிசையில் மீண்டும் சிரிப் பொலி சற்றே தூக்கலாக வெடித்து அடங்கியது. பிரேமா ராணி அக் காளும் அவர்களோடு சேர்ந்து சிரித்தாள். சிறிது நேரம் போக அவன் காதருகே சாய்ந்து தாழ்ந்தகுரலில் அவள் கேட்டாள் ''நீ சாப்பிட்டது என்ன தெரியுமா?'' பாண்டி மௌனமாக சோற்றைப் பிசைந்துகொண்டிருந் தான். அவளே சொன்னாள். அதைக் கேட்டதும் பாண்டிக்கு அழுகை முட்டிக்கொண்டு வந்தது. அடக்க முடியாமல் இலையை மூடி வைத்து விட்டு பந்தியிலிருந்து எழுந்து வேகமாக கை கழுவும் இடத்துக்கு வெளி யேறினான். அதற்குப் பிந்திய நாட்களில் சில சந்தர்ப்பங்களில் அவள் பாண்டியிடம் 'பூலாம்பட்டி' எப்படி இருந்துச்சி என்று கேட்டு கண்ண டித்து பரிகாசம் பண்ணினாள்.

அப்புறம் கல்யாணத்துக்கு முதல்நாள் நடந்த அந்த சம்பவம் பாண்டியை உடலளவிலும் மனதளவிலும் இரவு பகல் பேதமின்றி இம்சைப்படுத்திக் கொண்டிருந்தது. இதையெல்லாம் பாண்டி அவனுக் குள்ளே புதைத்துவைத்துக் கொண்டான். அவன் சோர்வைக் கண்டு அமலா அக்கா எவ்வளவுதான் கடிந்து கேட்டாலும் ஆறறிவில் ஓரறிவு எங்கோ தவறி விழுந்து தொலைந்துவிட்டது என வெட்கமின்றிக் கூறி தன்னை முட்டாள் என்று ஒப்புக்கொள்ளத் தயாராக இருந்தானே தவிர ஏழாவதாக ஒரு அறிவு முளைத்திருக்கிறது என்ற உண்மையைக் கூற கூச்ச மாக இருந்தது.

அன்று மாலையில் அமலா அக்காவும் பாண்டியும் மொட்டை மாடியில் இருந்தனர். காற்று வாங்கியபடி மெதுவாக ஊஞ்சலில் ஆடியவாறு காப்பி குடித்துக் கொண்டிருக்கும்போது அவள் கேட்டாள் ''என்ன ஆச்சி உனக்கு? மார்க்கெல்லாம் எங்க மாடு மேய்க்க போச்சி?''

சங்கடத்தில் நெளிந்து கையைப் பிசைந்து தலையைச் சொறிந்து சமாளிக்கப் பார்த்தான். பதில் கிடைத்ததுபோல் சிரித்தபடி ''அடுத்ததுல நல்ல மார்க் வாங்கிடுறேங்கா'' என்றான்.

''இந்த பரிட்சையில என்னாச்சினு கேட்டேன்?''

வேறு வழியின்றி தயங்கி மிகத்தயங்கி தலையைக் குனிந்து கொண்டு ''மனசு சரியில்லக்கா'' என்றான்.

''என்ன செய்யுது?''

''ரூபினா அக்கா கல்யாணத்தோட இருட்டுல யாருமில்லாத இடத்துல பிரேமா ராணியக்கா என்னிய கட்டிப்பிடிச்சு முத்தம் கொடுக்க வந்தாக்கா...'' பாண்டி பதற்றத்தோடு சொல்லிவிட்டு குனிந்த தலை நிமிராமல் நின்றான்.

ஊஞ்சல் நின்றது. சிறிது நேர மௌனத்துக்குப் பிறகு தணிந்த குரலில் கேட்டாள் ''நீ என்ன பண்ணுன?''

''நான் ஒண்ணும் பண்ணல. சும்மா நின்னேன்'' தலையை லேசாக உயர்த்தினான்.

'சட்'டென்று அவன் கன்னத்தில் அறை விழுந்தது. நிலைகுலைந்து போனான். படிக்கட்டுகளில் கோபமாக இறங்கிப் போனாள்.

அந்த முறை அவனிடம் சொல்லாமலே நாகர்கோவிலுக்குப் போய் விட்டாள். பாண்டி வருத்தத்தோடு திரிந்தான். ஒரு வாரத்தில் அமலா அக்காவிடமிருந்து மன்னிப்பு கேட்டு கடிதம் வந்தது. அதுதான் அவனுக்கு அவள் எழுதிய முதல் கடிதம்.

☆☆

மேகம் தழுவிய வான்விழியே
உன் தனிப்பெரும் வியக்தியைத்
துக்கம் தீண்டியதெங்ஙனம்?
எதற்காக இந்தப் பார்வை?
வேறு எதற்காக இந்தச் சலனம்?
அன்பான ஒரு வார்த்தைக்காகவா?
ஆறுதலான ஒரு தொடுகைக்காகவா?
மனம் குளிரும் ஒரு பாராட்டுக்காகவா?
கவனி,
உனக்குக் கீழே
எவ்வளவு கீழே
அவை
ஒரு நதியென ஓடிக் கொண்டிருக்கின்றன!

## 1
## மெசியாவின் காயங்கள்

*சொற்களிலிருந்து அர்த்தங்கள் மௌனத்துக்குத் திரும்பும் வழி இது. வெளிச்சம் துளிர்த்திருக்கிறது. மற்றெந்த நாளைவிடவும் நிதானமாக இளங்காலைக்குள் திணிக்கப்படுகிறேன். சுகம்போல் இருக்கிறது. நிற்கும் புறப்படும் பேருந்து வாசல்களில் படிக்கட்டுகளைப் பார்க்க முடிகிறது. பெரியவர்களும் குழந்தைகளும் எதிரெதிர் உலகங்களிலிருந்து கைகளைப் பற்றியவாறு நடக்கிறார்கள். பயணங்களின் வரப்புகளில் முன்னே கூடை பொருத்திய சைக்கிள் செலுத்தும் பெண் எவ்வளவு சிறுமியாக இருக்கிறாளோ அவ்வளவு அழகான வண்ணத்துப்பூச்சி அவளைப் பின்தொடர்கிறது. வழியோரத்து மரங்களிலிருந்து உதிர்கின்றன இன்றைய தாளங்கள். அதிகரித்து வருகிறது முன்னறிமுகமில்லா ஒரு புன்னகைக்கான நிச்சயம். நீரில் வனைந்த பாத்திரத்திலிருந்து இந்நாளை இன்னொரு பாத்திரத்தில் ஊற்றி மாற்றுவதுபோல் கொட்டத் தொடங்குகிறது மழை.*

☆☆

பெரியப்பா வீடு முரட்டு வீடு. சுண்ணாம்பு சாந்து செங்கல் ஆற்று மணல் கலந்து, சிமிந்து பரவலாவதற்கு முன்பே கட்டப்பட்டது. தொலைவிலிருந்து பார்க்கும்போதே திண்ணைகள் வெறுமையாக இருந்தன. தாழ்வான அகலமான வாசலுக்கு மீசை வைத்தாற்போன்ற திண்ணைகள். குழந்தைகள் உறக்கத்தில் புரண்டு விழுந்தால் மூக்குடைந்து போகக் கூடாது என்பதை மனத்திற்கொண்டு கட்டப்பட்டவை.

பெரியப்பாவின் வீட்டை அடைந்ததும் வாசலில் நின்று ''பாட்டியோ...'' என்று சற்றே கேலியாகக் குரல் கொடுத்தான். வீட்டில் எத்தனை பேர் இருந்தாலும் வெளியிலிருந்து உள்ளே நுழைபவர்கள் இப்படித்தான் முறையோடு ஆரம்பிக்க வேண்டும், இல்லையென்றால் தெய்வம் நின்று கொல்லும் என்பதற்கேற்ப சேசுமரியாயி பாட்டி மெது மெதுவாக சிறு தாமதத்திற்குப் பிறகு பிறத்தியாருடைய ஒவ்வொரு பேச்சுக்கும் செயலுக்கும் மோசமாக எதிர்வினையாற்றுவாள். பூமி சுற்றிக்கொண்டிருக்கிறது என்று சொன்னால் 'மயித்துக்குள்ள சுத்திக்கிட்டிருக்கு... அது புரண்டுகிட்டுலா கெடக்கு' என்பாள்.

''யார்யா...?'' ''நான்தான் பாட்டி'' என்றபடியே வீட்டுக்குள் போனான். கதவுக்குப் பின்னால் கிடக்கும் கயிற்றுக் கட்டில்தான் பாட்டிக் கென்று பதிவுபட்டது. அதில் அமர்ந்திருந்த பாட்டி முக மலர்ச்சியோடு வரவேற்றாள். ''நீதான் வேற ஆளு மாதிரி வெளிய நின்னுக்கிட்டு தொண் டைய நிமுத்திரியாக்கும் '' என்றாள், முகத்தை செல்லமாகச் சுளித்தபடி. நெற்றிக்கோடுகள் உச்சிக்கேறும் படிக்கட்டுகளாக மாறின. பாட்டியின் குரலைக் கேட்டு சமையற்கட்டு வாசலிலிருந்து தலையை வெளியே நீட்டிய பெரியம்மா ஒரு சிரிப்புடன் அதே வேகத்தில் உள்ளே இழுத்துக் கொண்டாள். ''இருய்யா'' பாட்டி எதிரே கிடந்த கட்டிலைக் காட்டினாள். அமர்ந்தான். கட்டிலில் பெரியப்பாவின் மலையூர் மம்பட்டியான் கருப்புப் போர்வை மடிக்கப்படாமல் சுருங்கிக் கிடந்தது. கையில் காப்பி தம்ளரோடு வந்த பெரியம்மா பக்கத்தில் வந்து ''இந்தா'' என்றாள். தான் உத்தரவிடாமல் வந்துவிட்ட காப்பிக்காக ஒரு கணம் பாட்டி துணுக் குற்றாலும் ''காப்பி குடிப்போ'' என்று ஆலோசனை கூறி சமாளித்துக் கொண்டாள். ''அமலா அக்கா வந்துருக்காளோ'' பாண்டி பெரியம் மாவைக் கேட்டான். ''ஆமாப்போ. குளிச்சிக்கிட்டிருக்கா.'' சமைய லறையில் ஏதோ வேலை பெரியம்மாவை இழுத்துச் சென்றது. ''பாட்டி, காப்பி குடிச்சாச்சா?'' ஒப்புக்கு கேட்டு வைத்தான். ''சவத்தப் போட்டு... வெறும் வயித்துலயா வெந்நிய ஊத்துவா!'' என்றாள் சற்றே எள்ளலாக. காப்பி இனிப்பு அதிகமாகவும் சூடு குறைவாகவும் இருந்தது. அக்கா குளித்துவிட்டு வரும்வரை ஊதி கொஞ்சம் கொஞ்சமாக காப்பியை உறிஞ்ச வேண்டுமென்று முடிவெடுத்தான். பாட்டி விடவில்லை. ''பாண்டிக்கி இன்னைக்கி பள்ளியோடம் இல்லயா'' என்றாள். ''அவன் எதுக்கு பள்ளிக்கூடம் போவணும், காலேஜில்லா படிக்கான்'' சமையற் கட்டிலிருந்து பெரியம்மா சத்தமாகச் சொன்னாள். ''வும்... அதான் காலேசி'' என்றாள் பாட்டி. ''நாளைக்கி போவணும்'' என்றான்.

சுவரில் வரிசையாக மாட்டப்பட்டிருந்த புகைப்படங்களைப் பார்வையிட்டான். ஏறக்குறைய எண்ணூறு தடவை பார்த்ததுதான். ஆனாலும் இன்னும் பார்த்தான். அக்காமார்கள் கல்யாண போட்டாக்கள் சட்டம் பளபளக்க புதுசாக இருந்தன. பெரியப்பா வாலிபத்தில் தன் நண்பர்களோடு கூடி நின்று எடுத்துக்கொண்ட கருப்பு வெள்ளைப் புகைப்படம் எப்போது பார்த்தாலும் சின்ன சிரிப்பை உண்டாக்கியது. தோசைக் கரண்டிகளை நிற்கவும் உட்காரவும் வைத்தது போல் அவர்கள் தோற்றமளித்தார்கள். எல்லாருமே சட்டைக் கையை உருட்டிச் சுருட்டி மேலே ஏற்றியிருந்தார்கள். கைகளைப் பொத்தியிறுக்கிப் பிடித்து புஜங் களை விடைக்க விட்டிருந்தார்கள். தலையில் கூடை கூடையாக ரோமம் முளைப்பாரியாக வளர்ந்திருந்தது. காமிரா ஒரு ஆட்டின் தொடைச் செப்பை போலவும் அவர்கள் பசித்த வேட்டைநாய்கள் போலவும் கண் களில் உறுமினார்கள்.

புதுநன்மை போட்டோவில் அக்கா எவ்வளவு சின்னப்பெண்ணாக இருக்கிறாள்! எப்படி வளர்ந்துவிட்டாள்! கண்களை வைத்துதான் கண்டு பிடிக்க வேண்டியிருக்கிறது.

*பிறை செழிக்காத இரவுகளில் பிசைந்தூட்ட ஊட்ட முற்றத்திலிருந்து நிலா தின்ற பிள்ளையின் தூரப் பார்வையில் நின்று சிரித்தது பழகிய விழியொன்று. தாய்போல் பார்த்திருந்தது ஒரு நாள் பிரிவைக் கோடு கிழித்து நாய்போல் பாய்ந்தது. திடுக்கிட்டுத் திரும்ப இன்மைகள் யாவும் நிறைந்து வழிய ஆறுதலாய் அருகே இருந்தது அவள் முகம்.*

**ஊ**ஞ்சலில் ஆடிக்கொண்டே அமலா ஆவலோடு 'பளிக்கறை'யை வாங்கிப் பார்த்தாள். திரும்பத் திரும்ப கவிதைகளை வாசித்தாள். பாண்டி அவளையே பார்த்தவாறிருந்தான். குளித்த ஈரம் இன்னும் மிச்சமிருந்தது. பனிமலர் போலும் இளவரசி போலும் தோன்றினாள்.

கல்லூரியிருந்து மாணவர்களால் நடத்தப்பட்டு வந்த 'பளிக்கறை' இதழில் தொடர்ந்து எழுதிவந்தான். அவனது முதல் படைப்பு அச்சானது அமலதாசன் என்ற பெயரில். கவிதை வெளியான செய்தியை அமலா அக்காவுக்கு கடிதத்தில் தெரிவித்திருந்தான்.

''கவிதை நல்லாத்தான் இருக்கு. கவிஞர் பேரு நல்லா இல்ல'' என்றாள். பாண்டிக்கு தேள் கொட்டியது.

ஊஞ்சலை விட்டு எழுந்து மொட்டைமாடிச் சுவரருகே போய் நின்று வானத்தையே பார்த்தாள். குறையுற்ற பிறை நிலவம் மிதந்தது. அவள் பின்னே நின்றிருந்தான். அவனைப் பார்க்காமலே சொன்னாள். ''வேற பேர்ல எழுது. இல்லேனா உன் பேர்லேயே எழுதலாமே. இந்தப் பேரு வேண்டாண்டா.''

கெஞ்சிக் கேட்டுக்கொள்வது போலிருந்தது. பாண்டிக்கு பதில் பாவனை தெரியவில்லை. இதைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை.

வீடுகளை தெருக்களை மரங்களை கோவிலை கோபுரத்தை கோவில் புறாக்களை வெறுமனே பார்த்தார்கள். ஒலியற்ற உலகில் அவை பொருளற்ற நிழல்கள். முடியில் முறுக்கியிருந்த துண்டைப் பிரித்து கூந்தலை விடுவித்து உதறி உலர்த்தினாள்.

☆☆

*நீரால் சீரணிக்கமுடியாத சிப்பிகள் புரள்கின்றன. கர்ப்பத்தின் வேதனையைக் கரைக்கமுடியாமல் கடல் தடுமாறுகிறது. ஆமையின் பின்னங் காலில் மிதிபட்டு அழும் தானே பிறந்த குழந்தைக்கு வேறொரு பேர்தான் பொருந்துமா... கடலே போதுமா?*

☆☆

*உள்ளங்கையை படர்த்தி நீட்டி நீட்டி கெஞ்சுகிறாள் அக்காள். வெகுநோ*

மாக வீட்டுக்குள் பம்பரம் விட்டு விளையாடுகிறான் தம்பி. வெளியே மழை.

☆☆

சிலிர்க்கச் சிலிர்க்க அலைகளை மறித்து முத்தம் தரும்போதெல்லாம் துடிக்கத் துடிக்க ஒருமீனைப் பிடித்து அப்பறவைக்குத் தருகிறது இக்கடல்.

☆☆

அவன் பெயரையும் பறித்துக்கொண்டு போய்விட்டாள். இனி என்று வருவாள்? புத்தங்களைப் படிக்கும்போது அர்த்தங்களை உணராமல் வரிகளை, பக்கங்களைத் தாண்டிச்சென்று மீண்டும் பின்னே வந்தான். புது நாற்காலியிலேயே பழியாய்க் கிடந்து படித்தான்.

கல்லூரியில் இடம் கிடைத்ததுமே அப்பா, அவனுக்கே அவனுக்கென்று படிக்கவும் எழுதவும் புது மேஜை நாற்காலி செய்து தந்துவிட்டார். அதில் அமர்ந்ததுமே மனம் குவிந்து விடும், கற்பனைகள் சிறகடிக்கும். இலக்கியங்களை வாசிக்கும்போது வீடு ததும்பும். பிரிட்டோ ஆஸ்டலிலிருந்து வீட்டுக்கு வந்துபோகும் விடுமுறை நாட்களில் அதிலேயே குடியிருந்தான் பாண்டி.

ஆஸ்டல் முகவரிக்கு வந்த கடிதத்தை அமலா அக்கா அன்றே ஊரிலிருந்து எழுதி நாகர்கோவில் செல்லும் வழியில் தபாலில் சேர்த்திருப்பாள் என பாண்டி யூகித்தான். அவ்வளவு துரிதமாக அது வந்து சேர்ந்தது. அதில் விளக்கமளித்திருந்தாள். 'உன் பாச பூர்வமான முடிவில் நான் தலையிட்டு விட்டதாக நினைக்கவேண்டாம். உன் கவிதையைப் படிப்பதற்கு முன்பு நான் அதை அம்மாவிடம் அக்காவிடம் என்னுடைய தோழிகளிடம் காட்டி மகிழ்ச்சி கொள்ள நினைத்திருந்தேன். அது முடியாமல் போய்விட்டது. அமலதாசன் என்ற பெயரைப் பார்த்ததும் எனக்குள் ஏதோ மனத்தடை ஏற்பட்டுவிட்டது. என்ன காரணமென்று எனக்குத் தெரியவில்லை. நீ யாரையும் சார்ந்திருப்பது எனக்குப் பிடிக்கவில்லையோ என்னவோ! எழுதுவதை நிறுத்திவிடாதே. நீ கவிஞனாக இருப்பதில் உன்னை விட அதிக மகிழ்ச்சியடைகிறேன்.'

நேரில் ஒரு அக்காவாகவும் எழுத்தில் வேறொரு அக்காவாகவும் இருந்தாள். நேரடிச் சந்திப்புகளில் அவள் வாய்தான் பேசியது, எழுத்தில் அவள் இதயம் ஒலித்தது.

அங்கங்கு சிறு நகரங்களிலிருந்து அவ்வப்போது வரும் சிற்றிதழ்களுக்கெல்லாம் கவிதைகளை அனுப்பினான். எதை அனுப்பினாலும் அச்சானது. அவனுக்கே திகைப்பாயிருந்தது. கொஞ்சங் கொஞ்சமாகத்தான் அவனுக்கு சிற்றிதழ் பார்முலா பிடிபட்டது. இதழ்களில் சிதறிக் கிடக்கும் 'கவிதை'களைப் பார்க்கப் பார்க்க பாவமாயிருக்கும். எழுதுகிறவருக்கும் வெளியிடுகிறவருக்கும் தமிழே தட்டுப்பாடு என்பதைத்

தமிழ் மாணவனான பாண்டியால் தாங்கமுடியவில்லை. அருவியாகத் தமிழ் கொட்டிக்கொண்டிருக்க இவர்கள் ஏன் கட்டாந்தரையில் ஊற்று தோண்டிக் கொண்டிருக்கிறார்கள்?

☆☆

*ஈரம் - நீர் கொழுத்த கடல் பார் பாரென்று பரந்து கிடக்க கரை மணலில் முழமளவு குழிதோண்டிக் கண்ட ஊற்றுக் கசிவுக்காகக் கைகொட்டிக் கெக்கலிக்கிறார்கள்; வெட்கப்படுகிறேன் வாழ்வே! விழித்தபோது கலகலவென்று வகை வகையாய் வாய் கிழியச் சிரித்தாலும் உறக்கத்தில் உதிரும் சிறு புன்னகை உயிரைப் பிழிகிறதே; ஏன் வாழ்வே?*

☆☆

*புல்லின் தளிர் விரல் நுனியில் பனிக்காலம் கட்டி முடித்த கண்ணாடித் தீவுக்கு விளக்கேற்றுகிறது விடிவெள்ளியின் முகம்.*

☆☆

*வெளிநதியில் சிறகின் துடுப்பிசைத்து எதிர்வரும் வண்டை நான் கண்டுகொண்டிருப்பது எந்தப் பூவின் கனவோ.*

☆☆

அக்காவுக்குக் கடிதங்களும் கவிதைகளும் பாண்டி சளைக்காமல் எழுதினான். கடிதங்களில் கல்லூரி, படிப்பு, சுற்றுலா, புதுநட்பு, முறிவு, ஊர் செய்திகள், வீட்டு நிலவரங்களை எழுதினான். கவிதையில் மனம் முற்றிலும் வேறு உலகில் சஞ்சரித்தது.

☆☆

கல்யாணம் நிச்சயமானதுமே மெல்கி முகம் களையேறிவிட்டது. நிச்சயதார்த்தம் முடிந்ததுமே சந்தோஷமே உருவாகிவிட்டாள். மாப் பிள்ளை பார்ப்பதற்கு அழகாக இருந்தான். கப்பலில் வேலை. கோவிலில் கல்யாண அறிக்கைகள் வாசிக்கப்படுகையில் ''... இவர்களின் புதல்வி செல்வி ஜெனிட்டா மெல்கிக்கும்'' என்ற வரிகள் வரும்போது பாண்டி வினோதமான உணர்வுக்கு ஆட்பட்டான். ஒருவித ஊமைத் தடுமாற்றம் எங்கிருந்து வந்ததென்றே தெரியவில்லை.

பாண்டியும் மெல்கியும் சிறுவயதிலிருந்தே ஒன்றாகப் படித்தவர் கள். சிறுவயதில் அவளுக்கு வயிறு பானை போலிருக்கும். இதனால் எல்லோருமே அவளை 'பேத்தை பேத்தை' என்றுதான் கூப்பிடுவார்கள். அட்டண்டன்ஸ் எடுக்கும்போது மட்டும்தான் அவள் பெயர் சரியாக அழைக்கப்படும். மற்றபடி பள்ளியில் ஆசிரியர்கள்கூட 'பேக்க பேக்க முழிக்காம பாடத்தை கவனி பேத்த'' என்றே கண்டிப்பார்கள்.

அதனாலோ என்னமோ பாண்டிக்கு அவளைப் பிடிக்காது. அவளோ

பாண்டி பின்னாலேயே சுற்றுவாள். சிறுவயதில் கோபப்பட்டு இரண்டு மூன்று முறை அவனை அடித்துமிருக்கிறாள். அசங்கமாட்டான். அழவும் மாட்டான். ''நான் என்ன உங்க வீட்டுக்குள்ளயா நடக்கேன் தெருவுல தானே நடக்கேன். பாண்டி... கூண்டி...'' என்று முகத்தை நெளித்து அழகு காட்டுவாள். மீண்டும் அவன் பின்னாலேயே வருவாள். சில நேரங்களில் பாவப்பட்டு அவனையும் விளையாட்டில் அவளா அக்கா சேர்த்துக் கொள்வாள்.

ஏழாம் வகுப்பு படித்துக் கொண்டிருக்கும்போது ஒருநாள் கொஞ்சம் வெட்கத்தோடு வந்து ''நான் உன்னிய ஐ லவ் யூ பண்ணுறேன். நீ என்னிய லவ் பண்ணுறியா'' என்று தடாலடியாகக் கேட்டாள். பாண்டிக்கு பாதி புரிந்தது; மீதி புரியவில்லை. ஆனால் 'லவ்' என்றால் கெட்ட வார்த்தை என்கிற நினைப்பில் ''இல்ல பேத்த'' என்றான் அவசரமாக. மெல்கி அவனை முறைத்துப் பார்த்து ''அப்படினா நீ ஏழாம் கிளாஸ் பெயிலுதான் ஆவ'' என்று சபித்துவிட்டு கோபமாய்ப் போனாள்.

''நான் உன்ன லவ் பண்ணுறேன். நீ என்னிய லவ் பண்ணுறியா?''

''பண்ண மாட்டேன் பேத்த.''

''அப்போ நீ எட்டாம் கிளாஸ் பெயில்தான் ஆவே!''

மெல்கி எட்டுக்கு மேல் படிக்கவில்லை. பாண்டி பள்ளிக்குப் போகும்போது யாருமில்லாத நேரம் எதிர்ப்பட்டால் அதையேதான் கேட்பாள் - மறுப்பான்.

''பாதி வழியில உன் சைக்கிள் டீப் வெடிச்சிரும் பாரு.''

திருநாள், கிறிஸ்மஸ், ஈஸ்டர் சமயங்களில் விடமாட்டாள்.

''இந்த கிறிஸ்மஸ்க்கு உன்னிய பாலன் பிறப்பு பாக்க விடாம கால்ரா காய்ச்சல் வந்துரும் பாரு.''

''திருவிழாவுக்கு நீ புதுச்சட்டை போட முடியாத அளவுக்கு முதுகுல பொறப்பாடு வந்துரும் பாரு.''

கல்யாணத்துக்கு இரண்டு நாள் இருக்க மெல்கி பாண்டி வீட்டுக்கு வந்திருந்தாள். வயதுக்கு உரிய அழகோடும் வாளிப்பாகவும் தோன்றினாள். பாண்டி அப்போது இரண்டாம் ஆண்டு இளங்கலை படித்துக் கொண்டிருந்தான். வீட்டில் அம்மாவும் பாட்டியும் இருந்தார்கள். எல்லோரிடமும் கொஞ்சம் நேரம் கலகலப்பாகப் பேசிவிட்டு பாண்டியைப் பார்த்து அதட்டும் குரலில் ''பாண்டி, தாலிகட்டு முடிஞ்சதும் பந்தல்ல மாப்பிள்ளையையும் பொண்ணையும் பிள்ளைங்க வாழ்த்திப் பாடு றதுக்கு எனக்கு ஒரு கல்யாணப்பாட்டு எழுதித் தரணும். மாட்டேன்னு மட்டும் சொன்னே...'' உதட்டைக் கடித்து சுட்டு விரலை உயர்த்தி தலையைச் சாய்த்து சபிக்கப்போவது போல் கண்களை விரித்தாள். என்ன நினைத்தாளோ கலகலவென சிரித்துவிட்டாள். பாண்டியும் சிரித்தான்.

அவனுக்கு மட்டும் கண்கள் ஈரமானது.

எழுதும்போது ''பொண்ணுக்கு மணமா பூவுக்கு மணமா'' என்று ஆரம்பித்தான் மணவாழ்த்துப் பாடலை.

☆☆

குளியல் சோப் வாசனை அறையெங்கும் அலை வீசியடித்தது. உதட்டில் கனிவான புன்னகையோடு வெளிப்பட்டாள் அமலா அக்கா. பாண்டியைக் கண்டதும் கழுத்து மானாகச் சொடுக்க வியப்பு காட்டி முகம் மலர்ந்தாள். தலையில் வெள்ளைத் துண்டுக் கொண்டை போட்டிருந்தாள். 'நல்லா இருக்கியாடா' கேட்டபடியே அவனருகே வந்தாள். பாண்டி புன்னகையோடு தலையாட்டினான். குளித்ததற்கு சாட்சியாக உடை விளிம்புகளில் ஆங்காங்கே ஈரம் நிழல் துணுக்குகள் போலிருந்தது. மின்தொற்றுபோல ஒரு குளிர்ச்சி கண் வழியாக அவனுக்குள் ஊடுருவியது. பாவாடை தாவணியைத் தவிர அக்காவிடம் பழைய அம்சங்கள் எதையும் அவன் தேட வேண்டியிருந்தது. அவன் உயரத்துக்கே வளர்ந்திருந்தாள். பூசினாற்போலிருந்தாள். முகத்தில் பெரிய மனுஷி போலொரு தோரணை. உடலால் சிந்திப்பது போன்ற நளினமும் தெளிவும். குரல் விளைந்துவிட்டது. விஷயங்களை உடனடியாக ஊகித்துக் கொள்ள விழையும் படபடப்பு கண்களில். பற்களும் சிரிப்பும் தமது நிலையில் அப்படியே இருந்தன. மற்றபடி முற்றிலும் வேறொரு பெண்ணாகத் தோன்றினாள். அந்நியத்தன்மைகளால் உண்டாகும் ஒருவித அதிர்வு அவனுக்குள் நீடித்தது.

சுவரில் சாற்றியிருந்த மடக்கு நாற்காலியைக் கட்டிலருகே பிரித்துப் போட்டு அமர்ந்தாள். ''எப்போக்கா வந்தே?'' ஏதாவது பேச வேண்டும் என்ற கடமைக்காக கேட்டது போலிருந்தது. ''நேற்று'' கொஞ்சம் இடைவெளிவிட்டு ''சாயங்காலம்'' என்றாள். ''காலையில'' கொஞ்சம் இடைவெளிவிட்டு ''வீட்டுக்கு வந்திருந்தேன்.'' அவள் பேச்சு முறை அவனை எவ்வளவு வேகமாகப் பாதித்தது என்பதை உடனே உணர்ந்து கொண்டவள் சற்றே பழைய அமலா அக்காவாக மாற முயன்றாள். ''மெல்கி வீட்டுக்கு வந்தேன். அப்படியே உங்க வீட்டுக்கும் வந்தேன். ஆமா பேத்தைக்கி கல்யாணம் முடிஞ்சிட்டாமே... ஐயயோ!'' அமலா அக்கா எப்போதுமே மெல்கி என்றேதான் குறிப்பிடுவாள். இன்று அவளே பேத்தை என்றது சின்ன அதிர்ச்சியைத் தந்தது.

''ஆமா. மாப்பிள்ளைக்கி கப்பல்ல வேலை. அம்பதுக்கு அம்பது நகை ரொக்கம்.''

''அவ உன் மேலலா ஏக்கோட்டி பிடிச்சி அலைஞ்சா?'' என்றாள் தாழ்ந்த குரலில்.

''ஏக்கோட்டியா... அவளுக்கு ஏற்கனவே ஏகப்பட்ட கோட்டி பிடிச்சிருந்தது. கப்பல் மாப்பிள என்னைக்கி கடல்ல குதிக்கப் போறானோ!''

''ச்சே... அப்படி சொல்லாதடா. நல்ல பொண்ணு'' அக்கா கெஞ்சுவது போல் முகபாவனை செய்தாள்.

சாப்பிட்டு விட்டு மாடிக்குப் போய் அவள் ஊஞ்சலில் அமர்ந்ததும், பாண்டி சமீபத்தில் அவன் கவிதைகள் வெளியான இரண்டு சிற்றிதழ்களை நீட்டினான். வாங்கிப் படித்தாள்.

''இயற்பெயர்தான்டா நல்லாயிருக்கு.''

''இல்லை. எனக்குப் பிடிச்சது அந்தப் புனைபெயர்தான்.''

''ஆனா லைசன்ஸ் கிடைக்கலியே...''

மௌனமாக இருந்தான்.

''இன்னும் சின்னப் பையனா இருக்கியேடா. அந்தப் பெயரால நிறைய சிக்கல்கள் வரும். உனக்கு இப்போ புரியாது.''

கவிதைகளில் 'மெசியா' நன்றாக இருப்பதாகச் சொன்னாள்.

உயிர் பிரியும் கணத்தில் தம் காயங்களைக் கடைசியாய் பார்வையிட்ட மெசியாவின் கண்களை பல நூற்றாண்டுகள் கழித்து இன்று சந்தித்தேன். கடற்கரையில், மடித்த கைப்பைகளுடன் சூழ்ந்து நின்ற மனிதர்களுக்கு மத்தியில் மல்லாத்தியிட்டு தன் வயிற்றில் இறங்கி முழு வட்டமடித்த கத்தியைத் தலைதூக்கி எட்டிப் பார்த்தது ஆமை.

''சிலுவைப்பாடுக்கு நிகரான வேதனை இதுல இருக்குடா. பாவம்... ஏன் தலைப்பு வைக்கல?''

''லேட்டஸ்ட் டிரண்ட்.''

''மெசியாவின் காயங்கள்னு வை.''

''நல்லாயிருக்குக்கா. புத்தகமா வந்தா இதே தலைப்ப வைக்கலாம்.''

''உன்னோட மெசியாவுக்கு காயங்கள் எத்தனைடா?''

''ஏன்? ஐஞ்சுதான்.''

''ஆறாவதா இதயத்துல காயம் பட்டுட்டாரோன்னு நினைச்சேன். மெல்கி வேற கல்யாணம் ஆகிப் போயிட்டாளே...''

''அட நீயொண்ணு! ஜாய் அக்கா மாதிரி நீயும் கிண்டல் பண்ண ஆரம்பிச்சிட்டயா?''

''இப்ப உலகமெல்லாம் ஏசுவை நோகடிக்கிறதுதான்டா எழுத்தில புது பாஷன். நல்லா புதுசா எழுதி ஜெயிக்க முடியாதவங்கள்லாம் பரபரப்புக்காக இதைப் பிடிச்சிக்கிடுறாங்க. சயன்ஸ் ஏஜுக்குப் பிறகு வாடிகனுக்கு விழுகுற அடிகளுக்கு கட்டுப்போடவே அதுக்கு நேரம் பத்தலை. இன்னும் ரத்தம் ஒழுகிக்கிட்டிருக்கு. லத்தின் அமெரிக்கர்களைத் தவிர

மேற்கே யாருக்கும் இப்ப ஏசுவை நினைக்க நேரமில்லை. அவர என்னன்னு கேக்க நாதியில்லை.''

''அக்கா நீ நிறையாப் படிச்சிட்டே!''

''இது நாலெட்ஜ் இல்ல; பெர்செப்ஷன். ஒப்பீட்டளவுல நம்மூர்ல மெசியா நிம்மதியா இருக்காரு. லூர்து மாதா பக்கத்துல நின்னு பாவப் பட்ட பக்தர்களுக்கு ஆசி வழங்கிக்கிட்டிருக்காரு.''

''நீ செல்லமா வளந்த பொண்ணு. துன்ப துயரங்கள்ல அடிபட்டா தான் உனக்கு இந்த நம்பிக்கையோட அருமை தெரியும்.''

''தெரியாதுதான். சரி, உன்னோட மெசியாவுக்கு என்ன பிரச்சனைன் னாவது தெரிஞ்சுக்கலாமா?''

''எனக்கே அது தெரியல.''

''ஊமைக்காயமா?''

☆☆

2

## அலைவளையல்

பொழுது நன்றாகப் புலர்ந்து விட்ட பிறகும் குளிர் விலகியிருக்க வில்லை. நேசமணி பஸ் தெற்கு நோக்கிச் சீறிக் கொண்டிருந்தது. பாண்டி ஜன்னலோரம் அமர்ந்திருந்தான். குளிர்ந்த காற்று முகத்தில் பரபரத்துப் பாய்ந்தது. உள்ளங்கைகளை உராய்ந்து அடிக்கடி முகத்தில் பூசியபடி சாலையோரக் காட்சிகளை ரசித்தான். மேற்கு மலையில் மஞ்சள் வெயில், முடியிலிருந்து மெல்ல மெல்ல அடிவாரத்துக்கு இறங்கி வந்தது.

முந்தைய ஃபாதர் மாற்றலாகி, புதிய ஃபாதர் ஜெகத் பிரைட் பங்குத் தந்தையாக பொறுப்பேற்றதும், குடும்ப சந்திப்புக்காகவும், வீடு மந்திரிப்பதற்காகவும் வீட்டுக்கு வந்திருந்தார். பாண்டி அப்போது வீட்டில் இல்லை. காலேஜில் இருந்தான். தமிழ் இளங்கலை, மூன்றா மாண்டு. குடும்ப உறுப்பினர்கள், தொழில் வருவாய் குறித்து விசாரித்து அறிந்துகொண்டவர் பாண்டியின் குட்டி புத்தக அலமாரியைக் குடைந் தார். தற்செயலாக கையில் சிக்கிய நோட்டுப் புத்தகத்தை புரட்டிப் பார்த் ததும் ''நைஸ் வெரி நைஸ்'' என்று முகம் மலர்ந்தார். ''இது பாடல்களா கவிதைகளா'' என்று கேட்க, அம்மாவிடம் திட்டவட்டமான பதி லில்லை. ''உங்க பையன் விடுமுறையில வீட்டுக்கு வரும்போது என்னை வந்து சந்திக்கச் சொல்லுங்க'' அப்பாவிடம் பணிவுடன் கேட்டுக் கொண்டார். ஒரு ஞாயிறு காலைத் திருப்பலி முடிந்ததும் பாண்டி ஃபாதரிடம் சென்று தன்னை அறிமுகப்படுத்தினான். அவருக்கு வயது நாற்பதுக்கு உள்ளேதான் இருக்கும்.

அவர் அவனைத் தட்டிக் கொடுத்து தோளில் கை போட்டவாறு நண் பரானார். மறு வாரம் தன் திட்டத்தைத் தெளிவுபடுத்தினார். பாண்டி எடுத்த எடுப்பில் தயங்கிப் பின்வாங்கினான். ஃபாதரின் அன்பான வற்புறுத்தலால் மறுக்க முடியாமல் சம்மதித்தான். ''எவ்வளவு நாளா னாலும் பரவாயில்லை. பாட்டு ரிக்கார்டாகி சி.டி.யா வெளிவரணும், அவ்வளவுதான்'' என்றுதான் சொல்லியிருந்தார்.

ஒப்புக்கொண்ட பிறகு பாண்டியால் பொறுமையாக இருக்க முடிய வில்லை. இரண்டு வாரம் கண்ணதாசன் தொகுதிகளில் தஞ்சமடைந்து

கிடந்தான். நம்பிக்கை வந்தது. இரவும் பகலுமாக பாடல்களுக்கான வரிகளைத் தேடித் தேடிக் கோர்த்தபடியிருந்தான். ''ஏசுவின் அற்புதங்களையெல்லாம் சொல்கிற மாதிரி ஒண்ணு, கிறிஸ்மஸ் நாளில் பாடுவதற்கு ஒண்ணு, ஈஸ்டர் உயிர்ப்புக்கு ஒண்ணு. மரிப்புக்கும் ஒண்ணு. மற்றபடி பெர்க்மான்ஸ் பாடுவாரே அதுமாதிரி பொதுவா ரெண்டோ மூணோ, போதும்.''

தண்ணீரே தண்ணீரே கானாவூர் தண்ணீரே
கல்யாணப் பந்தியிலே ரசமான தண்ணீரே
உன்னைப் போல் என்னையும்
தேவ மகன் தொடுவாரா
விஷமான என் வாழ்வு
ரசமாக மாறாதா

எனத் தொடங்கி முக்கியமான அற்புதங்களையெல்லாம் எழுதி ஃபாதரிடம் முதல் பாடலைக் காட்டினான். படித்துப் பார்த்துவிட்டு ''நைஸ் வெரி நைஸ்'' என்று அவனை ஆரத்தழுவிக் கொண்டார்.

ஏழு பாடல்கள் எழுதிக் கொடுத்துவிட்டு பாண்டி அதை மறந்து போனான். இரண்டு மாதங்கள் சென்ற பிறகு ஒரு திருப்பலி பிரசங்கத்தின் நடுவே இத்தகவலைச் சொன்னார் ''அன்பான சகோதர சகோதரிகளே! உங்களுக்கெல்லாம் ஒரு சந்தோசமான செய்தி. இன்னும் பத்து நாட்களில் 'அன்பில் உண்டோ ரகசியம்' என்ற பெயரில் கிறிஸ்தவ பாடல்கள் அடங்கிய சி.டி. வெளியாகவிருக்கிறது. இன்னும் இரண்டு தினங்களில் சென்னையில் ஒலிப்பதிவு நடைபெறுகிறது. என் இனிய நண்பர் அகஸ்டின் இசையில் லயோலா கல்லூரி மாணவிகள் பாடுகிறார்கள். இது நம் பங்கைச் சார்ந்த வறிய கிராமங்களின் மேம்பாட்டுக்காக தயாரிக்கப்பட்டுள்ளது. இதில் வரும் வருவாய் ஏழை எளிய மக்கள் நலனுக்காகச் செலவு செய்யப்படும். அனைவரும் வாங்கிக் கேட்டுப் பயனடைய வேண்டுகிறேன். இந்த அருமையான பாடல்களை எழுதியவர் யார் தெரியுமா? வேறு யாருமல்ல, உங்கள் ஊரைச் சேர்ந்த தி ஜெம் ஆஃப் மென் - பிரான்ஸிஸ் சந்தனப்பாண்டி அவர்கள்தான். இது உங்கள் ஊருக்கும் நம் பங்குக்கும் பெருமை சேர்க்கும் செய்தி என்பதில் நான் மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன்.''

ஊர் மொத்தமும் உற்சாகத்தில் திளைத்தது. குவைத்திலிருந்து திரும்பி தூத்துக்குடியில் மீன் வியாபாரத்திலிருந்த அவனது ஞானத்தந்தை ஜார்ஜ் இதைக் கேள்விப்பட்டு அன்பளிப்பாக ஒரு வாட்ச் அனுப்பியிருந்தார். பாண்டிக்கும் உள்ளூர ஒரு பெருமிதம் ஏற்பட்டது. அமலா அக்காவுக்கு கடிதத்தில் எழுதினான்.

பஸ் ஆரவல்வாய்மொழியை நோக்கி விரைந்து கொண்டிருந்தது. வெள்ளை நிறத்தில் நெடுநெடுவென வளர்ந்து கூட்டமாக நின்ற ராட்சச

மின் காற்றாலைகள், தங்கள் இறக்கைகளைப் பொறுமையாகச் சுழற்றி மெதுமெதுவாக காற்றை மின்சாரமாக்கிக் கொண்டிருந்தன. பாண்டியின் உடலே காற்றாகிப் போக உலகையே தழுவத் துடித்துக்கொண்டிருந்தான்.

'நான் உன் பாடல்களைக் கேட்க மிக ஆவலோடு இருக்கிறேன். என்னால் இப்போது ஊருக்கு வரமுடியாது. எனவே, சி.டியை நேரில் கொண்டு வா''. என்று அமலா அக்கா எழுதியிருந்தாள்.

அன்னாள் கன்னியர் மடத்தின் வாசலில் பெயரும் சிலுவையும் தரித்த ஸ்வராஜ் வேன் நின்றிருந்தது. வெயில் முழுத்துல்லியமடைந்து விட்டிருந்தது. கடிகாரத்தைப் பார்த்தான். எட்டு, பத்து.

'ப' வடிவில் இரட்டை மாடி பழுப்பு நிறக் கட்டிடம் எதிரேயிருந்தது. முகப்பு மதில் சுவர்கள் வழக்கத்துக்கு மாறாக இரண்டு ஆள் மட்டத்துக்கு உயர்ந்திருந்தது. சுவர் மேல் உடைந்த கண்ணாடித் துண்டுகள் நெருக்கமாகப் பதிக்கப்பட்டிருந்தன. சாம்பல் நீல நிறத்தில் பெரிய கேட். திட்டி வாசல் திறந்திருந்தது. உயரே பெயர்ப் பலகை. பாண்டி இங்கு வருவது இதுவே முதல் முறை. வழியிலிருந்த உற்சாகம், சாதனை மிதப்பெல்லாம் மடத்து வாசலில் அவனைக் கைவிட்டுவிட்டது.

தலைமுடியையும், தோளில் தொங்கிய பையையும் ஒருமுறை சரி செய்துவிட்டு, தயங்கித் தயங்கி திட்டி வாசலில் நுழைந்தான். பூந்தோட்டம் போலிருந்த நீள அகலமான முற்றத்தின் நடுவே செங்குத்தான பீடத்தில் இரண்டு கைகளையும் விரித்து நின்ற உலக ரட்சகர் சொரூபம் அவனை வரவேற்றது. அனிச்சையாக பிதா சுதன் போட்டுக் கொண்டான். 'ப' வடிவ வராந்தா வெறிச்சோடியிருந்தது. அறைக் கதவுகள் பாதியாகத் திறந்திருந்தன. அறைகளுக்குள் சலனமிருந்தது. ஆனாலும் அடித்துத் துவைத்துப் போட்ட அமைதி.

செடி மறைவிலிருந்து ஒரு உருவம் எழுந்தது. நடுத்தர வயது சிஸ்டர். பாண்டியைக் கண்டதும் அவள் எதிர்பார்த்தது போல் அவள் முகத்தில் ஏதொரு மாற்றமும் ஏற்படவில்லை. நிதானமாக அவனருகே வந்தவள் கேட்டாள் ''யாரு?'' ''அமலா அக்காவைப் பார்க்கணும்'' ''நீ யாரு?'' ''அவுங்க தம்பி.'' ''எங்கே இருந்து வாற?'' பாண்டி பதில் சொல்ல வாயெடுக்கும் முன் நாலாவது அறையின் வாசலில் அக்காவைப் பார்த்துவிட்டான். கூந்தலைப் பின்னிச் சரிபண்ணியபடியே, வாயில் க்ளிப்போ, ஹேர் பின்னோ கடித்தபடி கேட் வாசலை எட்டிப் பார்த்தவள் பாண்டியைக் கண்டதும் உற்சாகம் பொங்க கை காட்டினாள். ''அதோ அந்த அக்காவைதான் சந்திக்கணும்.'' பாண்டி கை நீட்டினாள். இடது பக்க வராந்தாவில் கிடந்த நாற்காலிகளைக் காட்டி, ''அப்படி உக்காரு'' குரலில் எந்த உணர்ச்சியும் இல்லாமல் சொல்லிவிட்டு தன் வேலையை விட்ட இடத்தில் தொடரப் போனாள்.

மடத்தின் தலைவியின் முன் பாண்டி கூச்சத்துடன் கரம் கூப்பி

'வணக்கம் பாட்டி' என்று சொல்லாமல் கவனமாக ''வணக்கம் சிஸ்டர்'' என்றான் மெல்லிய குரலில். நாற்காலியில் அமர்ந்திருந்த ஃப்ளோரா பாப்டிஸ் எழுந்து அவனுக்கு ஆசி செய்ய விரும்பினார். அவசரகதியில் அது முடியவில்லை. கனத்துப் பெருத்த உடம்பு அவரைப் பாடாய்ப் படுத்தியது. பேசவும் மூச்சு விடவுமே பெரும் திண்டாட்டம். அகலமான மூக்குக் கண்ணாடி அணிந்திருந்தார். சிறிய கண்கள். சதைப் புடைப்பால் அவை இன்னும் சிறிதாகத் தோற்றமளித்தன. வாய் திறந்து குளுமையாகச் சிரித்தார். வயது எம்பதுக்குப் பக்கமிருக்கும். வாயில் எல்லா பற்களுமிருந்தன வெள்ளையாக. பாண்டியைத் தன் அருகே அமரச் செய்தார். அவன் தலையில் கை வைத்து ''எல்லாம் காட்ஸ் கிப்ட்'' என்றவாறு வாஞ்சையோடு வருடினார். அக்காளோடு பயிற்சி பெறும் பெண்கள் தலைவியின் அறை வாசலில் கொஞ்சம் நேரம் ஆவலோடு நின்றிருந்தார்கள். கல்லூரி வேன் புறப்படும் நேரமாகி விட்டதால் ''நாங்க வந்து கேக்கிறோம். ஸாரி'' என்று விடைபெற்றார்கள். அமலா அக்காவிடம் ஒருத்தி ''நீ...'' என்றாள். ''நானும் தம்பியும் ஆட்டோவுல வந்துருவோம்.''

தோட்ட வேலைக்கார அம்மாவும், சமையல்கார ஆயாக்களும் ஃப்ளோரா பாப்டிஸும் இன்னுமிரண்டு மதர் சுப்பிரியர்களும் அமலா அக்காவும் பாடல்களைக் கேட்டார்கள். பாண்டியும் அப்போதுதான் முதன்முறையாகக் கேட்டான்.

☆☆

**வா**ர்த்தைகளே முளைக்கவில்லை. இருவரும் அமைதியாக அமர்ந்திருந்தார்கள். இசை இளங்காற்றாக வீசியது. பாடல் வரி நாணல் மொழியில் நெளிந்து வளைந்தாடியது. ஆட்டோ ஓடிக்கொண்டிருந்தது. பாண்டி தன்னைக் கண்டே பிரமித்துப் போயிருந்தான். அவன் கவியாற்றல் அமலாவை வியப்பிலாழ்த்தியிருந்தது. ''அன்பில் உண்டோ ரகசியம்'' பாடலை இரண்டு மூன்று முறை முணுமுணுத்து கறாராக கட்டுப்படுத்திக் கொண்டாள். ஹோலி க்ராஸ் கல்லூரியை நெருங்கிக்கொண்டிருந்த போது பாண்டி ''உன்னை காலேஜ்ல விட்டுட்டு நான் கன்னியாகுமரி போலாம்னு நினைக்கிறேன்'' என்றான். இதைக் கேட்டதும் அமலா அக்கா டிரைவரிடம் ஆட்டோவை சாலையோரமாக நிறுத்தச் சொல்லி விட்டாள். ஆட்டோ நின்றது. பாண்டி அக்காவின் முகத்தை கேள்விக்குறியோடு பார்த்தான். ''என்னை காலேஜ்ல விட்டுட்டு நீ பாளையங்கோட்டை போறேனு நினைச்சுக்கிட்டுதான் நான் வந்துகிட்டிருக்கேன். நீ அங்கேயே சொல்லியிருந்தா பஸ் ஸ்டாண்ட்லேயே இறங்கியிருக்கலாமே'' என்றாள் குட்டி சந்தோஷத்துடன். அவள் மனதை வாசித்துவிட்டான் கண்களில்.

ஆட்டோவை பஸ் ஸ்டாண்டுக்கு திருப்பச் சொன்னாள்.

மடியிலிருந்த கல்லூரிப் பையைத் திறந்து துழாவியபடி ''பணம் வச்சிருக்கியா?'' தாழ்ந்த குரலில் கேட்டாள். பாண்டி முந்நூறு ரூபாய் உத்திரவாதத்துடன் தலையாட்டினான். ''காலேஜ் முடியுறதுக்குள்ள திரும்பி வந்துறலாம்ல?'' கேள்விக்குள்ளேயே கால அவகாசத்தை வரையறுத்தாள். ''தாராளமா.'' அப்போது நேரம் காலை ஒன்பது இருபதுதான் ஆகியிருந்தது.

அக்கா ஜன்னலோரம். அவன் அவளோரம். மிடில் எக்ஸ்பிரஸ் பேருந்து வேகப் பற்றாக்குறையோடு போராடியது. ''நான் ஆறாவது படிக்கும்போது கன்னியாகுமரி போனது ஞாபகமிருக்கா? உம் பக்கத்துல உக்காந்திருந்த என்னை நிர்மலா டீச்சர் திட்டி பாய்ஸ் பக்கம் விரட்டிச்சே...'' அவள் சிரித்தவாறே அவன் இடது கையை எடுத்துத் தன் கைகளுக்குள் பொத்திக்கொண்டாள்.

பேருந்து ஓடும் போதெல்லாம் காற்று முகத்தில் மோதிப் பரபரத்தது. கூந்தல் அலைபாய்ந்தது; அவன் முகத்தைத் தீண்டும் போது ஷாம்பு வாசனை மிதந்தது. நிறுத்தங்களில் பேருந்து நிற்கும் போதெல் லாம் அவளிடமிருந்து குளியல் சோப்பு வாசம் வந்தது.

கன்னியாகுமரியில் பேருந்து இறக்கி விட்டுவிட்டு நகர்ந்ததும் சாலையின் எதிர்ப்புறத்தில் கண்ட காட்சி பாண்டியைத் துணுக்குறச் செய்தது. பஸ்ஸுக்காக தேரித்துறை அருள் பெரியப்பா நின்று கொண்டிருந்தார். அவர் கன்னியாகுமரியில் ஸ்டீமர் வாடகைக்கு விட்டிருப்பது அப்போதுதான் ஞாபகம் வந்தது. நடையைத் துரிதப்படுத் தினான். பாண்டியின் கலவரத்துக்கு காரணம் தெரியாத அக்கா ஓடாத குறையாக 'மெல்லப் போடா. மெல்லப் போடா' என்று அவனைப் பின் தொடர்ந்தாள். பக்கத்தில் நின்றிருந்தவரிடம் பேச்சில் குறியாக இருந்த தால் பெரியப்பா அவர்களைக் கவனிக்கவில்லை. காந்தி மண்டபத் தருகில் வந்த பிறகுதான் நிதானமடைந்தான். அமலா அக்காவிடம் சொல்லலாமா வேண்டாமா என்று கடைசி வரை அல்லாடினான். உப்புக்காற்று உடலை லேசாக்கி மனதை விடுதலையுணர்வால் வருடியது.

கோபுரத்தினூடாக நுழைந்து ஈரமான கற்தளத்தில் பாதங்கள் சில்லிட நடந்த போதுதான் அவனுக்கு ஞாபகம் வந்தது - சட்டையைக் கழற்ற வேண்டுமென. சற்று முன்பே தோன்றியிருந்தால் உள்ளே வராமல் இருந்திருக்கலாம். நல்லவேளை, கோவில் முழுக்க கூராப்பு போல் மென்னிருட்டு பரவியிருந்தது. மின்விளக்குகள் தோற்றிருந்தன. சட்டையை நெஞ்சோடு சேர்த்தணைத்தபடி அவளுக்குப் பின்னாலேயே நடந்தான்.

கருவறை முன் கைகூப்பி நின்றிருந்தபோது தேவி குமரியின் முகத்தையே பார்த்தான். புன்னகை தவழும் சிறுமி. குமரி போலில்லை.

துவிபங்க சிலை. அலங்காரங்கள் ஏதுமற்று இருந்திருந்தால் நன்றாக இருக்கும் என்று தோன்றியது. அர்ச்சகர் தட்டை ஏந்தியபடி பிரசாதம் கொடுக்க வந்தபோது சந்தனமும் குங்குமமும் எடுத்துக்கொண்டான்.

அக்கா கண் மூடியவாறிருந்தாள். எதையும் கவனிக்கவில்லை. இப்போதெல்லாம் மாதா மீது கூட அவளுக்கு பக்தியில்லை என்று அவனுக்குத் தெரியும். நிமிடங்கள் நீண்டன. அவள் நிஷ்டை கலையவில்லை. குலதெய்வ வழிபாடாக இருக்கும்!

திரும்பி வரும்போது சந்தனத்தையும் குங்குமத்தையும் வாங்கி நெற்றியில் இட்டுக்கொண்டாள். சந்தனம் தீற்றிய முகம் புதிதாயிருந்தது.

கிழக்கு வாசல் கதவு அடைத்திருந்தது. இதன் வழியாக என்றாவது கடலுக்குள் இறங்க வேண்டும். ஆறாட்டு விழாவில் திறப்பார்கள். 'கபாடபுரம்...'

''இதைத் திறந்தா நேரா வள்ளுவர் சிலை தெரியுமாடா?''

''நமக்குத் தெரியும். தேவிக்குத் தெரியாது. நல்லவேளை, குமரியோட பார்வை விவேகானந்தர் மேலயோ வள்ளுவர் மேலயோ படாது. இரண்டு பேருக்கும் நடுவுல உதிக்கிற சூரியனைத்தான் பார்க்கும். தலய இடது பக்கம் கொஞ்சம் சாய்ச்சு பார்த்தா வள்ளுவர் தெரிவார். அது நல்லதுதான். அவர் வாலறிவனை, தனக்குவமை இல்லாதானை வணங்கிக்கிட்டிருக்காரு.''

கோவிலிலிருந்து திரும்பி வரும்போது வளையல் கடைப் பக்கம் ஒதுங்கினாள். கலைந்து பறக்கும் கூந்தலுக்கு ஒரு கிளிப் வாங்கி மாட்டி காற்றை ஏமாற்றினாள். ஒரு டஜன் கண்ணாடி வளையல்கள் வாங்கினாள். ரத்தச் சிவப்பு.

கடைவீதிகளில் பல மொழிகளில் பல வகையான குரல்கள். கடலிருந்து அள்ளிவந்த கிளிஞ்சல்கள், சிப்பிகள், சங்குகள், சோழிகள். ஒவ்வொன்றையும் ஆர்வமாகத் தொட்டுப்பார்த்தாள். நட்சத்திர மீன் அவளுக்கு மிகவும் பிடித்துப் போனது.

எங்கும் சுற்றுலாப் பயணிகள் கொத்துக் கொத்தாக வலம் வந்தார்கள். புதிதாக மணமான கேரள ஜோடிகள் அதிகம். வட்டமுக சின்னப் பெண்கள் தங்கள் ஆண்களின் கையைப் பின்னிக்கொண்டு நடந்தார்கள். துணிந்த ஆண்கள் பெண்ணின் இடையைப் பற்றியவாறு நடந்தார்கள். அரைக்கால் சட்டையோடு வெள்ளைக்காரிகள்! நேரம் நாலு கால் பாய்ச்சலில் ஓடியது.

மெல்லிய வானம், மிதக்கும் மேகங்கள், சறுக்கும் பறவைகள், கருத்த பாறைகள், தொட்டுப்பிடித்தாடும் அலைகள், தூரதூரம் வரை நீலக்கடல், யாரையும் சுடாத ஆரஞ்சு வெயில், ஈரம் சொட்டச் சொட்டக் குதித்துச் செல்லும் குழந்தைகள்... பார்த்தபடி குருத்து மணலில் கால்கள் புதைய கரையோரம் திரிந்தார்கள்.

உள்ளம் பூரித்தாலும் உடல் களைப்படைந்து விட்டிருந்தது. கரைக்கு வந்து மொட்டைப் பாறை எதிரேயிருக்கும் கல் மண்டபத்தின் தூண்களில் சாய்ந்தமர்ந்து இளைப்பாறினார்கள்.

ஒன்பதாம் வகுப்பில் சுற்றுலா வந்திருந்தபோது அமலா பெண்கள் வரிசையிலும் பாண்டி பையன்கள் வரிசையிலும் இதே மண்டபத்தில் அமர்ந்திருந்து சாப்பிட்டதை நினைவூட்டினான். அவளுக்கு நன்றாகவே நினைவில் பதிந்திருந்தது. ''நீ அங்கே, நான் அங்கே'' என நீள கை நீட்டி இடத்தை துல்லியமாகக் காட்டிச் சிரித்தாள். அப்போது வள்ளுவர் சிலை இல்லை.

காபியைக் குடித்துவிட்டு காந்தி மண்டபம் அருகிலுள்ள படித்துறையில் இறங்கினர். பாதி சுடிதாரை நனைத்துவிட்டாள். பிறகு அதற்கு நேர் மேலேயுள்ள மதில் சுவருக்கு வந்தனர்.

சூரியன் மேகங்களுக்குப் பின்னிருந்தான். சுவர் சுடவில்லை. இன்று வெயிலே இல்லை. தென் கடலைப் பார்த்தவாறே மதிலில் அமர்ந்திருந்தனர். அலைகளின் சீற்றம் அதிகமாயிருந்தது. பாறைகளை அறைந்து தாவிக்கொண்டிருந்தது.

திடீரென்று கேட்டாள் ''பாட்டுக்குப் பரிசு வேண்டாமாடா?'' பாண்டி முழித்தான். ''கண்ண மூடிக்கோ.'' விநாடிகள் கடந்தன. ''கைய நீட்டு.'' அவன் கையில் அவளது கழுத்துச் செயின் இருந்தது, சிலுவையுடன். பாண்டி சந்தோஷத்திற்கும் சங்கடத்துக்குமிடையே அலைக்கழிந்தான். போன வருடம் ஜாய்ஸ் அக்கா கல்யாணம் நிச்சயமானவுடன் அவள் கேட்காமலேயே, யாரும் சொல்லாமலேயே பெரிய செயினையும் பத்து வளையல்களையும் அவளுக்குக் கொடுத்துவிட்டாள். அவளுக்கு ஏற்கனவே நூறு பவுன் கணக்குக்கு இருந்தது. மீதியிருந்த இரண்டு சின்ன செயின்களையும் மூத்த அக்காக்களின் மகள்களுக்கு மாட்டி விட்டாள். ஐந்தாறு காது வளையங்கள்தான் மிச்சமிருந்தன. பெரியம்மா ரொம்ப வருத்தப்பட்டாள். பிறகுதான் பெரியப்பா இந்தப் புது செயினை வாங்கி வந்தார்.

''வேண்டாக்கா.''

''வச்சுக்கோ. மகாராணியின் பரிசை புலவன் வாங்க மாட்டேன்னு சொல்ல முடியாது.''

பாண்டி அலைகளையே பார்த்தவாறிருந்தான்.

''சின்னக்காவும் வேண்டாம்னுதான் சொன்னா. என்னைக் கட்டிப் பிடிச்சு ஒரே அழுகை. பாட்டிக்கு கண்டமானிக்கு திட்டு - அவ யாரு நேந்துவிடுறதுக்குன்னு. நீ நினைக்கிற மாதிரி இல்லக்கா. நான் தியாகமெல்லாம் பண்ணல, உன் மேல இருக்கிற பிரியத்துலதான் தர்றேன். இத்தனை வருஷமா நான்தான உன் செல்லமா இருந்தேன். என்னய நீ மறக்காம இருக்கணும்னுதான் தர்றேன்னு சொன்னேன்.''

பாறையைத் தழுவி நீர்ப்பூக்கள் விசிறிப் பறந்தன. சற்று இடைவெளிக்குப் பிறகு மீண்டும்... மீண்டும்...

''சின்னக்காவப் பத்தி நினைச்சாலே சந்தோஷமாயிருக்கும். அவளப் பத்தின ஞாபகம் அப்படியே படம் படமா மனசுல இருக்கு. பேச்சு வரி விடாம அவ குரல்ல தெளிவா மறுபடி கேட்கும். அவ மேனர்ஸ், சிரிப்பு, கோபம், கொஞ்சல் எல்லாம். எவ்வளவு சுட்டித்தனம், என்ன அட்டகாசம்! பெரியக்காக்கள எத்தனை வாட்டி அடிச்சிருக்கா; கிண்டல் பண்ணி கிண்டல் பண்ணி அவ அளவுக்கு யாரும் உன்ன சுண்டலாக்கியிருக்க மாட்டாங்க.''

''சுவீட்டா தின்னுக்கிட்டு பார்பி டால் மாதிரி இருந்த எனக்கு ஊர் உலகம் பற்றி சொல்லிக் குடுத்து விவரமாக்குனது அவதான். அவ காலேஜ் ஹாஸ்டல் பத்தி எவ்வளவு கதை! நான் நாகர்கோவில் வரும்போது ஏகப்பட்ட கோல்டன் ரூல்ஸ் போட்டு அனுப்புனா. அதைக் கடைப் பிடிச்சதாலதான் நிம்மதியா இருக்கேன். ஜன்னல் வழியா, கதவுக்குக் கீழேன்னு என் ரூமுக்கு லெட்டர்ஸ் வந்து கெடக்கும். எல்லாம் அனானிமஸ். ஒரே நியூசன்ஸ். படிச்சுக்கூட பாக்காம கிழிச்சுப் போட்டுருவேன். கொஞ்சம் மூக்கும் முழியுமா இருந்துட்டாப் போச்சு, ஆராதகிகள் தொல்லை தாங்க முடியாது.''

பெரிய அலையாய் இருந்திருக்க வேண்டும், துமிகள் மதில்மேல் ஏறித் தெறித்தன.

''ஸ்கூலுக்கு அக்கா சைக்கிள்ல பின்னால உக்காந்து நைன்ந்த் போனப்ப முதல் நாள்... செகண்ட் பை செகண்டா நினைவிருக்கு. அக்கா மத்யானம் எங் கிளாஸுக்கு வந்து சாப்பிடக் கூட்டிட்டுப் போனா. நம்ம சாப்பிடுற வேப்ப மரத்துக்கில்ல. பிளஸ் டூ பொண்ணுகள்லாம் கபடி கிரவுண்ட் புங்க மரத்துக்குக் கீழதான் சாப்பிடுவாங்க. நான் பாக்ஸை திறந்து வச்சு சும்மா உக்காந்துக்கிட்டிருந்தேன். அவ பிரண்ட்ஸ் கேட்கிறாங்க ஏன் சாப்பிடலைன்னு. பசிக்கலைன்னேன். அக்கா கண்டிக்கிற மாதிரி நடிச்சுக்கிட்டே ஊட்டி விட்டா. எனக்கு கூச்சமாயிருச்சு. இனிமே திருந்தியிர வேண்டியதுதான், வேற வழியில்லைன்னு அப்பவே முடிவெடுத்துட்டேன். ஆனா இன்னும் அவ விட்டபாடில்ல. இப்ப ஊருக்கு வந்திருந்தபோது கூட... மெஸ்ஸில சாப்பிட்டுக்கிட்டிருக்கும் போது நினைச்சுப் பாத்தா ஆச்சரியமா இருக்கும். டேஸ்ட், பிரிபரன்ஸ், அளவு எல்லாமே அவ நிர்ணயிச்சதுதான்.

''வாரம் நாலஞ்சு தடவை போன்ல கூப்பிட்டிருவா. செல் வாங்கித் தாரேன்னு சொல்லியிருக்கா. ஹாஸ்டல்ல யார்கிட்டயும் செல் இல்ல. அதுதான் யோசிக்கறேன். டேய் உனக்குத் தெரியுமா, இவ போன புதுசுல மாமியார் அராஜகம் பண்ணிக்கிட்டிருந்திச்சாம்...''

'' 'ராங்க் டிக் ராணி' தோசயப் புரட்டிப் போட்டாளா?''

''பொறுடா. சொல்லாமின்ன முந்துற. சரி, டீடெய்ல்ஸ் வேண்டாம். போர். இப்ப மருமக கிழிச்ச கோட்ட மாமியா தாண்டுற தில்லை.''

அக்கா உற்சாகமாகப் பேசிக்கொண்டிருக்க பாண்டி அலைகளை எண்ணியபடியிருந்தான்.

''காபி குடிப்பமாடா?''

''மெல்லிசுதான்டா. மைனர் செயின் மாதிரிதான் தெரியும்.''

''இல்ல. ஊர்ல போட முடியாது. வேற எங்கயும் பாதுகாப்பா வைக்க முடியாது.''

திரும்ப வாங்கியவள் சிலுவை கோர்த்திருந்த சிறு வளையத்தைப் பல்லால் கடித்துக் கடித்துப் பிரிக்க முயன்றாள். செயினை மட்டும் உருவிக் கொண்டு சிலுவையை அவனிடமே திருப்பிக் கொடுத்தாள். ''வேற ஒண்ணுமில்லடா. இது உறுத்திக்கிட்டிருக்குன்னுதான் உங்கிட்டக் கொடுக்கிறேன். இதை டிசைன் பண்ணுனவன் ஒரு மாங்காய்தலையன். ஷார்ப் எட்ஜஸ். சின்னப் பொண்ணுகதான் போட முடியும். நல்லா வளந் திட்டாப் போட முடியாது. அப்பப்ப கழட்டி வச்சு வச்சு எரிச்சலா யிருக்கு. ஏற்கனவே அக்காவப் பாக்குறபோது கொடுத்திரலாம்னுதான் இருந்தேன். காபி...''

''வா போகலாம்.''

செயினை கழுத்தில் மாட்டிக்கொண்டவளுக்கு வளையல் ஞாபகம் வந்துவிட்டது. பைக்குள்ளிலிருந்து புதியதை எடுத்து மதிலில் வைத்து விட்டு பழையதை உருவத் தொடங்கினாள்.

ஒரு வளையல் கை நழுவி கீழே பாறையை நோக்கி விழுந்தது. பாய்ந்து வந்த அலை அதை உடையாது வாங்கிக்கொண்டு பின்வாங்கி யது. கண்கள் விரிய கலகலவென்று சிரித்தாள்.

அடுத்த அலை வந்தபோது இன்னொரு வளையலைக் கொடுத்தாள். அடுத்தது.

கடைசியாய் இரண்டு மிச்சமிருந்தபோது பாண்டியும் ஒரு நீல வளையலை வாங்கி அம் மகாசமுத்திரத்திற்கு ஒரு குட்டிப் பரிசளித்தான்.

☆☆

**அலைகள்** எழும்பிக்கொண்டிருந்தன. உற்சாகமிகுதியால் இடது கைச் சிவப்பு வளையலை உருவி அப்படியே அலை பொங்கியபோது நழுவ விட்டாள். செம்பருத்திப் பூவாகி அது மிதக்கும் என்று பாண்டி எதிர்பார்த்தான். ஆனால் ரத்த மின்னல் போல் மறைந்துவிட்டது. கடலைக் குனிந்து பார்த்தபடி ஒர இருக்கையில் அமர்ந்திருந்தாள் அமலா.

வடக்கு நோக்கிச் சென்றதும் ஒரு வட்டமடித்து திருவள்ளுவரைக் குறிவைத்துப் போனது போட். விரளமில்லை. வலது கையில் நான்கு மிச்ச மிருந்தபோது படகு துறையணைந்து விட்டது. கைப் பிடித்து இறங்கி னாள். வள்ளுவர் பாறையில் நடக்கும்போது நான்கையும் கழற்றி அவனிடம் தந்தாள். மண்டப நுழைவாயிலில் போகாமல் இடது ஓரமாக விலகி நடந்தனர். முன்னால் அலைகள் அழைத்தபடியிருந்தன. பாய்ந்து அது பாறையருகே வந்தபோது பாண்டி எறிந்தான். வெண்ணலகு தாவிக் கவ்விக்கொண்டது. நீருக்குள் அமிழ்ந்து செல்லும் வளையலுக்குள் மஞ்சள் நிற மீனொன்று நுழைவதும் வெளியேறுவதுமாக அவன் கற்பனையில் அடிப்பரப்பு வரை விளையாடியது. இந்தப் பயணம் கிறிஸ்மஸ் ஸ்டாரின் கீழ் மொட்டை மாடியில் வைத்து ஆறு நாட்களுக்கு முன்பே நிச்சயிக்கப்பட்டது. போன முறை பாட்டு சி.டி கொண்டு வந்தது பாண்டி பி.ஏ படிக்கும்போது மார்ச் ஏழில். நியூ இயர் முடிந்து இரண்டாம் தேதி காலை பாண்டி அக்காவுக்குத் துணையாக நாகர் கோவில் செல்ல வேண்டும். ஆனால் பஸ் ஆரல்வாய்மொழிக்குத் திரும் பாமல் நேரே கன்னியாகுமரி வந்துவிட்டது. இனி மாலை 5 மணிக்குத் தான் நாரோயிலுக்கு பஸ் இருக்கிறது.

பாண்டி நாலாவது வளையலை கடலுக்கு அருகே சென்று இடம் பார்த்து நீருக்கு நோகாமல் மெதுவாக வீசினான். தயங்கித் தாழ்ந்து பாறையில் தேங்கிய நீருக்கு அது அணியாயிற்று. மாணிக்கக் கங்கணம்.

வள்ளுவரின் மாணடி பிரம்மாண்டமாயிருந்தது. நகங்களே பாண்டியின் உள்ளங்கையளவு இருந்தன. காற்று தீண்டி விளையாடியது. சருமத்தைச் சீண்டும் வெயில் விரிந்திருந்தது. வள்ளுவருக்கு இடப்புறம் வெயிலுக்கு மறைவாக நின்றபோது நிலவின் தண்மை. அமலா அண்ணாந்து வள்ளுவரையே பார்த்துக்கொண்டிருந்தாள். பாண்டியின் பார்வை கடலில். இரண்டு மூன்று வாண்டுகள் கரை காணாத உற்சாகத் தில் குறுக்கும்மறுக்காக ஓடிக்கொண்டிருந்தன. அடிக்கடி வெண்ணிற மின்னல்கள். பெண்கள் முகத்தில் பூரிப்பு. வடக்கே பார்த்தான். மாதா கோவில் தெரிந்தது. நானூறு வருடப் பழமையிருக்கலாம். இந்த மாதாவின் பெயர் என்னவோ! அமலோற்பவமாக இருக்க வாய்ப்பிருந் தது. இந்தக் கரை நெடுகிலும் எத்தனை லட்சம் அமலோற்பவங்கள்! இருந்தும் இறந்தும் பிறந்தும்... அக்கா சமூகவியலில் முதல் வகுப்பில் தேறியதும் எம் பில்லுக்குள் போய்விட்டாள். 'பரதவர் பண்பாட்டில் பெண்களின் பங்கு' என்ற அர்த்தத்தில் ஆங்கிலத்தில் ஏதோ சொன்னாள். இலக்கியக் குறிப்புகளை மட்டும் தேடித் தர வேண்டிய கடமை பாண்டிக்கு. பாண்டி சங்க இலக்கியத்தில் புகுந்து புறப்பட்டான். அதற்குரிய உரைகளையும் தொகுத்து எழுதினான். எம். ஏ. முதலாண்டின் ஆரம்ப மாதங்களில் இந்த வேலைதான். உபரி லாபம் - தான் எழுதுவது நிஜமாகவே கவிதைதானா என்ற சந்தேகம்.

திரும்பிச் செல்லும் நாலைந்து போட்களைப் பொருட்படுத்த வில்லை. நேரம் ஏறிவிட்டது. பயணிகள் மாறிக் கொண்டிருந்தனர். இன்னும் காபி கேட்காமல் இருக்கிறாளே என்ற ஆச்சரியத்தோடு அவள் முகம் பார்த்தபோது கேட்டுவிட்டாள். சிரித்தபடியே அவளை இழுத்துக் கொண்டு படிகளில் இறங்கினான். சுவர்களில் குறள்கள். ஒவ்வொரு அதிகாரமாகப் பார்த்துக்கொண்டே வந்தவன் முப்பத்தைந்தாவது அதிகாரத்தைக் கண்டதும் தயங்கி நின்று சுட்டிக் காட்டினான். துறவு. நின்று நிதானமாகப் படித்தாள். 'யாதனின் யாதனின்' பாடலே அவளுக்கு வெகுவாகப் பிடித்துப் போய்விட்டது. சிரமமான பாடல்களுக்குப் பொருள் கேட்டாள்.

'தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி வலைப்பட்டார் மற்றை யவர்' பாடலுக்கு அர்த்தம் சொன்னதும் மேலும் நிற்காமல் அவனைக் அழைத்துக்கொண்டு கிளம்பினாள். ''நான் இன்னும் துறவியாகலடா. இப்பயும் கேன்டிடேட்தான். எம்பில்ல காரணம் காட்டி ஒரு வருஷம் தள்ளிப் போட்டிருக்கேன். நீ அதுக்குள்ள கிளாஸ் எடுக்க ஆரம்பிச்சுட்டே! இப்ப ஒரு கேள்வி. துறவா? காபியா?'' ''காபி.''

விவேகானந்தர் மண்டபத்தில் அமர்ந்து மாலை வரை பேசிக் கொண்டிருந்தாள். கேட்ட கதை. பார்த்த கதை. பாண்டி பின்தொடர்ந்து கேட்டுக் கொண்டிருந்தான். பொருத்தமான இடங்களில் அக்காவின் அபிப்ராயங்களுக்கு வலுச் சேர்த்து கருத்தாக உறுதிப்படுத்தினான். சென்ற வருடம் பாண்டியை ஆசீர்வதித்த மதர் ஃப்ளோரா பாப்டீஸ் மரணப் படுக்கையில் இருப்பதைக் கேட்க சங்கடமாக இருந்தது. ''ரியல் டிராஜடி. இல்லையாக்கா?'' ''எனக்கு அப்படித் தோணலை. எல்லாரும் எப்படியும் சாகத்தானே போறோம்.'' ''ஏன், சேசு மரியாயிப் பாட்டி படுத்தா பாக்க பெரியம்மா இருக்காங்க. கடைசியில கட்டிலச் சுத்தி கொள்ளுப் பேத்திக நிப்பாங்க. இவங்களுக்கு யாரிருக்கா?'' ''சேசு மரியாயி பாட்டி மேல எனக்கு ஒரு சுக்குமில்ல. ஆனா இவங்க மேல எனக்குப் பிரியமிருக்கு. ரொம்ப நல்ல மனுஷி. எங்கிட்ட அன்பா இருப்பாங்க. எனக்கு எல்லா சுதந்திரமும் கொடுத்தாங்க. பாதுகாப்பா பாத்துக்கிட்டாங்க. என்னிஷ்டத்துக்கு கோர்ஸை தள்ளிப் போடச் சம்மதிச்சாங்க. நான் இப்ப வெளியே போறேன்னு சொன்னாலும் சங்கடப்பட மாட்டாங்க. சந்தோஷப் படுவாங்கன்னு கூட தோணுது. நானும் சில பிரண்ட்ஸூம் ஹாஸ்பிடலுக்கு ரெகுலராப் போயி ஆறுதல் சொல்வோம். என்னயப் பாத்தாலே அவங்களுக்கு முகமெல்லாம் பூத்திரும். இதுதான் உண்மையான உறவு. ரத்த பந்தங்களுக்கு ஒரு அர்த்தமும் இல்லை. அன்பு தன்னியில்பா வரணும்.''

☆☆

மண்டபத்தினுள் நுழைந்ததும் குளிர்ந்த காற்று வந்து தழுவியது. கருங்கல் தூண்களில் கை வைத்துப் பார்த்தான். சில்லென்றிருந்தது. சென்ற ஆண்டு இதே நாளில் ஜனவரி இரண்டில் இவ்வளவு தணுப்பில்லை. விவேகானந்தர் நிமிர்ந்து நின்றிருந்தார். துறவிக்கு அதிகப்படியான கம்பீரம். 'ஊக்க ஊற்று!'

முதல் மாடிக்குப் பிறகு கடல் தெரியும் கோணத்தில் இடம் தேர்ந்து அமர்ந்துகொண்டான்.

மதர் ஃப்ளோரா பாப்பஸ் கர்த்தரில் ஐக்கியமாகி விட்டார்.

அக்கா கன்னியாஸ்திரி பயிற்சியில் சேர்ந்துவிட்டாள். இரண்டு வருடங்கள். பிறகு லெக்சரர். பிறகு முனைவர் படிப்பு. ''பிஎச்டிக்கு என்ன சப்ஜக்டுக்கா?'' ''இதேதான்டா. தலைப்பை கொஞ்சம் மாத்தி வைச்சுக் கலாம். நமக்குத் தெரிஞ்ச உலகம். உனக்குத் தெரியுமா... எம் பில் ரிஜிஸ்டர் பண்ணுன ஒரே மாசத்துல எல்லாத்தையும் எழுதி முடிச்சுட்டேன். நீ கொடுத்த குறிப்புகளை டிரான்ஸ்லேட் பண்ணி அங்கங்க சேத்தோட சரி. பிஎச்டி சாக்குல நம்ம ஊர்களையெல்லாம் ஒரு ரவுண்ட் சுத்தலாம்.''

''ஒரு சுவாரஸ்யமான விஷயம்ங்கா. குமரியம்மன் கால் தடத்தைப் பாத்தயில்லயா?''

''ராக் எரோஷன்.''

''சோஷியாலஜி பத்திப் பேசும்போது ஏன் ஜியாலஜிக்குத் தாவுற?''

சிரித்துக்கொண்டாள்.

''அம்மன் சிலை முதல்ல இந்தப் பெரிய பாறையிலதான் இருந்தது. அதுனாலதான் பாதத் தடத்தை குமரியுடையதுன்னு சொல்றாங்க. கரையில கோயில் கட்டி ஆயிரத்து ஐந்நூறு வருஷம்தான் இருக்கும். கரையில் இருக்கிற கோவில்ல பத்தாம் நூற்றாண்டு கல்வெட்டுதான் இருக்கு. எந்த கொற்கைப் பாண்டியன் அம்மனைக் கரைக்கு கொண்டு போனான்னு தெரியல. ஆண்கள் மட்டுமே இங்க வந்து வணங்குன தெய்வம் இது. பெண்கள் பார்த்திருக்க வாய்ப்பேயில்ல. உனக்கே தெரியும், பெண்கள் கடலேற முடியாது. மரத்துல மட்டும்தான் இங்க வர முடியும். வெள்ளம் பாறையில அணையாது.

''ஏறத்தாழ மூவாயிரம் வருஷப் பழமையாவது குறைஞ்சது இந்த அம்மனுக்கு இருக்கணும். பிற்காலத்துல பொருத்தமில்லாத புராணக் கதையைக் கட்டி விட்டாங்க. சவேரியார் பனிமய மாதாவ கொண்டுவந்து காட்டிட்டாரு.

''ஏன் கன்னியாவே நிற்கிறாங்கிறது மிஸ்டீரியஸ். வேற எந்தத் துறையிலயும் குமரிக்கு வேற கோவில் இருந்த ஆதாரம் இல்ல. அதுவும் ஆச்சரியமாயிருக்கு. ஆனா நம்மகிட்டயிருக்கிற கடலப் பத்துன

ஃபோல்க் டேல்ஸ் எல்லாம் இந்த அம்மன சுற்றிதான் இருக்கு. இங்க இருந்து உன் ரிசர்ச்சை ஆரம்பி.''

''நீ கண்டுபிடிச்சு சொல்லு. சேத்துக்கலாம்'' என்று சிரித்தாள் ''ப்யூரிடிக்கு ஒரு பவர் இருக்கு, எல்லா விதத்திலயும். வணங்கித்தான் ஆகணும். வேற வழியேயில்ல - குறிப்பா ஆண்களுக்கு. அதிலயும் தெய்வமாயிட்டா கேள்வியேயில்லை.''

''அவ பார்வையில மனிதர்கள் படுறதில்லை. கடல்தான்.'' அவன் கண்கள் கடலில் நிலைத்திருந்தன.

அவள் பேச்சை நிறுத்தினாள்.

வெகுநேரம் கழித்துப் பொறுமையிழந்து கேட்டாள், ''என்னடா, கவிதையா யோசிச்சிக்கிட்டிருந்த?''

''இல்ல.''

''கடலையா?''

''இல்ல.''

''பின்ன?''

''வெறுமனே ஒரு உணர்வு. கவிதைக்கு சொற்களைத் தேடணும். அது என்னயிருந்தாலும் வலிந்த முயற்சிதான். இப்ப அது ஒரு பொருட்டில்ல.''

''மரம் ஏறி மூவாயிரம் வருஷத்துக்கு பிந்திப் போயிட்டயா? அவளுக்கு எத்தனை வயசு?''

''தெரியலை.''

''சும்மா கத விடாத. எனக்குத் தெரியும். அவ வயசு 22. முந்திப் போய்ப் பாக்குறதுக்கு டைம் மெஷின் எதுவுமில்லை.''

பாண்டி சட்டென எழுந்து காபி பார்லரை நோக்கி நடந்தான்.

கடைசி போட்டில் திரும்பலாம் என்று சொன்னாள். வெயில் பணிந்திருந்தது. தெற்குச் சுவரோரம் நின்று அலைகளின் வருகையை எண்ணிக் கொண்டிருந்தாள்.

''அக்கா, எல்லாத் துறைகளையும் விட தென் கடல்லதான் அலை அதிகம் தெரியுமா?''

''இன்னைக்கு ரொம்ப இருக்குமே!''

கொண்டல் காற்று விர் விர்ரென ஒலியோடு நிலம் நோக்கிப் பறந்து கொண்டிருந்தது. ஒற்றைச் சிறகுப் பறவைகள் மீன் தேடி தொடுவான் அருகே மிதந்தன. மேக விளிம்புகளில் பொன் ஒளிர்ந்தது. அலைகள் முரசறைந்தன. கடலின் இசை ஆரோகணமாயிருந்தது.

கூந்தலும் ஆடையும் அவளுக்குப் பின்னே படபடத்துத் துடிக்க

கடலைப் பார்த்துச் சிரித்துக்கொண்டிருந்தாள். முதல் மஞ்சள் வளையல் பறந்தபோது அவன் மனம் டால்பினைப் போல் ஊடே தாவி அப்புறம் பாய்ந்தது. ஒவ்வொன்றாகக் கடல் மடியை நோக்கி ஆடி ஆடி அமிழ்ந்து வந்தன. கிளிஞ்சலின் கால்களில் சங்கின் கழுத்தில் பாசிகளின் சிகையில் சிப்பியின் முகத்தில் படிந்தன. அவள் முகத்தையே பார்த்தவாறிருந்தான். பளிங்கு போலிருந்தது. வெண்ணிற தேவதையாய் பத்து வயதில் புதுநன்மை வாங்கிய அதே முகம். கடைசி வளையல் பறந்து ஒளியுற்று மஞ்சள் சூரியனாகி மிக மெதுவாக கடலுக்குள் இறங்கிக்கொண்டிருந்தது.

☆☆

கள்ளன் போலீஸ்

நம் இருவருக்கான பிரத்தியேக விளையாட்டில் எப்போதுமே நீதான் போலீஸ். நான்தான் கள்ளன். குற்றங்களும் தண்டனைகளும் நம் மிடையே மலையெனக் குவிந்து கிடந்தன. பால்ய பருவங்களின் தொலை தூரங்கள் வரை செறிந்த கூந்தலாடும் மரத்தடி நிழல்களில் உனக்காக நான்தான் வரைந்து தருவேன் எனக்கான சிறைச்சாலைகளை. தண்டிப்பதற்கும் நான்தான் தயாரித்து வருவேன் உறுதியான பிரம்பும், கொடிப் பிரண்டை கை விலங்கும். தண்டனைகளை மட்டுமே நீ கொண்டுவந்து தருவாய். அடைக்க உதவுகின்ற உடைக்க முடியாத பூட்டுக்கள் உன் பார்வைகளின் பரணிலிருக்கும். சாவிக் கொத்துக்கள் உன் ஈரச்சொற்களில் தொங்கியாடும். குட்டிக்குட்டி கொலைகள் செய்வது, கொஞ்சநஞ்சமாய் கொள்ளையடிப்பது, கிழிக்க முடியாத பொய்களைத் தைப்பதென விதவிதமான குற்றங்கள் புரிந்தேன். அனைத்தையும் கண்டுபிடித்தாய். மன்னிப்பின்றி அத்தனைக்கும் வகை வகையான தண்டனைகள் அளித்தாய். ஒரு மழைக்காலத்தின் முதல் நாளில் மலர்களைச் சுமந்து வந்த காகிதக் கப்பலைக் கடத்திவிட்டேன். வானம் ஓயும் முன் துப்புத் துலக்கி குற்றவாளியைக் கைது செய்து விட்டாய். சிறைச்சாலைகள் வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்டு விட்டதால் அம்மழைக்காலம் முடிய எனக்கு வீட்டுக்காவல் விதித்தாய். இரவும் பகலும் தூக்கத்திலும் விழிப்பிலும் என்னைக் கண்காணித்த வண்ணமிருந்தன சிறை மதில் சுழல் விளக்குகளாக உன் விழிகள். மழை வெயில் குளிரென காலவாரியாக தரமான தண்டனைகளைத் தந்த வண்ணமிருந்தாய். கனவுகளில்கூட சிறைகளில் மகிழ்ந்து வாடினேன். விதிப்பாட்டின் முரணாக, விளையாட்டின் முடிவாக, தோழிகள் புடைசூழ தோள்மாலையோடு மணமேடையில் புதுமாப்பிள்ளை முதுகில் ஒளிந்து மறைந்து பதுங்கிப் புன்னகை கசிந்து, ஊதி ஊதி உதடு களில் நீயுன் உயிராற்றி நின்றிருந்தபோது நானும் கண்டுபிடித்தேன் ஒரு குற்றத்தை. கண்டும் பயனென்ன? எப்போதுமே நம் விளையாட்டில் நீதான் போலீஸ், நான்தான் கள்ளன்.

☆☆

மூத்த அண்ணனுக்கு அவன் கம்பெனியில் வேலை நிரந்தரமடைந்த செய்தி வீட்டில் எல்லோருக்கும் மிக்க மகிழ்ச்சியளித்தது. இனி இருபத்தி நாலு வருஷத்துக்கு எந்தப் பிரச்சனையுமில்லை; வருடாந்திர ஊதிய உயர்வு, போனஸ் இன்ன பிற சலுகைகள் எந்தத் தங்கு தடைகளுமின்றி வந்து சேருமென்று அப்பா எல்லோரிடமும் பூரிப்பாகப் பேசிக்கொண்டிருந்தார்.

கடவுள் நமக்கு இவ்வளவாக தயவு செய்திருக்க கடவுளுக்கு நாமும் ஏதாவது கைம்மாறு செய்ய வேண்டுமென்று அம்மா நினைத்தாள்.

ஊர் மேற்குத் தெருவில் நாலு பாதைகள் சந்திக்கும் இடத்தில் நாற்பது ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னால் கட்டப்பட்ட மிக்கேல் அதிதூதர் கெபி முறையான பராமரிப்பின்றி இடியும் நிலையில் பரிதாபமாகக் காட்சியளித்துக் கொண்டிருந்தது. அதை புதுப்பித்துக் கட்ட கணக்கிட்டுப் பார்த்தபோது இருபதாயிரத்திலிருந்து முப்பதாயிரம் வரை செலவாகும் என்று மதிப்பிடப்பட்டது. அண்ணனுக்கு கடிதத்தின் மூலம் தெரியப்படுத்தியதும் அவன் உடனே ஒப்புக்கொண்டான். பணத்தை அனுப்பித் தந்துவிடுவதாகவும் கெபி கட்டிடப் பணியை கவனித்துக் கொள்ளும்படி அப்பாவையும் தம்பி பாண்டியையும் கேட்டுக் கொண்டான்.

பிரிட்டோ ஹாஸ்டலில் தங்கிப் படித்துவந்த பாண்டி ஒரு மாத காலத்திற்கு வீட்டிலிருந்து கல்லூரிக்குப் போய்வர வேண்டியதாயிற்று. மேற்பார்வை சற்று அலாதியான உணர்வைத்தான் தந்தது. பொறுப்புகளை அப்பா ஏற்றுக்கொண்டாலும் காலையிலும் மாலையிலும் வளர்ந்து புதுப்பொலிவடையும் கெபியை சிரத்தையான கண்ணோட்டத்துடன் வட்டமடிப்பது முதுகெலும்பில் புது திடத்தை ஏற்றியது. அத்திடத்தை, மன உரத்தையெல்லாம் சோப்பு நுரையாகக் கரைத்து வழிந்து ஓட விட்டுவிட்டாள் பூச்சிக்காட்டாள் மகள் ஜூலி.

கெபி கோபுரத்தில் பதிப்பதற்கு பூ வடிவ காங்கிரிட் கிராதிகள் அச்சில் வார்க்க வேண்டியிருந்தது. மேடுபள்ளமில்லாத சமதளமான சிமென்ட் பரப்பு தேவைப்பட்டது. மேஸ்திரி நான்கைந்து இடங்களைப் பார்த்து நிராகரித்துவிட்டு கடைசியாக பூச்சிக்காட்டாள் மொட்டை மாடியில் கிராதிகளை வார்த்து வைத்தார். வீடும் கெபிக்கு அருகே இருந்தது சௌகர்யம் என்று கருதினார். கிராதிப் பூக்களுக்கு காலையும் மாலையும் தண்ணீர் விட்டு நனைத்துப் போடவேண்டிய பொறுப்பு பாண்டியிடம் விடப்பட்டது. நான்கைந்து நாட்கள் அப்படித் தொடர்ந்து செய்வது காங்கிரிட்டுக்கு பலமென்றார்கள்.

ஜூலிக்கு கல்யாண வயதாகிவிட்டது. மாப்பிள்ளை தேடும் படலம் மாதாந்திரம் நடந்துகொண்டிருந்தது. அவளது அசாதாரண உயரம் காரணமாக பல மாப்பிள்ளைகள் கைநழுவிக் கொண்டிருந்தார்கள்.

அளந்து பார்த்தால் ஆறடி இருப்பாள். உயரத்திற்கேற்ப உடலும் திரண்டு உருண்டிருக்கும். அவள் வளர்ச்சியின் விளைவாக பத்தாம் வகுப்பில் அரைகுறையோடு படிப்பை நிறுத்திவிட்டாள் பூச்சிக்காட்டாள். ஜூலியின் அம்மா பெயர் அவ்வளவாக யாருக்கும் தெரியாது. பூச்சிக்காடு அவள் பிறந்த ஊர். எட்டாம் வகுப்பு வாத்தியாருக்கும் ஜூலிக்கும் காதல் வந்து முற்றிய விவகாரம் ஊருக்குள் பரபரப்பை ஏற்படுத்தியதும், பூச்சிக் காட்டாள் அந்த வாத்தியாருக்கே ஜூலியை கல்யாணம் பண்ணி வைத்து விட முயற்சிகள் மேற்கொண்டாள். ஜூலியின் அக்காவுக்கு உடனடியாக ஒரு மாப்பிள்ளை அமையாமல் ஒரே முகூர்த்தத்தில் நடைபெறவிருந்த இரண்டு கல்யாணமும் தள்ளிப் போய்விட்டது. கெட்ட பெயரை சம்பாதித்துத் தந்த ஆசிரியரையும் பள்ளி நிர்வாகம் பணி மாற்றம் செய்துவிட்டது.

படிப்பு பாதியில் நின்று போனதாலோ, காதல் தோல்வியில் முறிந்து போனதாலோ ஜூலி எந்தக் கலக்கமும் சோர்வும் அடையவில்லை. எப்போதும்போல் இயல்பாகவே திரிந்தாள். அவளைப் பார்க்கும் போதெல்லாம் பாண்டிக்கு குதிரை ஞாபகம் வரும்.

கிராதிகளுக்கு ஊற்றும் தண்ணீரை பூச்சிக்காட்டாள் வீட்டிலிருந்து தான் பெற்றுக்கொள்ள வேண்டும் என்பது ஏகமனதாக ஊரார்களாலும் மேஸ்திரியாலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. கோவில் பணிக்கு தண்ணீர் தர மறுத்தால் அது எவ்வளவு அபத்தம் என்று பூச்சிக்காட்டாளும் உணர்ந்துகொண்டாள். அந்த கிராதிகளுக்கு ஜூலியே தண்ணீர் தெளித்து விட்டால் என்ன என்று பாண்டி யோசித்தான். ஆனாலும் அப்பாவும் அம்மாவும் அவன்தான் செய்யணும் என்று விரும்பினார்கள். பொட்டப் பிள்ளைகளுக்கு எல்லா நாளும் ஒரே மாதிரியிருக்காது என்று குஞ்சுக் கண்ணர் மாமாவும் அபிப்பிராயப்பட்டார்.

பாண்டி முதல் நாள் காலையில் எழுந்து பூச்சிக்காட்டாள் வீட்டுக்குப் போனபோது, ஜூலி மொட்டை மாடியில் இரண்டு பிளாஸ்டிக் வாளி நிறைய தண்ணீர் நிறைத்து ஒரு ஜக்கும் போட்டு வைத்திருந்தாள்.

மாடிப் படிக்கட்டுகளுக்கடியில் செருப்புகளை உதறிவிட்டு மாடித் தளத்தையடைந்து பெருஉவகையோடு கிராதிகளுக்கு தண்ணீர் வார்த்துக் கொண்டிருந்தபோது, கடலோரத்தில் பாறையிடுக்குகளில் அலைகள் மோதித் திரும்பும் ஓசை 'தும் தும்' என்றெழுந்தது. கிராதிப் பூக்கள் நீரின்றி வாடும் மீன்குட்டிகள் போலக் காட்சியளித்தன. பூச்சிக்காட்டாள் வீட்டின் பின்புற அமைப்பை அப்போது அவன் மாடி உயரத்திலிருந்து காணவேண்டியதாயிற்று. தூக்குவாளியின் சதுரப்பிடி போல வீட்டின் பின்பக்கத்தில் தோளுயர காம்பவுண்ட் சுவர் இருந்தது. பூச்சிக்காட்டாள் குளித்துக்கொண்டிருந்தாள். மேலேயிருந்து தண்ணீரைக் கீழே ஊற்றிக் குளித்துவிட்டு, குளியலைத் திருப்பி கீழேயிருந்து மேல் நோக்கி தண்ணீர் வீசிக் குளித்தபோதுதான் அந்த தும்தும் அலையடி அணக்கம் என்றறிந்

தகும் முகத்தை சுளித்துத் திருப்பினான். கிராதிகளுக்கு தண்ணீர் ஊற்றி விட்டு இறங்கிவிட்டான். 'குளிக்கிறதுதான் குளிக்கிறாங்க, கொஞ்சம் சத்தமில்லாம குளிக்கலாமுலா' என்று நினைத்துக்கொண்டான் அன்று அவன் குளிக்கும்போது.

இன்னொரு நாள் பாண்டி கிராதிப் பூக்களை நனைக்கப் போன போது ஜூலி மாடிப்படியில் மேலிருந்து இறங்கிக் கொண்டிருந்தாள். ஆண்கள் லுங்கியை மடித்துக் கட்டுவதுபோல் கட்டியிருந்தவள் அவனைக் கண்டதும் இரண்டு படி துள்ளியேறி மேலே போய் பாவாடையைச் சரி செய்துவிட்டு அவனுக்காக வழிவிட்டு படிகள் முடிவடையும் இடத்தில் ஒதுங்கி நின்றாள். கால் மூட்டின் கருமை மேகத்திலிருந்து உதிர்ந்த சாரல் துளிகள் மழையாக முடியாமல் வந்து வழியிலேயே உறைந்து நிலம் தொடாமல் நின்றுவிட்டது போன்ற அவள் கெண்டைக் கால் மயிர்கள் அவன் கண்களை உறுத்திக்கொண்டிருந்தன. தொடைகளுக்கு நடுவில் ஏன் நிழல்கள் குற்றவாளிகளைப் போல பதுங்கி ஒடுங்கி நடுங்கின என்று அவனால் பகுத்துணரவே முடியவில்லை. ''பூவெல்லாம் சூப்பரா இருக்குலா'' என்று முகம் நெகிழ்த்தி பேச்சுக் கொடுத்தாள் ஜூலி.

''ம்...'' என்றான் மிக விலகி அவளுக்கு வழி விட்டபடி பாண்டி.

அவர்களுக்கிடையில் கணம் ஒன்று இறந்து பிணமாகக் கிடந்து விட்டு மீண்டும் உயிர் பெற்றது மாடிப்படி வழி.

அத்தனை வலியோடு அதற்குமுன் அவன் சிரித்ததேயில்லை. விழிகளை அவிழ்த்து தாவணியை மறைக்கத் திணறிய முலைக் காம்புகளில் கோர்த்துப் போட்டிருந்தாளோ என்று யோசித்தான் அன்று கிராதிகளுக்கு நீரூற்றும்போது. 'கூர்நுனைக் கவைமுட்கருவி' என்பார் சாத்தனார். அவரைவிடத் தனது கற்பனை நன்றாக இருப்பதாக தன்னைத்தானே மெச்சிக்கொண்டான்.

அந்த செவ்வாய்கிழமை வகுப்பறையில் பாண்டி விஜிலாவையே ஓரக்கண்ணால் ஒரு காரணமுமின்றி நோட்டமிட்டபடியே இருந்தான் எல்லாப் பாட வேளையிலும். அவள் நாசியை சரிபாதி மறைத்துக் கொண்டிருந்த கன்னத்தில் பழுத்திருந்த பருச் சிவப்பை தொலைவிலிருந்தே கண்டுகொண்டான். படுத்த நிலையில் எரியும் மெல்லிய சுடர்போல அது ஒளிர்ந்துகொண்டிருந்தது. காதோரம் கலைந்து விழுந்த மயிர்க்கற்றையை ஒதுக்கி பூரித்த விரல்கள் இரண்டு சேர்ந்து பின்னுக்கு தள்ளிப்போட்டபோது அவன் நெஞ்சில் கை வைத்து யாரோ அவனைப் பின்னுக்கு இழுத்து வில்லின் நாண் கதிக்குள் முறுக்கி விளையாடியது போலிருந்தது. விஜிலாவிடம் அன்று இரண்டொரு வார்த்தை பேச வேண்டும் என்றொரு உந்துதல் ஏற்பட்டிருந்தது. அவளுடைய தெற்றுப் பல் வெள்ளைத் தீயாக அவனுக்குள் விட்டு விட்டு எரிந்தது.

**வீ**ட்டுக்குள்ளிருந்து கதவை உரக்கத் தட்டுவதுபோல் பூச்சிக்காட்டாள் தும்மிக்கொண்டிருந்தாள். பாண்டி சத்தமில்லாமல் நடந்து படியேறி மொட்டை மாடியை அடைந்தான். காலை வெயில் கழுத்தில் கறுகறுத்தது. உயரத்திலிருந்து பார்க்கும்போது வானில் ஏவத் தயாராக நிற்கும் விண்கலம் போன்று கெபி தோற்றமளித்தது.

குளிர்ந்த நீரை கிறாதிப் பூக்களில் வடித்து விட்டுக்கொண்டிருந்தான். அவன் நிழல் அவனைப் போலவே குனிந்து நிமிர்ந்து வேலை செய்வதைக் கவனித்தபோது இன்னும் உறக்கம் கலையவில்லையோ என்றொரு உணர்வு ஏற்பட்டது. ஒன்றுக்கும் பயன்படாத வெற்றுச் சிரிப்பால் அந்த உணர்வின் கதவைத் திறந்த இடத்திலேயே அடைத்துவிட்டு கிராதிகளை நீர்விட்டு நனைத்தான். பூக்கள் திடீரென்று எண்களாகவும் எழுத்துகளாகவும் மாறி மின்னி மறைந்தன. குறிப்பாக எண் இரண்டு. ஆங்கில எழுத்து எஸ். நஷ்டமடைந்து மூடப்பட்ட சினிமா ஸ்டுடியோவுக்குள் நுழைந்த நாகம், பாழடைந்த ஒப்பனை அறை நிலைக்கண்ணாடி எதிரே நின்று கால போதமற்ற நிலையில் நடனமாடித் தன்னைத்தானே முறுக்கி சுயபோகம் புரியும் இடத்தில் முடிவடையும் கவிதை விழித்துப் புரண்டு படுத்தது. உறங்கும் கவிதை உளறும் கணம் சுமுகமாக கரைந்து போனது. கிராதிப் பூக்களின் இதழ்கள் நெரிந்த சாம்பல் புற்களாக வளரத் தொடங்கியபோது அவன் கவனத்தை கனவின் பாதையிலிருந்து நார் போல உரித்து எறிந்தது கீழே முணுமுணுத்த நீர்த்துளிகளின் ஒலி. பூச்சிக்காட்டாள் குளிக்கிறாள் போலும். வேகமாக ஓடிப் போய்விடவேண்டுமென்று நினைத்தான். தலையில் நீர் விட்டு குளிக்கும்போது எல்லோருமே நீரால் செய்த பொருத்தமில்லாத கிழிந்த உடையை உடுத்திக் கொள்ளத் தத்தளிப்பது போலிருக்கிறது அல்லவா, என்றொரு எண்ணம் ஏற்பட்டதும் தன்னிச்சையாய் பாண்டி மாடிச் சுவர் ஓரம் நெருங்கி வளவுப் பகுதியைப் பார்த்தான்.

காலை வெயில் தன் எல்லாத் தோகைகளையும் சுண்டியிழுத்தது வானம் வரை. ஜூலி குளித்துக் கொண்டிருந்தாள். கண்களை மூடிக் கொண்டு அண்ணாந்து பார்த்த முகத்தில் தண்ணீரை மொண்டு மொண்டு ஊற்றினாள். ஏற்றிக் கட்டியிருந்த பாவாடை நாடாவின் பலவீனமான முடிச்சை அவள் இடது கை விரல்கள் கவ்விப் பிடித்திருந்தன. கழுவிய மஞ்சள் சீனிக் கிழங்கு போல அவள் உடல் பளிரீட்டது. மூச்சுவிடும் போது அவள் வாயிலிருந்து தெறித்த நீர்த்துளிகள் தீயில்லாத மத்தாப்பாக ஒளிர்ந்தன. இவ்வளவு பெரிய மார்பகங்களை எப்படி ஒளித்து வைக்கிறாள் என்ற வியப்பு அவன் தாடை எலும்பை இறுக்கத்தோடு புடைக்க விட்டது.

படிக்கட்டில் ஊற்றிய தண்ணீராக இறங்கி ஓடினான். 'கூர்நுனைக் கவை முட்கருவி...' வீட்டுக்கோ கல்லூரிக்கோ வேறு எங்கோ போகவே

பிடிக்கவில்லை. சுற்றும் பம்பரத்தில் ஒட்டி வைத்த ஈயாக அவன் உள்ளம் சுழன்றது. பல நாட்களாகியும் பம்பரத்தின் சுழற்சி நிற்கவேயில்லை. கல்லூரி விட்டதும் ஜங்சன், டவுண், பாளையங்கோட்டை, கிருஷ்ணா புரம் என்று சுற்றிக்கொண்டிருந்தான். கண்ணில் பட்ட பெண்களெல்லாம் மெல்லிய தண்ணீர்த் துகிலை மட்டுமே உடுத்தியபடி தெருவிலும் பேருந்திலும் சென்றார்கள்.

விஜிலா எரித்து விடும்படி கேட்டுக்கொண்ட கடிதத்தை பேருந்து நிலைய பெரிய குப்பைத் தொட்டியில் கிழித்துப் போடும் முன் ஒருமுறை முகர்ந்து பார்த்திருக்கலாமோ என்று மனம் அலைக்கழிந்தது.

'டேய் ச.பா,

காலேஜ் மேகஸின்ல உன் கவிதை சூப்பர்டா. ஒரே கடலும் அலையுமாக் கெடக்கு. எனக்குத்தான் புரியலையோன்னு பிரண்ட்ஸ் கிட்ட கேட்டேன். எவளுக்கும் விளங்கல.

இந்த கடிதத்தை எழுதுனதுக்காக என்னை நீ நூறு தடவையாவது மன்னிக்கணும்ப்பா. தினமும் பாக்குறோம் பேசுறோம். பின்ன எதுக்கு இந்த கடிதமுனு நீ யோசிக்காதே. எழுதுற எனக்கே தெரியாதபோது உனக்கு எப்படி தெரியும். தேவையில்லாம குழப்புறதுக்காக என்னை பொறுத்துக்க ச.பா.

என்னை மாதிரி அமுக்கா நினைச்சிக்கூட நீ பாத்திருக்க மாட்டே. ஆனா நான் ஏன்தான் இப்படி திடீர்னு அமுக்காயிட்டேன்னு எனக்கே அதிசயமா இருக்கு ச.பா. நீ பொளேர்னு செவிட்டுல ச்சீ கன்னத்துல ஒரு அறை விட்டேனா க்ளீனாயிடுவேன்னு நினைக்கிறேன். குறுக்க வாற இங்லீஷ் வார்த்தைகளையும் மன்னிச்சிடு. இது ஒரு மாதிரியான ஸ்பெஷல் ஃபீலிங் மாதிரி இருக்குப்பா. உன்கிட்ட கேட்கக்கூடாத விஷயத்தை கேட்க வேற வழியே இல்லையோனு தோணின பிறகுதான் இந்த கடிதத்தை எழுதுறேன்.

நான் ஒண்ணும் பெரிய அழகியெல்லாம் இல்லப்பா. ஆனா பாரு இப்ப உனக்கு கடிதம் எழுதும்போது என் கை விரல்கள் எப்படி என் கண்ணுக்கு தெரியுது தெரியுமா? காந்தள் பூவோட அஞ்சு இதழ்கள் மாதிரி. அந்தப் பூவோட வாசம் எப்படி இருக்குது தெரியுமா. ஐயயோ அதை எழுத்துல சொல்ல முடியாது. முகர்ந்துதான் பாக்கணும். ச.பா. விடு விடு. விட்டுருப்பா. நீ சிகரெட் பிடிக்க மாட்டே. ஆனாலும் இந்த ஃபிரண்டுக்காக ஒரு தீக்குச்சி கடன் வாங்கி இந்த கடிதத்தை எரிச்சி போட்டுருப்பா.

நேத்து பஸ்ல வரும்போது தாமிரபரணி தலை விரிச்சி ஓடிச்சி. அவ்வளவு பெரிய தாமிரபரணி அதுக்கு முன்னாடி பாத்ததே இல்லப்பா. பதறிப் பதறி பாத்தும் முழுசா பாக்க முடியலை. திரும்பிப் போகும் போதும்தான். அப்பத்தான் தோணுச்சி நாலு கண்கள் எனக்கிருந்தா

அப்படியே அள்ளியிருக்கலாம்னு.

வேற ஒண்ணுமில்ல. கண்டிப்பா எரிச்சிடு சுபா.

ஸாரிடா.

கல்லூரி நூலகத்தில் யாருமற்ற தனிமையில் - உடல் குழைய என்பெல்லாம் நெக்குருக விழிநீர்கள் ஊற்றென வெதும்பி யூற்ற ஊசி காந்தத்தினைக் கண்டணுகல் போலவே ஒருறவும் உன்னி யுன்னிப் படபடென நெஞ்சம் பதைத்துள் நடுக்குறப் பாடியாடி குதித்துப் பனிமதி முகத்திலே நிலவணைய புன்னகை - படித்துக்கொண்டிருந்த பாண்டியின் மேஜையில் மடித்த வெள்ளைத் தாளை வைத்துபோது விஜிலா ரொம்பவே வெளிறிக் குழைந்து போயிருந்தாள். ''யார்கிட்டேயும் காட்டிடாதே பாண்டி ப்ளீஸ்'' என்ற தணிந்த குரலில் அவள் மேஜையில் விரல்களைக் கொட்டிக் குறுகியபோது பள்ளிக்குழந்தைபோல் மாறிவிட்டாள். தொண்டையைச் செருமிக்கொண்டு விறுவிறுவென்று வெளியேறி வாசலின் வெளிச்சத்தில் நிழலாகக் கரைந்து போனாள்.

படித்துப் பார்த்தவனுக்கு உடல் முழுவதும் வியர்த்துக் கொட்டியது. விளங்கியது போலிருந்தது. என்றாலும் விளங்கவில்லை. அல்லாமலும் விஜிலா அந்தக் கடிதத்தில் கௌரவமான மொழியைக் கையாளவில்லை. உதவாக்கரை அண்ணன்காரன் எவனோ ஜூ.வி வாங்கிப் படித்துவிட்டு வீட்டில் கொண்டுவந்து போடுகிறான் என்றும் கருதினான். எரித்துப் போட்டுவிடு என்ற வேண்டுதல் வில்லங்கமாக இருந்தது. சற்றேறக் குறைய அது ஒரு காதல் கடிதத்தின் குறைப் பிரசவம் போலிருந்தது. சிசுக் கொலை போல அதை கிழித்துப் போட்டுவிட்டு தெளிவடைய நாட்கள் பிடித்தன.

ஒரு வார சுய விடுப்புக்குப் பின் பாண்டி பேரச்சத்தோடு கல்லூரிக்கு வந்தபோது விஜிலாவை கலைக்கூடத்தின் வாசற்படிக்கட்டுகளருகே சந்திக்க நேர்ந்தது. அவளோடு புரபசர் ஆக்னஸூம் இருந்தாள். புரபசர் வாயின் மூலமாகவே அனைத்தையும் விஜிலா விசாரித்துக்கொண்டாள். 'உடம்புக்கு முடியலை' என்றான். 'டேக் கேர்.' ஆக்னஸ் கடந்து போனாள். விஜிலாவும் தலையாட்டி அதையே வலியுறுத்தினாள். அச்சமயம் பார்வையாலும் மன்னிப்பு கேட்க முடியும் என்பதை விஜிலா லேசாகக் கலங்கிய கண்களில் நிரூபித்துப் போனாள். கண்களால் மன்னிக்க பாண்டிக்கு எந்தப் பயிற்சியுமில்லாததால் சொதப்பி வைத்தான். ஜூலி பாண்டிக்குள் உலராமல் குளித்துக்கொண்டிருந்தாள். விஜிலா தாமிர பரணியாக ஓடிக்கொண்டிருந்தாள்.

தோளில் வானை அளக்கும் சிறகுகளும் கையில் கூர்மையான ஈட்டியும் காலடியில் கரும் பிசாசுமாக புதிய கெபியில் நின்றுகொண்டிருந்த மிக்கேல் அதி தூதரின் உருவத்தைப் பார்த்துப் பார்த்து மனத்தைத் தேற்றிக்கொண்டான். வெள்ளையடிக்கப்பட்ட கெபியின் சுவர்களுக்குள்

சிகப்பு நிற செங்கல் அடுக்குகள் இருப்பதை நினைத்துப் பார்ப்பதை மெல்ல மெல்ல மறந்துவிட்டான்.

☆☆

*குளிர்ந்த பொய்கைக் கரையோரம் பூத்த காந்தள் மலரென சமைந் திருக்கிறாள் தனிமையில் ஆயிரமாயிரம் ஆண்டுகளாய். இதழொன்றி நீர் பார்க்கும் கன்னியவள் ஏக்கம்தான் என்ன? உள நோக்கம்தான் என்ன? கல்லெறியும் தோறும் பொய்கையிடம் நீட்டுகிறாள் வெறுங் கையை. அணிந்ததை உதறித் துறக்கிறாளா? எடுத்தணிந்து கொள்ளத் தவிக்கிறாளா? அறிவதில்லை அலைவளையல்.*

☆☆

கெபி முற்றத்தில் தற்காலிக பீடம் அமைத்து ஃபாதர் ஜெகத் பிரைட் மாலை வெயில் தணிந்த பின் பரிபூரண ஆடம்பரத் திருப்பலி நிறை வேற்றினார். ஒரு முதல் வெள்ளிக் கிழமையில் மிக்கேல் அதிதூதரின் புதுக் கெபி திருப்பலி ஏறெடுத்து மந்திரித்து திறந்து வைக்க வேண்டு மென்று ஏகமனதாக ஊர் முடிவு செய்திருந்தது. தாடி சரிந்த மூன்று வெள் ளாட்டுக் கிடாக்கள் பலியாயின. அசன விருந்து போதும் போதுமென்று சொல்லுமளவுக்கு ஊருக்கே தாராளமாகப் பரிமாறப்பட்டது. சுகந்தி சவுண்ட் சர்வீஸ் கெபியை சரவிளக்குகளால் தேர் போல ஜோடித்திருந்தது. பாண்டி எழுதிய 'அன்பில் உண்டோ ரகசியம்' பாடல்கள் இரண்டு மூன்று முறை ஒலிபரப்பப்பட்டது. அண்ணன்கள் கேட்டுவிட்டு பெரிசாக கண்டு கொள்ளாதது போன்ற பாவனையோடு ரகசியமாக பெருமித மடைந்தார்கள். அண்ணிகள் மறைக்க முடியாமல் முகம் மலர்ந்து வெளிப்படையாக மெச்சிக்கொண்டார்கள். மூத்த அண்ணன் மகள் நாலு வயது ஆலிஸ் 'சித்தப்பா சித்தப்பா' என்று பாசத்தோடு பாண்டியோடு ஒட்டிக் கொண்டாள். ஆலிஸ் திருத்தமாக தமிழ் பேசியது ஆச்சரிய மாகவும் நெகிழ்ச்சியாகவுமிருந்தது. வீடு களை கட்டியது. எங்கெங்கோ சிதறிக் கிடக்கும் பிள்ளைகளை ஒன்றாகப் பார்க்கும்போது அம்மாவும் அப்பாவும் சந்தோஷத்தில் மிதந்தார்கள். எல்லோரும் சேர்ந்திருந்து பேசிக் கொண்டிருக்கும்போது விஷயத் தட்டுப்பாடு ஏற்பட்ட போதெல் லாம் பாண்டியின் கல்யாணப் பேச்சு எடுக்கப்பட்டது. அண்ணிகளுக்கு அதில் என்னதான் வேடிக்கையோ தெரியவில்லை. ''அடுத்து நாம ஊருக்கு வாரது உங்க தம்பி கல்யாணத்துக்குத்தான் என்னங்க'' என்று அண்ணன் களிடம் கேட்டார்கள். ''ஆலிஸ், உங்க சித்தப்பா உனக்கு சித்தி பாத்து வச்சுருக்காங்களா, நாமதான் பாக்கணுமானு கேளு.'' ''படிப்பு முடியட் டும் மயினி'' வெட்கத்தோடு சிரித்துக் குழைந்தான். ''மணப்பாட்டுல பொண்ணு ரெடியா இருக்குன்னு சொன்னாங்க.'' ''அந்தப் பேச்சை விடுங்களேன் மயினி. அதெல்லாம் சரிவராதுனு சொல்லிட்டேன்.''

''ஆமா ஆமா. நம்ம பாத்து வச்சுருக்கிறவங்க கோவிச்சுக்குவாங்க'' பாதி கேலியும் மீதி அக்கறையுமாக வறுத்து எடுத்தார்கள்.

கலகலப்புகளில் பங்கெடுத்து தெம்பாகத் திரிந்த பாக்கியம் பாட்டி அவள் பங்குக்கு ஒன்றைக் கிளப்பிவிட்டாள். ''ஐயா பிறந்ததுமே அவனை கோட்டாரம் சவரியாருக்கு காணிக்கை போட்டாச்சு. அவனுக்கு ஏதாவது கல்யாணம் காட்சியினா கோயில்ல போயி ஏலம் விட்டுதான் மீட்டணும். அதுவரை அவன் கோயில் பிள்ளை.''

பாண்டியை கோவிலில் ஏலம் விடப் போவதை நினைத்து அண்ணிகள் விழுந்து விழுந்து சிரித்தார்கள். ''வேண்டுதல் விஷயத்தில் என்ன சிரிப்பு வேண்டிக்கிடக்கு'' என்பது போல் அண்ணன்கள் முறைத்த பிறகு கொஞ்சம் கட்டுப்படுத்தினார்கள். பாட்டியின் வேண்டுதல் என்ப தால் பாட்டி காலத்துக்குள் நிறைவேற்றப்பட வேண்டும் என்பது முறை. பாட்டிக்கும் வயதேறி விட்டதால் அடைஞ்ச நாளை விடிஞ்சாத்தான் நம்புவாள்.

ஒரு மேக்ஸி கேப் வேன் பிடித்து மொத்த குடும்பமும் கோட்டாறு சவேரியார் கோவிலுக்குப் போய் பாண்டியை ஏலம் விட்டு எடுத்து வருவதாக நாள் குறிக்கப்பட்டது. பாட்டியின் வேண்டுதலால் பாண்டி ஒரு வேடிக்கைப் பொருளாக மாற்றப்பட்டிருந்தான். குடும்பத்தின் மொத்த கவனமும் அவன் மீது குவியும் தருணங்களில் ஒரு பக்கம் கூச்ச மும் இன்னொரு புறம் ஒருவிதமான முக்கியத்துவப்படும் மகிழ்ச்சியும் ஏற்பட்டது. கோட்டாறு கோவிலுக்கு ஒரு தடவை கூட போனதாக நினை வில்லை. நாகர்கோவிலைத் தாண்டிப் போகும்போது பேருந்திலிருந்த படி பலமுறை பார்த்திருக்கிறான். கண்டமிருக்குனு திண்ணை ஜோசியன் சொன்ன வயதும் மறந்து போய்விட்டது. ஏலம் எப்படி நடக்கும்? திருப்பலி பூஜை நேரமென்றால் மக்கள் கூட்டமாக இருக்குமே; எல் லோரும் வேடிக்கை பார்ப்பார்களே என்று கற்பனையில் பதற்றமடைந் தான். மாற்றாள் யாருமில்லையெனில் நல்லாயிருக்கும். இப்போ என்ன தலையையா சீவப்போறாங்கன்னு நெனைக்கும்போது சாதாரண சம்பவம் போலிருக்கும். அந்நிலையிலேயே உறுதி கொள்ளாமல் எண்ணங்கள் தாவித் தாவிக் குழப்பின.

நல்லவேளையாக கவிஞர் ராஜமார்த்தாண்டன் அண்ணாச்சி ஞாபகம் வந்தது. அவர் அப்போது கோட்டாறில்தான் இருந்தார். அவரைக் கேட்டால் விபரங்கள் சொல்லலாம். அவரை இதுவரை நேரில் சந்தித்ததில்லை. புதுக்கவிதை வரலாற்று ஆசிரியர் என்ற விதத்தில் அவனது முனைவர் படிப்பின் முதற்படியாக கடிதங்கள், தொலைபேசி மூலம்தான் தொடர்புகொண்டு வந்திருக்கிறான். அவன் கவிதைகளை மேற்கோள் காட்டி, அவர் கட்டுரைகள் எழுதியிருக்கிறார். சமகாலக் கவிதைகள், போக்குகள் பற்றி ஐயங்கள் கேட்டால் விரிவாக பதில் சொல்வார். ஏலம் போடுவதைப் பற்றி எப்படி கேட்பது; கேட்டால்

எப்படி எடுத்துக் கொள்வாரோ தெரியவில்லை.

அமலா அக்காவிடம் பேசினான். அவள் வெகு சாதாரணமாகச் சொன்னாள். ''அது ஒண்ணுமில்லடா. வழிபாட்டுக்குப் பிறகு நம்மளால முடிஞ்சது ஐம்பதோ நூறோ கோவிலுக்கு கொடுத்திட்டு ரசீது வாங்கிட்டு வந்திரலாம். அவ்வளவுதான். பெரும்பாலும் பிள்ளைய நோய் நொடியிலிருந்து சவேரியார், அந்தோனியார் பாதுகாப்பாங்கன்னு நம்பிக்கையில தான் நேர்த்திக்கடன் விடுறாங்க. ஆனா ஏலம் விடுறதோட ஆரிஜின் வேற. கிறிஸ்தவம் வருமுன்னாடியே இருந்த யூத வழக்கம் அது. வியாபாரிகள் அடிமைகளை ஏலம் விடும்போது பொது இடமான ஜெகோவா கோயில்ல வச்சிதான் ஏலம் விட்டிருங்காங்க. பிறகு மதச் சடங்காகி, நேர்த்திக் கடனுக்கும் அதே மாதிரி வழக்கம் வந்திருச்சி. பயப்படாத. உன்னைய எவளும் ஏலம் கேக்கமாட்டா. உனக்கு என்னடா தெரியும், கவிதை எழுதுறதத் தவிர?''

''புதன்கிழமையா? உத்தேசமா காலையில பத்து பதினோரு மணிக்கு வந்துருவீங்களா? வாங்க வாங்க. நான் முன்னமே போயி காத்திருக்கேன். அது வேற ஒண்ணுமில்ல. எல்லா நேர்த்திக்கடன் மாதிரியும் இதுவும் ஒரு வகை காணிக்கைச் சடங்கு. பாவப்பட்ட பிள்ளைகளை இப்படி நேர்ந்து விடுவாங்க. பிள்ளை நிமுந்து வரும்போது குடும்பமும் நிமுந்துட்டா பெத்தவங்களே எடுத்துக்குவாங்க. நசிச்சிப் போனா வசதியான சொந்தக்காரங்க ஏலம் கேட்டு பிள்ளையை எடுத்துக்குவாங்க. தத்தெடுக்குற மாதிரிதான். பெத்தவங்க கஷ்டம் பெத்தவங்களோட போகட்டும், பிள்ளையாவது நல்லா இருக்கட்டுங்குற ஒரு ஏற்பாடுதான்'' கணீர் குரலில் தொலைபேசியில் தேற்றினார் கவிஞர்.

வேன் பணகுடியைத் தாண்டியதும் உலோகப் பனைகள் போல ஆங்காங்கே நின்று சுழன்ற மின் காற்றாலைகளினூடே சாலை ஓடியது. வெப்பம் கொஞ்சம் கொஞ்சமாக தணிந்து வந்தது. ஜன்னல் வழியாக காற்றாலைகளைக் கண்டு கண் விரிந்த ஆலிஸ் அவற்றின் பிரம்மாண்டத்தைப் பார்த்து அசந்து போய்விட்டாள். முகத்தில் வியப்போடு எல்லோரிடமும் கை நீட்டிக் கூறினாள். ''பாட்டி, அங்க பாருங்க எவ்ளோ ஹெலிகாப்டர்ஸ்!'' வண்டியை நிறுத்தும்படி அடம் பிடித்தாள்.

அவளோடு கீழே இறங்கி எல்லோரும் ஆவலோடு பார்த்தார்கள். ''காத்தாடிங்க மட்டும்தான் கண்ணுக்கு தெரியுது. அதை வச்சு விளையாடுத பிள்ளைகளைக் காணுமே' என்பது போல் பாட்டி கண்களை இடுக்கி ஆராய்ச்சிப் பார்வை பார்த்தாள். ராட்சச அலுமினியத் தூவிகள் சோம்பலோடு சுற்றும் விதத்தைப் பார்க்கும்போது வெள்ளைச் சீலையணிந்த விதவைகள் சுயபிரக்ஞையிழந்து யாருக்கோ ஆரத்தி சுற்றியெடுத்துக் கொண்டிருப்பது போல் பாண்டிக்கு தோன்றியது. ஆலிஸை மீண்டும் வேனில் ஏற்றுவது பெரும்பாடாயிருந்தது. போகப் போக இன்னும் நிறைய பெரிய பெரிய காற்றாடிகள் இருப்பதாகவும்

கோவிலுக்குப் போய்விட்டு கடல் பார்க்க கன்னியாகுமரி போகலாம் என்றும் பெரிய அண்ணி பக்குவமாக எடுத்துச்சொல்லி சமாதானப்படுத்திய பிறகுதான் வண்டி மீண்டும் கிளம்பியது.

கட்டி சில நூற்றாண்டுகள் ஆன ஒற்றைக் கோபுரக் கோவில். ஆள் சந்தடி சலசலப்பின்றி அமைதியாகக் காட்சியளித்தது. வேன் வளாகத்துக்குள் நுழைந்து ஓரமாக நிறுத்தப்பட்டதுமே இரண்டு மூன்று பெண்கள் தேவசகாயம் பிள்ளை கெபி முகப்பில் முகம் திருப்பினார்கள். பாண்டி பார்க்கும்போது அமலா வேனைப் பார்த்தபடி நின்றிருந்தாள். அப்பா இறங்கியதைக் கண்டதும் வேனை நோக்கி நடந்து வந்தாள் முக மலர்ச்சியோடு. எதிர்ப்பட்ட பாண்டியிடம் புன்னகையோடு 'வாடா' என்றவள் அவனைக் கடந்து வேனுக்குப் போனாள்.

இப்போது கவிஞரும் வாசலுக்கு வந்து விட்டிருந்தார். பாண்டி நடையைக் கொஞ்சம் மரியாதைக்காக வேகப்படுத்தி அருகே சென்று தன்னை அறிமுகப் படுத்தினான். பஞ்சு வெடித்தது போல் கவிஞர் வெள்ளை வேட்டியும் சட்டையும் அணிந்திருந்தார். வெள்ளையும் கருப்பும் கலந்த கால்டுவெல் தாடியும் உச்சியிழுத்து படியச்சீவிய நீண்ட தலைமுடியும் கூர்மையான நாசியும் சிரிப்பு ஒளியும் மீசையும் பன்னிரண்டு வயதுக் கண்களுமாக... புகைப்படத்தில் பார்த்ததை விட பெரிய மாற்றமேதுமில்லை கவிஞரிடம். சுற்றுச்சூழல் கூச்சம் சற்றே மிகுதியோ எனத் தோன்றியது. ஆமா என்றாலும், இல்லை என்றாலும் அதைச் சொல்லுவதில் ஒரு ஆர்வமிருந்தது. அது பாண்டிக்கு ரொம்பவே பிடித்துப் போனது. ஒண்ணரை நிமிடத்தில் அவர்கள் சகஜமாகிவிட்டார்கள். அப்பாவிடம் அண்ணன்களிடம் கவிஞரை அறிமுகப்படுத்தினான். அவர்தான் பங்குத் தந்தையோ என யூகித்த பாட்டி அவருக்கு ஒரு தெய்வீக வணக்கம் வைத்தாள். பதிலுக்கு நெகிழ்ந்து போய்விட்டார் கவிஞர். மூன்று சொரூபங்களுக்கு பூமாலை அணிவித்து மெழுகேற்றிவிட்டு குடும்பமே கண்மூடி பிராத்தனையில் ஆழ்ந்தது. கோயில் பிள்ளையும் கவிஞரும் வாசலில் நின்று தணிந்த குரலில் பேசியபடியிருந்தனர். அமலா தோழிகளோடு பின் பெஞ்சில் கடமைக்காக அமைதியாக அமர்ந்திருந்தாள்.

ஏலச்சடங்கு முடிந்ததும் பாண்டியின் கையை கவிஞர் பலமாகப் பற்றிப் பிடித்துக் கொண்டார். நேரம் பன்னிரண்டு தாண்டிவிட்டது. ''வீட்டுக்கு வந்து சாப்பிட்டுட்டுத்தான் போகணும்'' என்று வற்புறுத்தினார். பாண்டி அதைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை. ஏற்கனவே ஏற்பட்டிருந்த மனப் போராட்டத்தில் மேலும் பளு கூடியது. அப்பா அண்ணன்களிடமும் சென்று வீட்டுக்கு அழைத்தார். ''நாங்க பத்துப் பன்னிரண்டு பேரு இருக்கோம். வேண்டாம் உங்களுக்கு சிரமம்'' என்று அப்பா நாசுக்காக மறுத்தார். ''இருபது பேருக்கு செய்யச் சொல்லியிருக்கேன்'' என்றார் கெஞ்சுவது போல.

அமலா அக்காவும் தோழிகளும் விடைபெற்று கான்வென்ட்டுக்குப் போய்விட்டார்கள். எல்லோரும் எவ்வளவோ தயங்கியும் கவிஞர்தான் வென்றார். மதிய உணவை முடித்துவிட்டு கன்னியாகுமரி போகலாம் என்று முடிவாகி மேக்ஸி கேப் கவிஞரையும் ஏற்றிக்கொண்டு அவர் வீட்டை நோக்கிச் சென்றது.

ஏலம் விடும் நிகழ்ச்சி எதிர்பாரா முடிவுடன் நிறைவடைந்தது. அது பாண்டிக்குள் ஏற்படுத்திய அதிர்வு அடங்கவில்லை. கருப்பு அங்கி யணிந்து நின்ற சேவியர் சொரூபத்தின் கீழே ''புனித சவேரியாரின் காணிக்கைப் பிள்ளை பிரான்சிஸ் சந்தனப் பாண்டியை புனித சவேரி யாரின் சாட்சியாக அவர் சந்நிதியில் ஏலம் விடுகிறேன். பத்து ரூபாய் ஒருதரம்'' என்று ஆரம்பித்ததிலிருந்தே அண்ணிகள் இருவரும்தான் படிப் படியாக போட்டி போட்டு ஏலத் தொகையை ஏற்றினார்கள். மூத்த அண்ணி கேட்ட முந்நூற்றி ஐம்பத்தி ஒண்ணில் முடிவாக மூன்றாம் தரம் சொல்லவிருந்தபோது அமலா முத்தாய்ப்பாக ''ஐநூற்றி ஒண்ணு'' என்றாள். யோசிக்காமல் கேட்டுவிட்டு கேட்டபிறகு லேசாக பதற்றப்பட் டாள். அவளை உதாசீனப்படுத்த யாருக்கும் மனம் ஒப்பவில்லை. ஏலம் முடிந்தது. அமலா பணத்தை எண்ணி கோயில் பிள்ளையிடம் நீட்டினாள். பாண்டியும் அமலாவும் ஒருவரை ஒருவர் காரணமின்றி பரிதாபமாகப் பார்த்தனர். குறிக்கோளின்றி கோவிலுக்குள் குபீரென்று நுழைந்த காற்று பாய்ந்து சுழன்று வாசல்களில் வெளியேறியது.

☆☆

அமலாவும் மற்ற மூவரும் கண்ணைப் பறிக்காத நிறத்தில் சுடிதார் அணிந்திருந்தார்கள். ரோஸலின் கழுத்து காலர் வைத்த பஃப் கலர் ஜாக்கட் அணிந்து அதே கலரில் புடவை கட்டியிருந்தார்.

சேவியர்ஸ் கல்லூரியில் 'கிறிஸ்தவத்தில் தீண்டாமை' என்ற கருப்பொருளில் இரண்டு நாட்கள் செமினார் நடந்தது. பல்வேறு கல்லூரி களிலிருந்து நூறுக்கும் மேற்பட்ட மாணவமாணவிகள் வந்திருந்தார்கள் செமினாரில் பங்கெடுக்க. அமலாவின் கோஷ்டியை அழைத்துக் கொண்டு மதர் சுப்பிரியர் ரோஸலின் வந்திருந்தார்.

செமினார் அரங்கில் அமலா பாண்டியை ரோஸலினுக்கும் மற்ற மாணவிகளுக்கும் அறிமுகம் செய்து வைத்தாள். அவர்கள் அவனைப் பற்றி ஏற்கனவே அறிந்தவர்கள் போல் மலர்ந்த முகத்துடன் பேசினார்கள். அவர்களில் கேத்தரீன் ரொம்ப சின்னப் பொண்ணு போலிருந்தாள். அமலா வயதிருக்கலாம். உடல்வாகில் சிக்கனம். பேச்சில், முகவெட்டில் நடை உடையில் பட்டாம்பூச்சியாகப் படபடத்தாள். வட்ட முகம். ''ஆரெம்கேவி ஸ்டோர் இங்கேயிருந்து எவ்வளவு தூரத்திலிருக்கு'' என்று கேட்டாள். ''பக்கம்தான் '' என்றான் பாண்டி. ''அங்க போகலாமா?''

''அவசியம்னா சொல்லுங்க, போயிட்டு வரலாம்.'' கேத்தரீன் படபடவென இமைத்தாள். யோசித்தாள். அமலா பாண்டியை ஆராய்வதுபோல் பார்த்தாள் சில கணம். பிறகு தனக்குள்ளேயே முறுவலித்துக் கொண்டாள். ''சமயம் உண்டெங்கி நோக்கட்டே'' என்றாள் கேத்தரீன்.

ஒரு மணியிலிருந்து இரண்டு மணிவரை இடைவேளை. செமினார் அரங்கிலேயே மூன்று வகை உணவு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. பாத்திரத்தை திறந்ததும் வெஜிடேபிள் பிரியாணி மணம். காய்கறிகள் வெந்த மணம். ''நீ சாப்பிடுடா. எனக்குப் பசியில்ல.'' ''ஏன்கா? எனக்கும் பெருசா பசிக்கல.'' ''சரி வா. காலாற நடந்து உங்க காலேஜ சுற்றிப் பார்த்துட்டு, காபி சாப்பிட்டு வரலாம்.'' அமலா மதர் சுப்பீரியரிடம் அனுமதி கேட்டாள். ரவா கிச்சடியை ருசித்தபடியே ''ரெண்டு மணிக்குள்ள அமலா இங்க இருக்கணும்'' என்றாள் பாண்டியைப் பார்த்தபடி ரோஸலின்.

உச்சிவெயில் உக்கிரமாக அடித்தது. பாளையங்கோட்டை வெயில். மரங்கள் நிறைந்த பாதையில் அவர்கள் நடந்ததால் அனல் தெரியவில்லை. எதிர்ப்பட்ட மாணவர்கள் பாண்டியையும் அமலாவையும் அழுத்தமாகப் பார்த்தபடி கடந்து போனார்கள். சீனியர் ரங்கநாதன் அவர்களை மறித்து 'யாதுமாகி'யில் வெளியான பாண்டியின் கவிதை பற்றி இரண்டு நிமிடம் பேசிவிட்டுப் போனான். ''கோ எட் காலேஜ் தானே இது!'' அமலா இயல்பாகக் கேட்டாள். கேட்ட தொனியிலிருந்தே அவள் எண்ணத்தை புரிந்துகொண்டவன் ''ஆமா'' என்று பதிலளித்தான். அமைதியாக சிறு தொலைவு நடைக்குப் பிறகு ''இந்த கேத்ரீன் இருக்காளே, அவ ஒரு ஸ்நாப். டிபிகல் மலையாளி. உலகத்துல அவளுக்கு தெரியாததே இல்ல, தான்தான் பெரிய அறிவாளிங்கிற மாதிரி நடிப்பா. ரோஸலின் சிஸ்டருக்கு கேத்ரீன்னா 'தனிப் பிரியம்.' அவ ஆபூன்னு ரீல் விடுறதுக்கெல்லாம் நீ தலையாட்டாத.'' பாண்டி அப்போதே உணர்ந்தான். இப்போது நெளிந்தான். சுதாரிப்பு ஏற்பட்ட பிறகு ஒவ்வொரு கட்டிடமாக அவளுக்கு சுற்றிக் காட்டினான். கேண்டீனை நோக்கி நடந்து கொண்டிருந்தார்கள். காலேஜ் பாண்டிக்கே புதிதாகத் தோற்றமளித்தது. பிரமாண்டமான சர்ச்சின் முற்றத்தைக் கடக்கும்போது பாண்டி கேட்டான், ''உள்ள போகலாமாக்கா? அழகாயிருக்கும்.'' பதில் சொல்லாமல் தலையை மட்டும் ஆட்டி மறுத்துவிட்டு நடந்துகொண்டிருந்தாள்.

நாச்சியும் சாந்தியும் விஜிலாவும் காண்டீனில் சப்பாத்தி குருமா சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள். பவ்வியமாக பாந்தமாக பாண்டி ஒரு இளம்பெண்ணுடன் நடந்து வருவதை விஜிலாவால் நம்ப முடியவில்லை. சட்டென்று புரையேறி சிரசிலடித்து தண்ணி கேட்டுக் குடித்ததும் திடுக்கிட்டது அவள் மனசு. நாச்சி உச்சந்தலையில் கொஞ்சமாக தட்டிக் கொடுத்துக் கேட்டாள் ''யார்டி இந்த நேரத்துல நினைக்கிறாங்க?'' ''ம்... எங்க பாட்டி.'' '' பாட்டியா... பாண்டியா?'' மூவரும் சிரித்தார்கள். பூத்த வேகத்திலேயே நீர்க்குமிழியாக உடைந்தது உதட்டில் விஜிலா சிரிப்பு

காண்டீனுக்குள் நுழைந்த பிறகுதான் பாண்டி விஜிலாவை கவனித் தான். ரொட்டி குருமா மீது தலை குனிந்திருந்தாள். வாசலையொட்டி காலியாக இருந்த பெஞ்சில் அமலாவும் பாண்டியும் இடம் பிடித்தார்கள். அமலா காண்டீனை கண்களால் வட்டமடித்துப் பார்த்தாள். அதன் நேர்த்தி அவளுக்கு பிடித்துப்போய் விட்டது. ''எதாவது லைட்டா சாப்பிடலாமாடா?'' பாண்டியிடம் கேட்டாள். தலையாட்டினான். ''பூரி சப்பாத்தி வேண்டாம்.''

விஜிலா பட்டும் படாமலும் நோட்டமிட்டுக் கொண்டிருந்தாள். 'இப்படியொரு அழகா! எங்கிருந்து வந்தாள்? மகாராணியின் தோரணை!'

இரண்டு பேப்பர் ரோஸ்ட்டுக்கு டோக்கன் வாங்கினான். தோசைக் காக கவுண்டரில் காத்து நின்றான்.

அமலாவை விழுங்கி விடுவதுபோல் விஜிலா வெறித்தாள். 'எப்படியும் தன்னைவிட அரை அடி உயரமாக இருப்பாள். பாண்டியின் உயரம்தான்.'

அமலா சாப்பிட முடியாமல் பாதி தோசையை எடுத்து பாண்டி தட்டில் வைத்ததைப் பார்த்ததும் விஜிலா வெளிப்படையாகவே எரிச்சல டைந்தாள்; முகம் திரிந்தாள்.

காபி குடித்துக் கொண்டிருந்தபோது 'ஹாய்' என்ற குரல் கேட்டு அமலா நிமிர்ந்து பார்த்தாள். சாந்தியும் விஜிலாவும் பின்னால் நிற்க கை நீட்டியபடி நின்றிருந்தாள் நாச்சி. அமலா அவள் கையைப் பற்றியதும், குலுக்கியடி ''ஐம் நாச்சியார். ஹிஸ் கிளாஸ் மேட்'' என்றவள் ''என்னடா பாண்டி, அதிசயமா இருக்கு?'' என்று மேலும் கிண்டினாள். உருவத்தைப் போலவே குறும்பும் அவளுக்குக் கூடுதல். கடுப்பான பாண்டி ''என்ன அதிசயத்தைக் கண்டே...'' என்றான். ''இல்ல... இந்த மாதிரி பழக்கம்... கேண்டீனுக்கெல்லாம் நீ வர்ரதில்லயேன்னு...'' என்றபடி நமட்டுச் சிரிப்புடன் நகர்ந்தாள். அவ்வளவு நேரமும் விஜிலா அமலாவையே பார்த்துக்கொண்டிருந்தாள். 'ஈஸ்ட்ரோஜன் மினுங்கும் கன்னங்கள்! நெருங்கிப் பார்த்தாலும் அழகியேதான்.'

செமினார் அரங்குக்குப் புறப்பட்டார்கள். வகுப்புக்குப் போகாமல் நாச்சி கோஷ்டி கேண்டீனுக்கு முன்னே மரத்தடியிலேயே வம்படியாய் நின்றிருந்தது. கோபப் பார்வை ஒன்று முதுகைத் துளைத்துக்கொண்டே வந்தது. பாதை திருப்பத்தில் அமலா தலையைத் திருப்பி கேண்டீனைப் பார்த்தாள். விஜிலா விசனத்துடன் முகத்தை நொடித்துத் திருப்பியிருப் பாள் என கற்பனை செய்துகொண்டான். ''காபி பரவாயில்லையாக்கா?'' ''நல்லாவே இருக்கு.'' அவளை அரங்கத்தில் விட்டுவிட்டு வகுப்புக்கு வந்தான். பெருமாள் ஐயா வந்துவிட்டிருந்தார். நாச்சியும் சாந்தியும் கூட இருக்கையிலிருந்தார்கள். விஜிலா வரவில்லை.

*அதீத அழகும் அமைதியும் தேவதைப் பண்பும் திகட்டுமா வாழை இலை விரித்து வானவில்லை விருந்தாக்கினால்!*

ஐயாவின் சொற்கள் காதில் ஏறவில்லை. பாண்டி வழக்கம்போல் கிறுக்கிக்கொண்டிருந்தான்.

முதல் நாள் செமினார் மாலை ஆறு மணிக்கு முடிந்தது. கருத்தரங்கின் சோர்வுக்களை எல்லோர் முகத்திலும் அப்பியிருந்தது. அமலாவும் அவளோடு வந்திருந்தவர்களும் மகளிர் விடுதியில் தங்க ஏற்பாடாகியிருந்தது. ''அக்கா, ஹைகிரவுண்ட் வரை நடந்தே போயிட்டு வரலாமா?'' ''பிசாசு விடாது'' என்றாள் மெதுவாக ரோஸலினைக் கண்ணால் காட்டியபடி.

ஆஸ்டலுக்குத் திரும்பிய பாண்டி உற்சாகமிழந்து போயிருந்தான். மெஸ்ஸில் பசியில்லாமல் சாப்பிட்டான். ஏதேதோ எண்ணங்கள் சுழன்று அலைக்கழித்தன. ஏதொன்றும் தெளிவாய் இல்லை. அக்கா கல்லூரியில் இருக்கும் இரண்டு நாளும் சந்தோஷமானதாக அமையும் என்று எதிர்பார்த்திருந்தான்.

அடுத்த நாள் காலையில் அரங்கத்துக்குப் போகாமல் வகுப்புக்கு வந்தான். அவனைக் கண்டதும் விஜிலா வெட்கத்தோடு குனிந்தாள். வெகு நாட்களுக்கு பிறகு மிக அழகாகவும் தோன்றினாள். சுடிதார் புதுசு போலிருக்கிறது! பஞ்சு மிட்டாய் உதடுகளில் குழைவுத்தன்மை கூடியிருந்தது. கண்களில் உயிர் ஒளியடித்தது.

*எறும்பு ரயிலில் செல்லும் கூலமணித்துகள் நான். துன்புறுத்தாதே. நன்றி சொல்ல ஒரு வாய்ப்புக் கொடு. இந்த நொடியைக் கொஞ்சம் துடிக்க விடு.*

பாடத்தையும் கவனிக்க முடியவில்லை. விஜிலா மீதும் மனசொன்றவில்லை.

சரியாகப் பத்தரை மணிக்கு செமினார் ஹாலின் வராண்டாவில் போய் நின்றான். ஆறு நிமிடம் கடந்த பிறகுதான் ஜன்னல் வழியாகப் பார்த்தாள். நழுவி வெளியே வந்து படியிறங்கி அவனோடு சேர்ந்து நடந்தாள். காண்டீனை நோக்கித் திரும்பியவளைத் தடுத்து ஆலமரம் அருகே அழைத்துக் கொண்டுவந்து நிற்க வைத்துவிட்டு டூ வீலர் ஸ்டாண்ட் பக்கம் போனான்.

பறவைக் குரல். கிளைகளில் தேடினாள். கண்ணில் படவில்லை. ரொம்பச் சின்னதாக இருக்கலாம். குரலை வைத்துப் பெயரை அறியக் கூடவில்லை. வற்றாத உற்சாகத்துடன் வாத்தியம் போல் கூவிக்கொண்டிருந்தது.

மிக அருகே இஞ்சின் ஓசை கேட்கவும் திரும்பினாள். பைக்கில் பாண்டி. ''நம்ம ஊரணி ஆலமரத்தை விட இது அதிகமா விழுது

விட்டிருக்கு பாத்தியாடா? டவுன்ல விழுது மண்ணத் தொடுறதே அபூர்வம் இல்லயா!''

''நீயொண்ணு. இதை பில்டிங்குக்காக வெட்டப் போனாங்க. ஃபோக்லோர்ல ஒரு பாதர் எந் தலய வெட்டீட்டு பிறகு வெட்டுங்கன்னு போராடி காப்பாத்திட்டார்.''

''இது ஏதுடா?'' என்றாள் பைக்கைப் பார்த்து.

''உமையொருபாகன்ட்ட சாவியப் பிடுங்கிட்டு வந்தேன். டேஸ்காலர் பையன்.''

''ஓட்டத் தெரியுமாடா?''

''இப்போ என்ன தலையில வச்சா தூக்கிட்டு வந்தேன்?''

அமலா முதன்முதலாக பைக்கில் ஏறுகிறாள். பின்பக்கக் கம்பியை இடது கையால் இறுகப் பற்றியபடி வந்தாள்.

ஹை கிரவுண்டில் பாண்டிக்குப் பிடித்த ரூஃப் கார்டன் ரெஸ்டாரண்டில் எதிரெதிரே அமர்ந்திருந்தனர். முழங்கைகள் டேபிளில் ஊன்றியிருக்க பத்து விரல்களாலும் வழக்கம்போல் டம்ளரைப் பற்றியிருந்தாள். பாதி முகம் மறைந்திருந்தது.

''மேரி ஜோஸபின் விஜிலா யாருடா?''

பாண்டி திடுக்கிட்டான். காட்டிக் கொள்ளாமல் இயல்பாகி சொன்னான். ''எங் கிளாஸ். பெரியதாமைக்காரி. ரோட்ரிகோ வகையறா. இங்க அக்கா வீட்டிலிருந்து வர்றா. அண்ணங்க தூத்துக்குடியில. டிராலர்ஸ் ஓடுது. படிப்பில ஆர்வம் இல்ல. பாஸ் பண்ணீருவான்னு நினைக்கேன்.''

''அடிக்க மாட்டேன். சும்மா சொல்லு.''

''உனக்கு எப்படிக்கா அவளைத் தெரியும்?'' பதற்றத்தை மறைக்க சிரமமாக இருந்தது.

''நேத்து சாப்பிடும்போதே கவனிச்சேன். பார்வை சரியில்ல. என்னய ஃபாலோ பண்ணி ரூமை விசாரிச்சி நேத்து நைட் தேடி வந்துட்டா. அவளா அறிமுகப் படுத்திக்கிட்டு பேசிக்கிட்டிருந்தா. இந்த காலேஜிலேயே அவளுக்குப் பிடிச்ச ஸ்டூடண்ட் நீதானாம். நீ எந் தம்பின்னு சொன்னதும் அவ முகத்தைப் பாக்கணுமே, அப்படியா அப்படியான்னு குழைஞ்சு போயிட்டா.''

''வேற என்ன சொன்னா?''

''உன்ன மாதிரியே நானும் அமைதியா சிம்பிளா இருக்கேன்னா. ஒரே பாராட்டுதான். நேத்து என்னய பாத்தப்போ என்னென்ன நினைச்சான்னு... வழக்கமா கேக்கிற பல்லவிதான். பேரழகி அதுயிதுன்னு... கேட்டுக் கேட்டு காது புளிச்சிப் போச்சி.''

''அவ கோஷ்டியே பொல்லாதது. இவ சும்மாயிருந்தாலும் அந்த நாச்சி தூண்டி விட்டுக்கிட்டிருப்பா. இனிமே உன்னய வந்து பாத்தா எங்கிட்ட நேரா வந்து பேசச் சொல்லு.''

''அவளுக்கு உன்னய ரொம்பவும் பிடிச்சிருக்கு போல.''

பாண்டியின் காபி ஆறிப் போயிருந்தது. அவன் குடிக்கவேயில்லை. நிமிர்ந்து பார்க்காமலே சொன்னான், ''ஏழெட்டு லெட்டர் கொடுத்தா. நான் கண்டுக்கிடலை.''

''ஏண்டா? படிக்கிறா. லட்சணமா இருக்கா. பரு கூட அவளுக்கு அழகாதான் இருக்கு. வசதியிருக்கு. எல்லாத்தையும் விட உன் மேல உசுரயே வைச்சிருக்கா.''

பாண்டி தலையை மட்டும் மெதுவாக ஆட்டினான்.

''இவ நல்ல பொண்ணுதான்டா. நான் எவ்வளவு பேரை பாக்குறேன். அதனால சொல்றேன். நீ நிம்மதியா இருக்கலாம். இவள மிஸ் பண்ணிட்டா பிறகு நீ ரொம்பவும் அதுக்காக வருத்தப்படப் போற. நான் சொல்றேன், கேளுடா...''

வலது புறம் திரும்பி எங்கோ நிலைத்த பார்வையில் தடுமாறிய குரலில் சொன்னான் ''என்னால முடியாது. இனி எப்பவுமே முடியுமான்னும் தெரியலை.''

பறவைகளின் சிலம்பல் ஒலி காதில் எட்டிய போதுதான் அமலா அவ்விடத்தைச் சுற்றி பார்வையால் தேடினாள். பெரிய அலங்காரக் கூண்டுக்குள் ஏராளமான கிளிகள். எத்தனை வண்ணங்கள். குருவி உடல். தாவிக்கொண்டிருந்தன சில. கீச்சுக் குரல்கள் சேர்ந்திசை போல் எழுந்து ஒலித்தன. கூரைக்கும் சுவருக்கும் இடையே விதவிதமான தொட்டிச் செடிகள். அழகுக் கள்ளிகள். ஊதா, ஆரஞ்ச், வயலட் பூக்கள். தங்க மீன்கள். இமைக்காத கண்கள். அலையும் கண்ணாடித் தூவிகள். ஆக்ஸிஜன் குமிழிகள்.

விரலசைத்து வெயிட்டரைக் கூப்பிட்டு ''இன்னொரு காஃபி, பில்'' என்றாள். தனக்காகத்தான் மறுபடி காபி சொல்கிறாள் என்று காத்திருந்தான். வந்தவுடன் அவளே மறுபடி குடிக்க ஆரம்பித்தாள். அவன் குடிக்காததை கவனிக்கவில்லை போல.

அடுத்த பதினைந்தாவது நிமிடம் கிருஷ்ணாபுரம் கோவில் வாசலில் இருந்தனர். ஆர்க்கியாலஜிக்கு உரிமையானது. குட்டி கிராமம். பாண்டி ஏழாவது முறையாக வருகிறான். வெங்கிடாசலபதியை வணங்கிவிட்டு சடாரி ஆசிர்வாதத்துடன் துளசி இலையைப் பெற்றுக்கொண்டு அரங்க மண்டபத்தில் நுழைந்தபோது ஒரு வெள்ளைக்கார கோஷ்டி அங்கிருந்தது. மூன்று பெண்கள்; இரண்டு ஆண்கள். வயசாளிகள். காமிராக்கள். வண்ண கைடு புக்.

துளசியின் ருசி தந்த முகச் சுளிப்போடு அமலா வந்தாள். கிழவிகள் அவளைக் கண்டு சிநேகப் புன்னகை பூத்தவர். மண்டபத் தூண்களெங்கும் சிற்பங்கள். ஒற்றை நோட்டத்தில் நின்ற இடத்திலிருந்தே கண் சுழற்றி எல்லாவற்றையும் பார்த்தாள். மனிதனை விடப் பெரிய ஆகிருதிகள். உடலிலும் அணிகலன்களிலும் துல்லியமான நேர்த்தி. உணர்ச்சியில் ததும்பும் முகங்கள். அடுத்த கணத்தில் நுழையத் துடிக்கும் முனைப்பு. அந்தக் கணமே நூற்றாண்டுகளாக நிலைத்து நிற்கிறது. அவர்களின் அடுத்த கண வாழ்க்கை கண்டவர் மனவெளியில்தான்.

நகர்ந்துகொண்டே சொன்னாள் ''இந்த முகங்கள்லயெல்லாம் என்ன ஒரு உற்சாகம் பாருடா!''

''வைணவத்துக்கு வாழ்க்கையே ஒரு கொண்டாட்டம் தாங்க்கா.''

கிழவிகள் புரிந்துகொள்ளும் ஆர்வத்தில் அருகே வந்து கேள்வியை முகத்தில் தேக்கினர். அமலா ஆங்கிலத்தில் சொன்னாள். அவர்களையும் அந்த உற்சாகம் தொற்றிவிட்டது. டச்சுக்காரர்கள். உடைந்த இங்கிலிஷ். பாண்டி கைடு ஆனான். அமலா மொழிபெயர்த்தாள்.

பீமன், அர்ச்சுனன், கர்ணன், அப்சரஸ், ரதி, மன்மதன், சிங்கள இளவரசி, வீரபத்தன், பாடினி, புருஷா மிருகம், துறவி என்று ஒவ்வொரு தூணாக விளக்கி பதினாறு தூண்களைத் தாண்ட ஒரு மணி நேரம் கடந்து விட்டது. வேண்டுமென்றே இரண்டாவதையும் ஐந்தாவதையும் விட்டு வைத்திருந்தான். அவை கதைகளை ஒளித்து வைத்திருந்தன.

இரண்டாவதில் ஒரு குறத்தி குட்டி இளவரசனைத் தூக்கித் தோளில் வைத்துக் கடத்திக்கொண்டு போகிறாள். இடப்புறம் கிலுகிலுப்பையை ஆட்டி அவன் கவனத்தைக் கவர முயலும் சேடி. அவன் திரும்பவில்லை. குறத்தி கடத்தி விடுகிறாள். வலதுபுறம் ராணி, மகன் எங்கிருப்பான் என்று குறிகாரியிடம் கை நீட்டிக் கேட்கிறாள்.

ஐந்தாவது தூணுக்கு வந்ததும் கதையை அவர்களையே ஊகித்துச் சொல்லுமாறு விட்டுவிட்டு மௌனமானான். அவர்கள் முதலில் வியந்தது சிலையின் காயத்திலிருந்து வழிந்த ரத்தத்தைக் கண்டுதான். இயற்கையாகவே செவ்வரியோடிய கல்லில் அந்த இடத்தில் காயத்தை அமைத்துவிட்டான் சிற்பி. தொட்டுத் தொட்டுப் பார்த்து ரசித்தனர். காயம் பட்டும் அவன் சந்தோஷமாக இருப்பதாகச் சொன்னாள் ஒரு அம்மாள். அவளும் பார், அப்படித்தானே இருக்கிறாள் என்றாள் இன்னொருத்தி.

அழகு, நேர்த்தி, கலை பற்றிய வியப்புகள் ஓய்ந்தபின் கதையை அல்லது கதைகளை விளக்கினான் பாண்டி. அவன் ஒரு குறவன் (ஜிப்ஸி என்றாள் அமலா. அவள் பெயரை அப்போதே அவர்கள் கேட்டபோது இம்மாகுலேட் என்றாள். 'ஜஸ்டிபைடு' என்று பதில் வந்தது.) அல்லது குறுநில மன்னனாக இருக்கலாம். இளவரசியைச் சிறையெடுத்துச்

செல்கிறான். தோளில் தூக்கிக்கொண்டு. இளவரசி மணத்திற்கு தயாரான குமரி. அது உடன்போக்காகவும் இருக்கலாம். தூணின் பக்கவாட்டில் இடது வலது ஓரங்களில் அவனைத் துரத்தி வரும் குதிரை வீரர்கள். ஒருவனிடம் ஓங்கிய வாள். மற்றவனிடம் பாயும் ஈட்டி. தளபதி அல்லது ராஜகுமாரனாக இருக்கலாம். குதிரையில் விரட்டி வந்த ராஜகுமாரன் ஈட்டியால் குறவனின் இடது விலாவில் குத்திவிட்டான். அந்தக் கணம் நிலை பெற்று அக்காட்சி சிலையாக கண்முன் விரிகிறது. காயத்திலிருந்து ரத்தம், புடைத்த விலா எலும்புகளில் மடிந்து மடிந்து வழிந்து தொப் புளைத் தொடுகிறது. காயத்தைப் பற்றிக் கவலைப்படாமல் இளவரசியை வென்ற வெற்றிக் களிப்பிலேயே அவன் மலர்ந்த முகத்துடன் இருக் கிறான். தோளில் இருக்கும் இளவரசி வெயிலுக்கு மறைப்பாகத் துகிலை விரித்துத் தன் தலைக்கு மேல் குடையாகப் பிடித்திருக்கிறாள். முகத்தில் புன்னகை. திருப்தி. குறவன் குத்துப்பட்டு விழப் போகிறான், தான் மீட்கப்படுவோம் என்றுதான் சிரிக்கிறாளா? மீள வேண்டுமென நினைப் பவள் இடக்கையால் அவன் குடுமியையும் வலக்கையால் முக்காடையும் பற்றிக்கொண்டு அவன் தோளில் அமர்ந்திருக்கும் இணக்கம் ஏன்? என்றால் அவன் காயம் பட்ட பின்னும் அவள் புன்னகைப்பதன் பொருள்? இந் நாடகத்தை அவரவர் மனப் போக்கிற்குத் தக்க விளங்கிக் கொள்ள வேண்டியதுதான்.

பல கோணங்களில் ஏராளமாகப் படம் பிடித்தனர். சற்று நேரம் கழித்துப் பாண்டி சொன்னான். காதல் வயப்பட்டவர்களுக்கு இந்தச் சிலையில் முதலில் கண்ணில் படுவது - குறவன் முகத்தில் பெருமிதம்; இளவரசிக்கு நாணம்.

அச்சிலை முன்னிருந்து கலையுமுன், அந்த அம்மாக்களை விலகச் சொல்லிவிட்டு ஒருவர் ஐந்தாறு அடி பின்னே நகர்ந்து படம் எடுத்தார். மின்னல் வெட்டிய பிறகே பாண்டி திரும்பிப் பார்த்தான். போலாராய்டு காமிரா போல. படம் வெளியே வந்தது. அமலாவிடம் படத்தைக் கொடுத்து வாழ்த்தினார். படத்தை வாங்கியவள் சிறுகச் சிறுக உருப் பெற்றுப் படமாகிக் கொண்டிருக்கும் வெண்படலத்தைப் பார்த்தாள். பாண்டியும் எட்டிப் பார்த்தான். முதலில் அவள் கூந்தல் உயிர் பெற்றது. பின் கண்கள். முகம். நீல சுடிதார். முகம் நிமிர்ந்து சிலையை நோக்கிக் கொண்டிருக்கிறது. மேலும் ஒரு சிலை பாண்டியின் பக்கவாட்டிலிருந்து எடுத்ததால் அவன் முகம் தெரியவில்லை. காதும் கன்னமும் மட்டும்.

முகப்புக்கு வந்ததும் அவர்கள் மகிழ்ச்சியுடன் கை குலுக்கி விடைபெற்றுச் சென்றனர். மணி பன்னிரண்டு ஐம்பது.

மண்டப வாயிலின் மேல்படியில் வலது ஓர யானைக்கு அருகில் அமர்ந்திருந்தாள். அருகே அவர்கள் கொடுத்துவிட்டுப் போன தண்ணீர் பாட்டில் இருக்க பிஸ்கட் பாக்கெட்டைப் பிரித்தாள். யானையை ஒட்டி சிலையாக ஒரு சேடி. இரண்டு படிகள் கீழே அவள் காலடியில் பாண்டி.

படிகளின் இடது எல்லையில் யானையின் காலடியில் ஒருவன் மிதிபடும் சிற்பம். 'எழுகளிறு மிதித்த ஒரு பழம் போல.' பாட பேதம். 'எழுகுளிறு மிதித்த ஒரு பழம் போல.' நண்டுகள் கடித்திழுக்கும் அத்திப் பழம் போல் மனம். உணர்வைச் செறிக்கும் பாடல். ஏதேன் தோட்டத்தில் மாம்பழம் உண்டா? கனிக்குள் சிறைப்பட்ட வண்டு.

கோவிலில் யாருமே இல்லை. முன்னே வெளி விரிந்து வெயிலில் கிடந்தது. ஊமை வெயில். தூரத்தில் பலிபீடம். கொடிமரம். மண்டியிட்டுக் கைகுவிக்கும் கருடாழ்வார்.

மயிலைக் கன்றுக்குட்டி ஒன்று துள்ளிக்கொண்டு கோவிலினுள்ளே வந்தது. சில நிமிடங் கழித்து அதை விரட்டியபடி ஒரு பெண் நுழைந்தாள். அவளுக்குச் சிக்காமல் துள்ளி மறிந்தது. கொஞ்ச நேரம் ஆட்டங் காட்டி விட்டு அவள் அதட்டலுக்குப் பணிந்து வெளியேறியது.

அமைதி. எந்த ஒலியுமற்ற அமைதி. அணில்களின் கீச்சிடல் அதைக் கலைத்தது. தேடினான். புல் தரையிலிருந்து மண்டபத்துக்குத் தாவியது ஒன்று. அணில்கள் தூண்களுக்கிடையே துள்ளிக்கொண்டிருந்தன.

பிஸ்கட் முடிந்து தண்ணீரும் தீர்ந்துவிட்டது.

பாதங்களையே பார்த்தவாறிருந்தான். இப்படியே இவை சிலையாக நிலைத்துவிட்டால்... சடாரியாக சென்னியில் சூடவும் சித்தமாக இருந்தான்.

நெயில் பாலிஷ் கூட இல்லை. சுடிதார் விளிம்புக்குக் கீழே வெள்ளிக் கொலுசு வளைவிற் படிந்து சரிந்திருந்தது. உலோகம் என்றே தோன்றாத வெண்மை.

''கொலுசுல முத்து இல்லையாக்கா?''

''கான்வென்ட்ல அமைதியா இருக்கணுமில்லையா? ஒலிக்காத கொலுசுதான் நல்லது. யாருக்கும் தெரியாது.''

''சிரிக்காத கொலுசு... சிணுங்காத கொலுசு...''

''ஏண்டா...கடல்ல போடலாங்கிறயா?''

''..................''

''இனி நான்தான்டா கடல்ல விழணும்.''

மௌனம். நிமிடங்கள் கடந்துகொண்டிருந்தன. ஏழு வயதுச் சிறுமியொருத்தி வேகமாக ஓடி வந்து அமலாவுக்குப் பின்னே இருந்த தூணில் ஒளிந்தாள். சில நிமிடங்களுக்குப் பிறகு இன்னொரு குட்டிப்பெண் வந்து தேடினாள். பாண்டியின் முகத்தில் உதவியை எதிர்பார்த்தாள். பாண்டி சிரித்தபடி ''இங்க யாரும் வரலை'' என்றான். ஏமாற்றத்தோடு திரும்பி அவள் பத்து எட்டு வைத்ததும் தூணுக்குப் பின் சிரிப்பு வெடித்தது. பிறகு அடக்கமுடியாமல் பொங்கியது. அவள் திரும்பிப் பார்த்து ''கண்டுபிடிச்சிட்டேன்'' என்று குதித்தாள். ''நீயாக் கண்டுபிடிக்கலை'' என்று கத்தியபடி

இவள் இறங்கி ஓடினாள். அர்ச்சகர் கோவிலுக்குள்ளிருந்து ஓட்டமாக வந்து சத்தம் போட்டு விரட்டினார். மறுபடி உள்ளே நுழைந்து கொண்டார்.

மௌனம் மீண்டது. அழகான இள வெயில் தவழ்ந்துகொண்டிருந் தது. ''வளராமலே இருந்திருந்தா எவ்வளவு புண்ணியமா இருந்திருக்கும்! இல்லையாடா...''

கைப் பைக்குள்ளிலிருந்து குட்டி மணியொலித்தது. செல்போனை எடுத்தாள். எஸ் எம் எஸ். காத்தரீன்.

ஆன் பண்ணிப் பார்த்துக்கொண்டே சொன்னாள் ''வேர் ஆர் யூன்னு கேட்கிறா. அட் ஹெல்னு அடிச்சி விடுறேன்.''

பட்டன்களை அழுத்திக்கொண்டிருந்தாள். தொடர்புப் புரட்சியின் வடிவத்தைக் காணும் ஆவலில் பாண்டி அவள் கையிலிருந்து பிடுங்கிப் பார்த்தான். 'ஆன் கிளவுட் நைன்' என்றிருந்தது. அவனுக்குப் புரிய வில்லை. என்றாலும் நரகமில்லை.

கோவிலை விட்டு வெளியேறி இரண்டு பர்லாங் தெற்கே வந்து மெயின் ரோட்டைத் தொட்டதும் வண்டியை நிறுத்தினான்.

''அக்கா... இப்ப எனக்குக் கடலப் பாக்கணும். இப்பவே...''

''திருச்செந்தூர் எவ்வளவு தூரம்டா?''

''27 மைல். பறந்தா அம்பதே நிமிஷம்.''

செல்போனை எடுத்தாள். ''கேத்தரின், டவுன்ல அக்கா வீட்ல இருக்கேன். ஐஞ்சு மணிக்குள்ள வந்துருவேன்'' ''.......'' ''சரி.'' பேச்சை நீடிக்காமல் கட் பண்ணி செல்லை முடக்கி பைக்குள் போட்டாள்.

ஒரு பக்கமாக இல்லாமல் அவனைப் போலவே அமர்ந்தாள். வண்டி இடதுபுறம் திரும்பியது. மனோவேகத்தில் பறந்தது. காற்று வேகமாக முகத்தில் மோதி படபடத்தது. காற்றைக் கிழிக்க விசையைக் கூட்டினான். பறந்து விடாமல் துப்பட்டாவை கழுத்தில் ஒரு சுழியாக்கிப் போட்டுக்கொண்டாள். வாகனங்களற்ற நெடுஞ்சாலை கருங்கம்பளம் விரித்து வரவேற்றது. மண்திட்டு முகங்கள் செம்மையாய்ச் சிவந்திருந் தன. மரங்கள் காற்றைக் குடித்துத் தள்ளாடின. அவள் வார்த்தைகள் காற்றில் பறந்தன. அவள் நெருங்கி முதுகில் சாய்ந்து அவன் தோளில் முகம் வைத்து காதோடு பேச வேண்டியிருந்தது. ஹாஸ்டல் குறும்புகள்; கதைகள்; ஜோக்குகள். எதிரே நீலமாய் வளைந்த வானம். வெளுத்துப் பொங்கிய முகில்கள். அண்ணாந்து பார்த்தான். கிருஷ்ணப் பருந்து ஒரு புள்ளியாய் வெகு உயரே சிறகு விரித்திருந்தது. முதலில் அதை மனத்தில் முந்தினான்.

திருச்செந்தூரில் மண்டபத்தில் கட்டியிருந்த இரண்டு யானை களையும் பார்த்துக்கொண்டே நடந்தார்கள். கால் மாற்றி ஆடிக்கொண்டே

துதிக்கையால் தென்னை மட்டையை வளைத்தது ஒன்று.

பூக்காரச் சிறுமியொருத்தி எங்கிருந்தோ ஓடி வந்தாள். பாண்டியிடம் வந்து 'அண்ணா அண்ணா...' என்று கெஞ்சினாள். கடந்த பின்னும் விடவில்லை. பாண்டியையே துரத்தி வந்தாள். அமலா நின்று ரூபாயை எடுத்து அவளிடம் கொடுத்தாள். அவள் மல்லிகைச் சரத்தை நறுக்கியதும் வாங்கக் கை நீட்டினாள். அவளோ பாண்டியின் கையில் திணித்துவிட்டு கூடையோடு நகர்ந்தாள். ''இந்தப் பொண்ணு இன்னும் மெச்சூர் ஆயிருக்கவே மாட்டா. அதுக்குள்ள என்ன விவரம் பாரு!'' என்றபடியே தலையில் சூடிக்கொண்டாள்.

கடல் மணத்தது. அலைகள் ஏறி வந்தன. சூரியன் பின்னிருந்து முதுகைத் தழுவினான். கூச்சம் வெம்மையில் கிளர்ச்சியாய் மலர்ந்தது. கரையெங்கும் மரகதமாய் பாசிகள் ஒதுங்கியிருந்தன. அலைமடக்கில் பழுப்பு நீர். ஆழ்கடலோடு அடர் நீலம் செறிந்திருந்தது.

கடலை விட்டு வரவே மனமின்றி வெகு நேரம் கால் நனைத்திருந்தாள். கொலுசொலியாய்ச் சிணுங்கின அலைகள். வெள்ளியாய் மின்னின. பொங்கிப் பொங்கித் தழுவின. அவளது வெறுமையான பாதங்களில் நுரைப் பூக்களே ஆரமாகி அணி செய்தன.

எவ்வளவு அழகான பெயர்! திருச்சீரலைவாய்!

☆☆

*காற்றின்மீது நீ வைத்த முதற் பார்வை உன் கண் பறித்து சூறாவளியாய் சுற்றித் திரிந்து வந்து வர்ணங்களைக் குழைத்து வார்த்தைகளை அடுக்கி வாத்தியங்களின் வடுக்களை நிமிண்டி மௌனத்தைப் பிரித்து நிசப்தங்களைப் பரப்பி நதிகளைத் துரத்தி அலைகளுக்குப் பெயரிட்டு பேசப் பேசப் பேச ''ஹூம்'' கொட்டி இளைத்தது கடல்.*

☆☆

''அதிக படிப்பு உடலுக்கு இளைப்பு. நான் சொல்லலை. விவிலியம் சொல்லுது. என் அனுபவத்தில அது உண்மைதான்'' என்றார் ஞானராஜசிங் புரபஸர். அவர் எடை நூறு மார்க்கை தாண்டியிருந்தது. ''படிக்கும் போது துரும்பா இருந்தேன். ஒண்ணுக்கும் உதவலனா ஒட்டடை அடிக்கவாவது உதவும்னு வீட்டுல கேலி பண்ணுவாங்க'' பால்ய காலத்தை நோக்கி ஒரு சிரிப்பு பறந்தது. ''அந்தக் கருவாயன் அல்போன்ஸுகிட்டப் போகாதடே. கம்பராமாயணத்த கையில கொடுத்து ஒன்ன ஒய்ச்சுப்பிடுவான். நானு கைடா இருக்கேன். சொன்னாக் கேளு. தமிழ் வட்டாரத்துல முற்போக்கு சிந்தனைகளை நுழைய விடமாட்டானுங்க. நம்ம அண்ணாச்சியோட விமர்சனங்கள்ல தீஸிஸ் பண்ணுடே. இளைஞர்களுக்கு முற்போக்கு சிந்தனை வேணும்டே.'' சீரியஸான சிந்தனை

முகத்தில் ஓடியது. "சார்... புதுமைப்பித்தனையே பிற்போக்குவாதின்னு சொன்னவங்க..." என்று பாண்டி ஆரம்பிக்குமுன் இடைமறித்த புரபஸர் "என்னடே.... வெளங்காத பயலா இருக்க! எல்லாம் ஒரு போக்குதான்டே.. நான் சொல்றன்டே" என்றார்.

பாண்டி வேறெங்கோ பார்த்துக்கொண்டிருந்தான். "நன்னூல், தொல்காப்பியம், கலிங்கத்துப்பரணி, காதல் பாட்டு, வீரப்பாட்டு, அது நாலூறு இது நாலூறு ஆக எண்ணூறுன்னு மனப்பாடம் பண்ணி மண்டை வீங்கிப் போயிருக்கும். அதனால லைட் சப்ஜெக்டா எடுத்துக்க. கதை குறையா இருந்தா நடை மிடுக்கா இருக்கும். உன் ஸ்டேஜ்ல இப்ப நான் இருந்தா பத்திரிகைகள்ல வர்ற கெவிதைகளை திரட்டியே எம்.ஃபில்ல முடிச்சிருவேன். முடிச்சும் என்ன வாழப்போவது? அதுக்கு போயி எதுக்கு தட்டழிவானேன்!" பாண்டியின் முகம் கல்லாய் இறுகியிருந்ததைக் கண்ட பேராசிரியர் மனந்திரும்பினார். "அது யாருடே தேவதேவன்? நான் கேள்விப்பட்டதில்லையே..."

புரபஸர் கூறியதை அமலா அக்காவுக்கு கடிதத்தில் எழுதினான். "உன் விருப்பப்படிதான் நீ செய்ய வேண்டும். உனக்கு கவிதைதான் சரிவரும்" என்று அடுத்த கடிதத்தில் எழுதியிருந்தாள்.

கவிஞருக்கு கடிதம் எழுதிப் போட்டான். கடிதத்தில் எம்.பில் விஷயத்தை அடிக்கோடிட்டு அனுப்பியிருந்தான். சனி ஞாயிறு தனக்கு ஓய்வு, அந்நாட்களில் சந்திக்க முடிந்தால் நல்லது என்று எழுதியிருந்தார். பஸ்ஸில் போகும் போதெல்லாம் அவர் வரிகள் மனத்தில் ஓடிக் கொண்டிருந்தன.

ஒவ்வொரு நட்சத்திரமும்
உதிர்ந்தாக வேண்டும்
அதை நான் பொறுக்கியாக வேண்டும்
அப்படியொரு காலை வர வேண்டும்
பொறுக்கிய அத்தனையையும்
நான் தூக்கியெறிய வேண்டும்
அப்படியொரு காலம் வர வேண்டும்.

~

பூ -
அணையாத
தன் காதலை வெளிப்படுத்த
மலரைச் சொல்லாக்கிய
முதற் காதலனின் இதயத் துடிப்பு.

~

காதல் என்பது
இறையனுபவம்

எந்தச் சொற்களாலும்
உணர்த்திவிட முடியாதது அது.

... ... ...

~

அமைதி என்பது மரணத் தறுவாயோ?
வந்தமர்ந்த பறவையினால்
அசையும் கிளையோ?

... ... ...

அமைதி என்பது வாழ்வின் தலைவாயிலோ?
எழுந்து செல்லும் பறவையினால்
அசையும் கிளையோ?

சின்னச் சின்னதாக ஏராளமான அவரது வரிகள் நினைவிலிருந்தன. அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது.

பாவாடை மறைப்புக்குள் உட்கார்ந்திருக்கும்
பெண் குழந்தை
தன் உடலிலிருந்து
திரவக் கத்திபோல்
பூமிக்குள் பாயும் நீரின்
மர்ம இசையை
உற்றுக் கேட்கிறாள்

என்ற வரிகள் திடீரென எக்குத்தப்பாக நினைவில் வந்து ஒருவித சிலிர்ப்பை ஏற்படுத்தியது. கெண்டை நரம்புகளில் சாரைசாரையாய் எறும்புகள் ஊர்ந்த உணர்வு ஏற்பட்டது. இயங்கும் நிலையிலும் ரகஸியங்கள் ரகஸியமாக இருப்பதையே அந்த கவிதை உணர்த்துவதாக அவன் மட்டுக்கு புரிந்துகொண்டான்.

கவிஞரை சென்று சந்தித்ததை அமலா அக்காவுக்கு விவரணையோடு எழுதினான்.

தூத்துக்குடியில் வ.உ.சி.பூங்காவில் இறங்கி மணிநகரில் 4/5 கதவிலகத்தை தேடிப் போய் காம்பவுண்ட் கேட்டில் நின்று குரல் கொடுத்தபோது குட்டி நாய் வரவேற்றது. குரல் வந்த திக்கை நோக்கினேன். வீட்டுக்கும் வெளிச்சுவருக்கும் இடைப்பட்ட சிறிய தோட்டத்தின் இடப்பக்கத் தடுப்பிலிருந்து பொமரேனியன் துள்ளிக் கொண்டிருந்தது.

''ஸ்நோபெல் சும்மாயிரு'' என்ற அதட்டலைத் தொடர்ந்து ''யாரு?'' என்ற கேள்வி வர நிமிர்ந்து பார்த்தேன்.

மாடிப்படி மேலே செங்கல்களை அடுக்கிக் கொண்டிருந்த கொத்தனார் என்னைப் பார்த்து ''கேட் திறந்துதான் இருக்கு. மேல வாங்க'' என்றார்.

முருங்கை, கொய்யா, பப்பாளி, கறிவேப்பிலை மரங்களின் கீழாக வலது ஓரமாய்ப் போய் குறுகிய படிகளில் ஏறினேன். கொத்தனார் மட்டும் டி சர்ட் அணிந்து நின்றிருந்தார். வேறு யாரும் இல்லை.

''தேவதேவனப் பாக்கணும்.''

''நாந்தான். நீங்க?''

ஆச்சரியத்தை விழுங்க முடியாதவனாய் என்னை அறிமுகப்படுத்திக் கொண்டேன்.

''வாங்க வாங்க. கீத்துக் கொட்டகையில உக்காருங்க. பத்து நிமிஷத்துல இதைக் கட்டி முடிச்சிட்டு வந்திர்றேன்.''

அவர் கூடவே நின்றிருந்தேன். சின்னதாக ஒரு பேஸ்கட் பால் போர்டை ஒற்றை வரிசை செங்கல்களால் உருவாக்கிக் கொண்டிருந்தார்; அவர் மகனும் அவன் நண்பர்களும் விளையாட.

''மூணு கிலோ சிமென்ட்தான் வாங்குனேன். சரியாப் போச்சு.''

''செங்கல், மணல்?''

''ஏற்கனவே கெடந்தது.''

அதைக் கட்ட அவர் தேர்ந்தெடுத்த இடம் வினோதமாக இருந்தது. கேட்டேன்.

''நல்லா சுத்திப் பாருங்க.''

எனக்கு எதுவும் பிடிபடவில்லை.

அவரே பின்னர் விளக்கினார் ''வேற எங்க கட்டினாலும் கிளைகளை வெட்ட வேண்டியிருக்கும்.''

நியாயம்தான் என்று தோன்ற சுற்றிலும் மரங்களை நோட்ட மிட்டேன். வேம்பின் கவைக்கிடையே ஒரு பலகைப் பரண் தெரிந்தது. 'ஏனல் காவலில் கிளி கடிபவர் யாரோ' என்ற ஐயத்தோடு பரணைக் காட்டிக் கேட்டேன்.

''ஸ்கூல் இல்லைன்னா பசங்க இதுலதான் ஆட்டம் போடுவாங்க.''

வேலையை முடித்து உபகரணங்களை ஒதுங்க வைத்துவிட்டு கீழே அழைத்துச் சென்று மனைவியிடம் அறிமுகப்படுத்தினார். காபி வந்தது.

'மின்னற்பொழுதே தூரம்' புத்தகத்தின் பின்அட்டையிலிருந்த ஓவியத்திலிருந்து நிறைய மாறியிருந்தார். கண்கள் மட்டும் கூர்மை குன்றாமலிருந்தன. மொட்டைமாடிக்கு அழைத்துச் சென்றார். தென்னை ஓலைகளால் வேயப்பட்ட குடிலின் வாசலைத் திறந்தார். கார்ட்டன் அட்டைக் கதவு மூன்றாக மடிந்து மேலேறியது. கடைச் சார்ப்பு போல ஒரு கம்பால் அதை முட்டுக் கொடுத்தார். நண்பர்களை கவிஞர் சந்தித்து உரையாடும் கூடாரம் அதுதான் என்பதற்கு நிறையச் சான்றுகள். குறிப்பாக வயர் பின்னிய நான்கு நாற்காலிகள். எல்லாத் திசையிலும்

மரங்கள். குழந்தைகள் தண்ணீர் தொட்டிக்குள் கைகளை அளைந்து விளையாடுவதுபோல மொட்டை மாடியில் மரங்கள் கிளைகளை அளைந்து கொண்டிருந்தன.

எல்லாவற்றையும் புதிதாக முதலிலிருந்தே ஆரம்பிக்க வேண்டி யிருந்தது. கடிதத்தில் இன்னும் விரிவாக விளக்கமாக எழுதியிருக் கலாமோ என்று அப்போது யோசித்தேன். குடிலின் சுவருக்கும் கூரைக்கும் நடுவில் காற்றுக்காக இடைவெளி செவ்வகச் சாளரங்களாகத் திறந் திருந்தது. இரண்டு காகங்கள் பறந்து வந்து சுவர் திண்டில் அமர்ந்து வாலை எங்கள் பக்கம் திருப்பி வெளியை பராக்கு பார்க்கத் தொடங்கின. ''காக்கா பாத்தீங்களா'' என்று கேட்டுவிட்டு அந்தக் காகங்களைப் பெரு மிதத்துடன் பார்த்தார். அவர் மனத்தின் விரல்கள் ரகஸியமாக காகங்களின் முதுகை வருடிவிட்டன போலும். அவர் முகத்தில் திடீரென்று கவி போதத்தின் நிழல் பரவியது. நானும் காகங்களைப் பார்த்தேன். வெறும் பார்வை. வேறு வழியில்லாமல் அந்த வேலை. ''காகங்கள் சகிப்புத் தன்மையுள்ள பறவைகள். அது நம்மளையும் இந்த நகரத்தையும் சகிச்சிக் கிட்டு நம்ம கூடவே வாழுது. வாகனங்களோட இரைச்சல், புகை, லவுட் ஸ்பீக்கர், சினிமா பாட்டு, பட்டாசு, ஊர்வலம், போராட்டம் எல்லாத் தையும் சகிச்சிக்கிடுது. சிட்டுக்குருவிகளும் அப்படித்தான். இந்த இரண்டுந்தானே இங்க கூடு கட்டுது. மற்றதெல்லாம் காட்டுக்குப் போயிடுது.''

சின்ன மௌனம், அல்லது சின்னஞ்சிறிய மௌனம். 'பருகு நீர், பறவைகள், பூ, மரம், காடு, பொங்கும் குழந்தைமை எங்கே? எங்கே?' என்று அலைகிறாரோ என்று எண்ணினேன்.

ஈஸிசேரில் சாய்ந்து கிடந்த கவிஞர் உடலை முறுக்கியெடுத்து நிமிர்ந்தார். ''கொஞ்ச நாளைக்கு முன்னாடி ஒரு அபூர்வமான குருவி இந்த மரத்துல கூடு கட்டுச்சி. ரொம்ப அழகான குருவி. சிறகு ஒரு கலர். வால் ஒரு கலர். வயிறு ஒரு கலர். தலையில செல்லம்போல கிரீடம் மாதிரி ஒரு கொண்டை. குச்சிகுச்சியா கால். 'க்விக் க்விக்'னு பிசிறாத குரல். பார்க்க ரொம்ப ரம்மியமா இருந்துச்சி. நான் ரொம்ப சந்தோசமா இருந்தேன்.'' கவிஞர் கை நீட்டிய இலக்கில் மரம் ஏதும் தென்பட வில்லை. மன எழுச்சியில் பேசும்போது கைச் சைகைகளின் திசை துல்லியமாக அமைந்து விடுவதில்லை.

''அந்தக் குருவி இப்போ எங்கே'' என்று கேட்டேன்.

''அது ரொம்ப சென்சிட்டிவ், சகிப்புத்தன்மை தெரியாது. அந்த குருவிக் கூட்டை யாரோ டிஸ்ட்டர்ப் பண்ணிட்டாங்க. உடனே இடத்த காலி பண்ணிட்டு போயிட்டு'' அவர் முகத்திலும் குரலிலும் சோகத்துக்கு பதில் வியப்பு. ''அந்தக் கூட்டை கட்டுறதுக்கு அந்தக் குருவி ஆறு மாசம் இந்த இடத்தை ஆராய்ச்சி பண்ணிச்சி. காலையில வரும். முருங்கையில

உட்காரும். க்விக் க்விக்னு சத்தம் போடும். வேம்புல தாவித் தாவி விளையாடும். பப்பாளி பழுத்திருந்தா கொத்தி சாப்பிடும், போயிடும். இடம் காற்று வெப்பம் எல்லாம் சரியா இருந்ததாலதான் கூடு கட்டுச்சி. இருக்கமுடியாம போயிடுச்சி.''

கவிஞருக்கு எப்படி ஆறுதல் சொல்வதென்று எனக்குத் தெரியவில்லை. திடீரென்று அவரை கவிதை பக்கம் பிடித்து இழுக்கவும் தயக்கமாக இருந்தது. அவர் வருத்தத்தை மேலும் கீறி ஆழப்படுத்துவது போல ஒரு கேள்வியைத்தான் அப்போது கேட்க முடிந்தது. வேறு வழியில்லை. ''குருவி எந்த மரத்தில கூடு கட்டுச்சி?'' அவர் மீண்டும் பழைய திசையிலேயே கையை நீட்டி வெற்றுவெளியை நோக்கியபடி பேசத் தொடங்கினார். ''இந்த இடத்துல பெரிய வேம்பு நின்னது. இந்த குடிலை விட உயரம். அது இருக்கும்போது குளுமை இன்னும் நல்லாயிருக்கும்.'' சற்று நிறுத்திவிட்டு குடிலுக்குள் காற்றின் போக்குவரத்தை அளந்து பார்த்தார். காற்றோட்டமாகத்தான் இருந்தது, புழுக்கமில்லை. ''வேம்பு மூட்டுல தண்ணீர் நிக்குறதுக்காக பாத்தி பரிஞ்சி வைச்சிருந்தோம். தண்ணி அளவுக்கு மீறி தேங்குனதுல வேர் அழுகிப் போச்சி. பெரிய மரம்! பெரிய மரம்...'' என்றார். இரண்டு பேராலும் நகர்த்த முடியாத கனத்த மௌனம் பனிப்பாறையாக உருகி துளி வற்றிப் போகும்வரை அமைதி.

கீழே வீட்டிலிருந்து சாப்பாட்டுக்கு அழைப்பு வந்தது. இருவருமாக இறங்கிப் போய் மதிய உணவு அருந்தினோம். சாப்பிட்டபடியே கவிஞர் சின்ன சின்ன வார்த்தைகளில் உரையாடினார். ''கவிப் பேரரசு விருது வாங்க ஏன் மறுத்தீங்க'' என்று கேட்டேன். ''உடன்பாடு இல்லை'' என்று ஒரே வார்த்தையில் சொன்னார். ''எங்க சாதி அமைப்பிலிருந்தும் விருது தர முன்வந்தாங்க. கவிஞனுக்கு சாதியில்லைன்னு வேணாம்னு சொல்லிட்டேன்'' என்று கூடுதல் தகவலையும் சொன்னார். அந்த விருதின் ஆறு இலக்கத் தொகையை ஏற்கனவே அறிந்திருந்த நான் திடுக்கிட்டேன். எழுத்திலோ வாழ்க்கையிலோ எந்த சமரசமும் செய்து கொள்ளாமல் மனசாட்சிக்கு நேர்மையாகத் தன் கவிதைகளைப் போலவே வாழும் அவர் மேல் வைத்திருந்த மரியாதை இரட்டிப்பானது.

'தேவதேவன் கவிதையில் இயற்கை' என்ற தலைப்பைச் சொன்னதும், அந்தத் தலைப்பில் ஏற்கனவே யாரோ எம்ஃபில் பண்ணிவிட்டார்களே என்றார். அந்த மாணவனின் அல்லது மாணவியின் பெயரை நினைவில் கொண்டுவர நெற்றியில் கோடுகள் வரைந்து பார்த்தார். உங்கள் கோணத்தில் நீங்கள் அணுகுங்கள்; தன்னால் இயன்ற ஒத்துழைப்பை தருகிறேன் என்றார். தலைப்பு பறிபோனது பற்றி நான் கவலைப்படவே இல்லை. இயற்கையை மறந்துவிட்டு தலைப்பில் கருணையை ஏற்றினேன். இன்னும் இரண்டு மூன்று முறை சந்திக்க வேண்டும் என்று தோன்றியது.

நாலு மணி வாக்கில் விடைபெற்றுக் கிளம்ப முயன்றபோது ''இருங்க, நானும் வர்றேன். ரேஷன் கடைக்குப் போகணும்'' என்றார்.

அவரிடமிருந்து சைக்கிளை வாங்கித் தள்ளிக்கொண்டே நடந்தேன். உற்சாகமாக அவரது கவிதைகளைப் பற்றிப் பேசியபடி வந்தார். அவர் மறந்திருந்த வரிகளை எடுத்துக் கொடுத்தபோது முகமலர்ச்சியோடு புதிய புதிய விளக்கங்களை அளித்தார்.

அரை மணி நேரம் வரிசையில் நின்று வாங்கிக்கொண்டு திரும்பினோம். பஸ் ஸ்டாப் வரை வந்தார். டீ வாங்கிக் கொடுத்துவிட்டு ஸ்டாப்பில் நின்று 'ஏசுவும் சமாரியப் பெண்ணும்' கவிதையை விளக்கிக் கொண்டிருந்தார். நாலு பஸ்களை செல்லவிட்டேன். ஐந்தாவது பஸ் வரவும் ''அடிக்கடி வாங்க'' என்று அன்போடு விடை பகர்ந்தார் கவிஞர்.

அக்கா அந்தக் கடிதத்தைப் படித்துவிட்டு, 'நீ கதைகளும் எழுதலாம்' என்று பதில் போட்டிருந்தாள்.

☆☆

தமிழ் எம்.ஏ. எம்.பில் முடித்துவிட்டு செகண்ட் கிளாஸ் சர்டிபிகேட்டோடு பாண்டி ஊரில் இருந்தான். காலையில் வேலைக்குச் சென்றால் மாலையில் வீடு திரும்பிவிட சாத்தியமுள்ள ஒரு வேலை சுற்று வட்டாரத்துக்குள் கிடைக்கும் என்ற நம்பிக்கை உறுதியாக அவனிடமிருந்தது.

அவன் ஒரு பட்டதாரியாகிவிட்ட விஷயம் சொந்தபந்தங்களுக்கு மட்டுமின்றி அக்கம்பக்கத்து ஊர்களுக்குக் கூடத் தெரிந்துவிட்டது. தெருமுனை சந்திப்பில் அப்பாவின் நண்பர்கள் சைக்கிளை விட்டிறங்கி எதிர்கொண்டு நின்று வேலை நிலவரம் பற்றி விசாரிப்பார்கள். 'தேடிக் கொண்டிருக்கிறேன். நாலு இடங்களுக்கு விண்ணப்பித்திருக்கிறேன், சீக்கிரம் பதில் வரும்' எனப் பண்போடு பதில் கூற, பெருமிதத்தோடு விடைபெற்றுச் செல்வார்கள். அவன் படித்தது, பரிட்சை எழுதியது, மார்க்கு வாங்கியது எல்லாம் ஒரு பக்கமிருக்கட்டும், அவனை ஒரு பட்டதாரியாக்கிய பெருமை அப்பாவின் ஒவ்வொரு சிரிப்பிலும் ஒட்டிக் கொண்டிருந்தது. டீக்கடையில் கூட பையனைப் பற்றி விசாரிக்காமல் சில்லறை வாங்கிக்கொள்ள மாட்டார்கள்.

அனுப்பிய விண்ணப்பங்களுக்கு எங்குமே தகுந்த பதில் வரவில்லை. அவமரியாதைக்குரிய தகவல்களுமில்லை. ஊர் எல்லையை ஒட்டி ஒரு சுண்ணாம்பு கம்பெனி தொடங்கியிருந்தார்கள். முட்டைக் கோஸ் பூவைப் போன்ற வெள்ளைக் கற்களை லாரியில் ஏற்றி வந்து மைதானத்தில் பரப்பி உடைத்தார்கள். கை வலுவில் இயன்றவரை பொடியாக்கி பிறகு எந்திரங்களிலிட்டு மாவாக அரைத்து மூட்டை கட்டினார்கள். 'சாக்பீஸ் கம்பேனி' என்று அது அறியப்பட்டது. அந்த கம்பெனிக்கு

நன்றாக எழுதப்படிக்கத் தெரிந்த, கணக்கு சரளமான ஒரு சூப்பர்வைசர் தேவைப்பட்டபோது அம்மா, பாண்டியிடம் ''உனக்கு அந்த வேலை கிடைக்குமா'' என்று கனிவாகக் கேட்டாள். வேலை கிடைத்துவிட்டால் அடுத்தது கல்யாணம்தான் என்பது திட்டம். பட்டப் பகலில் வெட்ட வெளியில் வெள்ளை பூத்த ஆண்களும் பெண்களும் சுத்தியல் வீசி கட்டி களைத் தூளாக்கும் காட்சி ஞாபகத்தில் விரிந்து சுருண்டது. ஒரு நாளுக்குக் கூலியாக பெண்களுக்கு எண்பத்தைந்து ரூபாயும் ஆண்களுக்கு நூற்றி இருபத்தி ஐந்து ரூபாயும், கண்பார்வை பறிபோகாமலிருக்க ஒரு எம்.ஜி.ஆர் கண்ணாடியும் வழங்கப்பட்டது. 'சூப்பரைசர்' என்றதும் ஐம்பது அறுபது மனிதர்களை மேய்க்கும் பணி தன் மகனுக்குக் கிடைத்தால் போதுமென்று அம்மா கருதிவிட்டாள். நினைத்தது போலவே அப்பா அதற்கு சம்மதிக்கவில்லை. சம்மதித்திருந்தாலும் மாதம் மூவாயிரத்து எழுநூறு ரூபாய் சம்பளத்திற்காக அந்த வெள்ளா வியில் வேக பாண்டி தயாராக இல்லை.

மாதம்தோறும் வீட்டுக்கு இரண்டு முறையாவது சைக்கிள் மணியடித்தபடி வந்துவிடுவார் தபால்காரர் இரண்டு மணியார்டர் களோடு. வடக்கே அண்ணன்கள் குடும்பத்தோடு வசித்தபோதும் அம்மா பெயருக்கு பணம் அனுப்பிவிடுவார்கள். அப்பா ஓய்வு பெற்றிருந்ததால், மாத ஆரம்பத்தில் தாலுகா ஆபீஸ் சென்று பென்ஷன் வாங்கி வந்து விடுவார். ரெண்டு அண்ணன்களும் கடைத்தேறி விட்டனர். பாட்டியும் பாண்டியும்தான் வேலையற்றிருந்தார்கள். வீட்டில் அவன் நிலமை அவ்வளவு மோசமடையவில்லை என்ற போதிலும் விரக்திக்கு சற்றே அழுத்தமேற்றி 'நிலாச்சோறு ஊட்டிய வீட்டை தண்டச்சோறும் ஊட்டச் செய்கிறது வாழ்க்கை' என்று நினைத்தான்.

☆☆

**க**ட்டிலில் அமர்ந்து காப்பி குடித்துக்கொண்டிருந்தான் பாண்டி. ''அமலா வந்துட்டுப் போனா'' அம்மா சொல்லிவிட்டு அவன் கண் களையே பார்த்தாள். தூக்கக் கலக்கத்தில் பாண்டிக்கு சட்டென்று பிடிபட வில்லை.'' யார் வந்துட்டு போனா'' திருப்பி கேட்டான் சுரத்தில்லாமல். ''ஏலேய், நம்ம அமலோற்பவம்... சிங்கம் மச்சான் மவா, கன்னியா ஸ்திரிக்கி படிக்காள்ல...'' கன்னியாஸ்திரி என்ற சொல்லைக் கேட்டதும் அவனுக்கு பொட்டு தெறித்தது. ''அமலா அக்காவா!'' பாண்டியின் முகம் மலர்ந்தது. ''எப்போ வந்தாம்மா?'' ஆர்வமாகக் கேட்டான். ''நேத்தே வந்திருப்பாளாருக்கும்.'' அம்மா ஊகத்தில் சொன்னாள். ''நம்ம வீட்டுக்கு?...'' காப்பி தம்ளரை கீழே வைத்தான். ''காலம்பர, நீ சுருண்ட டிச்சி கொடுவிக்கிட்டு கெடந்த'' ''எழுப்ப வேண்டியதானம்மா.'' ''அவ வேண்டாம்னுட்டா. தூங்கட்டும், நான் பிறவு வாரேன்னுட்டு போனா.''

அம்மா தம்ளரை குனிந்து எடுத்துக்கொண்டு திரும்பினாள். ''வேற ஒண்ணும் சொல்லலியா?'' ''ஒரு நாள்தான் வீவுங்குறமாதிரி எதோ சொன்னா.''

சோம்பல் பறந்து போய்விட்டது. ஜன்னல் கதவுகள் திறந்திருந்தன. காலைச் சூரிய வெளிச்சம் முறுகிக்கொண்டிருந்தது. கசங்கிய உடைகளிலிருந்து விடுபட வேண்டுமென்ற உந்துதல் ஏற்பட்டது. ஒரே ஒரு நாள் விடுமுறையா? மனத்திற்குள் கேள்வி எழுந்தது. கட்டிலை விட்டு துள்ளி எழுந்தான்.

இனி எப்போக்கா ஊருக்கு வருவே என்றதற்கு தெரியலியேடா என்று உதட்டைப் பிதுக்கியபடி அரைகுறை பதிலளித்திருந்தாள். 'நோவிபீரியட் ரொம்ப ஸ்டிரிக்டா இருக்கும்னு சொல்றாங்க. ஊரு வீடு உறவுனு அங்கே பேச்சே எடுக்கக்கூடாது, வீட்டுல யாரும் இறந்து போனா கூட வந்து போறதுக்கு அனுமதி கெடைக்காதுன்னு சொன்னாங்க. அது முடிஞ்சதும் பட்டம் கொடுக்குறாங்க பாரு' அவனுக்குப் புரிந்துவிடக் கூடாது என்று திட்டமிட்டே அவள் மென்று முழுங்கிச் சொல்லிவிட்டு சிறிது நேரம் யோசனையோடு அமைதியாகி விட்டாள். அதைப் பற்றி விலாவாரியாக விசாரிக்க அவனுக்கும் ஆர்வமில்லை, தப்பித் தவறி ஒன்றிரண்டு விஷயங்கள் குறித்து குறிப்பாக பாடத் திட்டங்கள், உணவுப் பழக்க வழக்கங்கள் பொழுதுபோக்குகள் மற்றும் கேத்ரீன் இருக்காளா கேரளாவுக்கு போய்ட்டாளா என்று விசாரிப்பான். பட்டும் படாமலும் தாழ்ந்த குரலில் பதில் சொல்வாள். பரஸ்பரம் உரையாடலுக்கு அது ஒரு தடையாக இருந்துவிடக் கூடாது என்பதை மனத்திற் கொண்டுதான் அந்த கேள்விகளைச் சந்திப்பாள். விருப்பு வெறுப்புகளை கரைத்தொழித்துக் கொண்டிருக்கும் ஸ்திதியில் கனவுகளுக்கு உரிய இடங்களை களைப் பின்றி மறுத்துக் கொண்டேதான் போக வேண்டியிருக்கும் என்பதை அவன் புரிந்துகொண்டிருந்தான். பொதுவாக நிறையப் புத்தகங்கள் படிக்கிறவள் என்பதால் கல்லூரி, இறையியல் கல்வி பற்றி எள்ளலோடுதான் பேசுவாள். ஒருமுறை சொன்னாள் 'இப்போது வாழ்வியல் போதித்துக் கொண்டிருக்கிறார்கள். பெண்ணாய்ப் பிறந்த ஒரு உயிருக்கு இந்த உலகில் உள்ள கடமையை விளக்கிச் சொல்கிறார்கள். மகளாக துவங்கி மனைவியாகி தாயாகி கடந்து போக வேண்டிய வாழ்க்கை நியதிகளை இடையில் நாம் மீறுவதற்கும், குடும்பப் பெண்களிலிருந்து வேறுபடுவதற்குமான தேவையும் அவசியமும் என்ன என்று கேள்வி கேட்டு நம் மன உறுதியைச் சோதித்தும் பார்க்கிறார்கள். இந்த ஒப்புக் கொடுத்தல் அகவயப்பட்ட தேவையா, புறவயப்பட்ட நிர்பந்தமா என்பதை நமக்கு விளக்கி தெளிவூட்டுகிறார்கள். ராணுவத்துக்கு உடல் திறன் தகுதியாவது மாதிரி, ஊழியத்துக்கு உடலைத் தவிர்த்துவிட்டு உள்ளத்தை புடம் போடுகிறார்கள்' என்றாள். சாதாரணமாகப் பேசும்போது பந்துகள்போலத் துள்ளி வரும் சொற்கள் அப்போது சாட்டைக் கம்புகள்போல நீளநீளமாக மாறின.

குளித்து சட்டையை மாட்டிக்கொண்டு, வேகமாகப் போக வேண்டு மென்பதற்காக சைக்கிளில் ஏறிக் கிளம்பினான்.

பெரியம்மா சமையலறையில் பீர்க்கங்காய் நறுக்கிக் கொண்டிருந் தாள். அக்கா முன்னால் அமர்ந்து பார்த்துக் கொண்டிருந்தாள். ''நீ வந்தப் பிறகு சாப்பிட்டுக்கிடுறேன்னு காத்துக் கிட்டிருக்காப்பா.''

நேஷனல் ஜியாகரபிக் சேனல் ஓடிக்கொண்டிருந்தது. பார்த்தபடியே கட்டிலில் உட்கார்ந்து இடியாப்பத்தை இனுக்கிக் கொண்டிருந்தாள். பாண்டி சாப்பிட்டு முடித்து தட்டைக் கொண்டுபோய் வைத்துவிட்டு தண்ணீர் எடுத்து வந்தான்.

பல லட்சம் ஆண்டுகளுக்குமுன் மரமாய் இருந்து பின் கல் படிவ மாய் மாறிப்போன காட்சிகள் திரையில். பாண்டி காப்பியைக் கொண்டு வந்தான். அப்போதும் அவள் தட்டில் விரல்களால் அளைந்து கொண்டே கேட்டாள் ''டேய், நம்ம ஊருணி ஆலமரத்தைப் பார்த்து எவ்வளவு நாளாச்சு. ஆறு வருஷம் இருக்கும்! உங்கூட ஸ்கூலுக்குப் போன அன்னைக்குப் பாத்தது. நாலு வருஷம் எனக்கு பிரெண்டா இருந்ததுடா. போய் பாக்கலாமா?'' தட்டில் கைகழுவி அதை கட்டிலுக்குக் கீழேயே வைத்தாள்.

டிவியில் புரோகிராம் மாறியது. ஆழ்கடலடியில் பல வண்ண வினோத உயிரிகள் அலைந்தன.

''அம்மா, நான் பாண்டி வீட்டுக்குப் போயிட்டு வாரேன்.'' டிவியை அணைத்துவிட்டு நடுவீட்டிலிருந்தே கத்தினாள்.

பாட்டியின் குரல் அர்த்தமாவதற்குள் பொருட்படுத்தாமல் விரைவாக வெளியேறினாள்.

பார்பராம்மாள் பூவரசு வரை உருட்டியபடி வந்த சைக்கிளை வாங்கி ஏறிக்கொண்டாள்.பாண்டி பின்னே தாவி அமர்ந்தான். பாதை இப் போது தார் ரோடு ஆகிவிட்டது. மழையில் அடிபட்டு, சக்கரங்களில் அரைபட்டுக் குற்றுயிராய்க் கிடந்தது. ரோட்டை ஒட்டிப் போன சைக்கிள் தடம் சீராக இருந்தது. கொஞ்ச தூரம் போனதுமே ஜிம்மி செல்ல முனகலோடு எங்கிருந்தோ வந்து சேர்ந்தது. எதுவும் பேசாமல் சீட்டி யடித்தபடியே மிதித்தாள்.

காற்றே இல்லை. பனைகள் மௌனமாகப் பாடின. வெயில் உறைத் தது. நொச்சிப் புதரிலிருந்து ஏதோ குருவி 'குக் குக்' என்று அழைத்தது. வெண்மேகங்களின்றி வானம் பெண்கடல் போல் நீலமாய்ப் பரந்திருந்தது.

மழையறுத்த மண்நொடியில் இறங்கி ஏறியபோது முன்சக்கரம் பிணங்கிக் கொள்ள சைக்கிள் இடப்பக்கமாய்ச் சரிந்தது.

கையைத் தட்டி விட்டுக்கொண்டு எழுந்தாள்.

''விடுக்கா. நீ உக்காரு'' என்று பாண்டி சைக்கிளை ஏற்றெடுத்தான். ஏறி அமர்ந்து ஓட்டினான்.

''என்னால தாவி ஏற முடியாதுடா.''

''முன்னால வாரயா?''

''ம்.''

சைக்கிள் நகர்ந்தது. பாய் இறக்கிய வள்ளத்தைப்போல மெதுவான சீரான கதியில் மிதந்தது.

''இன்னைக்குத்தான்டா முன்னாடி உக்காந்து பாக்குறேன்.''

மணியை 'டிரிங்' என அடித்தாள். பண்ணைப்புதூருக்கு மேய்ச்சலுக்குப் போகும் மருதகுளச் செம்மறி மந்தை நாணத்தில் தலைகவிழ்ந்து நடந்தது. ரெஜினா டீச்சர் தோட்டத்து கற்றாழை வேலியோரம் இரை பொறுக்கிய கதுவாலிகளைக் கண்டதும் மீண்டும் மணியோசை. அவை கலைந்து கால்களால் ஓடிப் பின் பறவைகளாயின. வெயில் முறுகியது. அவள் புறங்கழுத்தில் வியர்ப்பு மணிகள். வெயிலின் மடல்களிலிருந்து தாழம் பூ வாசனை அலையலையாய் எழுந்தது.

ஆலமரம் காத்திருந்தது. இலைகள் வெயிலருந்தி ஒளிர்ந்தன. நிழல் மடியில் சைக்கிள் நிற்கவும் ஓடிப்போய் போய் மரத்தைத் தொட்டுப் பார்த்தாள். காற்று உயிர் பெற்றது.

வடகரையில் மஞ்சணத்தி, பூவரசுகள் மேலும் வளர்ந்திருந்தன. ஆலும் வேம்பும் அப்படியேதானிருந்தன. ஊருணியின் வயிற்றில் சருகு களோடு வண்ணப் பாலிதீன் கவர்கள்.

''அந்த விழுதுல ஆடித்தான்டா ஜாய் அக்கா என்னைத் தூக்குறேன்னு தள்ளி விட்டா.''

இதோ அதே விழுது மேலும் வளர்ந்து செழுமையுற்றுப் பூரித்திருக் கிறது. அதன் வாலையரும்புகள் பொன் மிளிரத் தாகிக்கின்றன; மண்ணை விழைகின்றன.

விழுதின் கீழ் சைக்கிள் நின்றது. ''சைக்கிளை நல்லாப் பிடிச்சுக் கோடா'' என்று ஏறியவள் விழுதைச் சுலபமாகப் பிடித்துக்கொண்டு தொங்கினாள். சைக்கிளை நகர்த்தி விட்டான். விழுது அசைந்தது; ஆடவில்லை. அவளைப் பற்றித் தள்ளி ஆட்டி விட்டான். காற்றெழுந்து பாய்ந்து வந்தது. அவள் முகம் அலைநுரையாய்ப் பொங்கியது. குரல் கடலின் ஆர்ப்பரிப்பாய் அகவியது.

புவியின் ஈர்ப்பு விசை வென்றதும் அப்படியே கீழே குதித்தாள். ஆசுவாசப்பட்டாள். மூச்சு சீராகுமுன்னே சுடிதார் பாக்கெட்டிலிருந்து செல்போனை எடுத்தாள்.

''அக்க்க்கா... இப்ப நான் எங்க இருக்கேன் சொல்லு.''

''ஊஞ்சல்ல.''

''ரைட் அன் ராங். நீ என் கையை ஒடச்சியே... அதே விழுதுல ஆடிக்கிட்டிருக்கேன்.''

''கால ஒடச்சிக்கிடாத. அப்புறம் உனக்கு சர்வீஸ் பண்ண இப்ப எனக்கு டைம் இல்ல.''

''அக்கா, அடுத்த வாட்டி நம்ம ஊர்ல இருக்கும்போது இங்க கண்டிப்பா வரணும்.''

''சரி. ஞாபகப்படுத்து. பக்கத்துல பாண்டிதான இருக்கான்? அவங்கிட்ட கொடு.''

வாங்கிப் பேசினான். நலம் விசாரித்தாள். சீக்கிரம் பிஎச்டியில் சேரச் சொன்னாள். தூத்துக்குடி வரும்போது கட்டாயம் வீட்டுக்கு வர வேண்டும்; மக்ரோன் தருவாள். ஊர் திருவிழாவுக்கு வரும்போது பாண்டிக்கு சட்டை வாங்கி வருவாள்.

அவளிடமிருந்து போனைப் பிடுங்கினாள். ''அக்கா, ஜிம்மி கூடப் பேசுறியா! குலைக்கச் சொல்லட்டுமா...''

''நிழல், வால் எல்லாமாச் சேந்து ஒரு மார்க்கமாத்தான் கிளம்பீருக்காங்ய'' என்றாள் ஜாய் அக்கா வடிவேலு குரலில்.

''அக்கா, நீ ஏறி விளையாடுவியே அந்த பூவரச மரக் கவையில ஏறிட்டுப் பேசட்டுமா...'' கேட்டுக்கொண்டே நடந்தாள்.

இனி அவர்கள் பேசி முடிக்க அரை மணி நேரமாகும். அம்முக் குட்டியாகி விடுவாள். பாண்டி ஆலமரத்தடியிலேயே நீட்டிப் படுத்து மரக்கூரையில் உயிர்ப்புடன் துடிக்கும் இலைகளைப் பார்த்தவாறிருந்தான். அவள் சிரிப்பலைகள் காற்றோடு பறந்த போதெல்லாம் இலைக் கடல் தலையசைத்து ஆமோதித்தது.

''பேட்டரி டவுண்'' என்று சொல்லிக்கொண்டு இறங்கி வந்தாள். ''சைக்கிள அங்க நிறுத்துடா'' என்று விழுதைக் காட்டினாள்.

விழுது ஊஞ்சலானது. காலத்தைக் கணிக்கும் ஊசல் போல் ஆடிக் கொண்டிருந்தது. இந் நொடிகளே காலங்களைத் தாண்டி நீட்சியடையாதா என்று ஏங்கினான்.

மெலிதாக ஆடிக்கொண்டிருக்கும் ஊஞ்சல் பலகையின் நடுவிலுள்ள சதுரங்கக் கட்டங்களையே உற்றுநோக்கி வியூகங்களை வகுத்துக் கொண்டிருந்தனர். மின்னொளியில் வெள்ளைக் கட்டங்களில் சாம்பல் நிழல்கள் படிந்திருந்தன. உண்மையில் அவை சிவப்பாயிருக்க வேண்டும். ரத்தக்களரி. பாண்டியின் குதிரைகள் நிதானமின்றித் தாவி இலக்கின்றிப் பாய்ந்து வெட்டுப்பட்டன. துருப்புகள் தற்கொலைப் படையாயின. கோட்டை சரிந்தது. தளபதி ஹரகிரி செய்து கொண்டார். நான்காவது ஆட்டத்திலும் இழப்பு தொடர்கிறது.

அவள் விரல்கள் நகர்த்தின. குளிர்ந்த பொய்கைக் கரையோரம் பூத்த காந்தள் மலர்.

'செக்' என்றாள் உற்சாகமான குரலில். அணிந்ததை உதறித் துறக்கிறளா? எடுத்தணிந்து கொள்ளத் தவிக்கிறாளா? அறிவதில்லை அலைவளையல். ஆட்டம் தொடங்கும் முன்பே தோல்வி நிச்சயிக்கப்பட்டு விட்டது.

மீண்டும் நினைவூட்டினாள். ''செக்...''

☆☆

கைதேர்ந்த மீனவனின் தந்திர வலைக்குள் சிக்கி வெளியேறும் விதியற்று கடலின் பெரும் கவலைகளை மேஜை மீதிருந்து மென்குரலில் காற்றோடு புலம்பியிருந்த வெண்சங்கை தூவானம் தெறித்திருக்கும் ஜன்னலருகே இடம் மாற்றி வைத்தேன். நெரிந்திருந்த குரல்வளைக்குள் மடங்கிக் கிடக்கும் சொற்கள் நிமிர்ந்து கிசுகிசுப்பான குரலில் கதையாடத் தொடங்கியது அது. நினையாத நேரத்தில் திடுமென இதழ் நெகிழ அடிவயிறு நடுங்கி அவள் குனிந்து பார்த்ததிர்ந்த மர்மமலரின் ரகசிய வெப்பங்களைக் கடத்திச் செல்லும் தோணிகள் புள்ளியாய் கரைந்து காணாமல் போகும் பரந்த சொப்பனத்தில் நீராடிக் களைத்து ஈரம் உலராமல் கரையேறி நிற்கும் காட்சிகளைக் காற்றோடு வெதுவெதுப்பான குரலில் வர்ணிக்கத் தொடங்குகையில் அவளின் வியர்த்த கழுத்தாகி மின்னிற்று.

☆☆

''செக்...'' என்றாள். ஆட்டம் ஆரம்பித்த கால்மணி நேரத்திற்குள் முடியப் போகிறது. பாண்டிக்கு கவனமேயில்லை. சமீப காலங்களில் தோல்விமுகம்தான். கடைசியாய் ஆடியது மூன்று மாதங்களுக்கு முன். ஆலமரத்தில் ஊஞ்சலாடிவிட்டு வந்து விளையாடியது. அன்று அத்தனை ஆட்டங்களிலும் தோல்வி. அவளிடம் தோற்பதில் மகிழ்ச்சிதான். ஆனால் ஏன் மனம் குவிய மறுக்கிறது?

பாண்டி வெறித்துக் கொண்டிருப்பதைப் பார்த்து, போர்டைத் திருப்பி வைத்து வெள்ளைக் காய்களை அவள் பக்கம் எடுத்துக் கொண்டாள். அவள் ஈரக்கூந்தலைப் பொதிந்துகொண்டு தலைக்கு மேல் மஞ்சள் துண்டு கிரீடம் போலிருந்தது. அவள் ராஜா உயிர் தப்பினார் '...காற்றோடு புலம்பியிருந்த வெண்சங்கு...'

அவளது வெள்ளை ராணி கருப்பு வியூகத்தினுள் புகுந்து அதகளம் பண்ணினாள். '...அவளின் வியர்த்த கழுத்தாகி மின்னிற்று.' ''செஸ் வேண்டான்னா சீட்டு ஆடலாம்டா. இல்லன்னா டி.வி. பாக்கலாம். இப்போ செக். உனக்கு சான்ஸே இல்ல.''

செஸ் போர்டை மடக்கி வைத்துவிட்டு கொஞ்சநேரம் அக்காக்

களின் குடும்ப நிலவரம் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

கீழிருந்து பெரியம்மாவின் குரல் ''அம்மூ...''

''என்னம்மா?''

''கீழ வா. பூத்துரை உன்னப் பாக்க வந்திருக்காரு.''

''அண்ணாச்சி! வீட்டுல எல்லாரும் நல்லா சுகமா'' விசாரித்தபடி அக்கா போனாள். ''இரு இரு தாயி'' ஒரு கையை அசைத்து அவளை அமரும்படி சைகை செய்தார். ''நீ வந்துருக்குறதா சுசுலா சொன்னா பாத்துக்க. அவளுக்கு புள்ள பொறந்திருக்கு பாத்துக்க. ஆஸ்பத்திரியில தான். நீயும் ஊருக்கு வந்து ஒரு பாடு நாளாச்சே. அவ மவனுக்கு நீதான் நல்ல பேரா ஒண்ணு வைக்கணும் தாயி'' அமலா அக்கா பாண்டியைப் பார்த்தாள். நின்றுகொண்டேயிருந்தாள்.

பாண்டியின் கண்கள் பூத்துரை அண்ணாச்சி கையிலிருந்த பொதிய லுக்குள் என்ன இருக்கிறது என்று ஆராய்ந்தன. பெரியம்மா சீலை முந்தானையால் கையையும் முகத்தையும் துடைத்தபடி வந்தாள். ''வாங் கண்ணே!'' அண்ணாச்சியை வரவேற்றாள். ''அமலா, தலையை காயப் போடுமா. ரெண்டு தோசைய தின்னு. நேரம் போவுது, அண்ணே தோசை சாப்பிடுதியளா?'' அண்ணாச்சி ''இருக்கட்டும், இருக்கட்டும்'' என்றார். மறுத்தாரா சம்மதித்தாரா என்று போகப் போகத்தான் தெரியும்.

''எம்மா... இந்தா'' பொதியலை அவிழ்த்தார். நுரை உறைந்து சிறு பாறையானது போன்ற வடிவில் சட்டிக்காளான். அதைப் பெரியம்மா விடம் நீட்டினார். ''தாயிக்காக கொண்டு வந்தேன். கறி வச்சி கொடு. பிள்ள சாப்பிடட்டும். ருசி கோழிக்கறி மாதிரி இருக்கும். மடத்துல தேனும் தெனைமாவும் கிடைச்சாலும் காளான் கறி கெடைக்காதே.'' அவர் கையின் மொத்த நீளத்தையும் நீட்டிவிட்டார். பெரியம்மா மறுக்க முடியாமல் வாங்கிக்கொண்டாள். மறுத்திருந்தாலும் வற்புறுத்தி வாங்க வைத்திருப்பார். அவரது பேச்சும் பாவனையும் அவ்வளவு வாஞ்சை யோடிருந்தது. பாட்டி கண்களை இடுக்கியபடி ''அது என்ன காளான்ப்பா'' என்றாள். ''சட்டிக்காளான் பாட்டி'' என்றார். ''குடைக் காளான், அரிசிக்காளான்தான் குழம்பு கூட்டுக்கு நல்லாயிருக்கும் பாத்துக்க'' என்றாள். அண்ணாச்சி குரல் ஓங்கியது. ''ச்சே! காளான்லேயே இதான் நெம்பர் ஒண்ணு. வைக்கிற மொறையா வச்சி எடுத்தா இந்த காளான்கிட்ட இறைச்சிக் கறி பிச்சையெடுக்கணும்'' என்றார். ''எல்லா எழவும் மொளவு கூட்டுத பக்குவத்துலதான் இருக்கு'' என்று பாட்டி முணுமுணுத்தாள்.

தலையில் முறுக்கியிருந்த துண்டை அவிழ்த்து முடியை உதறிக் கொண்டு அமலா நடுவீடு கடந்து புறவாசல் வழியாக வளவுக்குப் போனாள்.

''ஏய் நீ பாண்டிதானே'' என்று கேட்டார் பூத்துரை அண்ணாச்சி.

வெட்டுக்கிளிக்கு காலில் கண்கள்போல இவருக்கு நாக்கில் முளைத்து விட்டதோ என்று சின்ன எரிச்சல் எழுந்தது. வெளிக்காட்டிக் கொள்ளாமல் ''ஆமா'' என்றான். ''படிக்கிறியா வேலை பாக்கியாடே'' என்று விசாரித்த வாறே கட்டில் விளிம்பில் அமர்ந்தார். ''முடிச்சுட்டேன்.'' ''அப்படியா'' ஆமோதிப்பது போல் தலையாட்டியவர் யோசனையோடு ''பதி னைஞ்சோ பதினாறோ படிக்கதா சொன்னாங்க. அந்தக் காலத்துல பத்து படிச்சாலே வேலை போட்டுருவான். இப்பதான் காலம் மாறிப் போச்சே'' தனக்குத்தானே சொல்லிக்கொள்வதுபோல் பேசினார். ''இது பேய்க்காளானா, நல்ல காளானா'' அண்ணாச்சியிடம் கேட்டான் பாண்டி. நம்ம வேலையைப் பற்றி இவரு எதுக்கு கவலைப்படணும் என்ற குட்டிக் கோபம்தான் கேள்வியாக மாறியது. ''ஏன்ப்பா பேய்க்காளான் பாத்த தில்லியா நீ? கரியடிச்சிப் போயிலா இருக்கும். இது பால்கோவா கட்டில்லா'' என்றார். ''பேய் பிசாசுங்க ஆள் மாதிரியே வேஷம் போட்டு ஏமாத்துது, காளான் மாதிரி உருமாறாதா என்ன!'' ''இந்தா பாருடே, ஆள் ரூவத்துல வந்தாலும் பேய்க்கு கால் இருக்காது பாத்துக்க. காளான் ரூவத்துல வந்தாலும் அதுக்கு தண்டு இருக்காது. இது தண்டோட தோண்டி எடுத்தது பாத்துக்க'' அவர் விளக்கத்தை அலட்சியப்படுத்துவது போல் தலையை வேறு பக்கம் திருப்பிக்கொண்டான். அவனது நுண்ணிய எதிர்ப்புகளை, அலட்சியங்களை அவர் பொருட்படுத்தவில்லை. இயல்பாக அவனை மீண்டும் தன் பேச்சுக்குள் இழுத்தார். ''சவேரியார் சாமிக்கி இங்லீஷ்ல ஒரு பேரு உண்டுலா. உனக்கு தெரியுமாடே அது?'' ஆர்வமாகக் கேட்டார். ''ஃபிரான்சிஸ் சேவியர்'' ''ஆங்... பிராஞ்சிஸ் சேவியர். அந்தப் பேரைத்தான் சுசுலா மவனுக்கு வைக்கணும்னு திட்டம். ஏம்னா கணக்க கேளு. கோட்டாரம் கோயில் கொடியேத்தத்தோட கலியாணம் நடந்துச்சி. அடுத்த வருஷம் ஏழாம் திருவிழா அன்னைக்கி பிள்ளை பெறந்தான் பாத்துக்க. அதனால அவரு பேரை வச்சாத்தான் பொருத்தமா இருக்கும். சவரிமுத்துனு இந்தக் காலத்துல யாரும் வைக்க மாட்டேங்குறாவ. அதனால இங்கலீஷ்ல வச்சுவிட்டற வேண்டியதான்'' பூத்துரை அண்ணாச்சி சந்தோஷத்தில் உடலை முறுக்கினார். அவரது மன நெகிழ்ச்சியில் போலி ஆர்வத்துடன் அவனும் பங்கெடுத்துக் கொண்டான். ''கோட்டாரம் கோயிலு சவேரியாரு தன் கையால கெட்டு னது பாத்துக்க. அது தெரியுமா உனக்கு?'' ''கேள்விப்பட்டிருக்கேன்.'' ''கோயிலுக்கு எப்படி இடம் பிடிச்சாருனு கேள்விப்பட்டிருக்கியா? ஆட்டடி தேசம் கதை தெரியுமா?'' தெரியும் என்று சொல்லி அண்ணாச் சியை திசை திருப்பிவிட நினைத்தான். 'தெரியும்னா எங்கே சொல்லு பாப்போம்' என்று மடக்கிவிட்டால் தர்மசங்கடமாகிவிடும் என்பதால் கேட்டுத் தொலைப்போம் என்ற முடிவுக்கு வந்தான். ''எல்லா கோயில் களுக்கும் எதாவது ஒரு கதை இருக்கத்தான் செய்யுது'' என்றான் மையமாக.

''ஆனாலும் இது ரொம்ப விசேசம்டே, சும்மா சொல்லப்புடாது. கஞ்சிக்கி இல்லாதவன்லாம் இப்போ கர்த்தரே கர்த்தரேனு பைபிள் புஸ்தகத்த தூக்கிக்கிட்டு அலையுதான். ஆம்பிளையும் பொம்பளையும் கழுத்த வெட்டிப் போட்ட வெள்ளாடு மாரி அல்லேலுயா அல்லேலுயானு துள்ளித் துடிக்காவ. சவரியாரு அப்படியில்ல. ரொம்ப வசதியான குடும்பத்துல பொறந்து வளந்த வெள்ளைக்கார துரை. பெரிய படிப்பு. அவருக்கு சொந்தமா பெரிய பள்ளிக்கூடமே இருந்துருக்கு.'' பாண்டி இடைமறித்து ''யுனிவர்ஸிடி'' என்றான். ''ஆமா அப்படித்தான். அதுக்கு அவருதான் எட்மாஸ்டரா இருந்துருக்காரு.''

''அவ்வளு வசதி, பெரிய பதவி எல்லாத்தையும் தூக்கிப் போட்டுட்டு நம்ம ஊருக்கு கப்பல் ஏறியிருக்காரு. இங்க வரும்போது கையோடு கொண்டு வந்தது ஒரு பைபிள் புஸ்தகம், ஒரு சிலுவை இந்த ரெண்டும்தான். அதுலயும் வந்த சோதனையைப் பாரு. கடல்ல வரும் போது அவரு கைச் சிலுவை நடுக்கடல்ல விழுந்துட்டு. இறங்கி எடுக்கவா முடியும்! கடவுளே உம்ம சித்தம்னு செபம் சொல்லிக்கிட்டே வந்திருக் காரு. அந்தச் சிலுவையை ஒரு கடல் நண்டு கடிச்சி இழுத்துக்கிட்டு கப்பல் பின்னாலயே வந்திருக்கு. சவரியார் கரையில இறங்கினதும் நண்டு சிலுவையோட வந்து அவரு கால்மாட்டுல நின்னுருக்கு. அதிசயத்தை பாத்தியா, சவேரியாரு நண்டுகிட்டயிருந்து சிலுவையை வாங்கிக்கிட்டு, நண்ட தட்டிக் கொடுத்து அது முதுகுல விரலால ஒரு சிலுவை வரைஞ் சாராம். அந்த சிலுவைதான் கடல் நண்டு முதுகுல இப்பவும் இருக்கு. யாரும் இல்லேங்க முடியாது. அப்போ கோயில்லாம் கிடையாது. அப்ப தானே வந்து இறங்கியிருக்காரு. பின்னாலலா கோயில் வருது. புது எடம். பாச தெரியாது. புது மனுசன். சீந்துவார் இல்ல. 'கடவுளே உம்ம நம்பி வந்துட்டேன், நீர்தான் வழிகாட்டணும்னு' மனசுக்குள்ள செபம் சொல்லிக்கிட்டு மணப்பாட்டுல கடல ஒட்டி ஒரு சின்ன கல் குகைக்குள்ள தங்கியிருக்காரு. நாள் கணக்கா வாரக் கணக்கா மாசக் கணக்கா குகையை விட்டு வெளியே வராம குகைக்குள்ளே இருந்து பசி தாகம் பாக்காம செபம் சொல்லிக்கிட்டே இருந்திருக்காரு. மனுசங்க யாரும் முதல்ல கண்டுபிடிக்கல. ஒரு காக்காதான் வந்திருக்கிறது சாதாரண ஆள் இல்ல, கடவுள் அனுப்பின தேவதூதர்னு கண்டுபிடிச்சிருக்கு. அந்தக் காக்கா தினமும் மூணு வேளையும் ஒரு பன்ரொட்டிய கொண்டுவந்து அவருக்கு கொடுத்துருக்கு. சவரியாரும் அதை வாங்கித் தின்னுட்டு ஊத்து தோண்டி தண்ணி குடிச்சிக்கிட்டு குகைக்குள்ளயே இருந்திருக்காரு. அப்புறம்தான் மனுஷ மண்டைக்கு லேசா ஒரைச்சிருக்கு. காக்கா மனுஷனுக்கு இரை கொண்டுவந்து கொடுக்குதே இது எப்படினு யோசிச்சி பாத்துருக்காங்க. தாடிக்கார துரை வெளுவெளுனு இருக்காரு. காக்கா கருகருனு இருக்கு. இவுங்களுக்குள்ள இப்படியொரு பாசமான்னு கூடிப்பேசி ஒரே குமைச் சல். காக்கா எங்கயிருந்து ரொட்டிய தூக்கிட்டு வருதுனும் யாராலயும்

கண்டுபிடிக்க முடியல. சவரியார்கிட்ட போறதுக்கு பயம். காக்கா பாஞ்சி வந்து தலையக் கொத்தி மூளையை கொடைஞ்சுபுடுமோனு.

''இந்த சமயத்துலதான் மதுர ராஜாவுக்கும் திருவாங்கூர் ராஜாவுக்கும் பெருஞ் சண்டை. சண்டைனா படு அடி. யானைப் படை குதுரைப் படை தரைப்படைனு முப்படைக்கும் மோதல். மதுரை ராஜா கை ஓங்கிட்டு. திருவாங்கூர் ராஜாவுக்கு என்ன செய்யனு தெரியலை. மந்திரி சபையில ஆரோசனை பண்ணும்போது ஒருத்தர் சவரியாரைப் பத்தி ராஜாகிட்ட எடுத்துச் சொல்லியிருக்காரு. ராஜாவுக்கும் என்னத்த தின்னா பித்தம் தெளியுங்குற நெலமை. கொஞ்சமும் யோசிக்காம சவரியாரை சந்திச்சு பேசியிருக்காரு. சவரியார் ராஜாகிட்ட உங்க ராஜாங்கத்துக்குள்ள கோயில் கட்டுறதுக்கு எனக்கு ஒரு ஆட்டடி தேசம் கொடுத்தா உங்க படைய நான் ஜெயிக்க வச்சு தாரேன்னுருக்காரு. 'ஆட்டடி தேசம்னா' ராஜா புரியாம கேட்டுருக்காரு. 'ஒரு ஆட்டுத்தோல் அளவு நிலம்'னு சவரியார் சொல்லியிருக்காரு. 'ப்பூ இவ்வளவுதானா, உத்தரவு'னு ராஜா சம்மதிச்சிட்டாரு.

''ஒரு கையில பைபிள் புஸ்தகம். இன்னொரு கையில சிலுவை. இது தான் ஆயுதம். மதுரை ராஜா படைக்கு முன்னால சவரியாரு சிலுவையை ஒசத்திப் பிடிச்சுக்கிட்டு போயிருக்காரு. வாள் வேல் ஈட்டியெல்லாம் கொண்டுவந்த மதுரைப் படை எதைக் கண்டு மிரண்டதுனே தெரியலியாம். யானை குதிரையெல்லாம் நடுங்கி திரும்பி வந்த வழியே எம்மா எய்யானு எடுக்குதாம் ஓட்டம். ஏந்திப் பிடிச்ச சிலுவையை இறக்காம எல்லைவரை போய் கொடியை நட்டுட்டு திரும்பினாராம். ஆட்டடி தேசத்தை எப்படி அளந்து வாங்குனாரு தெரியுமா?'' சின்ன நிறுத்தம் கொடுத்தார் அண்ணாச்சி. அதற்கான பொறுமையற்று பாண்டி எழுந்து கொண்டான். ''ஏய் இரு, கொறையும் கேளு'' என்றார் அண்ணாச்சி. ''நான் கொஞ்சம் அவசரமா போக வேண்டியிருக்கு, வந்து ரொம்ப நேரமாச்சி'' என்று தாழ்ந்த குரலில் சொன்னவன் விடைபெறுவதற்காக ''எக்கோவ்...'' என்று வீட்டுக்குள் குரல் கொடுத்தான். பெரியம்மா விருட்டென்று வெளிப்பட்டாள். ''பாண்டி என்ன எந்துச்சுட்ட, இரு புள்ளோ. அக்கா கூட சாப்பிட்டுட்டு போ'' என்றாள். ''எத்தே, வாய் கொப்புளிங்க. உங்களுக்கு தோசை கொண்டு வாரேன்'' என்றாள் பாட்டியிடம். ''எனக்கு வேண்டாம்மா. நான் இன்னைக்கி ஒரு சந்தி'' என்றாள். பெரியம்மா பாட்டியை வெறுமனே பார்த்தாள். பாட்டி கனத்த மனத்துடன் தலையைக் கவிழ்ந்து கொண்டாள்.

அமலா வந்தாள். நடை துரிதத்தில் அவள் பாவாடைக்குள் காற்று திபுதிபுவென்று திணறியது. தலையைப் பின்னாமல் ரப்பர் பேண்ட் போட்டிருந்தாள். நெற்றியில் ஸ்டிக்கர் பொட்டு வைத்திருந்தாள். அவனால் தன் கண்களை நம்ப முடியவில்லை. அவள் பொட்டு வைப்பதை நிறுத்தி பல வருஷங்களாகியிருந்தன. பொட்டு அவள் முகத்துக்கு

அம்சமாக ஒரு புது அழகைக் கொடுத்தது. மின்னல் பட்டையாக அவனுக்குள் ஒரு எண்ணம் சடசடத்து மறைந்தது. 'அக்கா கன்னியாஸ்திரி தேர்வில் தோற்றுப் போனாளா! இனி இங்கே வந்துவிடுவாளோ' மெல்லிய படபடப்பு உடலெங்கும் ஓடிக் கடந்தது. எச்சில் விழுங்கினான்.

அண்ணாச்சியும் எழுந்துகொண்டார். பாண்டி மீண்டும் கட்டிலில் அமர்ந்தான். என்ன செய்கிறோம் என்று தெரியாமலே தீவிரமாக சிந்திக்க நேர்ந்தது.

''தாயி, சுசுலா மகனுக்கு ஒரு நல்ல பேரு சொல்லுமா'' அண்ணாச்சி அக்காவிடம் கேட்டார். அக்கா தலையை ஒரு பக்கமாகச் சாய்த்து தலை உச்சியை ஒரு விரலால் மெல்ல நிரடியவாறு தரையைப் பார்த்தாள். 'பிள்ளைகளை நல்ல பிள்ளைகளா வளர்த்தா எல்லாப் பெயருமே நல்ல பெயர்தான்'' என்று சொல்லிச் சிரித்தாள்.

''நீ வச்ச பேரா இருக்கட்டுமேனுதான் உங்கிட்ட கேக்க வந்தது'' அண்ணாச்சி வார்த்தைகளுக்கு சரியான அழுத்தம் தந்து நோக்கத்தை உணர்த்தினார். அவரது மறைமுக விருப்பத்தைப் புரிந்துகொண்ட அக்கா தன் பெயரையும் இணைத்து ''பிரான்ஸிஸ் அமலதாஸ்னு வைங்க'' என்றாள். பொருள் புரியாமலே அண்ணாச்சி பூரித்துப் போனார். பின்பு ''என்னதுமா இன்னொருக்கா சொல்லு'' என்றார் காதைத் தீட்டிக் கொண்டு. 'பிரான்ஸிஸ் அமலதாஸ்' அக்கா அழுத்தந்திருத்தமாகச் சொன்னாள். அண்ணாச்சி சந்தோசமாக தலையாட்டினார். தலையாட்டு அளவுக்கு மேலேயும் நீடித்தது. சவேரியாருக்குப் பின்னால் ஒரு கதை இருப்பதுபோல இந்தப் பெயருக்குப் பின்னால் ஒரு கதை இருக்குமா என்ற சந்தேகம் அவர் முகத்தில் வெளிப்படையாக நிழலாடியது. அமலா இதுவரை பத்துக்கும் மேற்பட்ட பிள்ளைகளுக்குப் பெயர் சூட்டியிருக்கிறாள். எனவே அவரால் எளிதில் மறுத்துவிட முடியாது. சமாளித்துக் கொண்டு ''அதை ஒரு காயிதத்துல எழுதித் தந்துருமா'' என்று கேட்டார். தமிழிலும் ஆங்கிலத்திலும் எழுதிக் கொடுத்தாள். வாங்கிக் கையில் மடித்து வைத்துக்கொண்டு புறப்பட்டவர் போகும்போது, காளான் குழம்புக்கு சீரகம் தட்டிப்போட வேண்டும் என்பதை நினைவுறுத்திவிட்டுச் சென்றார்.

பாண்டி நாற்காலியில் அமர்ந்திருந்தான். அமலா ஊஞ்சலில். உணவுத் தட்டை மடியில் வைத்துக்கொண்டு தோசையை பொடிப் பொடியாகப் பிட்டுச் சுவைத்தபடியே தாழ்ந்த குரலில் பேசினாள். நாளையே கிளம்ப வேண்டுமென்றாள். அவளோடு சேர்ந்து பதினேழு பேர் இன்னும் இரண்டு மாதத்தில் பட்டம் தரிக்கப் போவதாகச் சொன்னாள். இனிமேல் வீடு தங்கவே முடியாது என்றாள். ஒருநாள் இங்கு வந்திருப்பதே ஒரு 'டேக்கா'தான் என்பதை சொல்லும்போது நுனிநாக்கைக் கடித்துச் சிரித்தாள். நெற்றிப் பொட்டைப் பற்றி கேட்டதற்கு ''இன்னும் ரெண்டு மாசத்துக்கு டோட்டல் ஃபிரி. பொட்டு வைக்கலாம். பூ

வைக்கலாம். சினிமா பாக்கலாம். இது ஒரு பிராக்டிக்கல் டெஸ்ட். முன்ன பின்ன தெரியாத ஊருக்குப் போகணும். அங்க உள்ள சபையை சேர்ந்த வீட்டுல தங்கணும். அங்க உள்ள வேலைகளைச் செய்யணும். வில்லேஜ் எக்ஸ்பீரியன்ஸ்னு அதுக்குப் பேரு. இம்மெர்ஷன்னும் ஒரு பேரு'' என்றாள். ''எந்த ஊருக்கு?'' ''எந்த ஊரா இருந்தா என்ன, எல்லாமே ஊர் தானே. ரோஸலினோட அத்தை மணப்பாட்டுல இருக்காங்க. செல்வம் அக்காவும் அந்த ஊர்தானே! அதனாலே அங்க போகலாம்னு இருக்கேன். முடிவானதும் போன் பண்றேன்.'' என்றாள். சற்று அமைதிக்குப் பின் தண்ணீர் குடித்தாள். சட்டினியில் தோய்த்தெடுத்த தோசையிலிருந்து வெண் தாழம்பூ வாசம் வந்தது. அது அவன் நெஞ்சை நெருக்கிப் பிழிந்தது. ''நீ இமிடியட்டா டாக்ட்ரேட்டில சேர்ந்திடு'' என்றாள். தாழம் பூவின் கடும் மணம் அவனை தலைவலிவரை கொண்டுபோனது. உட லெங்கும் நரம்புகள் தீப்பட்ட புழுவாகச் சுருள்வது போலொரு பிரமை ஏற்பட்டது. ப்ளஸ் டூ படிக்கும்போது அபூர்வமாய் கிடைத்த வெண் தாழம்பூ ஒன்றை அவள் உடைகளை வைக்கும் பெட்டிக்குள் போட்டு வைத்திருந்தாள். அவளிடம் மெல்லிய தாழம்பூ வாசம் வந்துகொண்டே யிருக்கும். 'தாழம்பூவுக்கு பாம்பு வரும். தூக்கி தூரப் போடு' என்று பெரியம்மா எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். பிடிவாதமாக மறுத்துவிட்டாள்.

நல்லவேளையாக தோசை புரைக்கேறி விக்கல் எடுத்தது. இடது கையால் அவன் உச்சந்தலையில் தட்டினாள். ''விஜிலாவா இருக் கும்டா!'' தண்ணீர் செம்பை எடுத்துக் குடித்து கண்களைத் துடைத்துக் கொண்டான். புரையேற்றம் சற்று தாமதித்திருந்தாலும் கண்ணீர்த்துளிகள் முந்திக்கொண்டிருக்கும்.

அவன் விடைபெற்று தெருவில் இறங்கி நடந்தான். வெண்தாழம் பூவின் வாசம் வெயிலிலிருந்து கிளர்ந்து அவனைத் தொடர்ந்து கொண்டே வந்தது.

☆☆

*பார்த்த வண்ணம் நிற்கிறாள் சிலை போல். சிறுவயதில் பிடி தப்பிய கனாவையா, விழிக்கும் விரலுக்கும் இடைப்பட்ட தூரத்தையா, தெரியவில்லை. பிழிந்த சேலை தோளில் முறுகிக் கிடக்கிறது. ஈரம் பட்டு முற்றும் நனைந்துவிட்டது இடது ஸ்தனம். இன்னும் தூங்கிக் கொண்டிருக்கிறது துணி உலர்த்தும் கொடியில் தட்டான்.*

☆☆

உடன் படித்த நண்பர்களின் கடிதங்கள் வந்து குவிந்தன. வேலை தேடிக்கொண்டிருக்கிறேன்; வேலையை நெருங்கிவிட்டேன்; வேலை தேடுவதுதான் வேலையாக இருக்கிறது; எம்ப்ளாய்மெண்ட் ஆபிஸில்

பதிவு செய்துவிட்டு ஹாயாக இருக்கிறேன்; தற்காலிகமாக ஒரு தனியார் பேருந்தில் நடத்துனராக ஓடிக் கொண்டிருக்கிறேன் என பலதரப்பட்ட கடிதங்கள்.

எல்லோருக்கும் உடனே பதில் எழுதிப் போட்டான். முனைவர் பட்டத்திற்காக சேரவிருக்கிறேன். 20ஆம் நூற்றாண்டில் மரபுக் கவிதைகள் - புதுக்கவிதைகள்: ஓர் ஒப்பீடு என்ற தலைப்பை உத்தேசிக்கிறேன். இந்த முறை கைடு கட்டாயம் அல்போன்ஸ் ஐயாதான். மறக்காமல் கடிதம் எழுதுங்கள். மற்றப்படி இப்போது ஊரில் சும்மாதான் இருக்கிறேன். பஞ்சாயத்து போர்டு லைபரரியில் புத்தகங்கள் எடுத்துப் படிக்கிறேன். நாவல்கள், கவிதைப் புத்தகங்களாகப் படித்துக்கொண்டிருக்கிறேன். சுமாரான உள்ளூர் பெண்கள் யாருமற்ற சந்தர்ப்பங்களில் நெருங்கிவந்து குழைந்து பேசி கடலை மிட்டாய் தருகிறார்கள் என்பதையெல்லாம் மறைக்காமல் எழுதினான்.

ஒரு விஷயத்தில் பாண்டி எப்போதும் கவனமாக இருந்தான். 'காதலிக்கக் கூடாது.' அதைத் தன்னுடைய தார்மீகத் தனித்தன்மையாக உறுதியேற்றுக் கொண்டான். மேல்நிலைப் பள்ளியில் படிக்கும்போதே சக மாணவிகள் பாடத்தில் சிறு சந்தேகம் கேட்டால் அந்த சந்தேகத்துள் காதல் ஒளிந்திருக்கக்கூடும், அது தொற்று நோயாகத் தன்னை பற்றிக் கொண்டு வந்து விடுமென்று கருதி தனக்குத் தெரிந்தவற்றையும் தெரியாதென்று மறுத்து வந்தான். பிராவின் அளவையும் தோளின் அழுத்தத்தையும் கண்ணாடியாக வெளிக்காட்டும் ரவிக்கை அணிந்தபடி பன்னிரண்டாம் வகுப்பில் கணக்குப் பாடம் எடுத்த கல்யாணம் முடியாத ஜார்லின் டீச்சரின் வெள்ளந்தியான சிரிப்புக்களைக் கூட சல்லடையில் சலித்து நேர் செய்து நேர்மையாய் வளர்ந்தவன். இதற்கெல்லாம் காரணம் அவனுக்கே பிடிபடாமல் புகை மூட்டமாய் இருந்தது.

வேலை கேட்டு நிரப்பியனுப்பிய விண்ணப்பங்கள் ஒவ்வொன்றும் கூண்டு திறந்த பறவைகளெனப் பறந்து போனது போனதுதான், நற்செய்தியோடு ஒன்றும் திரும்பவில்லை. பக்கத்தில் பாண்டியன் கிராம வளர்ச்சி வங்கியில் மூன்று ஆண்டுகள் கழித்து க்ளர்க் சீட் ஒன்று காலியாகும் என்று தாசில்தார் நம்பிக்கை தெரிவித்தார். அது வைதேகி காத்திருந்ததைவிட சோகமான கதையாக இருக்கும் என பட்டது. அந்த வங்கியையும் போய் ஒரு நோட்டம் பார்த்துவிட்டு வந்தான். நிறுவைத் தராசு திருடு போன ரேஷன் கடை போலிருந்தது.

படித்துத் தொலைத்த பாவபழியைத் தோளில் சுமந்து பரிதாபமாக அலைந்த இளைஞர்களுக்கு இன்ஸ்டால்மெண்ட் கம்பெனி ஒரு கவுரமான புகலிடம்தான். பாஸ்புக், பணப்புழக்கம், கணக்குவழக்கு, நடுவழி வணக்கங்கள் போன்ற நல்ல அம்சங்கள் அதிலிருக்கத்தான் செய்தன. இருந்தாலும் தபால்காரனுக்கு போட்டியாய் புறப்பட்டதுபோல் வசூலுக்காக தாறுமாறாக அலைய வேண்டியிருந்தது. மனிதனே வீட்டுக்கு

உபயோகமில்லாமல் வெளியேறிக் கொண்டிருக்க வீட்டு உபயோகப் பொருட்களுக்கும் பிரமாதமான தேவைகள் இல்லை. அது மட்டுமின்றி அது போன்ற தொழிலுக்கு ஒரு தமிழ் எம்.ஏ வீணான எஜமான்.

ஏ.டி.பி. பார்சல் சர்வீசில் அக்கவுண்டண்ட் வேலை ஒன்றும் வந்தது. கூடவே இரவும் பகலும் ஷிப்ட் மாறி மாறி வந்தது. ராத்திரி கண் விழித்து உழைப்பதில் பாட்டிக்கு உடன்பாடு இல்லை. நெஞ்சுக் கரிப்பு வரும், ஈரக்குலை முட்டிப் போகும் என்று அஞ்சினாள்.

பட்டதாரிகள் வேலை கிடைக்கும் வரை குற்றவாளிகளை நினைவூட்டியவாறு ஊர்ப்புறங்களில் அலைய நேரிடும் என்பதை அனுபவ ரீதியாக அறிந்துகொண்டான்.

குற்ற உணர்ச்சிகளிலிருந்து தன்னைத் தப்புவித்துக்கொள்ள சில நடவடிக்கைகள் மேற்கொள்ள வேண்டியதிருந்தது. கடந்த சில மாதங்களாக பெரியகோயில் நிர்வாகக் குழுவில் கணக்குவழக்கு பொறுப்பு ஏற்றிருந்தான். கிறிஸ்துமஸ் வரி, புது வருஷ வரி, ஈஸ்டர் வரி, திருவிழா வரி, காணிக்கை வரவு எல்லாவற்றையும் கவனிக்க வேண்டும். எழுதப் படிக்கத் தெரியாத முதியோர்களுக்கு அவசியமேற்படும்போது கடிதங்கள் எழுதித் தந்து பொறுமையாக வாசித்தும் காட்டினான். அப்படியான சந்தர்ப்பங்களில் அவனது சான்றுப் பத்திரம் புதுப்பிக்கப்பட்டு விறைப்பாக சடசடக்கும்.

பாண்டி அன்று விடிந்த நாளை நடக்க விட்டு தாமதமாக எழுந்திருந்தான். இரவு தூக்கத்தை மொய்த்த அவ நம்பிக்கையான எண்ணங்கள் விடிய விடிய கடித்துக் கரம்பிவிட்டிருந்தன. தெளிவற்ற கனவுகளின் கொந்தளிப்புகளும் கூட்டுச் சேர்ந்துகொண்டன. குளிக்க சோம்பலாக இருந்தது. குளித்து கரையேறிக் கோடி கட்டி எங்கே கிளம்பிப் போய் என்னத்தைக் கிழிக்கப் போறோம் என்ற சுய எள்ளலின் கரிப்பு. இப்படியான காலைகள் அதிகரித்து வந்தன.

உதயம் ரெஸ்டாரண்டிற்கு வந்தான். டீ குடித்துவிட்டு மூன்று நாளிதழ்களையும் வாசித்து முடித்தான். டீ மாஸ்டர் தலைக்கு மேல் சுவர் மூலையில் டி.வி. ஓடிக்கொண்டிருந்தது. கொஞ்ச நேரம் பார்த்துக் கொண்டிருந்தான். எல்லாப் பாடல்களிலும் ஜோடிகள் ஆடிப்பாடிக் கொண்டிருந்தனர். தொடுவதும் அணைப்பதும் காதல் வேதனையில் துடிப்பதும் பிரிவதும் துரத்துவதுமாக பாட்டு இசைக்கேற்ப நடனத்தில் விளையாடினார்கள். தமிழ் சினிமா என்றாலே அது காதல் கிளிகளின் கொண்டாட்டச் சோலைதான். மனிதனின் அதிகபட்ச கனவும் அதுதானோ?

காலை உணவு முடிந்த பிறகு என்ன செய்வதென்று தெரியவில்லை. பாட்டி நிம்மதியாக கட்டிலில் பகல் தூக்கத்துக்குள் கரைந்துவிட்டாள். 'கடலுக்கு அப்பால்' நாவலைக் கையிலெடுத்துக்கொண்டு லூர்து மாதா

மண்டபத்துக்கு வந்தான். அமைதியாக இருந்தது. ஒரே மூச்சில் வாசித்துக்கொண்டே போனான். மதியம் சாப்பிட வீட்டுக்குப் போக வில்லை. 'மனிதனால் தாங்க முடியாத துயரம் என்று சொல்வதற்கு எதுவுமே இல்லை. மனதை இழக்காத வரையில் நாம் எதையும் இழப்ப தில்லை' என்று முடிந்தது கடலுக்கு அப்பால். முளையடித்துக் கட்டியது போல் கடைசி வரியில் மனம் காரணமின்றி அதி தீவிரத்துடன் சுற்றிவந்து மறிந்தது.

பள்ளிவிட்டு வந்த பெண் பிள்ளைகள் கோவிலைச் சுற்றி உற்சாகம் பொங்க ஒடிப்பிடித்து கண்ணாமூச்சு விளையாடினார்கள். பாண்டி கண்களை மூடியபடி தூணில் சாய்ந்திருந்தான். 'நான் நான் என்று குழறியே ஒன்றைவிட்டு ஒன்று பற்றிப் பாசக் கடற்குளே வீழாமல்...' தாயு மானவர் குரல் அருகில் ஒலித்தபோது துணுக்குற்று கண்களைத் திறந்தான். தபால் செல்லையா மண்டபத்தின் விளிம்போரம் சைக்கிளை நிறுத்தி விட்டு சாதாரண உடையில் வந்தார். பணிப் புன்னகையோடு ஒரு கல்யாணப் பத்திரிகையை எடுத்து நீட்டினார்.

விலாவில் ஈட்டி பாய்ந்தது.

விஜிலா.



3

## நிழலன்றி ஏதுமற்றவன்

தாய் மடியில் மகன் மரித்த உடலுடன் தளர்ந்து கிடந்தான். அவயவங்கள் சோர்ந்து நிலம் நோக்கிச் சரிந்து கிடந்தன. தலையில் பிரம்பால் அடித்துச் சூட்டிய முள் முடி. முகத்தில் உலர்ந்த ரத்த வரிகள். கண்களில் கடைசித் துடிப்பின் செருகல். விக்கல் உதடுகள் பிளந்த மெலிந்த வாயில் சொற்கள் வெளியேறிய இடைவெளிச் சுவடு. கண்களில் அநாதைக் களை. மரிக்கும் விண்மீன்கள். தாயின் முகம் கசங்கிய மதியாக மகன் முகத்தில் கவிழ்ந்திருந்தது.

மணப்பாடு யாகப்பர் ஆலயத்தினுள் வலது பாரிசத்தில் போடப் பட்டிருந்த பெஞ்சுகளில் ஒன்றில் அமர்ந்திருந்த பாண்டி அந்த துயரச் சிற்பத்தை வெகு நேரமாக மனச்சோர்வுடன் கவனித்த வண்ணமிருந்தான். விரட்ட முடியாத பெரும் வெறுமையுணர்வும் பெயரற்ற அச்சமும் மனதைப் பிசைந்து நிலைகுலையச் செய்தது. கட்டவிழ்ந்த எண்ணங் களும் நடுக்கமும், அடிநெஞ்சிலிருந்து புரண்டெழுந்து வந்து தலைக்குள் மோதித்தாக்கிய உஷ்ண அலைகளுமாக அலைக்கழிந்தான். இன்னும் தன்னியல்புக்குத் திரும்பவில்லை.

சுற்றியடித்து திருச்செந்தூர் வழியாக மணப்பாடு வந்ததற்காக அக்கறையோடு கோபித்த செல்வம் அக்கா ''நம்ம ஊர்லேயிருந்து கணபதி பிடிச்சி நேரா உவரிக்கி வந்துட்டா கன்னியாகுமரி நாகர்கோவில் வண்டி கொள்ளேத்தம் இருக்கே'' என ஆலோசனை கூறியவள் பேச் சோடு பேச்சாக அமலா அடுத்த மாதம் கன்னியாஸ்திரி ஆகவிருப் பதையும் சொன்னாள். தெரிந்த தகவல்தான். தீர்மானிக்கப்பட்ட முடிவு தான். ஆனாலும் மனசு சகஜமடைய மாட்டேன் என்று அடம் பிடிக்கிறது.

முழங்கையில் குளிர்ச்சியான ஸ்பரிசம். ''மாமா இங்கயா இருக் கிங்க? அம்மா தேடுதா, சாப்பிட வரணுமாம்.'' செல்வம் அக்காள் மகன் விங்லிங் அழைத்தான்.

திரும்பியபோது அமலா பாண்டியைப் பார்த்தவாறே நின்றிருந் தாள்.

மீண்டும் அதே பெஞ்சில் அதே இடத்தில் அமர்ந்திருந்தான். மேலே மேற்றிசையின் கண்ணாடி ஜன்னலிலிருந்து மாலைச் சூரியக் கதிர்கள் பல வண்ணங்களில் சாய்வாக ஊள்ளிறங்கின. எதிரே தாய்மடியில் தேவ குமாரன்.

பிறந்தநாள் பரிசைப் பெற்றுக் கொள்வதற்காக இதே இடத்திற்கு மாலை நான்கு மணிக்கு வருவதாக அப்போது பார்த்ததும் அமலா சொல்லிச் சென்றாள்.

முழங்கைகளை பைபிள் வைக்கும் மேஜையில் ஊன்றி விரல்களை மடித்து நாடியைத் தாங்கியிருந்தான். கண்கள் மூடியிருக்க வழிபடும் நிலையில் தலை கவிழ்ந்திருந்தது. மனம் தொழவில்லை. கொந்தளித்த அலைகளில் எண்ணங்கள் மோதித் தெறித்தன. சொற்கள் கோர்வையுற வில்லை.

வெண்தாழம்பூவின் மெல்லிய வாசனை இடதுபுறம் சற்று தூரத்தில். அப்படியே கண்மூடி அமர்ந்திருந்தான்.

*நீ பிறந்த நாளை எடுத்து*
*திருத்தமாக உடுத்திக்கொண்டு*
*பின்தொடரும் என் நிழலை*
*திரும்பித் திரும்பிப் பார்த்து*
*திசை யூகித்து வருகிறேன்.*

வாசனை நெருங்கி அருகே வந்து எதிரே நின்றது. உருவம் கண்களில் அருவமாய்த் திரண்டது.

*யாரும் தரக் கூடுமெனினும்*
*யாரும் தரத் துணியாததாய்*
*என் கையிலிருக்கிறது காம்பு அறுபட்ட*
*பேரழகின் ஒற்றை மலர்.*

*ஏதேனில் இரு ஆத்மாக்களின் ஆதித்தனிமை*
*சபிக்கப்பட்ட மரத்தில் கனியாகத் திரண்டதைக்*
*கண்டு நெருங்கிய கவிதையிலிருந்துதான்...*

''கவிதை முடிஞ்சிருச்சா? இன்னும் இருக்காடா?''

கண் திறந்தான். வரம் தருபவள் போல் முன்னால் நின்றிருந்தாள்.

''ஜெபம் முடியுமுன்னே குட்டிச்சாத்தான் குறுக்கீடு.''

''ஜெபம் சொல்லுற மூஞ்சியப் பாரு.'' அவனருகே பெஞ்சில் வந்தமர்ந்தாள்.

''உன்னய இங்க கூப்பிடக் கூடாதுன்னு தெளிவான முடிவோட தான்டா இருந்தேன். ஐம்பது நாளா நான் பாட்டுக்கு நிம்மதியாப் படிச்சிக்கிட்டே இருந்தேன். நீ இன்னைக்கு காலையில செல்லுல கூப்பிட்டு வாழ்த்துச் சொல்லவும் மனசு கேக்கல. சரி வாடான்னேன்.

பெரியக்காவுக்கு இன்னைக்கு வரமுடியாதுன்னு போன ஞாயிற்றுக் கிழமையே அவ கார்ல மூணு அக்காக்களும் சேர்ந்து வந்துட்டாங்க. ஜில்லக்கா அம்மாவாகப் போறா. அப்படியிருந்தும் அவளும் வந்திருந்தா. இந்தா பார்...''

கைகளைக் காட்டினாள். வெவ்வேறு டிசைன்களில் இரு கைகளிலும் மூன்று தங்க வளையல்கள்.

''மூணு பேரும் ஒரு ஜோடி வளையல் கொடுத்திருக்காங்க. இந்த முதல் வளையல் ஜோ. அடுத்து ஜெசி. அப்புறம் ஜாய்.''

''ஜாய் அக்காவுக்குதான் இந்த ஐடியா தோணியிருக்கும்.''

''உன் பரிசு என்னடா?''

''கவிதைதான். இன்னும் முடிக்கலை.''

''இல்லைன்னாலும் இப்பல்லாம் நீ எழுதுறத எங்கிட்ட காட்டுற இல்லை. சரி விடு. அம்பாள் அறியாத அர்ச்சனையா?''

''மரம் ஒருபோதும் தன் நிழலை உணர்வதில்லை.''

''நீ கவிதான்டா. கிராண்டட்.''

''வேற பரிசும் வச்சிருக்கேன்.''

''நெஜமா? ஆச்சரியமாயிருக்குடா.''

''என்னன்னு சொல்லு பாப்போம்.''

''வேறென்ன? சுடிதார்தான்.''

தோல்வியை அவளுக்குத் தள்ளி விடவென்று கேட்டான் ''கலர்?''

''மஞ்சள்.''

வியப்பை மறைத்துக்கொண்டு பெஞ்சுக்குக் கீழே தரையில் இருந்த, பேப்பரால் சுற்றப்பட்டிருந்த அட்டைப் பெட்டியை எடுத்துத் தந்தான்.

''எங்க வாங்குன?''

''திருச்சீரலைவாய்.''

இரவு ஏழு மணிக்கு மறுபடி வந்தாள். செல்வம் அக்கா மகள் சில்வியாவுக்கு பிஸ்கட் பாக்கட் தர வந்தாளாம். அரை மணி நேரம் அவளோடு விளையாடிக் கொண்டிருந்தாள். திரும்பிப் போகும்போது வழித்துணையாகச் சென்றான். வேப்பமரத்தின் கீழ் இருட்டைக் கடந்தபோது அவள் மின்னல் போலிருந்தாள். மஞ்சள் மின்னல். வெள்ளைப் போகன்வில்லா வளைவிற்குள் நுழையுமுன் திரும்பிச் சிரித்தாள். வெண்மின்னல்.

அப்படியே நடந்து தெருக்களைக் கடந்து கடலடிக்கு வந்தான். ஒரு வள்ளத்தில் ஏறி அமர்ந்தான். எதிரே பெண்கடல் கொலுவீற்றிருந்தது. கடலுக்குள்ளிலிருந்து நிலா எழும் வேளை. காத்திருக்கவேண்டும். நிலா இன்று மஞ்சளாக இருக்கும்.



*நீயழைத்துப் போய் சீர்திருத்தப் பள்ளியில் சேர்ப்பித்த ஆசைக் கொழுந்துகள் குழந்தை மொழியில் எழுதி பிரிவுத் துயரை விளக்கும் வரிகளென எங்கோ செல்கிறது இந்த சிற்றெறும்புக் கூட்டம். கண்மை தொட்டெழுதி நீயளித்த கனாக்களின் உயிர் தேடி காற்றில் தொடர்ந்து வரும் தூதில் அதிர்ந்து கலைகிறது இச்சிறிய கறிவேப்பிலை மரம். அழுது களைத்த சாயலோடு உதிரும் பழுத்த மஞ்சள் இலைகளில் ஏக்கப் பார்வைகள் சுழன்று தரையிறங்கி மயங்கியடங்குகின்றன. பகலிலும் உன் பூஜையறை அகலில் துறவியின் அங்கி நிறத்தில் காட்டுத்தீயின் ஒற்றை இறகு. நெருப்பைத் தத்தெடுத்து வளர்ப்பதும் நீ.*



''பாட்டிமா இது என் தம்பி.'' அமலா அக்கா அறிமுகப்படுத்திய போது பாண்டி கைகூப்பி மரியாதையான புன்னகையோடு எதிரில் அமர்ந்திருந்த வயோதிகப் பெண்மணியை வணங்கினான். வணக்கத்தையோ அறிமுகத்தையோ ஏற்றுக்கொள்ளாமல் அவள் பாண்டியை ஊடுருவிப் பார்த்தாள். கருவிழிகள் மங்கி சாம்பல் நிரை விரிந்து கண்கள் ஒடுங்கிய புருவங்களுக்குள்ளிருந்து ஆராய்ந்தன. குறிப்பாக அவன் முகத்தில் துளிர்த்திருந்த ரோமக் கொளுந்துகளை. தர்மசங்கடத்தில் குறுகினான் பாண்டி. அவள் மனத்தில் சுழன்ற எண்ண ஓட்டங்களின் புறநிழல்கள் வெளிப்படையாக முகத்தில் படர்ந்தலைந்ததை அவளால் மறைக்க முடியவில்லை. ''இது எந்த ஊரு தம்பிங்காச்சி?'' முகத்தைச் சுளித்தாள். மூட்டை போல் உடம்பு. தாட்டியமான குரல். கிழட்டு முண்டம் அக்கா மேல சந்தேகப்படுது. பாண்டி மனத்துக்குள் முறுகினான். அமலாதான் நிலைமையைச் சமாளித்தாள். கிழவியிடம் சென்று அவளருகே அமர்ந்து கைகளைப் பற்றிக்கொண்டு காதருகே கனிவாகப் பேசினாள். பாண்டி நின்ற வண்ணம் கால் மாற்றிக்கொண்டிருந்தான்.

கோயில் தெருவிலிருந்தது அந்த வீடு. தெரு என்பது குறுகலான சொற்பிரயோகம். வீதி என்பதுதான் பொருத்தம். தேரோடும் வீதி. மிக நேர்த்தியான பிரமாண்டமான கோவில்கள் இரண்டை இணைத்தபடி விசாலமாக கிடக்கும் அந்த வீதி கண்டது தொட்டு இன்றுவரை புதுப்புது அழகை வெளிப்படுத்திக் கொண்டிருந்தது. கட்டளைக்கார வீடுகள் என்று பேச்சுவழக்கில் புழங்கினாலும் அவை மாளிகைகள். வீதியின் இரு மருங்கிலும் கம்பீரமாக நிமிர்ந்து நிற்கும் அந்த மாளிகைகள் சற்சமயம், கோபுரமில்லாத கோயில்கள் போலவும் தோன்றும்.

''இந்த பங்களாலாம் நம்ம ஊரு கொத்தமாரு கெட்டினதுனு நெனைக்காத. வெளிநாட்டுலேயே கெட்டி பூசி கப்பல்கள்ல ஏத்திட்டு வந்து இறக்கி வச்சதாக்கும்.'' அவ்வழியாகச் செல்லும்போது ஒருமுறை

செல்வம் அக்கா விளக்கம் கொடுத்துவிட்டு தமாஷாக சிரித்தாள். ஸ்பானிஷ் வில்லாக்கள் என்ற பெயர் வழங்குவதும் நினைவில் வந்தது. மணப்பாட்டுக்கு பட்டப்பெயர் சின்ன ரோமாபுரி.

கடல் போல விரிந்த அந்த வீட்டில் கிழவி மட்டும் தனித்திருந்தாள். வாரிசுகள் எங்கெங்கோ அயல்நாடுகளிலும் பெருநகரங்களிலும் செல்வ மீன் வேட்டையில். முற்றத்தில் பருவ சிரத்தையின்றி எப்போதும் பூத்துக் குலுங்கும் வெள்ளைப் போகன்வில்லா. தடுத்துத் தடுத்து கட்டப்பட்ட ஏழு அறைகள் கப்பல்கள் போல கீழ்த்தளத்தில் மட்டும். அகன்ற தேக்கு மரப் படிக்கட்டுகள் மாடிக்கு ஏறிப்போனது. வெள்ளைப் பீங்கான்கள் சுவரை அலங்கரித்தன. புகைப்படங்களுக்கு மாற்றாக ஏசு கிறிஸ்து விலிருந்து அப்போஸ்தலர்கள் வரையிலான சுதைச் சிற்பங்கள். நல்ல மேய்ப்பனின் கையிலிருந்த செம்மறி ஆட்டுக்குட்டி தத்ரூபமாக உயிர்ப் புடன் பார்த்தது.

கட்டில் மேல் அமர்ந்திருக்கும் இந்த ஒட்டகத்தின் வீட்டில் பச்சைத் தண்ணீர் கூட அருந்தக்கூடாதென்று சற்று முன்தான் அடிமனத்தின் தலை யிலடித்து சத்தியம் செய்திருந்தான். மாறாக அமலா அவனுக்காகவும் கிழவிக்காகவும் காபி போட சமையற்கூடத்துக்குள் நுழைந்தாள். அவன் மறுத்தபோது, அழுத்தமாகப் பார்த்து கண்களால் அதட்டினாள். 'நீ என்ன இந்த வீட்டு வேலைக்காரியா' என ஆவேசமாக நாவைச் சுண்ட நினைத் தான். அடக்கிக்கொண்டான். கிழவி கமுக்கமாகவே இருந்தாள். அவள் மௌனமும் மாளிகையின் அமைதியும் இம்சையாக உறுத்தியது. கிழவி சிலோன் ரேடியோவில் சிங்களப் பாட்டை வைத்துக்கொண்டு கண்ணை மூடியது. கட்டிலருகே பழைய மூன்று பைசா வடிவில் அமைந்த இரண்ட டுக்கு மரமேஜை மீது திருக்கைத் தீவு என்ற பெயருடன் கனத்த புத்தகமும் தேவசகாயம்பிள்ளை வரலாறு என்ற நூலும் இருந்தன. சம்பந்தமில் லாமல் இன்னொன்று. Mind without Measure - JK. அமலாவுடையது.

பாண்டி வரவேற்பறைக்கு வந்து சோபாவில் காத்திருந்தான். சீன பீங்கான் கோப்பையில் காப்பி வந்தது. பாண்டி வேகமாகக் குடித்து முடித் தான். அமலா எப்போதும் போல் நிதானமாகப் பருகினாள். சின்ன மாற்றம்கூட இல்லை. வாயிலிருந்து வயிற்றுக்கு காப்பி இறங்கிப் போவது நுட்பமான முக அசைவுகளில் தெரிந்தது. செல் போன் ஒலித்தது.

''என்னக்கா... அதுக்குள்ள கூப்பிட்டுட்ட? நைட்லதான் பேசுவேன்னு சொன்ன!''

''சர்ப்ரைஸ். அப்பாட்ட பேசிட்டேன்டி. பெரியக்காகூட நேர்ல பேசுன்னு சொன்னா. இத எப்படி முகத்துக்கு நேரா பேசுறதுன்னு போன்லயே பேசிட்டேன். முதல்ல இல்லன்னார். பிறகு சங்கடப்பட்டார். எங்க எல்லாருக்குமே தெரியும்பா. நாங்க ஒண்ணும் நினைக்கலப்பா. ஜோ தான் ரொம்ப வருத்தப்படுறா. அம்மு விளையாட்டா எடுத்துக் கிட்டான்னேன். நீ சொன்னத சொன்னேன். இந்தியாவில வாழ்க்கைங்

கறதே சந்ததிகளுக்காக தங்களைப் பணயம் வைக்கிறதுதான். அவரு கடமைகளை முடிச்சிட்டாரு. ஐம்பத்தி ஒன்பது வயசுல இன்னும் கனவுகள் மிச்சமிருந்திருக்கும். தன் போக்கிலயும் அவர் இருந்து பார்க்கட்டும். சாதக பாதகமெல்லாம் அவரு மனசோடதான்னு நீ சொன்னதா சொன்னேன். அம்மு இவ்வளவு பேசுவான்னு எனக்குத் தெரியாதுங்கிறார்.''

''பெரியக்காவ அலட்டிக்காம சும்மா இருக்கச் சொல்லு.''

''இருடி. இனிமேதான் விஷயமே இருக்கு.''

''அம்மாவுக்கு மட்டும் தெரியக்கூடாதுன்னு நினைக்கிறோம் பான்னு சொன்னேன்.''

''தெரிஞ்சாலும் ஒண்ணுமில்லக்கா.''

''அம்மு அப்படித்தான் சொல்றான்னேன். அவர் சொன்னாரு - ஐஞ்சு வருஷத்துக்கு முன்னாலயே அம்மாவுக்குத் தெரியுமாம். ஷாக்காயிட் டேன்.''

''இன்ட்ரஸ்டிங்! ஜாய்க்கு தெரியாத வேற ஒரு அம்முக்குட்டியும் இருக்கலாம்.''

''நோ சான்ஸ்.''

''என்னப் பத்தி எனக்கே தெரியலக்கா. ரியலி. மனசு என்ன வேணா செய்யும். அதைப் புரிஞ்சிக்கிடத்தான் டிரை பண்றேன். நீ அப்புறம் கூப்பிடு.''

முத்தமிட்டு விடைபெற்று போனில் புள்ளி வைத்தாள். அவள் பேசி முடித்ததும் பாண்டி எழுந்துகொண்டான்.

''செல்வம் அக்கா வீட்டுக்கு வாறியா?'' அழைப்பதுபோல் கேட் டான். பதில் வரும் முன்னே ''அம்லா டித்தி அம்லா டித்தின்னு சில்வியா எப்பப் பாத்தாலும் உன்னை தேடிக்கிட்டேயிருக்கா'' என்றான்.

''பாட்டிமா, எனக்கு எதும் வேலையிருக்கா?'' உள்ளேபோய் கிழவியிடம் கேட்டாள்.

''வெளிய வெயிலுலா காயுதுங்கச்சி, நேரந் தாழ போவலாம்லா.''

''சரி, நான் சாயந்தரம் வாறேன்'' என்றாள் அவன் முகம் பார்த்து. பாண்டி திரும்பி வாசல் நோக்கி நடந்தான். பாட்டு நின்றிருந்தது. நடைப் படிக்கட்டில் சிறிது நேரம் நின்றான். அக்காளுக்கும் அவனுக்கும் நடுவில் புகுந்து செலுத்தப்படும் குருட்டு அதிகாரம் எரிச்சலூட்டியது. பெருமூச் செறிந்தான். அக்காவின் குரலில் அவளும் கட்டில் மேல் அமர்ந்திருந்த ஒட்டகமும் திருக்கைத் தீவுக்குள் நுழைந்தார்கள். வாசலோரம் நின்று கொஞ்ச நேரம் அந்தக் குரலைக் கேட்டான். தெருவில் இறங்கி கடலை நோக்கி நடந்தான்.



பனிபடர்ந்த வார்த்தைகள் உருகி நீராகி, அவசியமற்று கசங்கிய ஆச்சரியங்களின் புருவ மடிப்புகள் நிமிர்ந்து நேராகி கிளிபோல் பேசி ஒலி கழிக்கும் சுவர்க்கடிகாரம் அயர்ந்து ஆணியில் உறங்கும்வரை காத்திருக்கமுடியாமல் காட்சியொன்றின் பல்லாயிரம் பிரதிகளால் கட்டப்பட்ட மட்டமான காவியமாய் வெறுமனே என்னை விழுங்கி உமிழும் உன் வீட்டில் மரித்தவனின் விழிச்சாயலோடு திறந்திருக்கும் இம்மரக் கதவுகளை அரவமின்றிச் சாத்திவிட்டு விலகிப்போய் விடுகிறேன் அந்நியனைப்போல். பூரண நிலவின் பின்னிரவுப் பார்வையில் பொன்னலங்காரமேற்று நீளும் இவ்வீதியில் நீ காவல் வைத்திருக்கும் அச்சம் மோகினியின் கொலுசுமணிகளைக் கிணுக்கி முன் செல்ல மெல்ல நடை உதைத்து அர்த்தங்களின் வாழ்வு பூர்த்தியுறும் அர்த்தமற்ற பயணக் கோடுகளின் வசீகர அழைப்போடு புவி ஈர்ப்பின் நிகரகதிகளை மீறி நிழல்போல் நடந்து மறைந்துவிடுகிறேன் எல்லைகளற்ற மர்ம வெளியில். சிலையின் திறக்கப்படாத விழிகளாக நீ ஒளித்து வைத்திருக்கும் மகத்தான சிற்பக் கூடத்தின் கதவுகள் தானாகத் திறந்து இடிகள் முழங்கி மாபெரும் திகைப்பில் கட்டி நிறுத்தட்டும் நானற்ற வெறுமையை யாருக்கும் எட்டாத கவிதையாய்.



இரவு முழுக்க கனவுகளின் கொந்தளிப்பு. துண்டுதுண்டான காட்சிகள். காது, மூக்கு, வாய், மார்பு, கை, கால், விரல் நகங்கள் யாவும் கண்களாகி விட்டதுபோல் பிம்பங்களின் தொடர் ஓட்டம். அதிகாலையில் படுக்கையைவிட்டு எழுந்தபோது உறங்கி எழுந்த அனுபவமாக இல்லை அது. சித்திரவதைக் கூடத்திலிருந்து விடுபட்ட உணர்வே ஏற்பட்டது.

நூற்றுக்கணக்கான வள்ளங்கள் பாண்டியை முற்றுகையிட்டு முரட்டுத்தனமாக வட்டமடித்தன. நீந்திக்கொண்டிருந்த அவன் அலைகளின் புகைமூட்டத்துக்குள் மூச்சுத் திணறித் தவித்தான். தொலைபேசியில் அமலா அக்காள் பேசியபடியிருந்தாள் ''என்னை பார்க்க வாரேன்னு சொன்னியே... ஏன்டா வரலை?'' ''அக்கா நான் வந்துட்டேன். இங்கே பாரு உன் பக்கத்துலதான் நிக்குறேன்'' குரலெடுத்து அலறியும் அவள் அவனைப் பொருட்படுத்தாமல் தொலைபேசியில் பேசியபடியே இருந்தாள். ''பண்டி மாமா... பண்டி மாமா என்னிய கண்டுபிடியேன்'' சில்வியா போர்வைக்குள் ஒளிந்தாள். சாம்பல் அங்கி அணிந்த முதிய கன்னியாஸ்திரி அண்ணாந்து வானத்தைப் பார்த்த வண்ணம் நின்றிருந்தார். ''அதிரசம் சாப்பிட்டிங்களா... நல்லா இருந்துச்சா'' விஜிலா வெட்கத்தோடு கேட்டாள். தேரி மணலில் யானை நடந்தது. தூண்கள் போன்ற அதன் பாதச் சுவடுகளில், பறவைக் கூட்டில் விட்ட தனி முட்டை போல்

கனிந்த தக்காளிப் பழங்கள் தோன்றின. கடலை நோக்கி ஓடினான். கரையேறிய ஒரு வள்ளத்தில் வலை நிறையப் பாம்புகள் நெளிந்தன. நிலத்தை அறுத்துக்கொண்டு ஊருணி ஆலமரம் போயோட்டம் ஓடியது. அமலாவும் பாண்டியும் அதை சைக்கிளில் துரத்தினார்கள். ஆலமரத் தடியில் கடிகாரக் கடையிருந்தது. பாண்டியின் கைக்கடிகாரத்தை ரிப்பேர் பார்ப்பவனிடம் நீட்டினாள் அமலா. அவன் குறடு எடுத்து முதலில் முட்களை பிய்த்து வீசினான். பிறகு எண்களைப் குட்டிக் குட்டி பற் சக்கரங்களை. கடிகாரம் பத்தாக நூறாகச் சிதறி அந்தரத்தில் மிதந்தது. நொடிகள் ஒவ்வொன்றும் வெடியாகி வெடித்து இடியோசையுடன் செவியைக் கிழித்தது. உடல் நடுங்கி விழித்தான்.

*மிதக்கும் கிரகத்தில் கனக்கும் வாழ்வைச் சுமக்கும் பக்குவமற்றவனை முற்றுகையிடும் மௌனமே விலகிப் போ. கூச்சலிடவில்லையெனினும் என்னைக் கொஞ்சம் கொஞ்சமாக நீ கொன்று கொண்டிருக்கிறாய். ஏழு ஏழு சென்டிமீட்டராய் எவரெஸ்ட் சிகரம் எங்கு நகர்ந்து போனால் எனக்கென்ன? நான் எழுந்து நடக்க வேண்டும். அங்கொரு பிட்சு நூறு வருடங்களாக கண் விழித்திருந்தால் நான் என்ன செய்யட்டும்? நான் கொஞ்ச நேரமேனும் உறங்கி எழ வேண்டும். கரையில் படகுகள் அடகில் இருப்பதாய் குமுறும் கற்பனை என்னுடையதல்ல. கடவுளுக்கு ஆள் தேடும் கனவுகளுக்கு அஞ்சி புயலாடிய ஏழுகடல் நடனங்கள் கண்டு பிதுங்கிய விழிகள் கைகளுக்கு எட்டாத தூரத்தில். எண்ணிக் கொண்டுதானிருக்கிறேன், திருடுபோய் நான் மீளாத ஏழாவது அதிகாலை இது.*

இருள் பூரணமாக விலகியிராத அதிகாலையில் குறுக்குத் தெருவில் இறங்கி வலைக் கூடத்தின் முன் திரும்பி கிழக்கு நோக்கி நடந்தான். கடல் காற்று இதமாக முகத்தில் வருடியது. குருத்து மணற்பரப்பு மெதுமெது வாக நிறம் மீண்டு வந்தது. சிலுவைப்பாடு மணற்திரட்டில் ஏறாமல் திலாக் கிணறுகள் ஓரமாக நடந்து சிலுவைய்யா கோவிலைக் கடந்து கலங்கரை விளக்கத்தருகே இறங்கி சவேரியர் குகை முகட்டுக்கு வந்தான். திருச்செந்தூர் கோபுரம் வடகிழக்கே தூரத்தில் மங்கலாய்த் தெரிந்தது. தெற்குக் கடல் அலைகள் ஆவேசமாகப் புரண்டு வந்தன. கரை மணலில் நீர் புரளும் ஓசை புத்துணர்வைத் தந்தது. உடல் குளிர்ந்து லேசாக நடுங்க ஆரம்பித்தபோது கடல் தங்கப் பட்டு விரித்ததுபோல் முப்புறமும் ஒளிர்ந்தது. கடலின் அடி மனத்திலிருந்து நடையேறுவது போல் உதய சூரியனின் மேல் விளிம்பு திமிர்த்து மேலெழும்பியபோது அந்தரங்க சிலிர்ப்பு ஏற்பட்டது. இந்நாளுக்கென்று அருளப்பட்ட இத்தீங்கனியின் தேனும் சுவையும் ஒளியும் ஒரு வாழ்வுக்கே போதுமா?

☆☆

*அறுந்து கிடக்கும் செருப்பிலிருந்து வளரும் பிரிவின் துயர வாசனையை முகர இயன்றபோது களைகளையாகத் தின்னக் கிடைத்தது என் சாவு. ஆகாயத்தில் பறவைகளை விதைத்துவிட்டு அறுவடைக்காகத்தான் காத்து நிற்கிறது ஆலமரமும். இனியேன் அஞ்சவேண்டும் என் வாழ்வை நான் மிச்சம் வைக்க!*

☆☆

இளம் வயதிலேயே திருமணமாகி கல்யாணக்களை கலையு முன்னே குழந்தை பெற்று பதம் குலைந்த இளமையுடன், முகம் பார்க்கத் தொடங்கும் கைக்குழந்தையோடு அடிக்கடி செல்வம் அக்கா வீட்டுக்கு வந்து போன பெண்ணை யாரென்று பாண்டிக்கு முதலில் தெரியவில்லை. எங்கோ எப்போதோ பார்த்த, பேசப் பழக ரொம்பவும் நாணப்பட்ட இந்த வளவுப் பெண் என்பதற்கு மேல் அவளைப் பற்றி எதுவும் அறிந் திருக்கவில்லை. அவன் வந்த முதல் நாளில் கண்டதும் ''நல்லா இருக்கீங் களா, வீட்டுல எல்லாரும் நல்லா இருக்காங்களா'' என்று ஒளிர்ந்த கண்க ளுடன் கேட்டாள். பாண்டியும் பதிலுக்கு நலம் விசாரித்து சமாளித்தான். ஒருமுறை வாய்த்த சின்னஞ்சிறு தனிமையில் கண்ணோடு கண் பார்த்து தொனி தணித்து அக்கறை கலந்த குரலில் கேட்டாள். ''வயசுதான் ஆயிட்டுதே, கல்யாணம் முடிக்கலாம்லா.''

அந்தக் கணத்தில் பொட்டில் அடித்தாற்போல் பாண்டிக்கு உறைத் தது அவள் யாரென்று. தனக்கு அனுப்பப்பட்ட போட்டாவில் இருந்த அதே முகம். கையும் களவுமாக அகப்பட்ட குற்றவாளியின் நடுக்கம் உடலில் பரவியது. ஏதோ சொல்ல வந்து எதுவும் சொல்ல முடியாமல் நெளிந்தான். சற்று நேர மௌனத்துக்குப் பிறகு சவலைச் சிரிப்புடன் அவளே சொன்னாள் ''உங்க இஷ்டம். நான் ஒண்ணும் சட்டம் போடலை'' பழி தீர்த்த நிறைவு வாடிய முகத்தில் வந்து கூடியது. 'நீ... நீங்கதான் மரியபுஷ்பமா' என கேட்க நினைத்தான், நினைப்போடு விட்டுவிட்டான்.

மரியபுஷ்பத்தின் மகனை சில்வியா பாடாய்ப் படுத்தினாள். ''தம்பிபாப்பா... தம்பிபாப்பா'' என்று கொஞ்சித் தீர்த்தாள். தன்னை விட சின்ன உயிர் ஒன்றிருப்பதில் அவளுக்கு என்ன சந்தோஷமோ தெரிய வில்லை.

சில்வியாவுக்கு வயது இரண்டு முடிந்து மூன்று பிறந்திருந்தது. சுட்டிப் பெண். தத்தித் தத்தி பேசினாள். சிரிப்பில் கொஞ்சுண்டு குரல் பிடித்திருந்தது. அதைக் கவனித்து ரசிப்பவளாக அடிக்கடி அரற்றி அரற்றி சிரித்தாள். உறங்கும் நேரங்களைத் தவிர மற்ற பொழுதெல்லாம் ஓட்ட மும் நடையும் விளையாட்டுமாக வீட்டையே கலகலப்பாக்கிக் கொண்டி ருந்தாள். அவளோடு பேசுவது விளையாடுவது கொஞ்சுவது மிக இனிமையான அனுபவமாக இருந்தது. பாண்டியை விட அமலா

அக்காவிடம் நெருக்கமாகவும் பிரியமாகவும் பழகினாள். அவர்களுக்குள் ஒன்றரை மாதப் பழக்கமிருந்தது. மூன்று நாட்களில் பாண்டி நிட்டமற்ற குழந்தை மனதில் அவ்வளவாக ஒட்டமுடியவில்லை. போன முறை வந்திருந்தபோது கைக்குழந்தையாக இருந்தாள்.

ஒரு நாளைக்கு குறைந்தது இரண்டு மணி நேரமாவது தம்பி பாப்பாவும் மரியபுஷ்பமும் அக்கா வீட்டில் இருந்தார்கள். அந்நேரங்கள் விசித்திரமானவை. ஒரு பாவமும் அறியாத பாண்டியை அநாவசியமாக அவஸ்தைப் படுத்தியவை. உன்னைத்தான் பார்க்கிறேன், ஆனால் இந்தப் பார்வை உனக்கல்ல; உன்னைப் பார்த்துதான் சிரிக்கிறேன், ஆனாலும் இந்தச் சிரிப்பு உனக்கல்ல என்பது போல் நாசூக்காக வதைத்தாள் மரிய புஷ்பம். வேண்டாவெறுப்புடன் இருந்தான். அவளிருக்கும் நேரங்களில் அவளை மேலும் காயப்படுத்துவது போல் வெளிநடப்பு செய்யவும் மனம் துணியவில்லை.

சிலுவைய்யா கோவிலை நோக்கி நடந்தான். சிலுவைப்பாடு ஓவியங்கள் வழிகாட்ட தார் ரோடு மணற்குன்றின் உச்சியில் கோவிலை நோக்கிச் சென்றது. கானல் அலைகள் கடல் மேல் மிதந்தன. கடல் கண்ணாடிக்குக் கீழிருப்பது போல் தோன்றியது. கோவிலில் குளிர் காற்று நுழைந்து வெளியேறியது. வயோதிகர்களும் நோயாளிகளும் கோவிலில் பாடு கிடந்தனர். தனிமையை விரும்பினான். கோவிலிருந்து கிழக்கே இறங்கி செம்பாறைக் குன்றின் மீது சவேரியார் குகை நோக்கி நடந்தான். முப்புறமும் கடல்.

நேற்றிரவு உறங்கவேயில்லை. உடல் களைப்பை உணர்ந்தது. கண்கள் எரிந்தன. வழிபாடற்று கைவிடப்பட்ட பழைய சர்ச்சில் வெயிலுக்காக சற்று ஒதுங்கினான். ஒரு புறா திக்கிழந்து, நடக்கவும் முடியாமல் மெதுவாக தத்தித் தத்தி பாண்டியின் காலடிக்கு வந்தது. ஆள் பயமேயில்லை. நோயுற்றிருக்கலாம். முதுமை? அதன் அலகின் அடி கொப்புளித்துப் போயிருந்தது. அதன் கண்கள் மயங்கிச் செருகின. குனிந்து கையிலெடுத்தான். ஒடுங்கியது. அதைத் தூக்கி வராண்டாவின் கதவற்ற ஜன்னலில் துருப்பிடித்த கம்பிகளினருகில் வைத்தான். கர்த்தர் காப்பாற்றட்டும்!

உள்ளே சிமிண்ட் தரை சுத்தமாக இருந்தது. அங்கங்கே தாயக்கட்டங்கள். தரையோடு சாய்ந்தான். கொண்டல் காற்றுக்குக் கண்கள் செருகின.

காக்கைகளின் கரைச்சல் தூக்கத்தைக் கலைத்தது. மேற்கே சாய்ந்த சூரியனின் கிரணங்கள் சாய்வாக சர்ச்சுக்குள் விழுந்தன. நாலு மணி நேரம் தூங்கியிருக்க வேண்டும்.

வெளியே வந்து பார்த்தான். பாறை மேட்டில் கருஞ்சிறகடித்து குறுக்கு மறுக்காகத் தாவித் தரிந்தன காகங்கள். ஜன்னலைப் பார்த்தான்.

புறா இல்லை. கருப்பு அலகுகள் கொத்திக் கிழித்த சாம்பல் இறகுகள் சில கடல்காற்றில் பறந்துகொண்டிருந்தன.

☆☆

*கல் மலையும் கனன்றுருகும் வெயில் புயலில் தன் சின்னஞ்சிறு நிழல் படகை கரை சேர்க்க மரம் தேடியலையும் பறவை கொடுங்கோடைக் கூவலுடன் என்னிடம் வந்தது. திடுக்கிட்டு ஏமாந்து திகைத்துத் திரும்பிற்று. சிறகு நுனி புகைய அது திரும்பிப் போன திசை வெறித்து நின்றால் மரமாவேன். நடந்தால் என்னாவேன்?*

☆☆

மிருதுவான ஞெகிழியில் வெள்ளை நீலக் கலவையில் செய்யப் பட்ட சில்வியாவின் செருப்புகள் அழகானவை. அதை அணிந்து கொண்டு நடக்கும்போது ''க்கீக் க்கீக்'' என்று அணில் கத்துவதுபோல் சப்தம் எழுந்தது. ஓசை மேல் நடப்பது சில்வியாவுக்கு உற்சாகமளித்தது. வீட்டுக்குள்ளேயே நடந்து நடந்து அலுத்துப் போன பிறகு தெருவில் நடந்து பார்த்தாள். தேரிமணல் செறிந்திருந்ததால் ஓசை துல்லியமாக எழவில்லை. கூர்மை குறைந்தது. யாகப்பர் கோவில் முற்றத்து வழி மேடை அரை வட்ட வடிவில் மிக விசாலமாக அமைந்திருந்தது. சாம்பல் நிறத்தில் காங்க்ரிட் தளம். பெரிய பொய்கையின் நடுவில் கல்லெறிந்து, அது எழுப்பிய அலைகள் கரைக்குப் பக்கத்தில் வந்தபோது பொய்கையை இரண்டாக நறுக்கி ஒரு பகுதியை கோவில் வாசலில் வைத்ததுபோல் அதன் அரைவட்டப் படிக்கட்டுக்கள் காட்சியளித்தன. ஐந்து யானைகள் கட்டலாம்.

அமலா அவ்வப்போது சில்வியாவியை அங்கே நடக்க விட்டு பழக்கம் காட்டியிருந்தாள். ஒரு நாள் மாலையில் சில்வியா 'க்வீக் க்வீக்' ஓசை மேல் நடந்து குதூகலிப்பதை அமைதியாகப் பார்த்திருந்த அமலா பாண்டியிடம் இயல்பாகக் கேட்டாள் ''மணப்பாடு ரொம்ப அழகான ஊர்னு சொல்றாங்க, உண்மையா?''

''ஏன், நீ இல்லைங்கிறியா?''

''முழுசா பார்த்தாத்தானே சொல்ல முடியும்.''

பாண்டி என்ன சொல்வதென்று யோசித்தான். சுய எள்ளல் சிரிப் புடன் அவள் தொடர்ந்தாள். ''நம்ம சில்வியா குட்டிக்கி என்ன தெரியுமோ அவ்வளவுதான் எனக்கும் தெரியும் இந்த ஊரைப்பத்தி. அதுவுமில்லாம வெளியே போக பயம். கண்படும். அழகிகள் நிம்மதியா தெருவில நடக்க முடியுமா?''

கால்களையே பார்த்தபடி குனிந்து நடந்த சில்வியா அவ்வப்போது எதன் மீதாவது மோதினாள். உற்சாகம் குன்றாமல் மீண்டும் 'க்கீக் க்கீக்' வைத்தாள். ஆலயத்தின் முகப்புத் துணைவாசல்கள் இரண்டும் சாற்றி

யிருந்தன. தலைவாசல் மட்டும் திறந்திருந்தது. துணைவாசல் நடையொன்றில் இருவரும் அமர்ந்திருந்தனர்.

''சோறு பொங்குறது, துணி துவைக்கிறது, கதை படிச்சிக் காட்டுறது, செபம் சொல்லறதுக்குத்தானே பொழுது சரியா இருக்கு'' குரலில் குத்தல் தெரியாமல் பேசினான்.

அவள் அதைப் பொருட்படுத்தவில்லை. ''திலா கிணத்துலே யிருந்து பாத்தா திரடு தெரியுதுலா... அதுக்குப் பின்னாலேயும் கடல்தான் இருக்கா'' ஆர்வமாகக் கேட்டாள்.

பாண்டி அவனுக்குள் சிரித்தான். ''போன தடவை நான் பார்க்கும் போது கடல்தான் இருந்துச்சி. இப்ப என்ன இருக்குனு தெரியலை.''

அமலா வாய் விட்டு சிரித்துவிட்டாள். அது அவனையும் தொற்றியது. ''சும்மா கிண்டல் பண்ணாதடா. இரண்டு மாசம் தங்கி யிருந்த ஊரை சுத்திப்பார்த்து தெரிஞ்சு வச்சுக்கிட்டா, நாளப் பின்ன யாராவது கேட்டா சொல்லலாம்ல.''

''சொல்லும்போது நான்தான் கைடு பண்ணுனேன்னு என்னை சேத்து சொல்லணும்'' என்றான் விளையாட்டாக.

மஞ்சள் வெயில் மறைந்து இருள் மேவத் தொடங்கியது. மின் விளக்குகள் ஒளிர்ந்தன. ஆலயம் மாலை ஆராதனைக்கு தயாரானது. அங்கிருந்து கிளம்ப மாட்டேன் என்று சில்வியா அடம் பிடித்தாள். அவளைக் கெஞ்சிக் கொஞ்சித் தூக்கிக்கொண்டு அமலா நடந்தாள். கோவில் வளாகத்தின் மணல் வெளியில் நடந்து மதில் சுவரில் சிறகு விரித்து நின்றிருந்த சம்மனசுகளைக் கடந்து வெளியே வந்தனர். தெரு ஓரம் நின்றிருந்த பெரிய வேப்பமரத்தின் கீழ் வந்ததும் அமலா சொன்னாள் ''நாளைக்கு மூணு மணிக்கு வாடா. இந்தா இவளைத் தூக்கிக்கோ.''

பாண்டி சில்வியாவை இரு கைகளாலும் பற்றி வாங்க முயன்ற போது அவள் வர மறுத்து அமலாவின் மீது ஒட்டிக்கொண்டாள். அமலாவின் இதயத் துடிப்பை புறங்கையில் உணர்ந்தான். ''மாமா கிட்டப் போம்மா'' அமலாவின் குரல் கெஞ்சியது. பிடிவாதமாக அவளோடு ஒட்டிக்கொண்டாள் சில்வியா. மரத்தில் அடையும் பறவைகளின் குரல்கள் சிதறிக் கலைந்து அவள் நாடித் துடிப்புகளைப் போல ஏறுமாறாக ஒலித்தன. ''போ... சில்வியா'' குரலில் காற்றுத் துவாரங்கள். பறவைக் கீச்சொலிகள் காற்றை நிறைத்தன. உலகையே மறைத்தன. அவள் குரல் எழ இயலாமல் மெலிந்து தேய்ந்தது. ஆலய மணியோசை எழுந்தது.

''சரி விடு. நான் வீட்டு வரைக்கும் கொண்டுவந்து விடுறேன்.''

☆☆

கைகளையெல்லாம் விரித்து தன்னருகே அவனை அழைத்தது அந்தக் கன்னிமரம். அதன் கருணையால் பொங்கிய தீம்புனல் பெருக்கில்

அவன் தேகம் நிலத்தில் ததும்பியது. மரத்தின் கரங்களில் தாவிய பறவைகள் ஆனந்தத்தில் ஆர்ப்பரித்தன. கிளைகளில் ஆடிக் கொண்டிருந்தன யாருமின்றி இரண்டு ஊஞ்சல்கள். நெருங்கிச் சென்ற பின்தான் தெரிந்தது கடவுளும் சாத்தானும் இரு குழந்தைகளாக ஆடிவிட்டு இறங்கிப் போனவை. மரத்தோடு உரையாட சொற்களே அவனிடம் இல்லை. வார்த்தைகளெல்லாம் வண்ணமேறி வானத்தே ஒரு வில்லாகி தூரத்தில் மிதந்தன. பார்க்கத்தான் முடிந்தது. பேச முடியவில்லை. எவர் ஊஞ்சல் எதுவெனக் குழம்பி நின்றவனை மரம் கொல்லாமல் அறுத்து இரண்டாகப் பிளந்தது. இரண்டு ஊஞ்சல்களிலும் ஏறியமர்ந்து எதிரும் புதிருமாக ஆடினான். அச்சமயம் உயரே எழுந்த ஒரு பறவையின் சிறகு நுனியில் ஊஞ்சலாக மாறி ஆடியது ஆகாயம்.

☆☆

அதற்குப் பிந்திய நாட்களின் மாலை நேரங்கள் பாய் புடைத்த வள்ளங்கள் ஆயின. அவளும் அவனுமாக தெருக்களில் சுற்றித் திரிந்தார்கள். அவ்வப்போது பாண்டியின் நினைவில் மரியபுஷ்பத்தின் முகம் தோன்றி மறைந்தது. ஜேம்ஸ் தெரு, ராஜா தெரு, செசிலித் தெரு, மிராண்டா, கோஸ்தா, பாய்வா, விக்டோரியா மாளிகைகள் தந்த பிரமிப்பில் கடற்கரையார் குடியிருப்பிலிருந்த மரியபுஷ்பத்தின் வீடு கண் தப்பிப் போய்விட்டது.

வியப்பு வெறுப்பை வெளிக்காட்டாமல் அமலா மத்திமமாக எல்லாவற்றையும் வேடிக்கை பார்த்தாள். வேண்டியதை ரசித்தாள். கடந்து சென்ற சிலர் அவர்கள் கண்படவே, ''யாருலே இது ஊருக்குள்ள புது ஜோடி! முன்ன பின்னே கண்டதில்லியே'' என பேசிக்கொண்டார்கள். இனிமேல் ஊருக்குள் சேர்ந்து நடப்பதில்லை என்று தீர்மானித்தாள்.

கண்ணை மூடினால் இருள் முகத்தில் மோத வேண்டும். மாறாக இமைகளைக் கோர்த்த பிறகும் காட்சி நீடித்தது. பாண்டி இரவில் உறங்க சிரமப்பட்டான். காலண்டரில் தேதி தெரியாத வெளிச்சத்தில் உயரே சுழலும் மின்விசிறியைப் பார்த்தபடி படுத்திருந்தான். கண் மூடி, தன்னுணர்வு மயங்கும் கணத்தில் கடல் வந்து உடலைப் போர்த்தி நுரைத்தது. அலைகளுக்கடியில் படுத்திருப்பதாக மூச்சுத் திணறி விழிப்பு கண்டான். காட்சியைக் காட்சியால் தடுத்தாண்டு, சோர்வுற்று, மனம் அலைகளில் மிதந்து அலைக்கழியும் கிளிஞ்சலாக லேசான பிறகு, அமைதி கலைந்து ஓசைகள் உயிர்க்கும் அதிகாலைகளில் உறங்கி எழுந்தான்.

☆☆

பூந் தேரிழுத்து விடிய விடிய ஊர்வலம் நடத்தி விழிகளில் நிறுத்துகிறாய். திருவிழா முடிந்ததென்று கருதும் கணம் அல்லியாய்க் கூம்புகிறது முகம். பூத்தும்பியின் பிய்ந்த சிறகாய் ஒரு பாடல் என்

*உதடுகளில் தொங்குகிறது. கனவின் மடி விரித்து அதில் கவிதைகளைக் கிடத்தித் தாலாட்டுகிறேன். மலை ஏறி இறங்கித் தவிக்கின்றன என் கால்கள். ஏதொரு தூரத்தையும் கடக்காமல் திசைகளைக் கொய்து கூந்தலில் சூடுகிறாய். உன் புன்னகையில் குவிகிறது இன்னும் முகைய விழாத புதிர். பிரிவின் கால்களைத் திரித்து திரியாக்கிப் பற்ற வைக்கிறாய் தீயை. ஒரேயடியாக இல்லாமல் கொஞ்சம் கொஞ்சமாகக் குருடனானேன். தெரிகிறது உலகம் தேன் கருகும் வாசனையில்.*

☆☆

தேரி மேடு உச்சியில் நின்று வடமேற்கே பார்த்த அமலா ''அம்மா!'' என்ற வியப்பொலியுடன் நெஞ்சில் கை வைத்தாள். வலது கை வெகுநேரம் நெஞ்சிலிருந்தது. எதிரே பரந்த கடலும் நிலப்பரப்பும் நெளிந்து வளைந்து பிணைந்து கிடந்த இயற்கையின் நிகரற்ற அழகினால் அவள் சுண்டப்பட்ட அற்புதக் கணத்தை பாண்டி கவனித்தான். இவளும் ஒரு காலத்தில் குழந்தையாகத்தான் இருந்தாள் என்பதை அத்தருணத்தில் எளிதாக நம்ப முடிந்தது. பலவகை மரங்களால் சூழப்பட்ட வனம் போல ஊர் காட்சியளித்தது. வனத்துக்குள் இழுத்து வந்து நிறுத்திய இரண்டு தேர்கள் போல கோவில்கள் அருகருகே நின்றிருந்தன. தட்டுச்சப்பரங்களின் கூட்டமாக வீடுகள் தெரிந்தன. அங்கிருந்து பார்க்கும்போது, வானத்துக்கு மிக அருகிலிருக்கும் கிராமம் அது என எண்ணத் தோன்றியது.

சூடு தெள்ளிய மாலை வெயிலில் தேரி மேட்டின் மணல் வரிகளில் கால்கள் புதைய நடந்தார்கள். அடிவாரத்து பாதையில் நின்று பார்க்கும் போது தேரி மேட்டின் உச்சியில் ஏகாந்தமாய் நின்ற பெரிய கற்சிலுவை இரண்டு கைகளையும் திறந்து ஆகாயத்தை நோக்கி அகல விரித்து ஏங்கிப் பார்ப்பது போலிருந்தது. அது பற்றி அப்போது தோன்றிய வரிகளைச் சொன்னான்.

*மஞ்சள் மலைமுடியில் முளைத்து*
*உடல் சிலிர்த்து நிற்கும் சிலுவையே,*
*இக்கணத்தில் நீயுணர்வது*
*மீட்பரின் இறப்பையா?*
*உயிர்ப்பையா?*

கேட்டுவிட்டு பிடித்துப் போய் எப்படிப் பாராட்டுவதென்று சிறிது திணறி ''நானும்தான் பாத்தேன். பாத்தும் என்ன புண்ணியம்?'' என்றாள் வியப்புடன்.

சிலுவைய்யா கோவிலின் உள்ளே நிலவும் குளுமையும் அமைதியும் மனதிற்கும் உடலுக்கும் இதமளிக்கும் வல்லமை கொண்டது. அங்கே பக்தர்கள் முழந்தாழிட்டு சிரத்தையோடு பிரார்த்திப்பதை அதிகம்

பார்க்க முடியாது. வழி வாசல்களை செறுக்காமல் ஆங்காங்கே ஓரமாய் ஒய்ந்து படுத்திருப்பார்கள்.

அமலாவும் பாண்டியும் பீடப்புரை ஓரத்தில் சுரங்கம் போலிருந்த சிறிய வாசலுக்குள் நுழைந்தபோது வடக்கு வாசலோரம் படுத்திருந்த வயோதிகரின் கண்கள் நிம்மதி குலைந்து மின்னியாடியன. குறுகலான அகலத்தில் இரண்டு வாசல்களைக் கொண்ட 'ப'வடிவிலான பாதையில் வெளிச்சம் குறைவாக இருந்தது. வெளியிலிருந்து உள்ளே நுழைந்ததால் முதலில் கண்ணை இருட்டி பின் மெல்ல மெல்ல தெளிந்தது. 'ப' வடிவின் நடுவில் மேலேயுள்ள சிலுவையின் பாத நுனி வழுவழுவென்று கருமையாக வட்டப் பொந்துக்குள் தெரிந்தது. பாண்டி பலமுறை பார்த்திருக்கிறான். தொட்டு வணங்கியிருக்கிறான். அதன் சிறப்பை வழியிலேயே சொல்லி விட்டிருந்தான். 'கப்பல் கொடிமரத்தை வெட்டிச் செதுக்கி போர்ச்சுகீஸிய கப்பல் கேப்டன் 1542ல் செய்து தந்தது.' பீட மடியில் பொருத்தப்பட்டிருந்த சிலுவையைத் தொட்டு வழிபட வசதியாக சுவர் குழியப்பட்டிருந்தது. பெரிய சிலுவையைத் தொட்டு நெஞ்சில் குட்டி சிலுவை வரைந்து கொண்டான்.

அவர்கள் சீக்கிரமே வெளிப்பட்டதை எதிர்பாராத வயோதிகர் ஏமாற்றத்துடன் கண்ணை மூடி அவசரமாக உறங்கினார். பாண்டி எரிச்சல் மண்டிய கண்களோடு அமலாவின் முகத்தைப் பார்த்தான். அவன் விசனத்தை சட்டென புரிந்துகொண்டவளாக சின்ன சிரிப்புடன் அவன் பார்வையைத் தவிர்த்தாள்.

ஒளி தணிந்து இருள் விழுமுன் ஊருக்குள் வந்து கோயில் தெரு முனையில் பிரிந்து சென்றார்கள்.

☆☆

'பாதங்கள் மீன்களாகும் பாதை' திடீரென்று இந்த வரி மனத்தில் முளைத்துக் கொண்டது. முதல் கணத்தில் அதன் பொருள் புலப்படவில்லை. ஒளியும் அதிர்வும் மட்டுமே தோன்றியது. மெல்ல மெல்ல வலியாக மாறி இரவெல்லாம் உடலெங்கும் ஊடுருவி வதைத்தது. மீன்களான பாதங்களை நீந்தி நீந்திச் செல்ல வைத்து கொண்டாட்டத்தின் குறியீடாக ஏற்று மகிழ முயன்ற போதெல்லாம் தோல்வியும் ஏமாற்றமுமே எஞ்சியது. வரிகள் மேலும் துளிர்க்கத் தொடங்கின. ஒரு கவிதை பிறக்கின்ற நேரம் இதுவென்று புரிந்து கொண்டான். பாதையும் உறுதியாகிவிட்டது. பயணியை நிச்சயிக்கத்தான் அச்சமாக இருந்தது. எழுந்து விளக்கைப் போடவோ பேனா காகிதம் தேடவோ ஆர்வமில்லை. படுக்கையில் புரண்டபடி மனச்சுவர்களில் ஆங்காங்கே கிறுக்கிக் கொண்டிருந்தான்.

உன்னைத் தேடி நான் வரவில்லை
நீ யாரென்றும் எனக்குத் தெரியாது.
முகிலில் புனைந்த கோவிலில்
கனவுகள் அணிந்த தேவதை,
உன்னைக் காண
மழையாகி மண்ணுக்கு வந்த
உன் தோழியென்பதை மட்டுமே
நானறிவேன்.

கடல் அறம் பாய்ந்து கிடக்கும் காட்சி ஆபூர்வமானது. நீர் உள்ளிழுக்கப்பட்டு, குடைத்தீவு போல் மேடு எழுந்திருந்தது. அலைகள் மிகச் சோர்ந்து, புரளச் சோம்பல் பட்டு கடலுக்கு வயதான தோற்றத்தை வழங்கிக் கொண்டிருந்தன. மீண்டும் நீரோடு வந்து கரை வரை நிரவி கடல் இளமை பூணும் நேரத்தை ஊகிப்பது சுலபமல்ல. கடலிடையே புடைத்த மணல் பரப்பைக் கண்டதும் அமலா அங்கே செல்ல ஆசைப் பட்டாள்.

வான் சூடிய கதிர் சாட்சியாக
கடலாடிய அலை சாட்சியாக
காற்றில் விம்மிய வாசனை சாட்சியாக
வால் முளைக்காத விண்மீன் சாட்சியாக
வழி தப்பிய நிலா சாட்சியாக
கடந்த தூரத்தைத் திரும்பிப் பாராமல்
நடந்து கொண்டிருக்கிறேன்

ஈரமணலில் கணுவரை கால் புதைந்தது. பாண்டியும் அமலாவும் பேசிக்கொண்டே நடந்தார்கள். சப்தமில்லாமல் சலனமில்லாமல் கடல் காட்டிய பேரமைதியை அவர்கள் சிதைக்க முடியவில்லை. மாறாக கொஞ்சம் கொஞ்சமாக அவர்கள் பேரியற்கையின் முன் கரைந்து காணாமல் போய்க்கொண்டிருந்தார்கள். கடல் மௌனமாய்ப் படுத்திருந்தது. வீடுகளும் ஆலயங்களும் மாலை வெயிலில் கல்மரங்களாகத் தோற்றமளித்தன.

அதுகாறும் மடக்கி மனத்துக்குள் போட்டு வைத்திருந்த சில கேள்விகள் பாண்டியின் கட்டுப்பாட்டையும் மீறிப் புறப்பட்டன.

'' ரெண்டு மாசம் முடியப் போகுதாக்கா? இன்னும் எத்தனை நாள் இருக்கு?''

''அவ்வளவுதான் முடிஞ்சுது. வர்ற சனிக்கிழமை வரைக்கும்தான் இந்த ஊரு.'' குரலில் சின்ன தடுமாற்றம் உண்டானதை பாண்டி கவனித்தான்.

''மடத்துல இருந்ததுக்கும் மணப்பாட்டுல இருந்ததுக்கும் எப்படி இருந்துச்சு?''

''இந்த ஊரு நல்லாத்தான் இருக்கு. இருந்தாலும் இது தற்காலிகம் தானே'' அமலாவின் தொனி பாண்டியின் மனத்தைப் பிசைந்தது. தேவையற்றதொரு பதற்றம் தொற்றிக்கொண்டதை உணரத்தான் முடிந்தது; ஒழிக்க முடியவில்லை.

பாண்டி அவள் முகத்தைப் பார்த்தான். விளையாட்டு சிரிப் பொன்றை உதிர்த்தாள். வேகமற்று வெடித்த விம்மல் போலிருந்தது அது.

''என்னிய என்ன தூக்குலயா போடப் போறாங்க! வார்த்தைப் பாடுக்கு போகும்போது...'' வாக்கியத்தை முடிக்க முடியவில்லை. கண்களின் குணம் மாறியதை அவனுக்குக் காட்டாமல் கடல் நோக்கி முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

பட்டறை ஏற்றப்பட்ட வள்ளங்களைப் பார்த்தான். அவற்றின் வெறுமை புதிய துன்பத்தால் நிரம்பியிருந்தது.

நீருக்கும் நிலத்துக்கும்
ஊற்றுக்கும் தாகத்திற்கும்
இருப்புக்கும் மரிப்புக்கும்
துடிப்புக்கும் இதயத்திற்கும்
நடுவே நீண்டு செல்கிறது
பாதங்கள் மீன்களாகும் பாதை.

மனத்தில் வரிகளை முடித்தபோது வெளியே உலகம் மெலிதாக விடிந்திருந்தது.

உறக்கம் வந்தது.

☆☆

மரியபுஷ்பத்தைப் பார்க்கும்வரை அவள் நினைப்பே இல்லை. பார்த்த மாத்திரத்தில் பாண்டியைப் பற்றியாட் கொண்டது மெல்லிய பதற்றம். தூய ஆவி ஆலயத்தில் காலைத் திருப்பலி தொடங்க இன்னும் நேரமிருந்தது. பாவசங்கீர்த்தன கூண்டுகளும், வலைத் தடுப்புகளும் பழுதேறிக் கிடந்ததால் நடுவாங்கமாக நாற்காலியில் அமர்ந்து ஆட்களை முகம் பார்க்காமல் பீடத்தின் திருவுருவங்களைப் பார்த்தவாறு பாவ மன்னிப்புகளை வழங்கிக்கொண்டிருந்தார் பாதிரி. நீச்சல் கற்ற புதிதில் அடிக்கடி கிணற்றில் குதிப்பது போல நன்மை பெற்ற சிறுவர் சிறுமிகள் விளையாட்டுப் பாவங்களைப் பட்டியலிட்டு பரிகாரம் பெற்ற வண்ணமிருந்தனர்.

ஸ்கர்ட்டுக்குள் நுழைந்த தங்கையும் அம்மாவுமாக வளாகத்துக்குள் நுழைந்ததுமே கோபுரத்தின் அடிவாரத்தில் நின்றிருந்த பாண்டியைக் கண்டுகொண்டாள் மரியபுஷ்பம். அழகிதான். எந்தக் கோணத்தில் பார்த்தாலும் எப்படிப்பட்ட ஆண்பிள்ளையையும் தொந்தரவு செய்து

விடும் வடிவம். சேலை கட்டியிருந்தாள். மாநிறத்துக்குப் பொருத்தமான நீலச் சேலையில் நைலான் மினுக்கமிருந்தது. அவன் முகம் பார்த்து அவள் நிதானித்தது நடையின் சுணக்கத்தில் தெரிந்தது. கடந்து போகும்போது கண்ணுக்கு கண் பார்த்து லேசாக புன்னகை செய்துவிட்டு போனாள். வெள்ளந்தியான வெறும் உபசாரச் சிரிப்பா, வேதனை வெளிப்படும் கனிவான குறிப்பா என பாண்டியால் யூகிக்க முடியவில்லை. அங்கிருந்து வெளியேறினான். கால் போன போக்கில் நடக்கலானான்.

கடற்கரைக்கு வந்தான். பெண்கடலின் வடகரையோரமாகவே நடந்தான். ஏரிக்கரை மீது நடப்பது போன்றிருந்தது. வெயிலைப் பொருட் படுத்தவில்லை. தேரி மேட்டில் பனைகளை சீமைக் கருவேல மரங்கள் மொய்த்திருந்தன. யாருமற்ற பாலையின் வெம்பரப்பில் தனித்துழல்வது போலிருந்தது. யாருமில்லைதான்.

நடந்தே குலசேகரப் பட்டினம் வந்துவிட்டான். ஊருக்குள் போகப் பிடிக்கவில்லை. தாகமாக இருந்தது. ஏதாவது குளிர்பானம் குடிக்கலாம் என்ற முதலில் கண்ணில் பட்ட கடைக்குப் போனான். நினைவு வந்து பாக் கெட்டுகளைத் தடவிப் பார்த்தான். பணமில்லை. கவிதைகள் கிறுக்கிய தாள்கள்தான் தட்டுப்பட்டன. ஒரு டீக்கடையில் தண்ணீர் வாங்கிக் குடித்துவிட்டுத் திரும்பி நடந்தான்.

தேரிமேட்டில் அரசமரத்தின் கீழ் இருந்த பிள்ளையார் கோவில் திண்டில் படுத்து காற்றிலாடும் அரசிலைகளையே பார்த்தவாறிருந்தான்.

> பசுமை படர்ந்து விரிந்த உன் சிந்தை வெளியில் மந்தையெனக் கலைந்து முன்சென்ற கனவுகளை மேய்த்தபடி தொலைந்து போனாய். புதர்கள் புதர்களாய் அடர்ந்தவுடன் மூடிவைத்த சுவடுகளை ஒவ்வொன்றாய் புதையலெனக் கண்டெடுத்து பின்தொடர்ந்து வந்து சேர்ந்தேன் இம்மரத் தடியில். எனை நோக்கி சத்தமின்றித் திறக்கின்றன பசியின் கதவுகள். சுள்ளிகளைப் பிரித்தெடுக்க அறியாத பறவைகள் பழைய கூடுகளை அப்படியே விட்டு வெகுதூரம் சென்றிருக்கின்றன. காற்றிலாடும் மரக் கிளை கைகளை வீசி ஊமை மொழியில் உணர்த்துகிறது புதுப் புது ரகசியங்களை. உச்சிக்கிளையின் நுனிக்காம்பில் இலைமறை காயாக விளைந்து கொண்டிருக்கிறது தேவதை எனப்பட்டவளின் ஒளித்து வைக்கப்பட்ட ஒற்றை முலை.

பிள்ளையாரைச் சுற்றி விளையாடும் ஆட்டுக் குட்டிகளை ஒரு நாய் குரைத்துத் துரத்தியபோது விழிப்பு வந்தது. நண்பகல் தாண்டியிருந்தது.

எழுந்து போய் கடல் நீரில் முகம் கழுவினான். மணப் பாட்டைநோக்கி நடந்தான்.

ஊரை நெருங்குமுன் ஆற்றின் பொழி குறுக்கிட்டது. சற்றுத் தொலைவில் வடகரையில் தாழம்புதர்கள் அடர்ந்திருந்தன. நெருங்கி னான். பாம்பு இருந்தால் என்ன, பரமபிதா இருந்தாலும்தான் என்ன?

உள்ளே புகுந்து இள மஞ்சள் மலரைப் பறித்து வந்து முகர்ந்து பார்த்தான். கடுமையான வாசனை. இவ்வளவு நாளும் அவன் தாழம்பூவின் மணம் என்று கருதியிருந்தது இதுவல்ல. ஒருவேளை வெண்தாழம்பூவின் மணம் வேறாயிருக்கலாம்.

☆☆

இடி மின்னல் சூறைக்காற்று என முன்குறி காட்டாமல் காற்றில் தட்டாமாலையாடி வந்த மழை, துளி தெளிக்கத் தொடங்கியபோது பாண்டியும் அமலாவும் பிரான்சிஸ் சேவியர் குகைக் கோவில் முற்றத்தில் நின்றிருந்தார்கள்.

கரையிலிருந்து ஒரு கி.மீ. தூரம் கடலைக் குத்திப் பிளந்திருந்த மணற்பாறைக்குன்றின் முனையிலிருந்தது குகை வாசல். பத்து அடிக்கு பத்து அடி குகை. ஒற்றை பீடம். அதில் ஓரடி உயரமுள்ள புனிதர் சிலை. முப்புறமும் கடல். வாசல் வரை வந்து போகும் அலைகள். இடது புறத்தில் அமைதியே உருவான பெண் கடல். வலது புறத்தில் அலைகள் துள்ளியடிக்கும் ஆக்ரோஷமான ஆண் கடல். இரண்டும் படைப்பால் இணைந்தும் இயல்பால் பிரிந்தும் கிடக்கும் மையக்கோட்டில் மனம் புதையும் காந்த நகை. இரண்டு மூன்று நாட்களாக புனிதர் வாழ்ந்த குகைக்கோவிலை அவர்கள் பார்க்க வந்தபோது, குகைக்குள் அமைந்த சிறிய நாழிக்கிணற்றில் பக்தர்கள் நீர் சேந்தி குளித்துக் கொண்டிருந்தார்கள். குளிப்பவர் ஆணாக இருந்தால் அமலா அக்கா அசௌகர்யமாக உணர்ந்தாள். பெண்ணாக இருந்தால் பாண்டி சங்கடப்பட்டான். மஞ்சள் வெயில் மசங்கி கூராப்பு விரித்த வேகத்தில் மழை சடசடவென்றடித்தது. இருவரும் ஓடிவந்து யாருமற்ற குகைக்குள் நுழைந்தார்கள்.

'கன்னிமையின் தோளில் பட்டு நாணத்தின் கன்னத்தில் தெறிக்கிறது மழை.'

குகைக் கூரைப் பாறையிலிருந்த வட்டத்திறப்பு வழியாக மழை குகைக்குள்ளும் நுழைந்து நாழிக்கிணற்றில் தாளம் போட்டது. நீர்த்தந்திகளை காற்று சுழன்று முறுக்கியபோது குளிர்பதம் குகைக்குள் பாய்ந்து திரும்பியது. கடலும் மழையும் சேர்ந்து கூவிக் கூச்சலிட்டது. மழை பெய்யும்போது உரையாடுவது மனித தர்மமல்ல என்பது போல் இருவரும் மௌனமாக நின்றிருந்தனர். குளிர் பொறுக்கும் பொருட்டு அமலா கைகளை குறுக்கே மடித்துக் கட்டியிருந்தாள். அந்தரத்தில் நிற்பது போலவும் விட்டால் விழுந்துவிடுவோம் என்பது போலவும் பிடிப்பில் ஒரு இறுக்கமிருந்தது. பாண்டி குகை வாசலையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். இடமும் வலமுமாகப் பிரிந்து முரண்பட்டுக் கிடப்பது இருபால் கடல்கள் அல்ல, ஒரு கனவும் நிஜமும்.

நுங்கும் நுரையுமாக அலைகள் குகை வாசல் வரை வந்து எட்டி

எட்டிப் பார்த்துவிட்டுத் திரும்பின. சிறு பொறிதட்டலில் முகம் மலர்ந்து அவள் பக்கம் திரும்பிச் சிரித்ததை கவனித்த அமலா 'என்ன விஷயம்' என்று முகத்தை உயர்த்தி அவனை கூர்ந்து பார்த்தாள். 'ஒன்றுமில்லை' என்பது போல் தலையசைத்து புன்சிரிப்போடு மீண்டும் வாசலையே வெறித்தான். கூற வந்ததைக் கூறாதது அவளுக்கு ஏமாற்றத்தை தந்தது. பிறகு மனத்தில் தோன்றிய அந்த வரியைச் சொன்னான். மழை நிற்க வில்லை. சொற்கள் நீர்ச்சரங்களாகிப் பெருகின.

மேலும் கேட்டாள்.

தயங்கினான்.

''சும்மா சொல்லுடா.''

''வண்ணங்கள் மறைகின்றன. வானவில்லும் இல்லாமலாக காற்றோடு பாய்கின்றன மேகங்கள். ஒளியின் சிறகுகள் முன்பே முறிந்து தணிந்தன. நிழல் திரை விரிந்து பகலை மூடுகிறது. கடல் இருள்கிறது, கரைகள் பதைக்கின்றன. மின்னல் குரலில் கண்ணால் பாடுகிறது முகமற்ற வேட்கை. விண்ணைப் பார்த்திருந்த சின்ன மலரொன்று அச்சத்தில் மணம் தடுமாறுகிறது. ஆந்தையின் தலையில் ஆவலொன்று பச்சை மச்சமாகி இரவுக்காக விரிகிறது. கிழங்கை முகர்ந்து பார்த்து முத்தம் மட்டும் தந்துவிட்டுப் பசியோடு கிடைக்குத் திரும்பு கிறது முயல்குட்டி. கன்னிமையின் தோளில் விழுந்து நாணத்தின் கன்னத்தில் தெறிக்கிறது மழை. மழை வலுக்கிறது. மணல் முலைகள் கரைந்தோடுகின்றன. ஏதோ ஒரு சிப்பி பெண்ணாகி இதழ் விரிக்கிறது.''

☆☆

கூன் குருடு நொண்டி முடமென இற்றுச் சருகான பெரும் மனிதத் திரள், நெடியதொரு கேலி தொனித்த கூட்டுச்சிரிப்பில் புகைந்து கலகலத்து கலைந்து மறைய, பதுமபீடிகை அங்கொரு ஆழி சூழ்ந்த தீவாயிற்று. அதன் நடுவே துலக்கமான செம்பவளப் பாறைப் பீடத்தில் துக்கமே உருவாக திடமிழந்த கதியில் உடல் நடுக்கத்தை அடக்க முனைந்தவளாக இள நங்கை ஒருத்தி அமர்ந்திருந்தாள். வளைகளற்ற அவள் கைகளில் ஒரு பாத்திரமிருந்தது. பிச்சைப் பாத்திரம் போலிருந்தது. வயிற்றோடு அதை அணைத்துப் பிடித்திருந்தாள். நாட்டையும் கோட்டையையும் முப்படைகளோடு மக்களையும் தானமிட்டுவிட்டு பிரதிப்பயனாக இச்சிறிய பிச்சைப் பாத்திரத்தை பெற்று வந்த இளவரசியாகக் காட்சியளித்தாள். புலன்கள் ஐந்தும் உணர்ந்தறிய எத்தனையுண்டோ, அத்தனையழகும் பொருந்தியவளாக இருந்தாள். துயரத்தில் பூத்த தூயமலரென்று மனம் நினைக்கத் தகைந்தது.

''பவளச் செவ்வாய் தவளவாள் நகையும் அஞ்சனஞ்சேராச் செங் கயல் நெடுங்கணும், முரிந்துகடை நெரிய வளைந்தசிலைப் புருவமும், குவிமுட் கருவியும், கோணமும், கூர்நுனைக் கவைமுட் கருவியும்...''

பாடல் ஒலி நிழலாய் ஒளித்து மறைந்தது. எவ்வளவுதான் கூர்ந்து பார்த்து குறிப்புகள் தேடியும் அவளை அடையாளம் கண்டுகொள்ள வழியின்றித் தவித்தபோது காதருகே கிழட்டுப் பெண் குரல் சிரித்தது. பாண்டி எங்கே நின்றுகொண்டிருக்கிறான் என்பது அவனுக்கே தெரியவில்லை.

''இவளை யாரென்று தெரியவில்லையா? நன்றாகப் பார். முடியவில்லையா? இப்போது ஞாபகம் வருகிறதா? வரவில்லையா... இவள் தான் மாதவி ஈன்ற மணிமேகலை வல்லி, மாயக்கள்ளி...''

வானத்தில் ஏழுவகை மேகங்கள் ஒரே நேரத்தில் சுற்றிச் சூழ்ந்து நேருக்கு நேர் மோதி பெரும் முழக்கம் உண்டானது. மின்னல் கொடிகள் கொதிநிலையில் நெளிந்து மறைந்தன. ஒளியும் இருளும் விரிந்தும் சுருங்கியும் பிரிவதும் சேர்வதுமாக காட்சியை மாறிமாறிக் கிழிப்பதும் தைப்பதுமாக... எல்லாம் சீர்கெட்டுவிட்டிருந்தன. மழைத்துளிகளின் முதல் வரிசை விழத் தயாராகி உச்சியில் துடித்தது. ஆழியில் புயல் வளி முற்றி பேயாட்டம் போடத் தொடங்கியது.

கூட்டம் கூட்டமாக காகங்கள் பறந்து வந்து அவளைச் சூழ்ந்து நின்றன. அவள் முகத்தில் அச்சமயம் தன் சுய துக்கங்களிலிருந்து மீளும் தெளிவு தென்பட்டது. தன்னிடமிருந்த பாத்திரத்திலிருந்து அன்ன உருண்டைகளை உருட்டியெடுத்து விசிறி காகக்கூட்டத்தை பசியாறச் செய்தாள். அவளைச் சுற்றி கருப்புக் கம்பளம் விரித்தாற்போல சூழ்ந்து பரவியிருந்த ஆயிரக்கணக்கான காகங்களில் ஒன்றுகூட கரைந்து குரல் எழுப்பவில்லை. காகங்கள் நீங்கிச் சென்றபின் சிதறிய சோற்றுப் பருக்கைகளைத் தின்ன கொழுத்து பன்றிக் குட்டியளவிருந்த எறும்புகள் சாரை சாரையாக வந்து பற்றியெடுத்தபடி புற்றுக்குத் திரும்பின.

''மக்தலேன்... மக்தலேன்...'' என ஈனஸ்வரத்தில் விளிப்புக் குரல் கேட்டது. ஆண் குரல். அதைக் கேட்டதும் இளம்பெண் துணுக்குற்றாள். விலகிப் போயிருந்த வாட்டம் இரட்டிப்பாக இப்போது அவள் முகத்தில் குடிகொண்டது. அவள் எழுந்து சிறு தொலைவு நடந்து குரல் வந்த மரத்தடியை அடைந்தாள். அங்கே, அவன் நீள் முகமும் தாடியும் பச்சைக் கண்களுமாக மரத்தில் சாய்ந்து பாதி செருகிய விழிகளுடன் காயங்களில் குருதி கொப்பளிக்க உயிருக்குப் போராடிக் கொண்டிருந்தான். அவன் வாய் நுரைத்து ரத்தம் பொங்கி வழிந்தது. ''என்னோடு வா என்னோடு வா'' என்று அவளை நா குழற அழைத்தான். மூடித்திறந்த அவன் கண்களில் வாழ்வும் சாவும் ஒன்றன்பின் ஒன்று நின்று உற்று உற்று அவளைப் பார்த்தன. துயருற்ற இளம்பெண் தன் ஆடை நுனியால் அவன் வாயை முகத்தை மார்பைத் துடைத்து நேர்த்தி செய்து தன்னிடமிருந்த பாத்திரத்திலிருந்து அன்னத்தை எடுத்து அவன் வாயில் புகட்டினாள். அப்போது அவளிடம் பொங்கிய பிரியத்தில் அவள் கையிலிருந்த அன்னமணிகள் நெற்பாலாகி அவன் நாவில் இறங்கியது. ''வேண்டாம் வேண்டாமென'' அமுதத்தை வெளியே உமிழ்ந்தவன் ''நீ என்னோடு வா நீ என்னோடு வா''

என்பதையே மீண்டும் மீண்டும் புலம்பி மெல்லத் தொனி தாழ்ந்து அடங்கிப் போனான். மண்டியிட்டு அமர்ந்த நிலையில் நீர் சுரந்த கண்களை இறுக மூடி உதடுகளைப் பலமாகக் கடித்த வண்ணம் அண்ணாந்த முகத்துடன் விம்மினாள். துக்கத்தில் கசங்கினாள். அவள் முழு உடலும் விக்கலடித்தது போல் குலுங்கியது. இருளும் ஒளியும் சுருங்கி விரிந்தன. காற்று பிளந்து வீசியது.

அந்தக் குரல் மீண்டும் காதோரம் ஒலித்தது. பரவசமாக - ''அதோ அதோ அரசிளங்குமரன் வருகிறான். உதயகுமாரன் வருகிறான்.'' ஆவேசமாக - ''எங்கே போய்த் தொலைந்தாள் புதுப் பத்தினி, எங்க போனாலும் இன்னைக்கி இவா பாடு சட்டினி'' குரல் முறுகி சிரிப்பாகி அதிர்ந்தது.

சீற்றத்துடன் பாய்ந்த உரத்த காற்று செடிகொடிகளைப் பிடுங்கி எறியப் புறப்பட்டது போல் திருகிச் சுழித்தோடி பழுப்பிலைகளைப் பிய்த்தெறிந்தது. பழஞ்சருகுகளை வாரியிறைத்தது. மேகங்கள் மோதுவதும் முழங்குவதும் தொடர்ந்தது. மழைத்துளிகள் பாறையில் தெறித்துச் சிதறின.

உவவனத்துள்ளிருந்து குதிரைகள் வெளிப்பட்டன. குதிரைகளின் மேல் வேடர்கள் அமர்ந்திருந்தனர். உடல் வலிமையும் இளமையும் கூடி வார்த்தாற் போலிருந்த இளைஞன் வெள்ளைக் குதிரையில் முன்னால் வர பின்தொடர்ந்த குதிரைகளின் மேலிருந்தவர்கள் மாயமாகி மறைந்து போயினர். குதிரைகள் நிதானமாக நடந்தபோதும் தலைகள் மேலும் கீழும் பலமாக ஆடின. முகத்தில் வந்து மோதிய சருகுகளைத் தடுத்தாண்ட இடது கையை இறக்கியபோது வெள்ளைக் குதிரையிலிருந்த இளைஞனின் முழுக்கம்பீரமும் பளிச்சிட்டது. கூர் நாசியும் மீசையும் பரந்த நெற்றியும் செதுக்கிய முகமும், செருக்கும், பிடரி வரை வளர்ந்து படிந்து கிடக்கும் சிகையுமாக வந்தான்.

குதிரைகள் செம்பவளப் பாறையருகே வந்தபோது, இருள் மண்டிய முகத்துடன் இளம்பெண் எதிர்ப்பட்டாள். அவளைக் கண்ட இளைஞனின் கண்கள் சட்டென ஒளிர முகம் மலர்ந்தான். வெள்ளைக் குதிரை மீது அவனைக் கண்ட இளம்பெண் சில கணங்கள் திகைத்து... நிலை கலையாமல் சிலைத்து நின்றாள். குதிரையிலிருந்து ஒரு துள்ளலோடு குதித்து இறங்கிய இளைஞன் அவளெதிரே மிக அருகே வந்து இரண்டு கைகளையும் அகல விரித்தான். ''உடம்போடு என்றன் உள்ளகம் புகுந்தென் நெஞ்சங் கவர்ந்த வஞ்சக் கள்வி... வா.'' அவள் கண்கள் அவன் கண்களை ஊடுருவிப் பார்த்து தேனுண்ணும் தும்பியாகப் படபடத்து அவன் முகமெங்கும் அலைந்தது. 'உவவன மருங்கில் உன்பால் உள்ளம் தவிர்விலேன்.' விரித்த கைகள் விரித்தபடியிருக்க, அவள் அவன் மீது பாய்ந்து மார்பில் புதைந்துகொண்டாள். வலுவான கரங்கள் அவளை இறுகத் தழுவின. மற்ற குதிரைகள் திசைக்கொன்றாக நாற்புறமும் நழுவி மறைந்தன. மின்னல்கள் பதறி மின்னி மறைந்தன. ஒளி துடிதுடித்தது.

அணைத்துக் கொள்ளத் தாவியபோது விடுபட்ட அமுதசுரபி கீழே விழுந்து உருண்டோடி பாறை பக்கத்தில் கிடந்தது. கைவிடப்பட்ட தகரக் குவளை போல.

இளைஞனும் யுவதியும் தழுவித் திளைத்து மேலும் நெகிழ்ந்த போது தலையை நிமிர்த்திப் பார்த்த அவள் அவனுக்குப் பின்னால் கண்ட காட்சி பதற வைத்தது. வெள்ளைக் குதிரையின் முதுகில் ஒரு கொழுத்த கழுகு அமர்ந்திருந்தது. அதன் வாயிலிருந்து மனிதக் கண்ணொன்று அவளை வெறித்துப் பார்த்தது. 'ஐயோ' என அவள் கதறவும் கண்ணை கழுகு விழுங்கி விட்டது. இளைஞனிடமிருந்து திமிறித் தன்னை விடுவித்தவள் மரத்தடிக்கு ஓடினாள். மரத்தடியில் கழுகுகள் கூடி நின்றன. அவளைக் கண்டதும் சற்று தொலைவு ஓடி பின் எழுந்து மறைந்தன. ஐந்து வயது பெறுமான சிறுவனுக்குரிய சின்ன மண்டை ஓடும் எலும்புக் கூடும் பச்சை ரத்தக் கறையுடன் மரத்தடியில் கிடந்தது. பதைப்புற்றவள் பாறை யருகே ஓடி வந்தாள். இளைஞனைக் காணவில்லை. வெருண்ட கண்ணு டன் நின்றிருந்த வெள்ளைக் குதிரையின் உடலெங்கும் ரத்தத்துளிகள் தெறித்துக் கோடாக வடிந்து நின்றன. பாறையின் மறுபுறத்தில் இளைஞ னின் உடல் கிடந்தது. பாத்திரத்தின் அருகே துணித்த தலை ஒருக்களித்துக் கிடந்தது. ''போதி மாதவா...'' என்று அலறியவாறு தலையை இரண்டு கைகளாலும் பற்றிக் கொண்டு அண்ணாந்தாள்.

அங்கே சிவந்த கண்களும் உருவிய பட்டயமுமாக ஆர்ச் ஏஞ்சல் கப்ரியேல் அந்தரத்தில் நின்றிருந்தான். கூடவே நீளும் குந்தம் ஏந்திய மிக்கேல். இளம்பெண்ணைப் பார்த்து ''ம்... புறப்படு என்னோடு'' என்று அதட்டலாகக் கட்டளையிட்டான். அவள் கண்கள் மயங்கின. உடல் குழைந்தது. தரையில் விழுந்தாள். பாறையில் மோதவிருந்த அவள் தலையை தடுத்துக் காக்க பதைத்துப் பாய்ந்த பாண்டி கட்டிலிலிருந்து சிமிந்து தரையில் விழுந்தான்.

☆☆

பாண்டி ஊருக்கு புறப்பட்டு விடைபெற்றுக் கொண்டபோது சில்வியா புரிந்தும் புரியாமலும் விழித்தாள். அமலா வந்திருந்தாள். அவளருகே மரியபுஷ்பமும் நின்றிருந்தாள். பாண்டி பையை எடுத்துக் கொண்டதும் விங்லிங் ''மாமா டாட்டா... மாமா டாட்டா'' என குரல் எழுப்பி பலமாக கையசைத்தான். அதைக் கண்டதும் திடுக்கிட்ட சில்வியா ஓடோடி வந்து பாண்டியின் கால்களை கட்டிப் பிடித்தவளாக ''நானும் நானும்... பண்டி மாமா நானும்'' எனக் கெஞ்சினாள்.

அமலா தூக்கி வைத்துக்கொண்டாள். சில்வியா பாண்டியின் முகம் பார்த்து வெடித்து அழத் தொடங்கினாள். யாராலும் கட்டுப்படுத்த முடிய வில்லை. நெஞ்சோடு அணைத்திருந்த அமலாவின் கைகளை மீறி உதறித்

திமிறித் தாவி பாண்டியிடம் வர கைநீட்டினாள். பாண்டி மெல்ல மெல்ல நிலைகுலைந்து தடுமாற்றமடைந்தான். அழுகையும் கண்ணீரும் குரலும் தொற்றுபோல அவனைத் தீண்ட முயன்றது. வலிந்து தப்பித்தான். எல்லோரும் ஒருவர் முகத்தை ஒருவர் பேச்சில்லாமல் பார்த்தார்கள். விங்லிங் தொடர்ந்து டாட்டா காட்டிக் கொண்டிருந்தான். ஓங்கி அறைய வேண்டும் போலிருந்தது. வாசலருகே கிடந்த பொம்மை படம் வரைந்த கலர் செருப்பை மரியபுஷ்பம் கையிலெடுத்து அதை சில்வியாவிடம் காட்டி கால்களில் அணிவித்து அவளை சமாதானப்படுத்த முயன்றாள். சில்வியா கால்களை ஆவேசமாக உதைத்து மறுத்தாள்.

வேறுவழியின்றி அமலா ''வா, நாமளும் மாமாகூட போவம்'' என்றபடி பாண்டியோடு புறப்பட்டாள். புரிந்து கொண்ட பாண்டி சோர் வுடன் நடந்தான். சில்வியாவை ஏந்தியபடி அமலாவும் பின்தொடர்ந்து கடற்கரையோரத்து சாலைக்கு வந்தாள்.

பெண்கடல் கிழக்கே குடா போல் உள்வாங்கி வளைந்து நீண்டி ருந்தது. ஏரிபோல் அமைதி. களைப்பில் தூங்கின சில வள்ளங்கள். நிழல் மண்டபங்களில் வலை விலங்கிக் கொண்டிருந்தனர். கரையோர பஸ் ஸ்டாப்பில் அமர்ந்து கையைக் கட்டிக்கொண்டிருந்தாள் அமலா. பாண்டி கடலையே பார்த்திருந்தான். சில்வியா கீழே சிமிண்ட் தரையில் ஓடிக் குதித்துக்கொண்டிருந்தாள்.

''ஏண்டா பேயறஞ்சவன் போலயிருக்க? தூங்கலயா?''

''...............''

''எதுக்கு இவ்வளவு ஹைபர் - சென்சிடிவா இருக்க? இதுல கவிதை வேற. எல்லாத்தையும் ஊதி ஊதி பலூன் மாதிரி பெருசாக்கி பறக்க விட்டுக்கிட்டேயிருந்தா எப்படி? நிலத்துல நில்லு. இந்தா சுத்திப் பாரு... எவ்வளவு பேரு நிம்மதியா வேலை செஞ்சிக்கிட்டிருக்காங்க. ஏதாவது வேலையில எப்பவும் முழு கவனத்தோட இருந்தா ஞாபகங்கள் வராது. இல்லைன்னா தீர்மானங்கள்ல தெளிவா இருக்கணும். நான் நேற்று சமையலை முடிச்சி சாப்பிட்டுட்டு உனக்கு ஒரு கடிதம் எழுதி வச்சிட்டு பாட்டியோட சிலீப்பிங் பில்ஸ் ஒண்ண எடுத்துப் போட்டுட்டு நிம்மதியா தூங்கிட்டேன்.''

சவேரியார் குகைக்குப் பின்னிருந்து ஒரு வள்ளம் சிறகு விரித்து வடக்கே ஓடியது. வானம் கூராப்பாக இருந்தது. நாரைகள் சிலுவைய்யா கோவிலுக்கு மேலே தென்முகமாய் ஏகின.

''பம்பாய்க்குப் போ. பிளச்டிய அப்புறம் பாத்துக்கலாம். தூரமாப் போறதுதான் இப்ப உனக்கு நல்லது. உலகம் பரந்து விரிஞ்சதுடா. கிணத்துத் தவளையா இருந்தா எப்படி? எவ்வளவு நாளைக்கு இப்படியே திரிவ? உன்னோட எதிர்காலத்தப் பத்தி நினைச்சுப் பாரு. என்னயப் பத்தி கவலைப் படாத. நான் சந்தோஷமா இருப்பேன். அடுத்த அகடெமிக்

இயர்ல லெக்சரர் ஆயிடுவேன். ஏராளமான வேலைகள், திட்டங்கள் வச்சிருக்கேன். எனக்குப் பொழுதே காணாது.''

பஸ் வந்து வட்டமடித்துத் திரும்பி நின்றது. அமலா சில்வியாவைத் தூக்கிக்கொண்டு எழுந்தாள். பாண்டி எழுந்து ''அடுத்த பஸ்ஸில போறேங்கா'' என்றான்.

பஸ்ஸையும் தாண்டி பட்டறையில் கிடந்த வள்ளங்களுக்கருகே வந்தனர். காய்ந்து கிடந்த ஒரு வள்ளத்தினுள்ளே சில்வியாவை இறக்கி விட்டாள். புது உலகைக் கண்ட ஆச்சரியத்தில் தொட்டி மீனாய் உள்ளே சுற்றிக்கொண்டிருந்தாள் அவள்.

''அப்புறம் இன்னொரு விஷயம். உனக்கு என்னப் பாக்குற போதெல்லாம் நேர்ந்துவிட்ட ஆடு மாதிரியே தோணுது. பாட்டி சொன்னாங்கிறதெல்லாம் எனக்கு ஒரு பொருட்டே இல்லை. எல்லாம் தெரிஞ்சு நானே தெளிவான முடிவோடதான் வார்த்தைப்பாடுக்குப் போறேன். நேற்று அந்த முடிவு இன்னும் ஸ்ட்ராங்காயிருச்சு. அறிவு பூர்வமாகூட இல்ல, விவேகத்தோட எடுத்த முடிவு. ஐ யம் நாட் ரிலிஜியஸ். சேர்டன்லி நாட். நீ இவ்வளவு படிச்சும் இன்னும் விவரம் புரியாதவனா இருக்கியேடா.''

வானம் சாம்பல் பூத்திருந்தது. கடல் கருமை பூண்டிருந்தது. காற்றே இல்லை. அலைகள் எழச் சக்தியற்று அடங்கிக் கிடந்தன.

''மனுஷன் ஆதி மனுஷன்தான். உணர்வுகளும் ஆதி உணர்வுகள் தான். அறிவு ரொம்ப லேட்டாத்தான் வந்து கிடைச்சது. மனசுக்குள்ள அறிவைவிட உணர்ச்சிகள்தான் ஆதிக்கம் பண்ணுது. ஆனாலும் அறிவத் தான் நீ நம்பணும். இல்லேனா ஆதிவாசியாகிருவோம்டா. ஏதேன் தோட்டம் ஒரு வறட்சியான கற்பனை. யூதர்களுக்கு கிரியேடிவிடி போதாது.''

சில்வியாவைத் தூக்கித் தோளில் வைத்திருந்தாள். அவள் தூங்கிப் போயிருந்தாள். வலையில் மீன் எடுக்க கரைக்கு வந்த செல்வம் அக்கா இவர்களைப் பார்த்து அருகே வந்து சில்வியாவை வாங்கிக்கொண்டு போனாள்.

அடுத்த பஸ்ஸூம் போயிருந்தது. திலாக் கிணறுகளின் ஓரம் பையன்கள் கடலில் விளையாடிக் கொண்டிருந்தனர். கலங்கரை விளக்குக்கு அருகே மணல் குன்றுக்கு நேர் கீழே கடல் அறம் பாய்ந்து நீரிறங்கி நீண்ட திட்டு தெரிந்தது. சுற்றிலும் நீர் சூழ்ந்திருந்தது. அதையே பார்த்துக்கொண்டிருந்தான். திடீரென்று அங்கே போவோம் என்றான்.

காற்றின் திசைகளில் பாயும் பட்டத்தை விட்டுப்பிடிப்பது போல் அவன் கூடவே நடந்தாள். திலாக்கள் இளைப்பாற்று ஏகாந்தமாய் நின்றிருந்தன.

மணல் திட்டின் நடுவே நின்றபோது நாற்புறமும் கடல் சூழ்ந்திருந்தது. நேரம் கடந்துகொண்டிருந்தது.

''நடந்ததை நடந்ததும் மறக்கப் பழகு. நடக்கப் போறத எதிர் கொள்ள முயற்சி பண்ணு. நினைவுகளும் கற்பனைகளும் தான் உன் பிரச்சனை. அந்தந்தக் கணத்தில வாழணும்னு ஜே.கிருஷ்ணமூர்த்தி சொல்றாரு. தமிழ்ல அவரு புத்தகங்கள் இருக்கும். வாங்கிப் படி. இந்தா...'' கடிதத்தை நீட்டினாள். ''அப்புறம் வாசி.''

கிழக்கே திரும்பி கடலைப் பார்த்தவாறே சொன்னாள், சொற்கள் தயங்கி மிக மெதுவாக வந்தன ''இனிமே எனக்கு போன் பண்ணாம இருக்கிறதுதான் உனக்கு நல்லது.''

பாண்டி அதிர்ந்தான். இந்த உதடுகள்தான் இதை உச்சரித்தனவா? அவன் கண்கள் பொங்கி வழிந்தன. இதே உதடுகள் தானா?

''அந்த சிலுவைய எடு'' என்று உள்ளங்கை விரித்தாள். அவன் பேசாமல் இருந்தான். கையை அவள் மடக்கவில்லை. பிறகு அவன் பர்ஸை உருவிப் பிரித்து தங்கச் சிலுவையை எடுத்து அவளிடம் கொடுத் தான். வாங்கிக் கடலில் எறியக் கை ஓங்கியவளை அவன் குரல் தடுத்தது.

''வேணாங்க்கா.''

தயங்கினாள்.

''அது என் சாந்தாகுருஸ்.''

''இப்படியே இருந்தாப் பைத்தியமாயிருவடா.'' கத்தினாள். உதடுகள் துடிக்க முகம் கலைய அழுகையை அடக்கியவாறு அழுத்தமாகச் சொன்னாள் ''இல்லன்னா நான் சாகணும்.''

உயிரற்று நின்றிருந்தான். கண்ணீர் கூச்சமில்லாமல் வெதுவெதுப் பாக வழிந்துகொண்டிருந்தது.

எரியும் கணங்களின் வெம்மையைத் தாங்க மாட்டாமல் தவித்தாள்.

''வா போகலாம்.''

அப்படியே நின்றிருந்தான்.

சட்டென்று திரும்பி கணுக்கால் அளவு நீரில் மணலில் கால் புதைய நடந்து நடந்து கரையை நோக்கிப் போனாள். கரையை அடைந்து திரும்பிப் பார்த்தாள்.

அப்போதும் அங்கேயே நின்றிருந்தான்.

அவளுக்கு மயக்கம் வருவது போலிருந்தது. கரைமணலில் அப்படியே அமர்ந்து முழங்காலில் முகம் புதைத்தாள். அழுகையில் உடல் அதிர்ந்துகொண்டிருந்தது.

''ஸாரிக்கா.''

அவள் நிமிரவேயில்லை. மெதுவாக அடங்கி இயல்பாகி சம நிலைக்கு வந்தாள்.

முகம் தூக்கிப் பார்த்தாள். அருகே நின்றிருந்தான். எதிரே கடல். ''நீ நல்லா இருக்கணும்டா.''

எழுந்து அவனைப் பார்த்து புன்னகைக்க முயன்று ''பை. விஷ் யு ஆல் த பெஸ்ட்'' என்று சொல்லிவிட்டு நடந்தாள்.

அவளையே... போவதையே... பார்த்துக்கொண்டு நின்றான். கரை யோரமாகவே நடந்து போனாள். ஊருக்கு அருகே போனதும் திரும்பிப் பார்த்தாள். ஊருக்குள் நுழைந்து மறைந்தே போனாள்.

பரந்து விரிந்த கடலின் முன்னே எல்லையில்லா வானத்தின் கீழ் நிழலன்றி ஏதுமற்று நின்றிருந்தான்.



4

## வலியோடு முறியும் மின்னல்

*கொடிகளைத் தீண்டி விஷமூட்டி காலத்தைக் கொன்ற வண்ணம் நெளியாமல் செல்லும் முள் சர்ப்பங்கள் நிறைந்த காடு அது. பைத்திய மடைந்த சிரிப்பொலிகள் எல்லாத் திசைகளையும் கிழித்தொழுக மிதக் கும் பாதைகளைக் கால்களில் பற்றியபடி வெளியேறிவிட்டன சாரல் மழைகளுக்கு மிகப் பிடித்த சந்தன நிறத்துப் பறவைகள். கதிரை ஊன்றி நடக்க சூரியனே தள்ளாடும் பச்சை இருளில் மிச்சமிருக்கிறது காலடியில் கிடைத்த கடைசிப் பதவியும் பறிபோன ஒற்றை வெள்ளி மணி.*

☆

மரண தண்டனையைக் காட்டிலும் சற்றே குறைவான தண்டனை பெற்றிருப்பது போலிருந்தது வீட்டைப் பிரிவதை நினைத்தபோது. ஊரை விட்டு வெளியேற இதைக்காட்டிலும் உத்தமமான சந்தர்ப்பம் வாய்க் காது. 'பெயல் நீர்க்கு ஏற்ற பசுங்கலம் போல உள்ளம் தாங்கா வெள்ளம் நீந்தி அரிது அவாவுற்றனை நெஞ்சே.'

வாழவேண்டுமென்றால் இந்த நினைவுகளிலிருந்து தப்பித்தாக வேண்டும். புது இடத்தில் இது மட்டுப்படலாம்.

'நீ போவணும்னு முடிவெடுத்துட்டா போலே. உன் மனசுக்குப் பிடிச்சதை செய்யி, நாங்க இங்கினக்குள்ளதானே இருக்கோம். அம்ம ஐயாவை, அப்பப்போ வந்து போய் கவனிச்சுக்கிறோம். நீ லீவு கிடைக் கும்போதெல்லாம் ஊருக்கு வந்துட்டு போ' என்றாள் செல்வம் அக்காள். அவள் சமயோசிதத்தோடு பேசுவதாகப் பட்டது. முன்பெல்லாம் மணப் பாடு ஊரின் கம்பீரத்தை ரசிப்பதற்காகவே அடிக்கடி அக்காவைப் பார்க் கப் போவான். அந்த மாதிரி அழகான கடல்காட்சி வேறெங்கும் இல்லை. நினைவுகள் இருக்கும்வரை இனி அந்த ஊருக்குப் போக முடியாது என்றே தோன்றியது.

பீடி, சுருட்டு, கள்ளு சாராயமெல்லாம் சகட்டுமேனிக்கு புழங்கும் ஊரில் கிருமமாக இருப்பது நம்ம கையிலதான் இருக்கு என்பதைத் தெளிவுபடுத்தினாள் அம்மா. எதைச் சொன்னாலும் அம்மா

அச்சமயத்தில் மெலிதான படபடப்படைவதைக் காண முடிந்தது. அல்லது, பேசுவதில் அப்படி ஒரு சுறுசுறுப்பு. பாட்டி தன் கற்பனையில் என்ன வெளிச்சத்தைக் கண்டாளோ தெரியவில்லை, உற்சாகம் குன்றாமல் இருந்தாள். பெரிய நகரங்களுக்கு, தூர பிரதேசங்களுக்குப் போய்வரு வதை பாக்கியமாக கொடுப்பினையாக அவள் கருதியிருக்கலாம். வேளா வேளைக்கி சாப்பிட்டு உடம்பை நல்லபடியாக கவனித்துக்கொண்டால் போதுமானதாக இருந்தது பாட்டியின் கோரிக்கைகள்.

வழியனுப்புவதற்காக ரயிலடிக்கு அப்பா வந்திருந்தார். போய் சேர்ந்ததும் கடிதம் எழுதச் சொன்னார். பேசத் தேர்ந்தெடுத்த சொற்கள் ஒவ்வொன்றும் குரலைச் சிராய்த்து கொஞ்சமேனும் சேதப்படுத்தியது. அவனால் நம்பவும் நினைத்துப் பார்க்கவும் முடியாத காட்சி நெஞ்சைப் பிசைந்தது. அப்பாவின் கம்பீரம் தன்னால் குலைவதை அவனால் தாங்க முடியவில்லை. புறப்பட்டு சிறிது தூரம் உருண்டுவிட்ட ரயிலிலிருந்து குதித்துவிட எத்தனித்தான். வேண்டாம் வேண்டாம் என்பது போல பலர் அங்கே கையசைத்துக் கொண்டிருந்தனர். அவனோடு அப்பா ஒருபோதும் பேசியிராத பேச்சுக்குள்ளும் வராத சில வார்த்தைகள் அவர் கண்களில் நீராகி மின்னியது. உள்ளுக்குள்ளிருந்து பொங்கிப் புறப்பட்ட அழுகைக் காக அவன் தேம்ப எத்தனித்தபோது, ரயிலின் ஊளை பெரும் கேவலாக வும் கேலியாகவும் கிளை பிரிந்து ஒலித்தது.

*மீந்து விடும் சொற்கள்*

*துளித்துளியாக இப்போதுதான் பெருகும் மழைக்குள் நுழையும் சரக்கு ரயிலின் முகடற்ற பெட்டிகளில் நிலக்கரித் துண்டுகள் நனைந்து ஒளிரும் கருமையுடன் சில எழுத்துகள் ஊர்ந்து சேர்ந்து வரிகளாகி வாக்கியங் களாகி இங்கே செல்கின்றன... மனத்துக்குள் சுருண்டிருந்த தண்ட வாளம் நீண்டு படுக்கிறது பாதை வடிவில். குபுக் குபுக் கென்று வலியில் துடித்து தலையில் முனகுகிறது வேகமுற்ற உன் சொற்கள். சிலைத்து நின்றுகொண்டிருக்கிறேன். கண்கள் புறக்கணித்த கண்ணீர்த் துளி களாகத் தூறித் தூறி மழைக்கிறது தூர வானம்.*

இரண்டு இரவுகள் மூன்று பகல்கள் வாழ்வில் முதல்முறையாக ஒரு ரயில் பயணம். அபூர்வமான அனுபவமாக அமைந்தது. களைப்பையும் உற்சாகத்தையும் ஒரே சமயத்தில் உணர முடிந்தபோதுதான் பாண்டி மனத்திற்கும் உடலுக்குமான கூறுபாடுகள் வேறுபடுவதைப் புரிந்து கொண்டான்.

'அது என் சாந்தாகுருஸ்' என்ற சொற்கள்தான் அவனை எழுப்பி விட்டதா அல்லது அவன் எழுந்தவுடன் முதல் நினைவாக அதுவும் விழித் துக் கொண்டதா? அன்று அவனை அறியாமல் அவன் ஆழத்திலிருந்து கிளம்பிய சொற்கள் இன்றுவரை ஓராயிரம் முறை நினைவில் மீண்டு விட்டன. ரயிலில் படுத்திருப்பதை உணர்ந்தான். எழுந்து ஜன்னல் வழி

யாகப் பார்த்தான். கண்ணுக்கெட்டிய தூரம் இருமருங்கும் கற்பாறைக் குன்றுகள். பசுமையே இல்லை. ஒரு மரத்தைக்கூட காண முடியவில்லை.

'மரம் ஒருபோதும் தன் நிழலை உணர்வதில்லை.'

'நீ கவிஞன்தான்டா.'

ரயில் பாழ்நிலத்தினூடாக வெறுமையை நோக்கி ஓடிக்கொண்டிருந்தது. கானலில் விரிந்த கரிசல்மண். மரங்கள் எங்கெங்கோ நரங்கி நின்றன.

எப்படி இங்கு மனிதர்கள் வாழ்கிறார்கள்? மனிதர்கள் மட்டுமல்ல, எல்லா உயிர்களும் எப்படியாவது வாழும். உயிர்கள் வாழப் பிறந்தவை. வெயிலை அருந்தியும் அவை வாழும். ஏன், கனவின் காலடியில் கவிதையால் அர்ச்சித்து நான் வாழவில்லையா! IMMACULATE. எப்போதுமே நான் நிமிர்ந்து பார்க்கும் உயரத்தில், தொழ விரும்பும் தூய்மையோடு இருக்கிறாள்.

'பியூரிடிக்கு ஒரு பவர் இருக்கு, எல்லா விதத்திலயும். வணங்கித்தான் ஆகணும். வேற வழியேயில்லை - குறிப்பா ஆண்களுக்கு.'

காலடிகளை சென்னியில் சூடவும் சித்தமாக இருக்கிறேன்.

☆

மும்பை நகரம் அவன் கற்பனையை வென்று விரிந்து கிடந்தது. விதவிதமான மனிதர்கள், பலவிதமான மொழிகள், விரைந்து மட்டுமே செல்லும் கார்கள், பேருந்துகள், ரயில்கள், எண்ணிப் பார்த்தால் கொண்டை நரம்பு கடுத்துப்போகும் அடுக்கு மாடிக் கட்டிடங்கள், கூச்சநாச்சமில்லாத கொழுத்த வெண்ணைக்கட்டிப் பெண்கள் என பிரமிப்பு வழிந்தோடி அவன் சகஜமாக வாரக்கணக்காகி விட்டது. மும்பை நகரத்தின் மூலை முடுக்கெங்கும் உருளைக்கிழங்கு வேகும் வாசனை பொங்கிக்கொண்டேயிருந்தது.

ஆட்டோ ரிக்ஷாக்கள் ஓட அனுமதிக்கப்படுகிற இரண்டாம் தர மும்பைதான் பாண்டுப் ஏரியா என்றாலும் அதன் நிலப்பரப்புகளின் நெளிவுசுளிவுகளைப் புரிந்துகொள்ள சிரமமாக இருந்தது. திரும்பிய பக்கமெல்லாம் திசைக் குழப்பம். புது இடங்களில் முதற்காரியமாக திசைகளை ஊகித்து உறுதி செய்து கொள்வதுதான் ஒரு அந்நியனின் தலையாய கடமை என்பதை பாண்டி கற்றுக்கொள்ள வேண்டியிருந்தது.

தமிழ் எம்.ஏ. பட்டதாரிக்கு மும்பையில் பொருத்தமான உத்தியோகம் என்ன என்பது யாராலேயும் கணிக்க முடியாததாக இருந்தது. அம்மா வழியில் தூரத்து உறவினர் ஒருவர் நிறுவனராய் இருக்கும் ப்ரைட் ஹைஸ் ஸ்கூல் என்ற ஹிந்தி, மராத்தி, இங்கிலீஷ், தமிழ் கற்பிக்கும்

பள்ளிக்கூடத்துக்குச் சென்று பேராசிரியர் சமீரா மீரானை சந்தித்துப் பேசியபோது ''நாலாம் வகுப்பு தமிழ் டீச்சர் விமலா எட்டாம் மாத கர்ப்பிணியாக இருக்கிறார். இன்னும் ஒரு மாதத்தில் அவருக்கு மூன்று மாதங்கள் விடுமுறை தேவைப்படும். அந்த இடத்தை பாண்டி நிரப் பட்டும்'' என்றார். வயிறு புடைத்த விமலா டீச்சரையும் வகுப்பறை யையும் குழந்தைகளையும் ஒரு பார்வை பார்த்து வைத்தது நம்பிக்கை யூட்டியது. குழந்தைகள் தமிழ்ப் பாடம் படித்து ஒப்பித்ததை கேட்டபோது மான்கள் பாடுகின்றன என்றே பாண்டி நினைத்தான்.

'நீ திருடினா எங்கூடப் பேசாத.'

ஜுஹு, சௌபாத்தி, குயின்ஸ் நெக்லஸ், நேஷனல் பார்க், பாந்ரா, மாதா கோவில், மாதுங்கா, அரோரா தியேட்டர், கேட்வே ஆஃப் இந்தியா, வேட்டி சட்டை அணிந்திருந்ததால் சாண்டோ சின்னப்பா தேவருக்கு அனுமதி மறுக்கப்பட்ட தாஜ் நட்சத்திர ஓட்டல் என ஆங்கிலத்தின் துணை கொண்டும் இரண்டு மாதமாய் மிகமுயன்று கற்ற ஹிந்தியோடும் மும்பையை வட்டமடித்து சுற்றிக்கொண்டிருந்தான்.

☆

*உப்புப் பரல் கீறியதில் என் நாவில் நீளமான காயம் ஒன்று. ஆறாத நிணத்தால் உறவின் ருசிபேதம். நரம்புகள் வெட்டுண்ட வேர்களாகி புழுக்களாக நெளிகின்றன. பழுக்கின்றன காயமும் நியாயமும். சிறுகச் சிறுக அழுகிக்கொண்டிருக்கிறது காலம். எழிலிலும் எடுப்பிலும் மிடுக் கிலும் அன்பிலும் பண்பிலும் மானத்திலும் நிறைந்து கிடக்கும் கடல் ரகசியமாக என்னுடன் சூதாட விரும்பிய தருணத்தின் கரிப்பை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. கண்கள் விரிய நான் கண்டு வியந்திருந்ததை அது ஒரு பந்தயப் பொருளாகக் கண்சிமிட்டி மாற்றிய பிறகுதான் கரையொதுங்கத் தொடங்கின கிளிஞ்சல்கள் என் எலும்புத் துண்டுகளாக.*

☆

பாண்டியை மிகவும் கவர்ந்தது யானைக் குகைகள். கடல் அலைகள் ஆராதிக்கும் ஆலயமாகவும், அதற்கு கரையில் கட்டியெழுப்பிய கல் வாயிலாகவும் தோற்றமளித்த கேட்வே ஆஃப் இந்தியாவிலிருந்து எந்திரப்படகில் இருபது ரூபாய் டிக்கட் செலுத்தி அந்த தீவுக்குச் சென்றான்.

கடல்மைல் தொலைவு எவ்வளவென்று தெரியவில்லை. படகு ஒரு மணி நேரத்துக்கும் மேலாக நீரில் பாய்ந்து சென்றது. சின்னதும் பெரிய துமாக கப்பல்கள் துறைமுக முற்றத்தில் நின்றிருந்தன. கப்பல்களை மிக அருகில் பார்த்தது மலைப்பாக இருந்தது. உப்புக்காற்று ஒரே சீராக முகத்தில் மோதி தலைமுடியைக் கலைத்துக் கொண்டிருந்தது. அலைகள் எனக் கருத முடியாத நீர் மடிப்புகளால் கடல் அதிர்ந்து கொண்டிருந்தது.

பிளாஸ்டிக் தண்ணீர் பாட்டில்களும் பாலித்தின் பைகளும் சிற்றலைகளில் இலக்கின்றி அலைக்கழிந்து கொண்டிருந்தன. 'இனி நான்தான்டா கடல்ல விழணும்.'

இருபதுக்கும் மேற்பட்டோர் படகில் அமர்ந்திருந்தனர். யாரும் யாருடனும் பேசிக்கொள்ளவில்லை. நீரின் மேல் நிலப்பிராணிகள் கடலின் பிரமாண்டத்தை கண்டு பிரமித்துப் போயிருந்தன.

எண்ணும் எழுத்தும் குறிப்புகளாகப் பொறிக்கப்படாத வானொலிப் பெட்டியின் கண்ணாடித் திரைக்குள் உன்னைத் தேடியலைந்த நரம்பின் பெண்டுல யாத்திரை முடிந்துவிட்டது. எனக்கென்று செய்தியோ பாடலோ மெல்லிசைக் கசிவோ பொறுத்திருக்கச் சொல்லும் நீண்ட ஊளையோ இல்லையென்பது உறுதியாகிவிட்டது. எனினும், நிமிட வட்டத்துக்குள் சுழலும் ராட்சச சக்கரத்தின் எல்லாப் பற்களிலும் புன்னகையைத் தீட்ட முனைந்து இரண்டாக முறிந்து கிடக்கும் தூரிகையை ஏனோ அப்புறப்படுத்தத் தோன்றவில்லை. மெல்ல அணிவகுத்து ஊர்ந்து வரும் சொற்கள் எறும்புகளாக தூரிகையின் உதடுகளைச் சூழ்ந்து மொய்ப்பதாய் விரிந்து நிற்கும் இக்காட்சியின் மனசாட்சியாய் இருந்துகொண்டிருக்கிறேன். ஏதேனும் மிச்சமிருக்கலாம் வண்ணங்களும் வார்த்தைகளுமாக. திறந்திருக்கும் இச்சன்னல் சதுரத்திற்கு வெளியே தார்ச்சாலையில் நீர்ப்புள்ளிகள் இரைச்சலிட்டுத் தளிர்த்துப் பெருகலாம் எக்கணத்திலும் உன் குரலாக. ஏனெனில், நமக்கிடையில் படர்ந்து நிற்பது பால்வீதியின் கிரக இடைவெளியே என்ற நம்பிக்கையோடுதான் உன்னைத் தொட்டுணரத் துடித்த விரலைத் துணித்துச் செலுத்தியிருக்கிறேன் விண்கலமாக.

குன்று என்றோ மலையென்றோ சொல்லிவிட முடியவில்லை. கொழுத்த குன்று, அல்லது குழந்தை மலை. தூரத் தோற்றத்தில் அது முகத்தைக் திருப்பிக்கொண்டு நிற்கும் யானையின் சாயலுடனிருந்தது.

பாதை படிக்கட்டுகளுடன் மேலேறிச் சென்றது. இருமருங்கிலும் கைவினைப் பொருட்கள் நிரம்பிய தட்டுக்கடைகள் வழிநெடுக நின்றன. அடிவாரத்தில் திறந்தவெளி ஆடம்பர ஓட்டலில் கண்ட காட்சி கண்ணை விட்டு விலகாமலிருந்தது. நெய் விளக்குச் சுடர் நிறத்தில் வெளிநாட்டு இளம்பெண் ஒருத்தி ஒரு போத்தல் பீரை தனியாக அருந்திக்கொண்டிருந்தாள். பாண்டி பார்த்தது இரண்டு மடக்குதான் என்றாலும் ஒவ்வொரு மிடறு பீரை அருந்தும் போதும் அதன் குளிர்ச்சியை, ருசியை முகச்சுளிவுகளில் பிரதிபலித்தாள்.

குகை வாசலையடைந்ததும் நெய் விளக்குச் சுடர் மெல்ல மெல்ல அணைந்து சிற்பங்களின் கலையம்சம் அவனைச் சுண்டியிழுத்தது. குகைகள் என்ற எண்ணம் மறைந்து மலையைக் குடைந்து செய்த ஆலயங்கள் போன்ற உணர்வைத் தந்தது. சுற்றுலாப் பயணிகள் கொத்துக்

கொத்தாக அங்கே உலவிக்கொண்டிருந்தனர். ஆனாலும் கலைக்கோவி லின் பிரமாண்டத்தின் முன்துருத்தலாகத் தெரியவில்லை. பேச்சு சப்தமும் இல்லை. அவ்வப்போது வியப்பொலிகள் எழுந்து அடங்கின. தூண் களில் சிறிய ஏழடி எட்டடி உயரமுள்ள சிற்பங்களும் சுவரில் இருபது முப்பதடி சிற்பங்களும் செதுக்கப்பட்டிருந்தன. எண்ணிச் சொல்லிவிடும் அளவிலான சிற்பங்களே சிதைவடையாமல் முழுமையாக நிறை நயத்து டனிருந்தன. பல சிற்பங்கள் கை உடைந்து கால் உடைந்து அதிகமும் முகம் சிதைந்திருந்தன. தலையில் தொப்பியும் முகத்தில் தாடியும் அரைக்கால் சட்டையும் காமிரா சகிதமாக வந்த ஆய்வாளன் போன்ற தோற்றமளித்தவனிடம் கேட்டபோது தணிந்த குரலில் ஆங்கிலத்தில் விளக்கிச்சொன்னான். அதைக் கேட்டதும் பாண்டி அதிர்ச்சியடைந்தான். சிதைந்த சிற்பங்கள் பார்க்க பரிதாபமாக இருந்தன.

அந்நியப் படையெடுப்பின்போது ஆக்கிரமிக்கப்பட்ட இந்த கலைக் கோவில் சிலைகள் படை வீரர்களின் பீரங்கி சுடும் பயிற்சிக்குப் பயன்படுத்தப்பட்டன.

அயர்ச்சியும் களைப்பும் சேர்ந்து பாண்டியை சோர்வடைய வைத்தது. குளிர்ந்த கல் தூணில் சாய்ந்து அமர்ந்தான். 'காதல் வயப்பட்ட வர்களுக்கு இந்தச் சிலையில் முதலில் தெரிவது - அவள் முகத்தில் நாணம்.' எதிரே முலைகள் உடைந்த பெண் சிற்பம் தூணில் வெட்கத் துக்கும் விரகத்துக்கும் இடையில் நின்றுகொண்டிருந்தது. மார்பை இழந்த துக்கம், வலி அதன் முகத்தில் சற்றேனும் இல்லை. முகம் இலேசாக முறுவலித்தது. அதன் அறியாத்தன்மையை கண்டு பாண்டி வேதனை யடைந்தான். கண்களை மூடிக்கொண்டு அப்படியே அமர்ந்திருந்தான். நினைவுகள் நெய்விளக்குச் சுடரைத் தொட்டுத் தாண்டிப் பறந்து கொண்டிருந்தன.

மழை பெய்துகொண்டேயிருந்தது. கரையில் விரியும் கடலலைகள் மேல் மழைத்துளிகள் அதே தீவிரத்துடன் பாய்ந்தன. ஆண் கடலிலும் பெண்கடலிலும் அதே மழை. கனவும் நிஜமும் ஒரே திசையில் எதிரும் புதிருமாக வந்து கொண்டிருந்தன. நெடும் மௌனமும் குகையின் அமைதியும் மென் திகிலூட்டியது. அதிலிருந்து விடுபட வேண்டு மென்றே பேசத் தொடங்கினான். ''வார்த்தைப்பாடு எடுத்ததுமே தலை முடியை வெட்டிருவாங்களாக்கா?'' அவன் கண்களை ஆழமாகப் பார்த் தாள். அவள் கூந்தலில் சூடிய தாழம்பூ லேசாக வாடியிருந்தது. அனிச்சை யாக இடது கையால் அதைத் தொட்டுப் பார்த்தாள். சிறு புன்னகையோடு கண்கள் ஒளிர்ந்து தணிந்தது. ஆறுதலூட்டும் தொனியில் ''அதெல்லாம் பதினைஞ்சு இருபது வருஷத்துக்கு முன்னாடி. இப்பலாம் முடி வெட்டுறது அங்கி போடுறதெல்லாம் கிடையாது. நெனச்சா சேலை கட்டிக்கலாம். வட்டக் கொண்டை போட்டுக்கலாம்.'' பாண்டி முகத்தில் சின்ன ஆசுவாசம் தோன்றி மறைந்தது. அவள் கண்கள் விட்டேத்தியாக

விலகி நின்றன. மீண்டும் மென்திகிலூட்டும் அமைதி. மௌனம். ''பெண்களை புத்த சங்கத்துல சேக்க வேண்டாம்னு கௌதம புத்தர் மூணு முறை கண்டிப்பா சொன்னார்னு ஒரு புத்தகத்துல படிச்சேன். அது உண்மையாக்கா?'' கண்களைக் கண்களால் ஆழம் பார்த்தாள். புருவத்தை நெரித்தாள். பதிலில்லை. அவள் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தான்.

வெளியே மழை வலுத்தது. நீர்ச்சரங்கள் பாய்ந்திறங்கி வெண்திரையாயின. அப்பால் கடல் தென்படவில்லை. மழையிரைச்சலில் அவள் குரல் மெதுவாகக் கேட்டது. ''பிரான்ஸிஸ் சேவியர் வாழ்ந்த குகையில நிக்கிறோம். அவர் என்ன நெனப்பாரு!'' வலிந்து சிரிக்க முயன்று பாண்டியின் முகத்தீவிரத்தைக் கண்டு இயல்பானாள். காற்று உரத்து அடிக்கும்போது சாரல் குகைக்குள் வீசியது. ஈரம் படாமல் விலகி சுவர் அருகே நகர்ந்தான். மழைக்குளிரில் குகையில் இளம் இருட்டு வியாபித்திருந்தது. அந்த மௌனம் தாங்கமுடியாததாக இருந்தது. தயங்கித் தயங்கி இவ்வளவு காலமாகக் கேட்காமலிருந்த அந்தக் கேள்வியைக் கேட்டுவிட்டான். ''முழு விருப்பத்தோடதான் போறியாக்கா?'' தலைகவிழ்ந்து கொண்டாள். அவன் கண்களின் கீழே அவள் தலையின் உச்சி வகிடு மின்னலெனத் தோன்றியது.

சற்று தாமதமாகத்தான் வலது கன்னத்தில் அந்தத் துளி இறங்குவதைக் கண்டான். ''அழுறயாக்கா'' என்று கேட்கும்போதே இடது கன்னம் நனைந்துகொண்டிருந்தது. விசும்பலைக் கட்டுப்படுத்த முயன்று மேலும் குனிந்தாள். இரு கைகளாலும் முகம் பற்றி நிமிர்த்தினான். இமை திறந்து அவன் கண்களை ஒருமுறை நோக்கியவள் மீண்டும் மூடிக்கொண்டாள். மௌனத் தாரையாகக் கண்ணீர் வழிந்துகொண்டிருந்தது.

கைகளை விலக்காமலே கண்ணீரைத் துடைக்க முயன்றான்.

மௌனமாக இருந்தாள்.

கரிப்புச் சுவையுடன் கடலலைகள் வெளியே பொங்கிக் கொண்டிருந்தன.

ஏதோ சொல்ல முயன்று இயலாமல் அவள் அதரங்கள் துடித்தன. அந்தச் சொற்களை அதில் தேடினான்.

விண்ணும் மண்ணும் களங்கமற்ற மழை நீரால் பின்னும் நிறைந்திருந்தது.



*சொற்களிலிருந்து அர்த்தங்கள் மௌனத்துக்குத் திரும்பும் வழி இது.*

முத்தவெறி கொண்ட இதழ்கள் அறுந்து
பேச முடியாமற் போன நா
ஆர்வப் பித்தால் ஆரத் தழுவிக்
காயம்பட்டுக் கசியும் இதயம்
தனக்குத் தானே மாலையிட்டுக் கொண்டு
தழுவத் துடிக்கும் இரத்தத்தால்
பாய்ந்து பலியாகும் உடல்
தன் குருதி குளித்துக் கூர்மின்னும் வாளாய்த்
தன்னைப் பார்க்கக் கிடைத்த பார்வை
யார் உண்டாக்கிக் கொண்டிருப்பது
நூறு நூறு மின்னல்களால் அறியப்படும்
இவ்வாளின் சுழற்சியை?
எவருடைய சிந்தனைகள் இவை?

அன்று இரவு பாண்டி சீக்கிரமே தூங்கிப் போனான். எண்ண ஓட்டங்களில் தளர்ச்சி வெகுவாக ஏற்பட்டு அயர்ந்து விட்டான். கனவில் கடல் கண்டான். அலைகளே இல்லை; உழுது போட்ட நீர்ப் பாலை போலப் பரந்து கிடந்தது. பெரும் மௌனத்தில், விளங்க முடியாத வைராக்கியத்தோடு கடும் மன அழுத்தத்திலிருந்தது.

கரையில் ஜனங்களோடு ஜனங்களாக பாண்டியும் நின்றிருந்தான். கரை வழக்கத்துக்கு மிக விரோதமாக மேடேறியிருந்தது. ஏதோ கப்பல் மேல் ஏறி நிற்பதுபோல் பல அடி உயரத்திலிருந்தது. அமைதியான நீரின் மேற்பரப்பில் தண்ணீரின் இறுக்கத்தில் ஒரு ரகசியம் உடைவதுபோல முதலில் ராட்சச தாமரைப் பூவொன்று மலர்ந்த நிலையில் முளைத்தது. இதழிடுக்குகளில் சிற்றருவிகளாகக் கடல் வழிந்தது. எங்கும் ஓசைகளே இல்லை. பூவும் அதன் மலர்ந்த இதழ்களும் கருநிறத்திலிருந்தன. நூறு பேர் தாராளமாக மிதந்து செல்லக்கூடிய பரிசல் வட்டமளவிருந்தது. கடலுக்குள் முங்கிக் குளிக்கும் கிருஷ்ணபட்ச இரவைப்போலிருந்தது கருங்கமலம். அதைத் தொடர்ந்து அதனருகில் மற்றொன்று மலர்ந்த நிலையில் புடைத்தது. பல்லாயிரம் ஆண்டுகள் நீருக்குள் மூழ்கியிருந்து விட்டு எழுந்ததுபோல இருந்தது. விண்மீன்கள் ஒவ்வொன்றாய் கண்ணுக்குப் புலப்படுவதுபோல கடலெங்கும் கருப்புத் தாமரைகள் முளைத்தன. எண்ண எண்ண மலரும் ஏராளமான தாமரைகள். பல கோடி இரவுகளின் இருள் நெடி ஒரு நொடியில் மண்டியதும் உயிர் திணறியது.

கரையை விட்டு தூர ஓடி மறைய எத்தனித்தபோது கட்டிலைவிட்டு எழுந்தே விட்டான். பார்வை விரிவுக்கு வெளியே மீறும் காட்சிகளோ பயங்கரமானவை. அது கனவாக விரியும்போது இன்னும் அதிபயங்கரத் துடன் திடுக்கிட வைத்தது. கனவின் பிரம்மாண்டத்துக்கும், வீட்டின் சிறிய அறைக்கும் சம்பந்தமேயில்லை. அதுவே ஆசுவாசமளிப்பதாகவும் இருந்தது. உடல் சற்று வியர்த்துக் குளிர்ந்தது. கட்டிலில் அமர்ந்தே சிறு பொழுதைப் போக்கினான். மீண்டும் படுக்கத் தயக்கமாகயிருந்தது. கடலின் காட்சி கண்களுக்குள்ளே சுழன்று சுழன்று வந்தது. கருந் தாமரைகள் சலனமற்று விறைத்து நின்றன. படுத்தால் கடல் வழிந்து கண்ணுக்குள் பாய்ந்து தாமரைகள் சாய்ந்து விழுந்து நசுக்கிக் கொன்று விடுமோ என்று அஞ்சினான். அப்படியே அமர்ந்திருந்தான். வீட்டில் எல்லோரும் நல்ல தூக்கத்திலிருந்தனர். மெல்லிய குறட்டை ஒலிகள் விட்டு விட்டுப் பறக்கும் வண்டுகள்போல அறைகளெங்கும் வட்டமிட்டலைந்தன.

கருந்தாமரைகளை அவன் பார்த்ததுமில்லை; கேள்விப்பட்டதும் இல்லை. ஆனால் கண்டுவிட்டான். அதுவும் கடலில்.

கருப்பு துக்கத்தின் நிறமாகக் கருதப்படுகிறது; எதிர்ப்பு; மறியல் அடையாளமும்கூட. கொட்டாவி வாயைப் பிளந்தது. இமைகள் தாமாகக் கோர்த்தன. பெருங்கடல் பொங்கி அவனுக்குள் வழியப் பார்த்தது. கண்கள் வெடுக்கென்று திறந்தன. இருளில் உடல் மிதந்து மேலெழுவது போன்ற உணர்வு. சதைக்குள் எலும்புகள் சாம்பல் பிரம்புகளாகி விட்டிருந்தன.

நள்ளிரவில் வெளியில் செல்லக் கால்கள் துணியவில்லை. மெல்லிய விளக்கொளியில் நேரம் பார்த்தான். சுவர் கடிகாரத்தின் முட்கள் பாம்புகள்போல் ஒன்றையொன்று பின்னிக்கொண்டிருந்துவிட்டு அவன் பார்த்ததும் சட்டென்று விலகித் துடித்துச் சுழல்வதாக பட்டது. அது காட்டுவதை நம்பத் தயக்கமாக இருந்தது. மூத்திரம் முட்டியது. நடு ஜாமமோ என்னவோ, தொடைகளை இறுக்கி அடிவயிற்றை எக்கிப் பார்த்தான். முன் வைத்த முனைப்பை மூத்திரம் பின் வைக்கத் தயாரா யில்லை. அவசரம் அவனை பிடரியில் கை போட்டு தள்ளி இழுத்துக் கொண்டு போனது.

கட்டிலைவிட்டு இறங்கி சமையலறையைக் கடந்து வெளிவிளக்கை பொத்தானில் பொருத்திவிட்டு வளவுக் கதவைத் திறந்துகொண்டு வேகமாக இறங்கினான். குண்டு பல்பு வெளிச்சம் மங்கலாகப் பரவி யிருந்தது. வெந்நீர் அடுப்புக்கான குச்சில் வாசலுக்கு வலப்பக்கமிருந்தது. குச்சிலுக்குள் எச்சரிக்கையாகப் பார்த்தான். அடுப்பின் வட்ட வாயும் முட்டைக் கண்களும் வா வா எனப் பிளந்திருந்தன. எதிரே உடை மரத்தின் நிழல் சாதுவாக இமைத்தது. இருபது முப்பதடி தூரத்தில் மட்டைக் கூட மிருந்தது. கட்டுக்கட்டாக விறகுகள் கிடக்கும். அதை இப்போது பார்க்க விரும்பவில்லை. மட்டைக் கூடத்தைத் தாண்டி வெட்டவெளி விரிந்து செல்லும். அவசரத்தை அங்கேயே தீர்த்துக்கொள்வது என முடிவெடுத்து உடைமரத்துக்கருகே குத்த வைத்து அமர்ந்தான். மூத்திரம் பீரிட்டுப் புறப்பட்டது. உடலெங்கும் அமைதி பரவிக்கொண்டிருந்தது. மூத்திரம் கழித்தபடியே தற்செயலாக தலையை இடதுபக்கம் திருப்பி மட்டைக் கூடத்தின்மீது பார்வையைச் செலுத்தினான். அந்த கணத்தில் அவன் கண்களுக்கும் மூளைக்குமான தொடர்பு கத்தரிக்கப்பட்டது. ரத்தத்தில் கட்டுக்கடங்காத குறுகுறுப்பு உண்டாயிற்று. தூண்டிலைச் சொடுக்கி இழுத்ததுபோல காட்சி அவன் முகத்துக்கு முன் வந்து விழுந்தது. பருவ மார்கழியின் பனி அலைகளிலிருந்து பால் பீரிட்டுத் தெறித்ததுபோல பெருங்குளிர் பரவிச் சூழ்ந்தது. மட்டைக் கூடத்தின் விறகுக் கட்டுகளுக் கருகில் சிறுமி ஒருத்தி அமர்ந்து விறகுச் சுள்ளிகளைக் கட்டிலிருந்து ஒவ்வொன்றாக உருவித் தன்னருகே அடுக்கிக்கொண்டிருந்தாள். ஏதோ புது கிரகத்துக்கு கண் திறந்ததுபோல அறிமுகமற்ற நிறத்தில் வெளிச்சம்

விரிந்திருந்தது. சிறுமியை அவன் கண்டுகொண்டதை அவள் அறியவில்லை. அவள் விறகுக்கட்டைப் பார்த்து சிறு பலகைமீது அமர்ந்திருந்தாள். தன் வேலையில் கவனமும் நிதானமுமாகச் செயல்பட்டுக் கொண்டிருந்தாள். அவளை இதற்குமுன் எங்குமே அவன் பார்த்ததாக ஞாபகமில்லை. கொஞ்சத் தூண்டும் வசீகரத்துடன் இருந்தாள். ஒவ்வொரு சுள்ளிகளாகப் பிடுங்கி எடுத்து அடுக்கினாள். நள்ளிரவுத் திருடி.

நிழல்கள் மரங்களாக மாறியதுபோல விறகுச் சுள்ளிகள் கருப்பாக விளாறு விளாறாகத் தெரிந்தன. கிழக்கு பார்த்தமர்ந்து இடது கைப் பக்கமாக விளாறுகளை அடுக்கியதால் அவன் நின்றிருந்த இடத்திலிருந்து அவளை கால் முதல் தலைவரை எந்தக் குறுக்கீடுமின்றிக் காண முடிந்தது. ஒருமுறை கண்களை இமைக்க எத்தனித்து அது கடினமாகி முடியாமல் போனபோதுதான் அவன் உடல் அச்சத்தில் குழைந்து கூழாகத் தொடங்கியது. விறகு அடுக்கு உயர உயர சிறுமியும் வளர ஆரம்பித்தாள். படுத்திருந்த கன்றுக்குட்டி யோசனையோடு எழுந்து நிற்க முயற்சிப்பதுபோல அவள் தோற்றம் விரிவும் உயரமுமடைந்தது. அவள் உடுத்தியிருந்த உடையும் மாற்றம் கண்டது. பாவாடை சட்டை அணிந்திருந்தாள். முதலில் நிறம் மறந்து போகுமளவுக்கு மாறிவிட்டது. இப்போது ஒரு தாவணி அவள்மீது படர்ந்தது. அது ஒரு பச்சைப் பாம்பு போல அவளைச் சுற்றி நெளிந்தது. மூச்சுவிடும் நேரத்துக்குள் அவள் முலைகள் முழுமையாக வளர்ந்து முடிந்தன.

பார்வைப் பொழுதிலே அவள் பருவப் பெண்ணாகி விட்டாள். அமர்ந்த நிலையில் விறகுச் சுள்ளிகளை உருவியபடியே இருக்க, மாயத்தின் தீவிரம் பெருகி வந்தது. அவள் கன்னங்கள் பளபளப்படைந்தன. நாசி கத்தியாய் ஒளிர்ந்தது. உதடுகள் பூவைப்போல மடிந்திருந்தன. அவன் செவிகளுக்குள் வண்டுகளின் ரீங்காரம் கிளர்ந்து கூர்மையடைந்தது. உமிழ்நீர் இனிப்பேறும் அளவுக்கு அவன் உடல் உலர்ந்துவிட்டது. இதயமோ விடுவிடுவென்று துடித்தது. குமரியான சிறுமி யாரைப் போலுமில்லை. பேரழகி என்பதைத்தவிர பிற தரவுகள் ஏதும் தட்டுப்படவில்லை. குமரியும் வளர்ந்துகொண்டே போனாள். அவள் உடலின் செழுமையில் வசீகர அலைகள் மின்னின. அவள் உடலைச் சுற்றி வளைத்திருந்த பச்சைப் பாம்பு இன்னும் பல சுற்றுப் பெருத்துப் புடவையாகிவிட்டது. ஏழாம்நாள் நிலவை இடுப்பில் செருகி வைத்திருப்பது போல வயிற்றுப் பகுதி தேய்ந்து வளைந்திறங்கியது. பருத்த ஸ்தனங்கள் கனிந்து ததும்புவதை வளைதோளின் திணறலில் காண முடிந்தது. சொடுக்கிடும் நேரத்துக்குள் அடுக்கிய விறகைக் கட்டியெடுத்துக்கொண்டு எழுந்து நின்றாள். அச்சமயம் அவள் தலை மோதி உறங்கிக்கொண்டிருந்த மேகக்கூட்டம் கலைந்தது. வான் விளிம்புவரை வளர்ந்து விட்டிருந்தாள். விறகுக்கட்டை தலையில் வைத்தபடி நடக்கத் தொடங்கினாள். அவனை சற்றும் பொருட்படுத்தாமல் எதிர்த்திசையில் திரும்பி நடந்தாள். இறுக்

கிப் பின்னிய அவள் கூந்தல் தலைகீழாகத் தொங்கும் பனைமரம்போல ஆடிக்கொண்டு போனது. பறவைகள் பறக்கும் உயரத்தில் அவள் இடுப்புத் தசை குலுங்கியது. அவள் பாதங்கள் செம்மண் நிறத்திலிருந் தன. தாழம்பூ மணம். பெருங்காற்று கட்டவிழ்ந்து சீறிப் பாய்ந்தது. அவள் மறையும் முன் அவன் கால்கள் துறுதுறுத்து தாமாக முன்னோக்கி நகர்ந்தன. மிரண்டு பின்னங்கால் வைத்து விலகும் சாதுவான பிராணி போல, வீடு பின்னோக்கிப் போய்க்கொண்டேயிருந்தது.



*இரண்டே இரண்டு விழிகளால் அழுது எப்படி இந்தக் கடலை கண் ணீராக நான் வெளியேற்ற முடியும்! என் கனவும் கற்பனைகளும் என் இதயமும் குருதியும் கிழிந்த மிதியடிகளாக மாற்றப்படும்போது எப்படி நான் அழாமலிருக்க முடியும்! கண்ணீரின் ஒரு துளியை அவித்த முட்டையைப்போல் இரண்டு துண்டாக அறுத்துவிட முடியவில்லை. அன்பும் இங்குதான் தொலைகிறதோ என்னவோ. நண்பர்களே தோழி களே துரோகிகளே, ஆறுதலுக்கு பதில் ஓர் ஆயுதம் தாருங்கள். கடலை கப்பலின் சாலையென்று கற்பித்தவனைக் கொன்றுவிட்டுப் போகிறேன்.*



கடலைத் தேடி ஓடினான். நாட்கள் ஒவ்வொன்றும் கடலை அவனுக்கு காண்பிக்காமல் போக்குக் காட்டி நழுவிச் சென்றன. ஊர்ப் புறங்களில் சுற்றித் திரிந்தான். பெரிய நகரங்களுக்குள் புகுந்து வெளியே றினான். எதிர்ப்படும் மனிதர்களிடம் கடலின் இருப்பிடம் குறித்து விசாரித்தான். யாராலும் நம்பிக்கையான பதிலை அவனுக்குச் சொல்ல இயலவில்லை. சாலையோரங்களில் கடலுக்குச் செல்லும் பாதையென்று வழிகாட்டிப் பலகைகளே இல்லை. கடலை விசாரித்து அவன் ஆர்வ மாகப் பேசும்போது கேட்பவர்கள் பரபரப்படைந்தார்கள். தங்க பிஸ்கட் களும் வைரப் பணியாரங்களும் ஏற்றி வந்த கப்பல் கடற்கரையில் தரை தட்டி நிற்கிறதோ என்று ஐயப்பட்டார்கள்.

ரயில் பெட்டிகளில் ஏறி கள்ளப்பயணம் செய்தான். பேருந்துகளில் வாசலில் நின்றவாறு கடலைத் தேடிப் போனான். எங்கும் இவன் தேடலைப் புரிந்துகொள்வதில் அக்கறையில்லாத ஈரமற்ற மனிதர் களையே சந்தித்து அலுப்புற்றான். ஒரு சந்தர்ப்பத்தில் சைக்கிளில் கூடை கட்டிய மீன் வியாபாரியைக் கடுமையாகத் துரத்திப் பின் தொடர்ந்தான். வியாபாரியோ கடலுக்குப் போகாமல் காவல் நிலையத்துக்குள் நுழைந்து விட்டான். அதிகாரிகள் அவனை மறித்து விசாரித்தார்கள். பின்பு அவன் மாறுவேடத்தில் நகர்வலம் வந்திருக்கும் இளவரசன் என்பதை உணர்ந்து உணவுப் பொட்டலம் வாங்கிக் கொடுத்து உபசரித்து வழியனுப்

பினார்கள். இப்படியாக கடல் தேடிச் சென்ற பயணத்தில் பல நாட்களோ பல மாதங்களோ உருண்டோடி விட்டன. கடலைப்பற்றி நேரடியாகக் கேட்கும்போது யாருமே சற்று கலவரமடைவதை ஒரு பொறி தட்டியதில் கிரகித்துக் கொண்டவன் மேற்கொண்டு அணுகுமுறைகளில் சகஜமாக பேச்சைத் தொடங்க முடிவெடுத்து, கடிகாரம் கட்டியிருப்பவர்களிடம் மணி கேட்க ஆரம்பித்தான். மணி என்னாச்சு என்றதும் நேரத்தைச் சொன்னார்கள். 'உங்க வீட்டுல கடல் கிடல் உண்டுமா' என்று அடுத்த விஷயத்துக்கு வந்ததும் திடுக்கிட்டார்கள். நேரத்திலும் ஒருவகையான குழப்பத்தை உண்டுபண்ணினார்கள். ஒருவரிடம் கேட்கும்போது பத்து என்றார். அடுத்தவரிடம் கேட்கும்போது ஒன்பதரை என்றார். அதற்கடுத்தவர் எதிர்பார்த்தபடியே எட்டே முக்கால் என்றார். கடைசியாக அவன் ஒரு குள்ளமான மனிதனிடம் மணி என்னாச்சு என்றதற்கு 'ஒண்ணுமே ஆகலை' என்று பதில் வந்தது. அதற்கு மேலும் ஊர் நகரங்கள் தனக்கு உகந்ததல்ல என்றெண்ணி, எண்ணப்படியே மனித சஞ்சாரங்களை விட்டு வெளியேறினான்.

ஆகாயத்தில் பறந்துகொண்டிருந்த பறவைகள் மிதக்கத் தொடக்கின. பகலின் படிக்கட்டுகள் முடிவடையும் மாலையில் இரவின் காலடிச் சப்தம் ஒலித்தது. எதிரே புழுதி படிந்த தார் சாலை சாம்பல் பாம்புபோல நீண்டு கிடந்தது. மோட்டார் வாகனங்கள் எதிரும்புதிருமாக விரைந்து இரைச்சலிட்டன. கள்ளத்தனமாகக் காற்று வீசிக்கொண்டிருந்தது. வியர்த்துக் கொட்டுகிற புழுக்கம் மழையைப் பிடித்து இழுக்க வாய்ப்பிருந்தது. பாண்டியின் பார்வை வானத்திலிருந்தது. கால்கள் சாலையோரம் நடந்துகொண்டிருந்தன. மனமோ அடுப்பாகி விட்டிருந்தது. அதில் சில காட்சிகளை சில ஆசைகளை சில கவிதைகளை சில கனவுகளை விறகாக எரித்து அவள் குளிர் காய்ந்துகொண்டிருந்தாள்.



*இருளுக்குள் மறைந்திருந்து ரகசியமாய் தரம்பிரித்துக் கொண்டிருக்கிறாய் தீயை. நிலத்துக்கடியிலிருந்து பொங்கித் திமிறும் நீர் ஊற்றென நெஞ்சை உறுத்திக் கொண்டிருக்கிறாய். கடைவாய் நுனியில் கசக்கிறது காயத்தால் அழியாத காதலின் ரெத்தம்.*



சிறகுகளை விரித்து மிதக்கும்போது பறவைகளுக்கு வாய்க்கிறது வில்வடிவம். அம்புகளுக்கு பதில் வில்லே பாய்ந்து செல்லும் அற்புதம்.

கூட்டமாகப் பறக்கின்ற சுபாவம் கொண்ட கொக்குகளோ, புறாக்களோ, நாரைகளோபோலத்தான் முதலில் அவை தோன்றின. பிறகு உருவம் கறுத்து கழுகுகளாகி வந்தன. மெழுகுவர்த்திகள் எரிந்து உருகிக் குறுகும்வண்ணம் பறவைகளின் மிதத்தல் வட்டம் தாழ்ந்து வந்தபோது

பாண்டி எரிச்சலடைந்தான். ''வானத்துல எவ்வளவு இடம் கிடக்கு; அதை விட்டுட்டு கீழே வந்து திரியிதுகளே'' என மனம்விட்டு கடிந்து கொண்டான். ஒரு பறவையின் வாலுக்கும் வயிற்றுக்கும் நடுவில் வட்ட வடிவில் வெள்ளை நிறத்தில் ஏதோ அவன் கண்ணில் பட்டது. பட்ட கணமே கிரகித்துக் கொண்டான், அது முட்டை போடப் போகிறது என்பதை. அதன் திட்டமும் வட்டமும் முட்டையை அவன் தலையில் போடுவதுதான் என்பது புலப்பட்டபோது எச்சரிக்கையடைந்து நடப்பதை நிறுத்திவிட்டு ஓட்டத்தை ஆரம்பித்தான். மூச்சு வாங்கிய போது நின்றான். வானத்தில் பறவைகளில்லை.

சாம்பல் பாம்பைச் சுற்றி கட்டிடங்கள் தொடர்ச்சியாக எழுந்து நின்றன. நேற்று இரவில் எரிந்ததை விடிந்ததும் அணைக்க மறந்ததுபோல் தெருவிளக்குகள் சீக்கிரமே எரியத் தொடங்கியிருந்தன. அவனுக்கு தாகமெடுத்தது.வாயும் வயிறும் கொஞ்சம் பச்சைத் தண்ணீர் கேட்டது. ஏறக்குறைய புண்ணாகிப் போயிருந்த உள்ளங்கால்களில் திடீரென்று தீப்பிடித்ததுபோல் வலி தோன்றியது. மெதுவாக மிக மெதுவாக அவன் ஒரு தண்ணீர் கடையைத் தேடியபடி நடந்தான். கொஞ்சம் மஞ்சள் நிறமேறிய பஞ்சை குவித்து வைத்தாற்போல-இல்லை ஒரு வெண்பன்றிக் குட்டி சுருண்டு படுத்து உறங்குவதுபோல-இல்லை கருப்பு கல்மேஜையில் பரோட்டா ரொட்டிக்கு மாவு பிசைந்து எண்ணெய் தடவி வைக்கப் பட்டிருந்தது. குழந்தைக்கு ஜட்டி போட்டுவிட்டதுபோல் அதன்மீது ஒட்டுத் துணி. எனவே இது ஒரு சாப்பாட்டு கடைதான்; இங்கு குடிப் பதற்குத் தண்ணீர் கிடைக்கும் என்பதை பாண்டி புத்திசாலித்தனத்துடன் சட்டென்று கிரகித்துக்கொண்டான்.

வெறும் ஸ்டூல்களும் மேஜைகளுமாக கடை வெறிச்சோடிக் கிடந்தது. கடை முகப்பில் போய் நின்றான். எழுதாத தாளின் வெண்மையை நினைவூட்டும் சுத்தமான வெள்ளை வேஷ்டியும் பனியனும் அணிந்து எண்ணெய் விட்டு படியத் தலைவாரி நெற்றியில் குங்குமம் தரித்து, முதலாளியா தொழிலாளியா என பிரிக்க முடியாத தோரணையுடன் சாமிக்கு சூடம் காட்டிக் கொண்டிருந்தவன் கன்னத்தில் போட்டுக் கொண்டு திரும்பி பாண்டியை பார்த்தான். 'என்ன வேணும்' என்பது போல் முகத்தை வெட்டி உயர்த்தினான். 'தண்ணி' என்றான். தொண்டையிலிருந்து கருக்கு வாளை உருவியதுபோல் குரல் அறுந்து வலி ஏற்பட்டது. வயிற்றுக்குள் சொட்டுச் சொட்டாக ரத்தம் சிந்திக் கொண்டிருப் பதாக ஒரு பிரமை. ''போ போ'' அதட்டிவிட்டு கடை ஆள் அவன் ஜோலிக்கு ஆயத்தமானான். ஒரு அசட்டுப் புன்னகையின் துணை கொண்டு அதைப் பிடித்துத் தொங்கியபடி பாண்டி அங்கேயே நின்றிருந் தான்.

ஊற்று புடைத்து கொந்தளித்ததுபோல - இல்லை மண்ணிலிருந்து மழை முளைத்து எழுந்ததுபோல - இல்லை அலுமினியப் பாத்திரத்

திலிருந்து நீரள்ளி கடை ஆள் முற்றம் தெளித்தான். பாண்டி தாகத்தோடு உடலை சற்றே குறுக்கி துள்ளி வந்த நீர்மணிகளைக் கைகளில் ஏந்திப் பருக முயன்றான். அவை விரலிடுக்கு வழியாக ஒளிந்து விளையாடின. முற்றம் தெளிப்பதை நிறுத்திவிட்டு கடை ஆள் சற்று நேரம் பாண்டியைக் கூர்ந்து பார்த்தான். வறண்டு உலர்ந்து சருகான குரல்வளை பேசினால் நொறுங்கி விடும் வாய்ப்பிருந்தும் மீண்டும் ஒரு முறை பாண்டி கருக்குவாளை உருவினான். மின்னல் வேகத்தில் திரும்பிய கடை ஆள் காது அறுந்த அலுமினியப் போணியில் பாண்டிக்கு தண்ணீர் தந்தான். ஆவலோடு அதை வாங்கிப் பருகியபோது கொட்டு அடித்ததுபோல் குரல்வளையில் தாகத்தின் தாளம் மடக்மடக்கென்று ஒலித்தடங்கியது. கண்ணில் புகைந்து கொண்டிருந்த திரை மூட்டம் விலகியது. குளிர்ந்த வயிற்றைச் சுமந்தபடி நடக்க சோம்பலாக இருந்தது.

சாம்பல் பாம்பின் முதுகிலேறி குறுக்காகக் கடந்தான். அங்கே அகன்று உயர்ந்த ஒரு அரண்மனை வாசல் திறந்திருந்தது. வாசலுக்குள் ஊற்றுப்பார்த்தான். உள்ளே அரண்மனை இல்லை. அதற்குப் பதிலாக மரம் செடி கொடிகள். கோலத்துக்கு புள்ளி வைத்தாற்போலக் கொஞ்சம் மனிதர்கள். ஓ இது அந்தப் பூங்கா! அவனுக்குள் அவனே காற்றில் நெய்த வார்த்தைகளில் பேசிக்கொண்டான். ஓய்வை விரும்பிய கால்கள் தாமாக பச்சைப் புல்வெளியை நோக்கி நகர்ந்தன. லேசான வெப்பம் கசியும் செங்கல் தளம் பதித்த பாதையில் மெதுவாக நடந்தான். பெஞ்ச் ஒன்றில் அமர்ந்து சொற்ப நேரம் முதுகு சாய்த்தால் தோதாக இருக்குமென்று தோன்றியது. பூங்கா முழுக்க நாலா பக்கமும் நோட்டமிட்டான். அனைத்தும் ஆட்களால் நிரம்பியிருந்தது. அவனுக்கெதிரே பாதையை அடுத்த பெஞ்சில் ஒரு ஆள் அமர இடமிருந்து. அந்த பெஞ்சில் பஞ்சுத் தலையணை மெல்ல பொமேரேனியன் நாய்க்குட்டியாகி பாண்டியை வைத்த கண் வாங்காமல் கூர்ந்து பார்த்தது. பதிலுக்கு அவனும் நாய்க் குட்டியை உன்னிப்பாகப் பார்த்தான். இருவருக்கும் ஏற்கனவே அறி முகம் உண்டு என்பது ஞாபகம் வந்தது. பழைய உறவு ஒன்றைப் புதுப் பித்துக் கொண்டதில் இவன் முகத்தில் மெல்லிய மலர்ச்சி பரவியது. நாய்க்குட்டியும் உதடு பிரிக்காமல் கொஞ்சமாகச் சிரித்தது. முதல் சந்திப்பின்போது அது சிரிக்கவில்லை. திரி பின்னி கொத்துக் கொத்தாக வைத்துக் கொளுத்திய சரவெடிபோல் பயங்கரமாக குரைத்து பிறகு புரிந்துகொண்டு நல்ல பிள்ளையாகப் பழகிவிட்டது. நாய்க்குட்டி அவனுக்கு குறிப்பால் எதையோ உணர்த்த முயற்சிப்பதுபோல் பார் வையை விலக்கி தலையைத் தூக்கிக் காட்டியது. அப்போதுதான் பாண்டி பார்த்தான் அதன் அருகிலிருந்த மனிதரை. மிதமான உயரம், நரை ஊடுரு விய தாடி மீசை, ஏறு நெற்றி. சாந்தமான முகம். உடனே அடையாளங் கண்டுகொண்டான். பெயர் சட்டென்று நினைவுக்கு வரவில்லை. கால் மேல் காலிட்டு வலது கையைத் தூக்கி சாய்வுப் பலகை மீது வைத்தபடி

முகத்தை ஏந்தி வளர்ந்துயர்ந்த ஒருமா உச்சியையோ அல்லது அதற்கும் மேலிருந்த வானத்தையோ வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தார். கூசும் ஒளி விலகி வானம் காணும் தன்மையோடிருந்தது.

பெஞ்சிலிருந்து துள்ளியிறங்கிய நாய்க்குட்டி பாண்டியைநோக்கி 'குடுகுடு'வென்று ஓடி வந்து அவன் முன்னே நின்றது. நட்போடு முகர்ந்து பார்த்து மகிழ்ச்சியில் வாலை ஆட்டியது. பாண்டி வலது கையால் நாய்க் குட்டியின் உச்சியை வருடியபடி அவரைப் பார்த்தான். அவர் வரைந்து வைக்கப்பட்டது போலிருந்தார்.

உடலை உதறிச் சிலிர்த்த நாய்குட்டி 'குடுகுடு'வென்றோடி மீண்டும் பெஞ்சிலேறி அமர்ந்துகொண்டது. பாண்டி எழுந்து அந்த பெஞ்சுக்கு செல்ல நினைத்த நேரம், நடைப் பயிற்சியில் களைத்துப் போன நிறைமாத கர்ப்பிணி ஒருத்தி வியர்த்து வழிய மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்கியபடி அந்த பெஞ்சில் அவர் அருகே வந்து அமர்ந்தாள். குழந்தைத்தனமான அவள் முகத்தில் தாய்மை அரும்பியிருந்தது. சோர்வையும் பூரிப்பையும் சேர்த்துக் குழைத்து உடலெங்கும் பூசியதுபோல் தோற்றமளித்தாள். அவசரப்படாமல் அடிக்கடி கண்களை மூடி முகத்தை உயர்த்தி மூச்சு வாங்கினாள். 'ஒரு மரத்தடி நிழல் போதும், உன்னை தைரியமாக நிற்கவைத்து விட்டு போவேன்.' மனத்தில் இந்த வரிகள் மிதந்து வந்தன. பாண்டி கர்ப்பிணியையும் அவரையும் மாறிப் மாறிப் பார்த்தான். கவிதை வரிகள் சுழன்று சுழன்று வந்து போயின. சிறிது நேர ஆசுவாசத்திற்குப் பின் உதட்டை மடித்துக் கடித்தபடி கைகளை ஊன்றி எழுந்த கர்ப்பிணி நின்று நிதானித்து பின் பூங்கா வாசலை நோக்கி மெல்ல நடக்கத் தொடங் கினாள். சாலையில் திரும்பி மறையும்வரை அவளையே பார்த்துக் கொண்டிருந்தான். நாய்க்குட்டி சற்று பொறுமையிழந்தது. அவரிடம் எந்த சலனமுமில்லை. ஏதாவது மரக்கிளையில் கூடு கட்டும் பறவைக்குக் கூடமாட உதவிக் கொண்டிருக்கிறாரோ?

பாண்டி புல்தரையில் படுத்தவாறு கண்களை மூடி பெயர்களின் பின்னால் அலைந்து திரிந்தான். எவ்வளவு நேரமோ தெரியவில்லை. தூரத்தில் ஆலயமணி ஓசை சன்னமாக காதில் விழுந்தபோது அவனுக்குள் விளக்கெரிந்தது. ''ஆ... தேவதேவன்'' என மனத்துக்குள் கூவியபடி கண் திறந்தான். இருட்டிப் போயிருந்தது. பூங்கா வெறிச்சோடியிருந்தது. எதிரிலிருந்த பெஞ்சில் யாருமே இல்லை.



**வி**சாரணை ஆரம்பித்தது. மிகப்பரிவோடு தொடங்கிய அது நீண்டு விரிந்து செல்லுமென்று கூடியிருந்தவர்கள் எதிர்பார்த்தார்கள் போலும். மாறாக அது சுருக்கமாக முடிந்துவிட்டது. பாதிரி பாண்டியிடம் ஊர், பெயர் பிரச்சனைகளை விசாரித்தார். குரலை இயன்ற அளவு

கனியவிட்டான். கேள்விகள் கேட்கப்பட்டதும், கூடையில் நிறைத்து வந்து கொட்டியதுபோல் எண்ணற்ற சொற்கள் துடித்தன. பெயர்கள் மின்னி மறைந்தன. ஒரு வார்த்தைகூட பேச வசதியாக இல்லை. சோற்றுப்பருக்கைகளை மென்று விழுங்குதுபோல் விழுங்கத்தான் முடிந்தது. ருசியோ எரிச்சலூட்டியது. பாண்டியின் கண்கள் இலக்கற்றுத் தாவுவதை, நாக்கின் ஒத்துழையாமையைக் கூர்ந்து கவனித்த பாதிரி சுற்றி நின்றவர்களை முகம் திருப்பிப் பார்த்தார். பின்பு சின்னதாகப் புன்னகைத்தார். அது தன்னம்பிக்கையை அல்லது இறை நம்பிக்கையை தூண்டக் கூடியதாக இருந்தது. குரலெடுத்துப் பாடினார்.

ஒவ்வொரு மனிதனும் என் நண்பன்
ஒவ்வொரு மனிதனும் சகோதரன்
காரணம் அவனும் மனிதன்-
அல்லல் படுபவன் என் நண்பன்
ஆபத்திலிருப்பவன் சகோதரன்
காரணம் அவனும் மனிதன்...

பாண்டியைத் தவிர மற்றவர்களும் பாதிரியோடு பாடினார்கள். உடல் சூம்பியும் தலை பெருத்தும் முடி மரக்கிளைகளாகப் படர்ந்தும் இருந்த ஒருவர் பாடும்போது கண்களை மூடி உருகினார்.

பாதிரி, பாண்டியின் அருகில் நின்ற இளைஞனை விளித்துச் சொன்னார் ''பீட்டர், இந்த மகனை பங்களாவுக்கு அழைத்துக்கொண்டு போ. குளிக்கப் பண்ணு. மாற்று உடைக்கு வழி செய். சத்தான உணவு கொடு. ஓய்வெடுக்க உதவி செய். இவனை உன் வசம் ஒப்படைக்கிறேன். நன்றாக கவனித்துக் கொள். இவன் தேவனின் விருந்தாளி.'' பாதிரி கண்மூடி கர்த்தரை தோத்தரித்தார். அங்கிருந்து திரும்பி நடந்தார். மற்றவர்களும் பிரிந்து உதிரிகளாகி மறைந்தார்கள்.

சோர்வின் அழுத்தம் சற்று மட்டுப்பட்டிருந்தது. பீட்டர் பாண்டியை அழைத்துச் சென்றான். தனது வலது கையை பாண்டியின் இடது கையோடு கோர்த்து இறுகப் பற்றியிருந்தான். அந்தப் பிடியின் இறுக்கத்திலிருந்த வலுவின் இழைகள் அவன் உடலுக்குள் நுழைந்து பரவுவதாக உணர்ந்தான். முன்பின் முகம் பார்த்திராத அந்நியர்களின் அன்பும் கரிசனமும் ஓரளவு பாண்டியை நெகிழ வைத்திருந்தது. பரிதாபத்தின் அடியாழத்துக்கு நாம் முற்றிலும் தள்ளப்பட்டுவிடவில்லை என்ற எண்ணம் ஏற்பட்டது. ஆயாசமும் களைப்பும்தான் அப்போதைக்கு அவனை நூல் கட்டி பள்ளத்தில் இறக்கிக் கொண்டேயிருந்தன. தரை தட்டவேயில்லை.

தேவாலயத்தின் வலப்பக்கமிருந்த பாதையில் அவர்கள் நடந்தார்கள். தென்னைமரக் கன்றுகள் குறிப்பிட்ட இடைவெளிவிட்டு தோகை போல ஓலைகள் விரித்துக்கொண்டு நின்றன. ஒருபக்கம் ஒளிப்பச்சையும் மறுபக்கம் நிழற்பச்சையுமாக அவை காற்றிலசைந்தன. சிவப்பு நிறச்

சிலுவைக் குறியிட்ட ஜீப் ஒன்று நின்றிருந்தது. அதைக் கடந்ததும் நீண்ட வராண்டாவின் படிக்கட்டு எதிர்ப்பட்டது. வராண்டாவின் வெளிப் பக்கம் இடுப்புயரமுள்ள திண்டு நீண்டு சென்றது. இடையிடையே கூரையில் போய் இணையும் சின்னச் சின்னத் தூண்கள். வரிசையாக அறைகள். எல்லாக் கதவு ஜன்னல்களுக்கும் ஒரே நிறம். நீலத்தில் சாம்பலைக் கலந்ததுபோல கண்ணை உறுத்தாத சலிப்பூட்டும் நிறம். பீட்டர் அறையைத் திறந்ததும் அறையெங்கும் வெளிச்சம் நிரம்பியது. நீந்திக் குளிக்கலாம்போல நிறைந்திருந்தது ஒளி.

மருத்துவமனையை நினைவூட்டும் இரும்புக் கட்டில் கிடந்தது. தூய வெண்ணிற விரிப்புகள். ஆளுயர பீரோ ஒன்றுமிருந்தது. மூன்றடுக்கு அலமாரி, உதிரியாக அவற்றில் சில பொருட்கள், பைபிள், ஜெபமாலை, மெழுகுவர்த்திகள், கோப்பை வடிவிலான கிண்ணம் இன்ன பிற. மரக் குறுக்குச் சட்டமிடப்பட்ட அகன்ற ஜன்னல். உள்ளறைகளின் கதவுகள் வெளிப்பக்கமாகத் தாழிடப்பட்டிருந்தன.

பாண்டியை கட்டிலில் அமரச் சொன்னான் பீட்டர். வார்த்தைகளை 'பிரதர்' என்ற சொல்லுடனே அவன் ஆரம்பித்தான். மின்விசிறியைச் சுழல விட்டான். கட்டிலுக்கடியிலிருந்த பெட்டியை வெளியே இழுத்துத் திறந்து ஆராய்ந்து இரண்டு உடுப்புகளை எடுத்தான். பீட்டரின் ஒவ் வொரு அசைவுகளையும் பாண்டி உன்னிப்பாக கவனித்துக்கொண்டே வந்தான். அது ஒரு பயந்த பிராணியின் பார்வையாக இருந்தது.

உடலோடு சேர்ந்து வளராமல் மனசு எங்கோ தடைப்பட்டுப் போன ஒரு வளர்ந்த குழந்தையை நடத்துவது போல்தான் பீட்டர் பேச்சிலும் செயலிலும் பாண்டியை நடத்தினான். ''பிரதர், முதல்ல நீங்க குளிச்சிருங்க. துணியெல்லாம் ரொம்ப அழுக்காகியிருக்கு. அதை கழத்தி போட்டுட்டு இத கட்டிக்குங்க. கடைசியா எப்போ சாப்பிட்டீங்க? சோறு சாப்பிடுறீங்களா இல்ல... இட்லி தோசை எதாச்சும் வேணுமா? குளிச்சி முடிச்சதும் சாப்பாடு. நானும் உங்ககூடதான் சாப்பிடுவேன். எதுக்கும் கவலைப்படக்கூடாது. நான் உங்க கூடவே இருப்பேன், சரியா? போங்க, துணிய அங்கேயே நனைச்சுப் போடுங்க. நான் துவைச்சுக்கிறேன். சோப்பு இருக்கும். பல்பொடியும் இருக்கும். நான் பேசுறது புரியுதா? தமிழ்... தமிழ் தெரியுந்தானே...''

பீட்டர் ஒரு சுத்தமான கைலியையும் துண்டையும் நீட்டினான். அவன் பேசப் பேச பாண்டி ஆமோதிப்பதுபோல் தலையாட்டினான். பீட்டரின் விருப்பத்துக்கு இசைந்து போக வேண்டும் என்ற ஆர்வம் அவனுக்கிருந்தது. அச்சமயம் அவனுக்கு கடந்தகாலம் வருங்காலம் என்பவை எதுவும் உறுத்தலாகவோ சுமையாகவோ வருத்திக் கொண்டிருக்கவில்லை.

குளியல் அறையைத் திறந்து குழாயைத் திருகினான் பீட்டர்.

தண்ணீர் சிறியது. கவிழ்த்து வைக்கப்பட்டிருந்த பிளாஸ்டிக் வாளி, மக்குடன் இருந்தது. சோப்பை சுட்டிக் காட்டினான். பல்பொடி பாக் கெட்டை எடுத்து உருட்டினான். மீண்டும் ஹாலுக்குத் திரும்பினார்கள். வழிகாட்டி முடித்த திருப்தியுடன் உணவுக்கு ஆயத்தம் செய்யும் பொருட்டு அறையைவிட்டு நடந்து வராந்தாவில் மறைந்தான்.

நிறுத்தப்பட்ட மின்விசிறியை அண்ணாந்து பார்த்தபடி நின்றிருந் தான் பாண்டி. வேகம் மெல்ல மெல்லக் குறைந்து அதன் சிறகுகள் ஓய்ந்து நின்றன. நிசப்தத்தில் அதன் முகம் சலனமின்றி அகோரமாகிக் கொண்டு வந்தது.

*திசையறும் குருடன் குரலெட்டாச் செவிடன் மொழியுமற்ற ஊமை எல்லாமிழந்த திருடன் அவன்தான்...*

செவ்வக அமைப்பிலிருந்த குளியலறைக்குள் பதிவைத்து நுழைந் தான். உடைகளைக் களைந்துவிட்டு துண்டை இடுப்பில் கட்டினான். உலர்ந்த சோப்புக்கட்டியை எடுத்து முகர்ந்து பார்த்தான். பழகிய பழைய வாசனை வந்தது. கதவை உட்பக்கமாகத் தாழிட்டான். வாளியை எடுத்து குழாய் அடியில் வைத்தான். பிளாஸ்டிக் வாளியின் மஞ்சள் நிறம் கண் ணுக்கு மிக நெருக்கமாக இருந்தது. வாளியின் அடிப்பரப்பில் இரண்டு அங்குல நீளமுள்ள கறுப்புக் கோடு கிடந்தது. கீறலோ என சந்தேகித்து, குனிந்து சுட்டுவிரல் நுனியால் நிமிண்டிப் பார்த்தான். கோடு அங்கு மிங்கும் புரண்டது. தலைமுடி மெலிதாக விரலில் உறுத்தியது. அதை வெளியில் எடுத்துப்போட முயன்றான். அடியில் நுனியில் இடையில் எங்கும் பிடி கிடைக்காமல் அது பாடுபடுத்தியது. வெறுத்துப்போய் அந்த முயற்சியை விட்டுவிட்டான். குழாயைத் திருகித் தண்ணீரைத் திறந்து விட்டான். தூய்மையான தண்ணீர் புதுக்கண்ணாடியாகக் கொட்டியது. நீர் பட்டதும் இரண்டங்குலத் தலைமுடி சுருள்முடியாகி நெளிந்தது. அது பெண்ணின் நீளமான சுருள் கூந்தலின் ஒரு இழையின் இடைத்துண்டாக மாறிவிட்டது. பிடிபடவில்லை எப்படியென்று. குழாயைத் திருகி நீர் கொட்டுவதை நிறுத்தினான். நீரின் சலனம் ஓயக் காத்திருந்து உற்று நோக்கினான். நேர் கோடாகக் கிடந்த முடி நெளிந்தது. நீந்தவும் தொடங்கிவிட்டது. கால்வாசியே நிரம்பிய நீரில் தலைமுடி இங்கு மங்கும் படுவேகமாக நீந்தி நெளிந்து பாய்ந்தது. இடமிருந்து வலம், வலமிருந்து இடம், மேலிருந்து கீழ், கீழிருந்து மேல்... சமயத்தில் முழுவட்டமாக இலக்கற்ற தவிப்புடன் நீந்திய வண்ணமிருந்தது. அதன் நீந்தும் பாங்கில் இடையிடையே நடனத்துக்குள் நுழைந்து வெளியேறி யது. பல்லாயிரம் இசைக்கலைஞர்கள் கண்ணாடிச் சுவருக்கு அப்பால் நின்று அதன் நடனத்திற்கேற்ப, வியர்க்க விறுவிறுக்க வாத்தியங்களை மீட்டுகிறார்களோ என்று நினைக்கத் தோன்றியது. கால நேரம் குறித்த பிரக்ஞை வெகு தூரமாகிப் போனது. பழுப்பு நிற ஆகாயத்தில் ஒரு கருப்பு மின்னல் வழி தெரியாமல் வெறிபிடித்து அலைகிறதோ என்ற

எண்ணம் எழுந்தபோது தலை வலியில் தெறித்தது. கண்களை இறுக மூடி மூச்சை ஆழ இழுத்துவிட்டு இதயத் துடிப்பைச் சீர் செய்ய முயன்று எந்தப் பலனுமற்று மீண்டும் கண்களைத் திறந்து பார்த்தபோது தலைமுடி கருநாகத்தின் குட்டியாகிவிட்டது. பிடரி மயிர்கள் நெருப்பில் எரிந்து கருகுவதுபோல் தலை புல்லரித்தது. பாம்புக்குட்டி ஓய்வின்றி சோர்வின்றி நீந்த நீந்த அது வளர்ந்துகொண்டே வந்தது. நீர் பற்றாக்குறை ஏற்பட்டது. உடல் வளர வளர இடம் போதாமையால் வேகம் குறைந்து வந்தது. கண் நிறைய கருமை படர்ந்து விரிந்தது. வாளியின் மஞ்சள் நிறம் மின்மினிப் பூச்சிகளாக அவ்வப்போது மிளிர்ந்தது. அவன் கையைவிட பாம்பு தடிமனும் நீளமும் பெற்றுப் பெருத்து நெளுநெளுவென நெளிந்தபோது வாளி உடைந்து பிளந்தது. நிலம் அவனை சிறுதும் அசைய விடாமல் பிடித்துக்கொண்டது. கருநாகத்தின் நிறம், சொரசொரப்பான செதில்களின் அருவருப்போடு எங்கும் பற்றிப் பரவ குத்திருட்டு தைத்தது.

''பிரதர்... பிரதர்...'' குரல் கொடுத்தபடி பீட்டர் குளியலறைக் கதவைத் தட்டினான். எந்த பதிலும் இல்லை. ''பிரதர்... பிரதர்...'' என்று உரத்த குரலில் கதவை அடித்தான். குரலில் பதற்றம் கூடிவிட்டது. முகம் வியர்த்து வழிந்தது. புளிப்பைச் சுவைத்ததுபோல நெற்றியிலும் உதட்டிலும் கசங்கல். அவனைத் தனியாகக் குளிக்கவிட்டது எவ்வளவு பெரிய பைத்தியக்காரத்தனம் என்ற சுயவிசனம். இதற்கு முன் இப்படி ஒரு சிக்கலில் மாட்டியிராத பீட்டர் நிதானமிழந்து தவித்தான். அவன் கற்பனைச் சித்திரங்களை சடசடவென்று மாற்றிய விதியின் கைகளில் தன்னை ஒரு நூல்பொம்மையாக உணர்ந்தான்.

அவர்களுக்கான உணவை எடுத்து வந்த வேதசகாயம் பீட்டரின் நிலைமையைப் பார்த்து அதிர்ச்சியடைந்தார். கதவை தட்டோ தட்டென்று தட்டி மாய்ந்துகொண்டிருந்த பீட்டரை ஒதுக்கிவிட்டு கதவை பலம் கூட்டித் தள்ளினார். கட்டுமுட்டுமான அவர் உடலமைப்பு திடகாத்திரம் கொண்டிருந்தது. அனுமதி கேட்பதுபோல வேதசகாயம் பீட்டரின் கண்களை ஒருமுறை பார்த்துவிட்டு, வேகமாகப் பாய்ந்து தன் வலது புஜத்தால் கதவை மோதினார். கதவு இணக்கம் காட்டியது. செம்மறிக்கிடா முட்டுவதுபோல் கால்வரிசை வைத்து பின்னுக்கு வந்து மீண்டும் மீண்டும் மோதினார். கதவு 'திம் திம்' மென்றது. கடைசியில் சுண்டு விரலைவிட மெல்லிய அலுமினிய நாதங்கி தாக்குப்பிடிக்க முடியாமல் தெறித்தோட, கதவு உட்சுவரில் போய் அடித்து மோதித் திறந்தது.

அங்கே பாண்டி அசைவற்றுக் கிடந்தான். கால்களை மடித்து முழந்தாளிட்டிருந்தான். தொட்டியில் மாடு நீர் அருந்துவதுபோல அவன் தலை வாளிக்குள் நுழைந்திருந்தது. இடையில் கட்டிய துண்டு நழுவிக் கெண்டைக்கால்களில் விழுந்திருக்க நிர்வாணமாக அசைவற்றுக் கிடந்தான்.

கதவு திறந்த மகிழ்ச்சியும் காட்சி தந்த அதிர்ச்சியும் ஒருசேர பீட்டர் முகத்தில் தெரிந்தது. வேதசகாயம் இரண்டே எட்டில் பாண்டியை அடைந்து, அவன் முதுகில் கை வைத்துப் பார்த்தார். உயிரின் சலன மிருந்தது. நிம்மதி உள்ளங்கை வழியே உடலுக்குள் நிரம்பியது. பீட்டரை சைகையில் அருகே அழைத்தார். இரண்டு கைகளுக்கும் ஊடே கக்கத்தில் கை நுழைத்துத் தூக்கினார். அடியில் வெட்டிய வாழையாக பாண்டி துவண்டு தொங்கினான். பீட்டர் துண்டை எடுத்து பாண்டியின் இடுப்பில் இறுக்கிக் கட்டினான். பாண்டியின் முகத்தில் வலியின் சிறு சுழிப்பு தோன்றி மறைந்தது. கண்கள் மூடியிருந்தன. கையால் நீரை அள்ளி முகத்தில் தெளித்தார்கள். இரண்டு மூன்று விசைக்குப் பிறகு குகைக் கதவுகளாக இமைகள் மெல்லத் திறந்தன. வலிப்புக் கண்டதுபோல உடல் உதறி அடங்கியது. மேல் செருகிப் போயிருந்த கருவிழிகள் உரிய இடத்துக்கு இறங்கி வந்தன. ''சோளத் தட்டமாதிரி உடம்பு காத்தா இருக்கு, திராணியே இல்ல. வயித்து கொழப்பத்துலதான் பிள்ள மயங்கி சரிஞ்சிருக்கான். தலைக்கி ரெண்டு சொம்பு தண்ணிய ஊத்தி சோத்தப் போடு.'' வேதசகாயம் பீட்டரிடம் கவலையோடு சொன்னார்.

அவர்கள் இடுப்பில் துண்டு கட்டி பாண்டியைக் குளிப்பாட்டினார்கள். உடலில் ஈரம் பரவப் பரவ புலன்கள் புலர்ந்து அவன் பழைய நிலைக்கு சீக்கிரமாகவே திரும்பினான்.

பீட்டரும் பாண்டியும் பாய் விரித்து தரையில் அமர்ந்திருந்தனர். வேத சகாயம் பரிமாறினார். பாண்டி உறக்கத்திலிருந்து அப்போதுதான் எழுந்தவன்போல சோம்பல் அப்பி சுறுசுறுப்பின்றி மந்தமாக இருந்தான். சோறும் பருப்புக் குழம்பும், முட்டைகோஸ் கூட்டும் ரசமும் அப்பளமும் இருந்தது. பாண்டி சோற்றைப் பிசையாமல் அள்ளி அள்ளி வாயில் திணித்தான். சோறு தொண்டையில் வலியோடு இறங்கியது. அவன் வாயை அகலத் திறக்கும்போது அவன் அடிவயிறு பெரிய பள்ளமாக மாறியதை அவர்கள் கவலையோடு கவனித்தார்கள். வேதசகாயம் பாண்டியிடம் கூட்டு காய்கறிகளை அதிகமாக உண்ணும்படி அடிக்கடி கேட்டுக்கொண்டார். ''சோத்துல என்ன இருக்கு, ஒண்ணுக்கிருந்தா தண்ணியா போயிரும். காய்கறிகளை சவிச்சி விழுங்கு புள்ளோ! அதான் சத்து.''

''ஆமா பிரதர், கிழங்கும் சாப்பிடுங்க. உருளைக்கிழங்கு நல்ல சத்துள்ளது'' பீட்டரும் தன் பங்குக்கு ஆலோசனை சொன்னான். சாப்பாடு முடிந்ததும் பீட்டர் முகத்திலும் வேதசகாயம் முகத்திலும் நல்ல திருப்தி தென்பட்டது. பீட்டர் பாண்டிக்கு சில மாத்திரைகள் தந்தான். ஆற்றிய ஒரு தம்ளர் பாலுடன் பாண்டி அதைச் சாப்பிட்டான். கட்டிலில் படுத்துறங்கி ஓய்வெடுக்குமாறு அவர்கள் அவனைப் பணிவுடன் கேட்டுக்கொண்டனர். இன்னும் பணிவுடன் அதை ஒப்புக்கொண்டான்.

காலைத் திருப்பலி முடிந்து வந்த பீட்டர் அறைக்கதவைத் திறந்ததும் வியப்படைந்தான். கண்களில் விளக்கு எரிந்து அணைந்தது. பாண்டி முற்றிலும் புது மனிதனாக கட்டிலில் சாய்ந்து படுத்திருந்தான். பீட்டர் திருப்பலிக்கு புறப்படுகையில் பாண்டி அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தான். விழித்தெழ எப்படியும் இன்னும் மூன்று நான்கு மணி நேரம் ஆகலாம் என்று ஊகித்தான். பாண்டியோ எழுந்து காலைக்கடன் களை முடித்து, தலையை நன்றாக உலர்த்தி எண்ணெய் தேய்த்து வாரி, உடைகளைக் கசங்கலின்றி சீராக உடுத்தி, அமர்ந்திருப்பான் என்று சற்றும் எதிர்பார்க்கவில்லை. கதவு திறக்கப்படும் ஓசை வந்ததும் யோசனையில் மூழ்கியிருந்த பாண்டி கண்களைத் திறந்து பார்த்தான். அவர்கள் கண்கள் சந்தித்தன. பீட்டருடையவை ஆச்சரியத்துடனும் பாண்டியினுடையவை சிநேகத்துடனும். பாண்டி புன்முறுவல் பூத்தான். அந்த மெல்லிய சிரிப்பு பீட்டருக்கு நம்பிக்கையூட்டுவதாக இருந்தது. திருப்பலி முடிந்தபின் பாதிரி பீட்டரிடம் தேவனின் விருந்தாளியைப்பற்றி விசாரித்தார். நடந்த வற்றை விவரித்து நம்பிக்கைக் குறைவான ஒரு அபிப்பிராயத்தைத்தான் சொல்லியிருந்தான். அவன் கணிப்பு இப்போது தலைகீழாகத் தொங்கியது.

''குட்மார்னிங் பிரதர். எப்படியிருக்கு உடம்பு? உற்சாகமா இருக்கா?''

பீட்டர் உள்ளே வந்து ஜெபமாலையை அலமாரியில் வைத்துவிட்டு பாண்டியோடு கட்டிலின் மறுவிளிம்பில் அமர்ந்தான். பாண்டி மைய மாக ஒரே புன்னகையை வெளிப்படுத்திக் கொண்டிருந்தான். வேத சகாயம் பாத்திரங்களில் தோசையும் சட்னி சாம்பாரும் கொண்டுவந்தார். அவர் கண்களை ஒதுக்கி பாண்டியை ஒரு மார்க்கமாக நோட்டமிட்டார். முன்னெப்போதோ அவரை பாண்டி பார்த்திருந்த ஞாபகம் வந்தது. எவ்வளவு நாட்களுக்கு அல்லது எத்தனை ஆண்டுகளுக்கு முன்பு என்பதைக் கணக்கிட முடியவில்லை. பாண்டி அவரை வெகுளியாக கண் ணொளிரப் பார்த்தான். அப்போது அவன் நிச்சயமாக ஒரு அழகனாகத் தோன்றினான். மீசை வரி குறுகுறுப்புடன் அடர்ந்திருந்தது. இரண்டு வாரத் தாடி அடர்ந்திருந்தது. பீட்டரைப் பார்த்தார் வேதசகாயம். 'நிலமை எப்படி' என்பதை கண்ணால் விசாரித்தார், ''தோசை சாப்பிடுங்க. காப்பி எடுத்துட்டு வாரேன்'' என்றவர் திரும்பிப் போனார்.

''சாப்பிடலாமா பிரதர்?''

தோசைப் பாத்திரத்தை ஒரு நோட்டம் விட்டுவிட்டு இணக்கமாக தலையசைத்தான் பாண்டி.

கட்டிலில் ஒரு மேசை விரிப்பை விரித்து அமர்ந்தபடியே இருவரும் டிபன் சாப்பிடத் தொடங்கினர்.

சட்டினிக்கு உப்பு பத்துமா என்று சாதாரணமாகக் கேட்பதுபோல்

''உங்க பேர் என்ன பிரதர்'' என்று கேட்டான் பீட்டர்.

இதைக் கொஞ்சம் முன்னதாகவே எதிர்ப்பார்த்தவன்போல் பாண்டி சற்றும் யோசிக்காமல் ''சாரோன்'' என்றான்.

பீட்டர் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. முதல்முதலாக அவன் வாய் திறந்து பேசிவிட்டான். எனவே பெயரை கவனிக்காமல் விட்டுவிட்டான் பீட்டர்.

''என்ன பேரு பிரதர்?''

''சாரோன்.''

''வெரி நைஸ் நேம். நீங்களும் அப்போ கிறிஸ்தவர்தான்.''

''ஆமா, ரோமன் கத்தோலிக்.''

''சர்ச்சிக்கு போவிங்களா?''

''போவேன்.''

''ஒரு மந்திரம் சொல்லுங்க பாப்போம்.''

''விசுவாச மந்திரமா?''

''சின்ன மந்திரமா சொல்லுங்க போதும்.''

''அருள் நிறைந்த மரியே வாழ்க. கர்த்தர் உம்முடனே. பெண்களுக்குள் ஆசிர்வதிக்கப்பட்டவள் நீயே. உனது திருவயிற்றின் கனியான ஏசுவும் ஆசீர்வதிக்கப்பட்டவரே.''

''போதும் போதும். இன்னொரு தோசை வச்சிக்கிங்க. என் பேர் பீட்டர். மடத்துல ஊழியம் பண்ணிக்கிட்டிருக்கேன். அப்பா அம்மா சின்ன வயசுலேயிருந்தே கிடையாது. ஊர் பேரும் தெரியாது. எல்லாம் ஏசுவே. எனக்கு எல்லாம் ஏசுவே'' இதைக் கூறும்போது பீட்டரின் முகம் கவிழ்ந்திருந்தது. ரெண்டு பேருக்கு மேல் யாரும் கேட்கமுடியாத அளவுக்கு குரல் தாழ்ந்திருந்தது. பாண்டியும் அப்படியே தலை தாழ்த்தியிருந்தான்.

''உங்க ஊரு?'' என்று மறுபடியும் தொடங்கினான் பீட்டர்.

''திருச்சி.''

''அம்மா அப்பா?''

''இருக்காங்க.''

''பின்ன எதுக்கு... இங்கே இப்படி... சாரோன்?''

அம்மா அப்பா தனக்கிருந்திருந்தால் தன் வாழ்க்கையின் போக்குகள் இன்னும் மேம்பட்டதாக இருந்திருக்குமோ என்ற எண்ணம் பீட்டர் பேச்சில் கவலையாக வெளிப்பட்டது.

''சும்மா சின்ன சண்டையில கோவுச்சுட்டு வந்துட்டேன்.''

''அம்மா அப்பா முகம் ஞாபகமிருக்கா?''

''நல்லாவே.''

''ஊருக்கு போற தடம் நெனைவிருக்கா?''

''குழப்பமொண்ணுமில்ல.''

''வீட்டுல கோவுச்சுட்டு வெளியே வந்ததுல என்ன கத்துக்கிட்டீங்க?''

''வீட்டுக்குள்ளயே ஒரு உலகமிருக்கு. அதுக்குள்ள வாழப் பழகிக் கிட்டா பாதகமில்லை. உலகத்தையே ஒரு வீடாக்க பிரயாசைப் பட்டா அலைக்கழிவுதான்.''

''தத்துவமா பேசுறீங்களே!''

''யாரோ எப்பவோ சொன்னது.''

வேதசகாயம் காப்பியும் பாலும் கொண்டுவந்தார். பாண்டியிடம் பாலையும் பீட்டரிடம் காப்பியையும் நீட்டினார்.

அவர்கள் சாப்பிட்டு முடித்திருந்தார்கள். பேசவும் மேற்படி ஒன்று மில்லை என்றிருந்தது.

''பிரதர் பேரு சாரோன்'' பீட்டர் வேதசகாயத்திடம் அறிமுகப்படுத் தினான். பாண்டியிடம் ''பிரதர் பேரு வேதசகாயம், ரொம்ப காலமா இங்கே இருக்கார்'' என்றான்.

''இவங்களை எங்கேயோ பாத்திருக்கேன்'' என்று தயங்கி இழுத்து சொன்னான்.

''ஆமா... திருழா கடையில ஜவ்வு முட்டாய் விக்கும்போது பாத்து ருப்பே'' வேதசகாயம் சுண்டுவதுபோல் பதிலளித்தார். அந்த தொனியி லிருந்த எள்ளல் பாண்டிக்குள் எதையோ சிலும்பிவிட்டது.

அவன் பாலை கவனமாக உற்சாகமின்றிப் பருகினான். பார்வையை திறந்திருந்த ஜன்னல் பக்கம் திருப்பியபோது அதுவரையில் அங்கிருந்த அவள் முகம் வெடுக்கென்று விலகியது. பால் தம்ளர் கையிலிருந்து நழுவாமல் எச்சரிக்கையாகப் பற்றிப் பிடித்துக்கொண்டான். மனசுக்குள் தம்ளர் சப்தத்துடன் விழுந்து பால் சிந்தி உருண்டோடியதை ஒன்றும் செய்ய முடியவில்லை.

பாதிரியாரின் பங்களா வரவேற்பறையில் பாண்டி அமர்ந்திருந் தான். பீட்டர் பங்களாவுக்குள் பாதிரியை சந்திக்கச் சென்றிருந்தான். பிரம்பு நாரில் பின்னிய மேலும் சில நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. வெளிச்சம் ஊடுருவம் மெல்லிய திரைச்சீலைகள் இரண்டு பக்கமும் ஜன்னலில் தொங்கின. சுவர்களில் வரிசையாக வேத வசனம் எழுதிய பலகைத் தட்டுக்கள் மாட்டப்பட்டிருந்தன. பாண்டி இரண்டு ஜன்னல் களையும் மாறி மாறி கண்களால் குறி வைத்துக் கொண்டிருந்தான். அவள் முகத்தை எதிர்பார்த்திருந்தான். காற்றில் திரைச்சீலைகள் அசையும்

போதெல்லாம் அவனுக்குள் ஒருவித படபடப்பு ஏற்பட்டு அடங்கியது. கற்பனை வெள்ளத்துக்கு இடப்பட்டிருந்த மடை வாசலில் வினோத எண்ணங்கள் கசிந்தோடத் தொடங்கியிருந்தன.

''காட் ப்ளஸ் யூ மை சன்'' முற்றலான குரல் வந்த திசையில் தலையைத் திருப்பியபோது பீட்டரும் ஒரு பெரியவரும் வரவேற்பறைக் குள் நுழைந்து விட்டிருந்தார்கள். பெரியவர் மலர்ந்த முகத்துடன் பாண்டியைக் கூர்மையாகப் பார்த்தார். கண்களில் சந்தோஷம் பளபளத் தது. பிரம்பு நாற்காலியை விட்டு பாண்டி எழுந்து நின்றான். அவன் தோற்றத்தில் கணிசமான தெளிவைக் கண்ட பாதிரியார் ''ப்ரைஸ் தி லார்ட்'' என்றார். பாண்டியை அமரும்படி சைகை செய்தார். ''சாரோன், இவுங்க யார்னு தெரியுதா'' என்று பீட்டர் பாண்டியிடம் கேட்டான். பாண்டி பாதிரியை அடையாளம் காணத் திணறினான். ''நடந்ததெல்லாம் ஒரு கெட்ட கனவாக மறந்து போகட்டுமே'' என்று பீட்டரிடம் கூறியபடி பாதிரி நாற்காலியில் அமர்ந்தார். ''இவுங்க ஃபாதர் விஜய் அமல்ராஜ்'' நின்றுகொண்டே பீட்டர் மீண்டும் சொன்னான். அது அவனுக்கு ஒரு கடமையாக இருந்தது. பாண்டி சிறு புன்னகையுடன் ஒப்புக்கொண்டான்.

''சாரோன், அப்பா என்ன பண்றாங்க?'' பாதிரி தலை சாய்த்துக் கேட்டார்.

''ரிட்டயர்ட் ஆயிட்டாங்க.''

''அம்மா?''

''அம்மா வீட்ட பாத்துக்குறாங்க.''

''கூடப் பிறந்தவங்க இருக்காங்களா?''

''ரெண்டு அண்ணன்.''

''சாரோன் கடைக்குட்டி. வீட்டுக்கே செல்லம். அப்படித்தானே''

''.........''

பாதிரி பீட்டரைப் பார்த்து பூரிப்போடு சிரித்துவிட்டு தொடர்ந்தார், ''கடவுள் உங்கள் குடும்பத்தை ஆசிர்வதித்து அருளட்டும்.'' பாதிரி பொறுப்பான தொனியில் கனிவான வார்த்தையைத் தேர்ந்தெடுத்து, வாலிபத்தின் போக்கு சமயத்தில் ஒரு சக்கரமாக உருண்டு ஓடுவதும், சில சமயங்களில் நின்ற இடத்திலேயே நின்று சுற்றிவிட்ட நாணயமாகச் சுழல்வதுமாக மனிதனை எப்படி குழப்பிப் போடுகிறது என்பதை விளக்கி விவரித்து நீளமான உரை நிகழ்த்தினார். அருகே பீட்டர் அதற் கெல்லாம் தப்பாமல் தலையாட்டிக்கொண்டு நின்றான். பாண்டியின் கண்கள் ஜன்னல் திரைச்சீலைகளின் இடைவெளிகளுக்கு தாவியபடியே இருந்தன. அவர் பேச்சுக்கு செவிசாய்ப்பதுபோல் நடிக்கத்தான் முடிந்தது. மனமோ அவள் முகத்துக்கு பொறி வைத்துக் காத்திருந்தது.

பாண்டியை ஊருக்கு பத்திரமாக அனுப்பி வைக்கும் பொறுப்பை

பீட்டரிடம் ஒப்படைத்தார். ஊருக்குப் போனதும் தனக்கு கடிதம் எழுதுமாறு கேட்டுக்கொண்டார். வியாகுல மாதா படம் போட்ட காலண்டர் ஒன்றும், புதிய ஏற்பாடு பைபிள் ஒன்றும் பரிசளித்தார். முடிந்தால் குடும்பத்தோடு ஒருமுறை தேவாலயத்துக்கு வந்து போக வேண்டும் என்று தம் விருப்பத்தை தெரிவித்துக்கொண்டார். நெற்றியில் சிலுவை வரைந்து இன்முகத்துடன் வழியனுப்பி வைத்தார். தனக்கிட்ட பணியை பீட்டர் அக்கறையாகச் செய்து முடித்தான்.



*திசையறும் குருடன் குரலெட்டாச் செவிடன் மொழியுமற்ற ஊமை எல்லாமிழந்த திருடன் அவன்தான்... அஞ்சல்காரனிடம் அன்றைய தபாலில் மடித்து ஒட்டிய மஞ்சள் வெயில் வேண்டி கொஞ்ச தூரம் கெஞ்சிக்கொண்டு போனானே அவனேதான், காலையின் தோள்களிலும் மாலையின் கால்களிலும் வடிந்த பாடல்களைப் பிடித்து ராகங்களைக் கொறித்தும் குரல்களைப் பருகியும் பசியாறினானே அவனேதான். குளிர் மாதத்தின் ஓரத்தில் ஒடுங்கி நின்ற வாரத்தின் விறைத்த கிழமைகளில் மண்டியிட்டு தீக்கிளிகள் புனைந்து வானத்தைத் திறந்தானே அவனேதான், அதுகாறும் கடைப்பிடித்த நடையுடைந்து அடைமழையில் பாய்ந்தோடும் ஆறாகி வந்தானே அவனேதான், நீர்க்குமிழி மூச்சுவிடும் மெல்லிய வெடிப்போசை கேட்கும் ஆசையில் அடுத்தடுத்து மிதந்து செல்லும் ஆளற்ற முத்தங்கள் உடையும் வரை இமைக்காது இறந்து நிற்பானே அவன்தான் அவனேதான் காரணமெதுவும் தெரிவிக்காமல் மறுபடியும் வெளியேறி விட்டானாம் மரணத்தை விட்டு .*



பேருந்து இரைச்சலோடு விரைந்து சென்றது. வேகம் உந்தித் தள்ளத் தள்ள அது தூரம் விழுங்கிக் கொண்டிருந்தது. இடையிடையே சக்கரங்களுக்கு விக்கலெடுத்தது. ஜன்னல் ஓர இருக்கையில் சாய்ந்து அமர்ந்திருந்தான் பாண்டி. ஜன்னல் கண்ணாடி அவன் வலது கண் பக்கம் திறந்திருந்தது. கருப்பு அருவிபோல நீளும் தார்ச்சாலை இருளில் தெரியவில்லை. தூரத்தில் வெளிச்சப் புள்ளிகள் நகர்ந்தன. மரங்கள் பேருந்தின் ஒளிபட்டு பச்சைப் பூதங்களாக தோன்றித் தோன்றி மறைந்தன. காற்று குளிர்ச்சியாக முகத்தில் மோதியது. சீரற்றுப் பாய்ந்தது. பக்கத்து இருக்கையில் அமர்ந்திருந்தவர் அயர்ந்து உறங்கினார். அவர் மூக்கு மட்டும் எடுப்பாக விழித்திருந்து வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தது. ஜல் ஜல் என்று மணிச் சத்தம் ஒலித்தது. மூக்கிலிருந்து வெண்கல ஒலி கிளம்புவது விநோதமாக இருந்தது. மூக்குக்கடியில் மீசையை வழித்து மேலுதட்டின் விளிம்பில் கோடு போட்டதுபோல் ஒதுக்கி வைத்திருந்தார். பஸ் குலுக்கத்தில் எந்நேரத்திலும் அந்த ரோமவரி உதிர்ந்து விழுந்துவிடும்

அபாயமிருந்தது. விழித்ததும் முகத்தைத் தடவிப் பார்த்துவிட்டு மீசையை யார் எடுத்தது என்று விசாரிப்பாரோ? அதுவும் குறிப்பாக பக்கத்து இருக்கைக்காரனைத்தான் சந்தேகித்து வம்புக்கிழுப்பாரோ என்று அச்சம் ஏற்பட்டது. 'விழுந்தால் எங்கே போய்விடப் போகிறது! மடியில் விழுந்து கிடக்கப் போகிறது விடு' என தனக்குத்தானே சொல்லிக்கொண்டு பார்வையையும் கவனத்தையும் முகத்தையும் வலப்பக்கம் திருப்பிக் கொண்டான். ஜல் ஜல் ஓசை துரத்தியபடியிருந்தது. 'இரண்டு குதிரைகள் பூட்டிய வில்வண்டி பேருந்தை தொடர்ந்து வருகிறதோ...' ஜன்னலுக்கு வெளியே தலையை நீட்டிப் பின்னால் நோட்டமிட்டான். இல்லை, காற்று தலைமுடியைக் கன்னாபின்னாவென்று கலைத்திருந்தது. தலையை உள்ளுக்கிழுத்து அவசரமாக பக்கத்து இருக்கைக்காரரின் கோட்டு மீசையைப் பார்த்தான். அது இப்போதும் தற்கொலை விளிம்பில்தான் நின்றுகொண்டிருந்தது. 'எக்கேடும் கெட்டுப் போகட்டும்' என நினைத்த வாறு இருக்கையில் சாய்ந்து கண்களை மூடி உறங்க முயற்சித்தான். நெஞ்சுக்குள் கோபம் அனலாக மூண்டது. 'சிறுக்கி' மிகக்கடுமையான கெட்டவார்த்தைபோல வாய் திறந்து உதடு அசைய சொல்லிக்கொண் டான். 'நீ எங்க போனாலும் விடப் போறதில்லடி' என உள்ளுக்குள்ளே முணுமுணுத்தான். முகத்தைவிட சற்றே சிவப்பான உதடுகளும், கூந்தலைவிட சற்றே கருப்பான விழிமணிகளும் மின்னி மிதந்து மறைந்தன.

'ஆமா, சிறுக்கினுதான் சொன்னேன். நான்தான்டி சொன்னேன். இன்னும் கொஞ்ச நாள்தான் உனக்கு டைம். வாழ்க்கைக்கும் நாயா அலைஞ்சிகிட்டிருக்க என்னால முடியாது. நீ கெடைக்கல, சனியன் ஒழிஞ்சான்னு தலைமுழுகிடுவேன்.'

முத்துப்பற்கள் அலட்சியமாகத் துலங்கி பாலில் தாளித்த புன்னகை பளிச்சென்று முகத்தில் தெறித்தது; கெண்டை நரம்புகள் வெடுக்கென்று துண்டிக்கப்பட்டதுபோல் சிலிர்த்தான். சதங்கை சத்தம் ஜல் ஜல் ஜல்லென்று அவன் காதோரம் ஒலித்தது. திடுக்கிட்டு கண் விழித்தவன், நிமிர்ந்து தலை திருப்பி வெளியே எட்டிப்பார்த்தான். வண்டியில் பூட்டிய இரண்டு வெள்ளைக் குதிரைகள் பேருந்தை முந்திச் செல்ல பாய்ந்து கொண்டிருந்தன. பதம் குலையாத குதிரைகள். திடகாத்திரமான தோற்றம். இரண்டும் ஒரே வார்ப்பு. பிடரி மயிர்க்கற்றையும் வாலும்கூட ஒரே லயத்தில் ஆடின. கால் குளம்பொலித் தாளம் மிகத் துல்லியமாக எழுந்தது. பேருந்தின் இரைச்சலும் வேகமும் மெல்ல மெல்ல பம்மியது. இரண்டு குதிரைகளின் இடது கண்களை மட்டுமே அவனால் பார்க்க முடிந்தது. அவை கருப்பு வைரங்கள் போல மின்னின. நிலாதானோ என்று நினைக்கும் வண்ணம் விழிப்பாவையில் தங்கமஞ்சள் கீற்று நெளிந் திருந்தது. குதிரைகளின் ஓரப்பார்வை அவன் மீதிருந்தது. வில்வண்டியின் கூரை நனைந்த பாசி நிறத்திலிருந்தது. வண்டியைச் செலுத்தியவன்...

செலுத்தியவனா செலுத்தியவளா என்று பார்த்தறிய முடியவில்லை. உடல் முழுக்க நீலப் பட்டுக் கம்பளத்தால் போர்த்தியிருந்தான். அல்லது இருந்தாள். முகம் எதிர்ப்புறம் திரும்பி விறைத்திருந்தது. கடிவாளத் தோல் கயிற்றை நெஞ்சுக்கு ஏந்திப் பிடித்து சுண்டிச் சுண்டி இழுத்துக் கொண்டிருந்தான். குதிரைகளோடு பேருந்தால் போட்டி போட ஏலவில்லை. அவசியமும் இல்லைபோல. குதிரைகள் முன்னேறின. ஓரப் பார்வை கொஞ்சம் கொஞ்சமாக விலகியது. குதிரைவண்டி பேருந்தை முந்தி விரைந்தபோது வண்டியின் பின்புறமும் உட்புறமும் தெளிவு பட்டது. திகைத்தான். வில்வண்டியில் உள்ளே மெத்தை போன்ற இருக் கையில் தலையணைத் திண்டில் ஆசுவாசமாகச் சாய்ந்தபடி பாண்டி அமர்ந்திருந்தான். நம்ப முடியவில்லை. பாண்டியின் மூளை நரம்புகள் பற்ற வைத்த பட்டாசுத் திரிகள்போல சுருசுருத்தன.

இங்கே இருக்கும் அவன் எப்படி அங்கேயும் இருக்கிறான்? இவன் அவனைப் பார்ப்பதுபோல அவன் இவனைப் பார்க்கிறான். இல்லை இல்லை, அவன் இவனைப் பார்க்கிறான். அவன் அவனைப் பார்க் கிறான். மெலிந்த தோற்றம். முகத்தில் அரும்பும் மீசை. கண்களில் கசியும் காதல். சீராக வாரப்பட்ட தலை. ஒட்டிக்கொண்டேயிருக்கும் சிப்பி உதடுகள்.

குதிரைவண்டியின் வேகம் மேலும் அதிகரித்தது. கைக்கெட்டு மானால் அதை நீட்டி அந்த வில்வண்டியைப் பிடித்து இழுக்க வேண்டும் என்ற வெறி திரண்டது. 'இல்லை இது வில் வண்டியில்லை. நிலைக் கண்ணாடி. வில்வண்டி வடிவில் வடிவமைக்கப்பட்ட முகம் காட்டும் கண்ணாடி. சரி அப்படித்தான் என்று வைத்துக்கொண்டாலும் பேயைப் போல பிளிறிக் கொண்டோடும் பேருந்தை முந்திச் செல்லும் இந்தக் கண்ணாடி, குதிரைகளின் கண்முடித்தனமான மூர்க்க ஓட்டத்தில், இழுப் பில், குலுக்கலில் எப்படி உடைந்து சுக்குநூறாக நொறுங்கிப் போகாம லிருக்கிறது?

வில்வண்டிக்குள் அமர்ந்திருந்தவனைக் கூர்ந்து பார்த்தான். அவன் விழி தாழ்த்தாமல் பதிலுக்கு அப்படியே பார்த்தான். பிறகு உதட்டோரத் தில் ஒரு சின்ன சிரிப்பை சுழிய விட்டான். அப்போது இவன் வாய் வியப்பில் பிளந்திருந்தது. சட்டென்று முளைத்ததுபோல் வண்டிக்குள் அவள் உருவம் தோன்றியது. கைகளால் கட்டிய உயர்ந்திருந்த முழங்கால் களில் முகத்தை வைத்துக்கொண்டு அவனையே பார்த்தாள். கண்கள் பனித்திருந்தன. ''சாரா...'' என்று கூவியபடி பஸ்ஸிலிருந்து குதிப்பதற் காக எழுந்து ஓடினான். பேருந்து நிறுத்தப்பட்டது. சக பயணிகள் பேருந் துக்குள் பாண்டியைத் துரத்தித் துரத்திப் பிடித்தார்கள். அடுத்த நிறுத்தத்தில் பேருந்திலிருந்து பாண்டியை இறக்கி ஓரிடத்தில் ஒப்படைத்துவிட்டு நடத்துநரும் பயணிகளும் கிளம்பிச் சென்றனர். அது சாலையோரக் காவல் நிலையம்போலத் தெரிந்தது.



ஓசைகள் வடிந்தன. மழை ஓய்ந்ததுபோல் பலதரப்பட்ட ஒலிகள் செவிகளில் விட்டு விட்டு சொட்டின. எல்லாம் தெளிவற்றவை. பகல் சரே லென்று கைமாறிவிட்டது. வெளிச்சத்தின் அடையாளம் மொத்தமாகத் தொலைந்து போய்விட்டது. காற்று மெல்லிய சீற்றத்துடன் சூழ்ந்திருந்த இருளுக்குள்ளிருந்து மீண்டு வந்தது. ஜிம்மி சற்று முன் அவனருகே நின்றுகொண்டிருந்தது. நிம்மதியற்ற காவல்காரனைப்போல் நாலு திசை யிலும் தலையை உயர்த்தி காது மடல்கள் விடைக்க அது பார்த்துக் கொண்டிருந்தது. கண்ணிமைக்கும் நேரத்துக்குள் அதை நிலம் விழுங்கி விட்டது. நனைந்த அரிசித் தவிடுமேல் பாலைக் கொட்டியது போன்ற அதன் நிறம் சொற்ப நேரம் நினைவில் நிழலாடி உலர்ந்து மறைந்து விட்டது. கண்களிரண்டையும் இறுக மூடி வைத்தான்.

நீளமான ஆளுயர மதில் சுவரில் பல வண்ணங்களில் எழுதப்பட்டி ருந்த விளம்பர வாசகம் மிதந்தெழுந்து தெளிவடைந்தது. சாரா அழைக் கிறார். கருப்பு நிறப் பின்புலத்தில் மஞ்சளும் சிவப்பும் கலந்து வலப்பக்க மாகச் சாய்ந்திருந்த அழகான எழுத்துக்கள் அவனுக்குள் சிலிர்ப்பூட்டின. தேதியைக் குறிக்கும் எண்கள் பதார்த்தத்தில் குத்திவைத்த வெள்ளி முள்கரண்டிகளாக மின்னின. ஒன்றும் விளங்கவில்லை. அதனால் பெரிய கவலையொன்றும் தோன்றவில்லை. சாரா என்ற இரண்டெழுத்தில் மனத்தை நெய்து விட்டிருந்தான். எழுத்துக்கள் பரஸ்பரம் வழிவிட்டு குறுக்கும் மறுக்குமாக நடமாடுவது போன்று சலனம் ஏற்பட்டது. 'வை.கோ. ஜுவல்லர்ஸ்' என வாசகம் உருமாற்றம் கொண்டது. கட்டற்ற அதிர்ச்சியின் அலைகளை உணர்ந்து துடித்தான். பின்பு விளம்பர வாசகம் பெரும் குழப்பத்துக்கு ஆளாகிவிட்டது. 'வை.கோ. அழைக்கிறார்' 'சாரா ஜுவல்லர்ஸ்' என மாறி மாறிச் சுழன்றது. சங்கேதக் குறிப்பு எல்லோருக்கு மானதல்ல. அது பிரத்தியேகமானது. உயிரோடு உயிர் ஒன்றிய மனித உள்ளங்களுக்குள் பரிவர்த்தனை செய்து கொள்ளப்படுவது. எப்படி அது ஒரு குட்டிச் சுவரில் ஸ்திரமாக இருக்க முடியும்? 'சாரா அழைக்கிறார். இல்லை. என் சாரா அழைக்கிறாள்' தன்னைத் தானே தேற்றிக்கொண்டு கண்களைத் திறந்தபோது இருள் வெளிறியிருந்தது. தூரத்துச் சாலையில் புள்ளி புள்ளியாக வெளிச்சம் ஊர்ந்தது.

பாண்டி ஒரு பந்தலுக்கடியில் அமர்ந்திருந்தான். அவனுக்கடியில் சிறிய மரப்பெஞ்சு முளைத்திருந்தது. எதிர் பெஞ்சில் அறிமுகமில்லாத மனிதர்கள் அமர்ந்திருந்தார்கள். காலைப் பத்திரிகையோ மாலைப் பத்திரிகையோ கசங்கி மூலையில் கிடந்தது. அது ஒரு டீக்கடை என்பதை அவதானிக்க சிறிது நேரம் பிடித்தது. அறிந்த வரையில் அது டீக்கடைதான் என்பதில் கொஞ்சம் நிம்மதி ஏற்பட்டது. அதை வெளியரங்கமாய்க் காட்டிக் கொள்ளாமல் அடக்கத்தோடு தலையைக் கவிழ்த்துக் கொண் டான். வேகமாய்ச் செல்லும் பேருந்தின் ஜன்னலோர இருக்கையில் அமர்ந்து சாலையோரத்தைப் பார்த்ததுபோல் நிலம் வேகமாக நழுவிச்

சென்றது. ''சாமி காப்பி சாப்பிடுமா?''

எதிர் பெஞ்சில் அமர்ந்திருந்த மூவரில் ஒருவர் விசாரித்தார்.

''சாமி... உங்களைத்தான்! சாமி காபி டீ சாப்பிடுமா?'' மறுபடியும் அதே குரல் சற்று தொனியுயர்த்திக் கேட்டது. யாரந்த சாமியென்று அறியும் பொருட்டு நிமிர்ந்தான். தாடிதான் தன்னைச் சாமியாக்கியதோ! மூவரும் அவனையே மையமாகப் பார்த்தார்கள். சிரித்தார்கள். சிநேகமாகத்தான் என்றாலும் சிறு தடுமாற்றம் உண்டானது. ஒரு கணம் அவர்கள் பரிகாசக்காரர்கள்போல் தோற்றமளித்தனர். போலிஸால் தேடப்படும் ரவுடிகள் போலுமிருந்தார்கள். ஒரே பள்ளியில் ஒரே வகுப்பில் சிரிக்கப் பயின்றவர்கள்போல் பல்லைக் காட்டினார்கள். இடது ஓரமாக அமர்ந்திருந்தவன் பால் பண்ணை வைத்திருப்பான்போலும். அவன் இளிக்க இளிக்க பல் வளர்ந்துகொண்டேபோய் கீழுதட்டைத் தாண்டியது. பதிலொன்றும் கூறாமல் அவர்களையே உறுத்துப் பார்த்தான். சில நொடிகளிலேயே அவர்கள் வளர்ந்த குழந்தைகளாகி அன்பும் பரிவும் நிறைந்தவர்களாக மாறிவிட்டார்கள். அவர்களை உதாசீனப் படுத்த முடியாததோர் உணர்வு கனிந்துவிட்டது.

மரணப் படுக்கையிலிருக்கும் சூரியனைப்போல அந்தரத்தில் ஒரு மின்விளக்கு எரிந்தவாறு தொங்கிக்கொண்டிருந்தது. அரைகுறை வெளிச்சத்தில் ஒருவனது சுட்டுவிரலின் குழைவு கண்ணாடிப் பாத்திரத்தில் சூடான பானத்தை அவனுக்கு தருவித்தது. தடுப்பு அரண்போல எழுப்பப்பட்டிருந்த திண்டுச் சுவருக்குப் பின்னாலிருந்து வந்து ஒருவன் அதைத் தந்துவிட்டுப் போனான். அவனது அழுக்குப் படிந்த முண்டா பனியனில் சோப்புக் கட்டி படம் போட்டிருந்தது. தாடை நரம்புகளைப் பிடரிவரை இறுக்கிப் பிடித்திழுத்த அந்த பானம் சுவையாக இருந்தது. அதில் இனிப்பு ருசி மிகுதியாக இருந்தது. பருகியதும் மிதமிஞ்சிய சூடு உதடுகளை வேகவைத்து உணர்விழந்து போகச் செய்தது. ஆனாலும் அந்த மிடறுகளுக்காக அடிவயிறு ஏங்கியதுபோல் வேகமாக அருந்தினான்.

கண்ணாடிப் பாத்திரத்தின் வாய் விளிம்பு காதல் வயப்பட்ட பெண்ணின் மெலிந்த மேலுதட்டை வெதுவெதுப்புடன் நினைவூட்டியது. அவள் தந்த முதல் முத்தம் ஒரு நெடிய திடகாத்திரமான மின்னலாக உச்சியிலிருந்து உள்ளங்கால்வரை நெளிந்திறங்கியது. திக்குமுக்காடினான். சிரித்தான். சிரசிலடித்தது. ஒரு கையால் தலையைத் தட்டிக் கொடுத்தான். மட்டையால் விளாசப்பட்ட பந்தாக இதயம் பறந்து போய் எங்கோ மோதிவிட்டுத் திரும்பி வந்தது.

பருகுவதற்கு கொஞ்சம் மீதமிருந்தது. பாண்டி அந்த உதடுகளை நினைவுகூர்ந்தான். தடுக்கவே முடியாமல் அவளது கண்ணொளியும் குறுகுறுப்போடு பாய்ந்தது. மிருதுவான அந்த உதடுகள் திரட்சியானவை. முத்தமிடும்போதும்கூட முழுமையற்ற சின்னச் சின்ன சிணுங்கல்

ஒலிகள். செழுமையான அவ்விதழ்கள் இத்தனை நலிந்து மெலிந்தவை அல்ல. அல்லவே அல்ல. இது வறட்சியான நினைவின் மோசமான கற்பிதம்.

ஆறிப்போன பானத்தை தூரக்கொட்டிவிட்டு ஒப்படைத்தான். ''போதுமா சாமி, சாமி வேற எதும் சாப்பிடுமா?''

'சாமியா... யார் சாமி? நானா...' என்பதுபோல் அவர்களை ஒரு பார்வை பார்த்தான்.

''பன்னு இருக்கு. பழம் இருக்கு. வேர்க்கடலை மிட்டாய் இருக்கு.''

''எனக்கு எதும் வேண்டாம். நான் அதெல்லாம் சாப்பிடுறதில்ல. அப்புறம் நான் சாமி இல்ல.'' பக்குவமாகச் சொன்னான்.

''சித்தம் போக்கு சிவன் போக்குனு சொல்லியிருக்காங்களே சாமி...'' இதைச் சொல்வதற்கு ஒருவர் தன் கையை தலைக்குமேலே கொண்டுசெல்ல வேண்டியதாயிற்று. பதிலுக்கு அவரைப் பார்த்து அடியோட்டத்தில் கறாராக ''நீங்கதான் சாமி'' என்றான்.

''என்ன இப்படி சொல்லிட்டிய! நாங்கள்லாம் ஆசாமிக சாமி'' என்றவன் பெரிதாகச் சிரிக்க வேண்டியிருந்ததால் கொஞ்ச நேரத்துக்கு வாயை மூட முடியவில்லை. பாண்டி தன்னைத்தானே மேற்பார்வையிட்டான். தோற்றம் ஒன்றாக இருக்க இவர்களுக்கு வேறொன்றாகத் தெரிகிறதோ! நாசி நுனியில் எரிச்சல் ஏற்பட்டது. புறப்பட்டுவிடலாம் இங்கிருந்து என்ற எண்ணத்துக்கு வந்தான். அவர்கள் பரிகாசம் முற்றிவிடுவதற்கு முன் கடந்து போய்விட முயன்றான். சட்டென்று எழுந்தான்.

அவசரமாக ஒருவன் குரலில் நாடகத் தன்மையுடன் கேட்டான், ''சாமி கோவிச்சுக்கிட்டோ? எங்க கிளம்பிடுச்சி?''

''வானத்துக்கு.''

ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டனர்.

''நடந்தா, பறந்தா சாமி?''

''பொறந்து.''

''வானம் இங்கயிருந்து எவ்வளவு தூரம் சாமி?''

''கொச்சக் கயிறு போட்டா எட்டு முழம் போதும். பாசானம் அடிச்சா பத்து பன்னெண்டு ரூபா ஆவும்.''

அவர்கள் இப்போது ரசித்துச் சிரித்தார்கள். பாண்டி தன் பார்வையை அவர்கள் தலைக்கு மேலே செலுத்தினான். தூரத்தில் பயங்கரமான சூறைக்காற்று சுருட்டி வைத்த கம்பளம்போல் உருண்டு திரண்டிருந்த கோடைப் பகலை வேகமாக விரித்துக்கொண்டு வந்தது. விபரீதத்தைத் தலை திருப்பிப் பார்ப்பதற்குள் அவர்களும் அந்த இடமும் கடையும் வெயிலின் அடியில் சிக்கி நசுங்கிப் போயினர்.

வீரியமான கடலலையில் மரத்துண்டாக மிதந்து வெயிலின் சீற்றத்திலிருந்து பாண்டி மட்டும் பத்திரமாக எஞ்சினான். சொடுக்கிடும் அவகாசத்துக்குள் வெளியெங்கும் காட்சி மிக ரம்யமாக மாறிவிட்டது.



*ஒரு கிண்ணத்தில் ஏறி நின்று எண்ணெய் ஊற்றித் திரியாகத் தன்னையே பற்றவைத்துக் கொள்ளத் தூண்டிய குளிரில் வெகு காலம் தனியே வானீரில் ஊற வைத்த சொற்களின் தோலை உரித்து மெல்ல மெல்ல மென்று ஒரு வார்த்தையும் பேசாமல் விழுங்கிப் பசியாறி கொஞ்சம் வெயிலருந்த பதுங்கியிருந்த நிலவறையிலிருந்து வெளியேறும் அவன் ஒரு ஈர மலரைப்போல அழகாயிருக்க வேண்டுமென்று ஏன் எதிர்பார்க் கிறீர்கள்? உடலின் தசையெல்லாம் குழைந்திறுகிய சேறாகி முதுகெல் லாம் புல் முளைத்த மனிதனின் பின்னே வெள்ளாடுகளை அதட்டி ஏன் ஏவுகிறீர்கள்? இருள் பின்னிய விழிகளைத் துருப்பிடித்த செவிகளுக்கும் முடமான மூளையைப் பிறழும் இருதயத்துக்கும் புலன் மாற்றி பொழு துக்கும் அலுத்துப் போனவன் இருப்பிடத்தை மாற்றிக்கொள்ள முற்படும் போது முன்னேற்றம் பின்னேற்றம் பற்றி எதற்காக வழிமறித்து மூதலிக் கிறீர்கள்? எல்லா வழிகளும் கூடிப் பிரியும் இடமே வாழ்க்கை என்றான பின் வெறுமையின் குடுவையில் திரண்ட நீர்க்குமிழியாகி உடைந்து மறையும் தருணம் வரை அவன் மிதந்து போனால் நடந்து திரிபவர் களுக்கு என்ன நஷ்டம்?*



உச்சிவெயிலில் பச்சைமரங்களின் கொழுந்து இலைகள் தகதக வென்று மின்னின. கிறிஸ்தவக் கோவில் கோபுரத்தையொத்து நெடுநெடு வென வளர்ந்து நின்ற அசோக மரத்தின் உச்சியில் சிலுவை போல் அமர்ந்து ஒரு சாம்பல் நிறப் பறவை சிறகை அலகால் கோதிவிட்டு களிப் புற்றது. பெரும் பருத்திக்காடு வெடித்துச் செழித்ததுபோல் வானத்தில் வெண் பஞ்சு மேகங்கள் திரள்திரளாகக் குவிந்து கிடந்தன. முதுகுக்குப் பின்னே செம்மறிக் குரல்கள் மந்தையாகப் பெருகியொலித்தன. திரும்பிப் பார்த்தபோது ஆயிரக்கணக்கான செம்மறி ஆடுகளை நாலைந்து கரிச்சான் குருவிகள் மேய்ச்சல் காட்டிக் கொண்டுவந்தன. குளக்கரை போன்று உயர்ந்தும் நீண்டுமிருந்த மேட்டில் ஏறி அவை இறங்கின. செம்மண் மேட்டுக்கு அப்புறத்தில் நீர் நிறைந்து கிடக்கலாம். ஆடுகள் தாகம் தீர்த்துவிட்டு மேய்ச்சலுக்குத் திரும்புகின்றன என்று ஊகித்துக்கொண் டான். இவையனைத்தும் எப்படி எங்கிருந்து திடுமென வந்தன என்றொரு கேள்வி எழும் முன் இவையெல்லாம் அதிசயம்! சாராவின் காதல் தரும் கொடை! அவளின் மாசற்ற அன்பு நிகழ்த்துகிற அற்புதம்! என்று புத்தியை சமாதானப்படுத்திவிட்டான்.

நெருநெருவென்று ஆடுகள் ஒன்றையொன்று உரசியபடி அவனைக் கடந்து போயின. அவை பட்டை போன்ற குழைவான நாவை நீட்டி குரல் எழுப்பின. அவை ஏதேதோ பேசும் மொழிகளின் ஒலி வாய் வரை வந்து முட்டிவிட்டு சரிவர ஒரு சொல்லாக உருவாக முடியாமல் காற்றில் கரைந்தது. ஆட்டு மந்தை வெகு தொலைவுக்குப் போன பின்னே முகர்வ தற்கு சுகமான வாசம் எங்கிருந்தோ கமழ்ந்து வந்தது. அது விவரிப்பற்ற தொரு கிறக்கத்தில் ஆழ்த்தியது. அதற்கு மேலும் அங்கே நின்றிருக்க விடாமல் சுறுசுறுப்பூட்டி புறப்படச் செய்தது. உற்சாகமடைந்தவனாக அங்கிருந்து துள்ளலோடு நடக்கலானான்.

கல்லெறியும் தூரத்தில் இருந்த குளத்துக் கரையை அடைந்த போது தான் தெரிந்தது அது ஒரு ரயில் சாலை என்று. அதன் மீது ஏறி நின்று தலையை வட்டமடித்துப் பார்த்தான். ரயில் சாலை அதன் போக்கில் இரண்டு பக்கமும் நீண்டு போய் தொலைவில் ஒடுங்கியது. ரயில் சாலையில் மிக நீளமான ஏணியொன்று கிடத்திப் போடப்பட்டிருந்தது. அந்த ஏணியில் ஏறிச் செல்வதென்று முடிவெடுத்து கவனமாக ஏறிச் சென்றான். அது ஒன்றும் பெரிய சிரமமாக இல்லை. தரையில் சமனமாக நடப்பது போல்தானிருந்தது. படிக்கட்டுக்கள் ஏற்படுத்தும் களைப்பை அவை உண்டாக்கவில்லை.

இரு மருங்கிலும் புற்களும் புதர்களும் செடிகொடி மரங்களும் செறிந்து நின்றன. இடுப்பளவு உயரத்தில் தட்டான்கள் பறந்து திரிந்தன. உடலில் ஊதா நிறம் பூசியிருந்த கருத்த தலையுடைய ஒரு தட்டான் அவன் மீது வேகமாக மோதித் தடுமாறியது. ''சீ கண்ணவிந்து போன ஜென்மமே! அறிவில்லை உனக்கு? யார் மீது வந்து மோதுகிறாய்? நான் யார் தெரியுமா? கோபம் வந்துவிட்டால் ஒரு பார்வையில் உன்னை சுட்டெரித்துவிடுவேன், ஜாக்கிரதை'' கடினமான குரலில் அதட்டினான். ஒரு கணம் தட்டான் பயந்து ஒடுங்கிவிட்டது. கண்ணாடிச் சிறகுகள் உடைந்து விடுவதுபோல் நடுங்கிவிட்டது. அந்த பரிதாபக் காட்சியைக் கண்டபின் அவனுக்குள் சாந்தம் திரும்பியது. தவறை உணர்ந்து சுதாரித்துக்கொண்ட ஊதா நிறத் தட்டான் இன்னொன்றைத் துரத்தி வட்ட மிட்டது. திருந்தாத ஜென்மம். இன்னொரு சக தட்டானைத் துன்புறுத்தத் திட்டம் தீட்டுகிறது என ஊகித்தவன் அதன் மேலதிகச் செயற்பாட்டை கவனிக்க அங்கேயே நின்றான்.

ஊதா நிறத் தட்டான் அதை விட சற்று இளைத்த ஊதா நிறத் தட்டானின் முதுகுக்கு மேலே பறந்து பல வட்டங்கள் துரத்தியது. ஒரு கட்டத்தில் கீழே பறந்த தட்டானின் மேலே விழுந்து கால்களால் கவ்விப் பிடித்தது. சிறிய தட்டான் பலமுறை விடுபட்டது கடைசியில் வசமாக சிக்கிக்கொண்டது. மேலேயிருந்த தட்டான் தன் வாயால் கீழேயிருந்ததன் கொண்டையைக் கடித்து வசப்படுத்திக்கொண்டது. இரண்டும் பறந்த நிலையிலேயே வர வட்டம் குறுகிக்கொண்டே வந்தது. மேல் தட்டான்

தன் வாலை கொடுக்கு போல் வளைத்து கீழ் தட்டானின் வாலுக்கடியில் பொருத்தப் போராடி இறுதியாக வெற்றி கண்டது. இப்போது கீழே யிருந்த தட்டான் முயற்சியின்றியே பறந்தது. தன் சிறகசைப்பை அது முற்று மாக நிறுத்திவிட்டது. இரண்டுக்குமாக சேர்த்து மேலேயிருந்த ஊதாத் தட்டான் மட்டும் சிறகசைத்தது. இந்த தருணத்தின் தேவைக்காகத்தான் தட்டானுக்கு நான்கு சிறகுகள் தரப்பட்டிருக்கிறதா!

அதற்கு மேலும் தட்டானின் வட்டத்துக்குள் நின்றிருக்க விருப்ப மின்றி படிக்கட்டுகளில் ஏறி நடந்தான். முன்னைவிட சற்று விசையாக நடக்க நேரிட்டது. திரும்பிப் பார்த்தபோது தட்டான்கள் ஒரு வட்டமாகி மற்றொரு வட்டத்தில் சுற்றி வந்துகொண்டிருந்தன. தட்டானை அவ் வளவு ஆவேசமாக அவசரப்பட்டு மட்டமாகத் திட்டியிருக்க வேண்டாம் என்று இப்போது தோன்றியது.

குனிந்து கை நிறைய ஜல்லிகளை அள்ளினான். ஒவ்வொன்றாய் இலக்கின்றி உயரே வீசியெறிந்தான். ஜிவ்வென்ற ஓசையெழும்பியது. இரண்டு கற்கள் மீதமிருந்த நிலையில் எதிரே தூரத்தில் ரயில் சாலையில் சதுரமாக ஏதோ தென்பட்டது. கருகிய செங்கல்போலத் தோற்றமளித்தது. புகை புறப்பட்டு உயரே செல்வதை கவனிக்க முடிந்தது. ரயில்தான் வந்து கொண்டிருந்தது. ரயில் இச்சந்தர்ப்பத்தில் மிக அநாகரிகமாக நடந்து கொள்வதாக அவனுக்கு மனத்தாங்கலும் கோபமும் மூண்டது. ஒரு மனிதன் அதிலும் பல விசித்திர சக்திகள் நிறைந்த வீரன் இந்த ஏணியில் ஏறி வந்துகொண்டிருக்க ரயிலுக்கு எவ்வளவு திமிர் இருந்தால் அதே ஏணியில் இறங்கி வரும்? அதன் பணிவற்ற செயலால் இன்னும் சில நிமிடங்களில் யார் யாருக்கு வழிவிடுவது என்ற மானப் பிரச்சனை தேவை யின்றி தோன்றப் போகிறதே! சும்மா விடுவதாக இல்லை இந்த ரயிலை. அது தன் வாழ்க்கைப் பயணத்தில் முதல்முறையாக சரியான, அதே நேரத் தில் என்றென்றைக்கும் மறக்க முடியாத பாடத்தைக் கற்றுக்கொள்ளப் போகிறது. அது பயணிகள் ரயிலா சரக்கு ரயிலா என்பதை தூரத்திலிருந்து அறிந்துகொள்ள முடியவில்லை. அது பற்றிக் கவலைப்பட்டுக்கொண்டி ருக்க முடியாது. நியாயத் தீர்ப்பு பொதுவானது. பாரபட்சமற்றது. ஒரு வேளை இந்த ரயிலுக்கு நல்ல காலமிருந்தால் அதன் மூளை வேலை செய்யலாம். பாதையிலிருந்து இறங்கி ஏணியை விட்டு விலகி அவனைக் கடந்துபோய் சாமர்த்தியமாக மீண்டும் இந்த மேட்டுப் பாதையை அடையலாம். தவறினால் அதற்கு ஐயோ... கேடுதான்.

பறவைக் கூட்டம் நிகழப்போகும் விபரீதத்தை உணர்ந்து வினோத மான குரல்களில் அலறியது. நாராசமான கூக்கூரலில் எச்சரிக்கை பகிரங்க மாக வெளிப்பட்டது. 'ஐயோ...' ஒரு பரிகாசக் கூட்டத்தை வெயிலை விரித்து தரையோடு தரையாக உருகியோடச் செய்த இந்த மனிதனிடம் இந்த எளிய ரயில் வசம் கெட்டு சிக்கி சின்னாபின்னமாகிச் சீரழியப் போகிறதே என்று அவை பரிதாபப்பட்டன.

அவன் ரயிலை எதிர்கொண்டு வேகமாக நடந்தான். ரயில் முரட்டுக் குருடனைப்போல சிறிதும் யோசிக்காமல் அதே கதியில் வந்து கொண்டிருந்தது. அதன் சிக்குபுக்கு சப்தம் தெளிவாகக் கேட்கும் தொலைவுக்குள் நுழைந்தது. முதுகெலும்பையுடைத்து தலையை நசுக்கி பாதையோரத்தில் அடித்துக் கொன்று போடப்பட்ட ஒரு பாம்பின் சித்திரம் அவனுக்குள் தோன்றி மறைந்தது. ஆனாலும் சிறிதளவும் அவன் மனத்தில் கருணை சுரக்கவில்லை. விதிபோல் நடக்கிறது. வேறு வழி யில்லை. இருப்பது ஒரு வழி. இருவருக்குமாக ஒரே ஒரு வழி. தெளிவற்ற குரலில் ரயில் பணிவாக ஊளையிட்டது அவன் காதுகளில் விழுந்தது. கேட்டும் கேட்காததுபோல் தலையைக் கவிழ்ந்த வண்ணம் உறுதியோடு நடந்தான். ஊளைச் சத்தம் இன்னும் உரத்தொலித்தது. இப்போது அதன் குரல் அழுவதற்குத் தயாராக உடைந்திருந்ததை அவன் கவனித்தான். இருப்பினும் பிடிவாதமாக நிமிர்ந்து பார்க்காமலிருந்தான். நிமிர்ந்து முகத்துக்கு முகம் பார்த்தால் எதிர்பாராமல் இரக்கமுண்டாகி விடலாம். அது நல்லதல்ல. குற்றத்தை, தவறை ஊக்குவிக்கும் செயலில் சென்று அது முடியலாம். அது தவிர்க்கப்படவேண்டும். இன்று விட்டுவிட்டால் இன்னொரு நாளும் இதே தப்பிதத்தை அது செய்யலாம். எனவே இன்றே தீர்வுக்கு வந்தாகவேண்டும் இந்தப் பிரச்சனை. ஊளை ஓலமாக மாறி மிக நெருங்கி விட்டிருந்தது. பீதியில் ரயில் கதறியழுதது. 'என்னை மன்னி யுங்கள் என்னை மன்னியுங்கள் உங்கள் வழியில் தெரியாமல் வந்து விட்டேன். என்னைப் பொறுத்து என்னைக் காப்பாற்றுங்கள்' என கையெடுத்துக் கும்பிட்டு அது கெஞ்சுவதை மனக்கண்ணில் கண்டான். வைராக்கியத்தை இளகவிடவில்லை. இருவரும் நேருக்கு நேர் மோதிக் கொள்ள சில அடி தூரங்களே இடையிலிருந்தபோது ரயில் மிகப் பெரிய அலறலோடு கண்களை இறுக மூடிக்கொண்டது. நிலத்தில் நடுக்கம் பரவியது. அச்சமயத்தில் பின்னேயிருந்து இரண்டு கைகள் அவன் இடைப்பகுதியில் நுழைந்து 'கிச்சலம்' காட்டிற்று. அவன் கூச்சத்தில் நெளிந்து துடித்து காற்றில் எகிறித் தெறித்து பாதையோரம் விழுந்தான். ரயிலுக்கு எந்தப் பங்கமுமில்லாமல் பாதை கிடைத்தது. முழுமூச்சோடு உச்சபட்ச வேகத்தில் அது தப்பி ஓடியது. கடந்து செல்லும் அதன் பெட்டி களை வெறித்தான். ஆபத்து முற்றிலும் விலகியிராததையுணர்ந்த அவை கடும் குளிருக்குள் சிக்கிய பூஞ்சையுடல் போலப் பயந்து கிடுகிடுத்தன. ஆளை விட்டால் போதுமென்று வாலை இழுத்துக்கொண்டு தலை தெறிக்க ஓடிய ரயிலை அலட்சியமாக வெறித்துக்கொண்டிருந்தான். அதன் சக்கரத்தில் சுழன்றோடி வந்த தாளம் அவனைத் தாலாட்டி அங்கேயே உறக்கத்தில் ஆழ்த்தியது.



நனைந்து ஈரமான கருத்த மரப்பலகை படிகளை ஒவ்வொன்றாய் மிதித்து மேலே ஏறினான். கால்கள் யானையுடையதாக தடித்துக் கனத்தது. கசியும் இரகசிய ஒளியில் மெதுமெதுவாக உடலைத் தூக்கியேறி இறுதிப் படிக்கு வந்தபோது ஒளியுமிழும் பச்சை நிறத்தில் கண்கூச மஞ்சுவாக குழைந்தபடி விரிந்து கிடந்தது மாடியில் கடல்.

'கிரீத்' ஒரு பெயர் கொண்ட இரண்டு கடல்கள். இரண்டும் ஒன்றின் மேல் ஒன்றாக உண்டாக்கப்பட்டுள்ளது. கிரீத் உப்பு நீரினாலான கடலல்ல; முற்றிலும் மேகங்களால் ஆன சமுத்திரம். கீழ் கிரீத் குளிர்ச்சியாகவும் மேல் கிரீத் வெதுவெதுப்பாகவும் உள்ளது. மற்ற கடல்களைப் போல கிரீத்திலும் நிம்மதியற்ற அலைகள் உண்டு. அலைகளின் நிறம் மட்டுமே வெண்மை. மற்றபடி கிரீத் கடலினடியில் இல்லாத நிறங்களே கிடையாது.

கிரீத்தின் மையப்பகுதி மிக அமைதியானது, காற்றின் விரல்களில் கசங்காத அதன் மேற்பரப்பு தகடு போன்ற உறுதியான தோற்றத்தைத் தருவது.

அதன் அடியாழத்தில் ஒரு புத்தம் புது மாநகரமிருக்கிறது. உலகத்தின் எல்லா மாநகரங்களை விட அது பன்மடங்கு விரிவுள்ளது. இம் மாநகரம் மிக சமீபமாகத்தான் கயிறு கட்டி கிரீத் கடலுக்குள் இறக்கி வைக்கப்பட்டுள்ளது.

அவசரங்கள் மற்றும் அவசரமற்ற, ஒழுங்குமிக்க, அலங்கோலமான... எல்லா வகையான வாழ்க்கை முறைகளுக்கும் மிகப் பொருத்தமாக அது தயாரிக்கப்பட்டுள்ளது. வீடுகள் வீதிகள் சாலைகள் பள்ளிக் கூடங்கள் பங்களாக்கள் என ஒரு மாநகரத்துக்குத் தேவையான அனைத்து அம்சங்களும் கச்சிதமாகச் செய்துவைக்கப்பட்டுள்ளன.

மைல் கல்கள் நட்டு முடிக்கப்பட்டுவிட்டன. சாலைகள் பெயர் சூட்டப்பட்டுவிட்டன. வணிக வளாகங்கள் தேவைக்கதிகமாகவே திறக்கப்பட்டிருக்கின்றன. தனியார் கல்லூரிகள், அரசு கல்லூரிகள், தர்மாஸ்பத்திரிகள், தனியார் மருத்துவமனைகள், வில்லங்கமில்லாத விபச்சார விடுதிகள், கேளிக்கை அரங்குகள், பொழுதுபோக்குப் பூங்காக்கள், இருபத்தி நாலுமணி நேர சேவை வங்கிகள் என எல்லாமும் நேர்த்தியாக நிறுவப்பட்டுள்ளன.

இன்னும் மக்கள்தான் கயிறு கட்டி இறக்கப்படவில்லை.

இப்போது இம்மாநகரத்தின் மக்கள் தொகை ஒரே ஒரு மனிதன் தான். மீதி மனிதர்கள் எப்போது இறக்கப்படுவார்களோ தெரியவில்லை. இரண்டு இரண்டாக எண்ணிக்கொண்டு போனால் இருபத்திநாலைத் தாண்டிவிடாத இளைஞன் அவன். அதோ அவசரமான நடையும் அலைக் கழியும் கண்களுமான மூன்றாவது அவென்யூ பாதையில் திரும்புகிறான்.

அவன் ஒரு மகத்தான தேடலின் வழி நடந்து வருகிறான். அவனது நுரையீரல் ஓர் அபூர்வ வாசனையை சூல் கொண்டுள்ளது. அதன் தத்தளிப்பே அவனை வழி நடத்துகிறது. ஒரு நாயைப்போல் திசையையும் காற்றையும் பாதையையும் முகர்ந்து முகர்ந்து அலைகிறான், நடக்கிறான். கதவிலக்கம், உரிமையாளரின் பெயர் பொறிக்கப்பட்ட வீடுகளை ஒன்று விடாது நடையேறி பரிசோதிக்கிறான். இந்த நகரத்திற்கு அனுப்பப்பட்ட முதல் மனிதன் தான் என்று அறியாமல் அவன் முயற்சி தொடர்ந்து செல்கிறது.

அவனுள் வியாபித்திருக்கும் வாசம் தனியொரு பூவினுடையதல்ல. பூத்துக் குலுங்கும் தோட்டத்தின் கலவையுமல்ல. ஏதோ பூவை சூடிக் கொண்ட ஒரு கன்னியுடன் கூடிப் புறப்பட்ட வாசம் அது.



மலை வானை முத்தமிட்டுக்கொண்டிருந்தது. விழிகளை முகத்தை விட விஸ்தரித்துவிடும் கம்பீர மிடுக்குடன் கோடானுகோடி தேவர்கள் இழுத்து வந்து தொடுவானத்தோரம் நிறுத்திவிட்டுச் சென்ற தேர் போலக் காட்சியளித்தது மலை. அது முப்பருவங்களாலும் சூழப்பட்டு பிரக்ஞை பூர்வ காலத்துக்கப்பால் எழுந்திருந்தது. மலைமுடியில் வெண் துகில் போர்த்தியது போல் பனிமூட்டம் மஞ்சுக் கூட்டத்தோடு குழைந்து புகைந்தது. கழுத்திலிருந்து கால்வரை மழையங்கி காற்றில் சுழன்றாடிப் படபடத்தது. மலை எங்கேயோ பயணித்துக் கொண்டிருக்கிறது. அதன் பாதத்தைத் தழுவி பளீர் வெயில் அடிவாரத்தில் பணிந்து கிடந்தது.

மலையின் உடலெங்கும் விளைந்திருந்த பசுமை பாசிக் கருமை யுடன் நீர்த்திரைகளினூடாக வசீகரமாகத் துலங்கியது. ஊடே ஊடே ஓடைகள் வகிடு பிரித்து இறங்கின. நீர் விழுதுகளின் நெளிவும் லயமும் மனத்திற்குள் வாத்தியத்தின் தந்திகளை வருடி நாதமெழச் செய்தது. உயிர்ச் சுடர் மலர்ந்தது. உடல் காற்றாகி லேசாகி மிதந்தது. சொர்க்கத்தின் நடை திறந்ததுபோல் பேரானந்தத்தில் எண்ணங்கள் நர்த்தனமாடின. 'இந்த மலையை அழைத்துச் செல்லவே வந்தேன்' என்றொரு குரல் ஓங்கி யொலித்தது. வேறு ஒருவருடைய குரலாக அது வேரிழந்து ஒலித்ததால் புலன்களை ஓர்மைப்படுத்திக் கேட்டான். எதிரொலியின்றி மறுபடியும் ஒலித்தது. 'இந்த மலையை அழைத்துச் செல்லவே வந்தேன்.' பிறருடைய தல்ல, அவனுடையதுதான். அவனது மனக்குரலைத் தொடுத்து ஒரு கனவு பேசியது போன்ற வியப்பும் பிரமிப்பும் உண்டானது.

நானா... இந்த பெரிய மலையையா... எனது சின்னஞ்சிறு கைகளை அசைத்து அழைப்பதா? தூரத்தே அற்பத்துரும்பு காற்றில் அலைக் கழிகிறது என்று அலட்சியம் பண்ணிவிடாதா? எப்படி இது சாத்தியம்? மலை யானை போல் நடக்குமா, பாம்புபோல ஊர்ந்து செல்லுமா?

தவளை போல் துள்ளித் தாவி வருமா? வந்தாலும் எங்கே அழைத்துச் செல்வது? எப்படி வழி நடத்துவது? யாரிடம் கொண்டு சேர்ப்பது?

நீ பரிசளித்த மலைகளின் அடிவாரத்தில் வெறுமையோடு நீண்டு கிடக்கும் குருதி நிறப் பாதையை எதிர்பார்ப்புகளோடு எட்டிப் பார்க்கின்றன மலைமேல் ஏறிநின்று மரங்கள். காம்போடு கிள்ளித் தரப்பட்டு கையில் பத்திரமாக இருக்கிறது ஒரு பூவேறி வந்த உன் தேகம். பிறப்பிடம் நோக்கி அலையலையாய் திரும்பிக்கொண்டிருக்கிறது அதன் வாசனை. பொறுக்க ஏலாமல் அகதியான நாளின் நுனியில் கூடடைந்த மலைத் தேனீக்களாய் இதயத்தை மொய்த்துக் குமையும் ஆயிரமாயிரம் வார்த்தைகள். ஒரு சந்திப்புக்கோ குறுமுரையாடலுக்கோ இடமளிக்காத இடைவெளி புகைச் சித்திரங்கள் மீது எழுவதும் அமர்வதுமாய் தேனறைகளில் மேலும் மேலும் உன்னைச் சேமித்து சுறுசுறுப்படைகிறது. தலை நிறையப் பூத்த ஒரு மரத்தின் சிகையிலிருந்து இரண்டு மலர்கள் வெள்ளை நிறத்தில் உரையாடத் தொடங்குகின்றன நப்பாசைகளின் சுமையோடு மிதந்து செல்லும் உப்புக் கப்பல் குறித்து.

கடுமையான பல குழப்பங்களில் கசங்கிக்கொண்டிருந்தான். தானியம் தூவிய வலைக்குள் சிக்குண்ட தனிப் பறவையின் தத்தளிப்பு. காரணம் தெரியும் முன்னமே அவனது கண்களிரண்டும் கசிந்துவிட்டன. வெடிக்க ஆயத்தமாகிவிட்ட தலையை சிதறிவிடாமல் கைகளால் இறுகப் பிடித்துக்கொண்டான். வெகு நேரத்திற்குப் பின்தான் தலையை நிமிர்த்தி மலையைப் பார்த்தான். மலை அங்கேயே இருந்தது. மருட்சி குன்றாமல் அப்படியே இருந்தது. கூடுதலாக இப்போது ஒரு வானவில் தன் கீழ் நுனியால் மலையை வளைத்து அணைத்திருந்தது. வானவில்லில் நம்பிக்கையூட்டும் பல வண்ணங்களிருந்தன. அவை நெஞ்சுக்கு உறுதியையும் புதுத் தெம்பையும் தந்தன. பல வண்ணத்திலான வில் கிரீடம் அணிந்து சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் பேரரசியைப்போல் மலை காட்சியளித்தது. உள்ளத்தில் உருக்கமுடைய ஒரு பெண்ணின் சாயலுக்கு மலையை வானவில் மாற்றியிருந்தது.

மிரட்சியில் பதுங்கிப் போயிருந்த இருதயம் சற்று தைரியமடைந்து துடிப்புகளை வெளிப்படையாகக் காட்டத் தொடங்கியது. நாளங்களில் இழந்த பலத்தைத் திரட்டும் பணி சுறுசுறுப்படைந்தது. மலையின் ஆதிக்கத்திலிருந்து பார்வையை விடுவித்து இதர வெளிகளிலும் செலுத்த முடிந்தது. பயிர் வயல்களும் குறுமரங்களும் நிறைந்த பசுமையான சமவெளி மன இறுக்கத்தை நெகிழ்த்திவிட்டது. ஈரத்துணியால் முகத்தை வருடுவதுபோல் காற்று குளிர்ச்சியாக வீசியது. 'விளக்குதான் கிழக்கா? கிழக்குதான் விளக்கா?' விவாதம் முடிந்து தாடையைத் தொட்டு ஏந்தும் உயரத்திற்கு சூரியன் ஏறிவிட்டான். தூரத்தில் கரைக்குள் ஒளிந்து புரண்டோடும் நதி பசித்த பறவைகள் கூட்டத்தைப் பந்து போல் தூக்கிப் போட்டுப் பிடித்து விளையாடும் காட்சி முடிவடைந்துகொண்டிருந்தது.

நடந்து நடந்து பழகிப்போன அடிமையைப்போல அவன் கால்கள் புறப்பட்டன. மூளைக்குள் தறியோட்டம் தொடங்கி எண்ணங்கள் பின்னலுற்றன. அளவான நடை மருந்து; அளவுக்கு அதிகமானால் களைப்பு. அலைந்து முடிவற்றுத் திரிவது பைத்தியம். அதையும் தாண்டி இலக்கோடு நடப்பது பரவசம். அவன் மலையின் பிரம்மாண்டத்தை நோக்கிப் புறப்பட்டான். சருகுகள் முறுமுறுத்தன. ஒரு கடுகு போதும், அக் கடுகளவு விசுவாசமிருந்தால் போதும், போதும். 'பர்வதமே எழு! என் பின்னே நடந்து வா' என்றால் இந்த மலை மறு பேச்சில்லாமல் என் பின்னே வரும். இதில் எவ்வித சந்தேகத்திற்கும் இடமில்லை. காதலியைத் தேடிச் செல்லும் காதலன் அதிலும் பரிவற்ற பிரிவுக்குப் பிறகு சந்திக்க நேர்ந்தவன் கையில் ஒரு பரிசுப்பொருள் இல்லாமல் வீசிய கை வெறுங் கையாகப் போவது எவ்வளவு அன்பற்ற செயல்! இப்பேருண்மை இப்போதுதான் உறைத்தது. இப்போதொன்றும் சமயம் தப்பிவிடவில்லை. சரியான தருணத்தில் ஒரு அபத்தமான காரியம் தவிர்க்கப்பட்டு விட்டது. ஈடு இணையற்ற கலையழகு கொண்ட இதோ இந்த மலையைக் காதல் பரிசாக என் சாராவுக்குத் தருவேன். இன்று இந்த மலையைக் கைப் பற்றிவிடுவேன். பின்பு நிலைமை தலைகீழாக மாறிவிடும். என்னை விட்டால் வேறு கதியற்று என் வார்த்தைகளுக்குப் பணிந்து இந்த மலை என் பின்னே எழுந்து வரும். என்னோடு சாராவைத் தேடியலையும். நினைக்கவே மகிழ்ச்சியாக இருந்தது. ஜகத்தில் எவனும் பெறாத பேறு பெற்றதுபோல் பெருமிதத்தில் போதையும் களிப்பும் உண்டானது. உற்சாக மிகுதியால் கத்தி குரலெழுப்பி ஊளையிட்டான். ஒரு களப்போர் வீரனின் திடமும் உறுதியும் அவனுக்குள் புகுந்தது. தோள்கள் எஃகில் செய்தவை ஆயின.

சுற்றிலும் வானத்தின் விளிம்பு மறைந்துவிட்டது. மரங்கள் தாறுமாறாக முளைத்து அடர்ந்திருந்தன. எல்லாம் பெரிய பெரிய மரங்கள். நூற்றாண்டுகளை சாமான்யமாகக் கடந்து இன்னும் உயிர்ப்போடு துளிரடித்துக் கொண்டிருந்தன. வெளிச்சம் மிகக் குறைந்து விட்டது. நடக்க நடக்க தப்படிக்கு ஒரு படி இருட்டு அதிகரித்தது. ஒருவேளை இது சாயங் காலமோ என்னவோ! சோலைபோல் தோன்றியது மெல்ல மெல்லக் காடாக மாறிவந்தது. பலவித ஒலிகள். பாதையென்று எதிரே ஏதுமில்லை. எங்கும் உலர்ந்த சுள்ளிகளுடன் சருகுக் குவியல்கள் நிலத்தை கணுக்கால் புதையுமளவுக்கு மூடியிருந்தன. கிளைகளினூடாக மலை தூரத்தில் தெரிந்தது. நடக்க நடக்க அது தள்ளித் தள்ளிச் சென்றது, மனச்சோர்வை ஏற்படுத்தியது. எப்போதோ காலிலேறி முறிந்திருந்த முள்துண்டு இப்போது கடுத்தது. அதற்காகப் பின்வாங்கிவிடவில்லை. அவ்வப் போது சிறுகச் சிறுக காட்டின் பரப்பில் அடர்வு கூடுவதைக் கண்கூடாகக் காண முடிந்தது. காற்று மதகு திறந்து மோதித் தள்ளியது. அதற்கெதிராகப் போராட எந்த முகாந்திரமுமில்லை, நம்பிக்கையை நழுவ விடாதிருப் பதைத் தவிர.

மனத்துக்குள் படிந்து பரந்துறங்கும் நிலமலையின் நிழல்தொடர்ச்சி புரண்டு படுக்கும் நேரம் சிகர அந்நியத்தின் உச்சியிலிருந்தாய். அங்குமிருந்தது ஒரு வனம். கூடையோடும் கூந்தலோடும் சிறகாடி புன்னகை தேடும் பெண்ணொருத்தி பள்ளத்தாக்கின் ஆழத்தில். அங்குமிருந்தது ஒரு வனம். நடுக்காட்டின் பெரும் சிரிப்பில் நடுங்கி உதிர்ந்தபோது இருவேறு கால் தடங்கள் இருவேறு காம்புகளில். கைத் தடங்களுக்கான பிரார்த்தனையோடு அங்குமிருந்தது ஒரு வனம்.

பொறிக்குள் அகப்பட்ட எலியானான். எல்லாத் திக்குகளும் மூடப் பட்டபோது இருள் திரவ அடர்த்தியுடன் மிகத் தீவிரமாக இறங்கி விட்டிருந்தது. தாழ்வான குறுக்குக் கிளைகளிலும் விழுதுகளிலும் மோதி அடிபட்டு மேலும் முன்னேற நெல் முனையளவும் வகையற்றுத் திகைத்து நின்ற இடத்திலேயே ஓய்ந்து அமர்ந்தான். உதட்டைக் குவித்து மூச்சை ஊதி இருளையொதுக்க முடியுமா என்று முயற்சித்துப் பார்த்தான். பலன் ஏதுமில்லை. கனத்த இருள் முகத்தை மொய்த்து தேவையற்ற படபடப்பைக் கூட்டியது. இருள் அரிப்பில் உடல் கரைந்து ஒரு டக்கு பூச்சி அளவுக்கு தான் சிறுத்துப் போய்விட்டதாக கற்பனை விரிந்தது. கசப்பான உணர்வுகளைச் செருகியது.

கண்களைத் திறந்து வைத்திருப்பதற்கும் மூடி வைத்திருப்பதற்கும் முதலில் வித்தியாசமொன்றும் காணவில்லை. நேரம் செல்லச் செல்ல மூடிய இமைகளுக்குள் தாமிரத் தகடு ஆழத்தில் கிடப்பதுபோல் மெல்லிய பிரகாசம் பரவுவதைக் கண்டான். சொற்பமான மிக சொற்ப மான வெளிச்சத்தையே வெறித்துக்கொண்டிருந்தான். அப்போது கனவு வேறொரு கனவைத் தரிசிப்பது போன்ற உணர்வு. வானம் அதிரும் எந்த அறிகுறியுமில்லாமல் நான்கு ஒளிக் கதிர்கள் ஊமையான மின்னல்களாக அவனுக்கு சில அடிகள் முன்னே வழிந்து சரடுகள் போலக் காற்றிலாடின. திகைக்கக் கூடத் திராணியற்று உறைந்திருந்தவன் அதைக் கண்டான். ஒளிரும் ஒரு குழந்தை கிரகம் உறங்கும் தறுவாயில் சிந்தும் கோழை நூல் களோ அவை என்று நினைக்கத் தோன்றிற்று. அடர்மஞ்சளும் சிகப்பும் கலந்த கைப்பிரம்பு திண்ணம் கயிற்றில் பவளப்பச்சை நிறத்தில் ஒளிரும் பலகையிறங்கி ஊஞ்சல் கோர்த்து விட்டது. யாருக்காக இந்த ஊஞ்சல் அந்தரத்தில் ஆடிக்கொண்டு நிற்கிறது? அவனுக்காகவா அல்லது வானத்திலிருந்து அசரீரிக்கு சொந்தக்காரர் இறங்கி வரப்போகிறாரா அல்லது வெறும் மாயையா எனக் குழம்பிக்கொண்டிருந்த வேளையில் நிழலுருவம் ஒன்று குதித்து ஊஞ்சல் பலகை மீது ஏறி நின்றது. அதன் வடிவமும் அசைவுகளும் மானை ஒத்திருந்தன. குச்சிகுச்சியான கால் களும் புடைத்த வயிறும் கிளைத்த மெல்லிய கொம்புகளும் குட்டை வாலுமாக மாறாட்டத்துக்குள் இங்குமங்கும் திரிந்து குமைந்து கொண்டிருந்தது. இருள் வடிவத்திலிருந்து பளீரென்று அழகிய மானாக வெளிப்பட்டது. காட்டிலுள்ள பூக்களெல்லாம் மலர்ந்துவிட்டதுபோல்

கடுமையான நறுமணக் கலவை வீசி நாசியைத் துளைத்தது. சுவாசத்தை நீட்சியடையத் தூண்டியது.

ஊஞ்சலும் மானும் முற்றிலுமாகத் தங்கள் வசீகரத்தின் ஆதிக்கத்தில் அவ்விடத்தை ஆக்ரமித்தன. அவற்றைத் தவிர வேறொன்றையும் அங்கே காண இயலவில்லை. ஊஞ்சல் மையத்தில் மான் முன்னங்கால்களை யூன்றி மடித்த பின்னங்கால்கள் மீது அமர்ந்திருந்தது. தலையை நொடிக்கொரு தரம் வெட்டித் திருப்பியது. அச்செய்கையில் மமதையிருந்தது. கழுவி வைத்த கருப்பு வைரம் போல் விழிகள் ஈரப்பதத்துடன் கூர்மையாய் மின்னின. யாரையும் அடிமைப்படுத்த விரும்பும் ஒருவித நடித்த பார்வை அவனை அழுத்தியது. சற்றும் எதிர்பாராத நிலையில் மான் பேசியது, அல்லது விசாரணையைத் தொடங்கியது. கூட்டவோ குறைக்கவோ முடியாத தட்டையான குரலில் சர்வாதிகாரத் தொனியில் அவனைப் பற்றி அறிந்துகொள்ள அலட்சியம் கலந்த ஆர்வத்தைக் காட்டியது.

''ஏய் யாரய்யா நீ? எங்கிருந்து வருகிறாய்? விலங்குகள் திரியத் தயங்கும் இங்கே இருட்டுக்குள் என்ன செய்துகொண்டிருக்கிறாய்? ஹூம்...'' தலையையும் ஊஞ்சலையும் ஒருசேர ஆட்டியது. மரியாதை, இங்கிதம் கொஞ்சமும் இல்லாமல் மான் எழுப்பிய கேள்வி வியப்புக்குப் பதில் கோபத்தையும் எரிச்சலையும் மூண்டெழச் செய்தது. சுட்டெரித்து விடுவதுபோல் கண்களை உருட்டிப் பார்த்தான்.

''என்னப்பா ரெண்டு காதும் தண்டமா, இல்லை என் கேள்வி உனக்கு புரியவில்லையா? ஹூம்...'' கண்கள் தெறித்து விடுவதுபோல் வெளியே பிதுங்கிப் பின் திரும்பின. அதன் விதைக் கொட்டைகள் வெடிக்க ஊதிய பலூன் போல பச்சை வெளிச்சத்தில் அதிர்வுற்று அசைந்தது.

''நான் இறங்கி வந்தால் என்ன நடக்கும் என்று உனக்குத் தெரியுமா?'' அதட்டியது குரல்.

அதுவரை அவனுக்குள் உறங்கிக் கொண்டிருந்த சிங்கம் இப்போது விழித்தது. ''நான் எழுந்து வந்தால் என்ன நடக்குமோ அதுதான் நடக்கும்.''

அவனது பதிலைக் கேட்டு மான் கோபமடைந்தது. பற்களை நெருநெருவெனக் கடித்து ஒலியுண்டாக்கியது. ஊஞ்சல் பலகையை மேலும் இரண்டு முறை ஆங்காரத்துடன் உதைத்துக்கொண்டது. ''என்னைப் பற்றி எள்ளும் அறியாமல் இப்படியொரு திமிரான பொறுப்பற்ற பதில் உன் வாயிலிருந்து வந்து விட்டது. நான் யார் தெரியுமா, ஹூம்...''

எவ்விதப் பதற்றமும் இல்லாமல் சொன்னான், ''கொம்பு முளைத்த கழுதை.''

இதைக் கேட்டதும் மான் துடித்துப் போய்விட்டது. எழுந்து பலகையில் இங்குமங்கும் நடந்தும் துள்ளியும் மறுகியது. ஊஞ்சல்

கயிற்றில் கொம்புகளை ஆவேசமாக உராய்ந்து கொஞ்சம் தீப்பொறி களையும் பறக்கவிட்டது. வேகமாகத் தலையை அவன் பக்கம் திருப்பிக் கேட்டது. ''என்னையா கொம்பு முளைத்த கழுதை என்றாய்?''

''ஆமாம்''

''திமிரா?''

''இல்லை''

''வேறென்ன மயிறு?''

''உண்மை''

''என்னைப் பார்த்து தெரிந்து கொள்ள உன் குருவி மூளைக்கு திறனில்லையா?''

''என்னைக் கண்டுபிடிக்க முடியாமல் போன உன் புழு மூளைக்கு நேர்ந்ததே எனக்கும் நேர்ந்துவிட்டது.''

''அகங்காரமா?''

''அலட்சியம். தெரிந்தோ தெரியாமலோ கால் தவறி இந்த குழந்தை கள் கதைப் புத்தகத்துக்குள் வந்துவிட்டேன். துரதிஷ்டம்தான். ஏட்டுச் சுரைக்காயில் கூட்டு வைத்துக்கொண்டிருக்கும் உன்னை சந்தித்தது அதை விட பெரிய துரதிஷ்டம்.''

''என் வல்லமை, என் பின்புலம் உனக்குத் தெரியவில்லையா? நான் வீற்றிருக்கும் மரகத ஊஞ்சல் எங்கிருந்து வந்தது தெரியுமா?''

''தெரியும்.''

''தெரியுமா? ஹா ஹா ஹா'' தெனாவெட்டுத் தெய்வச் சிரிப்பு.

''எங்கே... சொல் கேட்போம்.''

''வானத்திலிருந்து இந்த ஊஞ்சலை நீ வாடகைக்கு வாங்கியிருக் கிறாய்.''

இதைக் கேட்டதும் மான் மனமுடைந்து போனது. திடீரென்று பெரும் பரிதவிப்புக்குள் சிக்கிக்கொண்டது. கண்ணீர் விட்டு கேவிக் கேவி அழவும் தொடங்கிவிட்டது. அவன் அங்கிருப்பதையே மறந்துவிட்டது. ஏதேதோ முந்தைய ஞாபகங்களில் மூழ்கி உழல்வதுபோல் மிகத் துவண்டு போனது. பவள ஊஞ்சலின் ஒளி வீச்சும் சுரத்து தணிந்து மங்கியது. அவனது வாக்கியம் ஒரு சாவியைப்போல் உள் நுழைந்து மானின் துயரங்களைத் திறந்து போட்டுவிட்டது போலும். அது மிகவும் மனம் கசந்து அழுதது. வெகு நேரத்துக்குப் பின் சுயநினைவுக்குத் திரும் பிய மான் ஊஞ்சலிலிருந்து நிலத்தில் குதித்து அப்பாவித் தோற்றத்தில் நின்றது. துக்கத்தில் அதன் தலை கனத்துத் தொங்கியது. விரக்தியில் வேக மிழந்த சொற்களில் உளறுவதுபோல் பேசியது. ''உன்னை என்னவோ நினைத்தேன். அப்படியில்லை நீ. என் நதி மூலத்தை வெகு சுலபமாக

இனம் கண்டுகொண்டாய். உன்னை மனதாரப் புகழ்ந்து பாராட்டத்தான் வேண்டும். உன்னிடம் இனி என் செப்படி அற்புதமெல்லாம் எடு படாது'' என நிறுத்தியது. தலையைத் திருப்பி ஊஞ்சலைப் பார்த்தது. பழுத்த கம்பியை உலையிலிருந்து எடுத்ததும் ஆறத் தொடங்குவதுபோல் ஊஞ்சல் வேகமாகக் கருக்க ஆரம்பித்தது. மீண்டும் இருள் திரண்டது. மானும் நிழல் உருவத்துக்குத் திரும்பியது. அதன் கண்களிருந்து பாதரசத் துளிகளாக கண்ணீர் வெள்ளி மின்னும் பிரகாசத்தோடு வழிந்து கொண்டிருந்தது. ஒவ்வொரு துளியும் மிகப் பிரகாசமாக இருந்தது. அங்கே அவர்களுக்கு அந்த வெளிச்சம் போதுமானதாக இருந்தது.

இறுதியில் மான் இப்படியொரு பரிதாபமான முடிவுக்கு வந்ததில் அவனுக்கு மகிழ்ச்சியோ வருத்தமோ இல்லை. சுவாரஸ்யமின்றி கவனித்துக்கொண்டிருந்தான்.

''நீ காணும் மான் அல்ல நான். இப்போது அதன் ஆவி மட்டுமே நான். இறந்து இரண்டு வருடங்களாகிவிட்டது. நிம்மதியற்று வனாந் தரங்களில் சுற்றிக்கொண்டிருக்கிறேன். மேகி என் காதலி. அவள் இன்னும் உயிரோடும் அழகான உடலோடும் இங்கே வாழ்ந்து கொண்டிருக் கிறாள். அவளுக்கு பசி தாகம் உண்டாகிறது. சமயங்களில் மேற்கிலிருந்து காற்று அலையலையாக வீசும்போது கஸ்தூரி வாசனை அவள் மனத்தை தடம் புரளச் செய்கிறது. ஆனால் மேகி நல்லவள். இச்சைக்கு பலியாவ தில்லை. எப்போதும் அவள் எங்கள் தெய்வீகக் காதலை நிரூபித்துக் கொண்டிருக்கிறாள். இருப்பினும் அவளும் பெண்தானே, எப்போதாவது மாமிச பலவீனத்துக்கு சூழ்நிலை அவளை ஆளாக்கிவிடுமோ என்று நான் அஞ்சுவதுண்டு. ஆனால் மேகி என்னை முற்றும் முழுவதுமாக, புரிந்து வைத்திருக்கிறாள். அவள் என்னை மறந்தால் இரண்டாவது முறையாக நான் இறந்து போவேன் என்பது அவளுக்குத் தெரியும்.'' வெண்மணிகள் மானின் கண்களிலிருந்து துளித்துளியாக மின்னி மின்னியிறங்கின.

''அதிக காலமில்லை, விரைவிலேயே அவளும் என்னோடு வந்து இந்த உலகத்திலும் இணை சேர்ந்து விடுவாள். உணவென்று அவள் என்னத்தை உண்கிறாள்! ரெண்டு புல்லைக் கடிக்கிறாள், அதுவும் பச்சையா உலர்ந்ததா என்று கூட கவனம் செலுத்துவதில்லை. தண்ணீ ரண்டை போனால் தொண்டையைக் கூட நனைய விடுவதில்லை பாத கத்தி! முன்பெல்லாம் கிடக்கும் சிறிது நீர் எனக்கே போதாது என நினைத்து தான் குடிப்பதுபோல் பாசாங்கு செய்வாள். அவள் தாகம் தீரட்டும் என்று நானும் குடிப்பது போல் நடிப்பேன்.

அவளை நினைத்து என் மனம் இளைத்துப்போனது. அவளுக்குத் துணையாக இப்போது யாருமில்லை. கடவுள் ஏன்தான் காதல் உள்ளங் களை சிறுத்தைக் குட்டிகளை ஏவிவிட்டு இப்படிக் கிழித்துப் போடு கிறாரோ தெரியவில்லை.'' மேற்கொண்டு பேசமுடியாமல் மான் நா தழுதழுத்தது.

ஒரு நீண்ட பெருமூச்சுக்குப் பிறகு ''என்னைப் பற்றியே அதிகம் பேசிவிட்டேன். என்னை மன்னித்து விடு. நீ எவ்வளவு ரகசியமானவனாய் இருந்தாலும் உன் உள்ளக்கிடக்கையை நான் முன்னரே துருவி ஆராய்ந்துவிட்டேன். காதல் மிகச் சுரணையுள்ள ஒன்று. அது அநாவசியமான தொந்தரவுகளை குறுக்கீடுகளைப் பொறுத்துக்கொள்ளாது. எடுத்தெறிந்து முகத்துக்கு முகம் பேசிவிடும். அப்படித்தான் நீயும் நடந்துகொண்டாய். நானாக இருந்தாலும் அப்படியேதான் நடந்து கொள்ள முடியும். இருவரும் ஒரே இனம்தானே! எனக்குத் தெரியாதா, என்ன சிறிய வித்தியாசம் - உன் கதையில் மிதவை மூழ்கியிருக்கிறது; என் கதையில் தோணியே மூழ்கிவிட்டது. ஆனாலும் எந்நிலையிலும் அழிவற்றதல்லவா காதல்! ஆகவேதான் சொல்கிறேன். உன்னைப் பிடித்து வாட்டும் வாதை சீக்கிரமே விலகிப்போகும். நீ மனம் குளிரச் சிரிக்கும் புள்ளியில் உன் பயணம் நிறைவடையும். அதிவிரைவிலேயே உன் காதலியை உன் காதல் கண்டடையும். காலை வெளிச்சம் துலங்கியதும் இந்தப்பக்கமாக நடக்கத் தொடங்கு. தோரான் மலையடிவாரத்தில் ஒரு கோவிலை நீ காண்பாய். அதற்கு அத்தைக்கன்னி கோவில் என்று பெயர். அங்கு அவள் சந்நிதியில் மண்டியிட்டு வழிபடு. அவள் அருள் பாலிப்பாள். நீ வேண்டுவதையெல்லாம் குறைவின்றி உனக்களிப்பாள். ஜென்ம சாபல்யம் அடைவாய்.''

சிறிது நேரம் மௌனமாக நின்றிருந்தது மான். ''இந்த கொம்பு முளைத்த கழுதை வந்த வேலை முடிந்துவிட்டது என நினைக்கிறேன். நன்றி.'' மான் இருளோடு இருளானது.



ஜிம்மியின் தனித்த குரைப்பொலி சன்னமாக தொலைவில் கேட்டது. கண்ணுக்கெட்டும் தூரம் வரை செம்மண்காடு எல்லையற்று விரிந்து கிடந்தது. பச்சைத் தலையுடன் கருப்புத் தூண்களாக பனை மரங்கள் நெருக்கமாக நின்றிருந்தன. புல்பூண்டுகள் அற்ற செம்மண் பரப்பு. புறக்கணிக்கப்பட்ட நிலமாகச் சிவந்து கிடந்தது. மனித நடமாட்டமும் இல்லை. நாயின் குரைப்பொலி மழுங்காமல் தொடர்ந்து கேட்டுக்கொண்டேயிருந்தது. பாண்டி பராக்கு பார்த்தபடி நடந்தான். மாவு மாதிரி திரிந்திருந்த மண்ணின் சிவப்பும் பனையின் கருமையும் ஓலைகளின் சுமையும் வானத்தின் வெளிர் நீலமும் பார்க்கப் பார்க்கத் திகட்டாமல் அவனை வரவேற்றுக் கொண்டிருந்தன. இடையிடையே சோற்றுக் காற்றாழை வேலிகள் எதிர்ப்பட்டன. அப்போது மட்டுமே வரப்பளவு பாதைகள் தேவைப்பட்டன. மற்றபடி செம்மண் காடு கால்கள் புதையத் தன் போக்கில் அவனை இழுத்துக்கொண்டு போனது. காலடிச் சுவடுகள் முறையாகப் பதியாமல் சின்னச் சின்னக் குழிகளாகப்

புதைந்து கிடந்தன. நாலாபக்கமும் எண்ணித் தீர்க்க முடியாத அளவில் பனைமரங்கள் நின்றிருந்த போதும் பறவைகளின் சிறு முனகலைக்கூட கேட்க முடியவில்லை. அணில்கள் ஓலை விட்டு ஓலைகளுக்குத் தாவிக் கொண்டலைந்தன. 'கிக்கிக்பிக்'கென்று அவற்றின் விளையாட்டு சப்தம் அவ்வப்போது எழுந்து ஓய்ந்தது. மாட்டுக் கொம்புகள் வடிவில் வளர்ந் திருந்த இரட்டைப் பனைமரங்களில் ஒன்றின் மட்டையில் பருந்து ஒன்று அமர்ந்திருந்தது. அமைதியே உருவாக இருந்தது. நேர் எதிரே சில அடிகள் தூரத்தில் சீராக நெளிந்த நீளமான தடத்தை இழுத்து வந்த பாம்பு, கோட் டின் முடிவில் நின்று தலையைத் தூக்கி 'புஷ் புஷ்' என்று காற்றைத் துப் பியது. தலை மலையாளத்து வெற்றிலையளவு பெரிதாக விரிந்து விட்டது. அடிப்பகுதியில் வெளுவெளுவென்று செதில்கள் மின்னின. முதுகுச் சருமத்தில் ஈரத்தவிடு நிறத்தில் கரும்புள்ளிகளும் வறண்ட திட்டுகளும் படர்ந்திருந்தன. பாம்பின் எதிர்பாராத சீற்றத்தால் எரிச்சலடைந்த பாண்டி, குனிந்து ஒரு கை மண் அள்ளி பாம்பின் முகத்தில் எறிந்தான். அது தலையை வெட்டியிழுத்துத் திருப்பிக்கொண்டு ஓடத் தொடங்கியது. பனைமரத்திலிருந்த பருந்து துணுக்குற்று எழுந்து பறந்தது. பாண்டி பாம்பைத் துரத்திக்கொண்டு ஓடினான். பாம்பு மணலில் வேகமாக நெளிந்து வழுக்கிக்கொண்டு போனது. அதன் வேகத்துக்கு அவனால் ஈடு கொடுக்க முடியவில்லை. கால்கள் மண்ணில் அநியாயத்துக்குப் புதைந் தன. பாம்பைப் போல் தானும் தரையில் படுத்து உடலை நெளித்துக் கொண்டோடியபடி துரத்தலாமா என்று யோசித்தான். அது விருதா யோசனையாக இருந்தது. அதிவேகத்தில் ஓடினான். பாம்புக்கும் அவனுக்குமான இடைவெளி கொஞ்சம் கொஞ்சமாகக் கூடிக்கொண்டே போனது. ஒரு கட்டத்தில் அவன் எதிரே பாம்பு இல்லாமலே ஓடிக் கொண்டிருந்தான். களைப்பு மிகுதியால் நின்று மூச்சு வாங்கியபோது நாயின் குரைப்பொலி மிக அருகாமையில் கேட்டது. களைப்பு அவன் கண்களில் திரையிட்டு விட்டிருந்தது. காட்சிகள் எதுவுமே துலக்கமாகத் தெரியவில்லை. கால்களை மடித்து அப்படியே அமர்ந்து கண்களை மூடிக் கொண்டான். உடல் தும்பியை விட மெலிந்து லேசாகிப் பறப்பது போன்ற உணர்வு. கண் பார்வையிலிருந்து மறைந்துவிட்ட பின்னும் அந்தப் பாம்பு கண்ணாடியில் வழியும் நீர்த்தாரையாக மின்னல் வேகத் தில் நினைவில் நெளிந்தோடியபடியே இருந்தது. அடித்து நீட்டிப் போட் டால் ஆறடி இருக்கும். சுருட்டி தராசுத் தட்டில் வைத்தால் ஐந்தாறு கிலோ தேறும். என்ன வேலை காட்டி விட்டது!



மலையடிவாரத்தை அவன் அடைந்தபோது பொழுது விடிந்து உலகம் பொற்துகள் தூவி அலங்கரிக்கப்பட்டிருந்தது. கொழுந்துச் சிவப் பில் மலையின் பசும்மேனி வழவழப்புக் காட்டியது. மலையின் முழு

உருவம் கண்களுக்குள் அடங்காமல் வெளிச்சிதறியது. அது ஒரு சுற்று வளர்ந்தும் பெருத்தும் இருந்தது. சிகர நுனி வானத்தைக் குத்திப் பிளந்திருந்தது. இடதும் வலதுமாக இரு பக்கமும் புடைத்த புஜங்களாக இரண்டு குன்றுகள் புதிதாக இரவோடு இரவில் முளைத்திருந்தன. கை தட்டினால் கலைந்துவிடும் மென்மையான மௌனத்தில் வனம் தியானித்துக் கொண்டிருந்தது. நெடுஞ்சாலையகல ஓடையில் ஸ்படிகமாக தெளிந்த நீர் ஆரவாரமின்றி ஓடியது. இறங்கியபோது முழங்காலைத் தழுவிச் சென்றது. பனிக்கட்டிகளை உருக்கியதுபோல் அதீதக் குளிர்ச்சியோடு வழிந்தது.

நுரையுறைந்தது போன்ற வெண்மையோடு பாறைகள் பாளம்பாளமாகத் தேய்ந்து கிடந்தன. ஓடையைக் கடந்து கரையேறியபோது மாட்டு வண்டித் தடம் ஒன்று அடிவாரத்தை நோக்கி நீண்டு சென்றது. பல்லாயிரம் பாதங்கள் சகடங்கள் கண்ட தடம் வயதேறி இருந்தது. குறுக்காகச் செடிகொடிகள் படர்ந்திருந்தன. பாதை ஒரு வழித்துணை கிடைத்த ஆசுவாசத்தில் வரவேற்றது. அவ்வழியே நடக்கலானான். வழியின் சுபாவம் அவனை வழித்து தனக்குள் இழுத்துக்கொண்டே போனது. மலையின் காலடியில் சிறுமையடைந்திருப்பது போன்ற ஒருவித உணர்விலிருந்து கவனமாக விலகி நடந்தான்.

தொலைவில் சிறு கட்டிடம் மலையையொட்டித் தெரிந்தது. நெருங்கிச் செல்லச் செல்ல ஒரு கோவிலுக்கான அடையாளங்கள் தென்பட்டன. அதன் பெயர்தான் நினைவில் பதியவில்லை. ஞாபகங் கொள்ள முயன்றும் எல்லாம் கலங்கலாய் தெளிவற்றிருந்தது. பாதை முடிவடைந்ததும் இடுப்புயர முட்செடிகள் வழி மறித்தன. கோவிலைச் சுற்றி புதர்க் கூட்டமாக அவை அடர்ந்திருந்தன. பூக்கள் பல நிறங்களில் பந்து போலவும் நீண்ட தண்டுகளுடனும் விதவிதமாக மலர்ந்திருந்தன. வண்ணத்துப் பூச்சிகள் குரலின்றிப் பாடின. நாவல் பழங்களையொத்த வண்டுகளும் ரீங்காரமிட்டுத் திரிந்தன. மனம் காரணமேயில்லாமல் குழைந்து கொண்டிருந்தது. காலுக்கடியில் மின்சாரம் பரவுவதுபோல் பூமியில் மெல்லிய நடுக்கத்தை உணர முடிந்தது.

ஆகம வரையறைக்குள் அமையவில்லை கோவிலின் தோற்றம். முழுக்க கற்களால் ஆன அது பாழ்பட்டிருந்தது. செதிள் செதிளாகக் கற்கள் பெயர்ந்து கிடந்தன. சிதிலங்களுக்கு நடுவிலும் பறக்கத் துடித்தன விரிந்த சில கற்சிறகுகள். அரைப்பனை உயரமிருந்த கோவிலுக்கு விசாலமான மண்டபம் மிகையாக இருந்தது. மண்டபத்துக்குள் சந்நிதியை நோக்கி வணங்கிய நிலையில் சிற்பங்கள் சில ஆங்காங்கே நின்றிருந்தன. மண்டபத்தின் சதுரமான கற்கூரை பிடிமானமற்று பறக்கும் தட்டாக அந்தரத்தில் மிதந்தது. கல் தளிர்த்து கோவிலாக வடிவம் கொண்டு வளர்ந்தது போலும். முட்செடிகளை விலக்கி நுழைந்ததும் சிற்சிறு சிராய்ப்புகளுடன் ரத்தக் கோடுகளுடன் மண்டபத்தை அடைந்தான்.

மிதக்கும் கூரையை சந்தேகத்தோடு பார்த்தான். அதில் அசைவாட்ட மில்லை. கர்ப்பகிரகத்தை நெருங்கி வர அது திறந்த வாசலைப்போல வெறுமையாக இருந்தது. அதன் வழியே அப்புறத்தில் நிற்கும் மலையின் அடிப்பகுதி தெரிந்தது. மண்ணில் புதைந்த யானையை நினைவூட்டியது. வணங்க விக்கிரகங்கள் ஏதுமற்ற இது கோவில்தானா இல்லை மலையடிச் சத்திரமா என்று கேள்வி எழும்பியது. பின்னே இந்த சிற்பங்கள் யாரை வழிபட்டுக் கொண்டு நிற்கின்றன என்ற குழப்பத்தோடு திரும்பினான். மூளைக்குள் தீப்பிடித்ததுபோல் பேரதிர்ச்சி அவனை ஒரே அடியில் வீழ்த்தியது. கால்கள் துவண்டு வெட்டுண்டு சரியும் மரமாக தரையில் சாய்ந்தான். சிற்பங்களிலிருந்து அவன் கண்களை எடுக்க மட்டும் முடிய வில்லை. முன் வரிசையில் இரண்டும் சில அடிகள் பின்னே இரண்டாவது வரிசையில் இரண்டும் சில அடிகள் பின்னே மூன்றாவது வரிசையில் மூன்றுமாக மார் மேல் கரம் குவித்து வணங்கும் நிலையில் ஏழு பெண் சிற்பங்கள் நின்றிருந்தன. எல்லாச் சிற்பத்திற்கும் சாராவின் முகம். திருவிழா நாள் ஒன்றில் தேவாலயத்தில் சந்தன நிறப் பட்டில் நின்றிருந்த சாராவின் அதே முகம். அதே பாவம். ஆத்ம பரிவர்த்தனை. மோனம்.

''சாரா...'' பெருங்குரலெடுத்து விளித்தான். சப்தமே எழவில்லை. வலிப்பு நோய் கண்டதுபோல் உடல் தறிகெட்டுக் குலுங்கியது. கண்கள் பொலபொலவென்று பொங்கின. கல்லாகிவிட்ட சாரா கிஞ்சித்தும் கருணையின்றி மோனம் கலையாமல் அப்படியே எல்லாச் சிற்பத்திலும் நின்றிருந்தாள். உடலை இழுத்து கொஞ்சம் கொஞ்சமாகத் தவழ்ந்து முதல் வரிசையில் நின்ற ஒரு சிற்பத்தின் பாதத்தை அடைந்தான். கால் களைக் கட்டிப்பிடித்துக்கொண்டு விம்மித் துடித்தான். அந்தக் கால்கள் வைரத்தைப்போல் குளிர்ச்சியாக இருந்தன.

பிதற்றினான். எச்சிற் கையிலிருந்து உதறிய பருக்கைகளாக வார்த் தைகள் சிதறின. ஒன்றிலும் ஒலியில்லை. அவன்தானும் அதைக் கேட்கக் கூடவில்லை. ஆனாலும் பிதற்றுவதை நிறுத்த முடியவில்லை. சுற்றிலும் பூரண அமைதி. நாதியற்ற காடு. மரணத்தைவிடக் கொடுமையான கோடை. சிரமப்பட்டு எழுந்து நின்றான். மொட்டாகக் குவிந்திருந்த அவள் கைகளைப் பற்றினான். பளிங்கையொத்த கல்லில் சாராவின் தத்ரூபமான முகம். அந்தரங்கக் குரலில் அழைத்தால் அவள் விழித்தெழக் கூடும் என நினைத்தான். ''சாரா... என் உயிரே, என் கனவே, என் வாழ்வே, என் வசந்தமே, கண் திறந்து பார் சாரா...'' அந்தரங்கமான குரலில் கெஞ் சினான். சிற்பத்தின் கண்களில் சிறு சலனமுமில்லை. அவன் கண்ணில் கட்டிய நீர்த்திரை கிழிந்து கல் முலைகளில் சொட்டியது.

நீண்ட மன்றாடலுக்குப் பின் வெகுவான களைப்பு அவனை நிதானப்படுத்தியது. உடலின் ஒரு மூலையிலிருந்து சினம் மூண்டெழுந் தது. சினம் சில விஷயங்களை ஆக்கப்பூர்வமாக சிந்திக்க வைத்தது. இது கல்தானே! சாராவின் தோற்றத்தை வடித்த சிற்பம்தானே! இத்தோடு

எல்லாம் முடிவடைந்துவிட்டதாக ஏன் நான் நினைக்கவேண்டும்! தனக்குத்தானே சொல்லிக்கொண்டான். சிற்பத்தை உற்றுநோக்கினான். உயிருக்கு மேல் நயமான கற்பாறையைப் போர்த்தியது போன்ற பிரமையே ஏற்படுகிறது. எந்தச் சிற்பியும் சிறு ஒச்சமும் இல்லாமல் சிலையோ சிற்பமோ படைப்பதில்லை. கால் விரல்களில் கூட ஜீவன் ததும்பும் இந்தச் சிற்பம் ஒரு கைங்கர்யமாக இருக்க சாத்தியமில்லை. கடவுளோ, கடவுளின் எதிரியோ, காட்டு முனியோ கல்லாய்ப் போ என்று சபித்திருக்கிறார்கள். ஆம், சாராவின் மிருதுவான உடல் சாபத்தால் கல்லாக்கப்பட்டிருக்கிறது. யார் சபித்தது? சபிக்கும் அளவுக்கு என் சாரா செய்த குற்றமென்ன? கோவில் பக்கமாகத் திரும்பி கருவறையைப் பார்த்தான். முன்னைப் போலவே அது வெறிச்சோடியிருந்தது. சாய்ந்த செவ்வகமாக வெயில் மேற்கு வாசலிருந்து லேசாகத் தலை நீட்டி யிருந்தது. சாரா வணங்கிய கடவுள் எங்கே? உரிய இடத்தில் அவன் ஏன் இல்லை? வழிபட வந்தவளின் அழகைக் கண்டு வசப்படுத்த நினைத் தானோ? மறுத்துவிட்டதால் கல்லாகச் சமைத்துவிட்டானோ? நான் தேடி வந்துவிட்டேன் என்ற விஷயம் அறிந்து தப்பித்துப் பிழைத்து ஓடிவிட் டானோ? டேய் ஆண்டவா... எங்கிருக்கிறாய் நீ? நீ ஆணா பெண்ணா? யாராக இருந்தாலும் என் முன்னே வா. எதிரில் வந்து நில். சந்நதம் கண்டதுபோல் ஆவேசமாக அலறினான்.

உடல் குறுகி ஒளிந்து மறைந்து வரும் உருவத்தை எதிர்பார்த்து கோபத்தில் பழுத்த கண்கள் வாசலையே அசைவற்று வெறித்துக் கொண்டிருந்தபோது, மெல்ல நகர்ந்து கோவிலின் புறவாசலை நோக்கி தோரான் மலை வந்துகொண்டிருந்தது. இரண்டடிகள் கால்கள் தன்னறிவின்றிப் பின்னோக்கிச் சென்றன. பற்களின் இறுக்கமான பிடியில் நசுங்கியிருந்த கீழுதடு மெல்ல நழுவி விடுபட்டது. கோவிலுக்கும் மலைக்கும் சில அடிகள் இடைவெளியில் மலை நின்றுவிட்டது. ராட்சசப் பறவை ஒன்று பறந்து வந்து கோவிலின் கருவறையில் அமர்ந்தது. சிறகிலிருந்து கிம்பிய காற்று அவன் மீது மோதி கேசத்தை கலைத்தது. காட்டெருமை திண்ணத்தில் கறுகறுவென்றிருந்த அது பருந்தின் சாயலிலிருந்தது. சுட்ட மூங்கில் கழிபோல் அதன் இரு கால்களும் உறுதியாக இருந்தன. வளைந்து மடங்கியிருந்த அதன் மஞ்சள் மூக்கு பயங்கரமான ஆயுதம்போலப் பயமுறுத்தியது. தலையைத் திருப்பி ஒரு கண்ணால் அவனை உறுத்துப் பார்த்தது. வட்டமாக அகன்ற கண்கள். பல மைல்கள் தொலைவைத் துல்லியமாகப் பார்க்கும் திறனுடைய கூர்மை. அழுக்கு மஞ்சள் நிறத்தில் கண் விளிம்பில் கலவரமூட்டும் வளையம். மனத்தை திடப்படுத்திக் கொண்டான். பாண்டி தலை திருப்பி சிற்பங்களைப் பார்த்தான். சிற்பங்கள் பக்தி மனத்துடன் இப்போது அந்த ராட்சசப் பருந்தை வணங்கிய வண்ணம் நின்றன. அச்சமும் நடுக்கமும் அளவுக்கதிகமாவதை உணர்ந்தவன்

திடீரென்று ஒரு கேள்வியின் துணைகொண்டு தன்னை நிதானப்படுத்த யத்தனித்தான்.

''நீங்கள்தான் கடவுளா?''

மனிதனைப் போல் தலையசைத்து பருந்து ஆமோதித்தது.

''உங்களுக்கு என் பேச்சு புரிகிறதா?''

புரிகிறது புரிகிறது, விஷயத்துக்கு வா என்பதாக வெண்கழுத்து சிலிர்க்க மீண்டும் தலையாட்டியது.

''நீங்கள் ஒருவர்தான் இந்த கோவிலுக்கு தெய்வமா?''

''ம்...ம்...'' இப்போது பருந்து அடிக்குரலில் சலிப்பைக் காட்டியது. குரல் வெண்கலக் குதிருக்குள்ளிருந்து வெளியே வருவது போலிருந்தது.

''நான் இந்தச் சிலையில் நிற்கும் இளம் பெண்ணின் காதலன். இவள் என் உயிரில் பாதி. பாதியென்ன மீதியும் அவளே. கண்டம் விட்டு கண்டம் வந்ததுபோல் இவளைத் தேடி வந்தேன். கண்டதோ என் கனவு கல்லாக உறைந்து நின்றதை. நீங்கள் இவளை மீண்டும் பெண்ணாக்கி உயிரோடு எழுப்பித் தரவேண்டும். இதை பணிவோடு உங்களிடம் கேட்டுக்கொள்கிறேன்.'' ஒரு வணக்கத்தை அவன் கைகள் தன்னியல் பாய்ப் பிசைந்தன.

வெண்கலக் குதிர் எதிரொலிக் குரலில் காந்த அலைகள் சுருண்டு புரள பருந்து அலகைத் திறந்து பேசியது. குறுக்கிட்டு கேள்வி கேட்கவோ விவாதிக்கவோ இடமளிக்காமல் அது விளக்கியது.

''நண்பனே, நல்ல காதலனே!

உனக்கு எத்தனை காதலிகள்? ஒரே ஒருத்திதானே! அப்படியிருக்க இங்கே ஏழு சிலைகள் எப்படித் தோன்றின? சிந்தித்துப் பார். எவ்வளவு தான் சினமிருந்தாலும் கடவுளோ, சூனியக்காரனோ ஒரு மனுஷியை ஏழு முறை சபிக்க வேண்டிய அவசியம்தான் என்ன? வரம் படைத்தவர்கள் யாரும் யாரையும் ஒருமுறைக்கு மேல் சபிப்பதில்லை. அதோ உன் தலைக்கு மேலே மிதக்கும் கற்கூரையை நீ கவனிக்கவில்லையா? அது எந்த சூட்சுமத்தில் கட்டுண்டு அந்தரத்தே நிற்கிறது! இது பற்றியெல்லாம் நீ அடிநுனியின்றி யோசிக்கத் தலைப்பட்டால் குழப்பங்கள்தான் பெருகும். எமக்குத் தெரிந்த விவரங்களை உனக்கு விளக்க முயல்கி றோம். நீயும் எம்மோடு சேர்ந்து புரிந்துகொள்ள பிரயாசைப்படு.

காதலியென்று நீ கூறும் இப்பெண் ஒரு முறை தன் தேரில் இந்த கோவிலுக்குத் தன் பரிவாரங்களோடு வந்திருந்தாள். அவள் தேரில் நெய்தலின் மீன் முத்திரை பொறித்த கொடி பறந்ததாக ஞாபகம். அந் நாளில் கர்ப்பக்கிரகம் திறப்புற்றிருக்கவில்லை. மண்டபக் கூரை நடுக்க முற்ற போதில்தான் கோவில் பின்சுவர் பெயர்ந்து விழுந்தது. அவள் வருகைக்கு முன்னே இந்த ஏழு சிலைகளும் மண்டபத்தின் தூண்களாக

நின்றிருந்தன. இளவரசியைப் போன்று பேரழகுடன் மிளிர்ந்த அவள் இங்கு நின்று வழிபட்டபோது, சூரியன் கிழக்கே எழுந்தருளியிருந்தான். சூரியன் அவள் நிழலை முதல் தூணில் வரைந்து விளையாடிக்கொண்டிருந்தான். அவள் வழிபாட்டை முடித்துவிட்டு புறப்படுவதை கவனிக்காமல் சூரியன் விளையாட்டில் லயித்திருந்ததின் விளைவாக நிழல் தூணிலேயே தங்கிவிட்டது. முதல் சிற்பத்தின் தோற்றமும் வளர்ச்சியும் இப்படித்தான் ஆரம்பித்தது. அவளது அழகிய நிழலில் மனத்தைப் பறிகொடுத்த கல்தூண் தன்னைத்தானே அரித்து மெல்ல மெல்ல மெலிந்து சிலையானது. சிலையின் எழில் மற்றத் தூண்களின் உள்ளத்தையும் கொள்ளை கொண்டது. ஏழு தூண்களும் அவள் சிற்பத்தையே பிரதிபலித்து அவ்விதமே ஆயின. இந்த விளையாட்டிலிருந்து முதலில் கடவுள் விலகிக்கொண்டார். இந்த இடத்தில் நான், தோரான் எல்லாம் வெறும் சாட்சிகளே என்பதைக் குறிப்பிட்டுச் சொல்ல விரும்புகிறேன்.

சூரியனும் சந்திரனும் ஆனந்த விளையாட்டில் சலிப்படைவதாயில்லை. இரவும் பகலும் அவர்கள் சிற்பிகளாகி வளைந்தும் நெளிந்தும் கண்டு களிப்புற்றார்கள். இப்படியாக... கூரையோ செய்வதறியாது திகைத்துப் போயிற்று. கலையின் உச்சபட்ச சிருஷ்டியாக விளங்கும் இச்சிலைகளின் மீது விழுந்து அமுக்கி நொறுக்கிப் போட அதன் கல் மனசு இடமளிக்கவில்லை. எழிலைக் கண்ட களிப்பில் அது தன்னைத்தானே தாங்கிக்கொண்டு காலங்காலமாக அந்தரத்தில் நின்றுகொண்டிருக்கிறது. இதை நீ நம்புவாய் என்றே கருதுகிறேன்.''

நிறுத்திவிட்டு பருந்து அவனை அர்த்தபுஷ்டியுடன் பார்த்தது. அவன் முகம் ஒரு பூவைப்போல மலர்ந்து வந்தது. கண்களில் நன்றி கனிந்தது. கைகளைக் குவித்து வணங்கியவாறு சிறிது நேரம் நின்றிருந்தான். பின்பு ஆவல் பொங்க ''இப்போது என் உயிர் எங்கிருக்கிறது? எப்படியிருக்கிறது? என்ன செய்து கொண்டிருக்கிறாள் என் சாரா? பருந்து கண்ணை மூடித் தனக்குள்ளே நிஷ்டையில் மனக்கண்ணில் கண்ட காட்சியை வார்த்தைப்படுத்துவதற்கு கொஞ்சம் அவகாசம் எடுத்துக்கொண்டது. தலையை அஷ்டகோணலாக வளைத்து சிந்தனை வசப்பட்டது. அப்போது அதன் மஞ்சள் அலகுப் பட்டையில் மூக்குத்தியணிந்தது போன்று ஒளிப்புள்ளி மின்னியது.

''கடல் பல்லக்கு இப்போது கரையை நோக்கி வந்து கொண்டிருக்கிறது. இரண்டு மாலுமிகள் கருத்தாகச் செலுத்திக் கொண்டிருக்கிறார்கள். பல்லக்கின் பிற்பகுதியில் கடலை அதட்டுவது போல் காவலர்கள் கம்பீரமாக நெஞ்சு நிமிர்த்தி நிற்கிறார்கள். காற்றில் நெளியும் திரைச் சீலைகள் இச்சிற்பத்து பெண்ணை மறைத்திருக்கிறது. அவள் ஒய்ந்திருக்கிறாள். கடலும் வானும் இணையும் கோட்டை நோக்கி முகம் சாய்ந்திருக்கிறது. சற்றே விளாசிப் பார்த்தால் அது பெரும் நகரத்தையொட்டிய நீலக் கடல் போலிருக்கிறது'' என்றது.

•

''அந்தக் கடலும் நகரமும் எந்த திசையிலிருக்கிறது? இங்கிருந்து எவ்வளவு தொலைவிலிருக்கிறது? எனக்கு கை காட்ட முடியுமா...''

''தரிசனங்களில் தொலைவை அறுதியிட்டுக் கூறிவிடும் சாதுரியங் களுக்கு இடமில்லை. உத்தேசமாக, வெள்ளையும் பழுப்பும் கூம்புக் கூரைகளும் அதிகம் காணப்படும் அந்நகரமும், நீலக் கடலும் தென் பகுதியில் அமைந்திருக்க அதிக வாய்ப்புள்ளது. கற்பாறைகளையும் குன்றுகளையும் அறுத்துப்பாயும் வீரியமான அலைகளை அங்கே கண்டேன்.''

சிறிது நேரம் கண்மூடி நின்றான். ''நீங்களும் இக்கோவிலும் இச் சிலைகளும் தடமும் வழியும் தோரான் மலையும் இங்கேயே இருங்கள். எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு சீக்கிரமே நான் திரும்பி வருவேன். கூடவே என் உயிரையும் அழைத்து வருவேன். எனது நன்றியை ஏற்றுக் கொள்ளுங்கள். வணக்கம்.'' உடலைத் தாழ்த்தி மிகப் பணிவோடு கூறிவிட்டு விடைபெற்றான்.

''நீ விரும்பினால் ஒரு சிலையின் நெஞ்சில் காதைப்பதித்து கேட்டுப்பார் சூரியனும் சந்திரனும் கலந்து புனைந்த பண்கள் அங்கே ஒலிக்கக் கேட்பாய். எரியும் அருவியின் இசை அது''

கேட்டுவிட்டு பாண்டி வியப்படைந்தான். கனவில் நடப்பது போல் அருகிலிருந்த சிலையெதிரே வந்தான். முகத்தை ஆதுரமாக பார்த்தான். உயிர் பற்றிக் கொள்ளாதா என்று மனம் ஏங்கியது. மேலும் நெருங்கி சிலையில் குவிந்த கைகளை பற்றிக்கொண்டு மார்பில் தலை சாய்த்து அத்தனை புலன்களையும் குவித்து உற்றுக் கேட்டான். ''உன் உதட்டில் சுடர்ந்த உயிரின் இளவெயிலை உறிஞ்சிக் குடித்து சூரியனானேன்'' அருவிக் குரலில் முனகினாள் சாரா. மயக்கத்தில் முறிந்து தரையில் விழுந்தான்.



ஒரு முழு நீள இரவு நிராகரித்த பனிக்காலத்து பிஞ்சுநிலவு நீர் முடிச்சுக்குள் ஒடுங்கியிருந்து விம்மியது கண்ணீர்த்துளியை பனித்துளி யாக மாற்றமுடியாமல். பச்சைப் புல்லின் நீள் கன்னத்தில் அது பருவாகி வைரக்கல்லின் கனவாகக் கலையும் நேரம் நெருங்கியது. மண்டியிட்டு குனிந்து நிலத்தை முத்தமிடுவதாக நினைத்துப் பருகிவிட்டேன் அந்தப் பனித்துளியை. பல்லிடுக்கில் இன்னும் கூசிக்கொண்டிருக்கிறது பரி வற்ற ஓர் இரவு.



வலமும் இடமுமாக வானமும் நிலமும் முடிவற்ற நெடிய சுவர் களென எழுந்து நிற்க, பேராழம் புகையும் இலக்கற்ற வெளியில் அவன் உடல் நழுவி ஒளிவேகத்தில் கீழ் நோக்கி இறங்கியது. ரத்தம் மொத்தமும்

தலைக்குள் பாய்ந்து பெருகிக் கனக்க மண்டையோடு வெடித்துச் சிதறிவிடுவதுபோல் வலி தெறித்தது. நடப்பதொன்றையும் கிரகிக்கக் கூடவில்லை. லட்சோப லட்சம் மாமிசபட்சிணிப் பறவைகள் செவிக் குருத்துக்களைச் சுற்றி இரைக்காக வட்டமிட்டு போர்க்குரல் எழுப்பின. இருளும் ஒளியும் மாறி மாறித் தொலைந்து விரல் சொடுக்குவதற்குள் இரவுகள் அலறி விடிந்தன. பகல் மயங்கிச் சரிந்தது. கால் விரல்கள் ஈரப் படும் முன் குறுக்கிட்ட கனமான அடைமழையைக் கடந்தான். எங்கி ருந்து எங்கே... அடியோ நுனியோ பிடிபடவில்லை. எந்த அம்பிலிருந்து எய்யப்பட்டான்? யார் பிடுங்கி முறித்து இப்படி இரண்டாக எறிந்தது? எதுவும் நினைவில்லை.

தன் கைகளைத் தேடினான். எங்கே இருக்குமென்று ஞாபகம் கொள்ள முயன்றான். சுய பலத்தைத் திரட்டியெடுக்கும் முக்கிய கேந் திரங்கள் அவை என்ற உணர்விருந்தது. கைகள் தலைக்கருகே நடப்பட்ட கம்பங்களாக விறைத்து நின்றிருந்தன. புயல் கிழித்த நடுக்கடல் கப்பல் பதாகையாக விரல்கள் காற்றில் பதறி நடுங்கின. கண்களை மெல்லத் திறக்க முயற்சித்தான். இமைகள் விரிய, பல நூற்றாண்டு வெள்ளை யடித்து கண்களைக் குருடாக்கி சாத்தியது முரட்டு வெளிச்சம். அதன் வீரியம் முட்டைகளாக கண்களை அவித்துவிட்டதோ என்னவோ! முக மெங்கும் வெதுவெதுப்பு பரவி நிலைத்திருந்தது. கனவுகளைத் தவிர வேறொன்றையும் காணத் தகுதியற்றதாக அவனுடைய விழிகள் ஊன மடைந்து விட்டதாக ஓர் உணர்வு உறுத்திக்கொண்டிருந்தது.

ஈர்ப்பு விசையின் முனை மடிந்தபோது அவன் அந்தரத்தில் தைத்து நின்றான். களைப்பு கொஞ்சமும் இல்லை. விருந்தும் பழச்சாறும் பருகியதுபோல் புலன்களெல்லாம் புத்துணர்வால் நிரம்பியிருந்தன. கால்களை விரித்துக்கோர்த்தான், உதறிப்பார்த்தான். மூளையின் தூண்டு தலுக்கு அவை கட்டுப்படுவது மகிழ்ச்சியையும் ஆச்சரியத்தையும் தந்தது. கண்கள் விடுபட்டுத் திறந்ததும் நீல வெயிலால் சுற்றிலும் சூழப்பட்டிருந் தான். அது மிகுந்த குளிரூட்டுவதாக இருந்தது. ஆழ்ந்து சுவாசித்தான். அடிவயிற்றில் பனித்துகள்கள் படியும் சுகம் ஏற்பட்டது. நீல வெயில் படலத்துக்குப் பின்னே செந்நிறக் கிரணங்கள் ஸர்ப்ப நடனம்போல் ஒன்றையொன்று பின்னியாடின. அவற்றுக்கும் பின்னே வானம்போல் தோற்றமளித்த சுவரில் துளிகளினூடே ஒளியோடி மழையின் துயர ஓவியமொன்று வளைந்திருந்தது. நீர்த்தாரைகள் தொலையும் இடத்தில் குழந்தையிட்ட அடிக்கோடாக பெரிய மின்னல் விம்மிக்கொண்டிருந்தது. அதைப் பார்த்தபோது காரணமின்றி சோகமடைந்தான். அந்த ஓவியத்தை சற்றே மாற்றித் தீட்டலாம்; சிக்கித் தவிக்கும் மின்னலைத் தன்போக்கில் விட்டுவிடலாமென்று நினைத்தபோது அவன் கைகள் குறுகுறுத்தன. அப்போதுதான் கவனித்தான். அவன் கைகள் இரண்டும் சாம்பல் நிற இறகுகளால் மூடப்பட்டிருந்தன. தோளிலிருந்து நகக்கண்கள் வரை

இறகுகள் அடர்ந்து துளிர்த்துச் சிறகுகளாகியிருந்தன.

உடலெங்கும் நரக வலி பரவியது. சிறகுகளை மாறி மாறிப் பார்த்தான், என் கைகள்... என் கைகள்... என் கைகள் எனக்கு வேண்டுமென்று அரற்றினான். சிறகுகளுக்கு செவிகளிருப்பதாகத் தெரியவில்லை. அவன் கதறலை அவை கண்டுகொள்ளாமல் விரிந்திருந்தன. சாலை விபத்தில் பாதியுடல் சக்கரத்தடியில் நசுங்கிக் கூழானவனைப்போல் அவன் முகம் கோணித் துடித்தது. தன்னுடலில் பாதியை வேறு யாரோ வஞ்சகமாக ஆக்கிரமித்து விட்டதாக துயரத்தின் கூர்முனை குடைந்தெடுத்தது. கண்களில் நீர் பெருகி வழிந்தோடியது. தொட்டுத் துடைக்க எத்தனித்துத் தோல்வியுற்றான். சிறகு முகத்துக்கருகே வந்து விசிறிவிட்டு திரும்பியது அச்சமூட்டியது. தரப்பட்ட அன்பளிப்பை அருவருப்போடு பார்த்தான். அடியோடு வெறுத்தான். தோளிலிருந்து உதறிப்போட வழி தேடினான். சிறகுகளோ கருவறைச் சிசு வடிவிலேயே சரீரத்தோடு குருத்தடித்து துளிர்த்த உறுப்பாகத் தம் வேர்களை எலும்புகளைப்போல உறுதியடையச் செய்திருந்தன.

உயிர் - காற்றோ திரவமோ ஒளியோ கற்பனையோ? எதுவாயிருந்தாலும் அதில் நேர் பாதியை இழந்து விட்டிருந்தான். கைகள் மறைந்து போன சம்பவத்தால் மழை ஓவியத்திரையில் இப்போதும் அந்த ஒற்றை ஒளி ஸர்ப்பத் துடிப்பும் தவிப்புமாக நெளிந்துகொண்டிருந்தது. அது கூடுதல் துக்கத்தை உண்டாக்கியது. கண்களை விரக்தியோடு மூடினான். கண்ணிலும் நாசியிலும் நீர் ஒழுகியது.

''என்ன சத்தம் இங்கே...''

அதிகாரமான பெண்குரல் அவன் மேல் விழுந்தது. நெடுங்காலம் கேட்கும் திறனை இழந்திருந்து அப்போதுதான் செவியாற்றலைப் பெற்றதுபோல் திடுக்கிட்டான். இமைகள் பதறித் திறந்தன. அங்கே அவன் கண்ட காட்சி சிறுநீர்ப் பையை விரியச் செய்தது. மருண்டான். மடமடவென மாண்டு மீண்டான். ஊஞ்சல் பலகையையொத்த மிதவை அந்தரத்தில் அவன் நேர் எதிரே அளக்க முடியாத இடைவெளியில் நின்றிருந்தது. அதன் இடது கோடியில் ஐயாயிரம் பத்தாயிரம் வயது மதிக்கத்தக்க பெண் சம்மணமிட்டு அமர்ந்திருந்தாள். அவள் கைகள் மடங்கிய கால்மூட்டுகள் மேல் நீண்டிருந்தன. அவளிடமிருந்துதான் அதட்டல் குரல் வந்திருக்க வேண்டுமென ஊகித்தான். தவறு செய்கிறோமோ என்ற சந்தேகமும் முளைத்தது. அவள் முகம் பிரகாசமாக நிறைகுளத்து மலர் போல திரட்சியாகவும் தெளிவாகவும் இருந்தது. கண்கள் பசுங்கன்றினுடையதைப் போல பெரியதாகவும் ஒளியுடனும் மின்னின. அதை உருட்டி உறுத்துப் பார்த்தாள். இமைக்காத நோக்கு. புருவங்களில் கர்வம் திமிர்த்தது. சீப்பு போட்டு அருவியை வாரிவிட்டதுபோல் தலைமுடி இரண்டு தோள்களிலும் விழுந்தோடியது. கழுத்துக்குக் கீழே வெண்முகிலையணிந்திருந்தாள். அது புகைந்துகொண்டிருந்தது. அவள் பேசும்

போது அதிகமாகக் கலைந்தது. அவளுக்கருகே மிதவைப் பலகையில் எதிரேதிரே கரிய ரோமங்களுடைய பூனையும் பல்லியும் அமர்ந்திருந்தன. ஒன்றையொன்று அளவற்ற விரோதத்தோடு ஊடுருவிப் பார்த்த வண்ணமிருந்தன. அவற்றின் பார்வை உக்கிரத்திலிருந்து பிறக்கும் சக்தியில்தான் கிரகங்கள் மோதாமல் மிதந்து நிற்கின்றன என்று நம்ப வைப்பதாக அந்தப் பார்வையிருந்தது. ஆளை விழுங்கும் வசீகரத்திலிருந்து அவள் குரல் அவனை வெளியே உருவியிழுத்தது.

''என்ன சத்தம் இங்கே?''

''நான் அழுகிறேன்'' உடைந்த குரலில் சொன்னான்.

''ஏன் அழுகிறாய்?''

''இந்தச் சிறகுகள் என்னுடையதல்ல.''

''பட்சியே, பொய் சொல்லாதே''

அவன் குரல் பதறியது. கண்கள் படபடத்தன. ''நான் பறவையல்ல. நான் பறவையல்ல...'' நெருப்பை விழுங்கியதுபோல் விக்கித் திணறினான்.

அவனது இரு சிறகுகளும் 'இல்லை இல்லை'யென அசைந்தாடி மறுத்தன.

''குரலை உயர்த்திப் பயன் ஒன்றுமில்லை. மரியாதையாக உன் கூட்டுக்குத் திரும்பு. வெளியை கண்ணீர் சேறாக்காதே. ம்... புறப்படு.''

அவன் உதடுகளைக் கடித்து அழுகையைக் கட்டுப்படுத்திக் கொண்டு பரிதாபமான குரலில் ''என் கைகள் எனக்கு வேண்டும். என் கைகள் எனக்கு வேண்டும்'' என்று திரும்பத் திரும்பச் சொன்னான்.

பெரிய விழிகளில் கொலைவாளைத் தீட்டியவாறே அவள் ''பிதற்றாதே. இதுதான் கடைசி எச்சரிக்கை உனக்கு. அடுத்த சுற்று நான் வரும்போது இங்கே முழுமையான அமைதி நிலவ வேண்டும். மீறினால் தொலைந்தாய்.''

இசைவாகத் தலையசைத்தான்.

''உங்களின் அடுத்த சுற்று எப்போது வரும்?''

''அது உனக்குத் தேவையில்லை.''

அவள் கண்களைத் திருப்பி பூனையையும் பல்லியையும் பார்த்தாள். பூனை மெலிந்து பல்லியாகவும் பல்லி பெருத்து பூனையாகவும் மாறியது. நீலவெயில் பணிந்து வணங்கியது. விண்கலம்போல் மிதவை புறப்பட்டுச் சென்றது. அவள் பார்வை தீட்சண்யம் கடைக்கண் வரை அவன் மீது நிலைத்திருந்தது.

மரங்கள் செடிகொடிகள் நதிகள் மனிதர்கள் பறவைகள் கால்நடைகள் என ஒரு சஞ்சாரமுமற்ற வெறும் வெளியில் சில நிறங்கள்

மட்டுமே உயிரோடிருந்தன. அவையும் சலனமில்லாமல் ரசவாதங்கள் புரியத் தெரிந்தவை. வெகு நேரமாகத் திக்கற்று அங்கேயே நின்றிருந்தான். களைப்பு மேலிட்டது. சிறகைப் பாய் போல் விரித்துப் படுத்துக்கொண்டான். கால்மேல் காலிட்டுக்கொண்டு கடகடவென்று சிரித்தான்.

'நான் பறவையா... நான் பறவையா... நான் பொய் சொல்கிறேனா... ஹா ஹா ஹா... ஒண்ணு ரெண்டு நூறு வரை சொல்றேன். நான் பறவையா... கை வீசம்மா கை வீசு. கடைக்குப் போலாம் கை வீசு. பாடுறேன். நான் பறவையா... ஹா ஹா ஹா...'

கண்களை மூடி உறங்க முயற்சித்தான். முகத்தின் மேலும் நெஞ்சிலும் ஏதோ வேகமாக ஊர்ந்து செல்வதாக உணர்ந்தான். கண் திறந்து பார்த்தபோது அவனுக்கு மேலே உயரத்தில் லட்சக்கணக்கான பறவைகள் கூட்டமாக நெளுநெளுவெனப் பறந்து வட்டமிட்டன. அவை சுறுசுறுப்பாக ஏதோ ரகசியத் திட்டத்தோடு பறப்பதுபோல் உள்ளுணர்வு ஏற்பட்டது. மஞ்சள் கருப்பு வெண்மை சிவப்பு நிறத்திலிருந்த பறவைகள் வண்ணங்களுக்கேற்ப இணை சேர்ந்து திட்டுத்திட்டாகக் காட்சியளித்தன. பறவைகளின் மிகப் பெரிய வட்டத்தைத் தொகுத்துப் பார்த்தபோது அவை பறந்து வட்டமிட்டபடியே ஒரு சித்திரத்தை வரைந்து வைத்திருப்பதைக் காண முடிந்தது. முதல் சில வரிசைகளில் கரிய நிறப் பறவைகள் கூந்தலுக்காக அரைவட்டமாகச் சேர்ந்திருந்தன. மஞ்சளும் இளம் சிவப்பும் பெருவாரியாக விரிந்து முகத்துக்காகப் பறந்தன. கருவிழிகளுக்காகவும் புருவங்களுக்காவும் கரிய பறவைகள் சிதறாமல் தீற்றியதுபோல் பறந்தன. வெள்ளைப் பறவைகள் சொற்பமாக வெண்விழிகளாகப் பறந்தன. ரத்தச் சிவப்பு நிறப் பறவைகள் உதடுகளாக வில்லாக வளைந்து விரியாமல் பறந்தன.

பறவைகளாலான பறக்கும் முகம் அவனுக்குப் பரிச்சயமானதாகத் தெரிந்தது. இமைகளுக்காகப் பறந்த பறவைகள் கூட்டம் ஒன்றையொன்று ஒரே நேரத்தில் முத்தமிட்டு விலகும்போது சித்திரத்தின் விழிகள் மூடித்திறந்து அவனைப் பார்த்தன. காந்தத் துண்டங்கள் போல் கவர்ந்தன. சாரா... அவனுக்குள் அசாத்தியமான ஓர் உணர்வு மின்சாரம் போல் பாய்ந்து பரவியது. சிறகை உதறி எழுந்து நின்றான். கால்களை அந்தரத்தில் மிதித்து எம்பினான். சிறகுகள் அசைய அவன் பறக்கத் தொடங்கிவிட்டான். ஆச்சரியமாக இருந்தது. நம்பமுடியாத இன்பம் அவன் நாடிநரம்புகளை நிறைத்தது. பறவைகளாலான பறக்கும் முகத்தை நோக்கி எழுந்தான். உயர உயரச் செல்லச் செல்ல பறவைகளும் உயர்ந்த வண்ணமிருந்தன. முகம் வியர்த்துப் பூத்தது. சிறகுகளை இன்னும் துரிதமாக்கினான். உதடுகளுக்காக மிக இறுக்கமாகப் பறந்த செந்நிறப் பறவைகள் அவனைக் கவர்ந்து இழுத்தன. கூந்தல் பறவைகளில் ஒற்றை வரிசை கலைந்து விழுந்து நெற்றியில் புரண்டு பறந்தன. அவற்றை எடுத்து காதுக்குப் பின்னே இழுத்துப் படிய விடவேண்டுமென நினைத்தான்.

வட்டமிட்ட பறவைகளின் சூறாவளி நெடிய ஒற்றை இலைச் சருகென அவனைத் திருகியிழுத்தது. வேட்டை நாயினுடையதைப் போல் அவன் இருதயம் களைப்பில் துடித்துப் படபடத்தது. பறவைகளை நெருங்க நெருங்க அவற்றின் மூச்சொலி வெகுண்ட கடலாக இரைச்ச லிட்டது. முத்துமுத்தாக சித்திர முகத்துக்கு வியர்த்துப் பனித்ததுபோல் பறவைகளின் கண்கள் மின்னின. செந்நிறப் பறவைகளுக்கருகே அவன் நெருங்கியபோது இரவாகி விட்டிருந்தது. விடியாத இரவாகப் பறவை கள் அவனைச் சூழ்ந்து ஒளியைத் தடுத்தாட்கொண்டன. பயங்கரத்தை முழுவதுமாக உணர்ந்து உள்ளுக்குள் பொறி தட்டிய வேளை வெடி வைத்து பாறையைப் பிளந்ததுபோல் தூரத்தே ஒரு சிரிப்பொலி அலை அலையாய் எழுந்தது. பெருங்குரலெடுத்துக் கத்தினான் ''சாரா... சாரா...''

பறவைகள் கூரிய அலகுடன் கூட்டமாக அவன் மேல் இறங்கின. வாள் கருக்கின் பற்கள் பதிந்து உடலெங்கும் வலியும் எரிச்சலும் சதை கிழியும் சப்தமும் எழுந்தது. தேனீக்களென பறவைகள் கலைந்து விலகிய பின் அந்தரத்தில் அகன்ற இரு சாம்பல் நிறச் சிறகுகளுக்கடியில் சிலுவை யில் அறைபட்ட வடிவில் எலும்புக் கூடு ஒன்று காற்றில் பெண்டுலம் போல் தொங்கி ஆடியது.



பிற்சேர்க்கை 1

## எபிசைகிடியான்

- ஷெல்லி

# உயிர்க்குயிரின் உடன்போக்கு வேண்டல்

தமிழாக்கம்: ஸ்ரீ ரங்கம் வி மோகனரங்கன்

*(எமிலியா விவியானி அவளது விருப்பத்திற்கு மாறாக கன்னியாஸ்திரி ஆக்கப் படுகிறாள். அவளது உற்ற தோழனான ஷெல்லி அவளை விளித்துப் பாடிய பாடல் இது.)*

எமிலி,

துறை ததும்பிக் காத்திருக்கும் ஒரு கப்பல்
பர்வத சிகரத்தின் புருவத்தில் பைய இழியுமொரு காற்று
நீலத் திரைக் கடலில் நீளும் ஒரு பாதை
நங்கூரம் பாய்ந்தந்தப் பாதையை உழுததில்லை
நுரையற்ற தீவுகளும் அதைச் சுற்றி
அடைகாக்கும் ஹல்ஸியான் பறவைகளும்;
அலைவீசு கொடுங்கடலும் ஆர்ப்பற்று அடங்கியது
களிகூரும் மாலுமிகள் கட்டற்றுத் துணிந்தவர்கள்
என் உள்ளத்தோடு உதித்தவளே உரைப்பாய் நீ
என்னோடு உடன்போகச் சம்மதமா கடல்கடந்தே?
ஆழ்ந்த கிழக்கின் செவ்வனத்தில் முடைந்த கூட்டின் முனைப்புந்த
முந்தும் பறவை அல்பற்றாஸ் நம் நாவாய்
எல்லையற்ற விரிகடலில் அல்லும் பகலும் தொடர்ந்து வரும்
புயலும் அமைதியும் ஆகிவரும் புனிதத் துணையாய் பறந்துவரும்
விரிந்த சிறகின் நடுவண் நாம் வீற்றுச் செல்லக் கூடவரும்
ஒன்றை ஒன்று தொடர்ந்து வரும் வழியை ஒற்றி விரைந்துவரும்
அயோனிய வானத்தின் கீழ் அமைந்ததொரு தீவம்
சொர்க்கபுரி சரிந்து ஒரு சொக்கழகாய் ஆனதெனலாகும்
ஆதிச்சுகமான பழங்காலம் தொட்டுத்
தெள்ளத் தெளிந்த பொன்னான காற்று வீச
பொற்கால பூரிப்பின் இறுதிப் பகுதியாகி
எளிமையும் ஏற்றமும் கவடிலா தீரமும்
வாய்த்தநல் குடிகளாய் மேய்ப்பவர் சிலரன்றி
தனிமையின் இடமாய் ஆகியிருக்கும் இந்தத் தீவின் பரப்பு
ஏனெனில் நல்ல துறைமுகம் இல்லை

நாவாய் கரைதொட ஏற்றதும் இல்லை.
நெடுங்காலம் நிலத்தடியில் குமிழ்ந்த குகையும்,
பல காலம் சலித்தெடுத்த மணல் பாங்கும்
முத்தமிட்டு மாறி எழும் ஒலியோடும் ஒளியோடும் ஓங்கு நுரையோடும்
நீலக்கடல் அகேயம் தேர்ந்தெடுத்த இல்லமிதை அரவணைக்கும்
கரையுலவும் காற்றுகளோ ஆடிவரும் பேரலையோடு ஆடாநிற்கும்
அடர்ந்த கானுண்டு அதனூடு வனதேவதை வடிவாய் நிற்கும்
இயற்கையிலே அமைந்துவரும் ஒளிவைரத் தெளிவாய்
பற்பலவாம் புனலருவித் தடாகங்கள்
புரைதீர்ந்த காலையிளங் காற்றும் நிலவும்
தொலைவில் எங்கோ மறியும் மானும்
திரியச் சமைந்த அடர்ந்த தடங்கள்
(காட்டிடையரும் ஆங்கே ஆண்டிற்கொரு முறை செல்வர்)
புதர்களில் புழைகளில் பூங்கொத்து வளைகளில்
ஐவி வனைந்த பைம்புனல் ஒளிரும் மன்றுகளெங்கும்
எழுந்த ஒலியில் இழைந்து ஓயா
நண்பகல் இசைக்கும் நைட்டிங்கேல்களும்;
இடமெங்கும் நிறைந்த இனிய நறுங்காற்று;
தெளிந்த மென்மையில் திரிதரும் காற்றில்
தீவணிந்த திறள்மணமென்ன எலுமிச்சைப் பூக்கள் கமழ
மிதந்திடும் பனிமூட்டத்தில் காணாத அருவிகள் இழியக்
கண்ணிமை படிந்து மூடும் மெல்லிய துயிலாய்ப் படரும்;
அடர்ந்த புல்தரை எங்கும் வயலெட் ஜாங்கில் விழித்து
கணையென எய்த மணத்தில் தலையுள் கிறங்கி
இனித்திடும் துன்பில் நினைவு இழந்திடலாகும் நீயும்.
ஒவ்வொரு நகர்வும், முகர்வும், கற்றையும், சுரமும்
ஆழ்ந்த இசையதனோடு ஒன்றி நின்றதுவால்;
உயிர்க்குயிராய்ப் பொலிந்ததுவும் பிறப்பின் முன்னர்
பெருகியதோர் கனவின் எதிரொலியாய்த் தோற்றியது.
தெளிவார்ந்த அமைதியினில் தூளிகட்டித் தாலாட்ட
விண்ணிற்கும் காற்றிற்கும் விரிதரையின் கடலிற்கும்
இடைப்பட்டத் தீவாய் இலகியது அதுவாம்;
திரியும் சொர்க்க வனமாய்த் திகழும் விடிவெள்ளியென ஒளிர்ந்து
இளங்காற்றுத் தைவந்த இனிய நீலக்கடலாரும் தீவம் அதுவாம்;
விழைதரு நல்லிடமதுவே. பஞ்சமோ நல்குரவோ,
பெரும்பிணியோ, போரோ, புவிநடுக்கமதோ எதுவும்
அதன் மலைமுடியில் யாண்டும் தீண்டியதும் இல்லை;
கண்குருடாய்ப் பருந்துகளும் தம்விதியில் நெடுந்தூரம் பறந்தேகும்;
சிறகடித்துச் சிவிறிவரும் புயற்காற்றும் தம்முள் இடிப்பதிக மோதிவரும்
மற்றை நிலங்களில்தான்; ஆனால் இத் தீவின் மீதோ

அமைதியின் உன்னத இடைவெளியை விட்டுச்செல்லும்;
அன்றெனிலோ பனிவீழ்ப் படிவாய் தாமழவே இழிந்ததுளி
தாம்படிந்த வயலெங்கும் காட்டிலெங்கும் புத்துயிர்க்கும்
பசுமையிலும் பொன்னமரத்து முகை விரிக்கும்.
கடலினின்றும் எழுவன, வானினின்றும் இழிவன
நளினமும் ஒளியும் மிக்கு நல்லெழில் இனிமை கரந்த
திரைக்குப்பின் திரையாய் களைந்து பரிதியும் நிலவும்
உச்சி மீவானும் உருவெளிப்பாடாய் துலக்கிய தீவம்
செம்மாந்த அழகில் ஒலியல் களைந்த எழிலுடல் ஒளிரும்
மணப்பெண் ஆகி மண்டிய காதலில் மயக்குறும் கவினில்
தன்னில் திளைத்த மிகையில் நாணம் கம்பன மாகும்.
எனினும் மண்மூடிய தீபமாய் மகத்தான உயிர் ஒன்றாய்
களியாரும் தீவம் இதின் உள்ளத்துள் தான் சுடரும்.
நித்தியத்தின் அணுக்கூறாய், நிவந்த கரும்பாறைகள் மீதும்
நீலமெழும் அலைகள் மீதும் அவற்றினிடை வெற்று வெளியாகி
நீளும் புரையெல்லாம் நிறையவரும் பச்சைக் காடுகளாய்
நிகழ்த்தும் தன்முறுவல் நீளும் வெளிப்பாடாய்.
ஆனால் அத்தனிமைக் காட்டின் முக்கிய விந்தையாகும்
எவர் கட்டியது எவ்வாறு என்றெதுவும் எளியவர்
தீவின் மக்கள் எவருமே அறியாத இல்லமொன்று;
வலியுயர் மாடமன்று ஆயினும் வனத்தின் மீது
உயரத்தால் எழுந்து நிற்கும்; உண்மையில் உவகை தன்னால்
உருகெழு அறிவின் மிக்கு உளங்கனிந்தொரு கடலின் அரசு
பாதகம் என்னும் ஒன்று புனைந்திடா முன்னம் உலகின்
இளங்காலத்து இல்லம் அஃதை இயற்றினான் எளிமைக்கால
விந்தையாய் தீவுகள் பொருமிடும் ஒன்றாய்
தன்னுடன் பிறந்தாள் தனக்கும் தன்னுடன் இணைந்தாள் தனக்கும்
தனித்தநல் சோபனமாக தழையின்பத் தில்லம் அஃதை;
மானிடக் கலையின் இடிபாடாய் அது தோற்றுவதரிது,
பூதப்பேருருவாகியது; புவியின் இதயத்தில் தன்னுரு கொண்டது,
பர்வதங்களில் பற்றி வளர்ந்தது வாழும் கல்லினில் வடிவு கொண்டது,
புழைகளினூடு இலகுவாய்த் தன்னைப்
பேருயரத்தில் எழுப்பிக்கொண்டது;
பழமை வித்தக ஓவிய உருவமனைத்தும் அழிந்தது,
அதனிடத்தில் ஐவியும் காட்டுக் கொடிகளும் பின்னிப் பிணைந்து
பலவாய்ப் பணைத்த அவற்றின் கால்கள் பெருகியிருக்கும்.
பூத்த வேதாளப் பனித்துளியன்ன மணிமுட்டங்கள்
ஒளிர விரியும் விளக்கற்ற கூடங்கள் அவை ஓய்ந்தபின்னர்
மழை கசிந்த பொந்தினூடு நிலவொளித் தடவல்களோடும்
நித்தில அணுக்கள் மின்ன, பகலொளிப் பகுதியின் துண்டம்

பரோப்பளிங்குத் தரையெங்கும்
பதித்த பூவேலையாக்கி வானமும் எட்டிப்பார்க்கும்.
இரவும் பகலும் உயர்ந்த மாடங்கள் உப்பரிகை விடுத்துத் தனியாய்
புவியும் கடலும் தம்முள் முயங்கித் தோளொடு தோள் துயின்று,
அலைகளை, பூக்களை, முகில்களை, வனங்களை, பாறைகள் தம்மை
அவற்றின் முறுவலில் நாம் கண்டு உரைக்கும்
பொருளுண்மை யனைத்தும் பொருந்தக் காணும் கனவாய்.

இந்தத் தீவும் இல்லமும் எனதே
தனிமையின் வனிதையாய் உன்னை வரித்தேன்
அகநிலைக் கூடங்கள் அவற்றில் அமைத்தேன்
பொன்னொளிர் கீழைக் காற்று புகுமுகம் ஆகி நிற்க
விரியலை மோதும் கீழே அதனைத் தழுவி
விளங்குநல் காற்று வீசும் விரியிடம் இல்லத்துள் எங்கும்.
தொட்டில் கிடக்கும் எதிர்காலத்தை அழைக்கும்
கல்லறை மூடும் கடந்த காலத்தை எழுப்பும்
தம்மில் தம் நித்தியத்தில் மடங்கித் துயில்வதன்றித்
தாமென்றும் தொலையவொண்ணா கருத்திலும் களிப்பிலும்
நிகழ்காலத்தை நிலையாக்கும் நூற்கணத்தை
நல்லிசைக் கருவிகள் தம்மை
உன்னத எழுச்சியின் உள்ளம் உவந்திடும்
உத்திகள் அனைத்தையும் அங்கே அனுப்பிவைத்துள்ளேன்.
நம் எளிய வாழ்வில் தேவை சிறிதே;
தானே அணிசெய்யச் சமைந்த சூழ்நிலையின் கேடாய்
வெற்றாடம்பரம் விரும்பாது உண்மை இரசனை என்னில்
இயற்கையோ தானீன்றது அனைத்தும் சூழ மலையில் உலவும்;
மாடப் புறாக்கள் ஐவிக் கொடிவளைவில் தம் காதல் அழுது சுணங்கும்;
மாலை உயர் மாடத்தைச் சுற்றி ஆந்தை கறங்கும்
அந்திப் பொழுதின் நடனம் விரையும் வவ்வல் இடையில்
புப்புது விண்மீன் பார்வை வீசும்
நம் வாயில் முற்றம் கிளர்ந்த நிலவில்
புள்ளிமான் கிடை வீற்றிருக்கும்
அவற்றின் அமைதித் துயிலின் மூச்சிரைப்பு
மௌன நிதானத்து இரவின் அளவெடுக்கும்.
நம் வாழ்வில் இதுவே நம் வீடாகட்டும்;
ஆண்டுகள் நம் மறைவின் மீது இலைகளாய்
உதிர்த்த தம் நேரங்களைக் குவிக்குங்கால்
அனைத்தின் மீது கவியும் பகலாய்
இந்தச் சொர்க்கத் தீவின் வாழும் உயிராய்,
நனவாய், பிரிவற்றதுவாய், ஒன்றாய் ஆவோம்.

இதற்கிடையில், நாம் இருவரும் எழுவோம், அமர்வோம்,
இணைந்து நடப்போம்
நீல அயோனிய வானிலை என்னும் கூரையின் கீழே,
புல்வெளியெங்கும் திரிவோம்; பசுமலை ஏறிச் செல்வோம்,
அங்கே நீலவான் மெல்லிய காற்றால்
தன் காதலம் துணையை தீண்டக்காண்போம்.
அன்றேல் கூழாங்கற்கள் பரவிய கரையில்
கடலும் விரைந்து மெலிதாய் முத்தமிடக்
களிசமாதியில் அதிர்ந்துத் திகழக்குவாலாய் அவணிருப்போம்;
அங்குளதெலாம் நம்மை அகப்படுத்த
அங்குளதனைத்தையும் அகப்படுத்தியே நாம்
அமைதியின் ஆனந்த வட்டத்துள் இருப்போம்;
ஒருவரில் ஒருவர் அகம்புக்கிருப்போம்,
வாழ்வதும் மற்றுக் காதல் புரிவதும் ஒன்றேயாமென.
அன்றெனில் நண்பகல் நேரம் பழமுழை தன்னுள்
ஆழ்ந்து துஞ்சும் முடிந்த இரவின் முடியா நிலவில்
விடிந்த பகலின் கதிரும் நுழையாப் புழையுள் அடைந்து இருப்போம்;
நம் தனிமையின் முகத்திரை, இரவினைப் போல,
கலையாத் துயிலும் நின் களக்கமில் ஒளியை அவிக்கும்;
அசைவற்று ஒன்றிய காதலின்
பூத்த பனித்துளியாய்ப் போந்த உறக்கம்
மீண்டும் தழலுற்று எழுவதன் முன்னர்
முத்தங்கள் அடங்கப் பொழிகின்ற மழைத்துளி.
எண்ணத்தின் பண் எடுத்தியம்புதற்கு அரிதாய் இனிக்க,
சொல்லில் அடங்கியது சுடர் நோக்கில் எழுந்துயிர்க்க,
உளத்தை ஈரும் ஒலியாய் உரையற்ற இதயத்தை
ஊடுருவி ஒலியற்ற மௌனத்தை ஒன்றிலொன்றுப் பொருந்தக்கூட்டும்.
நம் மூச்சு கலக்கட்டும், நம் நெஞ்சு பிணையட்டும்,
நம் நாளங்கள் ஒத்து ஒலிக்கட்டும்;
சொல்லற்ற வேறு உரைப்பொழிவாய் கவிந்து நம் இதழ்கள்
தம்முள் தழலும் உயிரைப் போற்றட்டும்;
நம் ஜீவனின் உள்ளார்ந்த திசுக்களில் பொங்கும் கிணறுகள்,
நம் வாழ்வின் பேராழத்தின் இடையெழுந்த ஊற்றுகள்
அனுராகத் தீவிரத் தங்கத்தூய்மையில் கலந்து மயங்கட்டும்
காலை இளம்பரிதி கதிர்மிடைந்த நீத்தங்களாய்.
நாம் ஒன்றுபோல் ஆவோம் இருவடிவில் ஓர் உயிராய்.
ஒ! இரண்டெதற்கு? இரட்டை இதயத்தில் ஒரு விருப்பம்.
வளர்ந்தது வளரும் வளர
விரியும் தழல் நீளும் வால்நட்சத்திரமிரண்டாய்,
அதன் பயிர்ப்பில் பயிலும் கோளங்கள் அவ்வாறே ஆகும்.

தொடும், கலக்கும், தம் வடிவம் மாறும்;
என்றென்றும் நின்றெரியும், தீராமல் என்றும் நிற்கும்;
ஒருவர் உள்ளம் மற்றவர் உணவாய்;
தூய்மையின் தழலாய், ஒளியாய், தம் நிறைவின்றி என்றும்,
தம் ஒளிவாழ்வைத் தண்ணிய ஊனால் தாங்காதாகி
விண்ணோக்கி உயரும் ஆங்கே விலகாத தன்மைத்தாகும்;
இருவிழைவில் ஒரு நம்பிக்கை; கவிந்த இருமனங்களுக்குள்
ஒன்றே விழைவு, ஒரே வாழ்வாய், மடிதலும் ஒன்றாய்,
சொர்க்கம் ஒன்று, நரகம் ஒன்று,
ஓர் அமரத்துவம், ஒரே அழிவு; அந்தோ என்னை!
காதலின் அரும்பெரும் உலகின் உயரத்தை
ஊடாடிச் செல்லும் என் உயிரும் ஊர்ந்து செலச்
சிறகடிக்கும் வார்த்தைகளோ
தீப்பறந்து பாயுங்கால் தடம் வளைத்த
ஈயச் சங்கிலியாய் உருகாநிற்கும்.
வெய்துயிர்த்தேன்! அமிழ்வேன்! நடுக்குற்றேன்! முடிவேன்!
*

ஷெல்லி *(4. 8. 1792 - 8. 7. 1822)*

காலட்ரிஜ், வார்ட்ஸ்வொர்த், கீட்ஸ், பைரன், போன்ற ஆங்கிலக் கவிஞர் வரிசையில் இடம் பெற்றவர் ஷெல்லி. ஈடனில் கல்வி கற்றார். கிறிஸ்தவ மதத்திற்கு எதிரான 'நாஸ்திகத்தின் அவசியம்' என்ற சிறு கட்டுரையின் காரணமாக ஆக்ஸ்போர்டிலிருந்து *(1811)* வெளியேற்றப்பட்டார்.

எபிசைகிடியானிலிருந்து ஒரு பகுதி இங்கே தமிழாக்கமாகத் தரப்பட்டுள்ளது.

சில குறிப்புகள்:

அயோனியம் - *Ionia* - கிரேக்கத் தீவொன்று.

ஆதிச்சுகமான பழங்காலம் - *Elysian* என்பது மூலம்.

அகேயம் - கிரேக்கக் கடல் ஒன்று, தீவுத்தொகுதி ஒன்றின் பெயரும் ஆம்.

ஐவி - கொடிவகைகளுள் ஒன்று.

வயலட் (ஊதாப் பூவா?), ஜாங்கில் - அந்த பிரதேசப் பூக்களின் பெயர்கள்.

பரோப்பளிங்குத் தரை - பரோஸ் என்ற கிரேக்கத் தீவின் வெண்பளிங்குக் கற்கள் தரையில் பதிக்கப் பெரிதும் விரும்பிப் பயன்படுத்தப்பட்டவை.

பொருளுண்மை - *reality* என்பது மூலம்.

## இயேசுவும் சமாரியப் பெண்ணும்

நெடும் பயணப் பாலை நடுவே
வறுத்தெடுக்கும் வெயிலணிந்து
தாகத்தாற் துவண்ட மேனியனாய்
இறங்கிப் பருகச் சிரமமான
ஓர் ஆழ்கிணற்றருகே வந்தவன்
கண்டான்,
தூரத்தே குடங்களுடன்
நீண்ட கயிற்று வாளியுடன்
வந்துகொண்டிருந்த ஒரு பெண்ணை!
தேவதையை!
தீராத இத்தாகமும் தரிசனமுமோ
இப்புவி வாழ்வின் சாரம்?
அங்கே பெருநகரங்களில் மனிதர்களை
ஓயாது உந்திக்கொண்டிருக்கும் ஆசைகளும்
இத் தாகமும் ஒன்றா?
அவனது வியப்பும் தெளிவும்
துயரும் தேங்கிய முகமோ
அவனை அவளுக்குத் தேவதூதனாக்கியது?

# 1

தேவாலயத்தின் மணியெழுந்து முழங்கியபோது ஒலியின் நாதச் சிறகுகள் பாண்டியின் செவிகளில் இனிமையாகச் சடசடத்தன. பாண்டி கடல் பார்த்தவண்ணம் கரையில் நின்றிருந்தான். வலது கையை எடுத்து இயல்பாக நெற்றியில் சிலுவை வரைந்து வணக்கத்துக்குப் பணிந்தான்.

அக்கணத்தில் அவனுக்குள் கனிந்த உணர்வு புனிதமானதாக இருந் தது. அதற்கு முன் எப்போதும் அறிந்திராத பூவாக மலர்ந்தது.

ஆலயமணியின் ஓசையை சிறு பிராயத்திலிருந்தே செவிகளால் ருசித்து வருகிறான். கடலையும் எத்தனையோ முறை கண்களால் அருந்திப்பார்த்திருக்கிறான். இன்றுதான் கேள்வியும் பார்வையும் இணைந்து பிணைந்திருக்கிறது. மணியோசை கடலைகள் மீது மிதந்தாடித் திரும்புவது நினைவற்றதொரு இன்பத்தைத் தந்தது.

பாண்டி தலையைத் திருப்பி ஆலயத்தைப் பார்த்தான். கோபுரம் மட்டுமே தெரிந்தது. வானத்தை சுட்டிக் காட்டும், இரவானால் ஒரு நட்சத் திரத்தைத் தொட்டுப் பார்க்கத் துடிக்கும் கம்பீரமான ஒரு கலை விரல் போல அது கோபுரம் நிமிர்த்தி நின்றது.

தேரித்துறை திருவிழாவுக்கு பலமுறை பாண்டி வந்திருக்கிறான். எட்டாம் நாளுக்கு வந்து மாதரசி பெரியம்மா வீட்டில் மூன்று நாட்கள் தங்கிக் கொண்டாடிவிட்டுத் திரும்புவதுதான் வழக்கம். இந்த முறைதான் கொடியேற்றத்தைப் பார்க்கும் வாய்ப்பு அமைந்திருக்கிறது.

சுருண்டு சுருண்டு வந்து கரையில் முடியும் அலைகள் இப்போது சற்று வித்தியாசமாகப் பட்டது. பொங்கித் திளைத்து நடனமிடும் வெண் மலர்கள்.

அதை ஒரு கவிதையாக்க முடியுமா என ஒரு கணம் யோசித்தான். பிறகு திரும்பி நடக்கத் தொடங்கினான். கால்கள், காற்றின் வால்கள் போல எடுத்து வைக்க எடுத்து வைக்க இதமாக இருந்தன. கடலின் குருத்து மணல்கரை விரித்த உள்ளங்கையாகி பாண்டியை ஒரு பரிசுப் பொருளாக பாவித்து ஏந்தி வழியனுப்பியது. மேற்கே மீன் பிடித்துறையில் பட்டறை ஏறி நின்றன வள்ளங்கள். அண்ணாந்து பார்த்தான். சற்று முன் மேகப் பிசிறு போல துளிர்த்திருந்த ஆறாம் பிறை முகில் திரளில் மறைந்து விட்டி ருந்தது.

# 1

தேவாலயத்தின் மணியெழுந்து முழங்கியபோது ஒலியின் நாதச் சிறகுகள் பாண்டியின் செவிகளில் இனிமையாகச் சடசடத்தன. பாண்டி கடல் பார்த்தவண்ணம் கரையில் நின்றிருந்தான். வலது கையை எடுத்து இயல்பாக நெற்றியில் சிலுவை வரைந்து வணக்கத்துக்குப் பணிந்தான்.

அக்கணத்தில் அவனுக்குள் கனிந்த உணர்வு புனிதமானதாக இருந் தது. அதற்கு முன் எப்போதும் அறிந்திராத பூவாக மலர்ந்தது.

ஆலயமணியின் ஓசையை சிறு பிராயத்திலிருந்தே செவிகளால் ருசித்து வருகிறான். கடலையும் எத்தனையோ முறை கண்களால் அருந்திப்பார்த்திருக்கிறான். இன்றுதான் கேள்வியும் பார்வையும் இணைந்து பிணைந்திருக்கிறது. மணியோசை கடலைகள் மீது மிதந்தாடித் திரும்புவது நினைவற்றதொரு இன்பத்தைத் தந்தது.

பாண்டி தலையைத் திருப்பி ஆலயத்தைப் பார்த்தான். கோபுரம் மட்டுமே தெரிந்தது. வானத்தை சுட்டிக் காட்டும், இரவானால் ஒரு நட்சத் திரத்தைத் தொட்டுப் பார்க்கத் துடிக்கும் கம்பீரமான ஒரு கலை விரல் போல அது கோபுரம் நிமிர்த்தி நின்றது.

தேரித்துறை திருவிழாவுக்கு பலமுறை பாண்டி வந்திருக்கிறான். எட்டாம் நாளுக்கு வந்து மாதரசி பெரியம்மா வீட்டில் மூன்று நாட்கள் தங்கிக் கொண்டாடிவிட்டுத் திரும்புவதுதான் வழக்கம். இந்த முறைதான் கொடியேற்றத்தைப் பார்க்கும் வாய்ப்பு அமைந்திருக்கிறது.

சுருண்டு சுருண்டு வந்து கரையில் முடியும் அலைகள் இப்போது சற்று வித்தியாசமாகப் பட்டது. பொங்கித் திளைத்து நடனமிடும் வெண் மலர்கள்.

அதை ஒரு கவிதையாக்க முடியுமா என ஒரு கணம் யோசித்தான். பிறகு திரும்பி நடக்கத் தொடங்கினான். கால்கள், காற்றின் வால்கள் போல எடுத்து வைக்க எடுத்து வைக்க இதமாக இருந்தன. கடலின் குருத்து மணல்கரை விரித்த உள்ளங்கையாகி பாண்டியை ஒரு பரிசுப் பொருளாக பாவித்து ஏந்தி வழியனுப்பியது. மேற்கே மீன் பிடித்துறையில் பட்டறை ஏறி நின்றன வள்ளங்கள். அண்ணாந்து பார்த்தான். சற்று முன் மேகப் பிசிறு போல துளிர்த்திருந்த ஆறாம் பிறை முகில் திரளில் மறைந்து விட்டி ருந்தது.

கடலையும் ஊரையும் இணைக்கும் 'கடல் தெரு' பாதையில் வீடுகள் எதுவும் கட்டப்படவில்லை. ஆனாலும் எல்லோரும் அதை 'கடல் தெரு' என்றே பேச்சில் குறிப்பிட்டார்கள். 'வீடுகள் இல்லாத விசித்திரத் தெரு.' கடற்கரை மேட்டிலிருந்து ஊர் வரை சீமை உடைமரங்கள் ஒன்றோடு ஒன்று கிளை பின்னிக்கொண்டு நின்றன. வலது புறம் கல்லெறியும் தூரத்தில் பெரிய ஆலமரம் நின்றிருந்தது. நூறு வயதுக்கு மேலிருக்கும். விழுதுகள் கணக்கின்றி நாற்புறமும் தரையிறங்கி பூமிக்குள் நுழைந்து கால்பாவி விட்டிருந்தன. ஆயிரம் கால் மண்டபம் போன்றும் காட்சியளித்தது. காற்று வேகமாக வீசும்போது அதன் இலைகள் லட்சோப லட்சம் விரல்கள் சேர்ந்து ஒரே நேரத்தில் சொடுக்கடிப்பது போல் அபூர்வமான ஒலிகளை எழுப்பின. அருகில் சென்று ஆலமரத்தின் விழுதுகளைத் தொட்டு, நிழலில் உலாவி உட்கார்ந்து விட்டு வரவேண்டுமென பாண்டி பலமுறை நினைத்திருக்கிறான். ஆனாலும் சின்னதொரு மன உறுத்தலால் அதை நிறைவேற்றிக் கொள்ள முடியவில்லை. ஆடுமாடுகளைத் தவிர அந்த ஆலமரத்தடியில் மனிதர்கள் புழங்கிய தடயம் இல்லை. சருகுகள் அப்படித்தான் மண்டிக் கிடந்தன. பகலைக் கழிக்க சருகுக் குவியலுக்குள் விஷப்பாம்புகள் சுருண்டிருந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

பாதை முடிவில் தெற்குத் தெரு மேற்கு நோக்கி நீண்டு போனது. அமலோற்பவ அன்னை ஆலயம் இன்று அன்பில் நெகிழ்ந்து இருப்பது போலொரு உணர்வு ஏற்பட்டது. கல்லும் மண்ணும் கலந்து கட்டிய கட்டிடம் எப்படி ஒரு மனிதனைப்போல் நெகிழ்ச்சியுற முடியும் என்ற ஒரு கேள்வி தானாக எழுந்தாலும், தேவாலயத்தைக் கட்டிய கலைஞன் அதன் வடிவச் சூத்திரத்தில் ஒரு ரகசியப் புன்னகையை ஒளித்து வைத்திருப்பான் போலும்; திருவிழாக் காலத்தில் மட்டும் கண்ணில் அது மலரும் வண்ணம் சிருஷ்டித்திருப்பான் போலும் என்று பாண்டி நினைத்துக்கொண்டான். வெயில் சுத்தமாக தணிந்தொதுங்கிப் போய்விட்டிருந்தது. இனி நாளைக் காலை வரை அதைப் பார்க்க முடியாது. ஊமை வெளிச்சத்தில் வீதியும் வீடுகளும் அமைதியைத் தழுவிக்கொண்டிருந்தன.

பாண்டி தெற்குத் தெரு வழியே ஆலயத்தை நோக்கி நடந்தான். வழியில் டீச்சர் வீட்டின் முற்றத்தில் தாள்ரோஜாக் கொடி பந்தல் கட்டி நின்றது. தாள்ரோஜாக்கள் வெள்ளையும் சிகப்புமாகக் கலந்து ஏராளமாகப் பூத்திருந்தன. தாள்ரோஜா பூக்களின் வாசனையை நினைவுகூர்ந்து பார்த்தான். அதன் வாசனை வகை பிடிபடவில்லை. பிறகுதான் உணர்ந்தான். அவன் தாள் ரோஜா பூக்களை முகர்ந்து பார்த்ததேயில்லை. பந்தல் அருகே சென்று ஒரு பூவைப் பறித்துப் பார்க்கலாமா என்று ஆசையும் யோசனையும் சேர்ந்து வந்தது. ஏறக்குறைய எல்லா டீச்சர்களுமே கண்டிப்பானவர்கள். விதிவிலக்குகள் மிகக் கடுகடுப்பானவர்கள் என்பதால் பந்தலைக் கடந்து நடந்தான்.

நாதஸ்வரத்தில் 'அன்னையே வேளாங்கண்ணியே' வாசித்தார்கள். வித்வான்கள் ஜிகினா உடையில் சற்றே வேடிக்கையாக நெளிந்தார்கள். மண்டபப் படிக்கட்டு முடிவில் திருப்பலி உடை தரித்து மூன்று பாதிரிகள் நின்றிருந்தார்கள். சிறப்பு குரு அழைப்பில் ஃபாதர் ஜெகத் பிரைட்டும் வந்திருந்தார். முன்னமே கவனித்துவிட்டான். அவர் அவனைப் பார்த்தால் மகிழ்ச்சியடைவார். கோவில் வளாகத்துக்கு வெளியே 'அருணா ஐஸ், வள்ளியூர்; ரதிமீனா ஐஸ், திசையன்விளை' சைக்கிள்காரர்கள் வித்வான்களுக்குப் போட்டியாக ஹாரன் இசைத்தார்கள். தெரு அந்தம் வரை வெறிச்சோடிக் கிடந்தது. ஊர் ஜனங்கள் திரண்டு மொத்தமாகக் கொடிமரத்தைச் சுற்றிக் குவிந்திருந்தனர். பெண்களையும் ஆண்களையும் கொடிமரம் குறுக்கே நின்று இரண்டாகப் பிரித்திருந்தது.

நடுவில் நின்ற பாதிரி நைலான் கயிற்றை கையில் வாங்கியதும் கொடியேற்றம் தொடங்கியது. மேளதாளத்தின் கதி கூடியது. கோயில் பிள்ளை ஆலயமணியை உற்சாகமாக அடித்தார். காற்றில் வெண்கலக் குரல் அதிர்ந்து முழங்கியது. பெரியவர்கள் கரம் கூப்பி வணங்கினார்கள். சிறுவர் சிறுமிகள் கைதட்டி ஆர்ப்பரித்தார்கள். வாணங்கள் சீறிச் சென்று வெடித்தன. ஆத்திர அவசரமில்லாமல் பாதிரி நிதானமாக ஒரு கயிற்றை விட்டுக் கொடுத்தபடி மற்றொன்றை இழுத்துக் கொண்டிருந்தார். மெது மெதுவாக கொடியேறியது.

தவில் முழக்கம், வெடியோசை, குழந்தைகளின் ஆரவாரம் என பல வித ஒலிகளின் மோதலால் உடல் லேசாக அதிர்வதை பாண்டி உணர்ந் தான். மகிழ்ச்சி! வகையறியா மகிழ்ச்சியால் நிரம்பியிருந்தான். செயற்கை யாக உருவாக்க முடியாத மகிழ்ச்சி. அவனைப் போல அங்கிருந்த எல் லோருமே அப்படியொரு உணர்வுக்கு ஆட்பட்டிருந்தார்கள். இலக்கற்ற புள்ளியில் மலர்கின்ற மனித முகங்களின் வருணிக்க முடியாத அழகை, நெகிழ்வைக் கண்டான்.

வெடியோசை கேட்ட ஒவ்வொரு முறையும் இளம் பெண்கள் கண்களை இறுக மூடினார்கள். காதுகளை புன்னகை எட்டிப் பார்க்கக் கைகளால் பொத்தினார்கள். 'ஏசுவே' என்று சத்தமில்லாமல் கூப்பிட்டார் கள். உடலைக் குறுக்கினார்கள். நடுங்குவது போல் துடித்தார்கள். முகம் முகமாகத் தாவித்தாவி நகர்ந்து சென்ற பாண்டியின் கண்கள் இருதயராசா கெபி மேடையை அடைந்தபோது மார்புக் கூட்டுக்குள் இதயம் பனிக் கட்டியாக மாறிச் சில்லிட்டது. அதற்கு மேல் அவன் கண்கள் சிறிது நேரத் துக்கு செயலிழந்ததுபோல் ஊறைந்து விட்டன. அவர்கள் மத்தியில் அவர் களோடு அவர்களாகத்தான் அந்த இளம்பெண்ணும் நின்றிருந்தாள். ஆனால் அவளோ அஞ்சவில்லை. நடுங்கவில்லை, 'வெடி வெடித்தால் எனக்கென்ன' என்பதுபோல் ஒரு சிலையின் உறுதியோடு வானத்தை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் வெறித்த அத்திசையில் அவ்வெளியை அவனும் நோக்கினான். பச்சை, சிவப்பு, மஞ்சள், நீலம்,

வெள்ளையென தீப்பொறிகள் அந்தரத்தில் பேரொளியுடன் வெடித்து முத்துக்களாகச் சிதறி ஒளிர்ந்து மறைந்தன. மாலை மயங்கி இருள் வானம் நிறம் மாறிக்கொண்டிருந்தது. குழல் விளக்குகளின் வெளிச்சத்தை நெட்டித் தள்ளி தோற்கடிப்பதுபோல் அவள் முகத்தில் வண்ண வண்ண ஒளிக் கீற்றுகள் பட்டுத் தெறித்தன. 'ஒண்டொடி!'

பாண்டி தன் கண்கள் வழியாகத் தானே வெளியேறுபவன் போல அவள் முகத்தையே ஊடுருவிப் பார்த்தான். அது வரை அவன் கண்கள் அறியாத பார்வை அது. பனிக்கட்டி உருகியோடி உடலெங்கும் குளிர்ச்சியாகப் பரவியது. கண்களைச் சுற்றியும் நெற்றியிலும் மெலிதான வெப்பத்தை உணர்ந்தான். அவள் கட்டியிருந்த மகிழம் பூ நிறச் சேலை நுனியைத் தோளோடு சுற்றி முன்னுக்கு இழுத்துப் பிடித்தபடி கைகளைக் குறுக்காக மடித்துக் கட்டியிருந்தாள். சூடியிருந்த மஞ்சள் ரோஜா மறைந்திருந்து அவள் செவிமடல்களைப் பொறாமையோடு பார்த்தது. புருவ மத்தியில் மழைத்துளி போலொரு பொட்டு செஞ்சுடராய் ஒளிர்ந்தது. 'மாக விசும்பின் திலகமொடு பதித்த திங்கள் அன்ன திருமுகம்.'

திருத்தமான முகத்தை, சோர்வற்ற புருவங்களை, திமிரற்ற கன்னங்களை, மிதந்த விழிகளை புரியாத பிடிவாதத்துடன் அவன் பார்த்துக்கொண்டிருந்தபோது அவள் முகத்தில் சிறு சலனம் ஏற்பட்டது. அந்தரத்தின் மீது வைத்திருந்த பார்வையை கண்களுக்கே திருப்பிவிட்டாள். கீறலுற்றது போல் லேசாகத் திறந்திருந்த உதடுகளை வாய்க்குள் மடித்திழுத்து பதமாகக் கடித்துக்கொண்டாள். கருவிழிகள் கண்ணுக்குள்ளேயே இரண்டு முறை அலைந்தன. முகத்தை வலது தோளுக்குப் பக்கமாகத் திருப்பியவள் சின்ன எச்சரிக்கையோடு மண்டபத்தின் வாசலை நோட்டமிட்டாள். பாண்டியின் பார்வையும் அவள் பார்வையும் நேர்கோட்டில் சந்தித்தபோது, கொடி, மர உச்சிக்குப் போய்விட்டிருந்தது.

மதகு திறந்து எங்கிருந்தோ வீசி வந்த காற்றில் கொடி அலையடித்துப் பறந்தது. காற்றின் அலைகளால் படபடத்த கொடி வினோத ஒலியெழுப்பியது பாண்டியின் மனசோடு சேர்ந்து. அவள் கண்களில் ஒட்டியிருந்த சின்ன எச்சரிக்கை முதலில் காணாமல் போனது . விளக்கைத் தூண்டியது போல் பார்வை பிரகாசமடைந்தது. மடித்துக் கடித்திருந்த உதடுகளை விடுவித்தபோது முத்தமிடக் குவியும் பாவனை எதிர்பாராமல் உதட்டில் கூடி வர அவளுக்கு ஏற்பட்ட சிறு பதற்றத்தில் வேகமாக விலகிச் சென்றது. பாண்டி நிலைகுலைந்தான். உடலிலும் மனசிலும் ஊடுருவிய ஆவலும் அதிர்ச்சியும் அவஸ்தையும் மயக்கமும் குறும் பெருமூச்சாக வெளியேறியது. சதுக்கத்தில் ஏறி கொடிக்கயிற்றை அடிமரத்தில் இரண்டு பேர் சுற்றிக் கட்டினார்கள். வலிந்து சிறு பொழுது ஏதோ யோசனையோடு தலை தாழ்த்தி நின்றிருந்தவள் பார்வை மீண்டும் பாண்டி மேல் நிமிர்ந்தது. கல்லை மண்ணை மரத்தை ஜடத்தை பார்ப்பது போல் வெறுமனே

பார்த்துவிட்டு பார்வையை இமைத்துக் கத்தரித்து முகத்தை யோசனையோடு திருப்பிக்கொண்டாள்.

நவ நாள் துவக்கமாக கொடிமரத் துதி பாடப்பட்டது. மூன்று பாதிரிகளும் புனித தீர்த்த சொம்பை தலைக்கு மேல் உயர்த்திப் பிடித்தபடி கூட்டத்துக்குள் திசைக்கொருவராய் நுழைந்தனர். திரண்டிருந்த பக்தர்கள் அனைவர் மீதும் அமலோற்பவ அன்னையின் அருமருந்தைத் தெளித்தார்கள். குளிர்ந்த நீர்முத்துக்கள் அவள் மீது எங்கு தெறித்தன என்று தெரியவில்லை, சிறு புன்னகையோடு அவள் உடல் சிலிர்த்துக் கொண்டபோது பாண்டியின் கண்களை அவள் கண்கள் சந்தித்தன. சற்றே நெடிய சந்திப்பு. வேட்டைக்காரியின் வில்லில் தயங்கித் தங்கியிருந்த அம்பொன்று துணிந்து பாய்ந்தது. பார்வையின் குரல் பறந்து வந்து அவன் மனத்தில் தைத்தது. ''என்னத் தெரியல?'' என்று மீண்டும் மீண்டும் கேட்டது. நினைவு கூர்மையடைந்த நாளிலிருந்து பரிச்சயமான லட்சணமான் முகங்களைத் தொகுத்துப் பார்த்தான். இதற்கு முன் அவளைப் பார்த்ததே இல்லை. ஆனாலும் அவனுக்கு மிக நெருக்கமான யாரோ ஒருவரின் சாயல் அவள் முகத்திலிருந்தது போன்ற உணர்வு.

பாதிரிகளைப் பின்தொடர்ந்து திருப்பலிக்காக மக்கள் கூட்டம் கோவிலுக்குள் நுழைந்தது. மண்டபத்தில் நின்றிருந்தவர்களுக்கு ஆசியருளியபோது பாண்டியின் முன்நெற்றியிலும் கன்னத்திலும் கழுத்து வளைவிலும் நீர்முத்துக்கள் தெறித்தன. குழந்தைகளும் பெண்களுமாக மண்டபப் படிக்கட்டுக்களில் ஏறி உள்ளே சென்ற வண்ணமிருந்தனர். சற்று ஒதுங்கி வழிவிட்டு நின்றிருந்த பாண்டி அவள் நெருங்கியதும் திடீர் ஆர்வத்தால் சுண்டப்பட்டான். ஆனாலும் கண்ணை வைத்துக்கொண்டு சும்மா இருக்க முடியவில்லை. அவள் கடைவிழி பால் கத்தியாக தூய்மையும் கூர்மையுமாக துடிப்புடன் அலைந்தது. கருவிழிக்குத் துணையாக ஒரு மச்சப் புள்ளியிருந்தது. காற்றைச் சுவாசிக்க மறந்து மூச்சை முகர்ந்து கொண்டிருந்தான். ஒரு ஆளாய் நின்று இரண்டு ஆளை மறைக்கும் குண்டான பெண்மணி மீது லேசாக ஆத்திரப்பட்டான். தன்னுடன் வந்த இளம்பெண்களோடு பேசியபடி படியேறியவள் பேச்சை நிறுத்தாமலே பாண்டியை ஒரு பார்வை பார்த்துவிட்டு உள்ளே போனாள். 'காதளவோடிய கண்கள்!' ஒரே நேரத்தில் எப்படி மூன்று காரியங்களைச் செய்கிறாள் என்று ஆச்சரியப்பட்டான். தீர்த்தத்துளிகளின் குளிர்ச்சியை இப்போது உடலில் உணர்ந்தான். அவனுக்குள் ஒரு வானம் கனிந்து மனம் விட்டு மழை பெய்யத் தொடங்கியது. சிறுசிறு தூறல்களின் சில்லிடும் பாடல்களுக்கு ஏற்றபடி உயிர் ஒரு புது நடனம் பயின்றது.

கண்டு கேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே உள.

☆☆

*நிறுத்தி வைத்த வீணையை விடச் சற்றே உயரமாக இருப்பாளா, காலத்தோடு கலந்து புரண்டு கனிந்த கூழாங்கல் நிறமா, மின்னொளிரும் சின்னச் சின்னத் திராட்சைக் கண்களா, முதலும் முடிவுமற்ற மலர்வின் இதழ்விரிப்பே புன்னகையா, பிறரைக் கையசைத்து அழைக்கும்போது ஒற்றைச் சிறகடித்துப் பறப்பாளா, பிரியம் பொங்கிப் பெய்த மழைகளுக்கு பிறந்த நாள் கொண்டாடுவாளா, பழத்தோலெனக் குரலிலிருந்து தற்காப்பை நீக்கி வார்த்தைகளின் நிறம் நீங்காமல் பேசுவாளா, வாழ்க்கைக்கும் கனவுக்குமான இடைவெளியில் பாதைகளுக்கு மணல்சடை பின்னி நடப்பாளா, கழுத்து வியர்வை துடைத்த கைக்குட்டையால் கொஞ்சம் நெஞ்சுக்கும் விசிற வெயில் திரும்பியோடுமா, காலைச் சூரியன் நாளை அவள் கால் பெருவிரல் நகத்தில் உதித்தெழுமோ என்று ஊகிக்க வைப்பாளா, அவளைக் கண்டதும் மூளைக்கு வாலும் இதயத்துக்கு காலும் முளைக்குமா?*

'ஆகாய மாளிகையில் எந்தன் ஆண்டவன் இருக்கின்றார். அழகிய மலர்களிலே அவர் அழகாய் சிரிக்கின்றார்.' கோவில் ஒலிபெருக்கியில் பாடல் ஒலித்தது. இசை கேட்க இனிமையாக இருந்தது.

கொடியேற்ற திருப்பலி வழிபாடு முடிந்து ஆலயத்தை விட்டு குழந்தைகளும் பெண்களும் தேவ அருள் பொருந்திய அமைதியான முகத்துடன் வெளியேறிக் கொண்டிருந்தபோது, வளாகச் சுவரருகில் அந்த இளம்பெண்ணின் கையைப் பற்றி பாட்டி தன் பக்கம் இழுத்தாள். பாண்டியும் அருகிலிருக்க பாட்டி அந்த இளம் பெண்ணிடம் கேட்டாள். ''தாயீ... நீ யாரு மகம்மா?'' சற்றும் இதை எதிர்பாராத அந்த இளம்பெண் ஒரு கணம் கலவரமடைந்தாள்.பளபளப்பான விழிகளில் படபடப்பைக் காண முடிந்தது. பாட்டியின் அதிரடிச் செயல் இளம் பெண்ணைக் காட்டிலும் பாண்டிக்குள் பெரும் சங்கடத்தை உண்டுபண்ணியிருந்தது. பாட்டியிடம் பிடிக்காத குணங்களில் இதுவும் ஒன்று. தெருவில் ஒருவரை எதிரில் கண்டுவிட்டால் போதும், உள்ளூர் வெளியூர் என்ற பேதம் ஏதும் பார்க்கமாட்டாள். வருவோர் போவோரை மறித்து யார் எவரென விசாரித்து அடையாளம் கண்டுகொண்டு அவர்கள் மூதாதையர் முப்பாட்டன் குப்பாட்டன் சுகசேதியெல்லாம் விசாரித்து விட்டுதான் விடுவாள். கண்பார்வை கொஞ்சம், எதிராளி சொல்லும் தகவல் கொஞ்சம், ஞாபகக் குறிப்பிலிருந்து கொஞ்சம் கலந்து ஊகித்து ஒரு உருவத்தை உருவாக்கி உயிரூட்டி தன் சாமர்த்தியத்தை மெச்சிக் கொள்வாள். தனிஸ்லாஸ் மகன் 'நான் தங்கமணியில்லை...தங்கமணியில்லை' என்று எவ்வளவோ மறுத்தும் பாட்டி அடம் கட்டி அவரை தங்கமணியாக்கியிருக்கிறாள். பிற மனிதரை அறிந்து கொள்ளும் பாட்டியின் ஆர்வம் வன்முறையைப் போலத் தோன்றும்.

இப்போது பாட்டி அந்த வன்முறையின் உச்சத்திலிருப்பதாக

மனசுக்குள் தவித்தான். ஆனாலும் கடுகடுப்பை முகத்தில் காட்டிக் கொள்ளவில்லை. அந்த இளம்பெண் தர்மசங்கடத்தின் பாதிப்பிலிருந்து மீண்டு இளம் சிரிப்பில் உதடுகளை நெகிழவிட்டு கண்களில் கனிவான பார்வையோடு அவள் அருகில் நின்றிருந்த மற்றொரு இளஞியைப் பார்த்தாள்.

''இவளுக்கு வெளியூர் பாட்டி. திருச்சி. பிரண்டுதான். எங்க வீட்டுக்கு விருந்துக்கு வந்துருக்காங்க'' அருகில் நின்றிருந்தவள் விளக்க மளித்தாள்.

இளம்பெண் சிரிப்பை சற்றே விஸ்தாரப்படுத்தி ஆமோதிப்பது போல் தலையை அசைத்தாள். அதை பாண்டிக்கும் தெரியப்படுத்தும் பொருட்டு அவனைக் கண்ணோடு கண் பார்த்து வைத்தாள்.

''நீ யாரு தாயி?''

மீண்டும் அவளே தன் விளக்கமளிக்க வேண்டியதாயிற்று. ''நான் லீலா டீச்சர் பொண்ணு புனிதா.''

கண்களை இடுக்கி மின்விளக்கு ஒளிக்கூச்சத்தை சமாளித்தவாறு பாட்டி இளம் பெண் முகத்தை மேலும் ஊடுருவிப் பார்த்தாள். உலர்ந்த பாறைத் துண்டையொத்த பாட்டியின் முகத்தில் இளக்கமும் குழைவும் தோன்றிப் பரவுவதை கவனித்தான். இப்படி ரசவாதத்தை பாட்டியிடம் முன்னெப்போதும் அவன் கண்டதில்லை. அழுத்தமான பிடியில் சதை பிதுங்க வலியுண்டாகும் நிலையிலிருக்கும் இளம் பெண்ணின் வலது கையை பாட்டி விடுவித்துவிட்டால் நன்றாக இருக்கும் என நினைத்தான். தன் கையை விடும்படி கேட்டுக் கொள்ளவோ, வலிந்து இழுத்துக் கொள்ளவோ அச்சமயம் சக்தியற்றவளாக அவளும் இருந்தாள்.

'' உனக்கு இப்போ என்ன வயசாவுது?'' குரலில் எந்த அதிகாரமும் இல்லை. மரியாதைக்குரிய தொனி. அதை அறிந்துகொண்டதும் மயங்கி விழுந்து விடுவாள் என்று தோன்றும் விதத்தில் கேட்டாள்.

இளம்பெண்ணுக்குள் என்ன யோசனைகள் எழுந்ததோ தெரிய வில்லை. கூற பாதி விருப்பமும் கூறாதிருக்க பாதி விருப்பமுமாக வயசுக் கணக்கைத் தேடிக்கொண்டிருந்தாள். டீச்சர் மகள் பாண்டியை அழுத்தந் திருத்தமாக ஏற இறங்க நோட்டம் விட்டபின் பாட்டியிடம் தட்டையான குரலில் கேட்டாள் ''அதெல்லாம் எதுக்கு கேக்குறீங்க?''

பாட்டியின் செய்கையால் பாண்டி மிகவும் வெட்கமடைய வேண்டியதாகிவிட்டது. அங்கிருந்து நகர்ந்து ஓடி மறைந்துவிடலாமா என எண்ணினான். இளம்பெண்ணை பாண்டிக்கு மணம் முடிக்க பாட்டி நினைக்கிறாள் என்று அவர்கள் கற்பனை செய்துகொண்டார்கள் போலும். கோபம் கோபமாக வந்தது. நாசி நுனி கனன்றது. எல்லாம் சில நொடிகள் தான். பாட்டியின் இடுக்கிய கண்களின் ஓரம் ஈரம் மின்னியதைக் கண்டதும் மூவரும் திகைத்தார்கள். பாட்டி ரகசியக் குரலில் பேசுவது

போல் கூறினாள். அவள் இடது கை அனிச்சையாய் அவள் நெஞ்சுக்கு வந்துவிட்டது. திக்கித் திணறித் தேம்பிக் குலுங்காத குறையாக வெளிப் பட்ட அவள் வார்த்தைகள் அவர்களை நிஜ உலகத்திலிருந்து நெம்பித் தள்ளித் தள்ளி வேறு உலகத்திற்கு கொண்டுபோய்ச் சேர்த்தது. பாண்டிக்கு கண்ணை இருட்டிக்கொண்டு வந்தது. ரத்த ஓட்டம் மீறியது. இளம் பெண்கள் இருவர் முகமும் வெளிறிப் போய்விட்டது. காலம் நகர மறுத்தது.

''புனிதா... புனிதா...'' அழைப்பு குரல் வந்த திசையில் அவள் திரும்பினாள். மண்டபத்திலிருந்து பாட்டு வாத்தியார் அழைத்தார். அவரருகே இன்னும் பலர் குழுமி நின்றிருந்தனர். ஃபாதர் ஜெகத் ப்ரைட் பாண்டியை அடையாளங் கண்டு கொண்டு மலர்ந்த முகத்துடன் கையசைத்தார். இறுக் கத்தைத் தவிர்க்க தக்க தருணமென்று புனிதாவும் சாராவும் விடைபெற்று மண்டபத்தை நோக்கி நடந்தனர். தப்பித்தோம் பிழைத்தோம் என விரைந் தார்கள். பாண்டி நிதானமாக வந்தபோது ஜெகத் ப்ரைட் கைகுலுக்கி புன்னகைத்தார். மும்பை ரிட்டன் பற்றி சம்பிரதாயமாக விசாரித்து விட்டு பாட்டு வாத்தியார் பக்கம் திரும்பி ''இன்னோசன்ட் சார், 'அன்பில் உண்டோ ரகசியம்' கேட்டுருக்கீங்கள்ல... பாட்டு வரியெல்லாம் எப்படி இருந்துச்சு?'' ''கேட்டுருக்கேன். நல்லா இருந்துச்சு. கொஞ்சம் டிபரண்ட் மெத்தட்ல எழுதியிருந்தாங்க.'' ''யாரு தெரியுமா?'' ''ம்... பேரு மறந்துட் டேன்.'' ''இவர்தான். பிரான்சிஸ் சந்தனப் பாண்டி'' அனைவர் முகத் திலும் ஆச்சரியக் குறி தோன்றியது. சாராவின் கண்களிலும்!

பாண்டி சங்கடத்தோடு சிரித்தான். கொயர் பெண்கள் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டனர். பாண்டியையே கூர்மையாகப் பார்த்தனர் எல்லோரும். அவனுக்கு கூச்சமாகிப் போனது. ''வெரி குட், வெரி குட்'' என்றபடியே இன்னோசன்ட் பெருமையுடன் கை குலுக் கினார். நெளிந்தான். ''வாரேன் ஃபாதர்'' சொல்லிவிட்டு விடைபெற் றான். ''நம்ம ஊருக்கு எப்போ?'' ''திருவிழா முடிஞ்சதும்.'' படிக்கட்டு களில் இறங்கினான். முதுகைக் கண்கள் மொய்த்தன. ஒரே ஒரு முறை திரும்பி சாராவின் முகம் பார்க்க ஆவல் ஏற்பட்டது. துணிச்சல் துணை நிற்கவில்லை.

அன்று இரவு உணவுக்குப் பின் பெரியப்பா வீட்டில் அனைவரும் முற்றத்தில் பாய் விரித்து அமர்ந்து நெடுநேரம் பேசிக்கொண்டிருந் தார்கள். திண்ணையில் அமர்ந்திருந்த பெரியப்பா சுருட்டு புகைத்துக் கொண்டிருந்தார். நெடி நாசியை நிமிண்டியது. அவர் கண்கள் கன்னியா குமரி கடலில் நிற்கும் ஸ்டீமரை வெறித்துக் கொண்டிருந்தன. தெரு விளக்குக் கம்பம் மிக சமீபத்திலிருந்ததால் வெளிச்சம் பிரகாசமாக இருந்தது. இருளை அடிக்க ஓங்கிய பிரம்பு போன்றிருந்தது ட்யூப் லைட்.

பெரியம்மாவிடம் பேச நிறையக் கதைகள் இருந்தன. இடைமறித்து தருக்கம் புரிய பெரியப்பாவிடம் நிறைய நியாயத் தீர்ப்புகளிலிருந்தன.

பாட்டி அதிகம் பேசவில்லை. கேட்டுக்கொண்டிருந்தாள். ஆலய வாசலில் கண்டு பேசிய இளம்பெண் சாராவைப் பற்றி பெரியம்மா விடம் ஏதாவது கூறுவாள் என்ற எதிர்பார்ப்புடன் இருந்த பாண்டி போகப்போக அவர்களின் வெறுங்கதையில் சலிப்புற்று இரண்டு மூன்று கொட்டாவிகளைத் தாண்டி தனக்கு ஒதுக்கப்பட்டிருந்த கட்டிலுக்கு உறங்கப் போய்விட்டான்.

''உன்ன பாத்தா என் மவள பாக்க வேணாம் தாயி. அவள வார்த்த அச்சுலதான் அந்த ஆண்டவன் உன்னையும் வார்த்துருக்கான். கண்ணுக் குள்ள காலங்காலமா நின்னுக்கிட்டிருந்த அந்த பாக்கியாட்டி உருவம் கொஞ்ச நாளா தேஞ்சோஞ்சி போயிருந்தது. இப்போ உன்ன கண்டுகிட் டேனா, அவளையே கண்டது மாதிரி இருக்கு. உசரம், உடல் எடுப்பு, நெளுநெளுனு தலைமுடி, கண்ணு, மூக்கு, நாடி, நெறம் எல்லாமே அவாதான் நீ, நீதான் அவா. உன் பேரு என்ன தாயி?''

''சாரா... மரியசாரா முழுப் பேரு.''

பாண்டியின் உடல் காரணமின்றி நடுங்கியது. மனசுக்குள் இனமறி யாத பயம் சுருள் பிரிந்து ஊர்ந்தது.

உறங்கிவிடும் முனைப்பில் கண்களை இறுக மூடினான். மூச்சை சீராக்கி சுவாசித்தான். கொஞ்ச நாட்களுக்கு முன்பு பம்பாயில் ஆரம்பித்த ஃப்ளு காய்ச்சலில் ஒரு முழு மாதம் விழுந்து துவண்டு எழுந்திருந்தான். உடல் முற்றிலும் இயல்பை அடைந்திருக்கவில்லை, நோய்வாய்ப்பட்டு நொந்து நோவுண்ட மனசுக்கும் உடலுக்கும் ஒரு மாற்று அனுபவமாக இருக்கட்டுமே என்றுதான் பாட்டியோடு பெரியம்மா ஊர் திருவிழா வுக்கு வந்திருந்தான். நிலைமை தலைகீழாகிவிடுமோ என்று அச்சப்பட் டான். ஃப்ளு மீண்டும் புலன்களை அரிக்க ஆரம்பித்திருப்பதாக பல வீனமான உணர்வு மேலிட்டது. விழுங்கும்போது உமிழ்நீரின் வெதுமை பதற்றமடையச் செய்தது.

அன்னத்தாய் அத்தை கதையை - அப்பா தன் தங்கையின் கதையாக; அம்மா தன் கொழுந்தியாளின் கதையாக; பாட்டி தன் ஒரே பெண் மகளின் கதையாக ஊர் ஓர் இளவரசியின் கதையாகக் கூற பல சந்தர்ப்பங்களில் கேட்டிருக்கிறான். கதையின் நீதி - அத்தை ஒரு பேரழகியாக இருந்தாள்; ஒரு தேவதை ஆயுள் வாழ்ந்தாள். அவ்வளவே. இன்று அந்தக் கதை ரத்தமும் சதையுமாக கண்முன்னே உயிர் பெற்று வந்து ஆட்கொண்டதின் வீச்சே அவன் சோர்வுக்கு முதல் காரணமாயிருக்கிறது.

பாட்டியின் கூற்றுப்படி பார்த்தால், அத்தை இம்மண்ணுலகில் அவ தரித்திருக்க வேண்டியவளல்ல, வானுலகிலே தேவியாய் தேவதையாய் பேரருள் படைத்த பெண் தெய்வமாய் நித்தியத்துவம் பெற்றிருக்க வேண்டும். விதியோ வேதப் பிழையோ, மண்ணில் மனுஷியாகப் பிறந்து விட்டாள். பிறந்தாலும் ராஜாதிராஜனின் அரண்மனை உப்பரிகையில்

உதயவேளை சூரியனின் செங்கதிர்களைக் கண்ணுற்றபடி நீளமான கருங் கூந்தலை அகிற்புகையால் உலர்த்திக்கொண்டிருக்க வேண்டிய ராஜ குமாரி அங்கிருந்தும் இறங்கி வந்துவிட்டாள். வந்தவள் இங்கே வந்து பிறந்துவிட்டது பொருந்தா ஜனனம். அத்தை பிறந்த வருஷத்தில்தான் ஏழு வருஷ கோரப் பஞ்சம் விலகி மழை மழையாய் மாதம் மும்மாரி பொழிந்து ஊர் செழித்ததாம். வளர்ந்து பெரிய மனுஷியான பிறகு உலகத்து வைர வைடூரியங்களைக் கொட்டிக் குவித்தாலும் அவள் வதன எழிலுக்கு ஈடு கொள்ள முடியாதாம். கடுஞ்சொல் பட்டிராத மிருதுவான கோதுமை நிற உதடுகள் மலர்ந்து ஒரு சொல் உதிர்த்தாலும் திருச்சொல் லாகி விடுமாம்.

அத்தை இப்போது உயிரோடு வாழ்ந்திருந்தால் அவளது இளமை யும் பேரெழிலும் பறிக்கப்பட்டு மூப்புத் தட்டி சராசரி மனுஷியாகி உலவிக்கொண்டிருப்பாள். சில குழந்தைகள் பிறந்து வளர்ந்திருப்பார்கள். அத்தையின் சாயலில் பிறந்த பெண் பிள்ளைகள் சாராவைப் போலிருந் திருப்பார்கள். ஆனால், ஜன்னிக்கெல்லாம் மனித உயிரைப் பறிக்கும் வல்லமை இருந்த காலத்தில் அத்தை கன்னியாகவே மறைந்துவிட்டாள்.

குழப்பங்களின் ஆக்ரமிப்பில் கிடந்தான். வானில் இழுபடும் கோழிக்குஞ்சு போலக் கிழிந்துகொண்டிருந்தான். பருந்து போலப் பறந்து சென்றது இரவு. ஒரு உயிருக்கு ஏழு பிறவிகள் உண்டென்பது மெய்யா? பொய்யா? எல்லாப் பிறவியிலும் அவர்கள் ஒரே இனத்தில் தொடர் அவதாரமெடுப்பார்களா... கடந்த பிறவியின் தோற்றமும் குணமும் உருவமும்தான் அடுத்த பிறவியிலும் வருமா?

அத்தைதான் அந்த சாராவோ! கன்னியாய் உதிர்ந்து போன அவள் வயிற்றில் முளைக்கவிருந்த விதைதான் வேறொரு கர்ப்பக்கொடியில் மலர்ந்திருக்கிறதோ! அல்ல, அத்தைதான் சொற்ப ஆயுளை நீட்டித்து சாரா உருவில் உலவி வருகிறாளோ! என் பிஞ்சு முகம் கண்டு கண் மூடிப் போனவளின் ஏக்கம், என்னை மடியேந்தி கொஞ்சத் துடிக்கும் பேராவல் இப்போது அவளுக்குள் புதைந்திருந்து திடுமென வெளிப்படுமோ! மனசின் அடியாழத்தில் உறங்கிக்கொண்டிருக்கும் ரத்த உறவு ஒருநாள் விழித்து எழுமோ! அது ஏற்கனவே நிகழ்ந்துவிட்டதோ! இப்படியே தொடர்ந்து சென்ற யோசனைகள் கற்பனைகள் குழப்பங்கள் மாறி மாறி வட்டமிட எக்கணத்தில் களைப்படைந்து எப்போது கண்ணயர்ந்தான் என்ற உணர்வில்லை. உடல் ரோமங்கள் அத்தனையும் சிலிர்த்தெழுந்து, தொண்டை வறட்சியும் தாகமுமாக, வியர்வை பெருகி வழிய, உலுக்கல் நடுக்கத்துடன் விழித்துக்கொண்டபோது கொஞ்ச நேரம் உறங்கியிருப் பதை உணர்ந்தான். இரக்கமற்ற கனவு ஒன்று கண்ணைத் திறந்த பிறகும் அகம்பாவத்தோடு கலையாமலிருந்தது. எல்லா எல்லை வரையிலும் முட்டி மோதித் திமிர்த்திருந்தது இருள். மீண்டும் இருளின் உறக்கத்துள் அமிழ்ந்தான். பரிச்சயமற்ற இருள். பிரபஞ்சத்தின் சகல மர்மங்களையும்

போர்த்திப் பொதிந்து வைத்திருந்த இருள். எக்கணத்திலும் தன் குரலை உடைவாளென உருவிக் கொடும் மின்னலென வீசித் தலையைக் கொய்து வான் நோக்கிப் பீறிடும் குருதியில் குளிக்கத் திட்டமிட்ட இருள். இருளென்ற ராட்சசப் பொறிக்குள் சிக்குண்டிருந்த உயிர் ஒன்றே ஒளி. அதன் வெளிச்சத்தில் கண்டுணர முடிந்ததோ கட்டற்ற அச்சம். அந்தகாரத்தின் பள்ளத்தாக்கிலிருந்து அவன் மூச்சுக் கயிற்றை அது அரவமின்றி சுற்றிச் சுருக்கிக்கொண்டே வருகிறது. நிர்கதியாய் மறுப்பேதுமின்றி முகமற்ற பயங்கரத்தை நெருங்கிக்கொண்டிருக்கிறான். அழுகிறான். ஓலமிடுகிறான். அவன் குரலின் சப்தசாரம் குடிக்கப்பட்டு ஊமையாகிவிட்டது. இருள் பனிக்கட்டியாக உருகியோடும் மெல்லிய சலனத்தைப் பார்க்கிறான். அது மேலும் கிலியூட்டுகிறது. அருவருப்பு மிக்க பிண அமைதியின் நாற்றம் நாலாபக்கமும் சுழன்றடிக்கிறது. சகிக்க முடியாததாய் இருக்கிறது. வாதையின் கிரியைபோல் இருளால் சூழப்பட்டு அவன் எங்கே தவித்து பதைக்கிறான்? அவனுக்கே இடம் பொருள் பிடிபடவில்லை. எம்பிக் குதிக்கிறான். அதற்குப் பின்தான் உணரமுடிகிறது, அவன் காலுக்கடியில் நிலமேயில்லை. கைகளை இயன்றவரை நீட்டித் துழாவுகிறான். பற்றிக்கொள்ள ஏதுமில்லை. இருள் இரண்டு துண்டு உதடுகளாக உடைகிறது. அதற்குள்ளிருந்து வினோதமான சிரிப்பொலிகள் புறப்படுகின்றன. சிரிப்பொலியின் கோர கார்வைகள் ஒளித் துண்டுகளாகச் சிதறி அணைகிறது. கிழக்கே கதிர் காணும் அடிவான முகப்பில் ஒளி பரவுகிறது. ஒரு பெண் தனியே கழுத்துவரை உதயமாகிறாள். அவள் முகத்திலிருந்து வெளிச்சம் மேற்கு நோக்கிப் பாய்ந்து பரவுகிறது. முகம் காட்டாப் பெண்ணின் கூந்தலில் கருநாகங்கள் நெளிகின்றன. ஒரு கருநாகம் தன் தலையை உயர்த்தி அவனைப் பார்த்து கண்ணை உருட்டுகிறது. பிளந்த தன் செந்நிற நாவை வெகு நீளத்துக்கு நீட்டி அவன் முகத்தைத் தீண்டுகிறது. உயிர் வரை விஷம் கசந்து நித்திரை கிழிகிறது. மெடூஸா...!

படுக்கையிலிருந்து எழுந்து அமர்ந்து தன் முகத்தை இரு கைகளாலும் தாங்கிக்கொண்டான் பாண்டி. தொண்டை வறண்டு தாகம் நெருப்பாக அனத்தியது.

☆☆

பாட்டி எல்லாவற்றையுமே தனக்குத் தேவையான அளவுக்கு மிகைப்படுத்திக்கொள்கிறாள் என்று அவன் நினைத்தான். மூன்று வயது குழந்தை மனத்தில் பதிந்த முகம், சம்பவங்கள் அவ்வளவு எளிதில் உரிந்து போய்விடாது. அத்தையின் முகமோ கண்களோ தலைமுடியோ கைவிரல்களோ எதுவுமே அவனுக்கு நினைவிலில்லை. எத்தனை முறை அவன் திரும்பித் திரும்பிப் பார்த்தாலும் குழந்தைப் பருவத்துக்குள் நுழைந்து பார்த்தாலும் அங்கே திரையிட்டு நின்றது புகைமூட்டம் மட்டுமே. எனினும் அது

சாம்பல் நிறத் திரையல்ல, பசுமையும் கருமையும் குழைந்து எழுந்தது. குரல்களை ஞாபகத்திற்குள் ஒலிக்க விடுவதோ இயலவே இயலாத காரியமாக இருந்தது. ஆனால் அத்தை என்ற சொல் மட்டும் அவன் நெஞ்சில் தைத்து நின்றது. அந்தக் காயத்திலிருந்து ரத்தத்துக்குப் பதிலாக துளித் துளியாக அமுதம் சொட்டிய வண்ணமிருந்தது. அந்த உறவு போதைத் திரவம். நாடி நரம்புகளை முறுக்கி உடலெங்கும் இனமறியா உணர்வு களை நிரப்பியது.

அத்தையும் சாராவும் ஒரே அச்சின் வார்ப்பு என்று பாட்டி வியந்தது அவளது மிகை உணர்ச்சியாகவே அவனுக்குள் நிலையற்று அலைந்தது. ஆனாலும் அதன் மீது சிறுகச் சிறுக நம்பிக்கை கூடிக்கொண்டே போகும் விசித்திரம் அவனுக்கே புரியவில்லை.

அத்தையின் அகால மரணம் பாண்டிக்கு மர்மமாக இருந்தது. அது குறித்து கேள்விகள் எழுப்புவது நடுக்கம் தந்தது. மனத்தின் இழிவான பக்கங்கள் புதிராகப் புரண்டன. கற்பனையும் ஊகங்களும் இணைந்து வரையும் சித்திரங்கள் கண்ணைப் பொசுக்கி வெந்நீரை வரவழைத்தது. அடுப்பில் திணிக்கப்பட்ட உடை மர விறகுகள் எரியும்போது வெளி நுனியில் நுரைத்துப் பொங்குமே அது போன்ற காப்பிநிறக் கண்ணீர்.

அத்தைக்கு ஒரு அந்நிய ஆணுடன் ஏற்பட்ட ரகஸியத் தொடர்பில் கருத் தரித்து அழிக்க முடியாமல் அது குழந்தையாக வளர்ந்து ஊர் உலகுக்குத் தெரியாமல் ரகசியமாகப் பிரசவித்தபோது அத்தை விக்கித் திணறி மூச்சுக்குப் போராடி இறந்து விட்டதாகவும், பிறந்த பெண் குழந்தை பிழைத்துக் கொண்டதாகவும் அதைக் கண்காணா பிரதேசத்தில் விட்டு விட்டு வந்து விட்டதாகவும் அந்தக் குழந்தைதான் சாரா என்றும் அவனை யறியாமல் அவன் தீட்டிய சித்திரம் அவனை நொறுக்கியது. 'ஐயோ நானில்லை நானில்லை' என்று ஓசையின்றிப் படுக்கையில் பேதலிக்க வைத்தது. ஆனாலும் அவன் கட்டுப்பாடுகளை மீறித் துளிர்த்து முட்களாக விறைத்த ஒரு முகமற்ற குரூரம் அதை உண்மையென்று நம்பச் சொன்னது. ஏதோ ராத்திரியில் மாடன் எதுப்பு அடித்திருக்கும்; பெயரற்ற கொடிய நோய் பதுங்கியிருந்து தின்றிருக்கும்; அல்லது அத்தையின் தலையெழுத்தில் அவ்வளவு குறைவான எழுத்துக்களே இருந்திருக்கும்.

கடல் சதா ஒலித்துக்கொண்டேயிருந்தது. காதோரமும் அடிமனக் கரையோரமும் பேரோசையுடனும் சமயத்தில் மெல்லியதாகவும் அதன் ஒலி அனைத்தையும் கடந்து வந்து அவனில் முடிந்தது. தற்சமயம் அது ஒரு பெயரை உச்சரித்தது. மஞ்சள்பூவின் இதழ்களிலான அந்தச் சொல்லின் வாசம் எட்டியதும் அவன் புலன்கள் அனைத்தும் முனை துளிர்த்து விடுகிறது. அவனோடு இரவும் பகலும் கடல் விளையாடத் தொடங்கி விட்டது. நீர் திரண்டு பரந்த கடல் தீராத விளையாட்டுப் பிள்ளையாகி விடுமோ என்று உள்ளூர அஞ்சினான். ஆனாலும் அவனையும் அவன்

எண்ணங்களையும் மதித்து அலை உதடுகளால் அவள் பெயரை அலையலையாக உச்சரிக்கும்போது ஏற்படும் மகிழ்ச்சி அந்தக் கடலை விட அளவில் பன்மடங்கு பெரியதாயிருந்தது.

கடலின் குரல் ஒரு திரியைப்போல ஒற்றை வரியாகத்தான் முதலில் அவனுக்கு அறிமுகமானது. அத்திரியில் குளிர்ந்த காற்று ஏறி நின்று கண்ணுக்குப் புலப்படாத சிகையை எட்டுத் திக்கும் எட்ட விரித்து நெளிய விட்டு ரகசியமாக சுடர்வதாக கற்பனையும் இருந்தது. இப்போதும் கடலின் குரல் ஒரு திரி போல, முரட்டுச் சாட்டையாக, சமயத்தில் மெல்லிய நூலாகத்தானிருக்கிறது. அதிலொன்றும் மாற்றமில்லை. ஆனால் கடலுக்கு எண்ணற்ற குரல்கள் உண்டு என்பதே உண்மை. குரல் திரிகளை குறுக்கும்மறுக்குமாக நெய்து வலையாக்கி அவன் மீது வீசிப் பிடித்திருக்கிறது கடல். ஒரே நாளில் ஏன் எல்லாமே அடியோடு தலை கீழாகப் பிறழ்கிறது என்று அவனால் ஊகிக்க முடியவில்லை; கவனிக்க மட்டுமே முடிந்தது.

நினைத்துப் பார்க்கவே மிகக் கூசும் வியப்பு இது. 'திலகம் தைஇய தேம்கமழ் திருநுதல்.' முடிவற்ற பிரம்மாண்டமாய் விரிந்து பரந்து துணிந்து கிடந்த கடல் சுருங்கிச் சுருங்கி ஒரு சொட்டாகி நெற்றிப் பொட்டுக்குள் கொந்தளித்தது. நெற்றிப் பொட்டுக்குள் சொட்டுக் கடல்!

## 2

காலைத் திருப்பலியில் ஆலயம் ஜனத்திரளால் நிரம்பி வழிந்தது. வழிபாடு நடந்தது. ஆண்கள் இடப்பக்கமும் பெண்கள் வலப்பக்க முமாகப் பிரிந்திருந்தனர். இருபாலருக்கும் நடுவில் பல்லக்கு சிரமமின்றி செல்ல முடியுமளவுக்கு இடைவெளி. குழந்தைகள் முன்வரிசையில். அடுத்து வாலிபர்களின் வரிசையும் அவர்களுக்குப் பின்னே மணமானவர் களும், கடைசியில் வயதானவர்களுமாக வெளிமண்டபம் வரை நிறைந் திருந்தார்கள். திருப்பலி வழிபாட்டின் நடுநடுவே பாதிரியின் ஆணை களையேற்று முழந்தாழிட, எழுந்து நிற்க, சக்தியற்ற நிலையில் உடல் மிகத் தளர்ந்த வயோதிகர்கள் கொடிமரச் சதுக்கத்தில் சாய்ந்திருந்தனர். இளம்வெயிலின் மஞ்சள் பிரகாசம் ஆலயத்தின் உள்ளும் புறமும் வனப்புக் கூட்டியிருந்தது.

ஜீன்ஸ் பேண்டும் செல்டான் சட்டையும் அணிந்து, தலைமுடியை படியச் சீவி முகத்துக்கு லேசாக வாசனை பவுடர் பூசி திருப்பலிக்கு வந் திருந்த பாண்டி வாலிபர் வரிசையில் ஒருமித்திருந்தான். பாதிரி திருப் பலியின் நடுவே வாசிக்கப்பட்ட 'வாழ்வு தரும் கிறிஸ்துவின்' நற்செய்தி யின் சாராம்சத்தை மையப்பொருளாக எடுத்தாண்டு பொது வாழ்வில்

இறை வாழ்வில் சபையினர் எவ்வாறு நடந்துகொள்ள வேண்டும் என்பதை மேற்கோள்கள் பல காட்டி பிரசங்கம் நிகழ்த்திக் கொண்டிருந் தார். திருப்பலி உடையில் பாதிரி ஒரு அரசனைப் போலிருந்தார். அவரது மேல்அங்கி பொன்னிறத்தில் சிகப்பு பட்டை சகிதமாய் தகதகவென்று மின்னியது. அவர் மார்பில் சிவப்பு நிறத்தில் அலங்கரித்த சிலுவை. ஒரு கிண்ணம் நிறைந்து அப்பங்கள் வழிந்தது வெண்ணிறத்தில். அதனருகே தங்கமீன்கள் இரண்டும் நீந்திக்கொண்டிருந்தன. பாதிரி ஆண்டனி தாமஸ் தன் மூக்குக் கண்ணாடியை மட்டும் துறந்துவிட்டால் கி.மு. கால ராஜரீக கனவானாகக் கருதப்பட ஏராளமான கூறுகள் இருந்தன. பீடத்தின் மேல் சுத்தமான வெண் வஸ்திரம். அதன் மேல் விரிந்த நிலையில் பெரிய வேதாகமம். எல்லா மெழுகுவர்த்திகளும் சுடர்ந்து ஒளி வீசின. ஒன்று மட்டும் சோம்பல் பட்டு புகைந்து உறங்கி விட்டிருந்தது. புனிதராகிய ராயப்பர், சின்னப்பர், அருளப்பர், அந்தோனியார் அனைவரும் பீட மாடத்தின் படிகளில் சொரூபங்களாய் நின்றனர். சரவிளக்கு வேலியுடன் கண்ணாடிக் கூண்டுக்குள் கருணை ஒளியை கண் சிந்தும் கன்னி மரியாள் சொரூபமும், சிலுவை மரத்தில் முள்முடிக் கோலத்தில் கிறிஸ்துவின் ஆளுயர சொரூபமுமாக பரலோக ராஜ்ஜியத்தின் பெரும் பகுதி கண் முன்னே நிறுவப்பட்டிருந்தது.

திவ்ய நற்கருணைப் பெட்டகத்தின் சுத்திகரிக்கப்பட்ட எல்லைப் பகுதியாகி சிமிந்து கிராதி சிறுவர்கள் வரிசைக்கு முன் அரைவட்டமாக அமைந்திருந்தது. திரண்டு கனிந்த கரும் திராட்சைக் குலைகள், மீன்கள், அப்பங்கள், கதிர் வீசும் ஆளில்லாச் சிலுவைகள் அதில் நேர்த்தியான வார்ப்பில் பிணைந்திருந்தன. இடது கோடியில் இடுப்புயர ஆர்கன். அதனெதிரே இன்னோசன்ட் ஸ்டூலில் அமர்ந்திருந்தார். அவருக்குப் பின்னே ஒரு டஜன் இளம் பெண்கள் நின்று பாடினார்கள். பாண்டி எழுதிய 'தீயில் தீதில்லை இறைவா, திசைகள் அசைவதில்லை. மனிதப் பிறவிகள்தாம் இறைவா, மனதில் கசங்குகிறோம்' பாடலை அவர்கள் பாடிக் கேட்டபோது நெஞ்சுக்கூடு பெருமிதத்தில் விரிந்தது. அவர்களில் புனிதாவும் இருந் தாள். சாரா எங்கே?

''எல்லோரும் நம் கண்களை மூடி அவரவர் சொந்தத் தேவைகளுக் காக ஒரு நிமிடம் இறைவனை பிராத்திப்போம்.''

பாண்டி தலையை மிக மெதுவாக வலப்பக்கமாகத் திருப்பினான். அவன் கண்கள் ஒரு சுற்று இளம் பெண்கள் பகுதியில் அலைந்து திரும் பின. தேடிய முகம் தென்படவில்லை. மீண்டும் நோட்டமிட ஆயத்த மானபோது, தனக்கென்று சொந்தத் தேவைகள் ஏதுமற்ற பாதிரி கொட்டக் கொட்ட கண்களை உருட்டிக்கொண்டு கடிகாரத்தில் மணி பார்த்தபடியிருந்ததைக் கண்டு துணுக்குற்று கண்களை இறுக மூடி உள்ளத் தோடு ஒன்றினான். உதடுகள் வீணாக முணுமுணுத்தன. 'வல்லமை தானே, நீ என் அரண்தானே'

''அதன் பின் அவர் அப்பத்தை எடுத்து அதைப் பிட்டு தம் சீடர்களுக்கு அளித்து அவர் கூறியதாவது...''

பாண்டி தைரியத்தை வலிந்து வரவழைத்து பார்வையை பெண்களின் மூடாக்கிட்ட தலைகள் மேல் படரவிட்டான். அது துள்ளித் தாவித் தேடியது.

''இதோ உங்களுக்காக கையளிக்கப்பட்ட என் சரீரம். இதை என் நினைவாகப் புசியுங்கள்.''

சாராவின் முகம் நீர் பட்டு கரைந்த ஓவியம்போல் மங்கலாக ஞாபகத்திரையில் வெளிறிக்கிடந்தது. அதீத அழகானது தன் மீது தீராத தேடலைக் கோரி எளிதில் மனத்தில் பதியாதோ என எண்ணிக் கொண்டான்.

''இதோ உங்களுக்காகவும் எல்லோருக்காகவும் சிந்தப்படும் என் ரத்தம். இதை என் நினைவாகப் பருகுங்கள்.''

பல நிறத்தில் சேலைகளும் தாவணிகளும் சுடிதார்களுமாக தலையில் மூடாக்கோடு குவிந்திருந்த பெண்கள் கூட்டத்தில் சாராவைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

''இது விசுவாசத்தின் மறைபொருள்...'' பாதிரி ராகத்தோடு பாட, ''இறைவா உமக்கே நன்றி'' சபை மக்களும் ராகத்தோடு நன்றி கூறினார்கள்.

நற்கருணைத் திருவிருந்து பாடல் இசைக் குழுவால் மீட்டப்பட்டது. அரைவட்டக் கிராதியின் வாசற்படியில் நின்று பாதிரி அப்பங்களை பக்தர்களின் நாவில் பகர்ந்தார். புது நன்மை மந்திரங்கள் பயின்று இறை விருந்துக்கு தகுதி பெற்ற சிறுவர் சிறுமியர் முதலில் இரண்டு வரிசையாகச் சென்று அப்பம் பெற்றுக்கொண்டு அவரவர் இடத்துக்கு பயபக்தி மிக்க பணிவோடு திரும்பினர். மார்பில் கரம் குவித்து தாழ்ந்த தலையும் தளர்ந்த நடையும் கண்களில் தெய்வீகத்திற்குப் பணியும் அடக்கமுமாக, அடுத்து வாலிப வரிசையும் நகர்ந்தது.

பாண்டி திருவிருந்து வரிசையில் நடந்தபோது பெண்கள் வரிசையில் தன்னோடு வந்து இணைந்தவளைக் கண்டதும் அவனுக்குள் நரம்பிழைகள் சில அறுந்து விழுந்தன. சாரா! நினையாத நேரத்தில் புயல் கிளர்ந்து பாய்மரங்கள் காற்றோடு முறிந்ததுபோல் பிரமையுண்டாகித் திகைத்தான். வழிபாட்டின் கனிவில் ஒன்றிசைந்து ஒருமித்திருந்த களையில் அவள் முகம் நிழல் மெழுகிய ஐம்பொன் சிலைபோல மிளிர்ந்தது. புத்தி விழிப்பின் எச்சரிக்கைக் குரலையும் மீறி சாராவை உற்றுப் பார்த்தான். அவள் கண்கள் தியானத்தின் நிழலடியில் தவமிருந்தன. இச்சமயம் எதுவும் எனக்குப் பொருட்டல்ல என்ற பாவனையில் சாரா வரிசையில் அடியெடுத்து வைத்து நகர்ந்து வந்தாள். இணைந்து குவிந்திருந்த கைவிரல்கள் நாடியைத் தொட்டுக்கொண்டிருந்தன. அவர்களுக்கிடை

யில் சில அங்குல இடைவெளியிருந்தது. அவனுக்குள் திரண்டிருந்த திடம் திரவமாகக் கரைந்தோடி உடல் காற்றாகி மேலெழுந்தது. உடல் நடுங்கு வதைத் தடுக்க '... என் தேவனே என் தேவனே' எனப் பலமுறை தனக்குள் பிதற்றிக்கொண்டான்.

'சாரா... நீங்கள்... அத்தையே! உங்களுக்கு என்னை நினைவிருக் கிறதா? நான்... நான் உங்கள் சந்தனப்பாண்டி... சாரா... நீங்கள்... சாரா...'

மனம் இன்னும் என்னென்னவோ உளறிச் சிதறிக் கூவிப் பேதலித் தது. பாதிரி அப்பத்தை கையில் எடுத்துக்கொண்டு ''இது கிறிஸ்துவின் சரீரம்'' என்றபோது அவன் முறை வந்துவிட்டது. அப்பத்தை நா நீட்டிப் பெற்றுக்கொள்ளும் முன் ஆமேன் என பதில் பகர வேண்டும். அந்த மூன்றெழுத்து அவனுக்கு மறந்து போனது குழப்பத்தின் உச்சம். அவனை அடுத்து அப்பத்தைப் பெற்றுக்கொள்ள சாரா காத்திருந்தாள். பதிலேதும் கூறாமல் நாவை நீட்டினான். அது வலிப்பு நோயால் பாதிக்கப்படுவது போல் நடுங்கியது. வடக்கு வாசலில் காற்று குபீரென்று நுழைந்தது. நாவில் பதித்த அப்பம் நழுவி விழுந்தது. பதறிப்போன பாண்டி அதைப் பிடிக்கப் பாய்ந்தான். பாதிரி அவனைத் தடுத்துவிட்டார். சுழன்று ஓடிய அப்பம் சற்று தள்ளிப் போய் சிமிந்து தரையில் விழுந்தது. ஏசுவின் திரு வுடலில் புதிதாக ஒரு சிராய்ப்பு. பாதிரி அப்பத்தை எடுக்கக் குனிந்தார். பாண்டி சாராவைப் பதற்றத்தோடு பார்த்தான். அவள் பார்வை ஏதோ ஒரு சொரூபத்தின் மேல் பதிந்திருந்தது. பாதிரி தணிந்த குரலில் ''ஆமேன் சொல்லு'' என்று அறிவுறுத்தினார். ''ஆமேன்.'' பாதிரி அவனுக்கு புது அப்பத்தை ஊட்டினார்.

☆☆

*உன் வாசனை காற்றில் இதோ என்னைக் கடந்து செல்கிறது. கனிந்த மஞ்சள் மாம்பழங்களில் இன்று குதிரை முகங்கள் தோன்றுகின்றன. மனத்தில் முளைத்த சிறகின் வன்மைக்கு கனவின் திசைகள் போத வில்லை. சுவடுகள் பறந்தோடும் புழுதிக்காட்டில் என் பாதையில் நடந்தே வருகிறேன். மாமரங்கள் லாயங்களாகி குதிரைகள் எல்லாம் வாலில் தொங்கும் அபூர்வ காட்சி நின்று ரசிக்க வேடிக்கையானதுதான். எதிர்த்திசையில் புலப்படாத தொலைவில் நீ வந்து கொண்டிருக்கிறாயா, சென்று கொண்டிருக்கிறாயா?*

# 3

**ப**கல், வேனல் காலத்தின் நெஞ்சை அறுத்து எடுத்து வந்து வெளி யெங்கும் வெயிலாக விரித்துப் போட்டிருந்தது. கடும் கோடையில்கூட ஒருக்காலும் அடைந்திராத புழுக்கத்தை ஆவணியில் உணர்ந்தான்.

வெப்பத்தில் வெம்பிய காற்று விட்டு விட்டு மரம்மட்டைகளை அசைத்தது. ஒரு பம்பரம் ஒரே ஒரு ஆணியில்தான் எல்லாச் சுற்றுக்களையும் சுற்றித் தீர்க்க வேண்டுமென்ற விதிக்கொப்ப மனசும் தான் சிறுமைப்பட்ட ஒரே புள்ளியில் மட்டுமே சுற்றி வந்தது. தனக்குள் ஏற்பட்டு வரும் சின்னச் சின்ன மாற்றங்கள் விரும்பத் தகாதவை என்பதை முற்றிலும் உணர்ந்திருந்தாலும், முளையிலேயே வேரோடு பிடுங்கி எறிய வழி வகை ஏதுமில்லை. கற்பனையோட்டத்தில் விரிந்து பெருகும் காட்சிப் படங்களை வெற்றிலையாக மடித்து மனசுக்குள்ளேயே மென்றுகொண்டு பொழுதைக் கழிக்கத் தனிமையும் அமைதியான இடமும்தான் உகந்தவை. பெரியம்மா வீட்டில் காங்கிரிட் குளிர்ச்சியும் மின்விசிறிக் காற்றும் இருந்தது. இருந்தாலும் அங்கே சாப்பிடுவது, தண்ணீர் குடிப்பது, நொறுக்குத் தீனிகளை அசை போடுவது, பேச்சுக் கொடுப்பது, அரட்டையடிப்பது என்று ஏதாவது செய்துகொண்டிருக்க வேண்டும். அல்லது ஏதாவது எழுதிக் கொண்டிருக்கவேண்டும். அமைதியாக மூலையில் அமர்ந்து விட்டத்தை வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தால் வில்லங்கமாகி விடலாம். விருந்துக்கு வந்த வீட்டில் விரக்தி பாவனை காட்டுவது, பல்லாயிரம் பாவங்களை ஒன்றாய்ச் செய்வதற்குச் சமமானது. கோவில் மண்டபம்தான் தொந்தரவில்லாத இடமாக இருந்தது. தாள்ரோஜா பந்தலுக்கடியிலிருந்து பார்த்தால் பார்வையில் படாத வசமாய் அமர்ந்திருந்தான். வயிறு பசியில் லேசாகக் கடுத்தது. அதைப் பொறுத்துக் கொள்வதே தனக்குத் தன்னால் அளிக்கப்படும் தண்டனையாக அமையுமென்று எண்ணிக்கொண்டான். காலை உணவுக்கு பெரியம்மா அழைத்தபோது, சாப்பிடவே வெறுப்பாக இருந்தது. நல்ல வேளை அது வெள்ளிக்கிழமையாக இருக்க 'இன்று நான் உபவாசம்' என்று பொய் சொல்லி சமாளித்தான். அந்தப் பொய்யறிக்கையில் மதிய உணவும் சேர்ந்து பறிபோகும் உண்மை நினைவுக்கு வந்து சிறு சஞ்சலத்தை ஏற்படுத்தியது. 'நாம செஞ்ச காரியத்துக்கு மத்தியான சோறும் ஒரு கேடா' எனத் தனக்குள்ளே கடிந்துகொண்டான். அப்பம் நழுவித் தரையில் விழுந்த நிகழ்ச்சி நீருக்குள் அழுத்திய பந்தாக மீண்டும் மீண்டும் திமிறியெழுந்தது.

ஒரு ரூபாய் நாணயத்தை விட சற்றே பெரிதாக, வெள்ளைக் காகிதத்தில் நறுக்கி எடுத்தது போன்றிருந்த அப்பம் அவன் மனத்தில்தான் எத்தனை பெரிய பாறாங்கல்லைத் தூக்கி வைத்துவிட்டது. பாவம், அசட்டுத்தனமான அச்சம்பவம் சாராவுக்குள் எப்படிப்பட்ட வேடிக்கையான, கேலியான எண்ண அலைகளை ஏற்படுத்தியிருக்கும் என்று எண்ணிப் பார்க்கும்போதே நரகத்தின் மையப் பகுதிக்கு வந்து விடுகிறான். பதறும் ஆண்களை பெண்களுக்குப் பிடிக்காது; பிடிக்கவும் கூடாது.

'மன்னித்து விடுங்கள் சாரா, என்னை மன்னித்து விடுங்கள். உங்கள்

முன் அப்படி நடந்திருக்கவே கூடாது. காலைத் திருப்பலி முடிந்து உங்கள் முகத்தை எதிர்கொள்ள அருகதையற்று ஓடோடி ஒளிந்து கொண்டதற்காக மன்னித்துக் கொள்ளுங்கள்.'

பறக்க எத்தனித்துத் தாவும்போதெல்லாம் முறிந்த சிறகில் வலி. சாராவைப் பற்றி நினைக்கும் வேளையெல்லாம் வலி தெறித்து அவன் முகத்தை வலித்து கோணலாகப் பிழிந்தது.

நான்கைந்து நடுத்தர வயதுடைய ஆண்கள் மண்டபப் படிக்கட்டு களில் ஏறிவந்தார்கள். காதுவரை மீசை வைத்திருந்தவர் சத்தமாகப் பேசியபடி வந்தார். திருவிழாக் காலங்களில் தேவாலயத்தின் தலைவாசல் பூட்டப்படாமல் சாற்றி வைக்கப்பட்டிருந்தது. ஒருவர் கதவைத் தள்ளித் திறந்துகொண்டு போய் கையில் சாவியோடு திரும்பி வந்தார். அவர்கள் வளாகத்தின் வலது மூலையை நோக்கி நடந்தார்கள். நீ நான் என்று மறுதலித்து சீட்டு எழுதிப் போட்டு எடுக்காத குறையாக ஒருவர் மீண்டும் ஆலயத்துக்குள் வெட்கச் சிரிப்போடு நுழைந்தார். மற்றவர் தேர்க்கூடத்து கதவை சாவியிட்டுத் திருகினார். துரு அரைபடும் க்ரீச் ஓசையோடு அது திறந்தது. கோபுரத்திலிருந்து ஒலிபெருக்கி உயிர் பெற்று குழாய்களில் ஊளையிட்டு ஓய்ந்தபின் குரல் அறிவித்தது.

ஊர் மக்களுக்கு அழைப்பு விடுத்துவிட்டு வெளியே வந்தவர், பாண்டியை நெருங்கிக் கேட்டார் ''தம்பி நீங்க யாருனு தெரியலியே...'' அவர் குரலும் தொனியும் மிக அணுக்கமாக இருந்தது.

தன்னைப் பற்றி தயங்கித் தயங்கிச் சொல்லி முடித்தான். அவர் மேலும் முகம் மலர்ந்தவராக சிரிப்பையும் சொற்களையும் பிசைந்து பேசினார். ''வேற ஒண்ணுமில்ல. கோயில் தேர தண்ணி ஊத்தி கழுவப் போறோம். நீயும் கூடமாட நின்னியனா தோதா இருக்கும்.''

பாண்டி எழுந்து நின்றான். சிரித்த முகத்துடன் ''வாரேன்'' என்று தலையசைத்தான்.

அவனை இழுத்த பிரம்மாண்டமான தேர் கம்பீரமாக நின்றது. சக்கரங்களின் மேல் எழுப்பிய சிற்றாலயம் போலிருந்தது. இரண்டு சப்பரங்களும் வெளியில் எடுத்து வந்து வைக்கப்பட்டன. இன்னும் பலர் வந்து சேர்ந்துகொண்டனர். சுவாரசியமான பேச்சும் சிரிப்புமாக வேலை மும்முரமாகியது. மனவளர்ச்சி குன்றிய நாற்பது வயது கடந்த வெள்ளந் தியான இளைஞனின் நடக்காத கல்யாணத்தைப் பற்றியும் கட்டாத பெண்டாட்டியை பற்றியும்தான் அதிகம் பேசினார்கள். இளைஞன் ரசித்து ரசித்துச் சிரித்தான். பாண்டி கோடு போட்ட வேட்டியை மடித்துக் கட்டிக்கொண்டு வேலையில் இறங்கியிருந்தான். வீட்டுக்கொரு குடம் தண்ணீர் கேட்டிருந்தார்கள். இளம் பெண்கள் ஆலயத்துக்குச் சொந்தமான புதுமைக் கிணற்றின் துவளத்தை சூழ்ந்து நின்றிருந்தார்கள். பாண்டிக்குள் எங்கிருந்தோ ஒரு பரபரப்பு வந்து தொற்றிக்கொண்டது. 'விருந்துக்கு

வந்தவங்களை யாராவது வேலைக்கு அனுப்புவாங்களா? சும்மா கிடடா சுண்ணாம்பு' என்று மனசு வாதித்தது. வளாகத்தின் வடக்குச் சுவரில் இருந்த சிறிய வாசல் திறந்திருந்தது. வடக்குத் தெரு அதுவரை நீண்டு வந்து புதுமைக் கிணற்றுக்கு செல்ல வழிவிட்டு பரந்த வெளியாகியிருந்தது. அசன சமையல் காரியங்களுக்கு கூட்டிய அடுப்புக் கற்கள் அங்கு கருகிக் கிடந்தன. தண்ணீர் சேந்தித் தர பெண்கள் வடக்குத் தெரு வழியாக வந்த வண்ணமிருந்தனர். கடமையில் ஒரு கண்ணும் கருத்தில் ஒரு கண்ணுமாக இருந்தான்.

ஒட்டடைக் கோலால் தேர்க்குடையின் உட்பரப்பை துப்பரவு செய்து கொண்டிருந்தபோது சாரா இடுப்பில் குடத்துடன் கோயிலை நோக்கி வரக் கண்டான். கூடே நடந்த பெண் குடத்தோடு காணாமல் போய் அவளோடு அவன் நடந்தான். ஒரு கணம்தான். நெஞ்சுக்குள் வெளவால்கள் தலைகீழாக முட்டிச் சிறகடித்து அலையத் தொடங்கின. தெருவிலிருந்து கிணற்றுக்குத் திரும்பும்போது தேரையும் சப்பரங்களையும் நோட்டமிடுவதுபோல் பாண்டியையும் கணப்பொழுது பார்த்தாள். அக்கணமே அவள் முகமலர்ச்சி மேலும் சுடர்ந்ததை அவனும் கவனித்தான். கண்ணாடி வளையலில் சூரியன் மின்னி எதிரொளியில் அவன் கண்களைச் சுட்டது. தசையாலான சங்குபோல் வடிவான கழுத்து. அனிச்சையாக தோள் வளைவை வருடியபோதுஅவள் கைவிரல்கள் இசைக்கருவியாகி அவனுக்குள் அதிர்ந்தது. சுவாச ஓட்டத்தை சீர் செய்து எக்கதியிலும் நிலைகுலையாதிருக்கும் திடத்தைத் திரட்டும் முயற்சிகள் ஒவ்வொன்றாக ஆரம்பமாகின.

அப்பங்கள் ஒன்று பத்து நூறு என சுழன்று தரையிறங்கின.

'குழலும் யாழும் குரலில் தொனிக்க கும்பிடும் வேளையிலே மழலை ஏசுவை மடியில் சுமந்து மாதா வருவாளே... ஆரோக்கிய மாதா வருவாளே...' கோபுரத்திலிருந்து ஒலிபெருக்கியில் பாடல் அருவி.

கத்திரிப்பூ நிறத்தில் தாவணி. கருப்பில் கையகல மஞ்சள் பூ மலரும் பாவாடை. கருப்பு ப்ளவுஸ். சாராவுக்கு உடை மிகப் பொருத்தமாகவும் பளிச்சென்றுமிருந்தது. இன்னும் பல இளம் பெண்களும் உடனிருந்தார்கள். அவர்களில் சாராதான் எல்லாக் கண்களுக்கும் பிரியமானவளாக இருந்தாள். முகத்தில் ஒப்பனை மெனக்கெடுகள் எதுவுமேயில்லை. மேதாவித்தனத்தை வெளிப்படுத்தும் பரந்த நெற்றியில் இன்று பொட்டு கூட வைத்துக்கொள்ளவில்லை. கைகளின் வழவழப்பில் தாவி விளையாடும் சிவப்புக் கண்ணாடி வளையல்கள். காதில் எட்டணா வளையங்கள். புத்திசாலிப் பெண்களுக்கே வாய்க்கும் துருத்தல் திமிறல் இல்லாத கச்சிதமாக வளர்ந்த மார்மொட்டுகள்.

*பட்டப் பகலுடுத்தி பவள ஒளி தெறிக்க நிலத்தில் நடந்து செல்லும் முதல் நிலவு நீயென்றால் இல்லை இல்லையெனப் பதறி நீ மறுக்கலாம்.*

*என்றாலும் சின்னச் சின்ன நடையிட்டு அள்ளித் தின்னும் ருசியோடு மண்ணைச் சமைக்க உன்னால் மட்டும்தான் முடிகிறது.*

சாரா தண்ணீர்க் குடத்தை முதல் நடை கொண்டுவந்து சேர்த்தபோது, பாண்டி கூச்சத்தில் மரச்சக்கரங்களைத் தாண்டியோடி தேருக்குப் பின் பக்கமாக ஒளிந்துகொண்டான். முண்டாபனியன் அணிந்து பாலியஸ்டர் லுங்கி கட்டியிருந்த சுறுசுறுப்பான இளைஞன் வேகமாகச் சென்று அவளிடமிருந்து குடத்தை வாங்கி நீரைத் தேர் மேல் வீசியடித்துவிட்டு வீணான சிரிப்போடு குடத்தை அவளிடம் தருவதைத் தலை தூக்கிப் பார்த்தான். அடுத்த குடம் வரும்போது சாராவிடமிருந்து தானே வாங்க வேண்டுமென்று நினைத்தான்.

'வெள்ளிபோல் மின்னும் எவர்சில்வர் குடத்தை வாங்க கை நீட்டுகிறான், இடுப்பிலிருக்கும் குழந்தையைக் கை மாற்றுவது மாதிரி சிகப்பு வளையோசை சிணுங்க குடத்தை சாரா தருகிறாள். அதன் வாய் விளிம்பில் ஒரு கை பற்றுகிறது. அடியை ஒரு கை தாங்குகிறது. அச்சமயம் சாராவின் பார்வை பாண்டியின் கண்களை ஊடுருவுகிறது. மனசு சொல்கிறது, குடத்தில் இருக்கிறது உன் சாவு. இரண்டு கைகளும் பல மிழந்து உடல் வெடவெடக்கிறது. பிடி நழுவிக் குடம் தரையில் சத்தத் தோடு விழுகிறது. பாண்டி தலையை உலுக்கியபடி ஒளிந்துகொள்ள இன்னும் நல்ல இடம் தேடுகிறான். சாராவின் தாவணியில் தோள் விளிம்பு ஈரமாகியிருக்கிறது. இரண்டு குடம் தண்ணி ஊத்தி ரெண்டு பூ பூத்திருக்கு. விரல்களை நெரித்து நெட்டி முறிக்கிறாள். அந்த மெல்லிய சிவந்த நீளமான விரல்கள், பாவம், சுளுக்கி அவற்றுக்கொன்றும் நேர்ந்து விடாமலிருக்க எல்லாம் வல்லவனை வேண்டிக்கொள்கிறான்.'

முண்டாபனியன் மீண்டும் ஒரு திருட்டுச் சிரிப்புடன் தன் உயிரையே அவளிடம் தருவதுபோல் குடத்தைத் தருகிறான்.

எங்கிருந்தோ எரிச்சல் கிளம்பி வந்து மனசு குமைகிறது. இதயத்தில் ஏதோ ஒரு பகுதி கருகி நாற்றம் நாசி நுனியை அடைக்கிறது. சாரா திரும்பி நடக்கிறாள். இருளில் செய்த சுருள்வில்போல காதோரம் கலைந்து தொங்கும் கேசம் காற்றில் சற்றே கலைகிறது. அந்த வரிகளில் ஒரு கவிதை ஊஞ்சலாடுகிறது.

தட்டுச் சப்பரமும் பெரிய சப்பரமும் சுத்தமாகிவிட்டன. தேரின் முகட்டுக் கூம்பு சுற்றும் முடிந்து சொரூப மேடையும் கழுவப்பட்டு விட்டது. அதிக பட்சம் இன்னும் ஐந்தாறு குடங்களுக்கு மேல் நீர் தேவைப்படாது.

இந்த நடை சாரா பெண்களோடு கூட்டமாக வந்தாள். முண்டா பனியன் மற்ற பெண்களிடம் குடங்களை வாங்கி கை மாற்றுவதற்குள் பாண்டியின் எதிரே நிறைகுடத்தோடு வந்து நின்றாள். அவன் லாகவமாக இறக்கி வைத்தான். முன்பக்கம் தாவிய ஒற்றை ஜடை குடத்துக்குள்

குதிக்கச் சாடி முடியாமல் அவள் நெஞ்சில் சாய்ந்தது. திண்ணமாகத் தேர் வடம்போல் பிசிறின்றிப் பின்னப்பட்ட கரிய சடையை எடுத்து வானத்தில் வீசினாள். அது 'ம்கூம் நான் பேசமாட்டேன்' என்று அவள் முதுகில் போய் அணைந்தது. செய்வதறியாது திகைத்து நின்றான். ஆனது ஆகட்டும், அங்கிருந்து தெறித்துவிடலாமா என்றும் எண்ணினான். தலையை லேசாக இடப்பக்கம் சாய்த்து, அவன் வியர்த்த முகத்தை மயிலிறகால் விசுறுவதுபோல மென்மையாகப் பார்த்தாள். அப்பார்வை யின் சாரத்தை மூளையுணர்ந்ததும் ஆணைகள் தாமாகப் பிறந்து வேலை துரிதமாக நடந்தது. குடத்தைத் தூக்கினான். அது வெற்றுப் பாத்திரம் போலக் காற்றாக கைக்கு வந்தது. யாரிடமோ கொடுத்தான். தண்ணீர் சிந்தும் சத்தம் எங்கிருந்தோ மழை முழக்கமாகக் கேட்டது.

குடத்தை வாங்கி இருந்த இடத்திலேயே வைத்தான். அதை அவள் எடுத்துக்கொள்ளத் தாமதிப்பதைக் கண்டு அவள் முகத்தை ஏறிட்டான்.

முகத்துக்கு முகம் நின்று கண் மேல் கண் பதித்து மெல்லிய குரலில் கேட்டாள். ''போ... து... மா...?'' அந்த மூன்றெழுத்து வினாச் சொல் முடிந்த இதழ்களிலிருந்து மொக்கு முகிழ்ந்து புன்னகை மலர்ந்தது. அது அவன் உதடுகளிலும் பரவி வளர்ந்து உயிரின் ஒளிமுக வாசலில் நுழைந்தது.

'கயல் எழுதி வில் எழுதிக் கார் எழுதிக் காமன் செயலெழுதித் தீர்த்த முகம் திங்களோ...'

''தண்ணீ போதுமா...'' வளையல் ஒலிகளோடு வந்த கேள்விக்குப் பதில் கூற ஏதுவாகத் தலையைத் திருப்பி தேரை அளவெடுத்தான். திரும்பிப் பார்த்தபோது குடம் காணாமல் போயிருந்தது.

அடுத்த குடம் நிறைத்து இடுப்பில் சுமந்தபடி வீட்டுக்கு நடந்தாள்.

சாரா வடக்குத் தெரு முனையில் திரும்பிப் பார்த்தாள். அவன் பதிலுக்கு தயக்கம் ஏதும் இல்லாமல் புன்னகைத்தான். இதயம் மூன்று முறை அவன் உதடுகளில் துடித்தது. தனித்து உயிர் தவித்தது.

'நீர் ஓரன்ன சாயல் தீ ஓரன்ன என் உரன் அவித்தன்றே!'

☆☆

உள்ளத்தை யார் கண்டுபிடித்தது? அவனா அவளா அல்லது அதுவே சுயமாகத் தன்னைப் பெற்றுக்கொண்டதா தெரியவில்லை. இதயம், மூளை, மனசு இவற்றைப்பற்றி ஓரளவு அறியவும் உணரவும் முடிந்தது. உள்ளம் புதுமையாக இருந்தது. 'நானும் அவளும் மட்டும்' என்ற ரீதியில் தனிக்குடித்தனம் நடத்தியது. சில சமயங்களில் தனி ஆவர்த்தனம். உள்ளம் உருவாகும் இடம் இளம்பெண்ணின் குருத்து உடல் - இல்லை, உயிர். சாராவின் மிருதுவான சருமத்தால் அது போர்த்தப்பட்டிருந்தது. உள்ளதை

விட பிரமாதமாக அவள் அழகைப் பிரதியெடுத்து வைத்திருந்தது அது. சுடரும் பார்வையில் எரிந்து சாம்பலாகிப் போகத் தூண்டும் விழிகள். எப்போதாவது அபூர்வமாக தானதருமங்கள் செய்பவள்போல கண் களைப் பணிவாக நடத்துவாள். அந்தப் பார்வைகளையும் கண்களையும் உள்ளம் பத்திரப்படுத்தி வைத்திருந்தது. அன்றலர்ந்த மலரை குளிர் நீரில் தோய்த்தெடுத்து முகத்தில் உதறித் தெளித்ததுபோல நினைத்துப் பார்க்கும் போது ஜில்லென்று தெறித்து.

பிரியத்தின் சாயலில் குவியும் புருவங்களை, அச்சில் வார்த்தது போன்ற நாசியை, மஞ்சள் வெயிலை உருக்கியதுபோல் நெஞ்சைக் கொதிக்க வைக்கிற கன்னங்களை, தேனுலர்ந்த இதழ்களை, காற்று வளையும் இடையை, மூங்கிலென விளைந்து திரண்டு மினுமினுக்கும் கைகளை, மென்நாற்றுகள் சுருளும் கழுத்தோரங்களை, புவி ஈர்ப்பை அலட்சியப் படுத்தும் திரட்சியான மார் மொட்டுக்களை அத்தனை மகத்துவங்களையும் ரத்தமும் சதையுமாக அந்த உள்ளம் சித்திரம் தீட்டி வைத்திருந்தது.

'முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும் வார் இருங்கூந்தல் வயங்கிழை ஒழிய வாரேன் வாழிய நெஞ்சே'

மதியும் மடந்தை முகனும் அறியா பதியிற் கலங்கிய மீன்கள் அவனுறங்கிய பின்னும் அவனுள் விடிய விடிய நீந்திக் களித்தன. பொழுது புலர்ந்த பின்பும் தோற்றம் தொய்யாமல் துள்ளித் துள்ளித் தம்மை எய்து எய்து காலத்தை தீராத் தடாகமாக்கின.

*நீ கடித்துத் துப்பிய நகத் துணுக்குகள் தானே வளர்ந்து நான் வாழும் நகரமாகிய பின் உனது இரண்டாவது வருகை இது. கூச்சத்தின் வாள்கள் சுழலும் மஞ்சள் நிறச் சுவர்களில் சிகப்பு ரோஜாக்களின் அடியிதழ் வாசமும் வண்ணமும் படர்கிறது. உன் விரல் நுனியில் ஆரம்பித்து உன் விரல் நுனியில் முடிவடையும் ஏதோ ஒரு பாதையில் உன் வலம் தொடங்கிவிட்டது. கழுத்துப் பட்டையிட்டு நாய்போலக் கடலை வீதியில் நடத்திவந்தாய் போனமுறை. உன் கர்வ பாவனைகளுக்குப் பணிந்து அது விசுவாசத்தோடு வாலைக் குழைத்தபோது புயல்கள் என்னையள்ளி எங்கென்று தெரியாமல் எறிந்தன. காட்சிகள் தொடர் பறந்து போயின. என்னைக் காணாமல் நகங்களைக் கடித்து இன்னும் கொஞ்சம் துப்பியிருக்கலாம் நீ. இந்த வருகையாவது எனக்காக இருக்கட்டும். இல்லையேல் கடிக்கும் நகங்களை மென்று விழுங்கப் பழகு. எனக்கே எனக்கென்று தனியொரு மனிதனுக்கு இத்தனை பெரிய மாநகரம் தரப்பட்டிருப்பது தாங்கமுடியாத பரிசு.*

# 4

தேவாலய முகப்பு மண்டபத்தின் படிக்கட்டில் பாதையைச் செறுக்காமல் வலதுமுனை விளிம்பில் அமர்ந்திருந்தான். வளாகத்தில் சில குழந்தைகள் பலூன்களோடு விளையாடிக் கொண்டிருந்தனர். காற்று நிரப்பிய பலூன் நூலின் பிடிப்பை அறுத்து எந்நேரத்திலும் மேலெழும்பிப் போய்விடலாம். அதே கதிதான் அவனுக்கும்.

நீளமான மிக நேர்த்தியான வீதி. அடுக்கி வைத்தது போல் வீடுகள். கடைசி அத்தத்தில் சைக்கிள் மிதிப்பவரைக்கூட வரை குறுக்கீடு ஏதுமின்றித் தெளிவாகக் காணமுடிந்தது. அவ்வண்ணமே அங்கிருந்தும் ஆலயத்து மண்டபத்தை, அதன் வாயிலை, படிக்கட்டில் அமர்ந்திருக்கும் அவனைக் காண்பது சிரமமாகயிருக்காது.

தாள்ரோஜா பந்தலை மீண்டும் ஒருமுறை உன்னிப்பாய் கவனித்தான். அங்கே எந்த சலனமும் இல்லை. இவனுக்கு இப்போதே அந்தியாகிவிட்டது; தாள்ரோஜா பந்தலிட்ட வீட்டுக்கு இன்னும் அந்தியாகவில்லை. அதை வாசல் தெளித்து வரவேற்க யாரும் முன் வரவில்லை. அப்படியும் சொல்லிவிட முடியாது. இன்னும் நேரம் இருக்கிறது. முகத்தை ஒருமுறை அழுந்த உள்ளங்கைகளால் தேய்த்துக்கொண்டவன் பார்வையைத் தாழ்த்தி நிலத்தில் விரித்தான். ஆலயத்தின் வளாகத்துக்குள் மக்கள் மண்டியிட்டு மன்றாடி மன்றாடி அழுக்காகிப் போன மணலை மாற்றிவிட்டு புதுமணல் பரப்பியிருந்தார்கள். ஆற்றுமணல் பளபளவெனத் தங்கம்போல சாயங்கால வெயிலில் மின்னியது. ஆற்றுப் படுகையே வந்து வளாகத்துள் நிறைந்தது போலுமிருந்தது. பள்ளிக்கூடம் விட்டு குழந்தைகள் சீருடைகளை மாற்றிவிட்டு கோவிலுக்கு விளையாட வந்துவிட்டார்கள். குருத்துமணலில் விளையாடுவதில் புது உற்சாகம். கபடிக் கோடுகள் கிழிப்பது சுலபமாக இருந்தது. முதுகில் கை பதித்துத் தள்ளுவது, துள்ளுவது, ஓடுவது, சாடுவது, விழுந்தாலும் காயமின்றி எழுவது என அவர்களுக்கு அந்த மணல் மெத்தை பெரும் குதூகலத்தை அளித்தது.

ஒரு சிறுமியை சிறுவன் ஒருவன் படம் வரைந்து தருவதாகப் பேசி மயக்கினான். சிறுவன் சாமர்த்தியமாகப் பேசி சிறுமியை வழிக்குக் கொண்டுவருவதை பாண்டி ஆர்வத்தோடு பார்த்துக்கொண்டிருந்தான். காத்திருந்து கண்ணலைந்து களைப்பும் சோர்வும் ஏற்பட்டிருந்த அவனுக்கு அது உற்சாகமூட்டியது. சூரியகாந்திப் பூவளவு முகத்தில் பயம், ஆர்வம், தவறோ என்ற தயக்கம், அரைச்சிரிப்பு என பல உணர்ச்சிகள் குழம்ப கடைசியாகத் தலையை அசைத்து சிறுமி தன்னைப் படம் வரைய குட்டி ஓவியனுக்கு சம்மதம் தந்தாள். கோவில் கோபுரத்தின் நிழல் வளாகமெங்கும் சரிந்து கிடக்க சித்திர வேலைக்கு இடம் தேர்ந்தெடுப்

பதில் அவர்களுக்கு சிரமமொன்றுமிருக்கவில்லை. கொடிமரச் சதுக்கத்துக்கருகே சிறுமி மல்லாக்க படுத்துக்கொண்டாள். குட்டைப் பாவாடையை மூட்டுக்குக் கீழே எவ்வளவு இழுத்து விடமுடியுமோ அவ்வளவு இழுத்துவிட்டுக் கொண்டாள்.

பாவாடை இடுப்புப் பிடிப்பை இழந்துவிடுமோ என்று கவலையாக இருந்தது. சட்டையில் சரி செய்ய ஒன்றுமில்லை, கைகளையும் கால்களையும் அகலப் பரப்பி நாணமென்றும் சொல்லிவிட முடியாத ஓர் உணர்வோடு கண்களை மூடிக்கொண்டாள். உதட்டைக் கடித்துக் கொண்டு வாயில் சிரிப்பை வடிகட்டினாள். ஓவியன் அவ்வப்போது ஓரக் கண்ணால் அதைப் பருகிக்கொண்டு அவளை வரையத் தொடங்கினான். முதலில் தலையை, அடுத்து தோள்களை, கைகளை, இடையை, கால்களை, பாவாடை நலுங்காமல் கால்களின் உட்புறங்களை, பாதங்களைத் தன் சுட்டுவிரலால் அவள் உடலையொட்டி கோடுகளை இழுத்து மிக கண்ணியத்தோடு குட்டி ஓவியன் வரைந்து முடித்ததும், சிறுமி எழுந்து மிக ஆர்வத்தோடு தன் சுய சித்திரத்தைப் பார்வையிட்டாள்.

அது சாலை விபத்தில் பலியானவரின் மரணக் குறிப்பு வரைபடம் போலத்தான் இருந்தது.

சந்தோஷ உணர்ச்சி இருவருக்குள்ளும் பாய்ந்து பரவியது. பிஞ்சு முகங்கள் இன்னும் பூரித்தன.

வரைந்த உற்சாகம் அவனுக்கு; வரையப்பட்ட பெருமிதம் அவளுக்கு.

பாண்டியின் மனசு அவர்களிடமிருந்து அவனிடமே திரும்பியது. கேலியாய் வேடிக்கையாய் ஆசைக் குறுகுறுப்போடு அவனுக்குள் ஒரு கற்பனை எழுந்தது. சாராவிடம் அவன் தணிந்த குரலில் கேட்டான், 'சாரா, உன்னை நான் மணல் படம் வரைந்து தரட்டுமா?'

சாராவின் பதில் என்ன, எதிர்வினை என்ன? எது சாராவின் பதிலாக இருக்கும்? எதுவாகவும் இருந்துவிட்டுப் போகட்டும். எரிச்சலடைவாளா; மகிழ்ச்சியடைவாளா? அது பற்றியெல்லாம் கவலை ஒன்றுமில்லை, பாண்டி தனக்குத்தானே சத்தமின்றி சிரித்துக்கொண்டான். சாராவிடம் இப்படியொரு கேள்வியை கற்பனையில் எழுப்ப முடிந்ததையே துணிச்சல் மிக்க செயலாக அவன் நம்பினான். ஆகவே அவன் உடம்பில் சில நரம்புகள் புதிதாய்க் கிளையோடின. ரத்தத்திலிருந்து காதல், ரத்தத்தைப் பிரித்து உடலெங்கும் பாய்ச்சியது. நகக்கண்கள் வரை கிளர்ந்தன.

தாள்ரோஜா பந்தலுக்கடியில் தெளித்த தண்ணீர் மத்தாப்பூவாக தரையில் பூத்தபோது கடலில் தொலைந்த குட்டிப் புயலொன்று அவனுக்குள் புகுந்து சுழன்றது. கடலாகினான். சாரா முற்றம் தெளித்துக்கொண்டிருந்தாள். இன்னும் யார் யாரோ அந்தக் காரியத்தை அவரவர் வீட்டு முன் செய்துகொண்டுதானிருந்தார்கள். யாரும் அவன் கண்ணுக்குப்

படவில்லை. தெருவில் சில சைக்கிள்கள் போய்வந்து கொண்டிருந்தன. அவற்றை மனிதர்கள் செலுத்தினார்களா, சர்க்கஸ் கரடிகள் செலுத்தினவா, தெளிவில்லை. மாடுகள் ஒன்றிரண்டு சோம்பலோடு திரிந்தன. அவை மந்தையிலிருந்து வருகின்றனவா, சந்தையிலிருந்து தப்பித்ததா தெரியவில்லை. தெரிவதெல்லாம் சாரா மட்டுமே. முற்றம் தெளிக்கும் சரித்திர முக்கியத்துவமிக்க செயலை செய்துகொண்டிருக்கிறாள். இதைச் செய்ய அந்த வீட்டில் மற்ற பெண்களுமிருப்பார்கள். ஆனாலும் சாராதான் மெனக்கெடுகிறாள். அந்த முனைப்புக்குள் ஓர் ஓரத்தில் தனிப்பட்ட காரணமொன்று உள்ளதுபோல் கற்பனை செய்வதுதான் எவ்வளவு இன்பம் நிறைந்ததாக இருக்கிறது!

சாரா தாள்ரோஜா பந்தலைவிட்டு வெளியே தெருவுக்கு வந்து தேவாலயத்தைத் திரும்பிப் பார்த்தாள். பார்வை சற்று தாழ்ந்து மண்டபத்துக்கு இறங்கி பாண்டியின் மீது பதிந்தது. காதல் தேவதைகள் மேக மண்டலத்தில் சிறகடித்துக்கொண்டு அங்குமிங்கும் அலைந்திருக்க வேண்டும். பாண்டி அடைந்த பரவசத்திற்கு அளவேயில்லை.

தண்ணியில போட்டாலும் சாகமாட்டேன் வெண்ணியில போட்டாலும் வேகமாட்டேன்னு மனசு அடம் பிடித்துக் காத்திருந்ததெல்லாம், ஏங்கித் தேம்பியதெல்லாம் இந்த சிலிர்ப்பூட்டும் கண்களின் அன்பளிப்புக்குத்தானே. பார் சாரா, பார். இன்னும் மென்மையாக. மேலும் ஆழமாக. உயிர் வரை ஊடுருவி என்னைக் கரைத்து நீராக்கி விடு. உன் கைகளால் அள்ளித் தெளி.

சாரா வீட்டுக்குள் போய்விட்டிருந்தாள். காட்சி விரிந்து தெருவின் இதரப் பகுதிகளும் தென்பட்டன. உடலில் சட்டென வெப்பம் ஏறி இறங்கியது. பெருமூச்சு ஒன்றும் நீளமாக வெளியேறியது. சுத்தமான உடைகளை ஒருமுறை மீண்டும் சரிபார்த்துக் கொண்டான். மணலில் வரையப்பட்டிருந்த சிறுமி கள்ளத்தனத்தைக் கண்டுபிடித்துவிட்ட பாவனையில் படுத்த நிலையிலேயே அவனைப் பார்த்துச் சிரித்தாள். குற்றத்தை ஒப்புக்கொள்வதுபோல இவனும் பதிலுக்குச் சிரித்தான். கொடிமரச் சதுக்கத்தில் முகத்தைப் பதித்தபடி சிறுவன் ஒருவன் ஐஸ் பால் ரெடிக்காக முப்பத்தேழு முப்பத்தெட்டு சொல்லிக்கொண்டிருந்தான். அன்னைக் கொடிமரம் பிள்ளைக் கொடிமரத்தை அணைத்துப் பிடித்திருந்தது. பிள்ளைக் கொடிமரத்தின் சிரசில் திருநாளைப் பறைசாற்றும் பட்டுக்கொடி காற்றில் அசைந்து கொண்டிருந்தது. ஆலயம் ஒரு கப்பல் போல மிதந்து செல்வதாகவும் சாராவின் வீட்டை நோக்கி முன்னேறிக் கொண்டிருப்பதாகவும் உணர்ந்தான்.

வெயில் தாழ்ந்து இனிமேல் இல்லை என்றாகி, நிழல்கள் கூடு மீண்டன. மாலைக்காற்று சற்றுக் குளுமையோடு இதமாக வீசிப் புழுக்கத்தைத் துடைத்தது. வேலை விட்டு வீடு திரும்பும் மனிதர்களின் சந்தடி கூடியிருந்தது. ஆலயக் கோபுரத்தில் ஒலிக்குழாய்கள் தேவனின் நாமத்தை

புகழ்ந்து பாடத் தொடங்கியிருந்தன. உன்னித்துப் பார்த்தால் இன்னும் பல விஷயங்களை கவனப்படுத்திச் சொல்லலாம். குறிப்பாக, வானத்தி லிருந்து புறாக்கள் மாடத்தில் இறங்கிய வண்ணமிருந்தன. ஆனால் அவற்றுக்கெல்லாம் அவனில் ஒரு முக்கியத்துவமும் இல்லை.

முதல் பார்வையில் காதல் வரலாம், வராமலும் போகலாம். வந்தே ஆகவேண்டிய காதல் வந்தே தீரும் கடைசிப் பார்வையில் கூட. பாண்டிக்கு சாராவைக் கண்டதும் காய்ச்சல்போல ஏதோ ஒன்று ஏற்பட் டது. அதுதான் எளிய வலிய எல்லா உயிர்களையும் ஆட்டிப் படைக்கும் காதல் என்றால் அது பாண்டியும் சாராவும் ஒருவரை ஒருவர் கண்டு கொண்ட முதல் முறை பரிமாறிய சின்னச் சின்ன ஊசிமுனைப் பார்வை களில் மலர்ந்தது.

**

திவ்ய நற்கருணை ஆராதனைக்கான மூன்றாம் மணி மாலையில் ஒலித்தது. மாடத்திலிருந்து புறாக்கள் கூட்டமாக எழுந்து சாய்வாகப் பறந்து ஆலயத்தை விரிவாக இரண்டு வட்டமடித்து கூடுகளையடைந்த போது மணியோசை ஓய்ந்திருந்தது.

பத்துக் கட்டளைகளில் பிரதான கட்டளையொன்றை நிறைவேற்றுவ தாக பவ்யமாக நிலைக்கண்ணாடி முன் நின்று தன் முழு அழகையும் ஆண்மையையும் கம்பீரத்தையும் கண்டுபிடித்து வெளியே இழுத்துக் கொண்டிருந்தான் பாண்டி. காய்ச்சல் படுக்கையிலிருந்து எழுந்த களை அவன் முகத்தில் பிரத்தியேக வசீகரத்தை பூசியிருந்தது. கண்களில் தெளிவையும் ஒளியையும் காணமுடிந்தது. கன்னக் கதுப்புக்கு பதில் மெல்லிய ஒடுக்கம். மெழுகியது போல் உடம்பு. மீசை வளர்ச்சியில் திருப்தி. முகத்தை இப்படி அப்படி திருப்பி பல கோணங்களில் கண்ணாடியில் தற்காலிகப் புகைப்படங்கள் எடுத்துக்கொண்டான். கைகளை உதறி உடலை முறுக்கேற்றினான். வாடிக்கை சிரிப்புகள்.

உண்மையிலேயே அவனுக்குள் புது சக்தி பிறந்திருந்தது. வீட்டை விட்டு வேகமாக வெளியிறங்கி வடக்குத் தெருவையும் தெற்கையும் இணைக்கும் பஞ்சாயத்து ரூம் கட்டிடத்தில் திரும்பி கோவிலை நோக்கி நடந்தான். எல்லா வீடுகளிலும் வெளிவிளக்குகள் எரிந்தன. தெரு பிரகாச மாக இருந்தது.

குழந்தைகள் ஒரு கையில் அம்மாவையோ அப்பாவையோ பிடித்துக் கொண்டு மற்றொன்றை வீசி வீசி நடந்தார்கள். எதிர்ப்பட்ட வர்கள் அறிமுகமில்லை என்றாலும் பூரிப்போடு கண் கலந்தனர்.

லீலா டீச்சர் வீட்டை நெருங்கியதும் உயிர் கண்ணுக்குள் வந்து வீட்டுக்குள் பாய்ந்தது. தாள்ரோஜா கொடித்தண்டுகளெல்லாம் விரல்

திண்ணம் பாம்புகளாகிப் பயமுறுத்தின. லீலா டீச்சர் ஆராதனைக்கு ஆயத்தமாகிக் கனத்த உடலுடன் கால் செருப்பைத் தேடிக்கொண்டிருந்தாள். அடுத்த நிமிடத்தில் கோவில் மண்டப வாசலில் முளைத்தான். ஆண்கள் குழந்தைகள் பெண்களென மக்கள் சாரைசாரையாக வந்தார்கள். தூபக்கால் நெருப்பிலிருந்து சாம்பிராணி வாசம் காற்றில் கலந்து வந்து புத்துணர்ச்சியூட்டியது.

ஆராதனை ஜெபம் தொடங்கிவிட்டது. பாதிரி பாவ சங்கீர்த்தனங்கள் ஏற்று பரிகாரம் பகர்ந்து கொண்டிருந்தார். தெற்கு வாசல் படிக்கட்டோரம் அவன் வயதொத்த இளைஞர்கள் கொத்தாகக் குழுமி நின்று பேசிச் சிரித்தார்கள். ஆலயத்துள்ளிருந்து தெற்கு வாசலுக்கு வந்து இன்னோசன்ட் இளைஞர்களை உள்ளே அவசரமாக வரவேற்றார். அவர்களோடு ஒருவனாகக் கலந்தபின்தான் கவனித்தான். சாரா சிலுவைப் பாட்டில் கிறிஸ்துவின் வஸ்திரத்தை பங்கு பிரிக்கும் படத்தின் கீழே ஜெபம் சொல்லிக்கொண்டிருந்தார்கள். ''அருள் நிறைந்த மரியே வாழ்க. கர்த்தர் உம்முடனே. பெண்களுக்குள் ஆசிர்வதிக்கப்பட்டவள் நீயே''வுக்கு நடுவில் சாரா தெற்கு வாசலுக்கு அனிச்சையாக கண்களைத் திருப்பினாள்.

சென்ட் பாட்டிலாக மணத்த இளைஞன் தன் அருகில் நின்றவன் தோளில் வேகமாக ஒரு அறை விட்டு தோளைக் குலுக்கி பெருமிதமாகச் சிரித்தான். அந்தக் கூட்டத்திலேயே எல்லோரையும் விட சற்றே உயரமான இளைஞன் சாராவை நேசிக்கிறானோ என்று எண்ணும்போது மனம் கவலைப்பட்டது. அவன்... அவன் ஏன் நேசிக்கக் கூடாது, என்ற கேள்வியும் எழ மனம் பிளவுபட்டது. ருசித்துப் பழக்கமில்லாத கசப்பான உணர்ச்சி பாண்டியை முறுக்கிப் பிழிந்து சோர்வடையச் செய்தது. இரவல் பெற்ற பொருளைத் தொலைத்துவிட்ட பதைப்பு. சாராவின் கண்கள் வேறு யாரையும் பாராமலிருக்க என்னென்ன செய்யலாம்? அதை நீ பாராமல் கண்ணை மூடிக் கொள்ளலாம்.

''எங்கள் அனுதின உணவை எங்களுக்கு அருளியருளும். எங்களுக்குத் தீங்கு செய்கிறவர்களை நாங்கள் மன்னிப்பதுபோல எங்கள் பாவங்களையும்''க்கு நடுவே சாரா தெற்கு வாசலை மீண்டும் முகமே பூவாகப் பார்த்தாள். பதிலுக்கு எத்தனை பேர் பார்த்தார்கள் என்று கவனிக்க முடியவில்லை. ஒரே வேளையில் அரை டஜன் ஆண்களின் இளம் ரத்தத்தை உலையில் ஊற்றிக் கொதிக்க வைத்து இறக்கும் வல்லமையும் வசீகரமும் அவளிடமிருந்தது.

'முதிரா இளைஞர் ஆருயிரும் திருகிச் செருகும் குழல் மடவீர்...'

அவன் தெற்குவாசல் வழியாக நுழையும்போது அவள் கவனித்திருக்கவேண்டும் என்பது புத்தியில் பட்டதும் மனம் நிம்மதியடைந்தது. கலக்கம் தெளிந்தது.

அதற்கு மேலும் அங்கு நின்றிருக்க முடியாமல் கால் பரபரத்தது. ஆலயத்துக்குள் நுழைந்துவிட விழைந்தான். முடியாமல் கால்கள் திரும்பி நடந்தன. தெரு வெறிச்சோடிக் கிடந்தது. தெருக் கம்பங்களுக்கருகே நாய்கள் சுருண்டு படுத்திருந்தன. ஒலிபெருக்கியில் ஆராதனைப் பாடல் மிதந்து போனது. மெல்ல நடந்து கடற்கரை வந்து தேரியில் அமர்ந்தான். வெளிச்சம் குறைவாக இருந்தது. கூர்ந்து கவனித்த பின் வானத்தில் நட்சத்திரங்கள் மின்னின. 'விண்மீன் வியனொளியை விரிகடல் அலை பாட தண்மீன் செதிலசையத் தான் மயங்கும் கடல்' என்ற தமிழாக்கப் பாடலின் அழகில் திளைத்தான். அலைகளில் சுழன்று வந்த சாராவின் மின்சாரக் குரல் கேட்டுக்கொண்டேயிருந்தது.

'போதுமா?'

'போதுமா?'

'போதுமா?'

தணலை ஊதிப் பெருக்கி தன்னந்தனியே அலையும் ஆகாயக் கிறுக்கனின் நிழல் என் உடலானதும் நீ வந்தாய் எங்கிருந்தோ சின்னஞ்சிறிய தூண்டிலோடு. குளத்துக்கரையில் மீன் பிடிக்கக் கற்றுத் தருகையில் நெருங்கிய ஸ்பரிசம், காற்று, மூச்சு மனசைப் பெரிய வலையாகப் பின்னி முடித்தது. கடற்கரையிலிருந்தேன் நீ வரவில்லை எங்கிருந்தோ எந்த ஒரு அலையிலும்... மெல்ல வேதனைகள் மீன்களாக மாற படகேறி வந்தேன் உனக்காக. தண்ணீரில் நடந்து போனவனின் பாதச்சுவடுகள் துடுப்பற்ற படகுகளாக அலைந்தன. அதிலொன்றாய் என்னுடையதும் மாறியது. அதிசயம் நிகழ்த்த எங்கிருந்தாவது நீ வர வேண்டும். திமிங்கலங்கள்கூட விழுங்க முடியாத ஆகப் பெரிய புழுவாகி நெளிந்து கொண்டிருக்கிறேன் சின்னஞ்சிறிய தூண்டில் முள்ளில். கொஞ்ச தூரமேனும் எங்கிருந்தோ வந்து நீ நடந்து போக வேண்டும் என் தாகத்தின் மீது.

☆☆

உலர்ந்து சுருங்கிய சருமமும், ஒடுங்கிக் கூன் விழுந்த உடலும் துக்கத்தில் கருத்துத் தொங்கும் முகமுமாக சாரா மிக வயதுபட்ட பெண்மணியாகத் தளர்ந்த நடை போட்டாள். கிழவியானாலும் அழகு குறையாத லட்சணம் பொருந்தியவள். அவளருகே சேணம் பூட்டிய கழுதை. அதன் மீது ஒரு மனிதன் அமர்ந்திருந்தான். வாற்கோதுமை வயல்வெளிகளுக்கு நடுவாக கர்மேல் மலைக்கு நெளிந்து செல்லும் செந்நிறப் பாதையில் நெடுந்தொலைவுப் பயணத்தை அவர்கள் மேற்கொண்டிருந்தனர். சாராவின் விழிகள் பாழடைந்த விண்மீன்களாக மாறியிருந்தன. பாதையைத் தவிர்த்து வேறொன்றையும் காணப் பிரியமில்லை. ஆயிரம் சேக்கல் நிறை பொன்னும், நாலு தாலந்து வெற்றிலையும் ஆறு மாற்று

வஸ்திரங்களும், வாற்கோதுமை அப்பங்களும் தாள் கதிர்களை உள்ளிட்டு பட்டு வஸ்திரத்தில் திடமாகக் கட்டி நிருபம் தரும் பொருட்டு கழுதையின் முதுகில் பொதியாக ஏற்றப்பட்டிருந்தது. கழுதை மீது அமர்ந்திருந்த மனிதன் கழுத்து வரை மனிதனாக இருந்தான். அதற்கு மேலே தலை இருக்க வேண்டிய இடத்தில் செப்புக்குடமிருந்தது. அவன் மார்புத் தசைகள் துக்கத்தாலும் துயரத்தாலும் விம்மிக்கொண்டிருந்தன. அவன் தலையாகிய செப்புக்குடம் தன் வாய் மட்டம் தளும்பிச் சிந்தும் அளவு கண்ணீரால் நிரம்பியிருந்தது. அவன் துக்கம் மீறும்போதெல்லாம் வெப்பம் பொங்கும் கண்ணீரால் கழுதையின் புட்டமும் வாலும் ஈரமடைந்தது. செப்புக்குடத் தலையன் எப்படி அழுகிறான் என்பது எல்லோருக்கும் மிகுந்த ஆச்சரியத்தை உண்டாக்கி கள்ளத்தனமானதொரு குதூகலத்தையும் தந்தது. குடத்துக்குள் கண், மூக்கு, காது, வாய் போன்ற உறுப்புகள் கிடக்கிறதோ என சந்தேகித்த சிலர் குதிகால் உயர்த்தி உள்ளே உற்றுப் பார்த்தனர். அங்கே காணப்பட்டதோ கண்ணீர் மட்டுமே. வயது பெலக்காத சிறார்கள் அவனைக் காணும் ஸ்தலங்களிலெல்லாம் வட்டமாகச் சூழ்ந்து ''ஏய் செப்புக்குடத் தலையன்! செப்புக்குடத் தலையன்!'' என்று கோஷமிட்டு பரியாசம் செய்தனர். அவன் வெட்கத்தாலும் அவமானத்தாலும் மனமுடைந்து தன் தலையைத் தாழ்த்திக்கொள்ள, கண்ணீர் கொட்டுவது அவர்களுக்கு கூடுதல் வேடிக்கையாக அமைந்தது.

''சாரா... என் பிரியமே... என் ஆண்டவளே... என்னை ரட்சணை செய், இந்த ஆக்கினையிலிருந்து என்னைக் கை தூக்கி விடு. செப்புக் குடத்துக்குப் பதில் என் தலையைக் கொடு, இல்லை என்னை அழித்து ஒதுக்குப்புறமாக குழி தோண்டிப் புதைக்கச் செய்.''

கல் பட்டு நீர் கலங்கும் குரலில் குடம் பேசியது. ''பலிபீடத்தில் கனமான கொலைப் பட்டயத்தை சந்திக்கவும் ஆயத்தமாக இருக்கிறேன். எனக்கு கழுத்தில்லையே என்று நீ கவலை கொள்வாய் எனில், அலங்கத்தின் மேல் என்னை சர்வாங்க தகனமாகப் பலியிடு. நான் பஸ்பமாகிப் போகட்டும். என் பிரியமே... என் ஆண்டவளே... எனக்கு மனமிறங்கு.''

கர்மேல் மலையில் கட்டப்பட்டுள்ள சிறிய பட்டணத்தில் தேவனுடைய மனுவினும் தீர்க்கதரிசியான ஒருவன் வசிப்பதாகவும் அவன் தன் கைத்தடியை செப்புக்குடத்தின் மேல் வைத்தால் தலை மீண்டுவிடும் என்று, கிரியைகள் மீது நம்பிக்கையுள்ளவர்கள் ஆலோசனை கூறினார்கள். அவனே ஒரு இக்கட்டில் தன் மேல் வஸ்திரத்தை முறுக்கி ஓங்கியடித்து உயிருள்ள நதியை ரெண்டாகப் பிளந்து வழி உண்டாக்கினான் என்றும் சொன்னார்கள்.

''சாரா, அந்த தேவனுடைய மனுவிடம் என்னை அழைத்துச் செல். முழுத்தலையும் கூட வேண்டாம். உன்னைக் காண ஒரே ஒரு கண் மட்டுமாவது பெற்று வருவோம்.'' செப்புக்குடத் தலையன் விண்ணப்பம்

ஏற்றுக்கொள்ளப்பட்டது. கெய்சோ பட்டணத்தின் வீதிகள் வழியாக அலைந்து வந்து தீர்க்கதரிசியின் எளிமையான கோட்டை வாசற்படி முன் கழுதையை மடக்கியபோது உள்ளிருந்து வந்த தீர்க்கதரிசியின் காரியதரிசி வந்த நோக்கத்தைக் கேட்டான். அறிந்துகொண்டதும் காரிய தரிசிக்கு சிரிப்பை அடக்குவது சிரமமாயிருந்தது. பட்டு வஸ்திரத்தில் பொதிந்து கட்டியிருந்ததை எடுத்து நீட்டினார்கள். பெற்றுக்கொள்ள மறுத்தான். மீண்டும் உள்ளே நடந்தான்.

சில சிட்டிகை மணல் பொழுதில் வெளிப்பட்டவன், ''தேவனின் உளத்தாலும் தேவ மனுஷனின் வல்லமையாலும் இந்த மனிதன் குண மடைந்து தன் பழைய உருவை அடைவான். கெய்சோ பட்டணத்தின் புறம்பே தெற்குத் திசையில் பாயும் பாத்கா நதியில் இம்மனிதன் மூன்று முறை தலைமுழுக்கு செய்யக் கடவது. பாத்கா வெள்ளத்தில் இந்த மனிதனின் தலை மிதந்து வந்துகொண்டிருக்கிறது. அது கடந்து சென்று விடுமுன் துரிதமாகச் செல்லும்படி உங்களுக்கு கூறப்படுகிறது.'' அவன் மறைந்தான்.

நதியில் முதல் முறை மூழ்கி எழுந்தபோது செப்புக் குடம் இன்னும் துலக்கமாக இருந்தது. இரண்டாவது முறை மூழ்கி எழுந்தபோது குடத்தி லிருந்து மீன்கள் துள்ளி நதி நீரில் குதித்தன. மூன்றாவதும் இறுதியுமாக மூழ்கியபோது... மூச்சுத் திணறி விழிப்புத் தட்டியது.

**

*தெரிந்தோ தெரியாமலோ உன் காலடி மண்ணெடுத்து ஒரு பூமி செய்துவிட்டேன். உன் ஈரக் கூந்தலை கடலாகச் செய்யும் முன்னே கடந்து போய்விட்டாய். உயரத்திலிருந்து சூரியனாய் வருத்துகிறது ஒற்றைப் பார்வை. வெப்பத்தில் வறள்கிறது எனது சின்னஞ்சிறிய பூமி. நீரூற்று தேடிக் கிணறுகள் தோண்டினால் பீறிட்டடிக்கிறது ரத்தம். கண்ணே. இரண்டொரு தீர்த்தமணிகளைத் தானமிடு.*

## 5

**தி**ருநாள் ஐந்தைக் கடந்து ஆறுக்கு வந்துவிட்டிருந்தது. வெளியூர் களிலிருந்து திருவிழாவுக்காக வந்து போவோர்களின் வரத்து தொடங்கி விட்டது. காலைத் திருப்பலி முடிந்ததும் காணிக்கைப் பொருட்களை ஒவ் வொன்றாக ஏலம் விட்டார்கள். ஏலம் சொல்பவர் மண்டபத்தின் வாசலில் நின்று கூவினார். கேட்பவர்கள் வளாகத்தில் குழுமி நின்றிருந் தனர். ஒரு மரக்கால் நிலக்கடலை, வாழைப்பழம் ஒரு குலை, நாட்டுச் சேவல் ஒன்று, கோழிமுட்டை ஒன்று என நாலு காணிக்கைப் பொருட்கள்

தான் வந்திருந்தன. ஏலம் கேட்க ஐம்பது அறுபது பேர் நின்றிருந்தார்கள். வாலிபப் பையன்களும் பெண்களும் வேடிக்கை பார்த்திருந்தனர். சாரா பெண்களோடு முன்வரிசையில் நின்றிருந்தாள். பாண்டி கொடிமரத்து சதுக்கத்தில் ஆலயத்தைப் பார்த்த வண்ணம் சாய்ந்து நின்றான். ஏலம் விடுவதும் இறைவழிபாட்டில் ஒரு அம்சம்தான் என நினைத்தாளோ என்னவோ பாட்டி கோவிலுக்குள்ளே கையில் ஜெபமாலையோடு அமர்ந்திருந்தாள்.

''ஒரு குலை வாழைப்பழம் பத்து ரூபாய்...'' ஏலம் தொடங்கியது. வேகமாக வளர்ந்து ஐம்பது ரூபாயை எட்டியது. இன்னும் இன்னும் கூடி மார்க்கட் விலையைவிட நாலு மடங்குக்கு குறையாமல் ஏறும். குழந்தைகளும் இளம் பெண்களும் ஏலம் கேட்பவர்களை ஆர்வம் பொங்கப் பார்த்தார்கள். பெண்கள் அதினினும் ஆர்வத்தோடு பார்க்கப்பட்டார்கள். ஒரு பொருள் தன் விலை மதிப்பை அனாவசியமாகத் தாண்டிப் போவதும் அதைக் கைப்பற்ற மறைமுக வெறியோடு மோதுவதும் தங்களின் பண பலத்தை அந்தரங்கமாக நிரூபிப்பதுமாகப் போய்க் கொண்டிருந்தது ஏலம். கடவுள் காணிக்கை என்ற பெயரில் சூதாட்டம் நடப்பது போல்தான் இருந்தது. வாழைக்குலை தொண்ணூறு ரூபாய்க்கு போனபோது சாரா பாண்டியை ஒரு குழந்தையின் குதூகலத்தோடு பார்த்தாள். அலட்சியமாக தவிர்த்தான். அவன் ஏன் கண்களை விலக்கிக் கொண்டான்? அவனுக்குத் தெரியவில்லை. நூறைத் தொட்டபோதும் கண்களால் தொட்டாள். அப்போது அவன் தலை கவிழ்ந்திருந்தது. அவனை எது இப்படி இயக்குகிறது? அவனிடம் பதிலில்லை. நூறு ரூபாய் மூன்று தரம் என்று சொன்னதும் சென்ட் வாசனை இளைஞன் வாழைக்குலையை வாங்கிக்கொண்டான். ஒரு மரக்கால் நிலக்கடலை நாற்பது ரூபாய்க்கு போனது. அதையும் சென்ட் பாட்டில்தான் எடுத்தது. சேவலும் அவனாலேயே கைப்பற்றப்பட்டது. அவன் விலை கேட்கும் போதெல்லாம் சாரா சென்ட் இளைஞனை மலர்ச்சியான முகத்தோடு பார்த்தாள். பதிலுக்கு அவனும் பார்த்தான். இதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த பாண்டிக்கு விரக்தியான சிரிப்பு வந்து வாய் கசந்தது.

சாராவைப் பார்த்தான். அதற்கென்று காத்திருந்தவள் போல் அணுக்கமாகச் சிரித்தாள். எதற்கென்றே தெரியாமல் தடாலடியாக அந்தப் பரிசைப் புறக்கணித்தான். அதன் பின்விளைவு சாரா முகத்தில் எத்தனை ரிக்டர் பதிவாகும் என்பதைப் பற்றியும் கவலைப்படவில்லை.

'உன் சிரிப்பு பல பேருக்காக. அது அழுக்கானது.' மனசுக்குள் சொல்லிக்கொண்டானா நினைத்தானா அவனுக்கே விளங்கவில்லை.

கோழி முட்டை ஏலம் இவ்வளவு சூடு பிடிக்கும் என்று யாரும் எதிர் பார்க்கவில்லை. ஆயிரம் முட்டைகளுக்கு அப்பாவான சேவலே நூற்றிப்பதினோரு ரூபாய்க்குத்தான் ஏலம் போயிருந்தது. முட்டை அந்த சாதனைகளையெல்லாம் தாண்டிப் போக வேண்டிய கட்டாயம்

நேர்ந்தது. எல்லாக் காணிக்கைப் பொருளையும் துபாய் செவ்ட் ஒருவனே ஏலம் கேட்டு வாங்கிக்கொண்டிருப்பது பிடிக்காத இளைஞன் ஒருவன் கோழிமுட்டையை எப்பாடு பட்டாவது கைப்பற்றிவிட முடிவெடுத்து களத்தில் இறங்கிவிட்டான். துபாய் சியாலும் இறால் எக்ஸ்போர்ட் காரன்சியும் சண்டைச் சேவல்கள்போலச் சீற்றத்துடன் ஆவேசமாக மோதிக் கொண்டன. ஏலம் போகும் விறுவிறுப்பைக் கேட்டு இன்னும் பலர் வளாகத்துக்குள் நுழைந்து கூடினர். யார் மேலும் எதன் மேலும் துளியும் ஆர்வம் காட்டாமல் பார்வையை நிலத்தில் குத்தியபடி பாண்டி அங்கேயே நின்றிருந்தான். ஏன் நிற்கிறோம், எதற்காக, எதன் பொருட்டு நின்றுகொண்டிருக்கிறோம் என்றொரு கேள்வி அவனுக்குள் தோன்றவுமில்லை. கோழிமுட்டையின் ஏல விலை ரூபாய் நூற்றி ஐம்பதை எட்டியதும் சற்றும் யோசிக்காமல் இறால் 'நூற்றி அறுபது'' என்றான். அநியாயம்தான்! ஆனாலும் என்ன ஆலயக் கணக்கில்தானே போய்ச் சேருகிறது. எனவே அநியாயம் பத்துப் பத்து ரூபாயாக ஏறிக்கொண்டிருந்தது. ஆனாலும் ஏலம் விட்டவர் போலி உற்சாகத்துடன் சிரிப்பை பல சிரமங்கள் தாண்டி வாயில் அடக்கிக்கொண்டார். கூட்டத்தினர் மத்தியில் எதிர்பார்ப்பு படுபயங்கரமாக இருந்தது. ''முட்டையை வாங்கிட்டு போயி பொரிக்க திங்கப் போறானுவளா அடை காக்கப் போறானுவளா தெரியலியே...'' கூட்டத்தில் ஒரு பெரிசு கவலையடைந்தது. ''பணக் கொழுப்பு! வேற என்ன?'' என்றது இன்னொன்று. முட்டையைத் தலைக்கு மேல் உயர்த்திப் பிடித்து எல்லோருக்கும் காட்டி ஏலம் விடுபவர் வியப்போடு சத்தமான குரலில் கூறினார். ''உலகத்திலேயே ஒண்ணே கால் ரூபாய் கோழி முட்டை, இருநூறு ரூபாய்க்கு ஏலம் போனதா சரித்திரமே கிடையாது. முதமுதலா நம்ம ஊர்லதான் ஒரு கோழி முட்டை இருநூறு ரூபாயையும் தாண்டி ஏலம் போய்கிட்டு இருக்கு...'' அவர் மேலும் ஏதோ கூற இருந்தார். அவர் பிரசங்கம் பிடிக்கவில்லையோ என்னவோ, கோழி முட்டை அவர் கையிலிருந்து குதித்துத் தற்கொலை செய்துகொண்டது. மண்டபத்தின் படிக்கட்டொன்றில் 'நச்' சென்று விழுந்து உடைந்து விடுதலை உணர்வோடு சிதறிக் கிடந்தது. சில நொடிகள் கூட்டத்தினர் அதிர்ச்சிக்கு ஆளானார்கள். பின்பு அடக்க முடியாத சிரிப்பு. அலையலையாகச் சத்தம்போட்டுச் சிரித்தார்கள். யாரோ கூட்டத்திலிருந்து ''இருநூற்று நாப்பதே'' என்று ஏலம் கேட்ட போது பாண்டி குலுங்கிக் குலுங்கி வாய்விட்டுச் சிரித்தான். உடைந்து ஓடு நொறுங்கிக் கிடந்த கோழி முட்டையின் பரிதாபத் தோற்றத்தைப் பார்த்து, ஏலம் கேட்கப் போட்டி போட்ட இளைஞர்களும் சிரித்துவிட்டனர். சிரிப்பை அடக்க முடியாத பாண்டி உடலெங்கும் புது சந்தோஷம் பரவியிருக்க பெண்கள் பக்கம் திரும்பி சாராளைப் பார்த்தான். அலட்சியத்தின் அடுக்கிலிருந்து முதல் கத்தியை எடுத்து சரியாக எறிந்தாள். 'சதக்' கென்று குத்தியது.

**

எழுஞாயிறு போற்றுதும்

இருளின் முரணாக ஒளியின் அசைவற்ற நிழலாக கருவுக்குள் கிடந்த சிசுவுக்காக அந்தப் பாடலைப் பாடினேன். துடிக்கப் பழகாத புதிய இதயத்துக்காக முளைக்கத் தலையெடுக்காத புனித ஆத்மாவுக்காக கேட்கத் தொடங்காத குருத்துச் செவிகளுக்காக என் குரலின் வெளியைத் திறந்தேன். குடையாக விரிந்திருந்த ஆகாயத்தை படமெடுத்தாடும் கடலை பட்டொளி வீசும் நிலவை படையெடுத்து வந்த குளிரை பனிக்காற்றை வெயிலை மழையை மாருதத்தை மலைகளின் கூந்தலை அருவியின் ஊஞ்சலை குட்டி குட்டி நட்சத்திரங்களை கூராப்பை கொடியோடு மலர்களை மரத்தோடு பறவைகளை கருப்பேழையின் சுவர்களில் இசையால் வரைந்தேன். நித்தியத்தின் அழகே அன்பின் வடிவே காதலின் பெருவெளியே கருணையின் திருப்பொருளே உயிர்களின் சுருதியே முத்தங்களின் முழுச்சுவையே எழு எழு விழி விழியென்று உருகிக் கரைந்தேன். இருளின் விரல்களில் இறுக்கம் அவிழவில்லை. பாடலின் முடிவில் ஆழ்கடலை ஒரு வில்லாக வளைத்தேன். நீள நதியை அம்பாகத் தொடுத்தேன். நியதியின் சிரசுக்கு குறி சேர்த்து அழிவற்ற மொழியில் நாணையிழுத்துச் சுண்டினேன். திடுக்கிட்டு விழித்தது சாவு; தொப்புள்கொடியில் பற்றிக்கொண்டது உயிரின் திரி.

☆☆

நெடும்பகல் தொடங்கிவிட்டது. பானைக்குள் இட்டு மூடிய வண்டாக மனம் இறுகிய வெளியில் பறப்பதும் இருளில் மோதிச் சரிவதும் முறுமுறுப்பதுமாக அலைக்கழிந்தது. வெயிலுக்கு முள் முளைக்கும் முன்னே காலைத் திருப்பலி முடிந்துவிட்டது. பக்திப் பரவச ஆரவாரங்களும் ஓய்ந்து போயின. உடைகளைத் தேர்ந்தெடுத்து உடுத்திக்கொண்டு ஆலயத்துக்கு வருவதுபோல் சாராவிடம் அணிந்து கொள்ள இதயங்களும் பல டிசைன்களில் இருந்தது. இன்று அணிந்திருந்தது இரும்பிலான, இஞ்சி தின்ற குரங்கு டிசைன்.

கோவிலிலும் மண்டபத்திலும் வளாகத்திலும் குறுக்கும் மறுக்கும் நடந்து அவள் கண்ணில் படப் போராடினான். அவளோ தன் பார்வையின் மிச்ச மீதி பிசிறுகளைக்கூட அவன் ஏந்தியிருந்த பிச்சைப் பாத்திரத்தில் இடவில்லை.

கழிவிரக்கம் ஆட்டிப்படைத்தது. வீட்டில் இருப்புக் கொள்ளவில்லை. கோவில் மண்டபத்திற்கு வந்தபோது மண்டபம் அவன் மிகக் கேவலமாகத் தோற்கடிக்கப்பட்ட மேடையாகக் காட்சியளித்தது. நாடகம் முடிவின்றி அவனைப் பின்தொடர்ந்து வந்தபடியே இருந்தது. நிறையக் காட்சிகளில் சகிக்கமுடியாத வெறுமையே பிரதான பாத்திரமேற்று பிரமாதமாக நடித்தது.

புறக்கணிப்பின் கருக்குவாள், பட்ட போதெல்லாம் சொட்டுச் சொட்டாக ரத்தம் கேட்டது. வருத்தம் பீடித்த மனத்தின் சிற்றியல்புகளில் ஒன்றுபோல மீண்டும் மீண்டும் கருக்குவாளையே வருடி வருடி வலியைப் பெருக்கியது. இருக்கவும் நிற்கவும் முடியாமல் நடக்க வேண்டியதாயிற்று.

உடல்கடிகாரமும் மனக்கடிகாரமும் எதிரெதிர்த் திசைகளில் சுழன்று முட்கள் ஒன்றோடு ஒன்று மோதி வெட்டிக் கொண்டு ரத்தம் சிந்துவதாக கற்பனை குவிந்து வலியோடு கலைந்தது.

கோவில் தெருவில் நடந்து கடல் தெருவில் திரும்பினான். லீலா டீச்சர் வீட்டு தாள்ரோஜா பந்தலைப் பார்த்தான். பந்தலுக்கடியில் நிழல் மட்டும் கிடந்தது.

குழம்பில் கொதிக்கப் போகும் கோழியை இரண்டு சிறுவர்கள் துரத்தி மடக்கி அமுக்கப் போராடினார்கள். ஒருவன் பாண்டி மீது மோதி முகம் வெளிறினான். நாக்கைத் தொங்க போட்டுக்கொண்டு நாய் ஒன்று நிம்மதியிழந்து பார்த்தது. இருமருங்கிலும் உடைமரங்கள் அடர்ந்திருக்க கடலை நோக்கி நெளிந்து வளைந்து சென்ற பாதை உள்ளங்கை நிறத்திலிருந்து. கடலின் புலம்பல் அவ்வழியே அவனை எதிர்கொண்டு வந்தது.

கடல் கண்ணில் பட்டதும் சட்டென்று அவன் எடையும் உயரமும் குறைந்தது. நடக்க நடக்க சிறுத்துக்கொண்டே போவது போன்ற உணர்வு. அலைகளின் விளிம்பை அடையும்போது கரைந்தே போயிருப்போமோ என்ற சந்தேகம் எழுந்தது. சுளீர் வெயில். நடப்பதை நிறுத்தவில்லை. கரைகளற்ற சுதந்திரத்தில் அலைகள் புரண்டு விளையாடின. சுற்றும் முற்றும் கடலோரத்தில் மனிதர்கள் யாரும் தென்படவில்லை. பின்னே பேரால மரம் தவத்தில் நிலைத்திருந்தது. நூல் பிடித்து அளந்து வைத்தாற் போல் வீங்காமல் வற்றாமல் கடல் தன் ரூபத்தில் துல்லியமாக இருந்தது. அலைகளுக்குப் பின்னே கண்களை உறுத்தாத வெள்ளி ஜரிகைகள் நெகிழ்ந்தாடி மினுமினுத்தன.

ஒரு குவளைப் பாலை எடுத்து முகத்தில் வீசியடித்தது போல் பழைய நினைவு ஒன்று அதிர்வுடன் மீண்டது. எட்டு வயதில் புகைப்படமெடுத்த பேன்ஸி ஸ்டுடியோ ஃப்ளாஷ் வெளிச்சமது.

இப்போது தான் மீண்டும் எட்டு வயதுச் சிறுவனாக மாற்றப்பட்டு விட்டோமோ என்று தன்னைத்தானே சுயபரிசோதனை செய்து கொண்டான்.

கை கால்கள்களில் வித்தியாசம் தெரியவில்லை. ஒருவேளை முகம் மட்டும் மூணாம் வகுப்புக்கு திரும்பிப் போயிருக்குமோ! ஒரு கண்ணாடியிருந்தால் பார்த்து தெளிவுபடுத்திக் கொள்ள விரும்பினான். சிறுவன் சந்தனப்பாண்டியின் முகம் திரும்ப திரும்ப நினைவில் விரிந்தது. அந்த

முகத்தைப் பார்க்கும்போதெல்லாம் வளர்ந்த சந்தனப்பாண்டி எம்.ஏ பரிதாபப்படுவான். சிறுவன் முகத்தில் துடைக்க முடியாத ஒரு சோகக் களை அழுத்தமாகப் படிந்திருக்கும். அந்த முகம் பின்னாளில் வளர வளர ரொம்பவே வெட்கப்பட வைத்தது.

**

*மிகப் பொதுவானதொரு திசையிலிருந்து மிகப் பொதுவான வாசனையொன்று. தேடி வந்து புலன்களைக் கிளறியது புது இசை. ஒரு வனத்தில் வசித்த மொத்தப் பூச்சிகளும் அவன் உடலுக்குள் இடம் மாறி நெளிந்தன. மூச்சு பசியெழுந்து உச்சமுற்றபோது ஒளியின் ஒரு துளி காலடியில் கருந்தரையில். நெடுங்காலமாக நின்றிருந்த கால்கள் கைகளை முந்தித் தீண்டின. மற்றொரு துளி சற்று முன்னே முளைத்தது. குனிந்து எடுத்திருந்தால் பறவையாகும் வரமிருந்தது. ஆனாலும் இப்போதுதான் நடக்கவே பழகினான். சவ ஊர்வலம் தூவிச் செல்லும் மலர்களைப்போல ஒளி மணிகள் பெருகி ஒற்றையடிப் பாதையாகி நீண்டது. ரயில் பூச்சிகள், பாம்பு ரயில்கள், பாழுங்கிணறுகள், பதுக்கி வைக்கப்பட்டிருந்த பொறிகள் கடந்து வந்தடைந்தபோது அந்த மலரிருந்தது நிழல்களற்ற ஒளிச் சூளையின் மையத்தில் துருவேறிய மோகத்தோடு. அவசரமாகக் கை நீட்ட நில்லென்றது முள்ளின் முதற்சொல். காயக் கோடுகளால் கை நிரம்பியபின் அதுவே கடைசிச் சொல்லாகவுமிருந்தது. பச்சை ரத்தத்தின் வீரியம் நாற்றமேறிய இருளைப் பூசத் துவங்கியது அவன் பார்வையில். ஆத்மா கதறக் கதற பிறவிக்குருடன் அங்கே மறுபிறவியிலும் குருடானான்.*

## 6

திசையன்விளை பஸ் ஸ்டாண்டுக்குள் நுழைந்து காமராஜர் சிலையைக் கடந்ததும் பாண்டி ஸ்தம்பித்து நின்றுவிட்டான். அவன் கண்ணெதிரே கற்பனை கூட பண்ணிப் பார்த்திராத காட்சி. அதுவரை உறைக்காத பிற்பகல் வெயில் 'சுள்' ளென்று தாக்கியது. தேரித்துறை விலக்குக்கு செல்லும் பேருந்துகள் நின்று புறப்படும் நிழல் குடைக்கடியில் சாரா, புனிதா மேலும் இரண்டு தோழிகள் ஆக நால்வரும் திண்டில் அமர்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். மகிழா ஸ்டோரில் புதுத் துணியெடுத்த பைகள் வைத்திருந்தார்கள். சாரா என்ன எடுத்திருப்பாள் என்று அறிந்துகொள்ள ஆவல் எழுந்து அடங்கியது. அவர்கள் இன்னும் அவனை கவனிக்கவில்லை. சின்ன வெட்கமும் படபடப்பும் உண்டாகியிருந்தது. ஒரு பஸ்ஸை விட்டுவிடலாம். அடுத்த பஸ் வர ஒரு மணி நேரமாகும். ஆனாலும் பரவாயில்லை. சாராவை சந்திக்க தயக்கமாக இருந்தது. என்ன

நடக்கும் என்று யூகிக்க முடியாது. அங்கிருந்து சென்று மறைந்து விட விரும்பினான். சாரா வெளியூரில் புது இடத்தில் அழகு கூடிப்போயிருந் தாள். சிரித்துப் பேசிக் கலகலப்பாக இருந்தாள். சேலைக்கடியில் கால்கள் ஒன்றையொன்று பின்னிக் கொண்டு செருப்பில் ஊஞ்சலாடின. கொலுசின் அழகு காலையும் கழுத்தாக மாற்றியிருந்தது. பார்த்துக் கொண்டேயிருக்கலாம் போலிருந்தது. ஆனாலும் அவள் கண்ணில் பட்டுவிடக் கூடாது என்ற எச்சரிக்கையுணர்வும் ஏற்பட்டது. அவன் திரும்பவிருந்த கணத்தில் புனிதா பாண்டியைப் பார்த்து விட்டாள். பார்வையை விலக்காமலே அவள் ஏதோ சொல்ல நால்வரும் தலையைத் திருப்பி அவனைப் பார்த்தார்கள். பார்த்த வேகத்திலேயே பார்வையை விலக்கிக் கொண்டார்கள். சாரா மட்டும் கண்களால் அளவெடுத்துக் கொண்டாள். 'கூற்றமோ கண்ணோ பிணையோ...' முறைக்கும்போது மூக்கில் பூக்கும் மோகினி.

பாண்டி நிழல் குடையை நோக்கி நடக்க வேண்டியதாயிற்று. கால்கள் பலமிழந்தன. உடல் கூச்சத்தில் நெளிந்தது. அவர்களுக்கிடையே நூறடி தொலைவுதான் இருந்தது. ஒவ்வொரு அடிக்கும் போராடினான். பராக்கு பார்ப்பது போல் பாசங்கு செய்து இயல்பாக இருப்பதாகக் காட்டிக்கொள்ள விரும்பினான். நிழற்குடை அருகே நின்ற புளிய மரத்தடியில் கை கட்டிக்கொண்டு ஒரு காலை மடித்து மரத்தில் ஊன்றிய படி ஒரு காலில் ஸ்டைலாக நின்றான். ஜனங்களை மரங்களை கடைகளை பேருந்துகளை எல்லாம் வேடிக்கை பார்த்தான். நிழல் குடையை மட்டும் கண்டுகொள்ளவே இல்லை. அலட்சியம் காட்டினான். உள்ளூர அவ்வளவு நடுக்கம். பேண்ட் பாக்கட்டிலிருந்த மின் கட்டண அட்டையை கையில் எடுத்து கட்டிய கட்டணங்களை கூட்டிக் கணக்கு பார்த்தான். வார இதழ் போல் வெகு நேரம் கையில் வைத்து வாசித்தான். வேறு வழியில்லை. மின் அட்டையை மடித்து பைக்குள் வைத்துவிட்டு பஸ்ஸை எதிர்பார்ப்பது போன்ற பாவனையில் நிழல் குடை திண்டை, நொடி நோட்டமிட்டான். எச்சில் விழுங்கிவிட்டு பார்வையைத் திருப் பினான். அவர்கள் யாரும் அவனை கவனிக்கவில்லை. முன்னைப் போலவே பேசிக்கொண்டிருந்தார்கள். குரல் தணிந்திருந்தது. மனம் கொஞ்சம் ஆசுவாசப்பட்டது. அவர்கள் அவனை சட்டை செய்யவில்லை என்ற தைரியத்துடன் அடிக்கடி அவன் பார்வை நிழல் குடைக்குச் சென்றது. மீண்டும் மீண்டும். புறக்கணிக்கப் படுவதால் ஏற்பட்ட தார்மீக ஏக்கம் அது.

அவன் எதிர்பாராததைப் போலவே, சாராவும் அவனை எதிர் பார்த்திருக்க மாட்டாள். ஆனாலும் அவள் இந்த தற்செயல் நிகழ்வை எப்படி எடுத்துக் கொள்வாளோ என்ற மனப்போராட்டம் அவனை அரித்தது. அவனைவிடச் சின்னப் பெண்ணாகத்தான் இருக்க வேண்டும். அல்லது அவன் வயதிருக்கலாம். தாண்டியிருக்க வாய்ப்பேயில்லை.

இவளைப் பார்த்தெல்லாம் அஞ்சி நடுங்க வேண்டியக் காலம் எங்கிருந்து வந்ததென்று தெரியவில்லை. வெயில் உச்சிக்கேறி மரத்தடியிலும் காற்று அனலாய் வீசியது. தொண்டை கமறும் புழுதி அடங்க அடங்க புது புதுப் பேருந்துகள் மீண்டும் கிளப்பிவிட்டன. வியர்வையால் கைக்குட்டை ஈரமாகிவிட்டது. சரியாக இருபது நிமிடங்களுக்குப் பிறகு கணபதி வந்தது. நேரம் மதியமாக இருந்ததால் கூட்டமில்லை. பஸ் வந்து நிற்பதை அவர்கள் கவனித்தார்களா இல்லையா என்று மேற்பார்வை செய்தான். அவர்கள் முகத்தில் எந்த அறிகுறியும் இல்லை. யாவும் நிஜமாக இருக்க நிழல் குடை மட்டும் கனவாகி விட்டதோ என்று நினைத்தான். அப்படி அடம்பிடித்து பாசாங்கு செய்தார்கள் பாவிகள்! பாண்டி பஸ்ஸில் ஏறி காலியாக இருந்த இடது பக்க ஜன்னலோர இருக்கையில் அமர்ந்தான். நிழல் குடையைக் கடக்கும்போது சின்ன மூச்சுத் திணறல் ஏற்பட்டது. பஸ் அதிகபட்சம் ஒரு நிமிடம்தான் நிற்கும். அவர்கள் அவனையோ பஸ்ஸையோ பொருட்படுத்தவேயில்லை. வெட்டி வேதனை நெஞ்சை அழுத்தியது. சாராவையே கண்கொட்டாமல் பார்த்தபடியிருந்தான். அவளோ அவனை மறந்தே போய்விட்டாள். மறதியென்றால் சாதாரண மறதியல்ல. உயிரைத் திருகும் மறதி.

பஸ் புறப்பட்டது. விசில் ஒலித்தது. மெல்ல சக்கரங்கள் உருண்டு நகர, தவிப்புடன் பொறுமையிழந்தான் பாண்டி. அவர்கள் கூப்பிடு தூரத்தில்தான் அமர்ந்திருந்தார்கள். இன்ன செய்கிறோம் என்ற தெளிவின்றி குரல் கொடுத்தான். ''பஸ் போகுதுங்க'' என்றான்.

சட்டென்று தீப்பற்றி நிமிர்ந்து கோபம் காட்டிய சாரா ''போய்த் தொலையட்டும்'' என்று காட்டமாகச் சொல்லிவிட்டு முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

அலட்சியத்தின், அல்ல கோபத்தின் அடுக்கிலிருந்து இரண்டாவது கத்தி முகத்தில் தைத்தது. பஸ் குலுங்கியபோது கூடவே குலுங்கி அழ வேண்டும் போலிருந்தது.

*பழைய கசங்கிய புன்னகைகளால் நிரம்பிவிட்டது குப்பைத் தொட்டி. சிரிப்பில் வெளிச்சம் குறையாத ஒரு புன்னகையைப் பின்தொடர்ந்து இத்தனை தொலைவு வந்துவிட்டவனை மேலும் நடுவழியில் நள்ளிரவில் எதிர்கொண்டு கிழித்தெறிய வேண்டாம். வலிந்து சிரித்து வருத்தங்கள் வாய்ப்புண்களாகப் பெருகி வலிக்கிறது. வாக்குறுதிகள் வழி தப்பிவிட்டன. உன் நாவில் எழும் சொல் இரண்டாகப் பிளந்து தெறிக்கிறது. துண்டங்களிரண்டும் வேறுவேறு அர்த்தங்களால் நிரம்புகிறது. வாக்கியங்களின் கரையோரங்களில் மஞ்சளும் நீலமும் பின்னிப் பாரித்த அடிக்கோடுகள் நெளிகின்றன. ஸ்படிக மணியென கோர்த்த புகைமொழி மாலைகளை விரலிடுக்குகளில் எண்ணி எண்ணி மூளை முற்றி தலை நெற்றாகும் முன் தைத்துப் புதைந்திருக்கும் வார்த்தைகளை ரத்தமும் வெப்பமும் கசிய உடம்பிலிருந்து பிடுங்கி எறிகிறேன்.*

# 7

அந்தப் பகல் மிக நீண்டதாயிருந்தது. அதன் வெறுமை எதைக் கொண்டும் நிரப்ப முடியாமல் வருத்தியது. சகலமும் சாரமற்றுப் போய் விட்டது. சர்வமும் அனர்த்தமாகித் திணறடித்தது. பெரியம்மா வீட்டில் ஆறுதல் தரும் கலகலப்பான அம்சங்கள் ஒன்றுமில்லை. அவனும் பாட்டியும் அளவளாவிக் கொண்டிருக்க பொது விஷயம் ஒன்றும் அவர்களுக்கிடையில் இல்லை, ஊருக்கு திரும்பிச் செல்லும் நாள் குறிப்பதைத் தவிர. காலண்டர் தாள்களைப் புரட்டி இந்த வருஷம் பிறந்த நாள் எந்தக் கிழமையில் வருகிறது என்பதை முன்கூட்டியே அறிந்து வைத்துக்கொண்டான். மணியார்டர் ஃபார்ம் முடியும் இடத்தில் இந்த வருஷம் திருவிழாவுக்கு வரமுடியவில்லை, பள்ளி விடுமுறையில் குடும்பத்தோடு ஊருக்கு வருகிறேன் எனக் குறிப்பெழுதி பெரியம்மாவின் மூத்த பிள்ளை அனுப்பியிருந்த தொகைக்கு சாட்சிக் கையெழுத்திட்டு வாங்கிக் கொடுத்தான். பஞ்சாயத்து கட்டிடத்துக்குப் போய் பொது பேப்பர் படித்தான். அங்கேயே நடந்த தொள்ளாயிரத்தி நாலு சீட்டாட்டம் பார்த்து ஒன்றும் புரியாமலே ரசித்தான். தாள்ரோஜா கொடிக்கு நூறு முறைக்கும் குறையாமல் கண்ணாலே தண்ணீர் விட்டுத் தாகப்பட்டான். வேதப் புத்தகத்தைத் திறந்து சாலமனின் நீதி மொழிகள் படித்தான். பசியில்லாமல் சாப்பிட்டான். தண்ணீரை மென்று குடித்தான். ஊருக்கு வெளியே கடலுக்குச் செல்லும் பாதையில் தனியே நடந்தான். கொக்கு பார்த்தான். குருவி பார்த்தான். மரங்கள் பார்த்தான். கடல் பார்த்தான். முதல் முறையாகப் பார்ப்பதுபோல் பார்த்தான். எப்படிப் பார்த்தாலும் சாராவின் கத்தியிலிருந்து தப்பிக்க முடியவில்லை. அது 'சதக்' 'சதக்' கென்று பாய்ந்துகொண்டேயிருந்தது. அதை உருவிப்போடும் ஒவ்வொரு முறையும் பெரும் வலி தோன்றியது. எங்கென்று தெரியாத வலி. துன்பத்தை அடுத்த சந்திப்பில் எப்படி எதிர்கொள்வது, அவளிடம் இன்னும் என்னென்ன ஆயுதங்கள் இருக்கிறதோ! கேடயமுமின்றி அவன் ஆயுதசாலை காலியாக இருந்தது. அல்லாமலும் அது அச்சத்தாலும் பீதியாலும் நிரம்பியிருந்தது; எல்லாம் புது அச்சம்.

சாராவை அன்றைய பகல் பொழுதில் வெளியில் காண முடியவில்லை. அவள் வீட்டைவிட்டு வெளிப்பட ஒரு நாளில் மூன்று சந்தர்ப்பங்கள் உண்டு. ஒன்று காலைத் திருப்பலி. இரண்டு மாலை ஆராதனை. மற்றொன்று புதுமைக் கிணற்றில் குடி நீர் சேந்த. இடுப்பில் குடத்துடன் சாரா தெருவில் நடந்து வருவது, காலையாகவும் இருக்கலாம்; நண்பகலாகவும் இருக்கலாம்; கோயில் மணியடிப்பதற்கு கொஞ்சம் முன்னதாகவும் இருக்கலாம், அது வீட்டுத் தேவையைப் பொறுத்தது. அவள் தெருவில் இறங்கி நடந்தால் நிலத்தில் விவரிக்க இயலா இசை அதிர்வு

ஏற்படுகிறது. அது ஏனோ வலை பாவி குருதியை நாளங்களில் நடனமாட விடுகிறது. இப்போதே அந்த அற்புதத்தில் களிப்படைய வேண்டும் போலிருந்தது. வெட்கம் கெட்ட களிப்பு.

மண்டப வாசல் அவனை அழைத்து தன் மடியில் அமர்த்திக் கொண்டது. அவனுக்காக அங்கே காத்திருப்பது ஒரு தெய்வீக தரிசனத்தின் எதிர்பார்ப்பு போலிருந்தது.

'விண்கண்ட தெய்வங்கள் பல்கோடி உண்டேனும் விளம்பில் உன் போல் கண்கண்ட தெய்வம் உளதோ சகலகலாவல்லியே!'

தெருவில் முகம் தெரியாதவர்கள் நடமாட்டம் அதிகமாகிவிட்டது. மண்டபமும் அமைதியாக இல்லை. அங்கே சிறுவர்கள் இளைஞர்கள் கூடியிருந்தனர். சென்ற வருடம் நாலு தட்டு ராட்டினம்தான் வந்திருந்தது. இந்த வருடம் மோட்டாரில் சுழலும் ராட்சச ராட்டினம் வரலாம் எனப் பேசிக்கொண்டனர். பலூன், குழல், பஞ்சுமிட்டாய், கார், ரிஸ்ட் வாட்ச், கலர் கண்ணாடிகள், தண்ணீர் பந்து, பொம்மை துப்பாக்கி, போட்டோ செல் ஃபோன்... வசதியான விருந்தாளிகள் எல்லோரும் ஏழாம் திருவிழாவுக்கே வந்து இறங்கிவிட்டால் நன்றாக இருக்கும் என்று ஆசைப்பட்டார்கள்.

முகத்தைத் தவிர தலையிலிருந்து கணுக்கால் வரை வெள்ளையங்கி அணிந்த மிக வயதான வெள்ளைக்காரி கருப்புக் குடைக்குள் நடந்தாள். பெண் துறவி என்பதை தூரத்திலிருந்தே சிரமமின்றி அறிந்து கொள்ள முடிந்தது. அவளுடன் சாராவும் நடந்தாள். பெண் துறவி குரல் தெறிக்க சத்தமாகப் பேசிக்கொள்கிறாள் போலும். வலது கை காற்றில் தானியம் விதைப்பதுபோல் அசைந்தது. சாராவின் விரல்கள் ரோஸ் நிறத்தாவணி விளிம்பைப் பிடித்து பம்பரம் சுற்றின. நடையில் துள்ளலும் இருந்தது. எதிர்வரிசை வீடொன்றின் வாசலிலிருந்து அவர்கள் வெளிப்பட்டிருந் தார்கள். ஆலயத்தை நோக்கி நடந்து வந்தார்கள். வளாகத்தின் கிரில் கதவை சாரா தள்ளித் திறந்தாள். அது சற்றுக் கடுமையாக இருந்தது. வளாகச் சுவர்கள் காகித அட்டைகளாக நெளிந்தாடியது. தன் கண்களை என்ன செய்வதென்று பாண்டிக்குத் தெரியவில்லை. எச்சில் திரட்டாக காறித் துப்ப இயன்றால் அவை அக்கணமே காத தூரத்தில் போய் விழ குருடனாகியிருப்பான். பெண் துறவியின் முகத்தை மட்டுமே தீர்க்க மாகப் பார்த்தான். அருகே நெருங்கிக்கொண்டிருக்கும் சாராவின் முகத் தையும் பார்ப்பதற்கு இணையான செயலாக அதைக் கருதினான். சாராவின் கண்களோ அவன் முகத்தையே இமைக்காமல் பார்த்து வந்தன. அருகிலிருக்கும் மண்டபத்தின் ஜன்னலைப் பார்ப்பதற்கு இணையான செயலாக அதைக் கருதினாள் போலும். அவர்கள் படிக்கட்டுக்களை மிதித்தபோது அவன் சாராவின் கண்களை தன் கட்டுப்பாட்டையும் மீறி ஏக்கத்தோடு நோக்கினான். அவை எரேமியா பதினைந்தாம் அதிகாரம் ஆறாம் வசனத்தை ஆத்திரத்தோடு உரைத்தது.

நீ என்னை விட்டுப் பின்வாங்கிப் போனாய்
ஆகையால் என் கையை உனக்கு விரோதமாய் நீட்டி,
உன்னை அழிப்பேன்.
நான் பொறுத்துப் பொறுத்து இளைத்துப் போனேன்.

அலட்சியத்தின் அடுக்கிலிருந்து மூன்றாவது கத்தி முன்பைவிட ஆழமாக இறங்கியது, கைப்பிடிவரை. இரண்டாம் நாள் நற்கருணை விருந்து வரிசையை நினைவுகூர்ந்தான். அந்த விழிகள் வெண்அகலின் கருஞ்சுடர்கள். நீல வெளிச்சத்தை மென்மையாகத் தவழவிட்டன அவை. அவையா இவை? அவள்தானா இவள்? இல்லை; அவள் தேவதை! இவள் யட்சி. அந்த தேவதையை இந்த ராட்சசி அடித்துத் துரத்திவிட்டாள். துரத்தியடிக்கப்பட்ட, அப்போதுதான் மலர்ந்து பனிக்காற்றைத் தன் வாசனையால் தழுவும் பூவைப் போன்றிருந்த, கொடியேற்றத்தின்போது கண்களை வடிகட்டிப் பார்த்த கண்களில் கருவண்டுகள் பறக்க 'என்னத் தெரியல' என்று உரிமையோடு கேட்ட அந்த சாராவை எண்ணி மனத்துக் குள் தேம்பினான். கைகளை முதுகுக்குப் பின்னே பிணைத்துக் கட்டி குப்புறத் தள்ளி முகத்தைத் தரையில் மூர்க்கமாக உரசியது போன்ற எரிச்சலும் வேதனையுமடைந்தான்.

தலைவாசல் பெரிய கதவைத் தள்ளித் திறந்து அவர்கள் ஆலயத் துக்குள் பிரவேசித்தார்கள். அங்கே போதிய வெளிச்சமில்லை. வாசலில் அவிழ்த்து விடப்பட்ட செருப்புக்களை தலை திருப்பிப் பார்த்தான். வெகு நேரம் காரணமே இல்லாமல் அப்படிப் பார்த்துக்கொண்டிருந்தான். சந்தனமரத் துண்டுகள் போலிருந்த சாராவின் செருப்பில் ஒன்று ஒருக் களித்துப் படுத்து உறங்கிவிட்டது. மற்றது உறக்கம் வராமல் எதையோ யோசித்தவாறு மல்லாக்கப் படுத்திருந்தது.

அருகருகே படுத்து கனவில் லயித்திருக்கும் இரண்டு சிறு குழந்தைகள் போல ஆழ்ந்த உறக்கத்திலிருக்கின்றன அவிழ்த்து வைத்த இடத்தில் இரண்டு மிருதுவான மிதியடிகள். பாதமளவு பருத்த மீனொன்று நீர் நிலையைத் தேடி நிலத்தில் துள்ளிச் சென்றதுபோல் குருத்து மணல் பரப்பில் சுவடுகள் புதைந்து பதிந்து கிடக்கிறது மதியடிகள் வரை. மிதியடிகளுக்கு சொந்தக்காரரை எதிர்பார்த்து அங்கேயே தங்கிவிட் டான் தூக்கத்துக்கு ஒரு தொந்தரவும் தராத ஒருவன். மற்றொரு மிதி யடிபோல தொலைவில் மிதக்கும் பாய்மரம் வந்தும் நின்றும் சென்றும் கொண்டிருக்கிறது...

ஒற்றைச் செருப்பின் உறக்கம் கலைக்கப்பட்டபோது பார்வையை வேகமாக விலக்கிக்கொண்டான். இப்போது சாரா ஆங்கிலத்தில் ஏதோ பேசியபடி நடந்தாள். ஒன்றும் மனத்தில் பதியவில்லை. அவர்கள் நடந்து இடப்பக்கம் திரும்பி வடக்குத் தெருவில் மறைந்தார்கள்.

சாராவின் மிருதுவான பாதங்கள் செம்மஞ்சள் நிறத்தில் அவன்

நெஞ்சை மிதித்து விளையாடின. இரண்டு செருப்பில் தான் எந்தச் செருப்பு என்று தனக்குத் தானே கேட்டுக்கொண்டான். 'இரண்டில் எது முதலில் அறுந்து விழுமோ அதுவே நீ' என்றது மனசு. 'தைக்கக்கூடாதா' என்றதும் மனசுதான்.

சாரா காட்டோடையாகிவிட்டாள். தினவு பொங்கும் நீர்ச்சாடலுடன் தன் போக்கைத் தானே தீர்மானித்துக் கொண்டாள். ஓடையில் துள்ளும் சில மீன்களை வேண்டுமானால் திறமிருந்தால் பெற்றுக் கொள்ளலாம்போலும். ஓடையைப் பிடிக்கவே முடியாது. பெண்மையை ஆண்மை அசட்டை செய்யும்போது நேரிடும் பின் விளைவுகளுக்கு அளவு வரையறைகள் ஏதுமில்லை. சீண்டப்படுகிறதா காயப்படுகிறதா என்பது பரம ரகசியம் போலும். ஏலத்தில் நடந்த வேடிக்கையில் முட்டை விழுந்து உடைந்ததும் சாராவும் வாய்விட்டு பக்கத்துப் பெண்ணின் தோள்களைப் பற்றியபடி சிரித்துக்கொண்டுதானிருந்தாள். பாண்டி சிரிப்போடு அவளைக் கண்டதும், சங்கை நெரித்து சிரிப்பை அந்த நொடியே கொன்று போட்டாள். ''பஸ் போகுதுங்க.'' ''போய்த் தொலையட்டும்.'' அவளது சிவந்த உதடுகள் ரத்தம் தேங்கிய பலிபீட மேடைகளாகி உலர்ந்து போயின. அதற்கும் முன்பே அவள் இரக்கத்தைத் தொலைத்துவிட்டாள். ''போய்த் தொலையட்டும்.'' ராட்சசியாகிவிட்டாள். இன்னும் சில நாட்களே இருக்கின்றன, எல்லாம் முடிவுக்கு வருவதற்கு. அதுவரை அவள் கண்களுக்குத் தப்பியிருப்பது உசிதம். திருவிழா முடிவடைந்த பின் அவள் யாரோ அவன் யாரோ! சாரா அத்தையைப் போலிருந்தால் என்ன, அத்தை மகளைப் போலிருந்தால் என்ன? ஏன், அக்காவைப் போலிருந்தாலும்தான் என்ன? இருந்துவிட்டுப் போகட்டும். இந்த விளையாட்டிலிருந்து இப்போதே வெளியேறிவிட வேண்டும். எப்படி என்று வழி தேடினான்.

☆☆

அலைகளின் வீச்சொலி கடலை அவனருகே நகர்த்தியதுபோல் ஓங்கியது. பத்துப் பதிநான்கு ஆண்டுகள் காலத்தில் குழி தோண்டி பள்ளத்துக்குள் விழுந்து கிடந்தவன் மெல்ல மெல்ல மிதந்து மேலெழுந்தான். தொலைவான தொலைவு அலைந்து திரிந்த களைப்பும் சோர்வும் ஏற்பட்டிருந்தது. கிடைத்த குறுகிய சந்தர்ப்பத்தில் கடல் ஒரு முறை புரண்டு படுத்துவிட்டது. நேர்மாறாகக் கலைந்திருந்தது. வெயிலின் உக்கிரத்தை உப்புக்காற்று மறித்து மழுங்கடித்தது. மணல் திட்டில் கால் நீட்டி ஆசுவாசமாக மல்லாக்க படுத்துக்கொண்டான். கைகளை முகத்தில் மடித்து வைத்தான். மனம் சொற்களைப் பொறுக்கி கோர்க்க முயன்று தோற்றது. வந்து இன்னும் வரிகளுக்குள் வாய்ப்பதாயில்லை மழையில் நனையும் வெயில்.

ஏதாவது சொல்லவில்லையென்றால் கொல்லைக்கிப் போகாது என்ற கொடும்விதியால் சபிக்கப்பட்ட மேதைகள் அவனருகே வந்து குத்த வைத்தார்கள். ''காற்றின் கால்கள் கடல் அருகே ஒளிர்கின்றன'' என்ற ஸ்வின்பர்ன் எழுந்து சென்றதும் லெவலின் போவிஸ் வந்தான். ''ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகக் கதிரவன் ஒளியும் கடலும் முதலாளி இல்லாத காற்றும் இரகசியமாக சந்தித்து வந்துள்ளன.''

''கடலைப் பற்றிய இனிய இரகசியம் ஒன்று இருக்கிறது. அது இன்னது என்று ஒருவரும் தெளிவாக அறியாதது. அது மெல்லெனவும் பேரச்சம் தரும் வண்ணமும் கிளர்ந்து குலுங்குகிறது. அப்போது அதைப் பார்த்தால் அதன் உள்ளே ஏதோ ஓர் ஆன்மா மறைந்து கிடக்கிறது என்பது போலத் தோன்றுகிறது'' என்றான் ஹெர்மன் மெல்வில். மாத்யூ அர்னால்ட், ''பெரும் திமிங்கிலங்கள் நீந்தி வருமிடத்தில் கலத்தைச் செலுத்து, செலுத்து! கண் மூடாமல் செலுத்து, செலுத்து!'' என்று முக்கி னான். எவனெவனோ எழுதியவை தேவையேயில்லாமல் இப்போது ஞாபகத்தில் நுழைந்துகொண்டிருந்தன. வள்ளுவன்... அல்ல வள்ளுவர் வந்தார். 'கடலன்ன காமம்...' மகாகவியே! மாணடி பணிகிறேன்.

பழகிய வழிகளில்சுற்றித் திரிந்து ஓயும் மூளையின் போக்குகளுக்கு முடிவு ஏற்படுகிறது. தற்காலிகமாகவே எனினும் அவை முடிவுதான். மூளை முடிவடையும் இடத்திலிருந்து சாரா தன் சாகசங்களைத் தொடங் கினால் கூட உணர்வின் தடத்தில் பின்தொடர்ந்து சென்று கிரகித்து ஒரு அனுமானத்துக்கு வரலாம். அவளோ மூளை முடிவடையும் இடத்தி லிருந்து இடைவெளி விட்டு தன் விளையாட்டுகளை ஆரம்பிக்கிறாள். அங்கு நடக்கும் அத்தனை சம்பவங்களும் அந்தரத்தில் நடப்பது போன்ற உணர்வையே ஏற்படுத்துகின்றன. அவள் வெகு அலட்சியமாக அந்தரத்தை சமவெளியில் இறக்கி வைக்கிறாள். சமவெளியும் அந்தரமும் சரி நிகராய் கவனத்தை குழப்புகிறது. கண்களை மூடிக்கொள்வதே ஒரே உபாயமாகத் தோன்றுகிறது. உண்மையில் கண்ணாமூச்சியின் கடுமை யான வேடிக்கை அங்குதான் காத்திருக்கிறதோ!

☆☆

மழை பெய்தோய்ந்த தடங்களாய் ஈரமாகி மிருதுவேறிய தண்ட வாளங்கள் பொழுதின் அமானுஷ்யத்தில் அடிக்கோடுகளாய் நீண்டு கிடந்தன. வாளுருவிய வெற்று உறையாக வெறிச்சோடி பேரமைதியால் சூழப்பட்டிருந்தது அவ்விடம். தேவையற்ற இடைவெளியோடு உலர்ந்த சிமெந்து சதுப்பில் பதிக்கப்பட்டிருந்த இருக்கைகளில் அமர்ந்திருந் தோம். மர உச்சி ஒலிபெருக்கிகளாய் எதிரெதிர் திசை நோக்கி இறுகக் கட்டப்பட்டிருந்தன இருவர் முகங்களும். சிதறிக் கிடந்த சாக்லேட் சருகுகளைக்கூட புரட்டாமல் மோகினி வாசனையுடன் தழுவிய குளிர் காற்று மெல்ல மெல்ல தலையைத் திருகியது பின்நோக்கி. முறிய சில

முடிச்சுகளே மீதமிருக்க கழுத்து வலியோடு பதித்தேன் முதற் பார்வையை. மாலைக்கண் வியாதியில் கூரைவிளக்குகள் மங்கலான ஒளியைப் பரப்பியிருந்தன. நிலவும் நிச்சலனத்தின் மூலப்பிரதியாய் இறுக்கமாக அமர்ந்திருந்தாய். நல்ல தச்சனை எதிர்பார்த்து பாலைவன நிறத்தில் முதுகுச்சியில் பளபளத்தது குறைநிலா. தாடையெலும்பு விளிம்பில் குறும் தாடியாகி திகிலூட்டியது நிழலின் மென் இருட்டு. தூக்கக் கலக்கக் கண்ணெரிச்சலோடு உன் காலடியைச் சுற்றி வந்தது ஒரு ஈ. ரத்தநிற நகப்பூச்சில் மிளிரும் பத்துப் பொறிகளில் ஒன்றில் நிகழ்ந்தது இதன் ஏழாவது அமர்வு. ஏமாற்றங்களை மிக நெருக்கமாகப் பெருக்கிப் பெருக்கிச் சென்று பிடரிக்கடியில் ரகசியமாய் கணக்கெழுதியது பின்னல். ரயிலின் வருகையை எதிர்ப்பார்ப்பதாகவும் சுற்றுச்சூழலைச் சரி பார்ப்பதாகவும் திரும்பிய தலையின் அரைவட்டப் புள்ளியிலிருந்து ஒரு பார்வைத் தூறல் - அடுத்த மழை வருவதற்கான குறிப்பாய் நெஞ்சுக் கூடு நொறுங்க இடிந்து வானத்தின் விலா எலும்பொன்றை உருவிக் களைந்தது மின்னல்.



**மா**லை ஆராதனை வேளையில் அவன் வீட்டிலிருந்தான். வீட்டில் எல்லோரும் கோவிலுக்குப் போயிருந்தார்கள். வெள்ளைக் காகிதம் எடுத்து மன்னிப்பு கடிதம் எழுதத் தொடங்கினான். உருக்கமான சொற்கள். அவை ஏற்கனவே திரண்டு வந்து காத்திருந்ததை, எழுத ஆரம்பித்ததுமே அறிந்துகொண்டான். அவனிடமிருந்து கிளம்பி சாராவைச் சென்றடையும் தவிப்போடு அவை ஒன்றையொன்று முட்டி மோதித் தள்ளுவதைக் கண்டபோது அவனைவிட அவை பாவமென்று பச்சாதாபம் எழுந்தது. மன்னிப்புக் கேட்பதும் ஒரு வேண்டுதல்தானே! 'போ' என்று கையை விரித்துவிட்டால்... வரமளிக்காவிட்டால்... சந்தேகம் குறுக்கிட்டது. ஆனாலும் எழுதிச் செல்லும் கைகளை நிறுத்திக்கொள்ளும் சக்தி அவனிடமில்லை.

'அன்பே மரிய சாரா, ப்ரியமே சாரா, அன்புள்ள மரிய சாராவுக்கு, அன்புடையீர், வணக்கம்... இப்படி எண்ணற்ற ஆரம்பங்கள் எதுவும் சரிவராமல் காகிதங்கள் வீணாயின.

இறுதியாக இப்படித் தொடங்கியது மன்னிப்புக் கடிதம்.

மதிப்பிற்குரிய மரியசாரா அவர்களுக்கு, வணக்கத்துடன் நான் எழுதிக்கொள்வது. நீங்கள் என்னை தயைகூர்ந்து மன்னிக்க வேண்டும். எதெற்கென்ற காரணம் தெரியவில்லை. என்னால் இங்கே விளக்கமளிக்க முடியவில்லை. இதற்காகவும் என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும்.

உங்களை வருணித்து உங்கள் அழகை வியந்து பாராட்ட எந்த உரிமையும் அதிகாரமும் எனக்கில்லை. ஆனாலும் சொல்கிறேன். நீங்கள் மிகவும் அழகான பெண். உங்களைக் காட்டிலும் அழகான பெண்ணை என் உலகத்தில் நான் கண்டதே இல்லை; காணப்போவதுமில்லை. தொட்டிச் செடிகளில் தோட்டக் கொடிகளில் பூத்துக் குலுங்கும் பிற பெண்களுக்கு மத்தியில் நீங்கள் காட்டுப் பூவென காணக் கிடைக்காத எழிலோடு ஏகாந்தமாக மலர்ந்திருக்கிறீர்கள். எனது அதிகப்பிரசங்கித்தனத்தை தயைகூர்ந்து மன்னிக்க வேண்டும். உங்களைப் பார்த்தபின் அனல் பொழியும் சூரியனையும் செந்நிற மலராகவே காண்கிறேன். உங்கள் கண்களும் இதழ்களும் ஒரு காலத்தில் பெரும் கருணை கொண்டதாய் இருந்தன. இடையில்தான் ஏதோ குழப்பம் நேர்ந்துவிட்டது. உங்கள் இருதயத்தில் கோபம் மூண்டு நிற்கிறது. அது மேகமாகக் கலைந்து போனால் நான் நிம்மதியடைவேன். உங்கள் புன்னகை விலைமதிப்பற்ற ஒரு சந்தோஷம் என்பதை நான் உணர்ந்துவிட்டேன். அசட்டையின் கோர நகங்களால் கீறி நான் பைத்தியக்காரனைப் போல் காயப்படுத்தியிருந் தால் உங்கள் பாதங்களை நாய்க் குட்டி போல் முத்தமிட்டு என் மன்னிப்பை பெற்றுக்கொள்கிறேன். திசையன் விளையில் நான் உங் களைப் பார்த்தது தற்செயலான நிகழ்வுதான். உங்களைப் பின்தொடர்ந்து வரவில்லை. மின்கட்டணம் செலுத்தவே வந்தேன். நீங்கள் கோபித்துக் கொண்ட விதம் என்னை மிக மோசமாகப் பாதித்தது. அந்த வலியிலிருந்து மீட்சியே இல்லாமல் துடிக்கிறேன். இன்னும் சில தினங்களே எனக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. நான் இங்கு நிரந்தமல்ல, விருந்தாளிதான். கேள்விப்பட்ட, படித்த, நியாயத்தீர்ப்பு நாளை நான் இப்போதே அனுபவித்து வருகிறேன். தயைகூர்ந்து உங்கள் மன்னிப்பை எனக்கு அருளுங்கள். தயவுசெய்து தண்டனைகள் வேண்டாம். அது எப்படி யிருக்கும் என்று கற்பனை பண்ணிப் பார்க்கவே உயிர் கூசுகிறது.

சரியோ தவறோ
நான் செத்துக்கொண்டிருக்கிறேன்.
உண்மையோ பொய்யோ
என் ஆத்மா நரகத்திற்குச் செல்கிறது.
இப்பவோ பிறகோ
என்னை எப்படியும் மன்னித்து விடுங்கள்.

இப்படிக்கு,
பணிவன்புடன்
...............

கடிதம் முடிவற்றதுமே மனத்திலிருந்து பாதிச் சுமை இறங்கி தலை லேசாகி விட்டது. அதைக் கச்சிதமாக மடித்து எடுத்துக்கொண்டான். சாராவிடம் எப்படி ஒப்படைப்பது என்ற சிந்தனையில் பரபரப்பானான்.

கடிதத்தை மீண்டும் மீண்டும் பிரித்து வாசித்தான். எல்லாம் சரியாக இருந்தது. மிகையாக ஏதுமில்லை, நாய்க்குட்டியைத் தவிர. அளவை இன்னும் விரிக்கலாமா என்று யோசித்தான். ஒரு பக்கத்தை மீறுவது மன்னிப்பு கடிதத்துக்கு இலக்கணமல்ல என்பதாக புதிதாக விதி வகுத்துக் கொண்டான். நற்கருணை ஏறெடுக்கும் மணி முழங்கியது. ஆராதனை முடிவடைவதற்கான அறிகுறி தெரிந்தது. வேகமாக ஆலயத்தை நோக்கி நடக்கலானான்.

பாதிரி இன்று சிறிதே அதிக பக்திப் பரவசத்திலிருந்தார் போலும். ஆராதனைப் பாடல்கள் ஒன்றுக்கு இரண்டு, இரண்டுக்கு மூன்று இசைக்க வைத்து கேட்டுக்கொண்டார்.

பாண்டி கொடிமரச் சதுக்கத்தில் சாய்ந்து நின்றான். அவன் எதிர் பார்த்ததைக் காட்டிலும் சுணக்கமாகவே ஆராதனை முடிந்து மக்கள் எழுந்து வெளியேறினர். மேல்சட்டையிலிருந்த கடிதம் இப்போது உயிர் பெற்று தனியொரு பிறவியாகி விட்டிருந்தது. அது பசியோடு முனகுவதை அவனால் கேட்க முடிந்தது. அதில் இடம் பெற்றுள்ள சொற்கள் பறவைக் கூட்டங்களாகச் சுற்றியலைந்தன. சந்தோஷத்தில் மேலும் ஒருமுறை அதை சட்டைப் பையிலிருந்து வெளியே எடுத்துப் பிரித்துப் பார்த்தான். எழுத்து வடிவங்கள் எல்லாம் அப்படியே இருந்தன. அர்த்த வடிவங்கள் அலைகின்றனவோ! இது குழப்பத்தின் முதல் அம்சமோ என்றும் கலங்கினான். சுயநிலை பிறழ்ந்தவன்போல் காட்சியளிக்கிறோமோ! பேண்ட் பாக்கட்டிலிருந்து சீப்பு எடுத்து தலைவாரிக் கொண்டான். கடந்து செல்லும் எல்லா முகங்களும் சந்தோஷத்தாலும் பூரிப்பாலும் நிறைந் திருந்தன. பெண்களும் ஆண்களுமாக ஆங்காங்கே வளாகத்து மணல் படுகையில் கொத்துக்கொத்தாக அமர்ந்திருந்தனர். ஆலயமும் மண்டப மும் கொடி மரத்தைச் சுற்றிய பகுதிகளும் விளக்கு வெளிச்சத்தில் பளபளத்தன.

பாண்டியின் கண்கள் பிரளயதேவியைத் தேடின. அவள் ஆலயத் துள்ளிருந்து எந்நேரமும் வெளிப்படலாம். எதிர்கொண்டு அவளை விளித்து கடிதத்தை நீட்டி விடமுடியுமா... எண்ணங்கள் பலமிழந்து தடுமாறின. என்ன செய்ய, ஒத்திகை இல்லாத காரியங்களின் தலைவிதி அப்படி. அக்கணத்தில்தான் உண்டு தோற்பும் ஜெயிப்பும். அதற்கு முன் பல தரப்பட்ட குழப்பங்கள்தான், குளறுபடிகள்தான்.

லீலா டீச்சர் மகள் புனிதா பாண்டியைப் பார்த்தாள். அவள் இளம் பெண்கள் கூட்டத்தில் அமர்ந்திருந்தாள். சிநேகமாக சிரிக்க முயல்வது போலிருந்தது. ஆனாலும் தவிர்த்து, எச்சரிக்கையோடு நடந்து கொண் டான். அதிக வெளிச்சத்தில், ஆழ்ந்த இருளில் நாம் நினைப்பதெல்லாம் நடப்பதுபோல் ஒரு மாயை உண்டாகும். அவர்கள் பேச்சு புத்தாடை களைப் பற்றி அமைந்திருந்தது. சுடிதாருக்கும் மிடிக்குமான வித்தி யாசத்தை பற்றி ஒருத்தி விளக்கினாள். நிறம், டிசைன்; தாவணியிலிருந்து

புடவைக்கு பதவி உயர்வு போன்ற விஷயங்கள் ஆர்வத்தோடு பகிரப் பட்டன. கடிதத்தை புனிதாவிடம் கொடுத்து சாராவிடம் சேர்ப்பிக்குமாறு செய்தால் என்ன? பதற்றம் குறைவு, வேலையும் சுலபம் என ஒரு எண்ணப் பொறி பற்றியது. காற்றுச் சீற்றத்தில் கிழித்த தீக்குச்சியாகப் பற்றியதுமே அணைந்தது. அந்தக் கடிதத்தை சாராவைத் தவிர வேறு யார் படித்தாலும் எழுதியவன் தலை சுக்குநூறாக வெடித்துச் சிதறிவிடும் அபாயமிருந்தது.

பாட்டி படிக்கட்டுக்களில் பத்திரமாக இறங்கி வந்துகொண்டிருந் தாள். கடவுளின் கடைசி பக்தையும் மண்டபம் தாண்டியாயிற்று. பின்னும் சாராவைக் காண முடியாதது புது நெருக்கடியை உண்டாக்கியது. அவள் கோவிலுக்கு வரவில்லையோ! மன்னிப்புக் கடிதம் தயாராக இருப்பதை மனக்கண்ணால் பார்த்துவிட்டு மறைந்துகொண்டாளா! தன் உதாசீனத் தின் உச்சபட்ச சாதனையாக மாலை ஆராதனையையே புறக்கணித்து விட்டாளா! பாண்டி அங்கிருந்து நகர்ந்து யார் பார்வையையும் உறுத்தாத வண்ணம் ஆலயத்தின் தெற்கு வாசலையடைந்து கோவிலுக்குள் உற்றுப் பார்த்து நோட்டமிட்டான்.

கால்களை ஒரு பக்கமாக மடித்தமர்ந்து கண்களை மூடி முகத்தை ஏந்தி கையில் ஜெபமாலையுடன் சாரா மட்டும் அமர்ந்திருந்தாள். உருக்க மான எண்ணங்களால் அவள் அவளைவிட்டு ஏக தொலைவிலிருக்கிறாள் என்பதை உணர்ச்சியற்ற முகம் காட்டியது. முக்காடு இறங்கி தோளுக்கு வந்து விட்டிருந்தது. காதில் வளையம் கவலையின்றி மின்னியது. பிரார்த் தனையில் அவள் ஆழ்ந்திருப்பதை இங்கிருந்தே அறிய முடிந்தது. அந்தச் சூழலும் தனிமையும் அவனை ஒரு மனிதப் பூனையாக மாற்றிவிட்டது. மண்டபத்திலிருந்தோ, அதற்கும் வெளியிலிருந்தோ யார் பார்த்தாலும் ஆலயத்துக்குள் சாரா அமர்ந்திருக்கும் இடத்தைக் காண முடியாது என்பது துணிவைத் தந்தது. அவளை நெருங்கும் முன் பிராத்தனை முடிவுக்கு வந்துவிடக்கூடாது என அவன் ஒரு தனிப் பிராத்தனை செய்துகொண்ட பின் பூனை தன் வாலைக் காற்றில் வீசி மெல்ல நடந்தது. மன்னிப்புக் கடிதத்துடன் உயிரைக் கையில் பிடித்தபடி சுற்றும்முற்றும் பார்த்துவிட்டு காகிதத்தை சத்தமின்றி அவள் முன்னே நழுவவிட்டது. நக ஒலி கூட எழாமல் தெற்கு வாசல் வந்து மறைந்து நின்றுகொண்டது. ஆலயம் பேரமைதியோடு இருந்தது.

சாரா பிராத்தனை முடிந்து நெற்றியிலும் மார்பிலும் முகத்திலும், பிதா சுதன் பரிசுத்த ஆவி உரைத்து, எழக் கையூன்றியபோது தன் முன்னே கிடந்த காகித மடிப்பைக் கண்டாள். அவள் முகம் குழப்பத்தில் இழைந் தது. சுற்றும்முற்றும் தலையைத் திருப்பி கண்ணையுருட்டியவள், காகிதத்தை எடுத்து இருந்த நிலையிலேயே பிரித்தாள்.கடிதத்தில் தன் பெயர் இருப்பதைக் கண்டதும் கோபமாக எழுந்தாள். நடந்து வடக்கு வாசலுக்கு வந்து கண்ணுக்கெட்டும் தொலைவு மட்டும் நோட்டமிட் டாள். அது அது அதனதன் இயல்பில் இருந்தது. அடுத்து அவள் தெற்கு

வாசலுக்கு வருவாள் என்பதை ஊகித்த பூனை வேகமாகத் தாவி கொடிமரச் சதுக்கத்துக்கு வந்து பதுங்கியது.

பாட்டு வாத்தியார் இன்னோசன்ட் தன் தலைமுடியை அடிக்கடி சரி செய்தபடி பாடகிகளோடு விவாதித்துக்கொண்டிருந்தார். இனி வரும் திருப்பலிகள், ஆராதனைகள் விஷேசமானவை என்பதால் பாட்டுக் குழுவினருக்கு சிறப்புப் பயிற்சி தேவைப்பட்டது. ஒன்பதாம் பத்தாம் திருநாட்களில் தபேலா, எலக்ட்ரிக் கிதார் என மேலும் பல இசைக் கருவிகள் சேர்க்கப்பட்டிருக்கும். எனவே அதற்கும் ஈடு கொடுத்து அவர்கள் இனிமை குறையாமல் பாடி சிறப்பிக்க வேண்டும். இரவு உண வருந்தித் திரும்பிய பிறகு பயிற்சி தொடங்கப்படுமென்று முடிவெடுக் கப்பட்டு கலைந்தார்கள்.

சாரா ஆலயத்துக்குள்ளிருந்து வெளிப்பட்டாள். திருமுகம் சினத்தில் சிவந்திருந்தது. பாண்டி ஓரக்கண்ணால் குறிப்பாக அவள் கைகளைப் பார்த்தான். அது வெறுமையாக இருந்தது. கடிதத்தின் கதி என்ன? பாண்டி யின் இடுப்புக்கு கீழே பூனையின் கால்கள் பரபரத்தன. முகம் வியர்த்து வழிந்தது. சாராவின் கூர்மையான கண்கள் நாலாபக்கமும் அலைந்து தேடுவது வெளிப்படையாகவே தெரிந்தது. முழங்கால் வரை மூடிய சப்பாத்தும், மார்பில் போர்க் கவசமும் புஜத்தில் விரிந்த இரு சிறகுகளும் மின்னலென வலது கையில் உயர்த்திப் பிடித்த பட்டயமுமாக கப்ரியேல் தூதனை ஒரு கணம் நினைவூட்டினாள்.

புனிதாவும் சாராவும் சேர்ந்து நடந்தார்கள். ஒரு வார்த்தைகூட அவர்கள் பேசிக்கொள்ளவில்லை. சோர்வான முகத்துடன் கொடிமரச் சதுக்கத்தில் தோற்றமளித்த பாண்டியைக் கடந்து செல்லும்போது சாரா காரமாக வெறித்தாள். அவள் பார்வை மேலிருந்து அவன் கால் வரை யிறங்கி மீண்டும் அவன் முகத்துக்கு வந்து அருவருப்போடு விலகிப் போனது.

சில நிமிடங்கள் பொறுத்திருந்து பூனை மீண்டும் கோவிலுக்குள் பவ்யமாக நுழைந்தது. அங்குமிங்கும் அலைந்து கிழிந்த காகிதத் துண்டு களைத் தேடியது. தெற்கு வாசல் வடக்கு வாசல் எங்கும் கடிதத்தின் சிதிலங்கள் இல்லாத திருப்தியோடு அது தலைவாசல் கடந்து மண்டப வாயிலில் வந்து நின்று தாள்ரோஜா பந்தலைப் பார்த்தது. பந்தலுக்கடியில் ட்யூப் லைட் வெளிச்சத்தில் இடுப்பில் கையூன்றிய சாரா ஆலய மண்ட பத்தை வெறித்துப் பார்த்தபடி சிலையாக நின்றிருந்தாள்.



குத்துக்கல்லைக் குடைந்து செய்யப்பட்டது போலுன் கோயில். பிரபஞ்ச கோளத்தைச் சுட்டுவிரலில் துளியாய் ஏந்துகிறது காதல். பருத்திக்காய் நெற்றாய் இமைகளிரண்டும் வெடித்து வெளிச் சீறும் பார்வையில் உள்ளிழுக்கும் அலைகளுக்கடியில் சூட்சுமம் வார்த்த சக்கரங்கள் செம்மைக்குள் மிதக்கும் கருமணிகளை நடுவாகக் கீறும் மயக்கத் திரையிழுத்து நீ துயிலும் இரவுப் பொழுதிலும் விழித்திருந்து விம்மும் கனத்த முலைகள் மீது ஊஞ்சலாடி வளரும் கவனம். திகைத்துப் படர்ந்த முகத்தின் அழகு இன்னும் திளைத்து உயிரில் செருக உன்னை வளைத்துப் பின்னி வேருருவ என்னை இழுத்து வரும் தாவரம் நான். வெட்டவெளியில் செழித்த கெட்ட கனவை மென்று சாணமிட்டு நகரும் எருதுவைத் தேடி எட்டுத் திசையும் அலைகிறது நீ ஏவிவிட்ட சக்தி. சந்நிதான முற்றத்தில் என்னை எச்சமிட்டுச் சென்ற புத்தி பேதலித்த பறவையின் ரத்தத்தில் சிவக்கிறது பகல் கனாவுள் சுழலுமுன் துருத்திய நாவு. மண்ணுக்குள் புதைந்திருக்கும் விண்மீன்கள் வேர்களின் புண் களைத் தின்னும் துடிப்பில் வலிகளின் ஓவிய இலைகளாய் மலர்கிறது. ரேகைகள் பாய்ந்துறையும் உள்ளங்கைளாய் விரியும் தாவரச் செதில்கள் உனை நோக்கி வரங்கள் வேண்டி தவத்தில் நீளும். விஷத்தை உண்டு பசியாறும் விதிகளற்ற சர்ப்பங்களாய் படிகளேறி வரும் என் கொடிகள். விரல்கள் நடுங்கித் தாளமிடும் காலடியில் இறுதியாய் இதழ்கள் விரிக்கும் எண்ணத்தில் வாசனையோடு பூத்தெழும் உன் பிரதிமுகம். கொஞ்சக் குனிந்து நீ கிள்ளும் முன் வாடியுதிரும் ஒரு யுகம்.

☆☆

அரைகுறையாய் ஆர்வமின்றி உணவை முடித்து விட்டு உறங்கப் போனபோது, காட்டுக் கரடியாக கட்டிலில் படுத்தவாறு ஈரமான புண் களைப் போன்ற கண்ணை உருட்டி அந்த இரவு அவனைப் பார்த்த மாத்திரத்தில் உடல் புல்லரித்து நடுக்கம் கண்டது. பிடரி மயிரைப் பற்றிய அச்சத்தின் கரம் இறுகியது. வேறு வழியின்றிப் படுத்தான். அசைவற்ற நீர் மேல் மிதக்கும் தூண்டில் தக்கையாக உடல் கனமின்றிக் கிடந்தது. வெளிச்சத்தில் துணையிருக்கும் மனத் திடம் இருட்டில் மறைந்தோடி ஒளிந்து விடுகிறது. நித்திரை கடித்திழுத்து மிதவை ஆழும் போதெல்லாம் தெளிவற்ற யோசனைகள் தூண்டில் தண்டை வெடுக்கென உயர்த்தி யிழுத்து விழிப்புண்டாக்கின. தலைமட்டிலும் போர்வையை இழுத்துப் போர்த்தினான்.

கரடி போர்வைக்குள்ளும் தலையை நுழைத்தது. அவன் முகத்தில்

மூச்சுவிட்டது. சடை சடையாக வளர்ந்து மண்டிய அதன் நீளமான ரோமங்கள் அருவருப்பூட்டின. மோகத்தின் பாற்பட்டு கட்டவிழ்ந்து விரிந்து கிடக்கும் பருவப் பெண்ணின் கூந்தலாகவும் அதைப் பாவிக்கலாம்தான். ஆனால் அவனுக்கு அது பழக்கமில்லாத கற்பனை.

''பாண்டி, உன் கடிதத்தை இந்நேரம் சாரா படித்திருப்பாளா?'' கரடி கிசுகிசுப்பான குரலில் காதருகில் மெதுவாகக் கேட்டது.

''தெரியாது'' பாண்டி அவனுக்கே கேட்காமல் பதில் சொன்னான்.

''அது மன்னிப்பு கடிதம் மட்டும்தானே...''

''ஆமாம்.''

''அவள் உனக்குத் தரும் மன்னிப்பை நீ என்ன செய்வாய்?''

''என்னிடமே பத்திரமாக வைத்துக்கொள்வேன்.''

''யாருக்கும் தரமாட்டாயா?''

''ஏன் தரவேண்டும்? அது நான் எனக்கென்று மன்றாடிப் பெற்றது.''

''உண்மையில் மன்னிப்பு என்றால் என்ன?''

''ஒருவருக்கு இழைத்த தவறை ஒருவர் திருத்திக்கொள்ள பாதிக்கப்பட்டவர் தரும் ஒரு சந்தர்ப்பமும் ஒத்துழைப்பும்.''

''உண்மையில் அதன் பயன் என்ன?''

''ஆறுதல். நிம்மதி. ஆசுவாசம்.''

''அவ்வளவுதானா...''

''அவ்வளவுதான்.''

''அதற்கு மேலும் ஒன்றுமில்லையா?''

''ஒன்றுமில்லை.''

கரடி சிரிப்பதற்கு கொஞ்சம் நேரம் எடுத்துக்கொண்டது. அப்போது கிடைத்த இடைவேளையில் அவன் உறங்கிப்போகவிருந்தான். கரடிக்கு உறக்கம் வரவில்லை. மீண்டும் கேள்விகளால் துளைத்தது.

''உன் கோரிக்கை நிராகரிக்கப்பட்டால் என்ன நடக்கும்?''

''நிச்சயம் ஏற்றுக்கொள்ளப்படும்.''

''ஒருவேளை ஏற்றுக்கொள்ளப்படாவிட்டால்...''

''என் நம்பிக்கை வீண் போகாது.''

''நல்லது. சாரா உன்னை மன்னித்துவிட்டாள் என்றே வைத்துக் கொள்வோம். பிரதியுத்திரமாக நீ அவளுக்கு நன்றி தெரிவிக்க வேண்டியது அவசியமல்லவா?''

''ஆமாம்.''

''உன் நன்றியை எப்படித் தெரிவிப்பாய்?''

''நன்றி என்று.''

கரடி தன் வலது கையால் பாண்டியின் நாடியை மென்மையாகப் பற்றி அங்குமிங்கும் அசைத்துக் கொஞ்சிவிட்டுக் கூறியது, ''நல்ல பையன்தான். நறுக்நறுக்கென்று நல்ல பொய்களைப் பேசுகிறாய். பாராட்டுகிறேன். அதே நேரம் நான் உறுதியாகச் சொல்கிறேன். அவள் உன்னை வெறுத்து ஒதுக்கிப் புறக்கணித்து உனக்குத் தண்டனைகளை வழங்கினால் நீ பாவியாகவே இருப்பாய். மன்னிக்கப்பட்டால் மறு நொடியே நீ காதலனாகி விடுவாய்.''

''மாட்டேன்.''

'ஏன் மாட்டாய்?''

''எனக்கு காதலிக்கத் தெரியாது.''

''தெரிந்துகொள்ள காதலில் என்ன இருக்கிறது? ஒரு கழுதை வயதானால் போதும், மற்றதெல்லாம் தானாக நடக்கும்.''

பதில் கூற முனைந்த பாண்டியின் பேச்சும் குரலும் திணறியது. கரடி தன் வலது கரத்தை அவன் புருவத்துக்கு அடியில் வைத்து இமைகளை மூடி விரல்களால் வருடி உறக்கத்தை வரவழைத்தது. ''பார்'' என்றது.

கண்ணைப் பறிக்கும் ரத்தினக்கற்கள் பதித்த அரியாசனத்தில் யுவராணி அமர்ந்திருந்தாள். அவளது இடது பாரிசத்திலும் வலது பாரிசத்திலும் பதினெட்டு யாழ்கள் இன்னிசை எழுப்பிக்கொண்டிருந் தன. அவள் முதுகுக்குப் பின்னே ஏழு கலைஞர்கள் முழு மூங்கில் மரத்தை தோள்களில் சுமந்து அவரவர்களுக்கான துளைகளில் தங்கள் மூச்சை இசையாக்கிக் கொண்டிருந்தனர். மூன்று சேடிகள் வெண்சாமரம் வீசினர். மலர்ந்த முகமும் சிரித்த கண்களுமாக கனவுக்கு இழுத்துச் செல்லும் நிலவின் மகளைப் போலிருந்தாள். அவள் மடியில் பச்சைப் பட்டு அங்கியின் மிருதுவான கதகதப்பில் குட்டி நாய் ஒன்று சுருண்டு படுத் திருந்தது. மண்டபத்தில் நிறைந்து வழியும் மனித ஆரவாரத்தில் அதன் சிறிய கண்கள் மிரட்சியடைந்திருந்தன. யுவராணி வெண்ணைக் கட்டி விரல்களால் நாய்க்குட்டியின் உச்சந்தலையிலிருந்து முதுகு வரை வருடிக் கொடுத்தபடியிருந்தாள். யுவராணி தன் வலது காலை மூன்றாவது முறையாக இடது காலின் மீது மாற்றி வைத்தபோது விருந்து நிறை வடைந்தது. கையில் சுத்தமான வெள்ளியில் செய்யப்பட்ட பெரியதொரு தாம்பூலத் தட்டு ஏந்தி வந்தவன் யுவராணியின் முன் மண்டியிட்டு பணி வைத் தெரிவித்து, யாசிப்பதுபோல் தட்டை நீட்டினான். தன் மடியி லிருந்த குட்டி நாயைக் கையிலெடுத்து அதன் நெற்றியில் இதமாக முத்த மிட்டு தட்டின் மீது அதை வைத்தாள். நாய்க்குட்டி அவள் மடிக்கே திரும்ப எத்தனித்து தடுமாற்றமடைந்தது. அதற்குள் தட்டு எழுந்து விட்டது. முதல் வரிசையில் அமர்ந்திருக்கும் பல தேசத்து அரசர்களும் இளவரசர்களும் வெள்ளித்தட்டிலிருக்கும் நாய்க்குட்டியை கண்களில்

காதல் வழியப் பார்த்தனர். வரிசையின் வலது புறத்திலிருந்து வெள்ளித் தட்டு பயணித்தது. அதைத் தாங்கி வந்தவன் ஒவ்வொருவர் முன்னும் பணிந்து கைத்தட்டை ஏந்தினான். அவர்கள் நாயை வருடித்தந்து மடிந்து கிடந்த அதன் செவிமடலை மேலாக உயர்த்தி அதன் காதுக்குள் குனிந்து ரகஸியமாக வார்த்தைகள் பேசிவிட்டு நிமிர்ந்து தங்கள் மீசையில் கை போட்டார்கள். பலதரப்பட்ட குரலில் காதுக்குள் நுழையும் கிசுகிசுப்பான வார்த்தைகளைக் கேட்டபோதெல்லாம் நாய்க்குட்டி அச்சத்தில் தன் ஒரு சாண் வாலைக் குழைத்தாட்டியது. நனைந்த கரும் திராட்சைகளாகப் பளபளத்த அதன் விழிகளில் அது, தன் நிராதரவான நிலையைத் துக்கமாகத் தேக்கியிருந்தது. சடங்கு சம்பிரதாயம் முடிய இன்னும் பலர் வரிசையில் காத்திருக்கும் நேரத்தில் ஒரு குறும்புக்கார இளவரசன் நாய்க்குட்டியின் செவிமடலைத் திருகி என்ன வார்த்தை பேசினானோ தெரிய வில்லை, வெறுப்படைந்த நாய்க்குட்டி வெள்ளித்தட்டிலிருந்து துள்ளிக் குதித்து பளிங்குத் தரையில் கிடுகிடுவென ஓடி யுவராணியை அடைந்து, தாவியேறி அவள் மடியில்அமர்ந்து தலையை இங்குமங்கும் திருப்பியு யர்த்தி மழலைக் குரலில் குரைத்தது. சபை சலசலப்பும் கலகலப்பு மடைந்தது. எரிச்சலும் கோபமும் அடைந்த இளவரசி நாய்க்குட்டியின் கழுத்தை நெரித்துப் பிடித்துத் தூக்கி மண்டபத்தின் நடுவே ஆவேசமாக எறிந்தாள். துணிப்பந்து போல் விழுந்து பல முறை உருண்டு எழுந்து சுதாரித்த நாய்க்குட்டி வலி தாளாமல் முனகியது. வாலை வேகமாகக் குழைத்துக்கொண்டு அது மீண்டும் அவளை நெருங்கியது. துள்ளி அமர மடியைத் தேடியது. அவள் எழுந்து நின்றிருந்தாள். அவளது இடது கரம் கோபத்தில் நீண்டு விறைத்திருந்தது. நாய்க்குட்டி தனது சின்னக்கண் களால் அவளைப் பார்த்து இருக்கையில் அமரும்படி மன்றாடியது. கோபம் தணியாமல் அவள் நாய்க்குட்டியை வெறித்து நிற்க மெல்ல அவள் காலடிக்கு வந்த நாய்க்குட்டி வைரக்கற்கள் பதித்த காலணியையும் பாதங்களையும் நக்கியது. தன் நாவின் ஈரச் சுரப்பு தீரும் வரை நக்கியபின் அவள் முகத்தை பரிதாபமாகப் பார்த்தது. நாய்க்குட்டியை மகிழ்ச்சி யோடு அள்ளியவள் தன் அரியாசனத்தில் அமர்ந்தாள். அவள் விரல்கள் அதை நீவின. வெள்ளித்தட்டு ஏந்திய அடிமை அவள் முன்னே மண்டி யிட்டு நின்றிருந்தான். நாய்குட்டி வெள்ளித்தட்டில் வைக்கப்பட்டது. ஆயிரம் எருதுகள், பத்து லாயம் புரவிகள், ஐநூறு ஒட்டகங்கள், கழுதை மந்தைகள், ராத்தல் ராத்தலாய் பொன், வெள்ளி, பவளங்கள் எனத் தருவதற்கு பலரும் முன்வந்தார்கள். லட்சம் குடிகளும், ஆயிரக்கணக் கான அடிமைகளும் வற்றாத இரண்டு ஜீவ நதிகள் பாயும் செழித்த நிலங் களும், பல வருஷங்களுக்கு போதுமான தானியம் சேமிக்கப்பட்ட உணவு ஆதாரங்களும் கொண்ட தன் தேசத்தில் பாதியை யுவராணியின் நாய்க் குட்டிக்கு ஈடாகத் தர முன்வந்த இளவரசனின் பரந்த உள்ளத்தையும் குணத்தையும் பாராட்டி சிலாகித்து அவள் மேட்டிமையோடு தன்

ஒப்புதலைத் தந்தாள். ஒப்பந்தத்தில் துளியும் உடன்பாடில்லாத நாய்க்குட்டி அவள் கையிலிருந்து பலவந்தமாகத் தன்னை விடுவித்து தப்பித்து குதித்து வெண்கலத் தூண் மண்டபத்தை விட்டு ஓட்டமெடுத்தது. அதைத் துரத்திப் பிடிக்க ஆணை பிறந்தது. ஆயுதம் தரித்த வீரர்கள் புரவிகளிலேறி நாய்க்குட்டியைத் துரத்தலானார்கள். குதிரைக் குளம்படிகளில் செம்புழுதி மூட்டம் மூட்டமாகக் கிளம்பி மேலெழுந்தது. நாய்க்குட்டியின் பிஞ்சுக்கால்கள் சோர்ந்தபோது அதன் முகத்துக்கருகே ஓர் ஈட்டி பாய்ந்தது. அது திகைத்துத் திரும்புவதற்குள் அதைச் சுற்றிலும் மண்ணில் தைத்த குத்தீட்டிகள் வேலியாகின. தப்பிச் செல்ல இடமில்லா நெருக்கத்தோடு சிறை எழுந்தது. ஈட்டிக் கம்பிகளுக்குள் சிக்கிக்கொண்ட நாய்க்குட்டி தன் முன்னங்கால்களைக் கைகளாக்கிக் கும்பிட்டு தன்னை விட்டு விடுமாறு கெஞ்சியது. அதன் வேண்டுதலைப் புரிந்துகொள்ளாத ஒரு முரட்டுக் கரம் கழுத்தை நெரிக்க வருவதுபோல வெறியோடு நீண்டது. நாய்க்குட்டி தாறுமாறாகத் துடித்துப் படபடக்கும் இருதயத்தோடு கண்களை சிக்கென்று மூடிக்கொண்டது.

கண் விழித்துப் பார்த்தபோது கரடி எழுந்து போய் விடிந்து நீண்ட நேரமாகியிருந்தது.

# 10

காலையில் கோவில் பக்கமே போகவில்லை. மனம்போன போக்கில் காகிதங்களில் கிறுக்கிக் கொண்டிருந்தான். முற்பகலில் சாராவைக் காண நேர்ந்தது; தன் தோற்றத்தில் சிறிதும் அக்கறை கொள்ளாத சாராவை. தலையும் உடையும் கலைந்த நிலையில். அவள் முகம் வாடிப் போயிருந்தது. அன்று காலைத் திருப்பலியை அவன் புறக்கணித்து விட்டிருந்தான். மந்தையாக ஜனங்கள் கூடுவதும் சொன்னதையே திரும்பச் சொல்லி பாடியதையே திரும்பப் பாடி தின்றதையே திரும்பத் திரும்பத் தின்று… நினைக்கவே சலிப்பாக இருந்ததும் ஒரு காரணமாயிருக்கலாம். அல்லாமலும் கனவில் நாய்க்குட்டியாக காலை நக்கி மன்னிப்பு கேட்ட விதம் இப்போது மிகக் கேலியாக மாறிவிட்டிருந்தது மனசுக்குள். அது மட்டுமில்லாமல் அந்தக் கடிதத்தை எல்லோர் முன்னிலையிலும் சாரா காட்ட முயற்சித்தால் நிலைமை கேவலப்பட்டுப்போகவும் வாய்ப்பிருந்ததால் எச்சரிக்கையாய் இருக்கவேண்டிய நிர்பந்தமும் இருந்தது.

எல்லாமுமாகச் சேர்ந்து அவனை சோம்பிப் போகச் செய்தது. அவன் கனவுகளைப் பிடுங்கி காடுகரைகளில் அலையவிட்டது. தூரப்பயணத்தின் பாதியில் தன் உடமைகளையெல்லாம் வழிப்பறிக் கொள்ளையாய்க் கொடுத்துவிட்டு மேலும் பயணத்தை தொடர்வதுபோல ஒரு வெறுமை

யும் சூன்யமும் அவன் இதயத்தின் ஆழத்தில் குவிந்திருந்தது. தூக்கத்தில் நடப்பதுபோல நடை தளர்ந்து போனது. அலட்சியக் கத்திகள் தைத்த வேதனை பழகிப் போய்விட்டது. அல்லது அதற்கு நாம் தகுதியான ஆள் தான் என்ற எண்ணம் உருக்கொண்டு உறுதியடைந்து விட்டது. அடுத்து ஆத்திரத்தின் கனல் கங்குகளை அவள் அள்ளிக் கொட்டுவாள். அது எப்படிப்பட்ட அவஸ்தையோ என்ற பீதியே பெரிதும் செயலிழக்க வைத்தது.

இப்போதுதான் நடக்கப் பழகிய பெண் குழந்தை ஒன்றின் தங்க மோதிரம் தொலைந்து போய்விட்டது, விளையாடும்போது. வீட்டிலும் தெருவிலும் தேடிப்பார்த்து பின் அக்கம்பக்கத்து வீடுகளில் விசாரித்துப் பார்த்தும் மோதிரம் கிடைக்காமல் போகவே, அது திட்டமிட்ட திருட்டாகக் கருதப்பட்டு ஊர் தலைவரிடம் புகார் தரப்பட்டது.

பஞ்சாயத்து கட்டிடத்தின் முன் ஜனங்கள் கூடி நின்றிருந்தார்கள். நிழலுக்குத் தோதாக பெரிய வேப்பமரமொன்றும் அங்கே நின்றது. வேப்பங்கனிக்கு வந்த மைனாக்கள் நிம்மதியிழந்து கிளை விட்டு கிளை தாவின. எரிச்சலடைந்த காகங்கள் பறந்து பறந்து கரைந்தன. ஊர்ப் பெரியவர்கள் என்ற மரியாதைக்குரியவர்கள் வெளுத்த உடையணிந்து கவலை படர்ந்த முகத்துடன் நின்றிருந்தனர். பஞ்சாயத்து திண்டில் அமர்ந்து இளைஞர்கள் கூடி நோட்டுப் புத்தகத்தை விரித்து வைத்து உற்சாகமாகப் பெயர்களைக் குறித்துக் கொண்டிருந்தார்கள். பெரும் பாலும் சிறுவர் சிறுமிகள்தான் சாண உருண்டைகளைக் கொண்டுவந்து கொப்பரையில் போட்டுவிட்டு நோட்டுப் புத்தகத்தில் அப்பா பெயரை இனிஷியலோடு சொல்லிவிட்டு கூட்டத்தில் போய்க் கலந்தார்கள். ஏறக்குறைய பத்து தொழுவத்து சாணத்தால் கொப்பரை முக்கால்வாசி நிரம்பிவிட்டது. ''எல்லா வீடுகளிலிருந்தும் வந்தாச்சா'' என்று ஊர்த் தலைவருக்குப் பக்கத்தில் நின்றிருந்தவர்கள் கேட்க இளைஞர்கள் பதிவை சரிபார்த்து, இன்னும் சில வீடுகளிலிருந்து வரவில்லை எனத் தெரிவித்தனர். அதில் லீலா டீச்சரின் கணவர் பெயரும் இருந்தது. அந்த வீடுகளை நோக்கி சிறுவர்கள் ஓடினார்கள். கூட்டத்தில் நின்றிருந்த எல்லோர் வாயும் சளசளத்துக்கொண்டிருந்தது. சந்தைக் கடைக் கூச்சல் போல் பேச்சொலிகள் உச்சமடைந்துகொண்டே போயின. சாணத்தைக் கரைத்துச் சலித்துப் பார்க்கத் தேவையான தண்ணீரும் குடங்களில் தயாராக இருந்தது. கனத்த உருவத்துடன் லீலா டீச்சரும் இடப்பக்கத்தில் புனிதாவும் சாராவும் தெருவில் நடந்து வந்துகொண்டிருந்தார்கள்.

கூட்டத்தோடு நின்றிருந்த பாண்டியின் பார்வை குதித்து சாரா மீது தாவியது. யாரும் கவனித்துவிட்டால் நல்லதல்ல என்ற எச்சரிக்கை உணர்ச்சி கண்களை வேறு பக்கம் திருப்பியது. காகங்கள் முற்றிலும் பொறுமையிழந்து கரைந்தன. பேச்சு சலசலப்பு கூடைகூடையாக வெப்ராளங்களை கொண்டுவந்து காதுக்குள் கொட்டியது. உள்ளங்

கால்கள் உள்ளங்கைகளில் லேசாக வியர்த்துவிட்டது. இனி அவனை அவனே வேடிக்கை பார்க்க வேண்டிய நெருக்கடி மிக நெருங்கி வந்து கொண்டிருந்தது. பிறிதோர் ஓரக்கண் நோட்டத்தில் சாண உருண்டை யார் கையில் உள்ளதென்று நொடிப் பொழுதில் ஆராய்ந்தான். வெள்ளைக் காகிதத்தில் சாண உருண்டையைப் பொதிந்து கைக்குட்டை போல் சாரா இடது கையில் வைத்திருந்தாள். மடிந்திருக்கும் வெள்ளைக் காகிதத்தின் உட்பகுதியில் ஏதும் எழுதப்பட்டிருக்குமோ? குழப்பம் திடுக்கென்று குறுக்கிட்டது. குறிப்பாக 'மதிப்பிற்குரிய மரிய சாரா' என்று எழுதப் பட்டிருக்குமோ? இருக்காது இருக்காது என்று மனத்தலையாட்டி மறுத்தும் வெளித்தலையை அசைக்கவே சிரமத்தோடு நின்றிருந்தான். சாரா சாண உருண்டையை கொப்பரைக்குள் போட்டாள். நெடி தாக்கிய தில் லேசாக முகம் சுழித்தாள்.

நோட்டு புத்தகத்தில் பெயரெழுதும் இளைஞர்கள் குதூகலமடைந் தனர். ''பேர் சொல்லுங்க பேர் சொல்லுங்க'' ஒருவன் உற்சாகமாகக் கூவினான்.

''செருப்பு பிஞ்சுரும். கழுதை... பேர் தெரியாதாலே ஒனக்கு'' லீலா டீச்சரின் குரல் நடுங்க வைப்பதாக இருந்தது. இளைஞன் சப்தநாடி யடங்கி நோட்டுப் புத்தகத்தில் குனிந்து பெயர் பொறித்தான். ''கழுத்துல செயினு, கையில மோதுரம், கால்ல கொலுசு, காதுல கம்மலு இதுலாம் மாட்டிவிட்டாதான் பிள்ளைங்க தெருவுல போய் விளையாடுவேன்னு உங்ககிட்ட ஒத்தக் கால்ல நிக்குதோ...'' மோதிரம் தொலைத்த குழந்தை யைத் தூக்கி வைத்துக்கொண்டு நின்றிருந்த தந்தையிடம் டீச்சர் கோப மாகக் கேட்டாள். கூட்டம் அமைதியானது. தந்தை எச்சில் முழுங்கினார். ''உன் ஒருத்தனோட அஜாக்கிரதையால எவ்வளவு பேருக்கு சிரமம் பாரு. பொருள் கிடைச்சா போச்சு, கிடைக்கலனா போனது போனதுதானே.'' டீச்சர் கணீர் குரலில் கவலை காட்டினாள். பாண்டி டீச்சர் வாயையே பார்த்துக்கொண்டிருந்தான். கண்மணிகள் அசைவற்றிருந்தன. ஒரு மில்லி மீட்டர் நகர்ந்தாலும் சாராவின் கண்களை எதிர்கொள்ளவேண்டிய சங்கடமிருந்தது.

''கிடைக்கலனா சும்மா அப்படியே விட்டுருவுமா? வயிறு வெடிச்சி செத்தா சாவுங்கனு வைத்தியன் கிட்ட போய் முட்டை ஓதிர வேண்டி யதுதான்.'' ஏதோ ஆண்குரல் கூட்டத்திலிருந்து இலக்கற்று வன்மத்தோடு கிளம்பியது. டீச்சர் அங்குமிங்கும் கண்களை ஓட விட்டு யாரென்று தேடினாள். கண்டுபிடிக்க முடியாமல் விட்டுவிட்டாள். மூடநம்பிக்கை யின் புளிப்பைச் சுவைத்ததுபோல் அவளது கருத்துத் தடித்த உதடுகள் நெளிந்தன.

பாண்டியின் அருகில் நின்றிருந்த நிழல் மீசை இளைஞன் எரிச்சலும் குழப்பமுமாக அடிக்கடி பாண்டியின் முகத்தை உற்றுஉற்றுப் பார்த்தான். திக்திக்கென்றிருந்தது. வெள்ளைக் காகிதத்தில் திரும்பத் திரும்பத் தன்

விரல்களைத் துடைத்தபடி சாரா பாண்டியை வைத்த கண் வாங்காமல் பார்த்தபோதுதான் நிழல் மீசை அப்படிச் செய்கிறது என்பதை பாண்டி கிரகித்து விட்டிருந்தான். கொப்பரையில் நீர் குபுகுபு என்ற சப்தத்தோடு ஊற்றப்பட்டது. எல்லாக் கண்களிலும் ஆர்வம் மின்னிப் பளிச்சிட்டது. அங்கு நின்றிருந்த பழைய மனிதர்கள் மறைந்து புதிய மனிதர்களாகி விட்டிருந்தார்கள். இரண்டு ஆண்கள் மேல் சட்டையில்லாமல் பனியனோடு நீளமான கைகளை கொப்பரைக்குள் விட்டு சாணத்தைக் கரைத்தார்கள். கூட்டம் முண்டியடித்து கொப்பரையைச் சுற்றி நின்று வட்டத்தை குறுக்கியது. நாற்றத்தை யாரும் பொருட்படுத்தவில்லை. சாணம் கரைந்து காடியாவதற்குள் பாண்டியை கூட்டம் மிகவும் பின்னுக்குத் தள்ளி விட்டது. கடைநிலைக்கு வந்து விட்டிருந்தான். அங்கிருந்து பார்க்க காட்சி தெளிவாக விளங்கவில்லை, சாராவும் கடைக் கோடியில்தான் நிற்கிறாள் என்பதைத் தவிர. கரைப்பவர்களுக்கு வியர்த்து ஊத்தியது. நேரம் செல்லச் செல்ல மோதிரம் கிடைத்துவிடும் என்ற நம்பிக்கையில் துவாரங்கள் பெருகி அது ஒரு தோணியைப்போல மூழ்கிக்கொண்டிருந்தது.

மண்ணரிக்கும் சல்லடை வந்தது. கொப்பரையை நான்கு பேர் சேர்ந்து தூக்கிக்கொண்டு தெருவை குறுக்காகக் கடந்து ஒதுக்குப்புறத்துக்கு போனார்கள். கூட்டமும் கலைந்து பின்தொடர்ந்தது.

பாண்டியும் கடைசி ஆளாய் கூட்டத்தைப் பின்தொடர்ந்தபோது 'சத்' என்ற ஓசையுடன் ஏதோ அவன் முதுகில் பட்டு கீழே விழுந்தது. அவன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்க்கும்போது சாரா அவனைக் கடந்து முன்னே சென்றாள். சற்றும் தாமதியாமல் தரையில் கிடந்த உருட்டப்பட்ட காகித உருண்டையை யாரும் பார்க்கும் முன் குனிந்து கையிலெடுத்து மறைத்துக்கொண்டான். இருதயம் வேகமாக அடித்தது. வலது கையைத் தவிர உடலின் பிற பாகங்கள் எல்லாம் கரைந்து காற்றாகியிருந்தது.

கொடுத்த கொடை அவன் கைகளுக்கு கிடைத்ததா என்று ஒருமுறை சாரா திரும்பிப் பார்த்து சோதித்தாள். அவள் கண்கள் அலட்சியத்தாலும் ஆத்திரத்தாலும் படைக்கப்பட்ட இரு கிரகங்களாக நெரிந்த புருவத்துக் கடியில் மிதந்தன. பாண்டி தலையில் விழுந்த இடியை கால்வரை சுமந்து அங்கேயே நின்றிருந்தான். உடலுக்குள் தள்ளாடினான். சவுக்கைச் சொடுக்கி இழுப்பது போல் உதட்டைக் கோணி ஒரு சிரிப்பைக் கிழித்தாள். அதற்கு மேல் என்ன நடந்ததென்று அவனுக்கொன்றும் நினைவில்லை.

# 11

**வா**ளைப் போல் நீண்டு முனையில் கொஞ்சம் வளைந்திருக்கும் வீச்சு அரிவாளால் நீரை வெட்டி, கால்வாய்களில் நீந்தி வரும் மீன்களைக் கொத்திக் கைப்பற்றும் மீன் வேட்டை மீது பாண்டிக்கு நிறைய ஆர்வ மிருந்தது. கண்ணால் கண்டதில்லை, கேட்ட மாத்திரத்திலேயே அதைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் எழுந்தது. அவன் கற்பனையில் வெட்டுண்ட மீன்கள் எல்லாமே அணைக்கட்டில் நெடுநாள் வாழ்ந்து வளர்ந்து திரண்டு தடித்த கெண்டை மீன்கள். குட்டியாக இருக்கும்போது நீருக்கு மேல் துள்ளிக் குதித்து ராட்டிவம் சுற்றி விளையாடுமே... அவை. பக்கத்தில் பாணன்குளம் கால்வாய்தானிருந்தது. மழைச் செழிப்பிருந் தால் மணிமுத்தாறு தண்ணீர் திறந்து விடுவார்கள். அங்குதான் மீன் வெட்டி வேட்டையாடுவார்கள். போய்ப் பார்க்க வேண்டுமென்று ரொம்ப நாளாக நினைத்துக்கொண்டிருந்தான். இன்று அவன் கனவு பலித்து விட்டது. மீன் இல்லை, கால்வாய் இல்லை, ஒரு சொட்டு தண்ணீர் இல்லை. ஆனாலும் அந்த வேட்டையின் வீரக் கவர்ச்சியை, சூட்சும வீச்சை, மீனின் துடிப்பை, இறப்பின் வலியைக் கண்ணாரக் கண்டு உற்று உணர்ந்து அனுபவித்தான். வேட்டைக்காரி சாரா யாரும் கண்டு கொள்ள முடியாத இடத்தில் தன் வீச்சரிவாளை மறைத்து வைத்திருந்து, ஒரே வீச்சில் பாண்டியை ரெண்டு துண்டுகளாக்கி விட்டுப் போனாள். அவ னோடு அவனை ஒட்டிக்கொள்வதற்கு படாத பாடுபட்டான்.

நெஞ்சைக் கரித்தது. வாய்க் கசப்பும் ஏற்பட்டது. நரம்புகளை எல்லாம் உருவி நூல்கண்டு போலச் சுற்றி ஓரமாக வைத்துவிட்டது போல சக்தியிழந்து கைகால்கள் துவண்டு போயிருந்தன. இடது கையை எடுத்து நெற்றியையும் கழுத்தையும் தொட்டுப் பார்த்தான். கை பொறுக்காத சூடு. கதகதவென்றிருந்தது. மூச்சைவிட்டு எடுப்பதில் சிரமமிருந்தது. நல்ல டாக்டரிடம் சென்று காட்டினால்தான் பிழைத்தோம் என்பதாக நிலைமை முற்றிவிட்டது. பாட்டியிடமோ பெரியம்மாவிடமோ காய்ச் சல் கடுமையாகக் காய்கிறது எனத் தெரிவிக்கத் தயக்கமாக இருந்தது. அவர்கள் முற்றிலும் வேறு உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்தனர். அவர் கள் உலகில் விழாக்கள் விவாதங்கள் பலகாரங்கள் பக்கத்து வீட்டு கதை கள் என என்னவெல்லாமோ இருந்தன. இவன் உலகில் ஒரு குட்டி தேவதையையும் ஒரு குட்டிச் சாத்தானையும் தவிர யாருமில்லை. இருந்து எழுந்திரிப்பதே தடுமாற்றமாக ஆயாசப்படுத்தியது. இதற்கு முன் அமர்ந் ததே இல்லை, எழுந்ததே இல்லை என்பதுபோல ஆகத் திணறலாகியது.

எந்த சத்தியத்திற்கு கட்டுப்பட்டு இரக்கமில்லாத ஒரு புண்ணாக்குச் செக்கில் எண்ணெயாகிக் கொண்டிருக்கிறேன்? எதிர்பாராமல் அவனுக் குள் கேள்வி எழுந்தது. அது மேலும் அவனை பலவீனப்படுத்தி உடலை

நடுங்கவிட்டதைத் தவிர உருப்படியான ஒரு பதிலையும் கண்டடைய விடவில்லை. எதன் மீது அமர்ந்திருக்கிறோம் என்று அவனுக்கே தெரியவில்லை. அவனைச் சுற்றிலும் தோல் தடித்த இருள் சூழ்ந்திருந்தது. இருளுக்குள் நிழல்போல அமர்ந்திருந்தான். தூரத்தில் ஆலயத்தின் கோபுரம் பல வண்ண விளக்கொளியில் ஜொலித்தது. பெருந்தேர் போல் நின்றுகொண்டிருந்தது. அம்மாவின் ஞாபகம் வந்தது. அவன் நாடியைத் தாங்கி என்னாச்சு என்று அம்மா விசாரிப்பதுபோல் காற்று ஒருமுறை வீசியது. கண்கள் ஈரமாகி விட்டன. கண்ணீரின் சூடு எரிச்சல் தந்தது. இப்போதே ஊருக்குப் போய்விடலாமா என்றொரு எண்ணம் தோன்றியது. அவமானத்துக்கு அப்பால் போய்விடுவதுதான் அதன் முதல் நோக்கமாக இருந்தது.

புலம்புவதுபோல் சாராவின் பெயரை உரிமையில்லாமல் உச்சரித்தான். ஒலிக்கும் ஒவ்வொரு முறையும் ஒரு மர்ம வலி இதயத்தில் தெறித்தது. நெஞ்சு விம்மியது. கண்கள் சுடுநீரைக் கொப்புளித்தன. 'பெருந்தோள் குறுமகள் அல்லது மருந்து பிறிதில்லை யான் உற்ற நோய்க்கே.'

திரும்பத் திரும்ப அவள் பெயரை உச்சரித்துக் கொண்டிருந்தான். அது தீர்ந்து போவதாய் இல்லை. அது ஊற்று. அள்ள அள்ளப் பொங்கிக் கொண்டுதான் இருக்கும். தூர்ந்து போனால்தான் சுபிட்சம் என்பதை அவன் மனம் தெளிவுபடுத்தியது. ஆனாலும் அவனால் நிறுத்த முடியவில்லை. அவனது உதடுகள் முரட்டுக் குடிகாரனின் உதடுகளாகி விட்டிருந்தன. 'அணியிழை தன் நோய்க்குத் தானே மருந்து.'

கைகள் ஒன்றையொன்று பற்றிக்கொண்டு பிடிவாதமாக யாரையோ வணங்கிக்கொண்டிருந்தன. காய்ச்சல் அவனை வலது புறமாகச் சாய்த்து படுக்க வைத்து வறுத்து எடுத்தது. தன்னறிவற்ற வார்த்தைகளை முணு முணுத்தபடி தரையில் புரண்டு வட்டமடித்தான். சுருட்டி வயிற்றுக்கருகே மடக்கிய கால்களுக்கு நடுவே இரண்டு கைகளையும் திணித்து நுழைத்து வைத்திருந்தான். திங்கள் அன்ன திருமுக சாரா எங்கே? 'கடல் கொண்டதோ! புனல் ஒளித்ததோ!'

நீர்த்துளியாக உலர்ந்தொழிந்து போகாது தக்கையாகத் திரண்டு தங்கிவிடும் கசப்பான சம்பவங்கள்! கருக்கு வாளிழுத்து பற்கள் மழுங்கும் வரை அறுத்து துண்டங்களாக்கித் தள்ளும் உயிர் மீண்டும் மீண்டும் ஒட்டிக் கொள்வதுதான் துயரத்தை சிருஷ்டிக்கும் மாயமோ! 'துயர் பொறுக்கல்லேன் தோழி நோய்க்கே.'

சவக்குழிக்குள் உயிரோடு நிர்வாணமாகப் புதைத்த குழந்தையைப் போல் சாக்குளிர் உணர்ந்து உணர்வற்றான். சாரா மன்னிப்புக் கடிதத்தை விட குரூரமாக அவனைக் கசக்கிப் போட்டுவிட்டுப் போய்விட்டாள். வலி. 'புண்வாய் புலரா நெஞ்சத்து எஃகு எறிந்தாங்கு' - வலி.

நாடகம் முடிந்து பேச்சுக் குரல்களோடு ஜனங்கள் வீடு திரும்பிக்

கொண்டிருந்தார்கள். ஒளிந்து நின்று சாராவை ஒருமுறை பார்க்க வேண்டும் போலிருந்தது. வெட்கம், மானம், சூடு, சுரணை சுட்டது. கைகளை பெருக்கல் குறியிலாட்டி மனம் கதறியது. வெளிச்சத்துக்குள்ளும் இரைச்சலுக்குள்ளும் அவன் வந்தபோது 'அவள் ஒரு கிறுக்கி. அந்தக் கிறுக்கியை இன்று இரவு பார்க்காவிட்டால் நாளைக்கு விடியாமலா போய்விடும்? போனாலும் போகட்டுமே! அதனால் எனக்கென்ன நஷ்டம் வந்துவிடப் போகிறது' என்று நினைத்தான். அந்த நினைப்பில் உறுதியாக இருந்தான். 'கொலைவில் புருவத்து கொழுங்கடை மழைக்கண்.'

படுக்கப்போகும் முன் அறை விளக்கு சோர்வின்றி எரிந்து கொண்டிருந்தது. சாண நாற்றத்துடன் கசங்கி மடங்கிச் சிதைந்து போயிருந்த தனது மகத்தான மன்னிப்புக் கடிதத்தைப் பிரித்து வெளிச்சத்தில் படித்தான். தனது இரண்டு கைகளையும் கட்டையில் வைத்து தரித்தால் நலம் என்று பட்டது. ஒவ்வொரு வார்த்தைகளும் வெளுக்கும் கல்லாகி அவனைத் துவைத்துத் தொங்கவிட்டன.

'காட்டுப் பூவல்ல, சாரா... நீ காட்டுமிராண்டிப் பூ' தவறைத் திருத்தி சுவரைப் பார்த்துச் சொல்லிக்கொண்டான்.

'நாய்க்குட்டி போல் நக்கி...'

'ஆம், கால் நகங்களெல்லாம் பொற்கிண்ணிகள். உள்ளே பால் ததும்புகிறது. நக்கினால் தொலைந்தாய். அது கள்ளிப்பால்.'

'சரியோ தவறோ...'

'சரி, மிக மிகச் சரி.'

தன் உடலைத் தொட்டுப் பார்த்தான். பற்றாக்குறைக்கு இடமின்றி உஷ்ணம் ஏறிக்கொண்டிருந்தது.

'உண்மையோ பொய்யோ...'

'உண்மையிலும் உண்மை. இப்படியொரு மானங்கெட்ட மன்னிப்புக் கடிதம் எழுதிய ஆத்மாவுக்கு மோட்சத்தில் என்ன வேலை...'

'இப்பவோ பிறகோ...'

'இது மட்டும் பிறகு. நான் செத்துச் சுண்ணாம்பாகி, வெந்நீரில் கரைத்து என் கல்லறையில் வெள்ளை அடித்த பிறகு...'

'இப்படிக்கு,'

'நாய்க்குட்டி.'

'சாணத்தைத் தின்று சோற்றுப் புழுக்கையிடும் நாய்க்குட்டி.'

காகிதத்தை மடித்து சட்டைப் பைக்குள் வைத்தான். விளக்கை அணைத்தான். கட்டிலில் படுத்தான். கொதிக்கும் எண்ணெயில் போட்டு எடுத்த மீன்போல உடல் முறுகியிருந்தது.

காலையில் எழுந்ததும் ஜன்னியில் கொண்டுவிடும் குளிர்ந்த தண்ணீரில் குளிக்க வேண்டும் என மனசுக்குள் சத்தியப் பிரமாணம் ஏற்றான்.

ஒருவேளை காலை எழத் தேவையில்லாமலே போய்விட்டால்... அப்படி நினைத்ததுமே உற்சாகம் புலன்களெங்கும் புகுந்து தென்றலாக வருடிச் சென்றது. இரவில் காய்ச்சல் அதிகரித்து அபாயத்தையடைந்து உயிர் பிரிந்து இறந்து போய்விட்டால்... உள்ளுக்குள் சிறு பொறி தட்டி கண்ணாடிப் பாத்திரங்கள் மோதுவதுபோல் 'ஜிலீல்' என்றிருந்தது. சட்டைப் பையை ஆராயும்போது மன்னிப்புக் கடிதம் மற்றவர் கையில் மாட்டிக்கொண்டால், சாரா மீது பழி விழுந்து விடுமோ! பழி விழுந்தால் தான் என்ன? ஐயோ அவள் பாவம்! ஒரு காகிதத்தைச் சுருட்டி எறிந்ததைத் தவிர அவள் யாருக்கு என்ன அநியாயம் செய்துவிட்டாள்?

இவ்வுலகில் நீ இல்லையென்று ஆகப்போகிறாய். உன் உயிரை விடவா அவள் முக்கியம்? ஆம். என்னை விட அவள் எனக்கு முக்கிய மானவள். என் உயிருக்கு நேர்.

அவளுக்கு மன்னிக்கத் தெரியவில்லை. எனக்காவது தெரிய வேண்டும். எழுந்து விளக்கைப் போட்டு அதன் வெளிச்சத்தில் கசங்கிய காகிதத்தைக் கிழித்துத் தூளாக்கினான். கைகள் நடுங்க அதைச் செய்தான்.

## 12

பொழுது புது நாளுக்கான எல்லா வசீகரத்தோடும் புலர்ந்தது. பன்னீர் மரத்திலிருந்து புஷ்பங்களைப் போல் கணங்கள் உதிர்ந்து கொண்டிருந்தன. சூரியன் கிழக்கே இன்னும் முகம் உயர்த்தியிருக்க வில்லை. அதன் மூச்சுக்காற்றென முந்திக்கொண்டு வெளிச்சம் ரம்யமாக விரிந்திருந்தது. காலை ஐந்து மணிக்கு கோவிலில் வேதம் வாசிக்கப்பட்ட போதே பாண்டி விழித்துக்கொண்டான். இமைகளைத் திறக்காமலே பரிசேயர்களில் தலைவனாகிய ஒருவனுடைய வீட்டிலே இயேசு ருசித்துச் சாப்பிடுவதைப் பார்த்துக்கொண்டிருந்தான். அதற்குள் உடலெல்லாம் நீர் கோர்த்து வீங்கிப் போன ஒரு அருவருப்பான மனிதனை அவர் முன்னே கொண்டுவந்து நிறுத்திவிட்டார்கள். சுட்ட அப்பம், பொறித்த மீன்கள், முதல் தர திராட்சை ரசம் எல்லாவற்றையும் உதறிவிட்டு அவர் எழுந்து விட்டார். பின்பு காட்சி கலைந்து குரலாக மாறிவிட்டது.

முந்தைய நாளின் மன ஓட்டங்களின் ஏதொரு தொடர்ச்சித் தொந்தரவுகளும் இல்லாமல் மனம் பேரமைதியில் திளைத்தது. பறவை களின் கிச்சுக் குரல்கள் அலுப்பைக் கொத்தி சோம்பலைத் துரத்தின. தாழப் பறந்த கிளிகளின் சிறகடிப்பு தோல் வாத்தியத்திலிருந்து புறப்

படும் இசைத்தாளமாக ஒலித்தது. படுக்கையில் அப்படியே புரண்டு புரண்டு படுத்துக்கொண்டே இருக்க வேண்டும் போலவும் எழுந்து சென்று தெற்கு ஜன்னலைத் திறந்து இளங்காற்றும் மிதமான வெளிச்சமும் முகத்தில் பட நிற்க வேண்டும் போலவும் தோன்றியது. மயிர்க்கால்களில் புழுக்கத்தின் அரிப்பை உணர்ந்தான். உடலெங்கும் லேசான வியர்வைக் கசிவு, உடலை சிதறலின்றி உணர்ந்துகொள்ள ஏதுவாக இருந்தது.

மனசுக்குள் அநாதையாக அலையும் குரல்கள். பாவனை உரையாடல்கள். நுனியும் பிடியுமில்லாமல் முண்டம் துண்டமாகச் சுழலும் போர்வாள். கிழிவுகள் எதுவுமின்றி சேதாரமில்லாத சந்தோஷத்தில் அவன் நிரம்பியிருந்தான். இரவு தூக்கத்தில் கனவுகள் எதுவும் கண்டதாக ஞாபகமில்லை. பழைய கனவுகள் கூட நினைவுக்கு வர மறுத்தன. ஜுரம் தணிந்து உடல் குளிர்ந்தது. இரவில் உன்னை ஒரு பூதம் தூக்கிச் சென்று மூலிகை எண்ணெயைச் சூடு பறக்கத் தேய்த்து அருவியில் அலரக் குளிப்பாட்டி துவட்டித் துடைத்துக் கொண்டுவந்து படுக்க வைத்துவிட்டுப் போனது என்று யாரும் சொன்னால் நம்பக்கூட தயாராக இருந்தான். எல்லாம் அரைமணி நேரம்தான். சட்டைப் பைக்குள் கைவிட்டவன் வெறுமையைக் கண்டு திடுக்கிட்டான். படுக்கை விரிப்பைப் புரட்டித் தேடும் முன், அதைக் கிழித்து கடாசிவிட்டது நினைவுக்கு வந்தது. அதை முறையாகவா, இழப்பாகவா எப்படி எடுத்துக் கொள்வது என்பதில் ஆரம்பித்தது அவஸ்தை. கண்களை மூடி மீண்டும் உறங்கிப் போக யத்தனித்தான்.

அதற்குள் 'ஆதவன் எழும்முன் எழுவீர் நம் ஆண்டவர் தோன்றிவிட்டார்' என்று ஒலிபெருக்கிக் குழாய்கள் அலறத் தொடங்கிவிட்டன. காதுகளை இரண்டு கைகளாலும் அழுத்தமாகப் பொத்தினான். இரைச்சல் மட்டுப்பட்டது. இரண்டில் ஒன்றைத்தான் உருப்படியாகச் செய்ய முடிந்தது. ஒன்று கண்களை இறுக மூடிக்கொள்வது. அல்லது காதுகளை அடைத்துப் பொத்திக்கொள்வது. இரண்டையுமே சேர்த்துச் செய்யும் போது பக்கத்தில் ஏதோ அணுகுண்டு வெடிக்க இன்னும் இரண்டு நொடிகளே இருப்பதுபோல் இதயத்தின் படபடப்பு கூடியது. அவன் எண்ணங்கள் சாராவின் கால்களால் நடக்கத் தொடங்கின. அது எங்கே செல்கிறது... எந்தப் பாதையில் எதை நோக்கி... புரியவில்லை. நடந்து அலைந்து திரிந்து வெளிகள் தீர்ந்து இறுதியில் அப்பயணம் அவன் பாதத்திலே வந்துதான் முடியும் என்று ஓரளவு ஊகிக்க முடிந்ததும், உண்மை சலிப்பூட்டியது.

எட்டாம் திருநாள் காலை அதிவேகமாகப் பரபரப்படைந்தது. எழுந்து முகம் கழுவிவிட்டு வெளியில் போய்வந்து பல் துலக்கி குளிக்க ஆயத்தமானான். தொட்டித் தண்ணீருக்குள் கையை விட்டான். குளிர்ந்தது. பச்சைத் தண்ணீரில் குளிக்கப் பயமாக இருந்தது. குவளையில் நீரை அள்ளி மடமடவென்று தலையில் ஊற்றினான். பயம் கரையாமலிருந்தது. அதற்கு இணையாக அசட்டுத் துணிச்சலும் வந்தது. தண்ணீர் படுவதை

விட தண்ணீர் படாத இடைவெளியில் ஈர உடல் குளிரால் அதிகத் தாக்கமடைந்தது. சூடாக காப்பி வாங்கிக் குடித்தான். வாய்க்கருகே தம்ளர் நடுங்குவதை கவனித்தான். சூடான திரவம் தளர்ந்த நரம்புகளை இறுக்கி சிறு தெம்பூட்டியது. பசியும் இருந்தது.

நற்கருணை உட்கொள்பவர்கள் வெறும் வயிற்றோடு இருக்க வேண்டும் என்றொரு விசுவாச ஒழுங்கு கடைப்பிடிக்கப்பட்டது. இட்லி தோசையோடு கலந்து தேவனின் திருவுடலும் ஜீரணமாவதை திருமறைக் காவலர்கள் ஏற்கமாட்டார்கள். எனவே காலைத் திருப்பலி முடிந்துதான் தோசைக்கல்லை அடுப்பில் ஏற்றுவது வழக்கம். பெட்டியைத் திறந்து தேய்த்து மடித்து வைத்திருந்த கருப்பு பேண்ட், பிஸ்கட் கலர் முழுக்கை சர்ட் எடுத்து அணிந்தான். டக் இன் செய்து கொண்டான். சில சொட்டுக் கள் தேங்காய் எண்ணெய் விட்டு தலைமுடியை இடது வகிடு எடுத்துக் கச்சிதமாக வாரினான். முடியின் கருமை அவனைக் கவர்ந்தது. கொஞ்ச மாக வாசனை பவுடர் பூசிய பின் மிக அழகாக இருந்தான். மன சஞ்சல மற்ற இரவுத் தூக்கம் முகத்திற்குப் பொலிவு தந்திருந்தது. நிலைக் கண்ணாடியில் சாராவின் கண்களால் தன்னைப் பார்த்தான். அழகு, எடுப் பான தோற்றம் எல்லாம் மறைந்து நிலைக்கண்ணாடி பதிக்கப்பட்ட சவப் பெட்டிக்குள் அவனை வைத்துப் பூட்டியிருப்பதுபோல் உணர்ந்து துணுக் குற்றான். காலில் நெருப்பு சுட்டது. தெறித்து விலகினான்.

தெருவில் இறங்கி ஆலயத்தை நோக்கி நடந்தான். சீரும் சிறப்போடு ஊர் கூடி மேளதாளத்துடன் தாலிக்கு கழுத்தை நீட்டிய பெண் மறுநாள் காலையில் விதவையாகி நிற்பது போலிருந்தன தெருக்கள்; நேற்றைய இரவோடு ஒப்பிடுகையில். ஆலயம் நிரம்பி வழிந்தது. இடமில்லாமல் வளாக மணலில் ஜனங்கள் அமர்ந்திருந்தார்கள். கொடிமரச் சதுக்கத்துக் குப் பக்கத்தில் அவனுக்குக் கொஞ்சம் இடம் கிடைத்தது. முழங்காலிட்டு கை கூப்பி மெதுவாக கண் மூடினான். கண்மணிகள் மேலெழுந்தன. அவன் பிராத்தனைப் பாத்திரமோ வெறுமையாக இருந்தது.

கடவுளிடம் என்ன கேட்பது? மணி கேட்கலாம். நேரம் என்னாச்சு தேவனே... கோபித்துக் கொள்வாரோ! மாட்டார். ஏழு முறையல்ல எழுபது முறை மன்னிக்கச் சொன்னவர் மன்னித்து விடுவார். அல்லா மலும் அவர் என்ன அராஜகவாதியா? மனசுக்குள் சில வார்த்தைகள் மணிமணியாகத் திரண்டு வந்து விழுந்தன.

உன்னை உன்னிடம் கேட்பேன்
ஏழு முறையல்ல எழுபது முறையல்ல
எல்லா முறையிலும்
உன்னை உன்னிடம் கேட்பேன்
மண்டியிடுவேன் மன்றாடுவேன்
துளி நீரும் பருகாமல்

மறுகியுலர்வேன்
மரிக்கும் கணத்திலும்
உன்னை உன்னிடம் கேட்பேன்.
கடவுளிடம் கூட அல்ல.

உள்ளத்தின் அடியாழத்தில் பொறி மின்னல் தட்டியது. உயிர்மையத்திலிருந்து புறப்பட்டு உடல் விளிம்புகள் வரை ஒரு வியப்பு விரிந்தது. தன் மார்பில் சிறுகுழந்தை ஆதரவாய் சாய்ந்து உறங்குவதுபோல் பிரமையுண்டானது. கண்களைத் திறந்துகொண்டான். அக்கம்பக்கத்தில் அமர்ந்திருந்தவர்களை நிலம் விழுங்கிவிட்டதோ என சந்தேகத்தோடு பார்த்தான். எல்லாம் அப்படியே இருந்தது. அடுத்த கடிதத்துக்கான விஷயம் கிடைத்துவிட்டதாக நினைப்பு வந்தது. அக்கணமே அது அவமானமும் கசப்புமானது. ''ஒருவருக்கொருவர் சமாதானத்தை தெரிவித்துக் கொள்ளுங்கள்.'' பாதிரியின் குரல் கேட்டுக்கொண்டது.

''சமாதானம்... சமாதானம்.'' வலப்பக்கத்திலிருந்தும் இடப்பக்கத்திலிருந்தும் இருவர் அவனுக்கு சமாதானத்தை தெரிவித்தனர். தன் தலையைத் தாழ்த்தி பதிலுக்கு அவனும் அவர்களுக்கு அப்படிச் செய்தான். காணிக்கைப் பாடல் ஒலிக்கத் தொடங்கியது. அவன் உதடுகளும் அசைந்தன.

'எல்லாம் தருகிறேன். தந்தாய்
என்னையும் தருகிறேன்...'

இடது கையை நெஞ்சில் பதித்துக்கொண்டு காணிக்கைத் தட்டுடன் சிறுவர்கள் மக்கள் கூட்டத்துக்குள் நுழைந்து அலைந்தனர். நற்கருணை விருந்து வேளையில் ஆலயத்துக்குள் வரிசையில் நின்று சென்று வரலாம் எனத் திட்டமிட்டான். சாராவின் கண்கள் அவனைச் சந்தித்தால் என்ன கூறும் என்பதை ஊகித்தான். 'இன்னும் நீ உயிரோடுதான் இருக்கிறாயா' என்று கேட்கலாம். அதற்கான பதிலை தீவிரமாகத் தேடினான். திருப்பலி முடிந்த பிறகும்கூட பிரதியுத்திரம் கிடைக்கவில்லை.

மண்டபவாசலில் நெளுநெளுவென மக்கள் கூட்டம் வழிந்து கலைந்துகொண்டிருந்தது. பாண்டி கொடிமரச் சதுக்கத்தில் சாய்ந்து ஆலயத்தைப் பார்த்து நின்றிருந்தான். 'சென்று வாருங்கள். திருப்பலி முடிந்தது' என்ற அறிவிப்பு வந்ததுமே வேகமாக நடந்து வீட்டுக்குப் போக வேண்டும் போலிருந்தது. நல்லவேளையாக சரியான பழமொழி நினைவுக்கு வந்தது. 'எலிக்குப் பயந்து யாராவது வீட்டை கொளுத்துவார்களா?' கொளுத்துவார்களா? மாட்டார்கள். எனவே ஒரு திமிர் பிடித்த பெண்ணுக்குப் பயந்து அவன் தேவாலயத்தை விட்டு பின்னங்கால்கள் பிடரியிலடிக்க ஏன் ஓடவேண்டும்? மாட்டான். நெஞ்சை சற்று நிமிர்த்தி வைத்துக்கொண்டு நின்றான். அவன் வாழ்க்கையில் முன்னெப்போதும் இத்தனை மழுங்கிப் போன நிலை வரவேயில்லை.

சீலைகளுக்குள் புதிதாக நுழைந்திருந்த குமருகளைக் கூர்ந்து பார்த்தான். அதைத் தன்னுடைய மானசீக எதிரி காண வேண்டுமென்று ரொம்ப எதிர்பார்த்தான். புடவைக்குள் புதுக்குமருகள். விலை உயர்ந்த சேலைகள் அணிந்து நடந்தார்கள். அவர்களின் புதுப்புடவை நடை விசித்திரமாகவும் ரசிக்கும்படியாகவும் இருந்தது. கட்டுப்படுத்த ஆள் இல்லாமல் போகவே சிரித்தார்கள். கணக்குவழக்கின்றி நாணினார்கள். கல்யாணத்துக்காக இதுவரை சேமிக்கப்பட்ட நகைகள் எல்லாவற்றையும் அணிந்து வந்திருந்தார்கள். சுலபமாகப் பார்வையில் படும்படியான சூட்சுமங்களை மேற்கொண்டிருந்தார்கள். கல் பதித்த அட்டிகைகள் மார்மேட்டில் நெளிந்தன.

பாண்டி எல்லா இளம் பெண்களையும் கூச்சநாச்சமில்லாமல் ரசித்தான். அப்படியொரு கட்டாயம் அவனுக்கு உண்டாகியிருந்தது. மீசையில் இன்று புதுசாக சில ரோமங்கள் துளிர்த்திருக்கிறதோ என்னவோ! தொப்பியணிந்த முயல்குட்டி போலிருந்த குழந்தையை நெஞ்சோடு அணைத்துக் கொஞ்சிக் குலாவிய இளம் பெண் பாண்டியைப் பார்த்து இரண்டு முறை புன்னகைக்க முயற்சித்தாள். குழந்தையிடம் 'அங்கே பார் அங்கே பார்' என்று அவனுக்கு நேரே கை நீட்டி அவனுக்குப் பின்னாலிருந்த எதையோ காட்டினாள். போலியான அடக்கத்தோடு ஆண்களுக்கு வழிவிட்டாள். ஆரம்பம் பிரமாதமாகத்தான் இருந்தது. ஆனாலும் அதைப் பொருட்படுத்தவிடாமல் ஏதோ அவனைத் தடுத்தது. கண்களும் கவனமும் ஆலயத்திலிருந்து இறங்குபவர்கள் மீதே அடிக்கடி அலைந்து திரும்பியது.

அரட்டைக்கு நடுவே, நகக்கண்ணில் அடிபட்டதுபோல, அல்லது விரல்நுனியைத் தீ கடித்துவிட்டதுபோலக் கையை உதறி உதறிச் சிரித்த இளைஞி சிரிப்பின் முடிவில் 'கொஞ்சம் ஊதிவிடக் கூடாதா' என்று கெஞ்சலோடு பார்த்தாள். 'உனக்கு ஒல்லியான உடல். ஊதினால் காற்றில் பறந்து போய்விடுவாய்' என்று அவனால் சொல்ல முடியவில்லை, போதிய பயிற்சியின்மையால்.

மனசுக்குள் ஒரு சமிக்ஞை அங்கே பாரென்று வலியுறுத்திய வேளை பாண்டி தன் கண்களை ஆலயத்துள் திருப்பினான். உல்லிச் சருகுச் சேலைக்குள் கருப்பு ஜாக்கட்டுடன் சாரா! தன் காலணிகளை அணிந்து கொண்டு திரும்பினாள். எட்டுக் கொலைகளை ஒரே நேரத்தில் செய்துவிட்டு தன் நெற்றிப்பொட்டை அலட்சியமாகச் சரி செய்யும் கொலைகாரியைப் போல் பயங்கரம் தோன்ற நடந்து வந்தாள். சாராவும் புடவைதான் கட்டியிருக்கிறாள். ஆனாலும் சேலை அவளிடம்தான் பணிந்திருந்தது. மாராப்பு விலகலை கண்களால் பார்த்தே நேர் செய்து விடுவாள் போலிருந்தது. கூந்தலைக் கூட குட்டிப் பிரம்பால் ரெண்டு போடு போட்டு தன்னைத்தானே பின்னச் செய்தாளோ என்னவோ! சாராவின் கண்கள் பாண்டியின் கண்களை நோக்கின. அச்ச மிகுதியால் அவனது

கண்கள் நடுங்கித் தாழ்ந்தன. தேவாலயத்தின் திரைச்சீலை இரண்டாகக் கிழிந்தபோது வீசியது போல் பெருங்காற்று வீசியது. மர உச்சியில் மோட்டார் சைக்கிள் புறப்படுவது போன்ற சத்தத்தோடு படபடத்தது கொடி.

மண்ணும் புழுதியும் கூடிக்குமைந்தெழுந்தது. மணல் திரையின் ஊடாகப் பாண்டி சாராவைப் பார்த்தான். முகத்தைத் திருப்பி தலையைச் சாய்த்து இடுக்கி சிறுத்த விழிகளை கையால் மறைத்துக் காத்து இறுகிப் பிதுங்கிய உதடுகளில் உறைந்த குறுஞ் சிரிப்புடன் சூறைக்காற்றை எதிர் கொண்டிருந்தாள். நெளிந்து வளைந்த உடலும் கழுத்துச் சரிவும் முகமும் புதுப் பொலிவில் அவனை ஒரு புகைப்படக் கருவியைப்போல வேலை செய்ய வைத்தது. அவன் கண்கள் அவள் எழிலை கடிபடாமல் விழுங்கின. அவனை அவள் ஏறெடுக்கவில்லை. ஆனாலும் சாராவை அச்சுறுத்தவும் உலகில் ஒரு வல்லமை இருக்கிறது என்பதை நினைக்கும்போது கூடுதல் உற்சாகம் அவனைத் தொற்றிக்கொண்டது. தளர்ந்த பின்தான் தெரிந்தது, அவனுக்குள் ஒருவித இறுக்கமிருந்தது.

## 13

**ம**திய உணவை முடித்துக்கொண்டு வெயிலுக்கும் அவளுக்கும் பயந்து வராந்தாவில் நாற்காலியிட்டு அமர்ந்திருந்தபோது ஆலய வளாகத்தில் விளையாட்டுப் போட்டிகள் தொடங்கியிருந்தன. ரசிகப் பெருமக்கள் உடனடியாகத் திரண்டு வந்து வீரர் வீராங்கனைகளை கரகோஷமெழுப்பி உற்சாகப்படுத்த வேண்டுமென விளையாட்டுப் போட்டி வருணனையாளர் பாக்கு வெத்தலை வைக்காத குறையாக அழைத்த வண்ணமிருந்தார். பேபி கிளாஸ் குழந்தைகளுக்கு நரிவால் பறித்தல், ஒண்ணாம் கிளாஸ் மாணவ மாணவிகளுக்கு பலூன் ஊதி உடைத்தல், இரண்டாம் கிளாஸுக்கு துள்ளி முறுக்குக் கடித்தல், நாலாம் கிளாஸுக்கு மாவு ஊதி நாணயம் எடுத்தல், ஐந்தாம் கிளாஸுக்கு முயல் ஓட்டம், ஆறாம் கிளாஸுக்கு செங்கல் நடை, ஏழாம் கிளாஸுக்கு சாக்கு ஓட்டம், எட்டாம் கிளாஸுக்கு நூறு மீட்டர் ஓட்டம், இளைஞர்களுக்கு சைக்கிள் ஸ்லோ ரேஸ், சடுகுடு, இளம் பெண்களுக்கு ஊசியில் நூல் கோர்த்தல், செம்பு நடை, சிறியோர் முதல் பெரியோர் வரை பெண் களுக்கு இசை நாற்காலி, ஆண்களுக்கு வடம் இழுத்தல். போட்டியில் இடம் பெறும் விளையாட்டு அம்சங்களை அடிக்கடி பட்டியலிட்டு பிரஸ் தாபித்துக் கொண்டிருந்தார்.

இசை நாற்காலி என்ற பதம் ஈர்ப்புக் கொண்டதாக இருந்தது. அவன் அமர்ந்திருந்த நாற்காலியை அது வெறும் நாற்காலியாக்கிவிட்டது.

போட்டிகள் ஒவ்வொன்றாக முடிவுற்று அடுத்தது தொடங்கியது. எல்லாப் போட்டியிலும் இவனே தோற்றுக்கொண்டிருப்பதாக உணர்ந் தான். அவர்களில் சாராவைக் காணவில்லை, அதுதான் காரணம். ஆண் களும் பெண்களுமாக முன்னூறுக்கும் மேற்பட்டவர்கள் கோவில் வளாகத்துக்குள் கூடியிருந்தனர். இசைத்தட்டு நாற்காலி தொடங்கிய போது அவனுக்குத் தலை சுற்ற ஆரம்பித்தது. 'வீரமும் விவேகமும் சுறுசுறுப்பும்' நிறைந்த விளையாட்டு. இதைக் காணவுமா வரக்கூடாது? மனசுக்குள் சடைந்து கொண்டான்.

வட்டமாகப் போடப்பட்டிருந்த வெறும் நாற்காலிகளை பதினாறு பெண்கள் நடந்து வட்டமடித்தார்கள். ஆப்ரிக்கன் ட்ரம்பட் இசை ஒலித்துக் கொண்டிருந்தது, ''நடக்கக் கூடாது ஓடணும்... ஓடணும்.'' வருணனையாளர் திரும்பத் திரும்பக் கதறினார். வாளிப்பான பெண்கள் ஓடப் பயந்தார்கள். வளாகச் சுவர் மேல் அமர்ந்திருந்த வாலிபக்கண்கள் சிறைச்சாலை மதில் கோபுரத்து சுழல் விளக்குபோல் எரிந்துகொண்டிருந் தன. பேருந்து நிறுத்தத்தில் ஆள் இறங்குவதுபோல இசை நிறுத்தங்களில் எல்லாம் யாரேனும் ஒரு பெண் விளையாட்டிலிருந்து வெளியேற்றப் பட்டாள். இறுதியாக ஒரு நாற்காலிக்கு இரண்டு பெண்கள் வட்டமிட்ட போது, முதல் பரிசை அந்த நாற்காலிக்கே தரவேண்டும் என்று நினைத் தான். கூடவே ஒரு பட்டமும். 'அதிகப் பெண் பிருஷ்டங்களை தாங்கிய அதிர்ஷ்ட நாற்காலி.'

கூட்டத்தை விலக்கிக்கொண்டு ஆரவாரத்தை விட்டு வெளியேறி, தெற்குத் தெரு வழியே கிழக்கு நோக்கி நடந்தான். வெயில் தணிந்து காய்ந்தது. புது வர்ணம் பூசி பளிச்சென்றிருந்த விதவிதமான காரை வீடு களைப் பார்த்தவாறே தாள்ரோஜா பந்தலுக்கருகே வந்ததும் சுதாரித்தான். மனத்தின் பள்ளத்தாக்கு 'வா வா' என்றது. இன்னும் இரண்டு வீடுகள் தான். நாக்கைத் துருத்தி மடக்கி வாயில் கடித்து குங்கும நிறக் கண்களுடன் கையில் தோசைக் கரண்டியை ஓங்கிப் பிடித்த காளி சித்திரமாய் ஒரு பிம்பம் மனத்தில் விரிந்து மறைந்தது.

லீலா டீச்சர் வீடு தன் எல்லாக் கதவுகளையும் திறந்து வைத்திருந்தது. தனக்கு வாய்த்திருந்த தைரியம் மொத்தத்தையும் வரவழைத்துக் கொண்டு, பார்வையை வீட்டுக்குள் செலுத்தி ஆராய்ந்தான். மின்விசிறி சுழன்ற முன்னறையில் நடுவறையின் வாசலையொட்டி மாவாட்டும் கிரைண்டர் கல்லுக்கும் பக்கத்தில், பிளாஸ்டிக் வயர் கட்டிலின் மேற்கே தலை வைத்து, ஒரு பெண்ணுருவம் குப்புறப் படுத்து முகத்தை தெருவைப் பார்த்து திருப்பி வைத்திருந்தது. தலையணையில் புதைந்த பாதி முகத்தில் விழி மூடியிருந்தது. உதடுகள் லேசாக திறந்திருந்தன. கணுக்கால் வரை உடை விலகியிருந்ததால் குதிகால்கள் இரண்டும் குமிழ்போல் எடுப் பாகத் தெரிந்தன.

அடுத்தடுத்த வீடுகளைக் கடந்து பஞ்சாயத்து கட்டிடத்தை அடைந்த போது அது சாராதான் என்று திட்டவட்டமாக மனம் ஊர்ஜிதம் செய்தது. மோட்டுவளையில் செருகியிருந்த நாளிதழை எடுத்துப் பிரித்தான். பல கை பட்டு அது பரிதாபமாகக் கசங்கியும் நுனிகள் மடங்கிக் கிழிந்தும் போயிருந்தது. செய்திகளை அச்சடித்ததை விட வேகமாகப் படித்து முடித்து மடித்து விட்டத்தில் செருகிவிட்டு, பாண்ட் டீசர்ட்டைத் திருத்திக்கொண்டு வந்த வழியே நடந்தான். கை அனிச்சையாய் தலைமுடியைக் கோதி நேர் செய்தது.

வரைந்து போடப்பட்டவள் போல் சாரா அங்கே அப்படியே இம்மியும் அசங்காமல் படுத்திருந்தாள். கழுத்தருகே புடைத்துக் கொண்டிருந்த காரை எலும்பு லேசாக ஏறித் தாழ்ந்தது. முகத்தில் குழந்தைக் களை. பத்துக்கும் மேற்பட்ட இளைஞர்கள் சைக்கிளில் ஏறி அவனைப் பிடிக்க வருவதுபோல் வேகமாக அவனை நோக்கி வந்தார்கள். ஒருகணம் கலவரமடைந்தான். ''அடுத்ததாக ஆண்களுக்கான ஸ்லோ சைக்கிள் ரேஸ் இப்போது துவங்க இருக்கிறது. கலந்துகொள்ள விருப்ப முள்ளவர்கள் கலந்துகொண்டு தங்கள் திறமையை ரசிகர்கள் முன்னே நிரூபித்து முதல் பரிசைத் தட்டிச் செல்லலாம். மூன்று பரிசுகளைக் கொண்டது இந்தப் போட்டி.'' வருணணையாளர் விளக்கமளித்த பிறகு இயல்புக்குத் திரும்பி ஓரமாக நின்று ரேஸ் பார்த்தான். விசில் சத்தம் கிளம்பியது. வீரர்கள் சைக்கிளில் நொண்டியடித்தார்கள்.

பாண்டியின் கண்ணுக்குள் சாரா படுத்திருந்தாள். அயர்ந்த நித்திரை யிலிருந்தாள். அவளை எப்படி எழுப்புவது என்றே தெரியவில்லை. காரணமே இல்லாமல் அவன் மனம் பாரமானது. தரையில் விழுந்து தடு மாறும் பாதரசத் துளிகளென அவன் எண்ணங்கள் சீரற்று விரிந்தோடின. கூட்டத்தின் கேளிக்கை ஆரவாரத்தினூடேயும் அவனுக்குள் ஒருவித அமைதி ஏற்பட்டுவிட்டது. யாருடையது, எங்கிருந்து எழுகிறதுபோன்ற கேள்விகளுக்குப் பதிலே இல்லாத ஒரு விநோதக் குரல் அவனுக்குள் நடமாடத் தோதான அமைதி அது.

சாரா இன்னும் உறங்கிக்கொண்டிருக்கிறாள். பாண்டி அவளண்டை சென்று மண்டியிட்டு நிற்கிறான். கட்டில் சட்டத்தில் முழங்கைகளை ஊன்றி குறுக்காக மடித்து அவள் முகத்துக்கருகே தன் முகத்தைக் கொண்டு செல்கிறான். வெதுவெதுப்பான மூச்சுக்காற்று கேள்விகளால் விட்டு விட்டு மோதிக் கலைகிறது. பணிவான குரலில் விசாரணைக் கடித மொன்றை எழுத ஆரம்பிக்கிறான். அவன் உதடுகள் அளவோடு அசைகின் றன. தேவையான வேளைகளில் அசைவற்றுப் பொறுத்திருக்கின்றன.

'சாரா... நீ யாரென்று நான் கேட்கலாமா? எப்படிப்பட்ட பெண் ணென்று அறிந்து கொள்ளலாமா? குழந்தை போல் உறங்குகிறாயே, பார்வையிலே இரும்பை பழுக்க வைத்து இழுக்கும் சாரா எங்கே? கோபத்தில் சூட்டுக்கோலால் கண்களை நோண்டிப் பிடுங்கும் சாரா

எங்கே? என் நாவிலிருந்து அப்பத்தை தட்டிவிட்டுவிட்டு சிற்பம்போல் நின்ற சாரா எங்கே? என் குரல் உனக்கு கேட்கிறதா சாரா? நீ கனவு காண்கிறாயோ? உன் கனவுக்குள் நான் என்ன செய்து கொண்டிருக்கிறேன்? கண்ணோடு கண் கலந்து காந்தத் திடலிலேறி கைகளிரண்டையும் அகல விரித்து காதலை இசைத்து பாடிக் கொண்டிருக்கிறேனோ? இந்தக் குரல் அந்த உலகத்துக்குள் எதிரொலிக்கிறதா? உன் கழுத்தில் சாய்ந்து படுத் திருக்கும் காது வளையத்தை நான் எடுத்துக் கொள்ளட்டுமா? விழித்துக் கொள்ளாமல் இருப்பாயா? உன்னைப் புரிந்துகொள்ள முடியாதது என் இயலாமையா? என்னை பிடிக்கவில்லையா? என் மனம் என்னைத் துரத்தி யடித்துவிட்டு உன்னைப் பின்தொடர்வதும் உன் நிழலைச் சுற்றி வருவதும் வேதனையின் தாங்க முடியாத தருணங்களாக வலிக்கிறது சாரா. இன்னும் இரண்டொரு தினங்களில் உன்னைப் பிரிந்து செல்லப் போகிறேன். உன் நினைவாக என்னிடம் ஏதுமில்லை. என்னைத் தவிர உன் நினைவாக என்னிடம் ஒன்றுமில்லை.'

சாரா கண்களை மெல்லத் திறந்து பார்த்தாள். பழைய கனவுகள் கலைந்து நிழல்களாக நகர்ந்து மறைந்தன. ஒருமுறை சாவகாசமாக இமைத்தாள். புதுக் கனவுக்கான அழைப்போ அது? முழு இரவு புரண்டு அதிகாலையில் விழுந்தது. முதுகுத்தண்டின் கண்ணிகளில் பனியுருகி நீராகி உடலெங்கும் பரவியது.

தன் இடது கையை எடுத்து அவன் தோள் மேல் போட்டு கழுத்தை வளைத்துத் தன் முகத்தோடு இழுத்துச் சாய்த்தபடி 'நீயும் உறங்கு' என்பதுபோல் கண்களை மூடிக்கொண்டாள். ஆனந்தத்தில் உடலதிர்ந்து கண்கள் சுரந்தன.

பலத்த கரகோஷத்துக்கு நடுவில் ரகசியமாக கண்களைத் துடைத்துக் கொண்டான், புழுதி பட்டதைப்போல.

☆☆

சமீபத்தில் எழுதிக் குவித்திருந்த காகிதக் கற்றையைப் பிரித்து ஒவ்வொன்றாய் வாசித்துப் பார்த்தான். கவிதை என்று மேலோட்டமாக அவற்றுக்குப் பெயர் சூட்டியிருந்தாலும், மறு வாசிப்பில் அவற்றைக் காதல் கடிதங்களாகவும், கருணை மனுக்களாகவும், வாய் பிளந்த துன்பச் சிப்பிகளாகவும் உணர்ந்தான். பகல்கனவுகளின் பரிதாபப் பிரதிகளாகக் கையில் கனமேறிக் கொண்டிருந்த காகிதக் கற்றையை என்ன செய்யலாம் என்று யோசித்தான். கிழித்தெறிவது, தீயிட்டுக் கொளுத்துவது, கடலில் வீசி எறிவது இதில் எது சிறந்தது என தன்னையே விரக்தியோடு கேட்டான்.

அவனும் கடலும் மட்டுமே அங்கிருந்தனர். கரை வெறிச் சென்றிருந்தது. மன அமைதிக்குத் தேவையான தனிமையை விட

பெருந்தனிமை அங்கே விரிந்து கிடந்தது. மணல் கெட்டித்த நூரத்துத் திடலில் வரிவரியாகத் தளிர்த்திருந்த சொற்பப் புற்களை முன்னங்கால்கள் மடித்து மண்டியிட்டு ஒரு வெள்ளாட்டுக் குட்டி மேய்ந்து கொண்டிருந் தது. வானம் சூரியனை ஒரே இறக்கி விட்டுவிட்டிருந்தது. அந்தி பொறுமையாகக் கவிந்து வந்தது. சின்னக் குழந்தை சுட்ட கோதுமை தோசை போல் நிலா கீழ்வானில் கடல் மேல் கிடந்தது.

காலையில் தொடங்கி மேய்ச்சலில் அலைந்து மாலையான பின்னும் வயிறு நிறையாமல் மண்டியிட்டு நிற்கும் ஆட்டுக்குட்டியை பார்க்க பாவமாக இருந்தது. தலையைத் திருப்பி கடலைப் பார்த்தான். ம்... இதுக் கென்ன கவலை! காகிதக் கற்றையைப் பக்கவாட்டில் வைத்து காற்றில் பறந்து விடாதிருக்க ஒரு பிடி மணலை அள்ளி அதன் மீது குவித்துவிட்டு இரண்டு கைகளையும் மடித்துத் தலைக்கடியில் வைத்தபடி மல்லாந்து படுத்து கண்களை மூடினான்.

பெரியம்மா வீட்டு விருந்தை பாதிலேயே முடித்துவிட்டு ஊருக்குத் திரும்பி விடலாமா என்றொரு யோசனை தோன்றியது. புறமுதுகிட்டு ஓடுவதற்கு ஒப்பானதுதான் எனினும் எண்ணிய மாத்திரத்தில் அந்த எண்ணம், கசப்பும் புளிப்பும் இனிப்பும் கலந்த பானத்தைப் பருகியது போன்ற ருசியுடன் இருந்தது. திருவிழா கொடி ஏற்றியபின், கொடி இறக்கப்படும் வரை யாரும் ஊரை விட்டுப் போகக்கூடாது என்றொரு மரபார்ந்த கட்டுப்பாடு உண்டு என்பதை பாண்டி நன்கறிந்திருந்தாலும், இந்த திடீர் துண்டிப்பின் மூலம் சாராவின் அகங்காரத்தை குறைந்தபட்சம் பழி தீர்த்துக் கொள்ளலாம் என எண்ணினான். மனம் விதவிதமான இறுதிக் காட்சிகளை சித்தரித்து கள்ளமகிழ்ச்சியடைந்தது. இப்போது கடலின் அலைக்குரல் ''வேண்டாம் வேண்டாம்'' என கெஞ்சிக் கதறும் ஒரு பெண்ணின் ஓலமாக மாறியிருந்தது. அவனைக் காணாமல் பதற்ற முறும் சாரா வீடு வீடாக வீதி வீதியாகத் தேடியலையும் காட்சியைக் கண்ட தருணம் ஒரு அசட்டு பெருமிதத்துடன் நெஞ்சு விம்மித் தணிந்தது. கற்பனையின் உசபட்ச தீவீரம், கற்பனை செய்த விஷயங்கள் சம்பவித்து விட்டது போன்றதொரு தாக்கத்தை மனத்திலும் உடலிலும் ஏற்படுத் தியது. பெரியம்மா பெரியப்பா சொல்லை மதிக்காமல், பாட்டியை தனியே விட்டுவிட்டு, சாராவுக்கு ஒரு துன்ப அதிர்ச்சியை ஏற்படுத்த விரும்பிய எண்ணம் அவனுக்கு சங்கடத்தை தந்தது. கற்பனைதான் என் றாலும் அவனால் தடுக்க முடியாத அளவுக்கு கவலையும் சோர்வும் ஏற் பட்டது. சாறு பிழிந்து போட்ட சக்கையாக சற்று நேரம் அப்படியே படுத் திருந்தவன் எழுந்து அமர்ந்தபோது எதிரே நின்றுகொண்டிருந்தது ஒரு அதிர்ச்சி இரண்டு வேடங்களில்.

திடீரென்று நிலத்திலிருந்து முளைத்தவர்கள் போல் இரண்டு பெண்கள் அலைகளில் கால் நனைத்தபடி கடல் பார்த்து நின்றிருந்தனர். சாராவுடன் முன்பு கண்ட முதிய வெளிநாட்டு கன்னியாஸ்திரி! முதுகுப்

புறத் தோற்றத்தைப் பார்த்தே அடையாளம் கண்டுகொண்டான். சாராதான். டீச்சர் வீட்டுக்கு வரும் கன்னியாஸ்திரிகளுக்கு ஊர் சுற்றிக் காட்டுவதே இவள் வேலை போலும். சுற்றும்முற்றும் பார்த்தான். அவனையும் அவர்களையும் தவிர குரலெட்டும் தொலைவில் மனிதர்கள் யாருமில்லை. அவர்கள் கண்ணில் படாமல் அங்கிருந்து வேகமாக மறைந்துவிட வேண்டும் போலிருந்தது. சாரா பேசினாள், கன்னியா ஸ்திரி தலையை விதவிதமாக அசைத்து கவனமாகக் கேட்டாள். ஒரு கையை இடுப்பில் ஊன்றியபடி நின்றிருந்தாள் சாரா. அவளது வளைந்த இடையைக் காணும் போதெல்லாம் மெலிந்தான். தாவணி விளிம்பு காற்றில் படபடத்தது. தலையை லேசாக சாய்த்து வைத்திருந்தாள். முகத் தில் கன்னம் மட்டும் ஒரு மொட்டு மாதிரி தெரிந்தது. இடுப்பில் ஊன்றிய கைக்கும் சற்றே உள் வளைந்து நெளிந்த இடைக்கும் நடுவில் தெரிந்த கடலில் நுரைத்த அலைகள் அவள் இடுப்பிலிருந்து ஊர்ந்தேறி தோளில் சாய்ந்து மறைந்தன. அவன் கண்கள் காட்சியில் லயித்திருந்தாலும் கால்கள் பரபரப்படைந்து எழுந்து வேகமாக நடக்கத் தொடங்கின. பாதங்கள் புதையும் மணலில் வேகமாக நடப்பதை பரிதாபமானதாக உணர்ந்தான்.

பாதி தொலைவு வந்த பிறகுதான் பிடரியில் யாரோ தட்டினார்கள். திரும்பிப் பார்த்தான். கவிதை. அவற்றை கையோடு எடுத்து வர மறந்து விட்டான். தன்னையே கடிந்தபடி இன்னும் வேகமாக நடந்தான். கடல் தெருவை அடைந்ததும் காட்டாற்றை குறுக்காக நீந்திக் கடந்து கரையேறி யது போன்றதொரு நிம்மதி. கடற்கரையிலிருந்து பார்த்தால் அவர்கள் கண்களில் படாத வசமாக மறைவில் நின்றான். அங்கிருந்து பார்க்கையில் தெற்குத் தெருவில் ஜன நடமாட்டம் தெரிந்தது. தக்காளிப் பழம் போலி ருக்கும் வெளிநாட்டு கன்னியாஸ்திரி வந்திருந்த சிவப்புச் சிலுவை வரைந்த வெள்ளை நிற வேன் தெருவோரமாக நின்றிருந்தது. அவர்கள் இந்த வழியில்தான் திரும்புவார்கள் என்பதை சுலபமாக ஊகிக்க முடிந்தது. வீட்டுக்குப் போய்விட்டு திரும்புவது சரியாக இருக்காது. எப்படியும் ஒரு காப்பி குடிக்க வேண்டியிருக்கும். இன்னும் சற்று நேரத்தில் சுத்தமாக இருட்டிவிடும் போலிருந்தது. கடலும் வானமும் தொடும் கோடு இப்போதே கணிசமாகக் கருத்து விட்டிருந்தது.

அவர்கள் திரும்பிப் போகும்வரை இங்கேயே எங்காவது ஒளிந்து நிற்கலாம் என்ற முடிவுக்கு வந்தான். முதலும் கடைசியுமான தேர்வாக ஆலமரம். மரத்தைச் சுற்றி மண்டிக் கிடந்த புதர்களும் சருகுகளும் இப்போது அச்சுறுத்தவில்லை. காலில் செருப்பணிந்திருந்ததை கூடுதல் பாதுகாப்பாக உணர்ந்தான். ஒவ்வொரு அடியாக எடுத்துவைத்து மரத்தை அடைந்தபோது கிளைகளில் பறவைகளின் சலசலப்பு கேட்டது. மரத்துக்குப் பின்னே உடலை முற்றிலும் மறைத்தபடி தலையை மட்டும் லேசாக நீட்டி கடற்கரையை நோட்டமிட்டான். இருவரும் பேசியபடியே

சாவகாசமாக ஊரை நோக்கி நடந்து வந்துகொண்டிருந்தார்கள். தலையை உள்ளே இழுத்துக்கொண்டான் பாண்டி. மீண்டும் தலை நீட்டியபோது அவர்கள் கடல் தெருவின் வெளிமுனையில் வந்துகொண்டிருந்தனர். அவர்கள் இருவரின் கவனமும் ஆர்வமும் சிதறாமல் அவர்களுக்குள் ளேயே இருந்தது. சாராவை மட்டும் அவன் கண்கள் பார்வையால் தழுவியபோது இதயம் இன்னொரு முறை ஊசியால் குத்தப்பட்டது. அவளது வலது கை காகிதக் கற்றையைச் சுருட்டிப் பிடித்திருந்தது. கிழிப்பதா எரிப்பதா என்ற விவாதங்களைத் தாண்டி கவிதைகளின் இறுதிச் சடங்கை சாரா இனிதே நிறைவேற்றி விடுவாள் என அவனால் சமாதானம் கொள்ள முடியவில்லை. தவிப்பு ஏற்பட்டது. சற்று தூரம் கடந்தபின் தற்செயலாகத் திரும்பும் பாவனையில் ஆலமரத்தைப் பார்த் தாள். இவ்வளவு நேரமும் தன் இருப்பு அவள் கவனத்தில் இருந்திருக் கிறது என்று உணர்ந்தபோது புதர்களெங்கும் பாம்புகள் விழித்துக் கொண்டன.

> ஒளிரும் சமுத்திரச் சிற்பம் நீ. உன்மீது கவியும் எண்ணங்களெல்லாம் சுவாசக் காற்றின் இரக்கமற்ற புறக்கணிப்பில் பறக்கும் கானல் தோணிகள். பளிங்குவெளி மீது பதி வைத்துப் பாயும் விழிக்கதிரோ பச்சை உமிழும் பசும் புதிரின் வாசலில் குழையும் நாய் வால்.

# 14

ஆலயம் எட்டாம் திருவிழாவுக்கான ஒளியலங்காரமேற்றிருந்தது. நெடிது வளர்ந்த கோபுரத்தில் சரவிளக்குகள் சாரைசாரையாக வழிந்து மின்னின. மண்டபத்தின் களையே மாறிவிட்டிருந்தது. வழிபாட்டுத் தலம் என்ற எண்ணத்தை புரட்டிப் போட்டு கொண்டாட்ட மாளிகை யாகக் காட்சியளித்தது. தெரு நெடுக மரக்கம்புகள் நட்டு குழல் விளக்குகள் நெருக்கமாகக் கட்டப்பட்டிருந்தன. பால் கொட்டுவதுபோல் பரந்து ஒளிர்ந்தது வன்வெளிச்சம். ரேடியோ குழாய்கள் கிடைத்த இடத்தி லெல்லாம் கட்டப்பட்டு, பாட்டுச் சத்தம் காது செவிடாகும்படி எழும்பி யொலித்தது. மேளதாள வாத்தியக்காரர்கள் இருள் அடரும் முன்னே வந்து ஒலிபெருக்கி வைத்து ஒரு சுற்று வாசித்து ரத்தத்தில் புது உற்சாகத்தைக் கலந்துவிட்டனர். அனைவர் முகத்திலும் அசல் சந்தோஷம் துளிர்த் திருந்தது. குழந்தைகள் எதற்கெடுத்தாலும் ஓடினார்கள். கொல்லைக்கி இருக்கக்கூட ஓடிப் போய்விட்டு ஓடிவந்தார்கள். பெண்கள் ஆனந்தத்தில் களைத்துப் போயிருந்தார்கள். அதிக வெளிச்சத்தில் வெட்கமும் சிரிப்பும் கலந்த அவர்கள் முகங்கள் காணக்காண அழகாயிருந்தன. கதவுகளை உட்புறமாகத் தாளிட்டு, கூடத்துக்குள் விளக்கெரித்து தேரும் சப்பரங் களும் பவனிக்காக மணப்பெண்ணைப் போல ரகஸியமாக ஜோடிக்கப்

பட்டன. காற்றில் ஆங்காங்கே சாராய நெடி கலந்து வீசியது. இளைஞர் கள், ஆண்கள் மயக்கும் புத்தாடைகள் அணிந்து சைக்கிளில், பைக்குகளில் அநாவசியமாக வட்டமடித்தலைந்தார்கள். இளம் குமரிகள் இரவென் றும் பாராமல் வீட்டுக்கு நீர் சுமந்தார்கள். அவர்களின் உற்சாகமான பேச்சில் கிணற்றிலும் தெருவிலும் வார்த்தைகள் சிதறிக்கிடந்தன. அகலமான திண்ணைகளில் இடம் பிடித்து பண்டாரங்கள் பூக்கட்டிக் கொண்டிருந்தார்கள். விரல்கள் ஓய்வின்றிச் சுழன்றன. பிச்சி, மல்லிகை வாசம் ஊரையே தூக்கியது. நாடகம் நடிக்கும் மேடை மசிநில நிறத்தில் புதுத் திரையணிந்து கொண்டது. மாலை ஆராதனை முடிந்து அரை மணி நேரம் கழித்து ஆசிரியர்களும் மாணவர்களும் கலந்து கலக்கும் 'வாழ்க்கைப் பாதை' நாடகம் நடைபெறவிருந்தது.

வாணவேடிக்கைகளின் வெடிச்சத்தத்தில் குலை நடுங்கிப் போன தெரு நாய்கள் ஒரே நாளில் ஊர் இப்படி தலைகீழாக மாறிச் சீரழிந்து விட்டதே என்ற மன வேதனையைத் தாங்கியபடி பதுங்கியடங்கிக் கிடந்தன. அவற்றைவிட பாண்டி அதிக வியாகுலமடைந்தான். அன்று சாரா ஆராதனைக்கும் வரவில்லை. வாழ்க்கை பாதைக்கும் வரவில்லை.

★★

வடக்குத் தெரு அந்த இடத்தில் மட்டும் கர்ப்பிணிப் பெண்ணின் வயிறு போல சற்றே புடைத்து விரிந்திருக்கும். கிழக்கிலிருந்து வலப் புறமாக கைவிடப்பட்ட ஒரு காரை வீடு புழக்கமின்றிப் பூட்டிக் கிடந்தது. அதன் முற்றத்தில் பூவரசு தெரு வரை படர்ந்து நின்றது. நிழல் வட்டமாக கெட்டியாக இருக்கும். பாண்டி தற்செயலாக வாசலுக்கு வந்தபோது அந்த மரத்தடியில் கூட்டம் கூடியிருந்தது- ஆண்களும் பெண்களுமாக அரை வட்டமாக. ''ஒரு எட்டு போயி அது என்னனன்னு பாத்துட்டு வாயேன்யா'' என்றாள் பெரியம்மா. அவளுக்கு சோம்பல். வெயிலைக் கண்டால் அலுப்பு. ''வளையல்காரன் எவனாவது வந்திருப்பான்'' என்றார் பெரியப்பா. ''வளையல் கடையில ஆம்பளைகளுக்கு என்ன சோலி'' என்றாள் பெரியம்மா. பாண்டிக்கு அதில் எந்த ஆர்வமும் இல்லை. ஆனால் பூவரசு மரத்திலிருந்து ஏழு எட்டு வீடுகள் தள்ளி லீலா டீச்சர் மகள் போலவும் அவளருகே சாரா போலவும் இரண்டு பெண்கள் வாசலில் நின்று மேற்கே பார்த்துக்கொண்டிருந்தார்கள். அது அவர்கள் தானா என ஊர்ஜிதப்படுத்திக் கொள்ள நினைத்தான். பூவரச மரத்தை நோக்கி அவன் நடந்தான். அந்தப் பெண்களும் அதை நோக்கி வரத் தொடங்கினார்கள்.

குழுமி நின்றிருந்தவர்களிடம் ஒருவித தவிப்பு போன்ற பரபரப்பு தொற்றியிருந்தது. பாண்டி அருகில் சென்று எதிரில் பார்த்தபோது காரணம் தெரிந்தது. கசங்கிய பேண்ட் சட்டை அணிந்து தலைமுடி பழுப்

பேறிப் பரட்டையாகி, தோல் வெளுத்து வயதை ஊகிப்பதில் குழப்பத்தை உண்டுபண்ணுகிற தோற்றமுடைய ஒருவன் தலையிலடித்துப் புலம்பிக் கண்ணீர் வடித்துக்கொண்டிருந்தான். உடைந்த குரலில் எதையோ முறையிட்டான். அவனருகே இருந்த அடுத்தவன் அழத்தெரியாமல் அதற்கான தேவையிருந்தும் முடியாமல், அழுபவனையும் கூட்டத்தையும் மாறிமாறி பரிதாபமாகப் பார்த்துக் கொண்டிருந்தான். இருவருமே வடஇந்தியர்கள். அழுக்கான மஞ்சள் நிறத்திலிருந்தார்கள். வெயில் தாங்க முடியாமல் அவர்களின் கன்னமேட்டில் நிழல் போல கருமை படர்ந்திருந்தது. அழுது கொண்டிருந்தவன் அடிக்கடி விம்மினான். உடல் மொத்தமும் குலுங்கியது. அவன் குதிகால்களில் அமர்ந்திருந்தான். அருகிலிருந்தவன் அரைச் சம்மணமிட்டு இடது காலை மடித்து எழுப்பி கையால் அணைத்துக் கட்டிப் பிடித்திருந்தான். தேசாந்தரிகள் போல் காட்சியளித்தனர். சோளாப்பூர் போர்வையில் தைக்கப்பட்ட இரண்டு துணிப்பைகள் புடைப்புடன் கிடந்தன. அவர்கள் முன் அரைச் செம்பு குடிநீரும் புறத்தில் பச்சையேறிய இரண்டு வெண்கலக் கிண்ணங்களும் ஓரமாக நீண்டு வாய் ஒடுங்கிய ஒரு கண்ணாடி பாட்டிலுமிருந்தன.

லீலா டீச்சர் மகளைப் போலவும் சாரா போலவும் தூரத்தில் தென்பட்ட பெண்கள் அவர்களாகவே ஆகி வந்தார்கள். கூட்டத்தில் வந்து கலந்துவிட்டார்கள். அங்கிருந்து இங்குவரை சாரா பாண்டியை கண்ணோடு கண் கலக்கவேயில்லை. அது எவ்வளவு நல்லதோ அவ்வளவு பொல்லாததாகவுமிருந்தது. அதுவரை வெளியில் அடித்துக் கொண்டிருந்த நண்பகல் வெயில் இப்போது அவனுக்குள் மட்டும் தகிக்கத்தொடங்கியது.

அழுதவன் ஹிந்தி போன்றதொரு மொழியில் பேசினான். கூட்டத்தில் நின்றிருந்த யாருக்குமே அவன் சொல்ல விழைவது என்னவென்று புரியவில்லை. புலம்புகிறான், முறையிடுகிறான், கெஞ்சுகிறான் என்பதை மட்டும் எல்லோருமே உணர்ந்தனர். பாண்டிக்கு மும்பையில் கொஞ்ச நாள் தங்கியிருந்ததின் பலனாக சில வார்த்தைகள் பிடிபட்டன.

பாண்டியின் கவனம் முழுவதும் மறைமுகமாக சாரா மீதே குவிந்திருந்தது. அழுபவனைக் கண்டதும் சாரா சட்டென்று வாடிப் போய் விட்டாள். அவள் உடல் பொருள் ஆவி அனைத்தும் அவள் கண்களில் ஒருமித்து விட்டது. சங்கடத்தில் அசைந்த அவள் உதடுகள் துக்கத்தில் நெளிந்து நிலைத்து விட்டன. பக்கத்தில் நின்றிருந்தவர்களின் முகங்களை 'ஐயோ இந்த பரிதாபமான மனிதனுக்கு உதவுங்களேன்' என்பதைப் போல் மாறி மாறிப் பார்த்தாள். அந்த வரிசையில் சாரா பாண்டியின் முகத்தையும் பார்த்த மாத்திரத்தில் வலிந்து இயல்பானாள். அதன் விளைவாக புருவங்களை செயற்கையாக நெரித்து நெற்றியில் பிடித்துக்கொண்டு நின்றாள். பாண்டி முகத்தைத் திருப்பிக் கொண்டான். வேறு வழியுமில்லை.

அருகில் நின்றிருந்தவரிடம் விசாரித்தான். பெரியவர் 'எந்தக்காட்டு பயலுவலோ தெரியலை' என்று ஆரம்பித்து விளக்கமாகக் கூறினார். அவர்களுக்கு அழுக்கேறிய தங்கத்தை சுத்தப்படுத்துவது தொழில். கம்மல் மூக்குத்தி மோதிரங்களுக்கு ஐந்து ரூபாயும், வளையல் கழுத்து மாலைகளுக்கு பத்து ரூபாயும் வாங்கினார்கள். பெண்கள் நகைகளை கொடுத்து அமிலத்தில் சுத்தப்படுத்தினார்கள். களிம்பேறிப் போயிருந் தவை புத்தம் புதுசாகப் பளிச்சிட்டன. கூடவே அமிலத்தில் இட்டு எடுத்தபிறகு நகைகள் சற்று மெலிந்துவிட்டன போன்று தோன்றியது. இந்த இந்திக்காரர்கள் தங்கத்தை கொஞ்சம் சுரண்டுகிறார்களோ என்ற சந்தேகம் பல பெண்களுக்கு ஏற்பட்டது. அதில் ஒருத்தி அவர்களிடம் கேட்டாள் ''என்ன கொஞ்சம் எடை குறைஞ்சது மாதிரி இருக்கே'' என்று. அமிலத் தொழிலாளிகளுக்கு அது புரியவில்லை. அவர்கள் தமிழில் அறிந்தவை அஞ்சு ரூபா ஒண்ணுக்கு, பத்து ரூபா ஒண்ணுக்கு; கொடுங்கோ; பிடிங்கோ நல்லாயிருக்கும் மற்றும் ஆமா இல்லை மட்டுமே. அவர்கள் அந்த பெண்ணின் சந்தேகத்தைத் தீர்த்து வைக்காமல் வேலையில் மும்முரமாக... கோபமான பெண், தங்கத்தை உருக்கி எடுத் திருந்தால் அது அந்த அமிலக் கிண்ணங்களில்தானே இருக்க வேண்டும்; உண்டா இல்லையா என்று பார்த்துவிடுவோம் என்ற எண்ணத்தில் யாரும் எதிர்பாராத விதத்தில் திடீரென்று அந்த கிண்ணங்கள் இரண்டை எடுத்து தரையில் கவிழ்த்துவிட்டாள். அமிலம் மண்ணில் சிந்தியது. அதில் தங்கம் பொட்டுமில்லை. அந்தப் பெண் நஷ்ட ஈடாக நாக்கைக் கடித்தாள். அவன் தலையடித்துக்கொண்டு அழ ஆரம்பித்து விட்டான்.

''பாஷையும் தெரியாம பேச்சும் புரியாம சும்மா தெண்டத்துக்கு கூடி நின்னு என்ன புண்ணியம்? மேப்படி ஆகவேண்டியத பாப்போம்'' என்ற பெரியவர் அவர்களிடம் ''நடந்தது நடந்து போச்சு. இப்போ அதுக்கு என்ன செய்யணும்? ஒரு வழியச் சொல்லு'' என்றார். இருவரும் புரியாமல் பெரியவர் முகத்தை பார்த்தார்கள். பாண்டியிடம் ஏற் பட்டிருந்த பரிதாப உணர்ச்சியின் உந்துதலால் பெரியவர் கூறியதை ஹிந்தியில் மொழிபெயர்த்துச் சொன்னான் ''ஜோ ஹோகயா உசே ஜானேதோ ஆப்கோ ஃபிலால் கியா மங்த்தகே ஓ போலோ'' அரைகுறை ஹிந்திதான் ஆனாலும் ஆபத்துக்கு பாவமில்லை என்று நினைத்தான். கூட்டம் மொத்தமும் பாண்டியை வியப்பாகப் பார்த்தது. டீச்சர் மகள் சிறு புன்னகையோடு பார்த்தாள்.

சாராவும் பாண்டியைப் பார்த்து உதடு பிரியாமல் லேசாகச் சிரித் தாள். அப்போது அவள் கண்கள் எப்போதோ காலையில் பார்த்த நிலவை நினைவூட்டியது. பதிலுக்கு அவனால் புன்னகைக்க முடியவில்லை. கூட்டத்தின் எல்லாக் கண்களும் அவன் மீது இருந்தன. ''ஹரே பாய் சாகேப்'' என்று ஆரம்பித்து இரண்டு நிமிடத்திற்கும் மேல் மூச்சு விடாமல் பாண்டியிடம் அமிலத் தொழிலாளி முறையிட்டான்.

அவர்கள் வாழ்க்கையே அந்த ஒரு பாட்டில் அமிலத்தில்தான் இருந்ததாம். லக்னோ பக்கம் சின்ன கிராமமாம். இரண்டு பேருமே பிள்ளைகுட்டிகாரர்களாம். கையில் சேத்து வைத்திருந்த பணத்தையெல்லாம் இரண்டு நாட்களுக்கு முன்புதான் வீட்டுக்கு அனுப்பி வைத்தார்களாம். இந்த அமிலம் தென்மாநிலத்தில் எங்கு கிடைக்குமென்று அவர்களுக்குத் தெரியாதாம். இப்போது என்ன செய்வதென்றே தெரியவில்லையாம். பாண்டி பெரியவரிடம் மொழி பெயர்த்து புரிந்த மட்டும் பிழையில்லாமல் சொன்னான்.

கூட்டம் 'ச்சச்சோ' என்று அனுதாபப்பட்டது. பெரியவர் ஒரு முடிவு கண்டார். பலரும் அதற்கு சம்மதித்தார்கள். ''தங்கம் கழுவுற தண்ணிய கவுத்து உட்டவ நூறு ரூபாய் கொடுத்தே ஆவணும், ஏன்னா தப்பு பண்ணுனவ அவ. மத்தவங்க தங்களால ஏண்டத இந்த பாவப் பட்டதுகளுக்கு கொடுக்கணும். ஏன்னா இது நம்ம ஊர்ல நடந்துருக்கு. என்ன நான் சொல்றது?'' ''ஆமா ஆமா'' என்றது கூட்டம்.

உதவ மனம் கொண்ட எல்லோரும் கலைந்து போனார்கள். வேடிக்கை மட்டுமே பார்க்க விரும்பிய சிலர் அங்கேயே நின்றிருந்தனர். சாராவும் டீச்சர் மகளும் வேகமாக நடந்து வீட்டுக்குப் போனார்கள்.

பாண்டியிடம் பணம் ஏதுமில்லை. பாட்டியிடமோ பெரியம்மாவிடமோ வாங்கி அவர்களுக்கு உதவும் எண்ணம் வந்தது. ஒரு நடை வீட்டுக்கு போய் திரும்ப எத்தனித்தான். ''ஹரே பாய் சாகேப்... ஹரே பாய் சாகேப்'' என்று பதறிவிட்டான் ஹிந்திக்காரன். தண்டம் நூறு மேற்படி பத்து இருபது என்று ஒவ்வொருவராக வந்து பணம் கொடுத்தார்கள். எல்லோருமே அதை பாண்டி கையில் ஒப்படைத்தார்கள். பெரியவர் பதினோரு ரூபாய் கொடுத்தார். எதிர்பார்த்ததைவிட அதிகம் சேர்ந்து விட்டது. எண்ணூற்றி முப்பது ரூபாய். அவர்கள் முகத்தில் நன்றி கனிந்தது. பாண்டியின் கையில் பணத்தைக் கண்டவுடன் சாரா கைமாற்றி விட்ட தாள்களை டீச்சர் மகள் பாண்டியிடம் தந்தாள். இரண்டு நூறு ரூபாய் தாள்கள். அவளருகே சாரா நின்றிருந்தாள். வைத்த கண் வாங்காமல் பாண்டியின் முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தாள். மிக வலிந்து கூச்சத்தை விலக்கிவிட்டு பாண்டி நிமிர்ந்து சாராவின் கண்களை சந்தித்தான். உடனே அப்பார்வை மரத்தைப் பிரியும் பறவையாகப் பறந்து போனது சிறு வெட்கத்துடன்.

பாண்டி உதடு பிரியாமல் பிரியமாக சிறு புன்னகை செய்தான். பதிலுக்கு தடுமாறிய அவள் கண்களில் புன்னகையும் உவகையும் கலந்து மின்னியது.

வாலெடுத்துக் கடல் பறித்து நீராரம் தான் நெய்து தன் மார்பில் சூடிச் சூடியாடும் கயல் கண்டேன் கண்ணே.

☆☆

மாலை ஆராதனை முடிவடைந்திருந்தபோது கொடிமரச் சதுக்கத்தில் கையூன்றி நிர்பந்தக் கடமைபோல் பாண்டி நின்றிருந்தான். ஆராதனை தொடங்கும்போதும் அங்குதான் நின்றிருந்தான். ஆனாலும் சாராவின் முதுகைத்தான் பார்க்க முடிந்தது. சூரியன் இரவு உதித்ததுபோல் வெளிச்ச வெள்ளத்தில் ஆலயமும் சுற்றுப்புறங்களும் ஒளிர்ந்தன. ஜோடித்த தேரும் சப்பரங்களும் தகதகவென்று பவனிக்கு தயாராய் அலங்காரமேற்று நின்றிருந்தன. நான்கு சிறகுகளுடன் எழ எத்தனிக்கும் பொற்பறவை போல தேர் உயிர்ப்புடன் காட்சியளித்தது. இன்று இரவு தேர் பவனி விடியும்வரை ஊரைச் சுற்றிவரும். இதுதான் திருவிழாவின் உச்சக் கொண்டாட்ட இரவு. முன்னிரவு பதினோரு மணியளவில் ஆலயத்திலிருந்து புறப்பட்டு ஆலயத்தைச் சுற்றி வந்து வடக்குத் தெரு வழியாகச் சென்று அத்தத்தில் திரும்பி தெற்குத் தெரு வழியாக மீண்டும் இருப்புக்கு வரும்போது பொழுது புலர்ந்திருக்கும்.

ஒவ்வொரு வீட்டு வாசலிலும் தேர் நின்று புறப்படும். மேளதாளத்தோடு நாதஸ்வரத்தில் குறைந்தது இரண்டு பாடல்கள் வாசிப்பார்கள். சொரூபங்களுக்கு மாலையணிவித்து, உப்பு மிளகு தூவி, மெழுகுவர்த்தி ஏற்றி காணிக்கை செலுத்தி வழிபடுவார்கள். தேருக்குப் பின்னே பெண்கள் கூட்டமாக பயபக்தியோடு ஐம்பத்து மூன்று மணி ஜெபங்களை ஜெபித்தபடியே வருவார்கள்.

சாராவும் பாட்டியும் இணைந்து ஆலயத்துக்குள்ளிருந்து வெளியேறிக்கொண்டிருந்தனர். பாட்டியின் வலது கரத்தை சாராவின் இடது கரம் பற்றியிருந்தது. சாரா முற்றிலும் புதுசாகி பவ்யம் மிக்க பெண்ணாக மாறியிருந்தாள். பாட்டியால் வேகமாக நடக்க இயலாது. பாட்டியின் தள்ளாத வயதில் பாதியைத் தானும் சுமந்தபடி மெதுமெதுவாகக் காலெடுத்து வைத்தாள். மண்டபத்தின் படிக்கட்டுகளில் இறங்க உதவி செய்தாள். கண்களையே அவனால் அரைகுறையாகத்தான் நம்ப முடிந்தது.

இப்போது தான் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்று பாண்டிக்கு தெரியவில்லை. உள்ளுக்குள்ளிருந்து வீறாப்பும் சிநேகமும் ஒரே ஊற்றுக் கண்ணிலிருந்து பாய்ந்தது. பாட்டி தன் மகளை மீண்டும் சாராவில் கண்டாளா, சாரா தன் தாயை பாட்டியிடம் கண்டாளா தெரியவில்லை! அவர்கள் மிக நெருங்கி வந்துவிட்டபோது முகத்தை உயர்த்தி பாண்டியைச் சுட்டிக்காட்டி பாட்டியிடம் சாரா ஏதோ சொன்னாள். அவன் கண்களை பிரியத்தோடு பார்த்து வாய் குளிரச் சிரித்தாள். பதிலுக்கு அவன் என்ன செய்தான் என்று சாராவைத்தான் கேட்க வேண்டும். முட்டையிலிருந்து ஓடு உடைத்து அப்போதுதான் வெளிவந்த கோழிக்குஞ்சு போல அவன் இருதயம் காற்றில் கூசியது.

அவனருகில் வந்த பாட்டி, ''எய்யா, நீ வீட்டுக்கு போவலியா இன்னும். போ, போய் சாப்பிட்டு வந்து நில்லு'' என்றாள்.

சாரா கண்களில் நம்பிக்கையோடு பார்த்தாள், 'பழசையெல்லாம் மற. துடைத்தெறி' என்றது பார்வை.

''போகனும்.'' அவனுக்கே கேட்கவில்லை.

''பாட்டி, இது உங்க பேரனா?''

எங்கே ஒளிந்திருந்தன லட்ச லட்சமாக இந்தப் பட்டாம்பூச்சிகள்? தெரியவில்லை. எழுந்து கண்ணுக்குள் சுழன்றன.

''இவன்தான் கடகுட்டி.''

''ரொம்ப அமைதியான டைப் போல. பாக்கும் போதுலாம் தனி உலகத்துல இருக்காங்க. பெரிய கவிஞர்தான்.''

''உடம்புக்கு ரொம்ப முடியாமக் கிடந்தான். இப்பதான் எந்திச்சு லாந்துதான்.''

சாரா பாண்டியின் கண்களைப் பார்த்துக் கேட்டாள், ''கடவுள் பக்தி இல்லை. கவிதை பக்தி ரொம்ப அதிகம் போல. நன்மை வாங்கவே வர மாட்டேங்கிங்க. தேர் பவனிக்காவது வருவீங்களா?''

''வருவேன்'' எனக் கூறி தலையைத் தாழ்த்தினான்.

அவன் பார்வையை உயர்த்தும் பொருட்டு, ''சரி, போலாமா பாட்டி'' என்றாள். அந்தக் குரல் அவன் முகத்தை வெடுக்கென்று உயர்த்தியது. அவன் கண்களில் அழுத்தமான பார்வையைத் திணித்து கெஞ்சுவதுபோல் கூறினாள், ''கண்டிப்பா வரணும்.''

அவன் குரல்வளைக்குள் பல்லாயிரக்கணக்கான சொற்கள் சடசடத்தன. ஆனாலும் ''சரி'' மட்டும்தான் பதிலுக்கு ஏற்றதாய் இருந்தது. அதைக் கூறி இயந்திர பொம்மை போல் தலையை ஆட்டினான். சாரா விடை பெற்று நடந்தாள். நடையில் தழைந்தாள்.

தலை சுற்றி ஓயக் காத்திருந்தான். சதுக்கத்தின் கல்திண்டில் மயக்க முற்றவனாகச் சாய்ந்து நின்றான். ஆலயத்தை நோக்கினான். கோபுரத்திலிருந்து சாரைசாரையாய் பல வண்ணங்களில் ஆனந்தக் கண்ணீர்த் துளிகள் மண்டபத்தின் மேற்கூரையில் வழிந்து நிரம்பியது. தட்டித் தட்டி கை புண்ணாக, சுவராக உறைந்திருந்த கதவு கவிதையின் சிறு தீண்டலில் திரத்திறந்து வரவேற்றதில், சிகரத்தின் விளிம்பையடைந்து இரண்டு கைகளையும் அகல விரித்து ஆகாயத்தை அளந்தான்.

'கயல் எழுதி வில்எழுதிக் கார்எழுதிக் காமன்
செயலெழுதித் தீர்த்தமுகம் திங்களோ காணீர்!
திங்களோ காணீர் திமில்வாழ்நர் சீறூர்க்கே
அங்கண்ஏர் வானத் தரவஞ்சி வாழ்வதுவே?

# 15

தேர்பவனி துவங்கியது. வெண்கலமணி நாதம் முழங்கியது. வாணங்கள் உயரத்தில் வெடிக்க வண்ணப் பொறிகள் சிதறின. தோல் கிழிய தவில்கள் முழங்கின. எக்காளங்கள் போல நாதஸ்வரங்கள் உச்சத்தில் இசைத்தன. தேவதூதன் மிக்கேல் சம்மனசு தட்டுச் சப்பரத் திலும், அதையடுத்து புனித அந்தோனியார் பெரிய சப்பரத்திலும், அம லோற்பவ அன்னை தேரிலுமாக ஆலய வளாகம் தாண்டி வலப்பக்க மாகத் திரும்பியபோது விசாலமான தெரு குறுகலாயிற்று. அக்கம் பக்கத்து ஊர்களிலிருந்தும் பக்தர்கள் தேர்பவனி காண ஆர்வமாக வந்து குவிந்திருந்ததால் மக்கள் கூட்டம் நெரிசலாகியது. ஒருவர் ஒருவரை மோதித்தள்ளுவது, அடுத்தவர் கால் மேல் நடப்பது சர்வசாதாரண மானது. உணர்சிகரமான கூட்டத்தைப் பிளந்துகொண்டு முன்னேறுவது யாருக்கும் சுலபமாயில்லை.

பாண்டி பத்திரமான இடம் தேடி நின்றுகொண்டான், பெரும் பாலும் தெருவை விட்டு ஒதுங்கி திண்ணைகள், வீட்டு வாசற்படிக் கட்டுகள், மின் கம்பங்களையொட்டி இடம் தேர்ந்து ஒளிந்துகொள் பவனைப்போல. புழுங்கிய உடல்களிலிருந்து வியர்வை நெடியையும் சரங்களிலிருந்து பூ வாசத்தையும் எடுத்துக் குழப்பி அவ்வப்போது காற்று சமன் செய்தோடியது. தேருக்குப் பின்னால் வந்த ஜட்கா வண்டியில் ஜெனரேட்டர் தலைவலி மிஷினாக தடதடத்துக் கொண்டிருந்தது. அதற்கும் பின்னே பெண்கள் கூட்டம் ஒருமித்த குரலில் ஜெபித்தது. பாண்டி இயன்ற மட்டும் தலையை உயர்த்திப் பார்த்தான். தலைகள் தலைகள் தலைகள். அவன் கண்கள் அடிக்கடி பெண்கள் பக்கம் அலைந்து ஏமாந்து திரும்பின. தேர் பவனியின் வழி வரைபடம் செவ்வக வடிவி லானது. இச்செவ்வகத்தில் நான்கு மூலைகளும் முக்கியமானவையாகக் கருதப்பட்டு வழிப்படப்படுபவை. தென்மேற்கு, வடமேற்கு, வட கிழக்கு, தென் கிழக்கு ஆகிய நாலு மூலைகளிலும் தேர் வெகுநேரம் நின்று புறப்படும். நின்றிருந்து கால் களைப்படைந்தவர்கள் அப்போது ஆங்காங்கே அமர்ந்து இளைப்பாறுவார்கள். மின்விளக்குகளின் வெளிச்சம் நள்ளிரவை பகல் பொழுதைப்போல அழகாக சமைத்திருக் கிறது. அதை ரசித்து அனுபவிக்கத்தான் முடியவில்லை. கூடிழந்த சிறு பட்சியின் தவிப்பு. முதல் திருப்பத்தில் தேர் வடக்கே பார்த்து நின்றி ருந்தது. நல்ல சாரீரம் உள்ளவர்கள் முழந்தாளிட்டு இட்டுக்கட்டி தனித் தோத்திரப் பாடல்கள் பாடினார்கள். அதிலும் மனம் லயிக்கவில்லை. கூட்டம் முன்னம்போல் அடர்த்தியில்லாமல் விரிசல் கண்டிருந்தது.

நேரம் செல்லச் செல்ல சாராவின் வேண்டுகோளை அவமதித்து வருவது போன்ற குற்ற உணர்ச்சி மேலிட்டது. பெண்கள் பகுதிக்குச்

சென்று முகம் முகமாக துழாவித் தேடுவதற்கு அதிகத் துணிச்சல் தேவையாயிருந்தது. வேண்டுமென்று கூட்டத்துக்குள் ஒளிந்து விளையாட்டு காட்டி திருப்தியடைகிறாளோ அல்லது நம்மை கண்டிப்பாக வரச் சொல்லிவிட்டு கண்டிப்பாகப் போகக்கூடாது என்று வீட்டில் இறுமாந்திருக்கிறாளோ! குழப்பப்பிசாசு தலை விரித்து ஆட ஆயத்தமானது. அதட்டி அடக்கி வைத்துவிட்டு, கூட்டத்தை வகிர்ந்து நடந்தான். வடக்குத்தெரு மூலையில் மரத்தடி மறைவில் திருட்டு சிகரெட் புகைத்துக் கொண்டிருந்தவர்கள் அவனைக் கண்டதும் தங்களை மறைத்தனர். அவன் அவர்களைக் கண்டுகொள்ளாததுபோல மேலும் நடந்தான். தெருவின் வெறிச்சோடிய பகுதியை வந்தடைந்தபோது பசித்த புலியின் வேட்டைச் சீற்றம் வெறியாகக் கிளர்ந்தது. கோபத்தில் அவன் மீதே அவன் பயங்கரமாக சீறிக்கொண்டான். நின்றுவிட்டான். இது ஒரு கூட்டமா, இங்கே என்ன உலக மாநாடா கூடிவிட்டது! இந்தக் கூட்டத்தில் சாராவைக் கண்டுபிடிக்க முடியவில்லை என்று வருந்துவது வடிகட்டிய முட்டாள்தனம்தான். சரியாக, துணிச்சலோடு அவள் மீது நம்பிக்கையோடு தேடிப் பார்க்கவில்லை. அதுதான் உண்மை. சீட்டுக் கட்டாக மனம் கலைந்து பின் ஒழுங்கடைந்தது. கால்கள் திரும்பி நடந்தன. தோல் தடித்த எருதுவைப்போல நடக்கலானான். கூட்டம் சிதறியது. யாரிடமும் வழி கேட்கவில்லை. வழியை உண்டாக்கினான். எரிச்சலடைந்தவர்கள் திரும்பிப் பார்த்து முணுமுணுத்தார்கள். பொருட்படுத்தவில்லை.

பெண்கள் பகுதிக்கு வந்து முகமுகமாய் ஆராய்ந்தான். இன்னும் முன்னேறினான். கண்களில் தேடல் மின்னியது. யார் என்ன நினைப்பார்களோ என்று கிஞ்சித்தும் கவலை கொள்ளாமல் தேடினான். லீலா டீச்சர் அவனைக் கவனித்து விட்டதை அவனும் கவனித்தான். திடுக்கிடவில்லை. இலக்குக்கு மிக அருகில் வந்துவிட்டோம் என கூடுதல் ஆர்வமடைந்தான். டீச்சர் அவனை விநோதமாகப் பார்த்திருக்கலாம். அதனால் என்ன, அது அவள் விருப்பம்.

சாரா கட்டக்கடைசியில் நின்றிருந்தாள். அவள் கண்கள் ஏற்கனவே அவனை வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்திருக்க வேண்டும். அவன் கண்களைச் சந்தித்ததும் 'போதும் போதும்' என்பதுபோல் சிரித்தாள். அவன் சுயஉணர்வற்றுப் பார்த்து நின்றான். சாரா கைவிரல்களைக் கோர்த்துக் குவித்திருந்தாள். சுட்டு விரலை உயர்த்தி வட்டமாகச் சுழற்றி 'ஆண்கள் பகுதிக்கு போ' என்பதாக சைகையால் உரிமையோடு துரத்தினாள். பார்வை அதற்கு மாறாகப் பதிந்திருந்தது. சரியாக விளங்கிக் கொள்ள இயலவில்லை. சுட்டுவிரலுக்கே கட்டுப்பட்டு, கூட்டத்தை பிளந்து நடந்து தெருவின் வெறிச்சோடிய பகுதிக்கு வந்தான். சூடாக சுக்குக் காப்பி வாங்கிப் பருகினான். ஒவ்வொரு மிடறு அருந்தும்போதும் சுட்டுவிரல் சுழன்று துரத்தியது. 'இதற்கு மேல் எங்கே நான் போவது…' தனக்குத்தானே சொல்லிக்கொண்டான். சிரித்தான்.

# 16

அன்று சூரியன் நிலவு எரிவது போல் எழுந்தது. சூரியவொளி நிலத்தில் மஞ்சளாய்ப் பரவி மெல்ல மெல்ல வெளிறி வந்தது. திருவிழாவின் இறுதி நாள் திருப்பலி வெளியரங்கில் வளாகத்தின் மேற்குப் பகுதியில் பீடமமைத்து தேவனால் ஏறெடுக்கப் பட்டுக்கொண்டிருந்தது. தேர் இருப்புக்கு வந்து சேர்ந்து கொஞ்ச நேரத்திலேயே அது ஆரம்பமாகி விட்டது. பவனியில் கடைசிவரை கலந்துகொண்டவர்களும் கண் விழிப்பைப் பொருட்படுத்தாமல் குளிர்ந்த நீரில் குளித்து புத்துணர்வோடு பங்கெடுத்தார்கள். மாதக்கணக்கில் மந்திரம் படித்துத் தேர்ச்சி பெற்ற சிறுவர் சிறுமியர் முதன்முறையாக தேவனின் திருவுடலையும் ரத்தத்தையும் புது நன்மையாகப் பெற்றுக்கொள்ள வெள்ளையுடை தரித்து முன்வரிசையில் தேவதூதர்கள் தோற்றத்தில் நின்றிருந்தார்கள். சிறுமிகள் தலையில் வலை சூடியிருந்தார்கள். தேவாதிதேவன் அப்பத்தின் வாயிலாக அவர்களுக்குள் திவ்யபிரவேசம் செய்யவிருந்தார்.

இசைப் பாடல், ஆராதனை, ஸ்தோத்திரத் துதியென வெஸ்பிரஸ் திருப்பலி மிக விமரிசையாக நிறைவேறிக்கொண்டிருந்தது. ஐந்து பாதிரிகள் ஒப்புக்கொடுத்தார்கள். மணல் குறுகுறுப்பும் வலியும் கால்மூட்டில் அசௌகர்யமுண்டாக்கிய போதிலும் முழந்தாளிட்டு அநியாயத்துக்கும் வேண்டி நின்றான். பொன்கீற்றுப் பிறை வளைத்து தலையில் முடியாக ஏற்று புத்தங்கி சாற்றி பீடத்தில் நீல மலரென கருணையே வடிவமாக வீற்றிருந்த அமலோற்பவ அன்னையின் திருவுருவச் சொரூபத்தை நெக்குருகப் பார்த்து இறைஞ்சினான்.

அவன் கைகளுக்கு எட்டிய வார்த்தைகளையெல்லாம் பறித்துக் கோர்த்து நீள நீளமான பிராத்தனைகளை உருவாக்கினான். பாடல்கள் மீட்டும்போது பிராத்தனை தடைப்பட்டது. இசையானது மனசுக்கும் அப்பாலுள்ள வெளியைத் திறந்து ஊடுருவிப் பாய்ந்தது. சேர்ந்திசைக் குரல்கள் ஒரு சொல்லைச் சுற்றி ராகத்தில் இழைத்து நெகிழ்த்தித் திருப்பும்போது அமானுஷ்யத்தின் அதிர்வலைகள் எழுந்தன. பிராத்தனையின்போது அவன் உள்ளம் சாராவிலேயே திளைத்தது. தெளிவும் புதிரும் இரு திரைகளென ஆட மறைவில் ஒளிந்திருந்த சாரா, திரைகள் கிழிந்து விழ முற்றிலும் மர்மமாகி அவனை மூடிக்கொண்டாள்.

எள்ளளவு முட்டையில் உயிர் பற்றி விரலளவு வளர்ந்து சிறகுக்காக மீண்டும் கூட்டுக்குள் தவமிருக்கும் பட்டுப்பூச்சியின் வேதனையும் தவிப்புமாக நிச்சயமின்மையை மொத்தமாக அனுபவித்தான். உயிரோடு இருப்பதை எவ்வளவு முடியுமோ அவ்வளவு மறந்திருப்பதே வாழ்வில் மகத்தான கணங்கள் என்று பட்டது. அவன் உயிரோடு இருந்தான். அதை உணர்ந்தபடியிருந்தான். அவ்வுணர்வை சாரா ஊட்டிக்கொண்டேயிருந்

தாள். மெனக்கெட்டோ சிரமசிரத்தை மேற்கொண்டோ அல்ல, கண் ணெதிரில் தோன்றி தன் நடைகளை தொகை தொகையாய்க் காண்பித்து தேவதைபோல் வந்தாலே பாளம் பாளமாகப் பெயர்ந்து விழுந்து அவள் காலடியில் குவிந்து விடுகிறான். அனிச்சையாய் அசையும் அவள் உதடு கள் வசனிக்காத வார்த்தைகளைக் கூட ருசித்துக் கேட்க காதுகள் விடைத்து நிமிர்ந்து கொள்கின்றன. போனால் போகட்டும் என்று ஒரு புன்னகையை அவள் தானமிடும்போது மண்துகளுக்கே அவன் உடல் திரும்பி விடு கிறது. மாளாத துன்பம்தான். என்ன செய்ய... இருத்தலின் மீள முடியாத இந்த நிர்பந்தத்திலிருந்து சிறு மீட்சியைக் கடவுளிடம் கோருகிறான். அந்த வானம் இந்த பூமி நீர் நெருப்பு காற்று நிலம் வெளி இந்தக் கணம் எல்லாம் உன்னுடையது என்று சுமந்து செல்லும் பறவையின் கனத்த இதயத்தையடைகிறான். எதுவும் வேண்டாம் எனக்கு. என் சாரா மட்டும் போதும். அவளைப் பார்த்துக் கொண்டிருந்தாலே போதும். வேறெல் லாம் வீண். சாராவுக்கும் அவனுக்கும் இடையிலிருந்த தூரம் நிலக்கிளர்ச் சியில் புதைந்து போன அதிர்ச்சியிலிருந்து இன்னும் அவன் தெளிந்தேற வில்லை. உடல் தினவு தனிக் கூச்சலிட, மனமோ அவளை பிரபஞ்ச அம்சத்திலிருந்து பிரித்து ஒரு சிலையாக்க பிராத்தனை வாயிலாக பிரயத் தனங்களை மேற்கொள்கிறது என்பதை அவன் அறிந்திருக்கவில்லை.

நற்கருணைப் பந்தியில் சாராவை சந்தித்தான். முற்றிலும் புது சாராவை. ஒரு கையணைப்புக்குள் ஒடுங்கிவிடக்கூடிய சாராவை. பகல் வெளிச்சம் எத்தனை குரூரமானதென்று தன்னுடைய இன்னொரு முகத்தை அது இளித்துக் காட்டியது. தன் கண்களை அவன் நம்பவில்லை. அவள் அவனுக்கிட்ட பார்வையில் தூக்கமற்ற கண்களில் நேற்றைய பின்னிரவு பந்து போல் சுருண்டிருந்தது. பாவசங்கீர்த்தனமொன்று முறை யிடாமலிருப்பது முதுகில் விளாசியது போல் உறைத்தது. நாக்கு குரல்வளைக்குள் நுழைந்து மடிந்துவிட்டது. பந்து இங்குமங்கும் துள்ளிவிட்டு 'என்ன' என்பதுபோல் குதித்தது. அக்கணமே பக்தி முது கெலும்பை இழுத்து வளைத்தது. சிரம் தாழ்த்தி ஆமேனென்று நா நீட்டி நற்கருணையைப் பெற்றுக்கொண்டு தன்னிடத்துக்குத் திரும்பினான். விஷம் குடித்துத் தற்கொலை செய்து கொண்டவரின் உடல் அவனுக்கு அப்பமாக வழங்கப்பட்டது.

# 17

பத்தாம் திருவிழா இறங்குமுகமாக இருந்தது. குடித்துக் கொண் டாடுபவர்கள் கடந்த ஒன்பது நாட்களைவிட சந்தோஷமாகத் திரிந்தார்கள். தெருவெல்லாம் கறிக் குழம்பு, கூட்டு வாசனையைத் தூக்கலாக முகர முடிந்தது. அணிகலன்களைக் கழற்றி பேழைக்குள்

வைக்கும் மகாராணியாக ஆலயம் அலங்காரங்களை இழந்துகொண்டிருந்தது. கடைவிரிப்பு வியாபாரிகள் மீந்த பொருட்களோடு மானசீகமாக உரையாடிக்கொண்டிருந்தார்கள். விருந்தாளிகள் விடைபெறும் வரை மிட்டாய்க் கடைகள் நம்பிக்கையோடு காத்திருந்தன. இரவில் திரை கட்டி ஒரு சினிமா காட்டப்படவிருக்கிறது. இது போக சொல்லிக் கொள்ளத்தக்க விஷேசங்கள் ஒன்றுமில்லை.

மாமிசத் துண்டங்களைக் கடித்துத் தின்னமுடியாமல் மேலோட்டமாக மென்று விழுங்கி மதிய விருந்தை திருப்தியாக முடித்த உடனேயே பாட்டி காலையில் ஊருக்குப் புறப்படுவதாக பெரியம்மாவிடம் கூறிவிட்டாள். பெரிய இழப்பொன்றையும் அடையாத பெரியம்மா கூடவும் இரண்டு நாட்கள் இருந்துவிட்டுப் போகும்படி பாசத்தால் மடக்கினார். ''வர்ற சனிக்கிழமை பொது அசனம் இருக்கு. நாலு நாளுதானே ஊடையில கெடக்கு. இருந்து புதுமைச் சோறு சாப்பிட்டுட்டு போங்க. மாதா அருள் கெடைக்கும்'' வற்புறுத்திவிட்டுதான் பெரியப்பா சுருட்டுப் புகையை ஊதினார். பாட்டி நாளையே போய் ஆக வேண்டிய காரண காரியங்களை அடுக்கினாள். சாப்பிட்ட சடவுக்கு அவர்கள் வாய் வளர்த்துக்கொண்டிருக்கிறார்கள் என்று தெரிந்தது. பாண்டி பெரிய மாறாட்டத்துக்கு ஆளாகியிருந்தான்.

அன்று இரவு எக்கதியிலும் சாராவை சந்தித்துப் பேச வேண்டுமென்று நினைத்தான். மறுநாள் தான் ஊருக்குப் புறப்படுவதைத் தெரிவித்து அவள் பதிலை அறியவேண்டும். சுட்டுவிரலைக் கூடத் தொடாமல் சொல்லத் தேவையானவற்றைத் தெளிவாகச் சொல்லிவிட வேண்டும். அவளது நிரந்தர முகவரியைக் கேட்டுப் பெற வேண்டும். 'உன்னைப் பார்க்காமல் என்னால் இருக்க முடியாது. நீ என் உடலில் ஓர் உறுப்பாக மாறிவிட்டாய். உள்ளங்கைபோல அல்ல. இதயம் போல.' பேசும்போது இந்த வரிகள் முக்கியமானவை. இதை சொதப்பித் துப்பாமல் கூறி பதிலைப் பெறவேண்டும்.

வியூகங்கள் வகுக்கப்பட்டன. ஒத்திகைகள் தொடங்கின. வாக்கியங்களைக் கட்டிமுடித்தான். துண்டு விழுந்த விரிசல்களில் வார்த்தைகளை வெட்டி ஒட்டினான்.

நெற்றியின் குளிர்ந்த வியர்வையும் சூடான மூச்சுக்காற்றும் உன்மத்தம் கொள்ளச் செய்யும் உளறல்களும் காந்தமாக ஈர்த்துக் கடிபட்டுக் கசங்கும் குழைவான அதரங்களும் தசைக்கோளங்களின் பரிச்சயமற்ற ஸ்பரிசங்களும் எரிமலைத் தழல் குழம்பாக உருகிக் கொதித்தாறிய மூளையுமாக அவன் ஊதிப் பெருக்கிய கற்பனைகள்... 'கண்டு கேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும் ஒண்டொடி கண்ணே உள.' ரத்தத்தில் கண்ணீரின் உப்பு கரைவதும் உறைவதுமாக இருந்தது.

மாலையில் புதுமைக் கிணற்றுக்கு நீர் சேந்த வந்தாள் சாரா. இன்னும்

சில பெண்கள் உடன் இருந்ததால் யாரோ ஒருத்தியைப்போல் போய் விட்டாள்.

ஆராதனை வேளையில் தலைவலி கண்டவள் போல் அசௌகரி யமாகக் காணப்பட்டாள். அடிக்கடி நெற்றியை நெரித்து புருவங்களின் இடைவெளியை மோசமாக குறைத்துக்கொண்டிருந்தாள்.

காலை கொடியிறக்கத்தின்போது வளாகத்தில் நின்றிருந்தாள். கொடி மரத்திலிருந்து இறங்கிய கொடியை கண்கொட்டாமல் பார்த்து அது அவிழ்த்து மடிக்கப்படும் வரை நின்றுவிட்டு வேகமாகப் புறப்பட்டு போனாள்.

மண்டப வாசலிலேயே கிடந்தான். அவ்வப்போது ரோஜா பந்தலுக் கடியில் வந்து நிற்பதும் மண்டபத்தை பார்ப்பதும் வீட்டுக்குள் நுழைவது மாக இருந்தாள்.

இரவில் திரையில் 'கடலோரக் கவிதைகள்' திரைப்படம் ஓடியது. அதன் வெளிச்சம் கூட்டத்தில் அவள் எங்கே அமர்ந்திருக்கிறாள் என்பதைக் கண்டுபிடிக்கக்கூடப் போதுமானதாக இல்லை. விடியட்டும், பார்த்துக் கொள்ளலாம் என வேறு வழியின்றி சமாதானமடைந்தான்.

☆☆

இரவு வானம் தெளிந்திருந்தது. நட்சத்திரங்கள் கூட்டம் கூட்ட மாகப் பூத்திருந்தன. மேகங்களை கைக்குட்டையளவு கூட காண முடிய வில்லை. நீலத்தில் உரத்த வானமும் மஞ்சள் பூக்களாக நட்சத்திரங்களும் பார்க்கப் பார்க்கத் திகட்டாத அழகில் அவனை வசியம் செய்தன. குறு மணல்களை உருட்டும் காற்று நீரோடையின் குளிர்ச்சியோடு நிலத்தில் தவழ்ந்தது. கடல் தனித்திருந்தது. இப்படியொரு ஏகாந்த தனிமையில் ஒரு கவிஞன் நட்சத்திரங்களின் ஆட்சி பற்றி சிறப்பான கவிதையை எழுதி விடுவான்.

ஆனால் ஒரு காதலனின் நிலைமை வேறு. அவன் எப்போதும் காதலுக்கு உண்மையாக இருந்தாக வேண்டும். காதலியைக் கண்டடை வது, தொட்டுச் சிணுங்கி அளவளாவுவது என கற்பனையின் எல்லா ஊற்றுகளையும் திறந்துகொண்டே போகவேண்டும். நிராசைகளுக்கும் நேர்மையாக ஒத்துழைக்க வேண்டும். எடுத்த காரியங்களிலெல்லாம் தொற்று வியாதிபோலத் தோல்வி தொற்றினாலும் முடியாது, கிடையாது போன்ற வார்த்தைகளை கிடப்பில் போட்டுவிட்டு முன்னேற வேண்டும். மனத்தின் கடினப் பக்கங்களை உடைந்து போகாமல் நெகிழ்வூட்டிப் புரட்ட வேண்டும். புதுப்புது கனவுகளைத் துரத்திப் பிடித்து இரவோ பகலோ அன்புக்குள் அதை இயங்கச் செய்யவேண்டும். அவன்தான் காதலன். அவனால் மட்டுமே காதலில் நீடிக்க முடியும். அருமையான

ஒரு நாளில் காதலை உலகறிய நிரூபிக்கவும் முடியும். உறங்கிவிடக் கூடாது.

யாரும் எழுப்பவில்லை; தட்டியெழுப்பியது போல் எழுந்தான். யாரும் அழைக்கவில்லை; ஆனாலும் யாரோ அழைத்ததுபோல் ஆர்வத்துடன் நடந்தான். எதுவும் பின்னுக்கிருந்து தள்ளவில்லை; ஆனாலும் யாரோ முதுகைப் பிடித்துத் தள்ளியதுபோல் சடுதியாக அலைவாயை அடைந்தான். அவனே நினைக்கவில்லை; ஆனாலும் உடையைக் கழற்றி வள்ளத்தில் போட்டுவிட்டு கடலுக்குள் பாய்ந்தான். கனமான இரவு அலைகள் மேல் தாவினான். 'காமக் கடல் மன்னும்... கடலன்ன காமம்... காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன் யாமத்தும் யானே உளன்.' அவன் கடலோடு விளையாடுவதை வானத்திலிருந்த அத்தனை விண்மீன்களும் குழந்தைக் கண்களால் வியப்போடு பார்த்தன. நிலவு இன்னும் எழுந்திருக்கவில்லை. 'நிலவெங்கே என் மஞ்சள் நிலவெங்கே, நேற்று சிரித்த மதியெங்கே, என் மனத்தைக் குடித்த மதுவெங்கே, நிலவெங்கே நிலவெங்கே, என் மஞ்சள் திங்களெங்கே' நீரோடு மார்மோதி வாய் விட்டுப் பாடினான். 'அவன் நீந்துகிறானா நடனமாடுகிறானா...' கடல் குழம்பியது. உடனே தெளிவு படுத்திக்கொள்ள கரைவரை ஒளிர்ந்தது. நீரின் மேற்பரப்பு பளபளத்தது. ஒளித்து வைத்திருந்த விளக்கை கடல் வெளியே எடுத்தது. வானம் நிலா கண்டது. கடல் அது என்னுடைய தென்றது. மஞ்சளும் மறுகிய சிவப்பும் கனிந்து சுடர கண்ணுக்கும் உயிருக்கும் பக்கத்தில் குளிர்ந்த தீயெரியும் அலர்ந்த கோளமாக மரிப் பற்ற காதலின் மகத்தான திலகமாக அது திவ்வியமாய் எழுந்தது. பாண்டி சொந்தம் கொண்டாடத் தோன்றாமல் சொக்கி நின்றான். முழுமதியை மறைத்தபடி எழுந்து வந்த ஆளுயர அலையொன்று அவனைத் தூக்கி கரையிலடித்தது. சற்றும் தடுமாற்றமின்றி அந்த அலையைத் திருப்பியடிக்க கடலுக்குள் தினவெடுத்துச் சாடினான். மஞ்சள் திங்கள் அதைக் கண்டு இளநகை புரிந்தது. ரசித்தது. கண்டதும் மனம் களிப்புற்றது. 'கொள்ளை கொள்ளக் கொதித்தெழு பாற்கடல் பள்ளவெள்ளம் எனப்படரும் நிலா.'

⁂

**வி**டிந்து சூரியன் மேலே கிளம்பியபோது தாள்ரோஜா பந்தலுக் கருகே ஆட்டோ நின்றிருந்தது. ஒரு பெரிய சூட்கேஸையும் கைப் பையையும் ஆட்டோவுக்குள் யாரோ தூக்கி வந்து வைக்க சாராவும் லீலா டீச்சரும் ஆட்டோவில் ஏறி அமர்ந்தார்கள். ஆட்டோ புறப்பட்டது. அவள் கை வெளியே நீண்டு அசைந்தது. ஆட்டோ ஆலயத்தை நோக்கி வந்தது. பாண்டி மண்டபத்தின் வாசலில் நின்றிருந்தான். வளாகச் சுவர் ஆட்டோவை மறைத்தது. படிகளின் தெற்கு நுனிக்கு வந்தான். சாரா தலையைத் தாழ்த்தி மண்டபத்தின் வாசலையும் பாண்டியையும் பார்த்தாள்.

ஆட்டோ வேகம் குறைந்து நின்றது. சாராவும் டீச்சரும் வளாகச் சுவரைச் சுற்றி மண்டபத்தை நோக்கி வந்தார்கள். மஞ்சள் சுடிதாரும் கருப்பு வெள்ளைப் புள்ளிகளிட்ட துப்பட்டாவும் அணிந்திருந்தாள். மறித்து முத்தமிட வேண்டும் போலிருந்தது. சாரா மண்டபப் படியேறி கோவிலுக்குள் சென்றாள். சென்ற வேகத்திலேயே வந்தாள். வளாகத்துக்கு வெளியே ஆட்டோவை நோக்கித் திரும்பிய பிறகு சாரா பாண்டியைக் கண்களால் ஊடுருவினாள். ஒரு சிறிய புன்னகையை சுமக்க முடியாமல் அவள் உதடுகள் திணறின. நீரில் நெளியும் நிழல் போல் தலையை அசைத்தாள். என்னவென்று புரியாமலே அவன் இதயத்துக்குள் குதிரைகள் ஓடத் தொடங்கின.

# 18

அன்று மாலை மளிகைக் கடையில் கோழி முட்டைகள் வாங்கி விட்டு திரும்பிய புனிதாவிடம் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு பாண்டி ''உங்க வீட்டுக்கு திருவிழாவுக்கு வந்திருந்தாங்கள்ல சாரா, அவுங்கள எங்க பாட்டி தேடிக்கிட்டிருக்காங்க, ஊருக்கு போறதுக்கு முன்னாடி சொல்லிட்டு போகணும்னு'' என்றான்.

சாராவைப் பற்றி விசாரிப்பது அவளுக்குப் பிடிக்கவில்லை. எரிச்சலை மறைத்துக்கொண்டு பேச்சு மரியாதைக்காகப் பதில் சொன்னாள். ''அவுங்க காலையிலே போய்ட்டாங்களே! அவுங்க திருவிழாவுக்கு வரல. வில்லேஜ் எக்ஸ்பிரியன்ஸ்காக வந்திருந்தாங்க. சிஸ்டர்க்கு படிக்கிறாங்கள்லா''

அவன் காதுகளை அவனால் நம்ப முடியவில்லை.

திணறலுக்குப் பிறகு பலவீனமாக குரலில் கேட்டான் ''இம்மெர்சனா?''

''ஆமா'' என்று தலையாட்டிவிட்டுப் போனாள்.

நச்சென்று ஆணி உச்சந்தலையில் இறங்கியது.

ஒரு குரல் அவன் தலைக்குள் சுழன்றுகொண்டிருந்தது. சமயத்தில் கல்லெறியப்பட்ட நீரின் அலைகளாகவும் விரிந்து விளிம்பில் மோதி மறைந்தது. அடி முதல் நுனிவரை அது அவனைப் போலவே இருந்தது. எனவே அது அவனுடைய குரல்தான் என்று அனுமானித்தான். இடையிடையே ஒலி திரைந்ததுபோல ஒரு குரலும் குறுக்கிட்டது. நீருக்குள் மூழ்கியிருந்து பேசினால் எப்படியிருக்குமோ அப்படி. வார்த்தைகளில் தேவையில்லாமல் துவாரம் விழுந்து காற்று நிரம்பியது. அர்த்தமும் அறுபட்டுடைந்தது. இரண்டையும் வேறுபடுத்துவதனால் ஒன்று

நிலக்குரல் மற்றது நீர்க்குரல். தொனி பேதமில்லை. துல்லியமான வீச்சோடே நீர்க்குரலும் நிலக்குரலும் பின்னிப் பிணைந்து விளையாடின.

'மானை சிங்கமாக மாற்றிவிட்டு வித்தைக்காரியாக மறைந்து கொண்டாயே சாரா! மானுக்கு சிங்கமென்றால் பயமென்று உனக்குத் தெரியாதா! சிங்கமான மான்! தன்னைக் கண்டு தானே எப்படி அஞ்சி நடுங்குகிறது தெரியுமா? தன்னை விட்டு தப்பித்து எங்கெல்லாம் தறி கெட்டு ஓடுகிறது தெரியுமா? கதறுகிறது சாரா. காடு முடிந்து விடுகிறது. நடுக்கத்துக்கு தீர்வில்லாமல் மீண்டும் காட்டுக்குள்ளேயே திரும்புகிறது. பசும்புற்கள் மீதுதான் அதற்கு எவ்வளவு பிரியமிருந்தது, அதிலும் பனியில் நனைந்து பதப்பட்ட குளிர்ச்சியான அதிகாலைப் புற்களை அதுக்கு எவ்வளவு பிடிக்கும்! இப்போதும் அந்த மானுக்காக பனி தவழும் பசும்புற்கள் எங்கெங்கும் துளிர்த்துக் காத்திருக்கிறது. சிங்கமாகி விட்ட மானால் ஒரு சிறு புல்லைக்கூட கடித்து மெல்ல முடியவில்லை. நாலு கோடு போட்டது போன்ற மெலிந்த கால்களால் துள்ள முடியவில்லை. அதன் கிளையோடிய கூர்மையான கொம்புகள் காற்றில் கரைந்து போய் விட்டன. அதன் தலையின் முரட்டுத் தலைமயிர் சடை சடையாகக் கனத்து ஆடுகிறது. திராட்சைப் பழங்களைக் கழுவி வைத்தது மாதிரி பளபள வென்று மின்னிய தூய கருவிழிகள் எங்கே போயின? வேட்டை மீது குறி தைத்த தீ போல் பழுத்த குண்டுக் கண்களால் இந்த உலகைக் காணும் போது அதன் இதயம் நீர்ப் பந்தாகித் தளும்புகிறது. கூரிய பற்களால் இரைகளைக் கிழிக்கும்போது அதன் ஆன்மா வெட்கத்தில் கதறுகிறது. சிங்கத்தின் கண்ணில் மானின் கண்ணீர் வரி நீள்கிறது சாரா. வித்தைக்காரி! வித்தைக்காரியா நீ? மாயக்காரி மட்டும்தானா? இது உன் புத்தியில் ஏற்பட்ட சிறு பழுது. சிங்கத்தை நீ மானாக மாற்ற முடியும் சாரா. நீ ஒரு சொடுக்கிட்டால் சட்டென்று நடக்கும்.'

சிங்கத்தின் குரல் சட்டென்று தடம் புரண்டு காட்சி மாறுகிறது. வெயில். எரியும் வெயில்.

'இதுவோ அன்னாய்... கடலன்ன... கடும்புனல்... மலரினும் மெல்லிய... இதுவோ அன்னாய் காமத்து இயற்கை?'

எரிக்கும் வெயில்.

# 19

நிலமெங்கும் வெயில் மேய்ந்துகொண்டிருந்தது. காற்று பிசாசு போல பாய்ந்து சகலத்தையும் தழுவியது. வெளி முடிவற்று விரிந்து கிடந்தது. அப்பட்டமான பகலில் வானவில் தோன்றியிருந்தது. வண்ணத்தின் எல்லைக்கோடுகளாக வளைந்திருந்தது. நேரம் செல்லச் செல்ல வானவில்

ஒரு வர்ணப் பாலமாகியது. பாலத்தின் வலது மூலையில் இளம்பெண் ஒருத்தி தோன்றினாள். ஏறக்குறைய தேவதை வடிவில். கழுத்திலிருந்து பாதம் வரை அங்கியணிந்திருந்தாள். அது வில்லில் இல்லாத ஒரு வண்ணத்திலிருந்தது. அவள் வானத்தின் புன்னகை போலிருந்தாள். மெது மெதுவாக பாலத்தின் மேல் அழகழகாக நடக்கத் தொடங்கினாள். கொழுந்து போன்ற முகம். அதற்காக அவளைக் குழந்தை என்று கொள்ள முடியாது. வாலைப் பருவம் தன் உருவேயாக நடந்தாள். தலை நாணத்தில் தாழ்ந்திருந்தது. அவள் வானத்தில் நடந்ததால் அதன் பொருள் பூமிக்குப் பொருந்தவில்லை. பாலத்தின் மையத்துக்கு வந்தபோது அவள் கையிலிருந்த மலராத மொட்டு வடிவக் கூடை பிடி நழுவியது. அது நிலத்தை நோக்கி இறங்கியது. பூமி அதை மிகப் பொறுமையோடு ஈர்த்தது. கூந்தலில் சூடிய சரத்திலிருந்து உதிரும் பூக்களை பெண் எப்படிப் பொருட்படுத்தமாட்டாளோ, அப்படியேதான் அவளும் கவலையின்றி பாலத்தில் நடந்தவாறிருந்தாள். மொட்டுவடிவக் கூடை அந்தரத்தில் மிதந்தாடி வந்துகொண்டிருந்தது. நெருங்க நெருங்க அதன் உருவம் விரிந்த வண்ணமிருந்தது. சாராவோ பனிமூட்டத்தின் மீது ஒளி பாய்ந்து வரைந்த ஓவியமாக நடந்தாள். பாலத்தின் வலது முனையில் இப்போது பந்துபோல ஒரு சின்ன நாய்க்குட்டி குடுகுடுவென்று ஓடி ஏறிவந்தது. அதன் சின்னச் சின்னக் கால்கள் பின்னிப் பின்னித் துள்ள, குட்டை வால் இங்குமங்கும் ஆட, வடிந்த காதுகள் சிறகுகள் போல அசைந்தன. மொட்டுக்கூடை பூதாகரமடைந்து, வில் மேல் நடந்த பெண்ணையும் நாய்க்குட்டியையும் அது முழுவதுமாக மறைத்துவிட்டது. அவன் தலையை இங்குமங்கும் நகர்த்திப் பார்த்தான். வானமே தெரியவில்லை, 'கூடை, மொட்டுக் கூடை, மிக மிகப் பெரிய கூடை, ஆ...'

அவன் கண்களை வேகமாகத் திறந்தான். முட்டி மோதும் மூத்திர அவசரத்தில் ஆடையை விலக்குவதுபோல் இமைகளை அவிழ்த்தான். காட்சி சமவெளிக்கு மீண்டதும் பெருமூச்சு வெளியேறியது. கைகளை ஊன்றி எழுந்தமர்ந்தான். மாலை போலும் காலை போலும் பொழுது மயக்கத்திலிருந்தது. உறக்கம் பாதியில் அறுந்த களைப்போ, சோர்வோ, கண்ணெரிச்சலோ சுத்தமாக இல்லை. அவன் உறங்கவே இல்லை. எனவே அவை ஏதும் ஏற்பட வாய்ப்பில்லை. இமைகள் திறந்திருந்தால் இங்கொரு உலகம்; இமைகளை மூடி வைத்தால் அங்கொரு உலகம்; இரண்டு உலகிலும் விழித்திருந்து அவை நடுவில் சிறு கோடாக உருகி இளைத்துக் கொண்டிருந்தான். பல மொழிகளில் பறவைகள் உரையாடிக் கொண்டிருப்பது அவன் உணர்வை ஆங்காங்கே தீண்டிப் பிரிந்தது.

மொட்டு வடிவக்கூடை தன் அழகை இழந்து வந்து அகோரமடைந்தது சன்னமாக நினைவிருந்தது. பெயரற்ற பிரமை கரைந்து மறையும் பொருட்டு அப்படியே அசைவற்று அமர்ந்திருந்தான்.

எதிரே ஓர் உருவம் தரையிலிருந்து முளைந்து வருவதைக் கண்டதும்

முந்தைய உணர்விலிருந்து வேறொரு உணர்விற்கு வெட்டியிழுக்கப்பட்டான். முதலில் தலை, பிறகு தோள்கள், பிறகு இடுப்பு, பிறகு கால்கள் வரை ஒரு மனிதன் எதிரே முளைத்து அவனை நோக்கி நடந்து வந்தான். இதற்கு முன்னெப்போதும் பார்த்திராத முகம் அவனுக்கு. இன்முகமும் இளநகையுமாக வந்தான். வாலிபன். வயது கணக்குப் பார்க்க தேவையில்லாத தோற்றம். படிய தலைவாரியிருந்தான். தலைமுடி கருகருவென்றிருந்தது. நறுக்கி ஒழுங்கு செய்த மீசையில் எண்ணெய் பூசினானோ என்னவோ, நல்ல மினுக்கம். முகச் சவரம் செய்து பத்து நிமிஷமிருக்கலாம். அவன் தன்னை நெருங்கியதும் என்ன செய்வதென்று தெரியவில்லை பாண்டிக்கு. எழுந்து நிற்க எத்தனித்தான். பாறாங்கல்லைக் கட்டியதுபோல் உடல் கனத்தது. தள்ளாடி மீண்டும் தரையில் அமர்ந்துகொண்டான். வந்தவன் ஒரு கையை அசைத்து பாண்டியை அமைதிகொள்ள வேண்டினான். இன்னொரு கையில் சில்வர் தம்ளர் வைத்திருந்தான். அதைக் கூர்ந்து கவனித்தபோது ஆவி நெளிந்தது. பாண்டியிடம் தம்ளரை நீட்டினான். மறுக்காமல் வாங்கிக்கொண்டான். கை நடுங்கியது. விரல்களில் லேசான சூடு பரவியது. பாண்டி அவனை கண்ணுக்கு கண் பார்த்து ஏதோ சொல்ல முயன்றான். ''காப்பி சாப்பிடுங்க'' என்றான் வந்தவன். குரலில் பரிவு. தம்ளரை உதட்டில் இடித்து கொஞ்சம் காபியை சூடாகத் தொடையில் கொட்டிக்கொண்டான். ''பொறுமையா சாப்பிடணும்'' என்றவன் சிநேகமான புன்னகையோடு திரும்பி நடந்தான். முளைத்து வந்தவன் இப்போது சுரங்கத்துக்குள் இறங்குவதுபோல் மறைந்தான்.

காப்பியின் ருசி அறிய முடியவில்லை. அதன் சூடு புதுத் தெம்பை தந்தது. தண்ணீரைப் போல பருகினான். வயிற்றில் பசியின் பிணம் கனத்தது. அது இறந்து நாளாகிவிட்டது.

விசாலமான சிமெண்ட் மேடையில் அவனிருந்தான். தடித்த இரண்டு தூண்கள் தாழ்வாரத்தில் போய் முடிந்தன. பின்பக்கம் பெரிய வாசல் கதவு சாற்றி வைக்கப்பட்டிருந்தது. அது உச்சியில் அரைவட்டமாக இருந்தது. அலங்காரமற்ற அரக்கு நிறக் கதவு. எதிரே சதுரமான வளாகம். கல்லெறியும் தூரத்தில் இரும்பு கிரில் கதவுகள் வளாகத்தின் வாசலில் திறந்திருந்தன.

வளாகத்தின் இடது வலது பக்கங்களில் எதிர்சுவர்கள் வரை ஒரு அடி உயர புல் மேடையிருந்தது. இப்போதுதான் அதற்கு நீர் தெளித்திருக்க வேண்டும். ஒரு பெரிய வயலை இரண்டாகப் பிரித்து நடுவே பாதை போட்டதுபோல இடையில் விசாலமான வெற்றிடம். வளாகத்துக்குள் நிறைய மரங்கள் நின்றன. அதிகமும் வேம்பு. மஞ்சள் மூக்கு கொண்ட காப்பி நிறப் பறவைகள் தாவித் தாவி அதன் கிளைகளை எண்ணித் திரிந்தன. மைனாக்களா! சில தரையில் துள்ளிச் சென்றன. நிழலைக் கிளைகள் என எண்ணுகின்றன போலும்.

வெயில் துலக்கமடைந்தது. வெயிலுக்கடியில் எரிந்துகொண்டிருந்த மஞ்சள் நிறம் வெளிறத் தொடங்கியது. 'சரக் சரக்'கென்று செருப்பு உராயும் சத்தமெழுந்தது. வளாக வாசலை நோக்கி விரிந்து கிடந்த பாதையில் இரண்டு உருவங்கள் நடந்து சென்றன. வெளுத்த உள்ளங்கைகளும் குதிகால் பாதங்களும் மட்டுமே தெரிந்தன. அவர்களின் கூந்தல் துணியாய் தொங்கி முதுகில் ஆடியது. சாம்பல் பொம்மைகள் போலிருந்த அவர்கள் கன்னியாஸ்திரிகள் என உணர்ந்ததும் திடுக்கிட்டது மனசு. சரீரமெங்கும் சங்கடமான அதிர்வுகள் பரவின. அவர்கள் வாசலில் மறையும் வரை பார்த்துக்கொண்டிருந்தவன் தலையைத் தாழ்த்தி தன் மீது கண்களை ஓட விட்டான். வெட்கம் படீரென்று பிடரியில் ஓர் அறை விட்டது. அவன் லுங்கி கட்டியிருந்தான். என்ன நிறமென்றே கண்டுபிடிக்க முடியவில்லை. ஒன்றிரண்டு பித்தான்களை இழந்திருந்த அரைக்கை சட்டை மிக மோசமாக அழுக்கடைந்திருந்தது. அடுத்த கணமே எழுந்து நின்றான். தட்டாமாலை சுற்றிவிட்டது போல் தடுமாற்றம். நிழல் படம் போல பெரியதொரு தேவாலயம் அவன் ஞாபகத்தில் விரிந்தது. சுற்றும்முற்றும் பார்த்தான். அதைக் காணவில்லை. அதற்குள்தான் அவன் இருந்ததால் காண முடியவில்லை.

உள்ளங்காலில் முள் தைத்தது மாதிரி அவன் மெல்ல மெல்ல முகச் சுளிப்புடன் நடந்து வளாக மேடையின் விளிம்புக்கு வந்ததும் நீள நீளமான படிக்கட்டுகளைக் கண்டான். இறங்க வேண்டும் என்ற உந்துதல் இருந்தது. காலை முதலில் வைப்பதா தலையை முதலில் வைப்பதா என்று முடிவெடுக்க முடியவில்லை. அங்கேயே சில நிமிடங்கள் உட்கார்ந்தான். வளாகத்தில் ஆள் அணக்கமேயில்லை. வாசலுக்கு வெளியே தெரு சென்றது போலும். தெருவில் அவ்வப்போது யாராவது தென்பட்டார்கள். சைக்கிள்கள் ஒன்றிரண்டு தோன்றி மறைந்தன. சிலர் பிதா சுதன் வைத்து அவனுக்கு வணக்கம் போட்டார்கள் தூரத்தில் நடந்தபடியே. அடுக்கடுக்காகத் தோன்றிய எண்ணங்களுக்குள் எளிதாக நுழைய முடியவில்லை. எல்லாம் பிம்பங்களோடு வந்தன. அப்பிம்பங்கள் மீது சிற்றெறும்பு போல ஊர்ந்து அலைந்தான். சலிப்பு ஊதி ஊதித் தள்ளியது. மனம் எறும்பாகி விட்டது. உன்னிப்பாக கவனிக்கத் தவறினால் ஊர்ந்த நிலையிலேயே மறைந்தது. எறும்பைப் படைத்தவன் அதற்குரிய கூலமணியை ஒளித்ததேன்? அவன் நிலை குறித்து நெஞ்சு விரிந்து விம்மிச் சுருங்கியது. கண்களில் நீர் கனத்தது.

'இச்சமயத்தில் சாரா கன்னியாஸ்திரி பட்டம் வாங்கியிருப்பாள். கடவுளுக்கு ஒப்புக்கொடுத்த பெண்! பாவம் அவனைக் கொல்லக் காத்துக் கொண்டிருக்கும். செத்தாலும் வருத்தமில்லைதான். கொல்லும் வகையும் முறையும்தான் வலியாகப் படுத்துகிறது. தலைமுடியை மழிப்பார்களா, கொண்டை வரை கத்தரிப்பார்களா தெரியவில்லை. ''மாட்டார்கள். வட்டக் கொண்டை போட்டுக் கொள்ளலாம்.'' என்ன செய்தாலும் அவள்

சிரித்துக்கொண்டேதான் இருந்திருப்பாள். அங்கியணிவித்திருப்பார்கள். தலையில் மூடாக்கு போட்டு முதுகுவரை தொங்கவிட்டிருப்பார்கள். சற்றுமுன் பார்த்த சாம்பல் பொம்மைகளைப் போல மாறியிருப்பாள். ''மாட்டாள். சேலை கட்டிக் கொள்ளலாம்.'' அவள் இளமையின் செழுமையான அவயவங்களும், இயல்பில் பொங்கித் ததும்பும் அழகும் வசீகரமும் மூடி மறைக்கப்பட்டிருக்கும். அதனால் அவளுக்கு நஷ்டமோ தொந்தரவோ ஒன்றுமில்லைதான். ஆனால் என் மனசு மட்டும் காலாகாலத்துக்கும் அவளின் குளியலறைச் சுவர்கள்போல உலர்ந்து நனைந்து விறைத்து நின்றபடியே இருக்கும்போல.'

விரக்தி தந்த வலு அவன் உடலைப் பலப்படுத்தியது. ஒரு கையை ஊன்றி எழுந்தான். முழங்கை எலும்பும் புஜமும் புண்ணாக நோவெடுத்தன. படிகளில் இறங்கினான். வளாக வாசலை நோக்கி நடந்தான். சற்று தூரம் வந்த பிறகு திரும்பிப் பார்த்தான். குருத்து ஓலையை விரித்துப் பிரித்தது போல படிக்கட்டுக்கள் அடுக்கடுக்காக உயர்ந்திருந்தன. அவன் நிழல் அதில் மடிந்து வளைந்து தெரிந்தது. தலையில் உழைப்பாளர்கள் சிலையிருந்தது. விரல்களால் தலைமுடியைக் கோதிவிட்டான். உழைப் பாளிகள் வேலை முடிந்து வீடு திரும்பினார்கள். இன்னும் சில அடிக ளெடுத்து வைத்தபோது கால்கள் போதும்போதுமென்று பலமற்றுத் திணறின. இடது பக்க புல்மேட்டுத் திண்டில் வந்து அமர்ந்தான். பெரிய வேப்பமரத்தின் கிளை நிழல்கள் அவன் மீது ஆடின. குளிர்ச்சியாக இருந்தது. குளிர் இதம் தந்தது. உடலின் பலகீனத்துக்கு எதிராயிருந்தது.

தேவாலயத்தை இப்போது அவனால் முழுமையாகப் பார்க்க முடிந்தது. நிழலாக ஞாபகத்தில் தங்கியிருந்த தேவாலயத்தின் மீது போர்த்தப்பட்டிருந்த கருப்புப் போர்வை இப்போது முற்றிலும் நீக்கப் பட்டிருந்தது. பச்சரிசித் தவிட்டு நிறத்தில் அதன் கோபுரங்கள் வானத்தில் எதையோ எழுதப்போகும் மூன்று பென்சில்களாகச் சீவி வைக்கப் பட்டிருந்தன. நடுவிலிருந்து நெடுநெடுவென மிக உயரமாக வான் நோக்கி நீண்டது ஒன்று. அதன் உச்சியில் ஏறி ஒரு விளக்கைப் பற்ற வைப்பதை விட எரியும் ஒரு நட்சத்திரத்தை அதில் இறக்கி வைப்பது சுலபம் என்று தோன்றியது.

அவன் படுத்திருந்த மண்டபம் வெறிச்சோடியிருந்தது, ஒரே ஒரு தம்ளரைத் தவிர. மண்டபத்தின் கூரை கூம்பியிருந்தது. முகப்பில் வேலைப்பாடுகள் கொண்ட கிராதிகளிருந்தன. கோபுரத்துக்கு கீழே விரிந்த சுவரில் ஒரு பெரிய குழிவைக் குடைந்து, உள்ளே கல்லிலான இருதயமும் அதை வளைத்து நெருக்கும் கல்லிலான முள்முடியும் தெளி வற்றுத் தெரிந்தன. வட்டத்தின் வெளிவிளிம்பில் கண்ணாடி பொருத்தப் பட்டிருந்தது. சூரியன் அதில் எதிரொலித்தபோது கூரிய நீள ஊசிகள் கண்களில் செருகின. நெருப்புக் கோடு கீறியதுபோல நெற்றிப் பொட்டில் வலியும் எரிச்சலும் ஏற்பட்டது.

வயலின் தந்திகளின் மீது ரம்பத்தால் பட்டும்படாமலும் மிருதுவாக வருடியது போன்ற அடர்ந்த துயர இசை எழுந்தது. நீரின் அடியாழத்தில் இருளுக்குள் உலவும் மீனொன்று அவனுக்குள் நிம்மதியற்று நீந்தியது. எச்சில் விழுங்குகையில் வாநீர் இனித்தது. தாக வறட்சியின் உச்சியில் அது சுவை மாறுகிறது போலும். இசை அறுபடாமல் தொடர்ந்து துயரத்தின் சிகரத்தை நோக்கி முன்னேறியது. இன்பம் அடிவாரத்திலேயே அனுபவத் தில் அழிக்கப்பட்டுவிடுகிறது. அதனால் ஒரு அடி கூட எம்ப முடிவ தில்லை. எந்த வழி காற்றில் இசை மிதந்துவருகிறது என்பதை ஊகிக்க இயலவில்லை. அவன் மட்டும்தான் அதை உணர்கிறானா என்றும் உறுதிப்படுத்த ஏதுவில்லை. துயரத்தின் உயரம் முடியும் இடத்தில் என்ன இருக்கும்? எதன் எல்லை விரியும்? யார் கண்டது!

அழகான மலர் விசும்பி அழுவது போல, உயிர்ப்புள்ள நதி திரும்பி தளர்ந்து நடப்பதுபோல, அந்த இசை அவனை அழைத்துக்கொண்டு போனது. போகப்போக அவன் நரம்புகள் முறுக்கேறின. பசியில் துடித்து அழும் பச்சிளம் குழந்தையின் வீறிடல் கவனத்தை ஈர்க்கும் எவ்வளவு தந்திரமான உத்தியென்று இப்போது உணரமுடிந்தது. இந்தத் துயர சங்கீதமோ, கருவில் உதித்து கருவிலே அஸ்தமித்த சிசுவை நினைத்து தாய் அடிமனசில் கசிந்துருகுவதுபோல் ஆர்ப்பாட்டமில்லாமல் இறைவன் படைத்த அனைத்தையும் இறைவனைப் படைத்த விதியையும் அபத்த மாக்கியது. இதை ஒரு வானொலிப் பெட்டியில் ஒலி பரப்பினால் அதன் எக்குத் துண்டுகளும் மிச்சத் தகடுகளும் உருகிக் கண்ணீராக வழிந்தோடிக் காய்ந்து மறைந்து போகும். உடல் சந்நதம் கொண்டதுபோல் துள்ளித் துடித்தது. உடைந்து அழுதாலும் வலிப்பு வந்தாலும் உடம்பு இப்பிடித் தான் குலுங்கும். இருந்த சக்தியையெல்லாம் இழந்துவிட்டான்.புதிய சக்தியின் ஊற்று புலன்களுக்குள் திறக்கிறதோ?

குதித்து எழுந்தவன் கிரில் கதவுகளை நோக்கி ஓடினான். வாசலை யடைந்ததும் இரண்டு பக்கமும் அகலமான வீதி நீண்டு கிடந்தது. திடுக் கிட்டான். திரும்பி அதே வேகத்தில் பழைய இடத்திற்கே ஓடிவந்தான். வீதியில் வெறுமை வெறுமையை மேய்ந்து கொண்டிருந்தது. துள்ளலும் துடிப்பும் கூடிக்கொண்டே போனது. கோளாறு முற்றி கட்டுக்கடங்காமல் மீறித் திக்குமுக்காட வைத்தது. புல் மேடைமேல் துள்ளியேறினான். அடி தடித்த பெரிய மரத்தடியில் கரணமடித்து விழுந்தான். படுத்தவாறு தன்னைத்தானே சுருட்டி வைக்க முயன்றான். வலியின் மீது உருண்டு வந்த ஒலியின் சக்கரங்கள் கிரீச்சிட்டு நின்றன.

மழைத்துளிகள் சிடுசிடுத்தன. மண்ணில் கல்லில் சுவர்களில் மரங் களில் குட்டையில் மோட்டில் ஓட்டில் கொம்பில் குலையில் என எங்கும் தெறித்தன. விடாது முணுமுணுத்தன. வானம் மொடுமொடுத்தது. கடும் ஒலியுடன் இடிகள் முழங்கி இறங்கின. மின்னல்கள் ஒன்றைத் தொட்டு ஒன்றெனத் தொடர்ந்து அறைந்தன. மழையின் ஓலம் நெளிந்து மடிந்து

ஏற்றயிறக்கத்துடன் நீண்டது. குளங்களில் கரைகள் நெக்குவிட்டு உடைந் தன. நிலமெங்கும் நீர். உலகெங்கும் இருள். சகலத்தையும் முற்றுகை யிட்டுப் பெருகிக் கிடந்த வெள்ளம், மின்னல் வெளிச்சத்தில் அலையற்ற கடலாக விரிந்து மறைந்தது. பெண்கடல். பஞ்சபூதங்கள் அனைத்தும் ஒன்றென்பதை நம்பும் தருணமாக மாறிவிட்டிருந்தது. இயற்கையின் தீவிர பரிவர்த்தனைகளில் தெளிவான பயங்கரம் இயல்பாகவே யிருக்கிறது.

அவன் உறங்கவில்லை. இமைகளை மூடிவைத்திருந்தான். அவன் உடலில் தொடுஉணர்ச்சி ஏற்பட்டதும் கண்களைத் திறந்தான். மழையின் ஓலம் வேகமாக வற்றி உடனே ஓய்ந்தது. கண் கூசியது. வெயிலில் பொழுது முறுகியிருந்தது. தலை உயர்த்திப் பார்த்தபோது ஒரு மனித முகம் அருகே தெரிந்தது. சிரித்தது. பதிலுக்கு அவனும் சிரித்தான். மிகத் தாமதமாக, சிரமப்பட்டு அடையாளம் கண்டுகொண்டு எழுந்து அமர்ந் தான். காலையில் காப்பி தந்த முகம். அவன் புன்சிரிப்பே அவனை சுலப மாக காட்டித் தந்தது.

சுற்றும்முற்றும் கண்களைச் சுழற்றினான். கண்டவையெல்லாம் உலர்ந்து கிடந்தன. மழை பெய்து நாளாயிற்று போல என்று தனக்குள் நினைத்துக்கொண்டான்.

இளைஞன் கனிவாக பாண்டியை எழுமாறு சொன்னான். நோக்கம் புரிந்தது. வார்த்தைகள் சிதறியோடின. நாசிக்குள் காற்று நுழைவதுபோல செவிகளுக்குள்ளும் சென்று திரும்பியிருந்ததால் ஒருவேளை புரிந்திருக் கலாம். இளைஞனுக்குப் பின்னே சில அடி தூரத்தில் இன்னும் சில மனிதர்கள் நின்றிருந்தார்கள். முதலாவதாக கண்ணில் பட்டவர் நடு வயதுக்காரர். அவர் கழுத்திலிருந்து கால்வரை உடம்பெல்லாம் சுண்ணாம்பு அடித்திருந்தார். காற்றில் அசைந்தபோது அது அங்கியாகி யது. அதற்கு பின் கர்த்தருக்கு ஊழியும் செய்யும் பாதிரியானார்.

☆

அதனைத் தழுவும்போது அதிர்ந்தான்
இதுகாறும் அவனை அச்சுறுத்திக்கொண்டிருந்த
அந்த வாள் உருவே அவள் வதனமாய்...
நெற்றிப்பொட்டிலிருந்து நேர்கீழாய்
இரண்டாய் அவனை வகிர்ந்தும்
இரண்டாகிவிடாதபடி அந்த வாளின் கைகள்
அவனைப் பிணைத்தபடியுமாய் இருந்தன

# 15அ

கடலை, ஆற்றை அடித்துப் பெய்யும் புயல் மழையைக் கிழித்துக் கொண்டு துளியாகி மறையும் வரை ஓடவேண்டும் போல பாண்டியின் மனம் துள்ளிக் குதித்தது. அவனோ வாசல்படியில் நின்றுகொண்டிருந் தான். தெரு நிறைய பெண்கள் கூட்டம் பிதுங்கி வழிந்தது. தேர் பெரி யம்மா வீட்டைத் தாண்டி மூன்று வீடு போயிருந்தது. தேரில் அமலோற் பவ அன்னையின் முதுகுத் தோற்றம் நீலச் சுடர் போல் மிளிர்ந்தது. காற்றில் நீல அங்கி நெளியும்போது நெஞ்சும் நெளிந்தது. ''அம்மா... தேவனின் தாயே... அருள் நிறைந்தவளே...'' மனம் அவனைக் கேளா மலே உளமிளகிப் பாடியது.

பெரியப்பா சப்பரத்துக்கு தோள் போடப் போய்விட்டார். பாட்டி யும் பெரியம்மாவும் முற்றத்தில் கைகூப்பி தேரைப் பார்த்து நின்றார்கள். இரண்டு திண்ணைகளிலும் பெண்கள் காலாற அமர்ந்திருந்தார்கள். ஏறக் குறைய எல்லோருமே இளம்பெண்கள். குனிந்த பேச்சும், குலுங்கல் சிரிப் பும், வளையல் சிணுங்கலும் மோதிக் களித்தது. திண்ணையில் வாசல ருகே முதல் ஆளாய் அமர்ந்திருந்தாள் சாரா. இள மஞ்சள் சுடிதார். அரக்கு நிற துப்பட்டா. காட்டன். இன்றுதான் முதன்முறையாக சுடிதாரில் பார்க் கிறான். வயசு குறைந்து யு ஜி மாணவி போலிருந்தாள். நிறத்துக்கும் உடைக்கும் கொஞ்சம்தான் வித்யாசம் தெரிந்தது. தலை நிறைய மல்லிகை. நெட்டி முறிகிறதோ இல்லையோ அடிக்கடி விரல்களைப் பின்னித் தென்னிக்கொண்டிருந்தாள். மணி ஒன்பதைத் தாண்டிவிட்டிருந் தது.

தேர் பெரியம்மா வீட்டைக் கடந்த மறுநிமிடம் சாராவும் மூன்று பெண்களும் திண்ணையில் வந்து அமர்ந்தார்கள். பாண்டி பக்கத்துத் திண்ணை விளிம்பில் அமர்ந்திருந்தான். அவர்களுக்கு நடுவே படிக்கட்டு நீளம்தான் இடைவெளியிருந்தது. சாரா அவனைப் பார்த்து களைப்போடு சிரித்தாள். பல்லாயிரம் கண்கள் அவனை மொய்ப்பதாக உணர்ந்தாலும் பதிலுக்கு சமாளித்தான். 'அய்யே... அழகுதான்' என்பது போல் உதட் டைப் பிதுக்கி முகத்தை இறக்கினாள். எப்போதுமே அழகுதான் என்றாலும் அப்போது சற்று அதிகம். கை நீட்டித் தரும் பொருளையே

திருடுவது போல் கமுக்கமாக ரசித்தான். ''கண்ணைக் கட்டுதோ'' என்று லீலா டீச்சர் கேட்டபடியே சாரா எதிரே வந்து நின்றாள். இல்லை என்பது போல் சிரித்தான். அது வேறு சிரிப்பு. 'கன்னி கன்னி.' ''தூக்கம் வந்துச்சுனா நீ விட்டுல போய் படு. ஊர் சுத்தி நம்ம விட்டுக்கு தேர் வரும் போது விடிஞ்சுரும். அடுப்புல பால் இருக்கும். குடிச்சிட்டு படு'' சொல்லிவிட்டு லீலா டீச்சர் பாண்டி பக்கம் திரும்பினாள். கனிவானதொரு புன்னகை தூவினாள். இவள் சிரிக்காமலே திருவிழா முடிந்துவிடுமோ என்று நினைத்த பாண்டிக்கு 'அப்பாடா' என்றிருந்தது. ''தண்ணி கொடு தம்பி குடிக்க'' அவள் கை சைகையில் எழுந்தபோதே அவனும் எழுந்து விட்டான். பாதி செம்பு குடித்து விட்டு சுற்றும்முற்றும் பார்த்தாள். பல கைகள் நீண்டன. பாண்டி மூன்று நடை தண்ணியெடுத்தான். டீச்சர் திரளுக்குள் மறைந்துவிட்டாள்.

சாரா யாரிடமிருந்தோ வாங்கிய வெறும் செம்பை நீட்டியபடி பாண்டியின் கண்களை சட்டம் போட்டுப் பார்த்து ''கண்ணே, இரண்டொரு தீர்த்தமணிகளைத் தானமிடு'' என மெல்லிய குரலில் சொல்லிவிட்டு நாக்கைக் கடித்தாள்.

தேர் முன்னே அடித்துக்கொண்டிருந்த மேளக்காரர்கள் இடம் மாறி இப்போது அவனுக்குள் நின்று தாளத்தை தட்டித் தாளித்தது போல் அவன் அதிர்ந்தான். கண்ணே... கண்ணே... என்ற சொற்கள் மழையாகி எங்கும் சொரிந்தன. தெருவிலும் சுவரிலும் மறைவிலும் தேரிலும் அவை எதிரொலித்துப் பெருகின.

''தாகமாயிருக்குனு குடிக்க கொஞ்சம் தண்ணி கேட்டேன். இதுக்கு இவ்வளவு யோசனையா?'' பொய் முறைப்புடன் அவனை நிதானப்படுத்தினாள்.

வீட்டுக்குள் போய் மறைவாக செம்புக் கழுத்துக்கொரு முத்தம் வைத்தான். தூணில் மோதிக்கொண்டான். வெட்கத்தோடு அதைக் கழுவினான். தடுமாற்றத்தில் தவலைப் பானை விளிம்பில் சொம்பு மோதி இரண்டும் அதிர்ந்தபோது ஏதோ இசைக்கருவி விழித்துப் பார்த்தது.

கூட்டம் தேரோடு நகர்ந்து முற்றமும் தெருவும் தெளிந்த பின் சாராவும் எழுந்து பெண்களோடு கலந்தாள். இடைப்பட்ட நேரத்தில் இருவர் கண்கள் எவ்வளவு காலக் கணுவில், என்ன விதமாய் எத்தனை முறை சந்தித்துக்கொண்டன என்பது எண்ணிக்கையில் இல்லை. பாண்டியின் பாத்திரம் நிரம்பிப் போய்விட்டது. அவன் அருமை இதயம் ஒரு வருடத்துக்கான துடிப்புகளை சில நிமிடங்களில் துடித்துக் களைத்து விட்டது. போதும் போதுமென்று மனம் புலம்பியது. கடலுக்கு உடனே போக வேண்டுமென்று தோன்றியது. அவனால் சுமக்க முடியாத இந்த இன்பத் தோணியை கடல் மேல் நீந்த விடலாம் என்று நினைத்தான்.

தெருவில் இறங்கி அவன் மேற்கு நோக்கி நடந்தபோது திரும்பிப் பார்த்தான். கூந்தல் மல்லிகை மறைய சாராவும் திரும்பிப் பார்த்தாள்.

கதிக்க நடுவானில் முழு நிலா நீராடும் பேராவலோடு கடலில் குதிக்கத் தயாராய் நிற்பது போல் துறுதுறுவென்று ஒளிர்ந்தது. முகத்தில் மஞ்சள் ஒளி வழிய வானம் பார்த்து கடலுக்கு வந்தான். காற்றும் சருகும் ஒளியும் நிலமும் அவனே ஆனான். தேற்கே துறையில் எல்லா வள்ளங் களையும் பட்டறையேற்றி வரிசையாக நிறுத்தி கொம்பில் கொடி கட்டி விட்டிருந்தார்கள். கடற்காற்றில் கொடிகள் சடசடத்துப் பறந்தன. கடலை நோக்கி வள்ளங்கள் நிலத்தில் விரைந்துகொண்டிருந்தன. ஆள் அணக்க மிருந்தது. ஆங்காங்கே மணலில் படுத்திருந்தார்கள். சிலர் சூழ்ந்திருந் தார்கள். உளறல் பேச்சொலிகள் தேய்ந்தும் வளர்ந்தும் செவியைத் தாண்டிச் சென்றன. கோயில் கோபுரச் சிலுவை கங்காகக் கனன்றது.

ஆள் அரவமற்ற கரையில் ஒதுங்கினான். மீனாகி விட்டது கடல். பௌர்ணமி நிலவொளியில் அதன் நீர்ச் செதில்கள் அப்படித்தான் பள பளத்தன. ஆங்காரமாகப் புரண்ட அலைகள்தான் 'இது கடல் இது கடல்' எனக் கரையில் அடித்து சத்தியம் செய்த வண்ணமிருந்தன. இல்லை, 'சாரா... சாரா...' என.

தென்கிழக்கு மூலையில் தேர் மடங்கும் வரை இங்கேயே இருக் கலாம் என நினைத்தவன் மணலில் மல்லாந்து படுத்தான். வட்டக் கோட்டைக்குள் காய்ந்த நிலவை இமைக்காமல் பார்த்தபடி கிடந்தான். நிலவில் காற்றிருந்தால் எவ்வளவு நல்லாயிருக்கும். காற்றில் அதன் ஒளிக் கற்றைகள் மஞ்சள் சீலையாக, உலகுக்கெல்லாம் கட்டிய ஒரே தொட்டி லாக ஆடினால் எப்படியொரு இன்ப உணர்வை அது தரும். மனமெல் லாம் மஞ்சளாகப் பூத்திருக்கிறதெனக் காட்டவோ அந்த உடையில் வந்தாள்!

எண்ணச் சரடுகள் அனைத்தும் அறுந்து நிலவே போலொரு அமைதி கவிந்தது.

கடற்காற்று அசத்தியது. மேளக்காரர்கள் ஆழத்தில் நின்று வாசித் தார்கள். இரண்டு நீர்த்துளிகள் தொட்டிணையும் விதமாக இமைகள் கலந்தன.

புள்ளி. இல்லை, கடுகளவு பொட்டு. இல்லை, குட்டியூண்டு மச்சம். இல்லை பொட்டுதான். ஒட்டியிருக்கு, தெரியல. நெற்றியில் பொட்டு. பொட்டுக்குப் பின்னே நெற்றி. 'கதுப்பு அயல் விளங்கும் சிறுநுதல் புதுக்கோள் யானையின் பிணித்தற்றால் எம்மே.'

நெற்றிக்குக் கீழே புருவம். புருவங்களுக்கு கீழே விழிகள். அதன் கூர் ஒளியைக் கூச்சத்தில் தாங்க முடியாமல் திடுக்கிட்டு கண்களைத் திறந்தான். வெகு நேரம் அயர்ந்து விட்டோமோ என்று பதறினான். நிலா வில் மணி பார்த்தான். அது பொய் சொல்லவில்லை. கண்களுக்கு

மீண்டும் பசித்தது. அவை கரைந்து அழுதுவிடுமுன் அவளை ஊட்ட வேண்டும்.

தெற்குத் தெருவுக்கு வந்தான். ஐந்து காரை வீட்டுக்குப் பின்னால் வடக்குத் தெருவில் தேர் நின்றிருந்தது. பவனியில் உறங்கி விட்ட வளர்ந்த மகனை தந்தை தூக்க முடியாமல் தூக்கிக்கொண்டு நடந்தார். பையனின் கால்கள் இவர் காலில் ஆடி மோதிய விதம் எந்நேரத்திலும் அவர் தடு மாறி விழலாம் என்று அச்சமூட்டியது. சுக்குக் காப்பிக்காரர்கள் சைக் கிளை ஸ்டாண்ட் போட்டுவிட்டு திண்ணைகளில் கோழித் தூக்கம் போட்டார்கள். எரிந்தால் எரி எனக்கென்ன என்பது போல் ஆளில்லாத வளையல் கடைக்காரர்கள் பெட்ராமாக்ஸை இரைய விட்டிருந்தார்கள். கோயில் முற்றத்தில் வந்து நின்றான். ரோஜா பந்தலுக்கு அடியில் மேல் திண்ணையில் ஒருருவம் கிழக்கு நோக்கி உட்கார்ந்திருந்தது.

பாண்டி பந்தலை சமீபித்தபோது கன்னத்தில் முட்டுக் கொடுத் திருந்த கையை விலக்கிவிட்டு பாண்டியைப் பார்த்தாள் சாரா. அதைத் தாண்டி அவன் போகவே முடியாத ஈர்ப்பு. கழுத்தில் ஒரு வெள்ளிக்கோடு உலகிலேயே மிக மெல்லிய அருவியாக அவள் நெஞ்சில் சரிந்தது சப்த மில்லாமல். பந்தலுக்கடியில் கீழ் திண்ணையோரம் வந்து நின்றான். முறுவலித்தான்.

திறந்த கண்களில் உறங்குகிறாளோ என சந்தேகம் எழும் வரை அவளிடம் எந்த சலனமும் இல்லை. மடமடவென எடை கூடியது. 'நான் கிளம்புறேன்' என்று சொல்ல வாயெடுத்தான். ''திண்ண சும்மாதானே கெடக்கு'' அவள் சொன்னது 'லோகத்தில என்னதான் நடக்கு' என்பது போல் அவனுக்குக் கேட்டது. கால்கள் பின்னாத குறை. ''கடவுளேக் கடவுளே...'' என்று தனக்குத்தானே சொல்லிச் சிரித்தாள்.

இறுக்கம் தளர்ந்து திண்ணையில் அமர்ந்தான். லேசாக சீண்டப் பட்ட ஈகோ ஒரு குட்டிச்சாத்தானாக அவனுக்குள் குதித்தது. உரையாட லின் நடுக்கோட்டு நடையுடன் இயல்பாக பிசிறில்லாத குரலில் கேட் டான். ''இது என்ன பொட்டு கண்ல போட்டா கரைஞ்சு போற மாதிரி இத்துனூண்டு?'' சாரா கழுத்தைப் பின்னுக்கிழுத்து முறைத்தாள். ''பெருசா வேணும்னா நீங்க வச்சுக்குங்களேன்.'' ''அதுக்கில்ல, இவ் வளவு குட்டிப் பொட்டு நான் பாத்ததே இல்லை. அழகாத்தான் இருக்கு கண்ணுல இருக்குற மச்சம் மாதிரி.'' ''அச்சச்சச்சோ...'' என்று முகத்தைச் சுளித்தாள். அதில் வெட்கமும் கொஞ்சம் குறுக்கிட்டு மறைந்தது. பாண்டி தரையைப் பார்த்துச் சிரித்தான். ''ஆமா, இந்த சட்டை தைச்சதா, ரெடி மேடா?'' ''பம்பாயில எடுத்தது.'' அவனைச் சீண்ட அவளுக்கும் ஆவல் உண்டாகி விட்டிருந்தது. ''ஏலத்துல எடுத்ததா, வாடகைக்கு எடுத்ததானு கேக்கல. ரெடிமேடா, துணி எடுத்துத் தைச்சதானுதான் கேட்டேன்.'' பாண்டி அவள் குறும்புத்தனத்தை நம்ப முடியாதவனாக அவள் முகத் தைப் பார்த்தான். ''பாத்தா எப்படி தெரியுது?'' ''ரெடிமேடா எடுத்து

டெய்லர் கிட்டக் கொடுத்து தைச்சு வாங்கின மாதிரி இருக்கு.'' ''அவ்வளவு மோசமாவா இருக்கு?'' ''கண்றாவியா இருக்கு'' நாக்கு காட்டி பார்வையை விலக்கினாள். ''ஏங்க, பொட்டு நல்லா இருக்குனு சொன்னதுக்கா இந்த வாங்கு வாங்குறீங்க?'' பாண்டி அப்பாவியாகக் கேட்டான். ''நாங்க வாங்கறதுமில்ல விக்குறதுமில்ல. பொட்டும்பிங்க, விட்டா நெத்திம்பிங்க, கேட்டுக்கிட்டிருந்தா கண்ணு மூக்குனு பார்ட் பார்ட்டா சொல்லுவிங்க, தேவையா? ஆத்துல மண்ணெடுத்து வீடு கட்டுறதே பெரும்பாடா இருக்கும்போது, காவடி மண்ணெடுத்து பூமி செய்யுற ஆளாச்சே!'' சொல்லிவிட்டு எழுந்து வீட்டுக்குள் போனாள். அவள் தாவணி ஏவிய காற்று அவன் முகத்தில் வீசியது.

பேசி முடிக்கும்போது அவள் கண்கள் அகல விரிந்தன. பறந்த நிலையில் பக்கத்தில் பக்கத்தில் இரண்டு கருவண்டுகள் அந்தரத்தில் நிற்பது போல் கண்மணிகள் ஒளிர்ந்தன. அவன் எழுதிய வரிகளை அவள் வாய்ச் சொல்லாகக் கேட்ட அந்தக் கணத்தில், அங்கேயே அப்போதே எரிந்து பஸ்பமாகி விடவேண்டுமென ஒரு மரணக் கிளர்ச்சி ஏற்பட்டது. தெரு, கோவில், தேர், திருவிழா மக்கள் எல்லாமே இல்லாமலாகி விட்டிருந்தது. பேருலகில் அவளும் அவனும் மட்டுமே இருப்பது போன்றதொரு பிரமை பிடித்தது.

அவள் எழுந்து போனதும் அவன் மரமாக, வார்த்தைகள் பறவைக் கூட்டமாக வந்தமர்ந்து அங்குமிங்கும் தாவிச் சிலம்பின. அவள் மீண்டும் வாசலுக்கு வந்ததும் எல்லாப் பறவைகளும் பதுங்கி மறைந்தன. அவளோ கூடை நிறைய வார்த்தைகளோடு வந்திருந்தாள். திண்ணையில் அமர்ந்து தெருவை இருமருங்கும் நோட்டமிட்டாள். கோவிலுக்காக உடலை முறுக்கித் திரும்பியபோது தாமரை மொட்டு போன்ற அவள் இடது ஸ்தனம் அவன் கண்ணைச் சுட்டது. அவன் கண்கள் அங்கேயே நிலைத்திருக்க அவன் பக்கம் திரும்பியவள் நெஞ்சருகே கை வைத்து விரல் சொடுக்கினாள். ''தூக்கம் வருதோ, கண்ணு சொக்குது'' இயல்பாக இடது கை மாரப்பை இழுத்து கக்கத்துக்குள் நுழைத்தது. இல்லை இல்லையென்று தலையாட்டியவன் மனசை மாற்றினான். ''என் கவிதைகள்லாம் உங்ககிட்டதானே இருக்கு...'' ''நாங்க என்ன பழைய பேப்பர் கடையா வச்சுருக்கோம்?'' ''சீரியசா சொல்றேன். விளையாட தீங்க.'' ''சொல்லுங்க.'' ''அதைத் திருப்பிக் கொடுத்தீங்கனா நல்லது.'' ''எதுக்கு?'' ''என்கிட்ட வேற காப்பி இல்ல'' ''ஓகோ... சரி, அந்த கவிதைகளையெல்லாம் யாரை நெனைச்சு எழுதினீங்க?'' ''அது... சும்மா கற்பனையா...'' ''கற்பனையில யாரை நினைச்சு?'' பதில் கூறத் திணறினான்.

தலையையும் குரலையும் சற்றே தாழ்த்தியிருந்தவள் நிமிர்ந்து குறும்பாகக் கேட்டாள் ''என்னைக் கண்டதும் மூளைக்குக் காலும் இதயத்துக்கு வாலும் இப்போ முளைக்கலையா?''

'இறைவா இப்படியொரு கணத்தை எப்படியப்பா படைத்தாய்' என்று கூவ வேண்டும் போலிருந்தது. ஆன்மா சிலிர்த்தது. கண்ணோடு கண்கலந்து ஆமோதித்தான்.

''அப்போ அது பாட்டுடைத்தலைவி கிட்டதானே இருக்கணும்!''

''ஆமா. கவிதை கவிதையோடதான் இருக்கணும்.''

செல்லமாக அவனை அடிக்க கை ஓங்கி வளை குலுங்கி, அடிக்காமல் கையைப் பின்னுக்கு இழுத்துக்கொண்டு உதடு கடித்துச் சிரித்தாள்.

'ஏய் நீதானா!' பாண்டிக்குள் பெருமிதக் குரல் ஒலித்தது. நெஞ்சு திடத்துடன் 'நானேதான்' என்றான்.

''எப்பவும் கவிதைய நினைச்சிக்கிட்டேதான் இருப்பீங்களா?'' தலை சாய்த்தாள்.

அந்தப் பார்வை அவனுக்கு ரொம்ப பிடிக்கும். ''வாய்ப்பு கிடைச்சா பேசிக்கிட்டும் இருப்பேன்.''

சாரா இரண்டு கண்களையும் இறுக மூடித் திறந்தாள். பூரிப்பில் அவள் முழு எழிலும் பொங்கிப் பூத்திருந்தது. அவள் முகத்தில் அதுவரை பார்க்காத மேல் இமைகளின் மேற்பகுதியை அப்போதுதான் பார்த்தான். இதுகாறும் ரகசியமாய் எங்கேயிருந்தது? அவை கொத்தாக முத்தங்களை அள்ளி அவனுக்குள் விதைத்துவிட்டு மறைந்தன.

திடீரென்று ஞாபகம் மீண்டவளாக வீட்டுக்குள் ஓடினாள். அறை வாசல் திரைச்சீலைகள் நெளிந்தன. பாண்டிக்கு சுயநினைவு திரும்பியது. அவள் வந்ததும் சொல்லிவிட்டுப் புறப்படலாம் என்று நினைத்தான். கிழக்கும் மேற்குமாகத் தலையைத் திருப்பி நோட்டமிட்டான். லீலா டீச்சரோ, புனிதாவோ அக்கம்பக்கத்து வீட்டுக்காரர்களோ பார்த்து விட்டால் தெற்று நினைக்க வழியிருந்தது.

திரைச்சீலையை விலக்கியபடி ''ஏய்...காஃபி. உள்ள வாங்க. காஃபி'' என்று குரல் கொடுத்தாள். இரண்டு கைகளிலும் எவர்சில்வர் தம்ளர் இருந்தது. பாண்டி முழித்தான். வேண்டாம் என்று மறுக்க நினைத்தான். அது முடியவில்லை. அவள் இரண்டாம் அறைவாசலில் நின்றபடியே அன்பு மணக்கும் கண்களால் அவனை இழுத்தாள். காஃபியை வாங்கியபோது கை நடுங்கியது. இதயத் துடிப்பு குழம்பத் தொடங்கியது. ''யாராவது வந்துருவாங்களோன்னு பயமா இருக்கு.'' அதைச் சொல்ல சங்கடமாக இருந்தது. ஆனாலும் சொன்னான். வாசலை வெறித்துப் பார்த்தாள். அப்போது அவள் கண்களில் ஓடிய ரேகைகளில் அச்சமும் கவலையும் கலந்திருந்தன.

''வடக்கு ரூமுக்கு யாரும் வரமாட்டாங்க'' சொல்லிவிட்டு நடந்தாள். அவளைப் பின்தொடர்ந்தான். பதற்றம்தான் கூடியது. இரண்டு பெரிய அறைகளைக் கடந்து வடக்கு அறைக்கு வந்தார்கள். அது சிறியதாக

இருந்தது. இரண்டு வாசல்கள். உள்ளிருந்து மட்டுமே பூட்டக்கூடிய ஒன்றைத் திறந்தால் வடக்குத் தெரு வந்துவிடும். ஒரு கட்டில் மெத்தை. மேஜை நாற்காலி. மரபீரோ, கொடியில் உடைகள். அந்த மஞ்சள் சுடிதார். சாரா காஃபியை மேஜையில் வைத்துவிட்டு இவனை நாற்கலியில் அமரு மாறு சைகை செய்துவிட்டு தெற்கு வாசலுக்குப் போனாள். அவனால் எதையுமே சிந்திக்க முடியவில்லை. வடக்கு வாசலைத் திறந்தால் இங்கிருந்தே வெளியேறி விடலாம் என்பது கொஞ்சம் ஆசுவாசமாக இருந்தது. கனவு நிஜமாகும்போது காதலும் கிலி கொள்ளுமோ?

காஃபியைப் பருகினான். மிதமான சூட்டிலிருந்தது. அதன் சுவை அதற்கு முன் வாழ்நாளில் எப்போதுமே ருசித்திராததாக இருந்தது. மேஜையில் கிடந்த புத்தகங்களை ஆர்வமின்றிப் புரட்டினான். எல்லாமே ஆங்கிலப் புத்தகங்கள். Letters of Abelard. The Bridges of Madison County... பக்கங்களில் சில இடங்களில் ஓரத்தில் பென்சில் கோடுகள்.

சாரா அறைக்குள் வந்தபோது அவள் கையில் பாண்டியின் செருப்பு களிருந்தன. துணுக்குற்றான். கட்டில் காலோரம் அதை மெதுவாக வைத்துவிட்டு, காஃபியைக் கையிலெடுத்துக் கொண்டு கட்டிலில் அமர்ந்தாள். குழல் விளக்கு வெளிச்சத்தில் குத்துவிளக்கு மீண்டும் அவனுள் ஒளி வீசி மின்னியது. அவள் கண்களை ஆழமாகப் பார்த்தான். அதில் வெளிப்பட்ட ஒரு தீவிரக் கவலையைக் கண்டதும் சாரா பார்வையை விலக்கிக் கொண்டாள். எதையோ யோசிக்கும் பாவனை. 'காஃபி இருக்கும் வரை குடித்துக் கொண்டிருக்கலாம், அது முடிந்த பிறகு?' அந்தத் தனிமை எழுப்பிய கேள்வியது. ''காஃபி எப்படி, குடிக்கிற மாதிரி இருக்கா? இல்ல கடனேனு விழுங்குறீங்களா? எனக்கு காஃபி கூட ஒழுங்காப் போடத் தெரியாது. வீட்டுல செல்லம். அப்புறம் ஏழு வருஷம் காலேஜ் ஹாஸ்டல்.'' அந்த அறைக்குள் உரையாடுவதற்கான குரல் அளவை அவனுக்கு உணர்த்தினாள்.

''இந்த புத்தகங்கள்லாம் யார் படிக்கிறா?''

''ஏன், என்னயப் பாத்தா படிக்கிறவ மாதிரி தெரியலையா?''

மேஜையில் தம்ளர்கள் இரண்டும் அருகருகேயிருந்தன. ''மன்னிப்பு கடிதம் என்னாச்சு?'' அப்போது அவள் முகத்தில் பழைய குறும்பும் சந்தோஷமும் மீண்டிருந்தது. ''நான் ஆம்பிளைப் பையனா இருந்தா, வந்தா வாடி வராட்டா போடினுதான் எழுதியிருப்பேன்.''

அவன் மீண்டும் பழைய பாண்டியாக்கப் பட்டான். ''இருந்து பாத்தா தெரியும்.''

''ஏன், ரொம்ப கஷ்டமோ?'' சாரா புருவத்தை நெரித்து பாண்டி முகம் பார்த்தாள். கண்ணில் கேள்வி முற்றுப் பெறாமல் தொக்கி நின்றது. பாண்டிக்கு அவள் உதடுகளைக் கிள்ளி வைக்க வேண்டும் போலத் தோன்றியது. தெற்கு அறையில் கிளி 'கிக்கித்'தது. சாரா கட்டிலிலிருந்து

எழுந்து நின்றாள். மீண்டும் அழைப்பு மணியில் கிளி கிக்கித்ததும் பாண்டிக்கு தூக்கிவாரிப்போட்டது. நொடிக்கு நூற்றி இருபது டிகிரி வேகத்தில் ஜுரம் பரவியது. பரிதாபமாக அவள் முகம் பார்த்தான். வாடிய அவன் முகத்தைக் கண்டு வாடிய சாரா அவன் நாடியைக் கையில் ஏந்தி, கன்னத்தில் செல்லமாகத் தட்டினாள். காஃபி தம்ளர்களை கையில் எடுத்துக்கொண்டு போனாள். போகும்போது விளக்கு அணைக்கப் பட்டது. கதவும் சாற்றப்பட்டது.

இருளுக்குள் புழுவாகி நெளிந்தான். கட்டிலுக்கு அடியில் நுழையத் தயாராய் விளிம்பில் அமர்ந்திருந்தான். வீட்டுக்குள் பெண்கள் பேச்சொலி கேட்டது. வடக்கு வாசலுக்கு வெளியே ஆயிரம் பூதங்கள் நின்றிருந்தன. மேஜையில் கிடந்த புத்தகமொன்றை எடுத்து காரணமில்லாமல் கைக் காவலுக்கு வைத்துக்கொண்டிருந்தான். உடல், பொருள், ஆவியெல்லாம் செவியாகக் குவிந்து விட்டிருந்தது. மின்விசிறியின் மெல்லிய கரகரப்பு பூதாகரமாக ஒலித்தது. மேஜை, நாற்காலி, பீரோ. கொடியுடைகள் இருளில் மிதந்து, அறை நீர் மேல் அசைந்தது.

இப்படி எப்படி ஒரு பெண்ணின் கைப்பாவையாக ஒப்படைக்கப் பட்டோமென்று வியந்தான். ஏதோ மாயமந்திர சக்தியின் உடன்பாட்டு டன்தான் இது நிகழ்ந்தேறியிருக்கிறது என எண்ணினான். நாடியைத் தொட்ட விரல்களை, கன்னத்தில் பட்ட கையின் ஸ்பரிசத்தை நினைத்து மகிழ்ச்சியடைய முடியாததை நினைத்து வேதனைப்பட்டான். ஏழெட்டு நிமிடங்களுக்கு பிறகு, சாவின் வாயாகக் கதவு திறந்தது. சாவின் வாயைச் சாற்றிவிட்டு சாரா விளக்கை எரியவிட்டாள். நெஞ்சின் படபடப்பு தளர்ந்தது. அஞ்சி நடுங்கியதை, உயிர் நீங்கித் திரும்பியதை அவளிடம் காட்டிக் கொள்ளத் தயக்கமாயிருந்தது. முகத்தில் துளிர்த்திருந்த வியர் வையை சாமர்த்தியமாக துடைத்துக்கொண்டே தணிந்த குரலில் கேட் டான். ''யார் வந்தது?'' ''புனிதா.'' ''இருக்காங்களா?'' ''போயிட்டா.'' ''ரெண்டு மூணு பேரு சத்தம் மாதிரி கேட்டுச்சு?'' ''ஃபிரண்ட்ஸ்.'' ''எதுக்கு?'' ''பாத்ரூம்.'' பெருமூச்செறிந்தான். ''இனி எப்போ வரு வாங்க?'' அருகே வந்தாள். ''நீங்க போறது வரை யாரும் வரமாட் டாங்க.'' சாரா புனிதாவிடம் விஷயத்தை சொல்லிவிட்டாளோ என்ற சந் தேகம் எழுந்தது. நாற்காலியை கட்டிலருகே இழுத்துப் போட்டு அமர்ந் தாள். ''நான் இங்கே இருக்குறது...'' ''தெரியாது.'' ''பின்ன எப்படி சொல் றீங்க?'' ''ஒரு ஜோசியந்தான். ஆமா... நீங்க எப்ப போவீங்க?'' யாரோ போல் கேட்டாள். ''இப்பவே'' கோபத்தில் அவன் மூக்குநுனி எரிந்தது. 'அதையும் பாக்கலாம்' என்பது போல் ஒரு மெத்தனத்தோடு ''சரி'' என் றாள். தன் கழுத்தில் கைவிட்டு அழுத்தி உராய்ந்தான். மூச்சு வாங்கியது.

''சரி, நான் கிளம்புறேன். நாம நாளைக்கு சந்திக்கலாம்.''

''எதுக்கு?'' என்றாள்.

பதிலின்றி அவள் கண்களைப் பார்த்தான். அதைப் பொருட்படுத்தாமல் இடது கையை நீட்டி மேஜை மீது கிடந்த புத்தகத்தை எடுத்துப் புரட்டத் தொடங்கினாள். உறக்கத்தை கரைத்து நள்ளிரவு அவள் கண்களில் ஊற்றியிருந்தது. தூக்கக் கலக்கம் நிழல் வட்டம் போட்டிருந்தது. ஆனாலும் அவள் விழிகள் உதயத்தில் அசையும் அகல் சுடரென ஒளிர்ந்தபடி வரிகள் மீது நகர்ந்தன. அதில் மின்னிய பேரன்பையும், பெருங் கருணையையும் காந்தமுனையும் கண்கொட்டாமல் ஏக்கத்தோடு பார்த்துக்கொண்டிருந்தான். காற்றின் போக்கறிய கை விடும் பிடி மணலாய் நேரம் தூறிக்கொண்டிருந்தது. அவன் அங்கிருப்பதையே மறந்து விட்டவள் போல் அவள் பக்கங்களைப் புரட்டினாள். அறிமுகமற்ற மௌனம் உருண்டது. காரணமில்லாத் துயரில் துவண்டான். ''கோபமா?''

உணர்ச்சியின்றி நிமர்ந்தாள் ''நீங்க இன்னும் போகலியா?'' ''போகப்போறேன்.'' ''சரி.'' மீண்டும் வாசிப்பில் ஆழ்ந்தாள். பாண்டி கட்டிலிருந்து எழுந்தான். செருப்பை அணிந்துகொண்டான். வடக்குக் கதவருகே வந்து நாதங்கியை நெகிழ்த்த கையெடுத்தபோது பின்னாலிருந்து சாரா அவன் கையைப் பற்றினாள். வலிப்புக் கண்டதுபோல் கையை உதறினான். ''விடுங்க. நான் போகணும்.'' திமிறியவனை இரண்டு கைகளாலும் பற்றித் தன் பக்கம் திருப்பினாள். ''தேர் இன்னும் வடக்குத் தெருவுலதான் நிக்குது. யாராவது உங்களை பாத்துட்டா எனக்குத்தான் கஷ்டம்.'' அவன் இரு கைகளையும் மணிக்கட்டில் பிடித்து அவனை விட்டுப் பிடுங்கினான்.

''தெக்கு வாசல் வழியா போயிருதேன்'' சாரா அவன் முகத்தை ஏறிட்டாள். கோபமும் பயமும் குழைந்திருந்தது.

''வாங்க'' சாரா முன்னே நடந்தாள். தெற்கு வாசலைத் திறக்குமுன் பாண்டியிடம் உறுதியான குரலில் சொன்னாள். ''நாம பாத்தது, பேசுனது, சிரிச்சதெல்லாம் இந்த நிமிஷத்தோட முடியுது. மண்டியிடுவேன், மன்றாடுவேன், மரிக்கும் கணத்திலும் உன்னை உன்னிடமே கேட்பேன்னு உருகக் கூடாது. நிம்மதியா இருக்க விடணும். போய்ட்டு வாங்க.''

பாண்டியின் மூளையோட்டம் துண்டிக்கப்பட்டது. கண்களில் ஜிவு ஜிவுவென்று வெப்பம் பரவியது. கதவை நோக்கி முன்னேறியவளை முரட்டுத்தனமாக மறித்து, இரண்டு கைகளாலும் அவள் தலையை இறுகப் பற்றி முகத்தை உதடுகளை ஆவேசமாக முத்தமிட்டான். அவள் துடித்தாள். பிடியை விலக்கப் போராடினாள். தோற்றாள்.

உதடுகள் விலகியதும் ''ம்ம்மா...'' என்ற பெருமூச்சுடன் கண்களைத் திறந்தாள். தலைச் சுற்று கண்டதுபோல் சில நொடிகள் தள்ளாடினாள். பாண்டியின் கண்களில் வெறி மின்னியது.

'சட்'டென்று அவன் முகத்தில் அறைந்தாள். நெஞ்சில் கை வைத்துத் துவண்டாள்.

கதவைத் திறந்து வெளியில் எட்டிப்பார்த்து விட்டு வாசல் நடையில் குறுகி அமர்ந்தாள். கண்களை இறுக மூடி தலையைக் கவிழ்த்து வைத்திருந்தாள். நெஞ்சு விம்மி விம்மித் தணிந்தது.

வெண்கல மணியோசை எழுந்தது. மேளம் எகிறி முழங்கியது. வான வேடிக்கைகள் சீறிச்சென்று அடுக்கடுக்காக வெடித்தன. தேர் கிழக்கு மூலை திரும்பியிருக்கும். பாண்டி கட்டிலில் அமர்ந்து கைகளால் முகத்தைப் பொத்திப் பிடித்தபடி மனத்திற்குள் கடவுளிடம் புலம்பினான். அழுதான். உடல் மட்டும் குலுங்கியது. கண்ணீர் வரவில்லை. சாராவின் காலடியில் விழுந்து கால்களை இறுகப் பற்றிக்கொள்ள வேண்டும் போலிருந்தது. முகத்திலோ முதுகிலோ கோபத்தில் உதைப்பாள். உதைத்தாலும் பட்டுக்கொள்ளலாம் என்று குற்ற உணர்வு சொன்னது. நினைக்க நினைக்க வலி நெஞ்சை அறுத்தது. வைகறையில் பூத்து, வருடினாலே வாடிவிடும் மலரை, இளங்காற்றும் பணிந்து வீசும் ஆனந்தத்தின் தளிரை பற்களால் கடித்திழுத்துப் பறித்த வன்முறை மனசைப் புரட்டிப் புரட்டியெடுத்தது. உடலெங்கும் கொலை வெயிலடித்தது. மனத்தின் தவிப்பு கற்பனையின் சிறகுகளை திசைகளெங்கும் விரித்தது. விதவிதமான வேதனைகளை காட்சிச் சித்திரங்களாக வரைந்து வரைந்து அழித்தது. எல்லா நாடகங்களும் முடிவில் தொடங்கியது. தோளில் கிடந்த சிலுவை ஆளை நசுக்கியது. கடும் பாறையில் தூக்கிப் போட்ட பனிக் கட்டியாக சிறு துளியை நோக்கி சிறுகச் சிறுக சுருங்கிக் கொண்டிருந்தான்.

சாரா மீண்டும் வடக்கு அறைக்கு வந்தபோது பீதி அவனை கட்டிலிலிருந்து வெட்டித் தூக்கியது. எழுந்து நின்றான். பார்வை அவள் காலில் கிடந்தது; அவள் ''ஸாரி'' என்றதும் நிமிர்ந்து முகத்துக்கு வந்தது. நம்ப முடியாமல் கண்கள் அகல விரிந்தன. சற்றைப் பொழுதில் சாரா ஐந்தாறு கிலோ எடை மெலிந்து போயிருந்தாள். நெற்றியில் அந்தக் குட்டிப் பொட்டில்லை. நீரில் முகம் கழுவித் துடைத்திருந்தாள். நனைந்த ஈர ரோமங்கள் விளிம்போரம் படிந்தோடின. இல்லை, கண்ணீரில் சாய்ந்தனவா? பலமான அடியில் கன்னிச் சிவந்திருந்த அவன் கன்னத்தைக் கண்டதும் மன்னிப்புக்குக் கெஞ்சும் பார்வையுடன் அருகில் வந்தாள். ''ஸாரி. வெரி வெரி ஸாரி'' திணறித் தெறித்த மூச்சுக்காற்று கழுத்தோரம் மோதியது. தன் காதுகளையோ கண்களையோ அவன் இன்னும் நம்பத் தயங்கினான். குளிர்ந்த கரம் தோளைத் தொட்டு மிருதுவாக அழுத்தி அவனை அமரச் செய்தது. கட்டிலுக்கு நோகாமல் பக்கத்தில் அமர்ந்தாள். ''வலிக்குதா?'' பதில் சொல்லாமலிருந்தான். அவள் அப்படிக் கேட்பதைக் கேட்கும் போது அவன் அவயவங்கள் ஒவ்வொன்றாய்த் தொலையத் தொடங்கின. அந்த ஆறுதலில் லயித்திருந்தான். ''வாயைத் திறந்து எதாவது பேசுங்க. மனசுக்கு ரொம்ப கஷ்டமா இருக்கு. ப்ளீஸ்...'' அவன் கைகளை

கையிலெடுத்து அழுத்தினாள். உயிர்க்காற்று உடெலுங்கும் வீசியது. அவள் பக்கம் திரும்பினான். 'நான் எதிர்பார்க்கல நீங்க இப்படி நடப்பீங்க, நானும் இப்படி அடிப்பேன்னு. எல்லாம் தப்பு தப்பா நடந்து போச்சு. யாரையுமே ''நான் அடிச்சதே இல்ல. யாருமே என்னை கிஸ் பண்ணதுமில்ல'' வார்த்தைகளை வாயில் ஊட்டி விடுவதுபோல் பேசினாள்.

வெகு அண்மையில் சாராவின் முகத்தை அறிந்தான். கண்களில் கனவுகள் புகைந்தெழுந்தன. நெற்றியில் தண்ணீர்த் துளிகள். அல்லது வேர்வைத் துளிகளா? நாசியும் செவிகளும் ஓலைக் குருத்தை நினைவூட்டின. தரையிறங்கும் கரிய பறவையின் சிறகுகள் புருவங்களில் விரிந்திருந்தன. நூலளவு கோடிழுத்து விளிம்பு கட்டியிருந்த வெளிர் சிகப்பு உதடுகள் நெய் வார்த்த அகல் போலிருந்தது. மேலுதட்டின் மேல் நடுவாங்கமாக குழிந்திருந்த பள்ளம் சுடராக ஒளிர்ந்தது. முதல் முத்தத்தின் ருசியும், சுடும் உயிர்ச்சுவையும் காலம் தப்பி அவனுடலில் கிளர்ந்தன. முத்தத்தின் ஞாபகம் அவனை நிதானமிழக்கச் செய்தது. அவள் கையைப் பற்றியெடுத்து உதடுகளில் ஒற்றிக்கொண்டு விம்மினான். சாரா செயலற்றுப் போனாள். அவன் கண்ணீர் விரலைச் சுட்டதும் அவள் உடலில் நடுக்கம் பரவியது. வெகு நேரமாக அப்படியே இருந்தார்கள். இரண்டு மூன்று முறை சத்தமில்லாமல் கடவுளைக் கூப்பிட்டு நெடு மூச்செறிந்தாள். அவள் கைகள் முற்றிலும் பலமிழந்து தொய்ந்து போயிருந்தன.

பாரமெல்லாம் இறங்கிவிட்டது போல் நிமிர்ந்தான். கண்களை அழுந்தத் துடைத்துக்கொண்டான். சாரா உடலை நகர்த்தி விலகி சுவரில் சாய்ந்தாள். மின்னிய கண்களில் அச்சத்தின் வெளிச்சமடித்தது. அவள் அமர்ந்திருந்த விதம் அவனைக் குழந்தையாக்கி விட்டது. வெட்கமின்றி ஏங்கும் குரலில் கெஞ்சினான். ''சாரா... அந்தக் கையிலும் கொஞ்சம் கொஞ்ச நேரம்...'' அவள் இரண்டு விரலால் தலையிலடித்துக் கொண்டாள். ''அப்படி பேசாதிங்க, நெஞ்செல்லாம் படபடக்குது'' ''ஸாரி சாரா, எனக்கு என்ன பேசன்னே தெரியலை. ஏதேதோ உளறுறன். குடிக்க தண்ணி வேணும்.'' 'இதோ' என்பது போல் எழுந்து தண்ணிக்குப் போனாள். கொலுசொலி ஒளிர்ந்து அகன்று மங்கியது.

அவள் தண்ணீரோடு திரும்பியபோது கட்டிலில் அமர்ந்தபடியே கை நீட்டி மேஜையில் எழுதிக்கொண்டிருந்தான். பென்சிலும் பேப்பருமாக அவனைக் கண்ட சாரா 'என்ன' என்பது போல் முகம் வெட்டி சின்னதாகச் சிரித்தாள். தண்ணீரை வாங்கிக் குடித்தான். காகிதத்தை எடுத்துப் படித்தாள்.

*குதிகால் வெளுப்பில் மழலைப் பரல்கள் கொஞ்ச*
*எங்கே கூட்டிக்கொண்டு போகிறாய்*
*இரண்டு நிலாக் குட்டிகளை?*

அலையலையாய் அவள் முகம் விடிந்தது. எண்ணங்கள் பறவைகளாக எழுந்து வட்டமிடுவதை அவன் மனக்கண்களால் பார்க்க முடிந்தது. ''எப்போ தோணுச்சி இது?'' ''நீங்க தண்ணிக்குப் போகும்போது.'' ''கிணத்துக்கு போகும்போதா?'' ''குடத்துக்குப் போகும்போது'' ''இப்பவா?'' ''ஆமா.'' ''ஐயோ!'' துள்ளிக் குதிக்க ஒரு ஆசை அவள் உடலெங்கும் கிளர்ந்து முடியாமல் அடங்கியது. ''எப்படி இருக்கு?'' ''எப்படியோ இருக்கு'' குதிகாலால் தரையில் தாளமிட்டாள். கொலுசில் மணியடித்தது. வெள்ளிக் குருத்தொலிகள் சீரின்றி நெஞ்சில் பட்டுச் சிணுங்கின. காகிதத்திலிருந்து கண்ணெடுக்காமல் கட்டிலில் வந்து அமர்ந்தாள்.

''மஞ்சள் நிற இசைத்தட்டில் மௌனமாகச் சுற்றும் நிலா' என்ற வரி எனக்கு ரொம்ப பிடிக்கும். அதுல என்ன பாட்டு இருக்கும்னு யோசிச்சி யோசிச்சி பாப்பேன்.''

''அதுல இல்லாத பாட்டே இல்ல. எழுதுனது ஏழுதாதது எல்லாம் இருக்கும்.''

''நீங்க கேட்டிருக்கீங்களா?''

சொல்ல வாயெடுத்தான்.

''கேட்டுக்கிட்டுதான் இருக்கேன்னு சொல்லக்கூடாது'' என்று அவனை முந்தினாள்.

இருவரும் சிரித்தார்கள். எந்த மாயக்காற்று வந்து வாரி வீசியதோ தெரியவில்லை, பழசெல்லாம் பறந்து போய் புதிதாய்ப் பிறந்திருந்தார்கள். பேசப்பேச குழல் விளக்கு நிழல்கள் சுவரில் நெருங்கிக்கொண்டிருந்தன.

நான்கு கண்களுக்கு இரண்டு பேசும் பொம்மைகள் தேவைப்பட்டன. பொம்மைகள் பேசும்போது கண்கள் ஒன்றையொன்று ஊடுருவிச் சிலிர்த்தன. பேச்சுக் குரலைத் தாழ்த்தத் தாழ்த்த புலன்களின் பரபரப்பு கூடி அச்சம் மூண்டது, மூச்சு வாங்கியது.

தேர் பவனி கிழக்கு மூலையிலிருந்தது. மணி ஒன்றைத் தொட்டிருக்கும். பாண்டி சாராவிடம் விடைபெற்றான்.

விலகலின் வலி இதயத்தை பலியிட்டது. இரவில் அடிக்கும் வெயிலாக சாராவின் இரண்டு கண்களும் பட்டும் சுட்டும் ஒளிர்ந்தன. பாண்டி எழுந்துகொண்டான். அவளும். மீதமிருந்த செம்புத் தண்ணீரைப் பசியோடு குடித்தான். அவன் புறப்படுகிறேன் என்று சொன்னதும் நம்ப முடியாமல் பார்த்தாள். அவள் முகத்தில் நிம்மதியும் ஆசுவாசமும் திரும்பியது. அப்போது துரத்திக்கொண்டே ஓட வேண்டிய வேட்டைப் பொருளாக கடைசி வரை பிடிகிட்டாத வசீகரத்துடன் அவள் அழகு கூடிக் கொண்டே போனது. அக்கணத்தில் நரம்புகள் எல்லாம் கொடியாகி

உடலொரு மலராகப் பிறந்து மணம் வீசியது. எப்படியென்றே தெரியவில்லை. காலைத் திருப்பலிக்கு சூடிக்கொள்ள சாராவுக்கு ஒரு மஞ்சள் ரோஜாப்பூ வாங்கித் தரவேண்டும் என மனத்துக்குள் குறிப்பெழுதினான். நினைக்கவே சந்தோஷமாக இருந்தது. உயிரின் இளவெயில் உதட்டிலடிக்க சுருக்கமான சிரிப்பும் திருத்தமான பார்வையுமாக அவள் ரோஜாவை பெற்றுக்கொள்ளும் காட்சி உள்ளத் திரையில் விரிந்தது. காலைத் திருப்பலியில் சாராவையும் அவன் வாங்கித் தந்த மஞ்சள் ரோஜாவையும் ஜாமத்தில் நின்றே பார்த்தான். ''என்ன சிரிப்பு?'' அவள் கேட்டதும் இன்னும் சிரித்தான். ''சொல்லக் கூடாததா?'' ''ஏதோ நெனைச்சேன்.'' ''ஜோக்கா?'' ''இல்ல. பூ'' ''என்ன பூ?'' ''ரோஜா.'' ''பூவ நெனைச்சா சிரிப்பு வருமா?'' ''எதோ வந்துருச்சி.'' ''நீங்க நெனைச்ச ரோஜாப்பூ என்ன நிறம்னு நான் சொல்லட்டுமா?'' ''சொல்லுங்களேன்.'' ''வேண்டாம். மயங்கி விழுந்துருவீங்க.'' ''மாட்டேன்.'' ''மஞ்சள்.'' வியப்பில் விழிகள் விரிந்தன. ரத்தமெல்லாம் மஞ்சள் நிறத்துக்கு மாறியது. ''எப்படி கரெக்டா சொல்லிட்டீங்க?'' ''மஞ்சள்தான் நெனைச்சீங்களா... கடவுளே!'' சிணுங்கிச் சிரித்தாள். சீரான பற்களில் வெண்மை ஒளிர்ந்தது. முறைக்கும்போது மூக்கில் பூக்கும் மோகினியும் நீயே! சிரிக்கும்போது உயிரைக் கேட்கும் தேவதையும் நீயே! அவளை அவளே ரசித்தாள்.

அந்தக் கணத்தில் அவன் நெஞ்சோரம் குட்டிப் பொறாமை எட்டிப் பார்த்து மறைந்தது. ''பூ கோவிலுக்கா?'' ''ஆமா.'' ''எந்தக் கோவிலுக்கு?'' ''கவிதைக்...'' ''கவிதைக் கோவிலா? அது எங்க இருக்கு?'' ''நாளைக்கு காலையில உங்களுக்கு தெரியும்.'' ''இதுவரை எத்தனை கோவிலுக்கு எத்தனை பூ கொடுத்துருப்பீங்க?'' ''நாளைக்குதான் ஃபர்ஸ்ட்.'' ''உண்மையாவா?'' ''சத்தியமா.'' ''ஐயயோ... அப்ப ரொம்பக் கஷ்டமாச்சே...'' பரிதாபப்படுகிறாளா கிண்டல் பண்ணுகிறாளா, பிரித்தறிய முடியவில்லை. சிறிது நேரம் காற்றாக கண்ணில் வீசிக்கொண்டிருந்தவள் ஏதோ உணர்ச்சியால் உந்தப்பட்டு ஊற்றெனப் பொங்கிப் பேசினாள் பார்வையில்.

நகர்ந்து அவனைக் கடந்து மேஜைக்கு வந்து 'Poems of Shelley' புத்தகத்தை எடுத்து இரண்டு கைகளாலும் பிடித்துக்கொண்டு ''இது உங்களுக்கு'' என்றாள். ''இதுல எபிசைகிடியான்னு ஒரு கவிதை இருக்கு. நாளைக்கு படிச்சுப் பாருங்க. ஏன்னு புரியும். நேரா சொல்லி உங்கள சங்கடப்படுத்தப் பிடிக்கல.'' குரலில் ஏதோ துயரத்தின் ஒலி இழைந்திருந்தது. புத்தகத்தையும் முகத்தையும் மாறிமாறிப் பார்த்தான். ''ம்... பிடிங்க. வீட்டுல போய் தூக்கம் வரலைனா எடுத்துப் படிங்க.''

புத்தகத்தை வாங்கக் கை நீட்டியவன் சட்டென்று மனம் தடுமாறி அவள் கைகளை புத்தகத்தோடு சேர்த்துப் பிடித்தான். மெல்லிய நடுக்கம். மூச்சிழுத்து விழி தாழ்த்தி சலிப்புக் காட்டினாள். ''விடுங்க'' குரலில்

வலியிருந்தது. மிருதுவான கைகளை மேலும் இறுக்கமாக பற்றியபடி ''ஐ லவ் யூ'' என்றான்.

கண்களை இறுக்கமாக மூடிக்கொண்டு முகத்தை தோள் பக்கம் திருப்பி வைத்தபடி பதிலின்றி நின்றாள்.

''எந்நேரமும் உங்க நினைப்பாவே இருக்கு. எப்பவும் பாத்துக் கிட்டே இருக்கணும் போலிருக்கு. என் சக்திக்கும் அதிகமா உங்களை காதலிக்கிறேன் சாரா.''

''.........''

''என்னை பாக்கமாட்டேன் பேசமாட்டேன்னு விளையாட்டுக்குக் கூட சொல்லாதீங்க சாரா. வீணா செத்துருவேன்.''

அவள் கைகள் நடுங்க புத்தகம் தொப்பென்று தரையில் விழுந்தது. கைகளைப் பின்னுக்கிழுத்து மேஜையில் ஊன்றிக்கொண்டாள். கண் களைத் திறக்கவில்லை. கீழுதட்டைக் கடித்து உணர்ச்சியை முறிக்கப் போராடினாள். புத்தகத்தை எடுக்கக் குனிந்தபோது பாண்டியின் மனம் மேலும் பேதலித்தது. அவன் பிடரியை ஏதோ சக்தி பிடித்தழுத்தியது. தரையோடு தரையாகி சாராவின் பாதத்தை முத்தமிட்டான். மெத்தென்று குளிர்ச்சியாக இருந்தது. அவள் கால்களில் கிளர்ந்த வாசனை அவனுக்கு மேலும் பித்தேற வைத்தது. உதட்டுச் சூடு காலில் பட்டு உடல் சிலிர்க்க சாரா பதறிப் போனாள். பின்னால் விலக முடியவில்லை. மேஜை தடுத் தது. பக்கவாட்டில் நகர்ந்தாள். தள்ளாடினாள். அவன் கால்களை பற்றிப் பிடித்திருந்தான். நிதானமாக, காதலோடு முத்தமிடுவதை நிறுத்த வில்லை.

அதிர்ச்சியில் அந்தரத்தில் உறைந்து நின்ற கைகள் இறங்கின. வலது கையால் அவன் தலைமுடியை ஆவேசமாகப் பற்றித் தூக்கினாள். அவன் எழுந்து நின்றதும் அவளை அவளே தடுக்க முடியாமல் தளைகளை அறுத்துப் பாய்ந்து அவனைக் கட்டியணைத்து ஆரத் தழுவினாள். தோள் மாற்றி தோள் மாற்றி முகம் புதைத்து மறுகினார்கள். தழுவலின் நடுவே வினோதமான குரல்கள் கசிந்தெழுந்தன. அவள் முலை வழியே அவனும் அவன் நெஞ்சு வழியே அவளும் நுழைந்து வெளியேற முயன்று தழுவித் துவண்டதும் மெல்ல பிரக்ஞை மீண்டவளாக சாரா அவனை உதறி விடுவித்தாள்.

படபடப்பில் முத்து முத்தாக வியர்த்து விட்டிருந்தது. பாண்டியின் உடல் கனன்றது. தலைமுடி அலங்கோலமாகக் கலைந்திருந்தது. நீளமான முத்தங்களில் அவள் கை விரல்கள் கலைத்துப் போட்டது. இருவரும் பேசாமல், முகம் பார்க்க வெட்கப்பட்டு நாற்காலியிலும் கட்டிலிலும் அமர்ந்திருந்தனர். சாரா உயர்த்தி அணைத்த முழங்கால்களுக்குள் முகம் புதைத்தபடி அமர்ந்திருந்தாள். மூச்சின் சீற்றமொலித்தது. இருவரையுமே சொற்கள் கைவிட்டுவிட்டிருந்தன. பதற்றம் தணிந்த பிறகு பாண்டி

எழுந்து புத்தகத்தை எடுத்துக்கொண்டு வடக்கு கதவருகே வந்து நின்று சாராவைப் பார்த்தான். கனவுகளால் சூழப்பட்டவள் போல் கட்டிலில் சமைந்திருந்தாள். ''சாரா...''

கொலுசுச் சத்தம் அவனுக்கு அருகே வந்தது. வளையல் சத்தம் கதவைத் திறந்தது. சாரா தெருவை எட்டிப் பார்த்தாள். கதவை மீண்டும் பூட்டிவிட்டு ''கொஞ்சம் பொறுத்துப் போறீங்களா? ஆளா இருக்காங்க'' என்று கேட்டாள். தலையாட்டினான்.

நேரம் நெளிந்தது. தேர்ப் பவனியின் திருச்சலனங்கள் விலகி வெகு தொலைவு போய்விட்டிருந்தது. சாரா அறையின் தெற்கு வாசலைத் திறந்து மறைந்தாள். இடையைச் சுற்றி வளைத்துக்கொண்டு விடமாட்டே னென்று நெரித்த அமுத ஸர்ப்பத்தின் மாயத்தில் மெல்ல அந்த அறை பெரும் வனமாகி வந்தது. சற்றைப் பொழுதில் தோட்டம் கொத்துக் கொத்தாக குலைகுலையாகப் பூத்துச் சொரியும் மணத்தில் கிறங்கிச் சரிந்து விடுவோம் என்ற பிரமை ஏற்பட்டது. தண்ணீர் சிதறும் ஓசை கேட்டது. 'நீ என்னைக் காதலிக்க வேண்டாம். முத்தம் தர வேண்டாம். காதலிக் கிறேன்னு கூட சொல்ல வேண்டாம். காதலிக்கலைனு சொல்லாம இருந்தா போதும். நான் காதலிப்பேன் மூச்சு முட்ட முட்ட...' எண்ணம் தோன்றியதா, மெல்லிய மனக்குரல் பேசியதா தெரியவில்லை. இன்னும் என்னென்னவோ சொற்கள் சாரை சாரையாக குறுக்கும் நெடுக்குமாக அலைந்தன. பார்க்க முடிந்தது, கேட்க முடியவில்லை. எல்லாமே செல்லாத சொற்கள். நல்ல சொல் ஒன்றே ஒன்றுதானிருந்தது. சாரா. அந்தச் சொல்லும் செல்லாமல் போகும் நாளில் அவன் உயிரோடு இருக்க மாட்டான் என்று உறுதியாக நம்பினான்.

சாரா அறைக்குள் வந்தாள். கட்டிலில் பாண்டி விறைத்துப் போயிருந்தான். அவள் கண்கள் அவன் மேல் ஊர்வதை உணரமுடிந்தது. கொஞ்ச நேரம் அமைதி நிம்மதியளித்தது. பிறகு மயானத் திகிலேற்ற ஆரம்பித்தது. ஒரு சொல்லெடுத்து இந்த அநாதை மௌனத்தை உடைக்க மாட்டாளா என்று எதிர்பார்த்தான். தெருவில் சந்தடி ஓய்வதற்கான காத்திருப்பில் அமைதி ஒரு புழுவாகிக் கொண்டிருக்கிறதா எனத் தோன்றியபோது நிமிர்ந்து பார்த்தான். 'இப்போதுதான் முதன் முறையாக இவளைப் பார்க்கிறேனோ! புதுப் புது உருவெடுத்துக் கொள்கிறாளோ! அலுக்கவே மாட்டாளோ!' அவள் மார்புத் திரட்சியில் பார்வை நிலைத்தது. தணிந்தடங்கிப் போயிருந்த அவள் ஸ்பரிசத்தின் இதமும் வெம்மையும் சிலிர்ப்பும் மீண்டும் ரத்தத்தில் பரபரத்தது. கண்களால் கண்களைக் கண்டித்தாள். பார்வை பதறி விலகியதும், புன்னகையால் மன்னித்தாள்.

குளிர்ந்த மிருதுவான பாதங்களுக்குள் நிலவெரிகிறதோ என்று நினைத்தான். விரல்கள் சிரித்தன. 'அவ்வளவுதானா முத்தங்கள்' என்று

கேட்பது போலிருந்தது. அவள் கூச்சப்படுகிறாள் போலும். வலது கால் கட்டை விரலை மடித்து தரையை நிமிண்டினாள். 'அடியில் இரண்டு பூக்கள். அதன் மேல் ஒரு கொடியோ இவள்.' அதற்கு மேலும் நின்று கொண்டிருக்க இயலாதவளாக கட்டிலில் அமர்ந்தாள்.

மேஜையிலிருந்த பேப்பரில் வேகத்தோடு எழுதினான். நாற்காலியில் கூட அமர மறந்து எழுதுகிறவனை ஆச்சரியத்தோடு பார்த்தாள். அவன் முடித்துவிட்டான் என்று தோன்றியபோது வாங்கக் கை நீட்டினாள். அவன் கவனிக்கவில்லை. படித்துப் பார்க்கும்போதே சொற்களையும் வரிகளையும் மாற்றினான். அதை முழுக்க அடித்துவிட்டு நிருத்தமாக மீண்டும் எழுதிமுடித்து பேப்பரை மடித்து பழையதைக் கிழித்துக் கசக்கிய போது, அவள் நெருங்கி வந்து தாளைப் பிடுங்கினாள்.

உதட்டில் சுடர்ந்த
உன் உயிரின் இளவெயிலை
உனக்குத் தெரியாமல்
உறிஞ்சி சூரியனானேன்.
தெரிந்ததும் திடுக்கிட்டாய்
வானத்தை நோக்கி நீ
கோபத்தில் எறிந்த கற்கள்
மேகத்தைத் தாண்டியதும்
விண்மீன்களாயின.
உன்னைப் பார்த்து நிலா
என்றுணர்ந்து மின்னிச் சிரித்து
என்னைக் காண
கிழக்கில் தேடுகின்றன.
அமுதவெளியைப் பருகித் திளைத்து
அம்மாவென உனை அழைக்கின்றன.
தேயாத நிலவாய் நிலைக்குமா
என் அழிவற்ற கனவு?

மீண்டும் பறவைகள் தங்கள் கிளைகளிலிருந்து எழுந்தன. இமைச் சிறகடித்து இதயத்துக்குள் பறந்தன. அதரங்கள் திளைத்தன. தேன் குடித்தது போல் தலைக்கொரு மாயக் கிறக்கமேறிக் கொண்டிருந்தது.

சுதாரித்த சாரா அவனிடமிருந்து சட்டென்று விலகி சிறு பொழுது வெட்கத்தோடு வருந்தியவள், தனக்குத்தானே சிரித்துவிட்டு வடக்கு வாசல் கதவை நோக்கி நடந்தாள்.

நாதங்கியை நெகிழ்த்த கை நீட்டியவள் வெடுக்கென்று துடித்தாள். இடையோடு அணைத்து இழுத்தவன் அவள் மல்லிகை மணக்கும் புறங் கழுத்தில் சூடான உதடுகளைப் பதித்தான். கூச்சத்திலும் பயத்திலும் அவள் சற்றே முன் வளைந்து நின்றதால் கூந்தல் கற்றை முன்பக்கம்

விழுந்திருந்தது. மல்லிகை வாசமிருந்தது. கழுத்தோர ரோமச் சுருள்களில் முத்தமிட்டான். அவள் உடல் சிலிர்ப்பதை சரும அதிர்வில் உணர்ந்தான். அவனை அது இன்னும் பித்தாக்கியது. கோபம் வருத்தம் எதுவுமில்லாத உணர்ச்சியற்ற குரலில் நிதானமாகச் சொன்னாள் ''போதும் விடு.'' முத்த மிடுவதும் அவள் பெயரை முனகுவதுமாக அவன் வேகம் கூடிக் கொண்டே போனது. வயிற்றைத் தழுவிய கைகள் மெல்ல மெல்ல மேலெழுந்தபோது சாரா அவன் கைகளை பலம் கொண்ட மட்டும் தடுத்துக் கீழிழுத்துப் பார்த்தாள். முடியாமல் ''ச்சோ... கடவுளே...'' என்றாள். அவனே அறியாத வலு வந்து அவன் உடலில் கூடியிருந்தது. மணிக்கட்டில் அமிலம் கொட்டியது போல் ஒரு சொட்டு விழுந்தது. கண்ணீர்த்துளி. திடுக்கிட்டான். தளர்ந்தான். காதுக்கருகில் வாய் வைத்துக் கேட்டான்.

''அழுறியா?''

''ம்...''

''ஏன்?''

''தெரியலை''

மௌனத் துளிகள் சப்தமின்றிச் சொட்டின.

''என்ன எதுக்கு இங்க கூட்டிட்டு வந்தே?''

''மன்னிக்க.''

அவன் அவளை விட்டுத் தெறித்ததுபோல் விலகி கட்டிலில் வந்து முகம் பொத்தியமர்ந்தான். மூச்சுக்காற்றின் வெப்பம் உள்ளங்கையை துளைத்தது. திடீரென்று பற்றிய அச்சம் உடலை நடுங்க வைத்தது. மழைக்க தலைப்பட்ட வானமாக மனம் முடிவற்று விரிந்தது. மேகத் தீவுகள் மோதி ஓலமிட்டன. எங்கெங்கோ மின்னி எங்கோ மழையடித் தது. இடிகள் மட்டும் அவனுக்குள் விழுந்த வண்ணமிருந்தன. கனவுத் தனிமை கூடிக் கூடி வந்தது. தாங்க முடியாமல் தலை நிமிர்த்தினான்.

கண்ணீரைத் துடைக்க வசதியாக தாவணி விளிம்பை வாயில் கடித்துப் பிடித்திருந்தாள்.

சற்று நேரத்துக்குப் பின் தயக்கத்துடன் அணுக்கமான தொனியில் அழைத்தான் ''சாரா...'' சோப்பு நீர்க் குமிழாக அவன் குரல் கனமிழந்து அவன் கண் முன்னே மிதந்து எழுந்து சுவரில் மோதியுடைந்தது. கட்டிலி லிருந்து எழுந்து நின்றான். கை நீட்டி சுவர் தொட்டு விளக்கை அணைத்தான்.

எதிரே நிழலாகி நின்றிருந்தாள். திக்கித் திணறும் குரலில் மீண்டும் அவள் பெயர் மிதந்தது. கனவில் நடந்து செல்வதாக ஒவ்வொரு அடியிலும் மயிர்க்கூச்செறிந்தது. அருகில் சென்று நிழலையள்ளக் கை நீட்டினான். நிழல் ததும்பியது. முகத்தை ஏந்திப் பார்த்தான். கண்கள்

மூடியிருந்தன. கண்களில் முத்தமிட்டான். இமைகள் விரிந்தன. நீருக் கடியில் மின்னும் வைரமாக ஒரு பிரியம் ஒளிர்ந்தது. நீரிலிட்ட கல்லாக நழுவி நழுவி இலக்கின்றிப் போய் எங்கென்று தெரியாத அடிப்பரப்பில் அணைந்தான். இனி அவன் கல்லாக கால காலத்துக்கும் அங்கேதான் கிடக்க வேண்டுமோ! சாராவின் கைகள் ஆரத் தழுவின. கல் மீனாகியது.

நீந்தி நீந்தியே உயிரை மாய்த்துக்கொள்ளும் வரத்தை விழுங்கிய மீன்களென இரண்டு உயிர்கள் கடலின் அடியாழத்தை துளைந்து சிலும்பிய வண்ணம் தொலைந்துபோயின.

★★